ஃபிலிப் E. டெய்

தமிழாக்கம்

அர. சேஷாசல

# அரசாங்க நிதியியலி பொருளாதாரம்




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—122

# அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-II

(THE ECONOMICS OF PUBLIC FINANCE—II)

ஆசிரியர் :

**ஃபிலிப் E. டெய்லர்,**
பொருளாதாரப் பேராசிரியர்,
கன்னக்டிக்கட் பல்கலைக் கழகம்.

தமிழாக்கம் :

**அர. சேஷாசலம்,** எம்.ஏ.,
பொருளியல் பேராசிரியர்,
மன்னர் சரபோஜி அரசினர் கல்லூரி,
தஞ்சாவூர்.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—April, 1966

B.T.P. No. 122



# The Economics of Public Finance-II

Philip E. Taylor

Translation
R. Seshachalam

Price Rs: 9-50



Printed by
Jeevan Press,
Triplicane, Madras-5

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ.; வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாண வர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்—II' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 122 ஆவது வெளி யீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 157 நூல்கள் வெளிவந் துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்.

## உள்ளுறை

## இரண்டாம் பாகம்

# 13. வரிகள்: வரிச்சுமைகளின் பங்கீடு

'எல்லோருடைய பொது நலனுக்காக அரசாங்கத்தால் செய்யப்படுகிற செலவுகளைச் சரிக்கட்டுவதற்காகத் தனக்குக் கிடைக்கக்கூடிய சிறப்பான நன்மைகளுக்குத் தொடர்பற்ற முறையில் ஒரு தனி ஆளால் அரசாங்கத்திற்குச் செலுத்தப்படுகிற கட்டாயத் தொகையே வரியாகும்' என்று செலிக்மன் (Seligman)[1] வரியைப்பற்றித் தந்துள்ள இலக்கணம், வரிகளின் தன்மையைப்பற்றிய நம்முடைய கருத்தாய்வுக்கு நல்லதோர் தொடக்கமாக அமையும். கட்டாயம் என்பது வரிகளின் ஒரு பொதுவான இயல்பு ஆகும். ஆனால், சில வரிகளைப் பொறுத்தவரையில் இந்தக் கட்டாய இயல்பானது முழு அளவில் இல்லாமலிருக்கலாம். எடுத்துக்காட்டாக, ஒரு பொருளின் விற்பனைமீது வரி விதிக்கப்பட்டு, அதனோடு போட்டியிடும் மற்றொரு பொருளின் விற்பனைமீது வரி விதிக்கப்படாமல் இருந்தால், முந்திய பொருளின்மீதான வரியில் கட்டாய இயல்பு முழு அளவில் இருப்பதாகக் கூறமுடியாது. வெண்ணெய், பன்றிக் கொழுப்பு, காய்கறிப் பிழிவு ஆகியவற்றின் விற்பனைமீது வரி விதிக்கப்படாமல் இருக்கும்போது, ஆலியோமார்கரைன் என்னும் போலி வெண்ணெயின் விற்பனைமீதுமட்டும் ஒரு சிறப்பு வரி விதிக்கப்படுமானால், அந்த வரியைத் தவிர்ப்பதற்கான வழி எளிதில் ஏற்பட்டுவிடுகிறது. அப்படி ஏற்பட்டுவிடுவது கட்டாயம் என்பதே வரியின் இயல்பு என்னும் கருத்துக்கு முரண்பட்டதாக இருக்கிறது.

வரிகளானவை தனியாட்களுக்குத் தரப்படும் குறிப்பிட்ட நன்மை எதற்கும் தொடர்பில்லாத முறையில், பொது நன்மைக்காகமட்டுமே பயன்படுத்தப்படுகின்றன அல்லது பயன்படுத்தப்படவேண்டும் என்னும் கருத்துச் சில இறுதிநிலைச் சூழல்களில்

(marginal cases) அவ்வளவாகப் பொருந்திவருவதில்லை. முதுமைக் கால ஆண்டுத் தொகைத் திட்டத்தின்படி (old-age annuity scheme) தொழிலாளர்களின் வாரக் கூலியிலிருந்து பிடித்துக் கொள்ளப்படும் வரித் தொகைகள், 'சிறப்பான நன்மைகளுக்குத் தொடர்பற்ற முறையில்' இருக்கின்றன என்று கூறமுடியாது. குறிப்பாக அத்தகைய தொகைகள் ஆக்க வரிக் கணக்கீட்டின்படி அமைந்திருக்கும்போது சிறப்பான நன்மைகளோடு அவை தொடர்புடையனவாக இருப்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால், அதே சமயத்தில் முதிர்ந்த வயது பாதுகாப்புத் திட்டத்தில் பொது நன்மைக்கான இயல்பு (நுகர்வை உயர்ந்த அளவில் நிலைநாட்டுகிற வடிவத்தில்) ஏராளமான அளவில் இருக் கிறது என்பதையும், அந்தத் திட்டத்திற்குத் தொழிலாளர்கள் மட்டுமல்லாமல் அவர்களை வேலையில் வைத்திருப்போரும் பணம் தருகிறார்கள் என்பதையும், வேலை தருவோர் செலுத்துகிற தொகை யில் ஒரு பகுதியும், வேலை செய்வோர் செலுத்துகிற தொகையில் ஒரு பகுதியும் இறுதியில் பொருள்களை வாங்குவோர்மீது சுமத்தப் பட்டுவிடுகிறது என்பதையும் இச் சமயத்தில் நினைவுபடுத்திக் கொள்வது நல்லது.

வரியைப்பற்றி செலிக்மன் தந்துள்ள இலக்கணத்தில், 'சிறப் பான நன்மைகளுக்குத் தொடர்பற்ற முறையில்' என்று உள்ள சொற்றொடரை, 'சிறப்பான நன்மைகளுக்கு அவ்வளவாகத் தொடர்பற்ற முறையில்' என்று மாற்றி அமைத்துவிட்டால் அந்த இலக்கணம் எத்தகைய விதிவிலக்குகளுக்கும் இடமற்றதாக மாறிவிடும். வரிகளானவை அடிப்படையில் வலுக்கட்டாயத் தன்மை உடையவை என்பதும், அரசாங்கத்தின் பல்வேறு செலவு களுக்கு வரவு செலவுத் திட்டத்தின்மூலம் பயன்படுத்துவதற்காகப் பொது நிதிகளாக வசூலிக்கப்படுபவை என்பதுமே இச் சமயத்தில் கவனிக்கப்படவேண்டிய தலையாய உண்மைகள் ஆகும். சில சமயங் களில் குறிப்பிட்ட வரிகளின் வசூல் குறிப்பிட்ட பணிகளுக்காக ஒதுக்கிவைக்கப்படுவதால் (எடுத்துக்காட்டு: பெட்ரோல் வரிகள்), வரவு செலவுத் திட்டத்தின் இயல்பான நடைமுறை பாதிக்கப் படுகிறது என்றாலும், அப்படி ஒதுக்கிவைக்கப்படுவதால் வரிகளின் பொதுப்படையான இயல்பு பாதிக்கப்படுவதில்லை. அரசாங்கப் பணிகள் பெருகப் பெருக, சமுதாயம் முழுவதற்குமாக இல்லாமல் சமுதாயத்தின் சில பகுதிகளுக்காகமட்டும் சில ஊழியங்களை நிறைவேற்றவேண்டிய நிலைமை ஏற்படுவது தவிர்க்க முடியாதது. அந் நிலைமையின் விளைவாகப் புதிய பணிகளின் நன்மைகளைப் பெறுகிற மக்கள்மீதுமட்டும் சில புதிய வரிகளை விதிக்கவேண்டிய தேவை ஏற்படுவதும் இயல்பே. சில சமூகப் பாதுகாப்பு வரிகளி

லும் வாணிப வரிகளிலும் இந்தப் போக்கு அமைந்துள்ளது. பெட்ரோல் வரிகளிலும் இந்தத் தன்மை ஓரளவுக்குக் காணப்படுகிறது.

### வரிகளின் வருவாய் முக்கியத்துவம்

கிடைக்கிற தொகையை அடிப்படையாக வைத்துப் பார்க்கும் போது, ஐக்கிய அமெரிக்காவில் உள்ள எல்லா வகை அரசாங்கங்களின் எல்லா வகை வருவாய் வரவு இனங்களிலும் வரிகளே மிக முக்கியமானவையாக இருக்கின்றன. கூட்டரசாங்கத்தைப் பொறுத்தவரை 1957-ல் மொத்த வருவாய் வரவுகளில் 88 சதவீதம் வரிகள்மூலம் கிடைத்தவையே. பிற அரசாங்கங்களிட

## அட்டவணை 23

### ஐக்கிய அமெரிக்காவில் வரிகளின் பல பிரிவுகளிலிருந்து கிடைக்கும் தொகைகளின் சதவீதம், 1957*

(மொத்த வரி வருவாய்களில் ஒவ்வொரு வகை வரி வருவாய்களின் சதவீதம்)

| வரி விதிக்கப்பட்ட இனங்கள் | கூட்டரசாங்கம் | மாநில அரசாங்கம் | தல அரசாங்கங்கள் | எல்லா அரசாங்கங்களும் |
|---|---|---|---|---|
| தனியாள் வருமானம் ... | 51·2 | 11·9 | 1·4 | 38·4 |
| கார்ப்பரேஷன் வருமானம் | 30·4 | 7·5 | (ஆ) | 22·8 |
| சொத்து ... ... | — | 3·6 | 87.5 | 13·5 |
| பொது விற்பனைகளும் மொத்த வரவுகளும் (General Sales and Gross Receipts) ... ... | — | 25·5 | 4·6 | 4·1 |
| தேர்ந்தெடுத்த விற்பனைகளும்மொத்த வரவுகளும் (Selective Sales and Gross Receipts) ... ... | 14·6 | 38·5 | 2·6 | 16·3 |
| ஏற்றுமதி இறக்குமதிகள் ... | 1·0 | — | — | — |
| மரணமும் நன்கொடைகளும் ... ... | 2·0 | 2·6 | (இ) | 1·7 |
| பிற (அ) ... ... | 0·8 | 10·4 | 3·9 | 2·6 |
| மொத்தம் ... | 100·0 | 100·0 | 100·0 | 100·0 |

* இந்தப் புள்ளிவிவரங்கள், 'Relative Contributions of Classes of Taxes, U.S. 1957' என்னும் நூலின் 23ஆம் பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டவை. சம்பளப் பட்டியல் வரிகள் இவற்றில் சேர்க்கப்படவில்லை.

(அ) மோட்டார் ஊர்தி, மற்றும் இயக்குபவர் லைசென்சுகள் தவிர்த்த ஏனைய எல்லா லைசென்சுகளும் அனுமதி ஆணைகளும் இப் பிரிவில் அடங்கியுள்ளன.

(ஆ) இது தனியாள் வருமான வரிகளில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

(இ) 1 சதவீதத்தில் $\frac{1}{20}$ பங்கு.

மிருந்து கிடைக்கும் மானியங்களை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால், அதே ஆண்டில் மாநில அரசாங்கங்களின் வருவாய் வரவுகளில் 83 சதவீதமும், தல அரசாங்கங்களின் வருவாய் வரவுகளில் 85 சதவீதமும் வரிகள்மூலம் கிடைத்தவையே.[2]

வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாயில் ஒவ்வொரு வரி இனத்தின் பங்கு எவ்வளவு என்பது மேலே உள்ள 23ஆவது அட்டவணையில் தரப்பட்டிருக்கிறது. அடுத்துவரும் அத்தியாயங்களில் தனித்தனி வரிகளைப்பற்றி ஆராயும்போது இந்தப் பொருள்பற்றி இன்னும் விரிவாக அறியும் வாய்ப்பு ஏற்படும். வரி செலுத்தும் பொறுப்பானது பல்வேறு அரசாங்கங்களால் பலவகைப்பட்ட வரி செலுத்தும் வகுப்புகளிடையே எவ்வாறு பங்கிடப்பட்டுள்ளது என்னும் உண்மையை இந்த அட்டவணை சுட்டிக் காட்டுகிறது. அரசாங்கங்கள் எந்த அடிப்படையில் இந்தப் பங்கீட்டைச் செய்திருக்கின்றன? வரி செலுத்துவோரிடையே நேர்மைக் கோட்பாட்டை (principle of equity) நிலைநாட்டுதல், வருவாயை அளிப்பதில் வரி முறைக்கு உள்ள திறன் (productivity of the tax system), வரிமுறையால் நாட்டின் வருமான அளவில் ஏற்படும் விளைவுகள் ஆகியவற்றின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது இந்தப் பங்கீட்டு முடிவுகள் எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ளத்தக்கனவாக உள்ளன? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் வரிக் கோட்பாடு விடை கூறியாகவேண்டும். இந்தக் கேள்விகள்பற்றிய சிக்கல்களைத்தான் இந்த அத்தியாயத்தில் நாம் ஆய்ந்து பார்க்க இருக்கிறோம்.

### வரிவிதிப்பின் நோக்கங்கள் (Objectives of Taxation)

வருவாயைப் பெறுவதே வரிவிதிப்பின் நோக்கமாக நீண்ட காலமாக இருந்துவருகிறது. வரிகளை அரசாங்கம் வருவாயைப் பெறுவதற்காகமட்டுமே பயன்படுத்தவேண்டும் என்கிற வரையறை எதுவும் இல்லை என்றபோதிலும், வருவாயைப் பெறுகிற நோக்கமே தலையாயதாக இருந்துவருகிறது. புதிய வரிகளை விதிப்பது அல்லது தற்போதுள்ள வரிகளைப் பலப்படுத்துவது என்னும் நடவடிக்கையின் விளைவாகப் பெரும்பாலான சமயங்களில் அரசாங்க வருமானத்தில் உயர்வு ஏற்படுவதும், அந்தக் கூடுதல் வருமானத்தைக் கொண்டு அரசாங்க நடவடிக்கைகளில் இயல்பாக ஏற்படுகிற பெருக்கத்தின் செலவுகளைச் சரிக்கட்டுவதும், வழக்கமாக இருந்துவருகின்றன. வரி செலுத்துவோருக்கிடையே அதிக அளவில் நேர்மையை (equity) உருவாக்குவதற்காகத் தற்போதுள்ள வரிகளில் மாறுதல்களைச் செய்வதற்கான முயற்சி பெரும்பாலும் மேற்கொள்ளப்படுவதில்லை. மேற்கொள்ளப்படும் சமயங்களிலும், மிக

மெதுவாகவே மேற்கொள்ளப்படுகிறது. ஏனென்றால், அத்தகைய மாறுதல்களால் பல சமயங்களில் வரிவிதிப்பால் கிடைக்கும் வருவாய் குறைந்துவிடுகிறது. அடிக்கடியும் எளிதாகவும் கடன் வாங்கக்கூடிய நிலையில் அரசாங்கம் இருப்பதால், நடப்புச் செலவு களைச் செலுத்துவதற்காக வரி விதித்துத்தான் ஆகவேண்டும் என் னும் கட்டாயம் இல்லை. என்றாலும், எதிர்காலத்தில் வரிவிதிப் பில் அடங்கியுள்ள வருவாய் நோக்கத்தின் முக்கியத்துவம் குறிப் பிடத்தக்க அளவில் குறையும் என்று கூறமுடியாது.

ஒழுங்குப்படுத்துவது அல்லது கட்டுப்பாடு செய்வதே (regulation or control) வரிவிதிப்பின் இரண்டாவது நோக்கமாக இருக்கிறது என்று கூறலாம். இத்தகைய வரிவிதிப்பைக் கட்டுப்பாட்டு வரி விதிப்பு (sumptuary taxation) என்று அழைக்கலாம். முறைப் படி பார்த்தால், கட்டுப்பாடு (sumptuary) என்னும் சொல் தனியார் செலவுகள் ஒழுங்குபடுத்தப்படுவதை அல்லது கட்டுப்படுத் தப்படுவதைமட்டுமே குறிக்கும் என்றாலும், பொது நிதி இயலில் வரிவிதிப்பின் வருவாய் நோக்கத்தைத் தவிர்த்த ஏனைய எல்லா நோக்கங்களையும் குறிக்கும் சொல்லாக அது பயன்படுத்தப்பட்டு வருகிறது. பாதுகாப்புச் சுங்கவரியால் (protective tariff) அரசாங் கத்திற்கு வருவாய் கிடைக்கிறது என்னும் பொருளில் அது ஒரு வருவாய் முறையாக இருந்தாலும், ஐக்கிய அமெரிக்காவில் நெடுங் காலமாக அந்த வரியின் தலையாய குறிக்கோளாக இருப்பது பல் வேறு பொருள்களின் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துவதே. மது வகைகளின்மீதும், புகையிலையின்மீதும் பல அரசாங்கங்கள் நுகர்வு வரிகளை அதிக அளவில் விதிப்பதற்கான காரணம், அப்படி விதிப் பதன்மூலம் நுகர்வோர் அவற்றைப் பயன்படுத்தும் அளவைக் குறைக்கலாம் என்பதே. குறைந்த அளவில் இந்த நோக்கம், இந்த வரிவிதிப்புகள் தொடங்கப்பட்ட காலத்தில் அரசாங்கங்கட்கு இருந்தது என்றாவது கூறலாம். உள்நாட்டுப் போரின்போது மாநில பாங்குகளின் நோட்டுகள்மீது அதிக வரிகள் விதிக்கப் பட்டு அவை அகற்றப்பட்டன. சின்னஞ் சிறுவர்கள் வேலைவாங்கப் படுவதை அகற்றுவதற்காக அத்தகையவர்களுடைய உழைப்பால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள்மீது மிகக் கூடுதலாக வரி விதித்தது. (ஆனால் இந்த வரிவிதிப்பின் நோக்கம் நடைமுறையில் வெற்றி பெறவில்லை.) தொடர் பண்டசாலைகள் (chain stores) தொடங்கப்படுவதைக் குறைப்பதற்காக அத்தகைய பண்டசாலைகள் மீது கூடுதலான சிறப்பு வாணிப வரிகள் விதிக்கப்படுவது, ஆலியோ மார்கரைன் என்னும் போலி வெண்ணெயின் விற்பனையைத் தடுப்பதற்காகப் பல்வேறு வரிகள் விதிக்கப்பட்டிருப்பது ஆகிய இவை யெல்லாம் நெடுங்காலமாக வருவாய் முறைகளாக இருந்து

வருகிற பல வரிகள். இவை வருவாய் அல்லாத நோக்கங்களுக்காக அல்லது கட்டுப்பாட்டு நோக்கங்களுக்காக எவ்வாறு பயன்படுத்தப் பட்டிருக்கின்றன என்பதற்கான எடுத்துக்காட்டுகள் ஆகும்.

வருவாய் வரிகள் ஏன் அடிக்கடி கட்டுப்பாட்டு நோக்கங்களுக் காகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன என்னும் கேள்வி இயற்கை யாகவே எழத்தான் செய்யும். வருவாய்க் கருவிகள் வருவாயைப் பெற்றுத் தருகிற அதே நேரத்தில் கட்டுப்பாட்டுப் பணியையும் செய்துவிடுகின்றன என்பதே இக் கேள்விக்குரிய உடனடி விடை யாகும். கட்டுப்பாட்டை நேர்முகமாக விதிக்கவேண்டுமானால் புதிய கட்டுப்பாட்டு அமைப்புகளை உருவாக்க வேண்டியிருக்கும். ஆனால், வரிகளின்மூலம் கட்டுப்பாட்டைச் செய்யும்போது தற் போதுள்ள வரிவிதிப்பு அமைப்பையே அந்தப் பணிக்கும் பயன் படுத்திக்கொள்ள முடிகிறது என்பது அக் கேள்விக்குரிய மற்றொரு விடையாகும். சில கட்டுப்பாட்டு வரிகளைப் பொறுத்தவரை, தந்திரமான முறையில் கட்டுப்பாடுகளைக் கொண்டுவருவதற்கான கருவிகளாக அவை பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்னும் முடி வுக்கே நாம் வரவேண்டியிருக்கிறது. அதாவது, சில பொருள்களின் விற்பனையைத் தடுப்பதுதான் அல்லது கட்டுப்படுத்துவதுதான் அரசாங்கத்தின் நோக்கம் என்பது வெளிப்படையாகத் தெரியாத வகையில் அதனைத் தடுக்கவும் கட்டுப்படுத்தவும் சில வரிகள் பயன் படுத்தப்படுகின்றன.

ஒழுங்குபடுத்தும் அல்லது கட்டுப்படுத்தும் பணி, கட்டுப் பாட்டு அமைப்புகள்மூலம் நேர்முகமாக நிறைவேற்றப்பட வேண் டுமே தவிர, வரிகளின்மூலம் செயற்படுத்தப்படல் ஆகாது என்று சிலர் அடிக்கடி வாதாடுகிறார்கள். ஒரு பொதுவான விதி என்னும் முறையில், இந்த வாதம் பொருத்தம் உள்ளதாகவே இருக்கிறது. ஏனென்றால், வருவாய் திரட்டும் பணியும் கட்டுப்பாட்டுப் பணியும் ஒன்றாகப் பிணைக்கப்படுவதால், இரண்டு பணிகளில் எதுவுமே நிறை வேற்றப்படவேண்டிய அளவு திறமையுடன் நிறைவேற்றப்படா மல் இருக்கலாம். அதோடு இந்த முறையின் விளைவாக ஏற்படுகிற மற்றொரு தீமை யாதெனில், வரிகளால் ஏற்படும் விலை உயர்வின் காரணமாக, உயர்ந்த விலை கொடுத்துப் பொருள்களை வாங்கக் கூடியவர்களுக்குமட்டுமே அவை கிடைக்கக்கூடிய ஒரு சூழ்நிலை ஏற்பட்டுவிடுகிறது. வாணிபக் கொள்கைச் சிக்கல்கள்பற்றி நாம் இங்கே ஆராயவேண்டிய தேவையில்லை. ஒரு நாட்டிற்குள் அல்லது மாநிலத்திற்குள் அல்லது சமுதாயத்திற்குள் பொருள்கள் நுழைவதைத் தடுப்பது சிக்கனமான முறையா அல்லவா என்பதைப் பற்றிய கேள்வி நம்முடைய தற்போதைய ஆராய்ச்சியின்

எல்லைக்கு அப்பாற்பட்ட ஒன்றாகும். நாம் இங்கே ஆராய விரும்புவ தெல்லாம், ஏதாவது ஒரு காரணத்திற்காக அவ்வாறு பொருள்கள் நுழைவதைக் கட்டுப்படுத்தவேண்டும் என்று அரசாங்கம் முடிவு செய்துவிட்டால், அந்தக் கட்டுப்பாட்டை நேர்முகத் தடைகள் அல்லது பங்களவுகள் (quotas) மூலமாக நிறைவேற்றுவது சிறந்த முறையா அல்லது வரிச் சட்டங்கள்மூலம் கொண்டுவருவது உயர்ந்த வழியா என்பதுதான். உண்மையாகவே வருவாய் நோக்கம் இருக்கின்ற சமயங்களைத் தவிர ஏனைய எல்லாச் சமயங் களிலும் நேர்முகமாகக் கட்டுப்பாடு செய்வதே சிறந்த முறை என்பதை ஒரு பொது விதியாகக் கூறலாம். வருவாய் நோக்கம் இருக்கின்ற சமயங்களில் கருவூலமானது வரி வசூலைச் செய்வதற் கான அமைப்பு ஒன்றை உருவாக்கியாக வேண்டும். அதே அமைப்பு, சிறிதளவு கூடுதல் முயற்சி எடுத்துக்கொண்டு, கட்டுப்பாட்டுச் சட்டங்களையும் நிர்வாகம் செய்யும்.

வரிவிதிப்பின் மூன்றாவது நோக்கத்தைக் கட்டுப்பாட்டு நோக்கத்தின் விரிவு என்றே கூறிவிடலாம். கட்டுப்பாட்டு நோக்க மானது, ஒரு தனிப் பொருளின் உற்பத்தியைமட்டும் கட்டுப் படுத்துவதோடு நில்லாமல், நாட்டு வருமானம் முழுவதையுமே கட்டுப்படுத்துகிற அளவுக்கு விரிவடைகிறபோது, கட்டுப்பாட்டு நோக்கத்தை மூன்றாவது நோக்கத்திலிருந்து தனித்து நிற்கிற ஒரு மாற்றுக் குறிக்கோளாகக் கருத முடியாது. வரிகளானவை வரு மானத்தைத் தனியாட்களிடமிருந்து அரசாங்கத்திற்கு மாற்று வதன்மூலம் தனியாரின் நுகர்வு, முதலீடு ஆகியவற்றின் தன்மை யையும், அதன் மூலமாக நாட்டு வருமான அளவின் தன்மையையும் மாற்றி அமைக்கவல்ல ஆற்றல் படைத்தனவாக இருக்கின்றன என்பதை நாம் நன்கு அறிவோம். வருமான அளவு மாறாமல் இருக்குமானால், விலை உயர்வை உண்டாக்குகிற வரிகளின் விளைவா கப் பொருள்கள் வாங்கப்படும் அளவு குறைந்துவிடுகிறது. அது போலவே, உபரி வருமானத்தின் ஒரு பகுதியை எடுத்துக்கொள்ளும் வரிகள் தனியார் நுகர்வுக்கும் முதலீட்டுக்கும் செலவிடப்படக் கூடிய நிதிகளைக் குறைத்துவிடுகின்றன. இந்த உண்மைகளை யெல்லாம் கவனிக்கும்போது, வரி விதிப்பதில் அரசாங்கத்திற்குள்ள தலையாய நோக்கம் நாட்டு வருமானத்தின் அளவை ஒழுங்கு படுத்துவதே தவிர, கருவூலத்திற்கு வருவாயைப் பெறுவது அன்று என்று கருதத் தோன்றுகிறது. குறைந்த வருமானம் உள்ள காலங்களில் நாட்டின் வருமான அளவை உயர்த்துவதற்காக அரசாங்கம் வரிகளின் அளவைக் குறைத்துத் தன் செலவுகளின் அளவைக் கூடுதலாக்குவதால், அத்தகைய காலங்களில் வரி விதிப் பின் தலையாய நோக்கமாக இருப்பது கட்டுப்பாடே தவிர

வருவாய் தேடுவது அன்று என்பது தெளிவாகத் தெரிகிறது. அது போலவே முழு உற்பத்தி அளவில் பணவீக்கம் ஏற்படக்கூடிய நிலை தோன்றும்போது, அரசாங்கக் கொள்கை அதிக அளவில் வரி விதிப்பதும், குறைந்த அளவில் செலவிடுவதுமாக மாறிவிடுகிறது. ஆகவே, பணவீக்க காலங்களிலும் வரிவிதிப்பின் தலையாய நோக்கம் கட்டுப்பாடு அல்லது ஒழுங்குபாடே என்பது வெளிப் படை. இந்த உண்மைகளிலிருந்து தெள்ளத் தெளிவாகத் தெரிவது என்னவென்றால், வரிவிதிப்பின் நாட்டு வருமான நோக்கத்தின் விளைவாக வருவாய் நோக்கம் தலையாயதாக இருந்திருந்தால், அரசாங்கம் இயல்பாகக் கையாண்டிருக்கக்கூடிய கொள்கைக்கு நேர்மாறான கொள்கையையே தற்போது கையாள்கிறது என்பதாகும்.

ஏ. பீ. லெர்னர் (A. P. Lerner) என்பாரை முதன்மையான வராக உடைய பொருளாதார அறிஞர்களின் ஒரு சிறு குழுவினர், வரிவிதிப்பின் வருவாய் நோக்கத்திற்கும் கட்டுப்பாட்டு நோக்கத் திற்கும் இடையே உள்ள இந்த முரண்பாட்டை மிக அதிகமாக வற்புறுத்துவதோடு, வருவாய் நோக்கத்தையே முற்றிலும் புறக்க ணிக்கும் நிலைக்குச் சென்றுவிடுகிறார்கள். பொது நிதி (public finance) என்பது 'பணியாற்றும் நிதி'யாகத்தான் (functional finance) இருக்கவேண்டும் என்றும், நாட்டின் வருமானத்தைப் போதுமான அளவுடையதாக ஆக்கும் நோக்கமே அதன் தனிப் பெரும் நோக்கமாக இருக்கவேண்டும் என்றும், ஏனைய எல்லா நோக்கங்களும் இந்த மாபெரும் நோக்கத்திற்கு இடம் தந்து ஒதுங்கிவிடவேண்டும் என்றும் அவர்கள் வற்புறுத்துகிறார்கள். வரிவிதிப்பைப் பொறுத்தவரை, 'பணியாற்றும் நிதி'க் கொள்கை கீழ்க்கண்ட மேற்கோளில் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்தை உடைய தாக இருக்கிறது :

'வரிவிதிப்பின் விளைவுகளைப்பற்றிக் கவனிக்கும்போது, அரசாங்கம் வரிவிதிப்பால் பொதுமக்களிடம் ஏற்படும் விளைவுகளைத்தான் முக்கிய மாகக் கவனிக்கவேண்டும். ஏனென்றால், அரசாங்கம் அம் மக்களின் நலனுக் காகவே பணியாற்றுவதாகக் கருதப்படுகிறது. வரிவிதிப்பால் அரசாங்கத் தில் எத்தகைய விளைவுகள் ஏற்படும் என்பது பொதுமக்களிடம் ஏற்படக் கூடிய விளைவுகளோடு ஒப்பிடும்போது முக்கியமானது அன்று.............. ...எடுத்துக்காட்டாக, எந்த வகை வரி செலுத்தலாலும் இரண்டு விளைவுகள் ஏற்படுகின்றன. வரி செலுத்துவதால் வரி செலுத்துவோரிடம் உள்ள பணம் குறைந்துவிடுகிறது என்பது ஒரு விளைவு; அரசாங்கத்திடம் உள்ள பணம் கூடுதலாகிறது என்பது மற்றொரு விளைவு. முதல் விளைவு முக்கிய மானது. ஆகவே, வரி செலுத்துவோரிடம் உள்ள பணத்தின் அளவு குறையவேண்டும் என்று விரும்புவதற்குப் பொருத்தமான காரணம் இருக்கும்போதுதான் வரி விதிக்கப்படவேண்டும். வரிவிதிப்பால் அர சாங்கத்தில் ஏற்படுகிற விளைவு, அதாவது, அரசாங்கத்திடம் உள்ள பணம் கூடுதலாகும் என்பது ஏன் முக்கியமானதன்று என்றால், வரி செலுத்து

வோரின் பணத்தைக் குறைக்காமலே அரசாங்கம் எப்போது வேண்டுமானு லும் எளிதில் கூடுதலான பணத்தைப் பெற முடியும்.............இதிலிருந்து தெரிவது என்னவென்றால், அரசாங்கத்திற்குப் பணம் தேவைப்படுகிறது என்பதற்காகமட்டும் எப்போதுமே வரிகள் விதிக்கப்படலாகாது என்பதே. பொருளாதார நடவடிக்கைகளைக் குறைப்பது விரும்பத்தக்கது என்று கருதப்படும் சமயங்களில்மட்டும்தான் அந் நடவடிக்கைகள்மீது வரி விதிக் கப்பட வேண்டும். தனியாட்களிடம் உள்ள பணத்தை எந்த அளவு குறைக்கவேண்டும் என்று முடிவு செய்யப்படுகிறதோ அந்த அளவுக்குத் தான் தனியாட்கள்மீது வரிகளை விதிக்கலாம்.'[3]

தனியாட்களிடமிருந்து பணத்தை எடுத்துவிடுவதுதான் வரி விதிப்பின் நோக்கம் என்று தெரிவிக்கும் இந்தப் 'பணித் தன்மைக்' கருத்து ('functional' view) மிகத் தீவிரமான புரட்சியாகக் காணப் படுகிறது. பொதுமக்களிடமுள்ள வாங்கும் திறனைக் குறைக்கவேண்டும் என்னும் விருப்பத்தைச் செயலாற்றுவதன் விளைவாகத் தற்செயலாக அரசாங்கத்திடம் பணம் சேரும் சமயங் களைத் தவிர ஏனைய காலங்களில் அரசாங்கச் செலவுக்குப் பணம் தேவை என்பதற்காக வரி விதிப்பது முறையன்று என்பது, 'பணி யாற்றும் நிதிக்' கொள்கையின் கருத்தாக இருக்கிறது. பொதுக் கடனைப் பண ஆக்கம் செய்வதன்மூலம் அரசாங்கச் செலவுக்குரிய நிதிகளைப் பெறவேண்டும் என்பது இந்தக் கொள்கையின் கருத் தாக இருப்பதால், பண வீக்கத்தால் ஏற்படக்கூடிய ஆபத்துகளை இக் கொள்கை நன்றாக உணரவில்லை என்று தோன்றுகிறது. ஆனால், இந்தக் கொள்கையை நுணுக்கமாக ஆராய்ந்து பார்த் தால், உண்மையில் இதில் அடங்கியுள்ள புரட்சிக் கூறு அவ்வளவு புரட்சியானதன்று என்பது தெரியவரும். 'பணியாற்றும்' வரி விதிப்பானது (functional taxation) வரி முறையின் இறுதிநிலையில் மட்டும் (at the margin) நடைபெறுகிறது என்பதும், அப்படி நடைபெறுவதன் விளைவாக வரிவிதிப்பின் 'இயல்பான' அளவில் (normal amount of taxation) சிறிதளவு கூடுதலோ குறைவோ தான் ஏற்படுத்தப்பட வேண்டியிருக்கும் என்பதும் தாம் பணியாற்றும் வரி விதிப்பின் இயல்புகள் என்று நாம் கருதுவோமானால், இக் கொள்கை யால் ஏற்படும் திகைப்புக் குறைந்துவிடும். ஈடுசெய் நோக்கத் தோடு (compensatory view) வரிகளைப் பயன்படுத்தும் நடைமுறை யில் பொதிந்துள்ள கருத்து இதுதான் : உயர்ந்த வீத வரிவிதிப்பின் போது வேலை நிறைவு அளவை ஏற்படுத்தத் தக்க அடிப்படைப் பலம் உடையதாகப் பொருளாதாரம் இருக்கிறது. வாணிப நடவடிக்கை யானது வேலை நிறைவு அளவைவிடக் 'குறைந்துவிடும் காலங்களில் செலவின் அளவுக்குத் தேவையான வருவாயை ஈட்டித் தர வரிவிதிப் பால் இயல்வதில்லை. அத்தகைய காலங்களில் அரசாங்கம் செலவைச் சரிக்கட்டக் கடன் வாங்கவேண்டுமே தவிர அதிக அளவில் வரி

விதிப்பதில் ஈடுபடக் கூடாது. தேவை (demand) பற்றுக்குறை யாக இருக்கும் இத்தகைய காலங்களில் கடன் வாங்குவதால் பண வீக்கம் ஏற்படாது என்றே கூறிவிடலாம்.

பொருள்களுக்கான தேவை (demand) உயர்ந்து, உற்பத்தி அந்த அளவுக்கு உயர முடியாமல் விலை உயர்வுகள் ஏற்படுகிற காலங்களிலும், வரிவிதிப்பைப் 'பணியாற்றும்' முறையில் (functionally) பயன்படுத்துவதால், அரசாங்கச் செலவைச் சரிக்கட்டுவதற்குத் தேவையான வருவாயைப் பெறமுடியும். ஆகவே, கூட்டரசாங்க வரிவிதிப்பின் 'இயல்பான' அளவால் ('normal' level of federal taxation) கிடைக்கும் தொகை 70 பில்லியன் டாலராக இருப்பதாகவும், வரிகளைப் 'பணி யாற்றும்' முறையில் பயன்படுத்துவதால் ('functional' use of taxes) அந்தத் தொகையில் 10 பில்லியன் டாலர் கூடுதலோ குறைவோ ஏற்படுவதாகவும் வைத்துக்கொண்டால், வரிமுறை யானது அரசாங்கம் பொருள்களையும் ஊழியங்களையும் வாங்குவ தற்குத் தேவையான பணத்தை ஈட்டித் தருவது, வரி செலுத்துவோ ரிடமிருந்து நிதிகளை எடுத்துவிடுவது அல்லது அவர்களிடம் நிதிகளை விட்டு வைப்பது ஆகிய இரண்டு கோட்பாடுகளையும் நிறை வேற்றிவிடுகிறது என்று கூறலாம். வரி அளவுகளில் இறுதிநிலை மாறுதல்களை (marginal variations) அல்லது மிகச் சிறு மாறுதல் களைச் செய்யும் ஏற்பாடு, பிற வகை ஈடுசெய் ஏற்பாடுகளோடு (compensatory arrangements) இணைந்த முறையில் செய்யப்படு மானுல், அந்த ஏற்பாட்டால் 'பணியாற்றும்' நோக்கம் (functional purpose) நிறைவேறும். இந்த நோக்கம் வெற்றிபெறுவதற் காக வரிவிதிப்பின் அளவை 70 பில்லியன் டாலரிலிருந்து பூஜ்ய அளவுக்குக் (zero level) குறைப்பதோ, அல்லது 70 பில்லியன் டாலரிலிருந்து 140 பில்லியன் டாலராக உயர்த்துவதோ (அதாவது, மாபெரும் அளவில் மாறுதலைச் செய்வது) தேவையற்ற செயல் களாகும். இவ்வாருக நிலைபேறுக்க நோக்கத்தை முன்னிட்டு வரி அளவுகளைப் 'பணியாற்றும்' முறையில் (இறுதி நிலையில்) பயன் படுத்துவதால், ஒரு வாணிபச் சுழலின் முழுக் கால அளவில் வரவு செலவுத் திட்டம் ஒத்த நிலை உடையதாக அமையும் என்று எதிர் பார்க்கலாம். இத்தகைய நிலையில், 'பணியாற்றும்' நிதிக் கோட் பாட்டின் விளைவாக, அரசாங்கச் செலவிலோ அல்லது கடனிலோ பெரும் மாறுதல்கள் ஏற்படமாட்டா என்பது உறுதி.

தனியாட்களின் வருமானத்தில் ஒரு பகுதியைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு முறைப்படி உரிமை இருக்கிறது. ஆனுல், வாணி பச் சுழலின் கண்ணேட்டத்திலிருந்து பார்க்கும்போது, கடந்த

காலத்தில் அரசாங்கம் அந்த உரிமையைத் தவருன முறையிலேயே பயன்படுத்தியிருக்கிறது என்பது விளங்கும். அதாவது, அரசாங்கம் உயர்த்தக்கூடாத காலத்தில் (மந்த காலத்தில்) வரியை உயர்த்தியிருக்கிறது; குறைக்கக் கூடாத காலத்தில் (பணவீக்க காலத்தில்) வரியைக் குறைத்திருக்கிறது. இத்தகைய தவறு செய்யப்பட்டதன் முதன்மையான காரணம், வரிவிதிப்பின் வருவாய் நோக்கத்திற்கு அளவுக்குமீறிய முக்கியத்துவம் தரப்பட்டதே ஆகும். சுழல் எதிர்ப்புக் கட்டுப்பாட்டு நோக்கத்தைக் (counter-cycle sumptuary objective) கையாள்வதால், தனியாள் வருமானத்தில் ஒரு பகுதியைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு உள்ள உரிமையைத் துறந்துவிட வேண்டும் என்ருே, வருவாய் நோக்கத்திற்குச் சிறிதளவும் முக்கியமில்லாத ஒரு நிலையைத் தரவேண்டும் என்ருே ஏற்பட்டுவிடாது. குறுகிய காலத்தில் ஈடுசெய் நோக்கமே தலைசிறந்த இடத்தைப் பெறும். ஆனல், அதே நேரத்தில் தேவையான வருவாயைப் பெறுவதற்காக வரி விதிப்பது என்னும் வருவாய் நோக்கமும் நிறைவேற்றப்படும். ஆனல், அந்த நோக்கத்திற்கு ஏற்ப விதிக்கப்படும் வரி அளவில், நாட்டு வருமானத்தில் வாணிபச் சுழலின் விளைவாக ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்ற முறையில் மாறுதல் செய்யப்படும். அதாவது, சுழல் எதிர்ப்பு மாறுதல்களுக்கு உட்பட்ட முறையில் வருவாய் நோக்கம் நிறைவேற்றப்படும்.

### வரிச்சுமைகளின் பங்கீடு

குறிப்பிட்ட வரிகளை உருவாக்குவதிலும், மொத்த வரி முறையை (over-all tax system) உருவாக்குவதிலும் கையாள வேண்டிய கோட்பாடுகளைப்பற்றி இனி நாம் பகுத்தாய்வு செய்யலாம். அப்படிச் செய்யும்போது குறிப்பிட்ட வகையான வரிகளை வேறு சில வகை வரிகளுக்குப் பதிலாகத் தேர்ந்தெடுப்பது, ஒரு குறிப்பிட்ட வரியைப் பல்வேறு தனியாட்கள் எந்த எந்த அளவில் செலுத்தவேண்டும் என்பதை முடிவு செய்வது ஆகிய இரண்டு சிக்கல்களைப்பற்றி நாம் கவனம் செலுத்தியாகவேண்டும்.

இரண்டு அடிப்படைக் கருத்துகள் : வரிக் கோட்பாட்டைப் பற்றி (tax theory) விரிவாக ஆராய்வதற்கு முன்னல் இரண்டு அடிப்படை உண்மைகளை எடுத்துக்காட்டி வலியுறுத்திவிட்டால் வரிகளைப்பற்றிய நம் சிந்தனை தெளிவாக இருக்கும்; அவற்றைப் பற்றிய பகுத்தாய்வில் நாம் தவறுகள் செய்யும் நிலைமையும் ஏற்படாமல் இருக்கும். அந்த இரண்டு உண்மைகளாவன :

1. எல்லா வரிகளும் இறுதியில் வருமானத்திலிருந்துதான், அதுவும் தனியாட்களின் வருமானத்திலிருந்துதான் செலுத்தப்

படுகின்றன. இந்தப் பொதுமை விதிக்கு ஒரே ஒரு விதிவிலக்கு தான் உண்டு. வரிகள் வருமானத்தைவிட மிகையாக இருக்குமானால், அந்த மிகை வரிகள், மூலதனத்திலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்பதே அந்த விதிவிலக்கு.

2. பல வரிகள் முதலில் யார்மீது விதிக்கப்படுகின்றனவோ அவரிடமே இறுதியில் நிலைத்திருப்பதில்லை.

முதற் பார்வையில் அளவுகடந்த சிக்கல் உடையதாகத் தோன்றும் ஒரு நிலைமையை எளிய ஒன்றாக ஆக்கிவிடும் திறமையை, மேலே தரப்பட்டுள்ள முதல் உண்மை பெற்றிருக்கிறது. எத்தகைய பாதையில் ஒரு வரி சென்றாலும் இறுதியில் அதனால் ஏற்படும் விளைவு தனியாரின் வருமானம் அரசாங்கத்திற்கு மாறுவதே என்பதை அந்த உண்மை தெளிவுபடுத்துகிறது. பொருளாதார வருமானத்தின் அடிப்படையில் பொது விதிகளை வகுப்பதற்கும், குறிப்பிட்ட வரிகளின் பொருளாதார விளைவுகளின் சிறப்புத் தன்மைகள்பற்றிய விதிகளை வகுப்பதற்கும், அந்த உண்மை நமக்குப் பெருந்துணை புரிகிறது. அதோடுகூட, தனியார் சொத்துரிமை உள்ள ஒரு பொருளாதாரத்தில் எல்லா வருமானங்களும் இறுதியில் தனியாள் வருமானங்களே என்பதை உணர்வதால், ஒரு குறிப்பிட்ட தனியாளுடைய வருமானத்தின்மீது பேதம் காட்டும் முறையில் (பிறருடைய வருமானத்தின்மீது விதிக்கப் படாத முறையில்) பல்முறை வரி விதிக்கப்படுவதை (discriminatory multiple taxation) நம்மால் கண்டுபிடிக்கவும் முடிகிறது; தடுக்கவும் முடிகிறது.[4]

இரண்டாவது உண்மையை, அதாவது ஒரு குறிப்பிட்ட வரியின் சுமை அதனை முதலில் செலுத்துபவர்மீதே விழுந்தாக வேண்டும் என்னும் கட்டாயம் இல்லை என்பதை உணர்வதால், குறிப்பிட்ட வரிகளின் சுமையைப்பற்றிய பகுத்தாய்வில் நாம் தர்க்கமுறைத் தவறுகள் எவற்றையும் செய்யாமல் இருக்க முடியும். தான் செலுத்தவேண்டிய வரித் தொகைக்காகக் கருவூலத்திற்கு 'செக்கு' (cheque) அனுப்பும் தனியாள்தான் அந்த வரிச் சுமையைத் தாங்குகிற ஆளாகவும் இருந்தாகவேண்டும் என்று நம்பிவிடுவதால் ஏற்படும் முடிவுகள், ஒரு குறிப்பிட்ட வரியின் மெய்யான விளைவுகளைப்பற்றிய உண்மைகளிலிருந்து பெரும் அளவில் மாறுபட்டனவாக இருக்கும். வரிக்கோட்பாட்டைப் பற்றிய பகுத்தாய்வில், வரிபற்றிய சட்டங்களில் அமைக்கப்பட வேண்டிய அறநெறிக் குறிக்கோள்களைத்தான் (ideals of justice) முதலில் வகுத்துக்கொள்வது வழக்கம். இந்தக் குறிக்கோள்கள் நடைமுறையில் உண்மையில் பின்பற்றப்படுகின்றனவா

என்பது, வரிச் சுமைகள் இறுதியில் எந்த இடத்தில் நிலைத்து நிற்கின்றன என்பதைக் கண்டறிவதில் நமக்கு இருக்கிற திறமையையே பொறுத்திருக்கிறது. வரிச் சுமைப் பங்கீடுபற்றிய பொதுக் கோட்பாடுகளின் அடிப்படையில், குறிப்பிட்ட வரிகளைப்பற்றி நாம் பகுத்தாய்வு செய்யும்போது, வரிச் சுமைகள் சென்று தங்கும் இடங்களை மிக நுண்ணிய முறையில் கண்டுபிடிப்பது நம்முடைய தலைசிறந்த கடமையாகும்.

**வரிச்சுமைப் பங்கீட்டுக்கான அடிப்படைகள் :** ஏதாவது ஒரு குறிப்பிட்ட வரியைப் பரிந்துரைப்பதற்கு முன்னுல், வரி செலுத்தும் மக்களுக்கிடையே வரிச் சுமைகளைப் பங்கிடுவதற்கான அடிப்படை எதுவாக இருக்கலாம் என்பதைப்பற்றி முடிவு செய்யவேண்டியது இன்றியமையாதது. வரிச் சுமைகள் 'நேர்மையான' முறையில் அல்லது 'நியாயமான' முறையில் பங்கிடப்படவேண்டும் என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். ஆனுல், நேர்மையான அல்லது நியாயமான முறை என்றுல் அது குறிப்பாக எதைச் சுட்டிக்காட்டுகிறது ? சமுதாயத்தின் நன்மைக்காக அரசாங்கம் சில பணிகளைச் செய்யவேண்டியிருக்கிறது என்பதை அனைவரும் ஏற்றுக்கொள்வர். இத்தகைய நிலைமையில் தனியாட்கள் ஒவ்வொருவரும், தாம் எவ்வளவு தொகையை அரசாங்கத்திற்குத் தருவது முறை அல்லது நியாயம் என்று கருதுகின்றனரோ அவ்வளவு தொகையைத் தரட்டும் என்று இருந்துவிடமுடியாது. ஆகவே, அரசாங்கச் செலவுக்கான தொகையைத் தனியாட்களிடமிருந்து வலுக்கட்டாயத்தின் மூலம்தான் பெறவேண்டியுள்ளது. அப்படிப் பெறுவதாக இருந்தால் பல்வேறு தனியாட்களிடமிருந்து வரித் தொகையைப் பெறுவதற்கான அடிப்படையை முடிவு செய்தாகவேண்டும்.

வரிச்சுமைகளைப் பங்கீடு செய்யும்போது சமுதாயத்தைப் பல்வேறு பெரு வகுப்புகளின் ஒரு தொகுப்பாகக் கருதுவது இன்றியமையாதது. உண்மையான சுமைகளை (real burdens) எந்தச் சட்டமும் எல்லாத் தனியாட்களிடமும் சரிசமமான நிலையில் பங்கிட்டுவிட முடியாது. சுமை என்பது அடிப்படையில் உள்ளத்தைப் பொறுத்த ஒன்றுக இருந்தாலும், வரிபற்றிய நிலைமைகளுக்காக அது புற அடையாளங்களின் வாயிலாகத்தான் அளக்கப்பட முடியும் என்பதும், இந்தப் புற அடையாளங்கள் துல்லியமானவை அல்ல (not accurate) என்பதுமே, அப்படிப் பங்கிட முடியாததற்கான காரணமாகும். ஆகவேதான் வரிமுறைகள் சமுதாயத்தை வருமான வகுப்புகள், சொத்துள்ள வகுப்புகள், உற்பத்தியாளர் வகுப்புகள், நுகர்வோர் வகுப்புகள் என்னும் பல்வேறு வகுப்புகளைக் கொண்ட ஒரு தொகுதியாகக் கருதுகின்றன. ஒவ்வொரு வகுப்பில்

அடங்கியுள்ள தனியாட்களுக்கு இடையேயும் பல்வேறு மாறுபாடுகள் இருக்கக்கூடும். ஆனல், அவை அனைத்தையும் கணக்கில் எடுத்துக்கொண்டால் நடைமுறையில் நிர்வாகம் செய்யக்கூடிய வகையில் எந்த வரியையும் உருவாக்க முடியாது.

ஆனல், வரி செலுத்துவோரின் வகுப்புகளுக்கு இடையே நியாயம் என்றல் என்ன பொருள்? நியாயத்தை அளந்து அறிவதற்கான முறைகள் யாவை? நியாயம் என்பது வரி செலுத்தும் வகுப்புகளுக்கு இடையே வரிச் சுமை சமமான அளவில் இருப்பதாகும். தலை வரி (poll tax) மட்டும் விதிக்கப்பட்ட காலத்தில் நியாயமான சுமைப் பங்கீடு என்பது, உரிய வயதை அடையாதவர்கள் (minors) தவிர ஏனைய எல்லோரும் ஒரே அளவு வரியைச் செலுத்தவேண்டும் என்னும் பொருளை உடையதாக இருந்தது. சிறிது காலத்திற்குப் பிறகு, ஒரு தனியாளின் உடைமையாக உள்ள சொத்தின் அளவு அல்லது ஒரு தனியாளால் பெறப்படுகிற வருமானத்தின் அளவு முதலிய ஏதேனும் ஒரு திறனின் புற அடையாளத்தின் வீதத்திற்கு ஏற்றபடி (in proportion to some outward indication of faculty) தொகையைச் செலுத்துவதுதான் சுமையைச் சமப்படுத்தும் முறையாகும் என்று கருதப்பட்டது. பல்வேறு தனியாட்களிடமிருந்து சம அளவில் இல்லாமல் (வருமான அளவின் அல்லது சொத்து அளவின்) வீதாசாரப்படி தொகையைப் பெறுகிற வரி முறைமட்டும்தான் நியாயமான வரிமுறை என்று பத்தொன்பதாம் நூற்றண்டின் இறுதிப் பகுதிவரை ஏறத்தாழ முடிந்த முடிவாகக் கருதப்பட்டது. ஒரே அளவுள்ள வரித் தொகையை வெவ்வேறு அளவு வருமானம் உடையவர்கள் செலுத்தும்போது, அந்த வரியால் அந்த வெவ்வேறு ஆட்களுக்கு ஏற்படுகிற சுமையின் அளவும் வெவ்வேருகத்தான் இருக்கும் என்பதை இந்தக் கருத்தே ஏற்றுக்கொள்கிறது என்பது தெளிவு. சுமையின் அளவு வெவ்வேருக இருக்கும் என்றல், எந்த அளவு வேறுபாடிருக்கும்? சம அளவுள்ள வரிகளால் சம அளவில்லாத சுமைகள் ஏற்படுமானல், வீதாசார வரிகளால் சம அளவுள்ள சுமைகள் ஏற்படுமா? இந்தச் சிக்கலைப் பொறுத்தவரை ஓரளவு கருத்து வேறுபாடு இருக்கிறது என்றபோதிலும், வருமானம் உயரும்போது வரியின் அளவு வளர் வீதத்தில் உயர்ந்தால்தான் சுமைகள் சமமாகும் என்னும் முடிவே பெரும்பாலான பொருளறிஞர்களின் கருத்தாக இருக்கிறது. இந்த அத்தியாயத்தின் பிற்பகுதியில் இந்தச் சிக்கலைப்பற்றி விரிவாக அலசிப் பார்க்கலாம்.

ஆனல், வரிச் சுமையைப் பொருத்தமான முறையில் பங்கிடுவது பற்றிய பகுத்தாய்வு தனியாட்களுக்கிடையே சுமையை நியாய

மான முறையில் பங்கிடுவது எப்படி என்பதோடு முடிந்துவிடக் கூடியது அன்று. முழுப் பொருளாதாரத்தின் நன்மையைப்பற்றிய கேள்விகளை எழுப்புவது, இந்தப் பகுத்தாய்வின் ஒரு தலையாய பகுதியாகும். இந்தக் கேள்விகள் இரண்டு வகையானவை. வரிப் பங்கீட்டால் பொருளாதாரத்தின் நடைமுறை அளவில் (operating level of the economy) எத்தகைய விளைவுகள் ஏற்படுகின்றன என்பது ஒரு வகைக் கேள்வி. பொருளாதாரத்தால் உற்பத்தி செய்யப்படுகிற பொருள்களிலும் ஊழியங்களிலும் வரிமுறையால் எத்தகைய விளைவுகள் உருவாகும் என்பது மற்றொரு வகைக் கேள்வி. வரிகளின் தொடர்பில் தனியாட்கள் நடத்தப்படும் முறையால் ஒவ்வொரு தனியாளின் நிலைமையும் உயருமானால், தனியாட்கள் நடத்தப்படும் முறையில் சமத்துவமின்மை (inequality) இருப்பது நியாயம் என்றே கூறலாம்; அல்லது அதிக அளவில் எதிர்க்கப்படவேண்டிய தேவையில்லாதது என்றாவது கூறலாம். அதாவது, வரிமுறையின் விளைவாக என்னிடம் எஞ்சியுள்ள தொகை உம்மிடம் எஞ்சியுள்ள தொகையைவிடக் குறைவாக இருக்கலாம். ஆனால், வரிச் சுமைப் பங்கீட்டின் விளைவாக அனைவரிடமும் உள்ள மொத்தத் தொகையில் உயர்வு ஏற்பட்டு, அந்த உயர்வின் பயனாக என்னிடமுள்ள சிறிய தொகை (பிறரிடம் உள்ள தொகைகளோடு ஒப்பிடும்போது சிறிதாகக் காணப்படுகிற தொகை), அதிகச் சமத்துவமுள்ள பங்கீட்டின் விளைவாக ஏற்பட்டிருக்கக்கூடியதை விடக் கூடுதலான அளவில் இருக்குமானால், தனியாட்களுக்கு இடையே சமத்துவம் இல்லாமலிருக்கும் வரித் திட்டத்தால் என் நிலைமை முன் இருந்ததைவிடச் சிறப்பானதாக ஆகிவிடுகிறது. 7ஆவது அத்தியாயத்தில் தெரிவிக்கப்பட்ட கருத்துகளிலிருந்து இரண்டாவது வகைக் கேள்வி பிறக்கிறது. சமுதாய நலன், உற்பத்தி செய்யப்படும் பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின் அளவைமட்டும் பொறுத்த ஒன்றாக இல்லாமல், அப் பொருள்கள் அல்லது ஊழியங்களின் தன்மைகளையும் பொறுத்திருக்கிறது. தனியாட்களுடைய விருப்பங்கள் எப்படிப்பட்டவையாக இருந்தாலும், சில பொருள்கள் வேறு சில பொருள்களைவிடச் சமுதாயத்திற்குக் கூடுதலான அளவில் விரும்பப்படுபவையாக இருக்கின்றன. பயனற்ற போகப் பொருள்களின் உற்பத்தியைவிட, இன்றியமையாப் பொருள்கள், வசதிப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியையே சமுதாயம் அதிக அளவில் விரும்புகிறது. ஆகவே, வரி செலுத்தியபின் எஞ்சியுள்ள வருமான அளவை மாற்றியமைப்பதன்மூலம் முதல் வகைப் பொருள்களுக்கான தேவையைக் (demand) குறைத்து, இரண்டாம் வகைப் பொருள்களுக்கான தேவையை உயர்த்தும் ஆற்றல் படைத்த வரி முறையானது தேவையான ஒரு சமுதாயப் பணியை ஆற்றுகிறது.

வரியின் அடிப்படையை (tax base) வரி வீதத்தால் (tax rate) பெருக்கிவந்த தொகையே, செலுத்தவேண்டிய வரித் தொகையாகும்.[5] ஆகவே, பொருத்தமான வரிச் சுமையைப்பற்றி ஆராயும்போது ஒரு பொருளின்மீது எந்த அளவுக்கு வரி விதிக்கலாம் என்பதைமட்டும் கவனித்தால் போதாது; எந்த அடிப்படையில் வரி விதிக்கலாம் என்பதையும் கவனித்தாகவேண்டும். வரி விதிப்பதற்கு என்னென்ன அடிப்படைகள் இருக்கின்றன? செலுத்தும் திறனை அளந்து காட்டுகிற புற அடையாளங்கள் யாவை? கண்ணாடிப் பலகணிகள் பொருத்தப்பட்ட வீட்டைத் தம் உடைமையாகக் கொண்டவர் அதிக அளவில் வரி செலுத்தும் திறன் உடையவர் என்று ஒரு காலத்தில் இங்கிலாந்தில் கருதப்பட்டது. ஒருவர் ஒரு குறிப்பிட்ட வயதை அடைந்துவிட்டால் அவருக்கு வரி செலுத்தும் திறன் ஏற்பட்டுவிடுகிறது என்று தலை வரி கருதுகிறது. சொத்துடைமையே வரி செலுத்தும் திறனை அறிவதற்கான சிறந்த அளவுகோல் என்பது சொத்து வரியின் கருத்து. வருமானத்தை வரியின் அடிப்படையாகக் கொள்வதே இந்தக் காலத்தின் வழக்கமாக இருக்கிறது. நடைமுறையில் வருமானம் ஒன்றுமட்டுமே வரிகளுக்கான மூலமாக இருக்கிறது. ஆகவே, அது ஒன்றுதான் வரிச்சுமைகளைப் பொருத்தமான முறையில் பங்கிடுவதற்கும், பலதிறப்பட்ட வரி செலுத்துவோரின் திறமைகளை ஒப்பிட்டுப்பார்ப்பதற்கும் ஏற்ற கருவியாக விளங்குகிறது. மேலே சுட்டிக்காட்டப்பட்ட ஏனைய வரி அடிப்படைகள் அனைத்தும் புறத் தோற்றங்கள்மூலம் வருமானத்தை அளக்க முனையும் முயற்சிகளே தவிர வேறல்ல. அதோடு, அந்த முயற்சிகள் யாவற்றிலும் பெருந் தவறுகள் ஏற்படக் கூடும்.

வரி செலுத்தல்களின் தோற்றுவாயாக விளங்கும் வருமானத்தையே பொருத்தமான வரி அடிப்படையாக ஒப்புக்கொள்வோமானால், வரிச்சுமைகளைச் சமநிலை உடையதாக ஆக்குவது எப்படி என்னும் சிக்கல், வருமானங்களின்மீது பொருத்தமான வரி வீதங்களை விதிப்பது எப்படி என்னும் கேள்வியாக மாறிவிடுகிறது. ஆனால், வருமானத்தைமட்டுமே வரி அடிப்படையாகக் கொள்ளாமல் பல்வேறு அடிப்படைகளைப் பயன்படுத்துவோமானால், சிக்கல் மேலும் அதிகமானதாக ஆகிவிடுகிறது. ஏனென்றால், அந் நிலையில் குறிப்பிட்ட வரியைச் செலுத்தும் பல்வேறு ஆட்கள் தாங்கிக் கொள்ளும் சுமைகளை ஒப்பிட்டுப்பார்ப்பதோடு நில்லாமல் குறிப்பிட்ட வரிக்கு உள்ளாகிறவர்கள் தாங்கிக் கொள்ளும் சுமைகளை அந்த வரிக்கு உட்படாதவர்கள் தாங்கிக்கொள்ளும் சுமைகளோடு ஒப்பிடவேண்டிய கட்டாயமும் ஏற்பட்டுவிடுகிறது. வரி முறை (tax system) பல அடிப்படைகளைக் கொண்டதாக இருக்கும்

போது, தனியாட்கள்மீது அந்த வரிமுறையால் ஏற்படும் சுமையை அளப்பது மிகக் கடினமான செயலாக ஆகிவிடுகிறது.

செலவும் நன்மையும் (Cost and Benefit): வரிச்சுமைப் பங்கீட்டில் கையாளப்படும் கோட்பாடுகளில் மிகப் பழையவை செலவுக் கோட்பாடும் நன்மைக் கோட்பாடுமே ஆகும். குறிப்பிட்ட தனியாட்களின் நன்மைக்காக அரசாங்கச் செலவுகள் ஏற்படும்போது, அச் செலவுகளை அந்த ஆட்களே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதுதான் செலவுக் கோட்பாட்டில் பொதிந்துள்ள கருத்து. அரசாங்க நடவடிக்கைகளின் விளைவாகத் தனியாட்கள் பெறுகிற நன்மைகளின் அளவுக்கு ஏற்ப அவர்கள்மீது வரிச்சுமை ஏற்றப்படவேண்டும் என்பது நன்மைக் கோட்பாட்டில் அடங்கியுள்ள கருத்து. இந்த இரண்டு கோட்பாடுகளும் அடிப்படையில் ஒன்றாகவே இருக்கின்றன. குடிமக்களோடு அரசாங்கத்திற்கு உள்ள உறவை இரண்டு கோட்பாடுகளுமே ஓரளவு வாணிபத் தன்மை பொருந்தியதாக அமைத்துவிடுகின்றன. ஆனால், செலவுக் கோட்பாட்டில் வரவு செலவுத் திட்டம் ஒத்த நிலை உடையதாக ஆக்கப்படவேண்டும் என்னும் கருத்து அடங்கியிருக்கிறது. நன்மைக் கோட்பாட்டில் அது அப்படித்தான் இருந்தாகவேண்டும் என்னும் கட்டாயம் இல்லை. வரிச்சுமைப் பங்கீட்டுக்கான அடிப்படைகள் என்னும் முறையில் இந்த இரண்டு கோட்பாடுகளிலும் காணப்படுகிற அடிப்படைத் தவறுகள் இரண்டு: (1) செலவையும் நன்மையையும் அளப்பதில் உள்ள இடர்ப்பாடுகள்; (2) அரசாங்க ஊழியங்களின் அளவில் அவற்றால் ஏற்படுகிற விரும்பத்தகாத வரையறைகள் (limitations).

அரசாங்க நடவடிக்கையின் செலவையோ, நன்மையையோ குடிமக்களுக்கு இடையே துல்லியமான முறையில் பங்கிட முடியாது என்பது வெள்ளிடைமலை. பெரும்பாலான அரசாங்கச் செலவுகள் 'மேற்செலவுகள்' என்னும் வகையைச் ('overhead' variety) சேர்ந்தனவாக இருப்பதால், அவற்றைத் தனியாட்களிடையே பங்கிடுவது இயலாத செயலாக இருக்கிறது. அதுபோலவே, அரசாங்கச் செலவால் ஏற்படும் நன்மைகளும், பெரும் அளவு பொதுப்படையாகவே இருக்கின்றன. அரசாங்கத்தின் நீதிப் பிரிவின் (judicial branch) நடவடிக்கைகளால் குறிப்பாக நன்மை அடைபவர்கள் இன்னார் இன்னார் என்று கூறமுடியுமா? போரை நடத்தும் செலவில் எந்த அளவு முறைப்படி என்னுடைய பங்காகவும், எந்த அளவு உம்முடைய பங்காகவும் இருக்கிறது என்பதை எடுத்துக்காட்ட முடியுமா? முதல் தோற்றத்தில் சிலவகை நன்மைகளைக் குறிப்பிட்ட தனியாட்கள்மட்டுமே பெறுவதுபோலக் காணப்பட்டாலும், நுணுக்கமாக ஆராய்ந்து பார்த்தால், அந்

நன்மைகளை (நேர்முகமாக அரசாங்கத்திடமிருந்து) முதலாவதாகப் பெறுபவர்களைத் தவிர, இரண்டாவதாகப் பெறுபவர்களும் (முதலில் பெற்றவர்களிடமிருந்து பெறுபவர்கள்—secondary beneficiaries), மூன்ருவதாகப் பெறுபவர்களும் (இரண்டாவதாகப் பெற்றவர்களிடமிருந்து பெறுபவர்கள் — tertiary beneficiaries) இருக்கிருர்கள் என்பது தெரியவரும். எடுத்துக்காட்டாக, நிவாரணம் பெறுபவர்கள் (relief recipients), நிவாரண உதவித் தொகைகளின் வடிவத்தில் அரசாங்கத்திடமிருந்து நேர்முகமாகச் சிறப்பான நன்மைகளைப் பெறுவது தெளிவாகத் தெரிகிறது. ஆனுல், அவர்கள் அத் தொகைகளைச் செலவழிக்கும்போது, அவர்களிடமிருந்து அத் தொகைகளைப் பெறுகிற கசாப்புக்கடைக்காரர், ரொட்டிக்கடைக்காரர், உழவர் முதலியவர்களெல்லாம் நன்மை பெறுகிருர்கள் என்பதை மறுக்கமுடியுமா? அரசாங்கத்தால் நெடுஞ்சாலைகள் சீரான முறையில் அமைக்கப்பட்டிருப்பதால் மோட்டார் காரை ஓட்டுபவர் நன்மை அடைகிருர் என்பது உண்மைதான். ஆனுல், அவரைப் போலவே அச் சாலைகளால், மோட்டார் கார் வாணிபமும், பெட்ரோல் வாணிபமும், பொதுவான முறையில் பொருளாதாரம் முழுவதுமேகூட நன்மை அடைகின்றன என்பதை மறுக்கமுடியுமா? முதலாவதாக நன்மை பெறுவோர் (primary beneficiaries) மட்டுமே நன்மையின் முழுச் செலவையும் தாங்கவேண்டும் என்பது முறையாகாது என்பது தெளிவாக விளங்குகிறது. ஆனுல், இரண்டாவதாகவும் மூன்ருவதாகவும் நன்மை பெறுபவர்கள், எந்த அளவு நன்மை பெறுகிருர்கள் என்பதை எப்படி அறிய முடியும்? ஆகவே, செலவையும் நன்மையையும் தனியாட்களிடையே பொருத்தமான முறையில் பங்கிட முடியாது என்னும் ஒரு காரணத்தை முன்னிட்டே வரி விதிப்புக்கான அடிப்படைகளாக அவற்ருல் திகழ முடியாது என்று முடிவு கட்டிவிடலாம்.

செலவு, நன்மை ஆகிய இந்தக் கோட்பாடுகளை ஏற்றுக் கொண்டால் அரசாங்க நடவடிக்கைகளில் ஏற்படக்கூடிய இறுக்கமான நிலை (வளையாத, அல்லது நெகிழ்ச்சியில்லாத நிலை), இவற்றை வரிவிதிப்பு அடிப்படைகளாக ஏற்க முடியாததற்கான மற்ருெரு காரணம் ஆகும். வரிவிதிப்பு அடிப்படைகளாக இவற்றை ஏற்றுக் கொண்டால், முறைப்படி அரசாங்கம் நடத்தவேண்டிய பல பொதுவான மாநில அரசாங்கத்தின் நெடுஞ்சாலைத் துறை (Highway Department) என் வீட்டிற்கு எதிரில் ஒரு நெடுஞ்சாலையை அமைக்கக் கூடும்; அப்படி அமைக்கும்போது, அச் சாலைக்கும் என் வீட்டிற்கும் இடையே உள்ள இணைப்பு வழியைச் செப்பனிட்டுக் கொடுக்கவும் அது ஆயத்தமாக இருக்கக் கூடும். அத்தகைய நிலைமையில் அந்த இணை வழியைச் செம்மைப்படுத்துவதற்கான செலவை நான்

ஏற்றுக்கொள்வதுதான் முறை. அதுபோலவே ஓர் அரசாங்கச் செலவின் நன்மைகளைச் சில மக்கட் குழுவினர் மட்டுமே பெறும் போது (எடுத்துக்காட்டு : நகராட்சி மன்றத்தால் உற்பத்தி செய்யப்படும் மின்சாரத்தைப் பெறுவோர்) அவர்கள் அச் செலவை ஏற்றுக்கொள்வது முறையே ஆகும். ஆனால், இத்தகைய பணச் செலுத்தல்கள் உண்மையாகவும் நியாயப்படியும் விலைச் செலுத்தல்களே தவிர வரிச்செலுத்தல்கள் அல்ல (price payments and not tax payments). செலவை அல்லது நன்மையை அறிவியல் முறைப்படி பங்கிடமுடியாதபோது, அல்லது, அத்தகைய பணிகளை நடத்தமுடியாமற்போகும். எடுத்துக்காட்டாக, வறியவர்களுக்கான நிவாரண உதவியை (relief of the needy) அளிக்க முடியாது. ஏனென்றால், அவர்கள் வறியவர்களாக இருப்பதால், இந்தப் பணியின் செலவின் எந்தப் பகுதியையும் அவர்களால் ஏற்க முடியாது. அதுபோலவே, பொதுக் கல்வியை, அதனைப் பெறுவதற்காகப் பணம் செலுத்தும் திறன் உடையவர்களுக்கு மட்டுமே அளிக்கமுடியும். வரிவிதிப்பின் செலவுக் கோட்பாடு அல்லது நன்மைக் கோட்பாட்டின் விளைவாக, அரசாங்கமானது ஊழியங்களை விலைக்கு விற்கும் ஒரு வணிகனின் நிலைக்கு மாற்றப்பட்டு விட்டால், ஐக்கிய அமெரிக்காவினுடைய அரசியல் அமைப்பின் பாயிரத்தில் (preamble) தெரிவிக்கப்பட்டுள்ள நோக்கங்களை நிறைவேற்றுவது இயலாத செயலே.

சில சமயங்களில் செலவையும் நன்மையையும் தனியாட்களிடையே ஓரளவு எளிதாகவே பங்கிடமுடியும் என்பதும், செலவுக் கோட்பாட்டின்படி அல்லது நன்மைக் கோட்பாட்டின்படி அவர்களிடத்திலிருந்து தொகையை வசூலிக்கமுடியும் என்பதும் உண்மைதான். பங்கீட்டால் சமுதாயத்திற்குத் தேவையான ஊழியங்கள் நிறைவேற்றப்படாமல் தடுக்கப்படும் என்கிற நிலை இருக்கிற போது—சுருங்கக் கூறின்—மிகப் பெரும்பாலான சமயங்களில் செலவும் நன்மையும் ஒப்புக்கொள்ளத்தக்க அடிப்படைகளாக இல்லை.[6]

**செலுத்தும் திறன்** (Ability to Pay) : செலுத்தும் திறன் என்னும் கோட்பாட்டின் அடிப்படையில் வரிச்சுமைகளைத் தனியாட்களிடையே பங்கிடுவதுதான் வரிச்சுமையைச் சமமாக்கும் முறையாகும். ஏனென்றால், தக்க முறையில் தீர்மானிக்கப்பட்ட செலுத்தும் திறன்தான் உண்மையான வரி அடிப்படைக்கு (அதாவது வருமானத்திற்கு) மிக நெருக்கமானதாக இருக்கிறது. 1. சுமைகளைத் தாங்கக்கூடிய திறனை அளக்க வல்ல ஒரு வரி அடிப்படை; 2. அந்தச் சுமைகளை உண்மையாகவே சமப்படுத்தக்கூடிய வீதங்களின் பட்டியல் (schedule of rates) ஆகிய இந்த இரண்டும்

செலுத்தும் திறன்பற்றிய கோட்பாட்டில் அடங்கியுள்ளன. செலுத்தும் திறனனது (தனியாட்களுக்கிடையே) வரி செலுத்துவதில் அடங்கியுள்ள உண்மையான தராதரத் தன்மறுப்பைக் (real relative sacrifice) குறிக்கிறது. எந்தத் தனியாளால் மிகக் குறைந்த தன்மறுப்புடன் தன் வருமானத்திலிருந்து ஒரு டாலரைத் தரமுடிகிறதோ, அந்தத் தனியாள்தான், ஏனைய தனியாட்கள் எல்லோரையும் விட, அடுத்த டாலரை வரியாகத் தருவதற்கு மிகக் கூடுதலான திறமை உடையவர் ஆவார். அவர் வரி செலுத்தாமலிருந்தால் அந்தப் பணத்தை, நிலத்தை அல்லது மதுவை, அல்லது பெட்ரோலை வாங்குவதற்கோ அல்லது திரைப்படத்தைப் பார்ப்பதற்கோ செலவிட்டிருக்கக்கூடிய ஆளாகத்தான் இருக்கவேண்டும் என்கிற கட்டாயமில்லை. அல்லது, அந்தப் பணத்தைப் பதுக்கி வைக்கக்கூடிய ஆளாகத்தான் இருக்கவேண்டும் என்கிற தேவையும் இல்லை. அவர் அந்தப் பணத்தை என்ன செய்திருக்கக்கூடும் என்பதைத் தெரிந்துகொள்வதால், அந்தப் பணத்தை அரசாங்கத்திற்குத் தரும்படி கட்டாயப்படுத்தப்பட்டதால் அவருக்கு ஏற்பட்ட தன்மறுப்பின் அளவை நாம் அறிந்துகொள்ள முடியாது. சமுதாயம் முழுவதிலும் உள்ள தனியார் வருமானங்களில் மிகக் குறைந்த பயனுள்ள டாலரைத்தான் அரசாங்கம் அடுத்தபடியாக வரியாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்னும் நோக்கம் தவறுமல் நிறைவேறுவதற்கு உள்ள ஒரே வழி, அகப் பயன்பாடுகளைச் சிறிதும் தவறில்லாத முறையில் அளக்கவல்ல ஒரு கருவியை (an infallible measure of subjective utilities) நாம் பெறுவதே ஆகும். இந்தக் கருவியானது பல்வேறு தனியாட்கள்மீது பயன்படுத்தப்படும்போது, துல்லியமான முறையில் பயன்பாடுகளை அளந்து அறிவிக்கவல்லதாக இருக்கவேண்டும்; அகப் பயன்பாடுகளைப் புறப் பொருள்கள் வாயிலாக (in an objective manner) அளக்கக் கூடியதாக இருக்கவேண்டும்; தம் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் தாமே ஆராய்ந்து தனியாட்கள் தெரிவிக்கிற தடுமாற்றமான முடிவுகளில் சிக்காததாக இருக்கவேண்டும். அகப் பயன்பாடுகளும் பயன்பாட்டின்மைகளும் (subjective utilities and disutilities) அங்காடி முறையில் துல்லியமாக அளக்கப்படுவதில்லை என்பது திட்டவட்டமாகத் தெரிந்த உண்மை. ஒரே பொருளின் ஒரே அளவுக்காகத் தனித்தனியே ஒவ்வொரு டாலரைச் செலவழிக்கும் இரண்டு ஆட்கள், அந்தப் பொருளிலிருந்து ஒரே அளவுள்ள அக மகிழ்ச்சியைத்தான் அடைந்தாகவேண்டும் என்கிற கட்டாயமில்லை.

இங்கே நம்மால் தீர்க்கப்படவேண்டிய சிக்கல், அகப் பயன்பாட்டையும் பயன்பாட்டின்மையையும் அளந்து அறிவிக்கக்கூடிய புறக் கருவி ஒன்றைத் தேர்ந்தெடுப்பதே. நிகரப் பண வருவாயே

(net money income) அத்தகைய புறக் கருவியாகும். ஒரு குறிப்பிட்ட பொருளை வாங்கும் அளவு, எல்லாப் பொருள்களையும் நடப்புக்காலத்தில் வாங்கும் அளவு, பருப் பொருள்களின் உடைமை (ownership of physical goods), இருபத்தொரு வயதுக்கு மேற்பட்டவர்களாக இருத்தல் முதலிய பிற கருவிகள் யாவற்றையும்விட இந்தக் கருவியே நம்மால் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கிறது என்பது வெளிப்படை. என்றாலும், இந்தக் கருவியானது (நிகரப் பண வருவாயானது) முற்றிலும் பொருத்தமான அளவையாக (measure) இருக்கிறது என்று கூறுவதற்கில்லை. ஏனென்றால், ஒரே அளவு நிகரப் பண வருவாயை உடைய இரண்டு ஆட்கள், அவர்களைச் சார்ந்து வாழ்பவர்களின் எண்ணிக்கை (the number of dependents), பிறருக்குப் பணம் செலுத்தவேண்டியுள்ள நிலைமை, எதிர்கால வருவாய்பற்றிய எதிர்நோக்கு, நுகர்வுப் பழக்கங்கள், நுகர்வு விருப்பங்கள் ஆகியவற்றில் வேறுபாடு உடையவர்களாக இருக்கலாம். இத்தகைய வேறுபாட்டு நிலைமையில் அந்த இருவரிடமிருந்து வரியாக ஒவ்வொரு டாலரை எடுத்துக்கொள்வதால் ஒவ்வொருவரிடமும் ஏற்படுகிற தன்னல மறுப்பு வெவ்வேறு அளவுடையதாக இருக்கும். வரிச் சட்டத்தில் சில குறிப்பிட்ட விதிகளை இணைப்பதன்மூலம் இத்தகைய நேர்மையின்மைகளை (inequities) ஓரளவு குறைக்க முடியும். ஒரு வருமானத்திலிருந்து எந்த அளவை வரியாக எடுத்துக்கொள்ளலாம் என்பதை முடிவு செய்வதில், சார்ந்து வாழ்வோரின் எண்ணிக்கை ஒரு முக்கியமான காரணியாக விளங்குகிறது. ஆனால், சார்ந்து வாழ்வோர் ஒவ்வொருவருக்குமாக ஒரு நிலையான தொகையை, செலுத்தவேண்டிய வருமான வரித் தொகையிலிருந்து கழிக்கும் முறை, சார்ந்து வாழ்வோர் அனைவருடைய நிலையும் ஒரே வகையாக இருக்கிறது என்னும் பாவனையின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. ஆனால், இந்தப் பாவனை உண்மையன்று. வரி செலுத்தவேண்டியவருக்குக் கடன் இருக்குமானால், அந்தக் கடனுக்காக அவர் செலுத்தும் வட்டித் தொகையை அவருடைய நடப்பு வருமானத்திலிருந்து கழித்துவிடுவதற்கு, வருமானவரிச் சட்டத்தில் ஏற்பாடு செய்யமுடியும். உழைப்பிலிருந்து கிடைக்கும் (தற்காலிக) வருமானங்களுக்கும், சொத்திலிருந்து கிடைக்கும் வருமானங்களுக்கும் தனித்தனி வரி வீதங்களை விதிப்பதன்மூலமும், வரவுகளை முன்நோக்கியும் பின்நோக்கியும் தள்ளிக் கணக்கிடுவதன்மூலமும் (by allowing a carry-over or carry-back of credits), வருமானம் எவ்வளவு காலத்திற்குக் கிடைத்தபடி இருக்கும் என்பதுபற்றிய எதிர்நோக்குகளில் பல்வேறு ஆட்களுக்கிடையே இருக்கக்கூடிய வேறுபாடுகளுக்கு ஏற்ற மாறுதல்களை வரிச் சட்டத்தில் செய்துவிடலாம். ஆனால், நுகர்வுப் பழக்கங்களில் அல்லது விருப்பங்களில் உள்ள வேறுபாடு

களால் ஏற்படும் நேர்மையின்மைகளைக் குறைப்பதற்கு எத்தகைய ஏற்பாட்டையும் செய்யமுடிவதில்லை. அப்படிச் செய்யமுடியாமல் இருந்தாலும், செலுத்துவ்தற்கான அகத்திறனை (subjective ability to pay) அளப்பதற்குரிய சிறந்த கருவியாக விளங்குவது வருமானமே. நிர்வாகத் துறையின் கோணத்திலிருந்து பார்க்கும்போது, வாங்குதல்வரிகளில் (purchase taxes) இருப்பதைப்போலத் தனியாரின் தெரிவுகளைப்பற்றிய ஒழுக்கத் தீர்ப்புகளை (moral judgments upon individual choices) அளிக்கவேண்டிய இன்றியமையாமை வருமானவரியில் இல்லை என்பது அதனுடைய மற்றொரு சிறப்பாகும்.

**தன்மறுப்புகளும் வரிவிதிப்பு வீதமும்** (Sacrifices and the Rate of Taxation): செலுத்தும் திறனின் அடிப்படைத் தீர்மானிகளைக் (basic determinants of ability to pay) கிட்டத்தட்ட ஒத்திருக்கும் வரி அடிப்படையைத் தேர்ந்தெடுப்பதுபற்றியே சென்ற சில பத்திகளில் நாம் பகுத்தாய்வு செய்துள்ளோம். தனியாட்களின் நிகர வருமானமே அத்தகைய அடிப்படையாக இருக்கத்தக்கது என்பதை நாம் கண்டறிந்தோம். ஆனால், சிறந்த வரி அடிப்படையைத் தேர்ந்தெடுத்ததால் கிடைக்கக் கூடிய நற்பயன், அந்த அடிப்படை மீது விதிக்கப்படுகிற வரிவீதங்கள் (tax rates) பொருத்தமற்றவையாக இருப்பதால் பாழாகிவிடக்கூடும். வரிகளின் பல்வேறு வீதங்களால் ஏற்படக்கூடிய வரிச்சுமைகளின் பல்வேறு அளவுகளையும், வரிச்சுமைப் பங்கீடு நேர்மையானதாக இருக்கவேண்டுமானால் எத்தகைய வரிவீதம் கையாளப்பட வேண்டும் என்பதையும் இந்தப் பகுதியில் நாம் ஆராயலாம். இங்கும் சுமை என்பதை வரி செலுத்துவதால் ஏற்படுகிற அகத்தன்மறுப்பு (subjective sacrifice) என்னும் பொருளிலேயே பயன்படுத்தவேண்டியிருக்கிறது.

வீதப்பட்டியல்களை (rate schedules) மூன்று பொதுப் பிரிவுகளாக நாம் பிரித்து அமைக்கலாம்; விகிதாசார வரிவீதங்கள் (proportional tax rates), வளர்வீத வரிவீதங்கள் (progressive tax rates), தேய்வுவீத வரிவீதங்கள் (regressive tax rates) என்பனவே அவை. வரி அடிப்படை மாறினாலும் வரிவீதம் மாறாமல் இருக்கும் நிலைமையைக் கொண்டிருப்பதே விகிதாசார வரிவீதங்களின் பட்டியலாகும். வரி அடிப்படை உயரும்போது வரிவீதமும் உயரும் தன்மையை உடையதே வளர்வீத வரிவீதங்களின் பட்டியலாகும். வரி அடிப்படை உயரும்போது வரிவீதம் குறையும் தன்மையை உடையதே தேய்வுவீத வரிவீதங்களின் பட்டியலாகும். வரி அடிப்படையை வரிவீதத்தால் பெருக்கினால் கிடைக்கும் தொகையே செலுத்தவேண்டிய வரித்தொகை யாகும் என்பதை நினைவில் வைத்துக்கொண்டால், கீழ்க்கண்ட உண்மைகள் தெளி

வாக விளங்கும். ஒரு விகிதாசார வரியில் பெருக்கப்படும் தொகை (multiplicand) மாறினாலும் பெருக்கும் எண் (multiplier) நிலையாக இருக்கிறது. ஒரு வளர்வீத வரியில் பெருக்கப்படும் தொகை உயரும்போது பெருக்கும் எண்ணும் உயர்கிறது. ஒரு




படம் 8

**விகிதாசார, வளர்வீத, தேய்வுவீத, வரிவீதப் பட்டியல்களை விளக்கிக் காட்டும் படம்**

தேய்வுவீத வரியில் பெருக்கப்படும் தொகை உயரும்போது பெருக்கும் எண் குறைகிறது. மூன்று வகை வீதங்களுக்கிடையே உள்ள இந்த வேறுபாடுகள் 8 ஆவது படத்தில் காட்டப்பட்டுள்ளன.

விகிதாசார வரியின் இலக்கணப்படி, அந்த வரிப்பட்டியலை எந்த மட்டத்திலும் (at any level) ஏற்படுத்த முடியும். அப்படி ஏற்படுத்துவதற்கு உரிய ஒரே நிபந்தனை, அந்த மட்டத்தில் அந்த விதமானது மாறாமல் இருக்கவேண்டும் என்பதே. ஒரு வளர்வீத வரிப்பட்டியல், பல்வேறு சாய்வுமுறைகளைக் (slope patterns) கொண்டதாக இருக்கமுடியும். அடிப்படையில் (base) உயர்வு ஏற்படும்போதெல்லாம் வீதத்திலும் (rate) உயர்வு ஏற்பட்டுக்கொண்டிருக்கும்வரை, இந்தச் சாய்வுமுறைகள் அத்தனையும் வளர்வீதத்தை எடுத்துக்காட்டுவனவாக இருக்கமுடியும். அதுபோலவே தான், ஒரு தேய்வுவீத வரிப்பட்டியலும் பல்வேறு சாய்வுமுறைகளைக் கொண்டதாக இருக்கலாம். ஆனால், இந்த வரியின் அடிப்படையில் உயர்வு ஏற்படும்போதெல்லாம் வீதத்தில் குறைவு ஏற்படவேண்டும். ஒரு வரிவீதப் பட்டியல் இந்த மூன்று வகைகளில் ஒன்றைமட்டுமே கொண்டதாக இருக்கவேண்டும் என்பது கட்டாயமன்று ; ஒன்றுக்கு மேற்பட்ட வகைகளைத் தன்னகத்தே கொண்டதாக இருக்கலாம். வளர்வீதம் உடையவை என்று நம்மால் அழைக்கப்படும் வருமானவரி வீதங்கள், பொதுவாக வருமானத் தொகுதிகள்மீதுதான் (brackets of income) வளர்வீதம் உடையவையாக இருக்கின்றன. வருமானம் உயரும்போது, ஒரு தொகுதியிலிருந்து இன்னொரு தொகுதிக்கு வளர்வீத முறையில் வரி விதிக்

கப்பட்டாலும், ஒரு தொகுதியில் அடங்கியுள்ள வெவ்வேறு வருமானங்கள்மீது (வரி அடிப்படைமீது) விகிதாசார வரிவீதங்கள் தாம் விதிக்கப்படுகின்றன. இத்தகைய நிலையில் அமைந்த பட்டியலின் வளைகோடானது (curve), ஒன்றன்மேல் ஒன்றாக உள்ள படிகள், ஒன்றைவிட ஒன்று கூடுதலான உயரமும், கூடுதலான 'நடக்கும் பகுதி'யும் உடையதாக இருந்தால், அந்த ஒழுங்கினமான படிக்கட்டுகளைக் கீழிருந்து மேல்நோக்கினால் அவை எத்தகைய உருவக் காட்சியை வழங்குமோ, அதே வகையான உருவத்தை உடையதாக இருக்கிறது.

தக்க முறையில் பயன்படுத்தினால் விகிதாசாரம், வளர்வீதம், தேய்வுவீதம் ஆகிய சொற்கள் வரிவீதத்திற்கும் வரி அடிப்படைக்கும் உள்ள உறவை எடுத்துக்காட்டுகின்றன. ஆனால், ஒரு வரி தேய்வுவீதத்தை உடையதாக இல்லாவிட்டாலும், அதனுடைய தேய்வுவீத விளைவுகளைப்பற்றிப் (regressive effect) பொதுவாக நாம் குறிப்பிடுகிறோம். எடுத்துக்காட்டாக, விற்பனைவரியின் அடிப்படை பெரிதாக இருந்தாலும் சிறிதாக இருந்தாலும், அவ்வரியின் வீதம் நிலையானதாக இருப்பதால், அது ஒரு விகிதாசார வரியே என்பது தெளிவு. வாங்கப்படும் அளவு கூடுதலாக இருந்தாலும், குறைவாக இருந்தாலும் ஐக்கிய அமெரிக்காவில் வழக்கமாக விதிக்கப்படும் விற்பனைவரி வீதம் 3 சதவீதம் ஆகும். சிகரெட்டுகள்மீதான கூட்டரசாங்க விற்பனைவரி, எத்தனை சிகரெட்டு பாக்கெட்டுகள் வாங்கப்பட்டாலும், பாக்கெட்டுக்கு 8 சதம் (cents) என்னும் வீதத்திலேயே விதிக்கப்படுகிறது. ஆனால், வரியாகச் செலுத்தப்படுகின்ற தொகையை, வாங்குபவரின் வருமானத்தோடு ஒப்பிட்டால், அந்த வருமானத்தைப் பொறுத்த அளவில் அந்த வரியானது தேய்வுவீதம் உடையதாக இருப்பதைக் காணலாம். வெவ்வேறு வருமானம் உள்ள இரண்டு ஆட்கள், வரி விதிக்கப்பட்ட ஒரு பொருளை ஒரே அளவில் வாங்குவார்களானால், செலுத்தப்பட்ட வரித்தொகையானது, குறைந்த வருமானத்தோடு கூடுதல் வீதத் தொடர்பும், உயர்ந்த வருமானத்தோடு குறைந்தவீதத் தொடர்பும் உடையதாக இருக்கிறது. இவ்வாறாக, ஒரு வரியானது அதனுடைய அடிப்படையோடு ஒப்பிடும்போது வீதாசாரத் தன்மை உடையதாக இருந்தாலும், வருமானத்தோடு ஒப்பிடும்போது தேய்வுவீதத் தன்மை பொருந்தியதாக இருக்கக்கூடும். வரித் தொகைக்கும் வருமானத்திற்கும் உள்ள உறவைக் குறிக்கும் முறையில் வீதாசாரம், வளர்வீதம், தேய்வுவீதம் ஆகிய சொற்களைப் பயன்படுத்துவது துறைநுணுக்கப்படி (technically) முறையன்று என்றபோதிலும், அப்படிப் பயன்படுத்துவது நடைமுறையில் மிகுந்த நலன் பயப்பதாக இருப்பதால், அதனை அறவே ஒதுக்கிவிடு

வதும் அறிவுடைமை ஆகாது. குறிப்பிட்ட சமயத்தில் இச் சொற்களை எப் பொருளில் பயன்படுத்துகிறோம் என்பதில் தெளிவு இருக்குமானால், இருவகைப் பொருள்களில் இச் 'சொற்களைப் பயன் படுத்துவதால் நம் பகுத்தாய்வுக்கு எத்தகைய இடர்ப்பாடும் ஏற் படாது.

ஐக்கிய அமெரிக்காவில் உள்ள அரசாங்கங்களால் தற்போது விதிக்கப்படும் தலையாய வரிகளில்[7] சொத்து வரிகள், விற்பனை வரிகள், சம்பளப்பட்டியல்வரிகள், சுங்கவரிகள், சில வாணிப வரிகள் ஆகியவை, அவற்றின் அடிப்படைகளோடு ஒப்பிடுகையில், விகிதா சார முறையில் அமைந்துள்ள (proportional) வீதப்பட்டியல்களை (rate schedules) உடையனவாக இருக்கின்றன. தனியாள் வருமானங்கள், சிலவகைக் கார்ப்பரேஷன் வருமானங்கள், ஒருவர் இறந்தவுடன் உள்ள அவருடைய சொத்துகள்(estates), சொத்துப்பேறுகள் (inheritances), சில குறிப்பிட்ட வாணிபங்கள் ஆகியவற்றின் மீதான வரிகள், அவற்றின் அடிப்படைகளோடு ஒப்பிடுகையில், வளர்வீத வீதங்கள் (progressive rates) உடையனவாக இருக்கின் றன. அவற்றின் அடிப்படைகளோடு ஒப்பிடுகையில் தேய்வு வீதம் உடையனவாக உள்ள வரிகள் எவையும் ஐக்கிய அமெரிக்கா வில் இல்லை. மொத்தமாகப் பார்க்கும்போது, கூட்டரசாங்க வரி முறை வளர்வீதம் உடையதாக இருக்கிறது என்னும் உண்மை, பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஏனென்றால், அந்த வரி முறையில் வளர்வீத வரிகளே (தனியாள் வருமானத்தின்மீதும், கார்ப்பரேஷன் வருமானத்தின்மீதும் விதிக்கப்படும் வரிகள்) மாபெரும் இடத்தைப் பெற்றிருக்கின்றன. மாநில வரி முறையும், வட்டார வரி முறையும் வருமானத்தோடு ஒப்பிடும்போது, பொது வாகத் தேய்வுவீதம் உடையனவாக இருக்கின்றன. அதாவது, அந்த வரிவீதங்கள், அதிக வருமானம் உடையவரிடமிருந்து எடுக் கும் தொகைக்கும் அந்த வருமானத்திற்கும் உள்ள வீதத்தை விடக் குறைந்த வருமானம் உடையவரிடமிருந்து எடுக்கும் தொகைக்கும் அந்த வருமானத்துக்கும் உள்ள வீதம் கூடுதலாக இருக்கிறது. மாநில வரிமுறையும், வட்டார வரிமுறையும் பொருள்கள்மீது விதிக்கப்படும் வீதாசார வரிகளையே பெரும் பாலான அளவில் உடையனவாக இருக்கின்றன (எடுத்துக் காட்டுகள் : சொத்து வரிகளும் நுகர்வு வரிகளும்). இந்த வீதாசார வரிகளை வரிசெலுத்துவோரின் வருமானத்தோடு ஒப்பிடும்போது, அவை நடைமுறையில். தேய்வுவீத விளைவுகளையே உடையனவாக இருப்பதை அறிகிறோம்.

வரிச்சுமைகளைப் பொருத்தமான முறையில் பங்கிடவேண்டு மானால், வீதாசார வரிமுறை, வளர்வீத வரிமுறை, தேய்வுவீத

வரிமுறை ஆகிய முறைகளில் எதனைக் கையாள வேண்டும் என்பதை, வரிவிதிப்புப்பற்றிய பொதுக் கோட்பாடு (general theory of taxation) எடுத்துக்கூற வல்லதாக இருக்கவேண்டும். வரி விதிப்புப்பற்றிய செலவுக் கோட்பாட்டை (cost theory of taxation) நாம் ஒப்புக்கொண்டால், வரிச்சுமையைப் பங்கிடுவதற்கு அங் காடி முறையையே கையாள வேண்டியிருக்கும். அதாவது, அரசாங்க ஊழியத்தால் நன்மை பெறுகிற ஒவ்வொருவரும், அந்த ஊழியச் செலவில் அவருடைய வீதாசாரப் பங்கைச் செலுத்த வேண்டியிருக்கும். வரிவிதிப்புப்பற்றிய நன்மைக் கோட்பாட்டை (benefit theory of taxation) நாம் ஏற்றுக்கொண்டால், அரசாங்க ஊழியத்தால் ஏற்படும் மொத்த நன்மையில் தாங்கள் பெற்றுள்ள வீதாசாரத்திற்கு ஏற்பத் தனியாட்கள் வரி செலுத்தவேண்டியிருக் கும். ஆனால், நாம் செலவையும் (cost) நன்மையையும் வரிச்சுமைகளைப் பங்கிடுவதற்கான பொது அடிப்படைகளாக ஏற்க மறுத்துவிட்டதாலும், செலுத்தும் திறனையே அத்தகைய அடிப்படையாக ஏற்றுக்கொண்டிருப்பதாலும், வருமான அடிப் படையில் அமைந்த வீதப்பட்டியல்களுக்கும் செலுத்தும் திறனுக் கும் உள்ள தொடர்பை ஆராய்வது நம்முடைய கடமையாகிறது.

'ஒவ்வோர் அரசின் குடிமக்களும் கூடியவரையில் அவரவர் களுடைய திறன்களின் வீதாசாரத்திற்கு ஏற்ற முறையில், அவர் களுடைய அரசாங்கத்தைப் பராமரிப்பதற்காகப் பணம் தரவேண் டும். அதாவது, அரசு அளிக்கும் பாதுகாப்பின்கீழ் அவர்கள் முறையே அனுபவிக்கிற வருவாயின் வீதாசாரப்படிப் பணம் தர வேண்டும்' என்பது[8] ஆடம் ஸ்மித் (Adam Smith) என்பார் அளித் துள்ள வரிவிதிப்பின் முதல் விதி ஆகும். ஒரு தனியாள் அரசாங் கத்திற்குத் தரவேண்டிய தொகையின் அளவு, அந்தத் தனியா ளுடைய வருமானத்தைப் பொறுத்ததாக இருக்கவேண்டுமே தவிர, வருமானத்தின் ஒழுங்கீனமான ஒரு புற அடையாளத்தைப் பொறுத்ததாக இருக்கக்கூடாது என்பதை இந்த விதி தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. ஆனால், நாம் தற்போது செய்கிற பகுத் தாய்வுக்கு மிகுந்த தொடர்புடையதாக இருப்பது வீதாசாரத் தைப்பற்றி ஆடம் ஸ்மித் வற்புறுத்திக் கூறியிருப்பதே ஆகும். திறனில் ஏற்படும் உயர்வு வருமானத்தில் ஏற்படும் உயர்வைவிட மிகுந்த வேகம் உடையதாக இருக்கிறது என்பது மெய்ப்பிக்கப்படு மானால், 'அவரவர்களுடைய திறன்களின் வீதாசாரத்திற்கு ஏற்ற முறையில்' பணம் தரவேண்டும் என்னும் வாக்கியம் வளர்வீத வரியையே ஆதரிக்கிறது என்று நாம் பொருள்கூற முடியும். ஆனால், அண்மைக் காலத்தில் உருவாக்கப்பட்ட குறைந்துசெல் பயன் பாட்டுக் கோட்பாட்டை (the principle of diminishing utility)

ஆடம் ஸ்மித் தெரிந்திருக்கவில்லை. ஆகவே, 'அவரவர்களுடைய திறன்களின் வீதாசாரத்திற்கு ஏற்ற முறையில்' என்னும் சொற்றொடர், 'அவர்கள் முறையே அனுபவிக்கிற' வருவாயின் வீதாசாரப்படி' என்னும் பொருளை உடையது என்றுதான் அவரால் கருதமுடிந்தது. வரிவிதிப்பில் நேர்மை அல்லது நீதி அமைந்திருக்கவேண்டுமானால், வீதாசார வீதங்களின்படி வரி விதிக்கப் படவேண்டும் என்பதுதான், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரையில் இப் பொருள்பற்றிய எழுத்தாளர்கள் அனைவரும் ஒருமுகமாகக் கொண்டிருந்த கருத்தாகும். (வருவாயைப் பெறுவதைவிடச் சொத்தையும் வருமானத்தையும் சமநிலைப்படுத்துவதே வரிவிதிப்பின் நோக்கமாக இருக்கவேண்டும் என்று வாதாடிய தீவிரவாதிகள் (radicals) மட்டுமே இந்தக் கருத்துக்கு மாறுபட்ட கருத்தை உடையோராக இருந்தனர்.) மேலோட்டமாகப் பார்க்கும்போது வீதாசார வரிமுறையில் நீதியும் சமத்துவமும் பொதிந்திருப்பதாகக் காணப்படுகிறது என்பதை மறுக்க முடியாது.

ஏறத்தாழ 1870-ல் ஜெவான்ஸ் (Jevons), மெங்கர் (Menger), வால்ரஸ் (Walras) ஆகியோரால் ஒரே சமயத்தில், ஆனால், தனித்தனியாகக் கண்டுபிடிக்கப்பட்ட குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு (the principle of diminishing marginal utility) ஒரு புதிய பொருளாதாரக் கருத்தை உலகுக்கு அளித்திருக்கிறது. இந்தக் கருத்து, பின்னர்ப் பெரிதும் செம்மைப்படுத்தப்பட்டபோது, இக் கருத்தின் விளைவாகப் பல்வேறு வரிவீதப் பட்டியல்களில் (tax rate schedules) அடங்கியுள்ள ஒப்பீட்டுத் தன்மறுப்புகளைப் (comparative sacrifices) பற்றிய பொதுக் கருத்து மாபெரு மாறுதலுக்கு உள்ளாகிவிட்டது. அப்படி உள்ளான பிறகும், முதல் உலகப் போர்வரையில், கோட்பாட்டுக்கும் நடைமுறைக்கும் இடையே ஒரு பெரும் ஏற்றத்தாழ்வு இருந்தது என்பது உண்மையே. ஆனால், அந்தப் போருக்குப் பிறகு, வளர்வீத வரி பற்றிக் கிடைத்த அனுபவத்தின் விளைவாகப் பொதுமக்களின் உள்ளங்களில் அந்தக் கோட்பாட்டுக்கு மிக உயர்ந்த இடம் கிடைத்துவிட்டது.

**வளர்வீத வரிவிதிப்பின் சார்பான வாதங்கள்** (The Case for Progressive Taxation): வளர்வீத வரிமுறையானது, அதிக முன்னேற்றம் அடைந்த சமுதாயங்கள், குறைந்த முன்னேற்றம் அடைந்த சமுதாயங்கள் ஆகிய இருவகைச் சமுதாயங்களிலும் நம் காலத்தில் தவறாமல் காணப்படும் ஓர் உண்மையாக அமைந்துவிட்டது. இக் காலத்தில் சராசரி மனிதன், வளர்வீதக் கோட்-

பாட்டை நம்பிக்கைக்கு உரிய ஒரு பொருளாகத் தன்னை அறியாமலே ஏற்றுக்கொண்டுவிடுகிறான். அரசாங்கங்களும், தலையாய வரிகளின் வீதப்பட்டியல்களை உருவாக்குவதில் இந்தக் கோட்பாட்டை அமைத்துவிடுகின்றன. வளர்வீதக் கோட்பாட்டைப் பற்றிய ஒரு விசித்திரமான நிலைமை என்னவென்றால், பகுத்தறிவு முறைப்படி அந்தக் கோட்பாட்டுக்குச் சார்பான வாதங்களைத் திரட்டித் தொகுக்கும் முயற்சி மிக மெதுவாக நடைபெற்றாலும், நடைமுறையில் அந்தக் கோட்பாடு விரிவான அளவில் ஒட்டிக் கொள்ளப்பட்டிருப்பதே வளர்வீதக் கோட்பாட்டிற்கு ஆதரவாகக் கீழ்க்கண்ட நான்கு வாதங்கள் எழுப்பப்படுகின்றன.

1. வருவாயை உற்பத்தி செய்யும் திறன்.

2. வரிச்சுமையானது தனியாட்களுக்கு இடையே உத்தமமான முறையில் பங்கிடப்படுதல் (optimum individual allocation of tax burden).

3. நிலைபேற்றையும் வளர்ச்சியையும் பேணுதல் (promotion of stability and growth).

4. சாதனங்களைச் சமுதாயத்தில் உத்தமமான முறையில் பங்கிடுதல்.

1. கூடுதலான வருவாயை ஈட்டும் திறன் வளர்வீத வரி விதிப்புக்கு இருப்பதால், அந்த வரிவிதிப்பு நியாயமானது என்று வாதாடுவது, அந்த வரிவிதிப்புக்கு ஆதரவான வாதங்கள் யாவற்றினும் மிக எளிதான வாதம் ஆகும். ஏனென்றால், இந்த வாதம் எளிய கணக்கை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அரசாங்கம் அதிக அளவில் பொருள்கள் வாங்கவேண்டியிருப்பது, வரவு செலவுத் திட்டத்தை ஒத்தநிலைப்படுத்தவேண்டும் என்பதில் பொதுவாக உள்ள ஆர்வம் ஆகிய இக் காரணங்களால் கூடுதலான அளவில் அரசாங்கங்கள் வருவாயைப் பெறவேண்டியிருக்கிறது. அதிக அளவில் உள்ள வருமானங்களையே உயர்ந்த வரிச்செலுத்தல்களுக்கான மூலங்களாகக் கருதும் போக்கு நாட்டில் காணப்படுகிறது. பணம் இருக்கும் இடத்திலிருந்து அதை எடுத்துக்கொள்வது எளிது என்பதுதான் இதற்குக் காரணம்.

வீதாசார வரிகளின் வீதங்கள் உயர்ந்துகொண்டேயிருந்தால், குறைந்த வருமானப் பிரிவினரிடையே என்றாவது ஒரு நாள் நெருக்கடி ஏற்படும். அவ்வாறு ஏற்பட விடுவது; மனித உணர்ச்சியின் படி பார்த்தாலும் சரி, அரசியல் கோணத்திலிருந்து பார்த்தாலும் சரி முறையாகாது. மக்கள்தொகையில் பெரும் பகுதியினராக

உள்ள குறைந்த வருமானப் பிரிவினரிடமிருந்து இது தொடர்பாகக் கண்டனம் எழுகிறது என்றால், உயர்ந்த வருமானப் பிரிவினரிடம் வரிவிதிக்கப்படக்கூடிய வருவாய்களின் களஞ்சியம் பேரளவினதாக இருக்கும்போது வீதாசார வரிகளை மேலும் உயர்த்துவதை அவர்கள் எதிர்க்கிறார்கள் என்றே பொருள். அத்தகைய சூழ்நிலை தோன்றும்போது, புதிய வரி உயர்வுகளைப் பணம் இருக்கிற உயர்ந்த பிரிவினர்மீதே சுமத்த முயல்வதுதான் இயல்பான போக்காக இருக்கும். நாட்டின் வருமானம் ஒரு குறிப்பிட்ட மட்டத்தில் இருந்து, அதனுடைய பங்கீடு ஒரு குறிப்பிட்ட அளவு சமத்துவமின்மை உடையதாக இருக்கும்போது, வீதாசார வரி முறை அல்லது தேய்வுவீத வரிமுறையைவிட வளர்வீத வரி முறையில்தான், குறைந்த அளவு எதிர்ப்புக்கு இடையே, கூடுதலான அளவு வருவாயைப் பெறமுடியும் என்பதைச் சற்றேனும் மறுக்கமுடியாது. வருவாயின் அடிப்படையில் வளர்வீதக் கோட்பாட்டின் நியாயத்தை எடுத்துக்காட்டுவது நடைமுறையோடு முற்றிலும் ஒத்திருக்கிற ஒரு வாதமாகும். சமுதாயத்தில் உள்ள வருமான ஏற்றத்தாழ்வை அடிப்படையாகக்கொண்டு, அந்த அடிப்படைமீது தோன்றியுள்ள கட்டடமே இந்த வாதம் எனலாம். ஆனால், இந்த வாதம் முழுமை உடைய ஒரு வாதம் என்று கூற முடியாது. ஏனென்றால், குறைந்த வருமானப் பிரிவினருடைய கண்டனங்கள், அவர்கள் உண்மையாக ஏற்கவேண்டியிருக்கிற தன் மறுப்புகளின் விளைவாகத் தோன்றியிருப்பவையா அல்லது வரிச்சுமையில் தாங்கள் முறைப்படி ஏற்கவேண்டிய பங்கைத் தட்டிக் கழித்துவிட முயலும் தன்னலவாதிகளின் வறட்டு எதிர்ப்புக் குரல்களா என்பதை முடிவுசெய்வதற்குரிய பொருத்தமான அடிப்படை இந்த வாதத்தில் காணப்படவில்லை. முதல் வாதத்தில் உள்ள இந்தக் குறைபாட்டைத்தான் வளர்வீத வரிமுறையின் சார்பான இரண்டாவது வாதம் நீக்க முயல்கிறது.

2. நாம் முன்னரே சுட்டிக்காட்டியிருப்பதைப்போல் ஏறத்தாழ 1870-ல் கார்ல் மெங்கர் (Carl Menger), ஸ்டான்லி ஜெவான்ஸ், (Stanley Jevons), லியான் வால்ரஸ் (Leon Walras) ஆகியோரால் கிட்டத்தட்ட ஒரே சமயத்தில், ஆனால், தனித்தனியாகக் கண்டுபிடிக்கப்பட்ட குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு ஒரு புதிய பொருளாதாரக் கருத்தை உலகின்முன் வைத்தது. அந்தக் கருத்து, பல்வேறு வரிவீதப் பட்டியல்களில் அடங்கியுள்ள ஒப்பீட்டுத் தன்மறுப்புகள்பற்றிய கருத்தை மிகப் பெரிய அளவில் மாற்றியமைத்துவிட்டது. ஒரு குறிப்பிட்ட கட்டத்திற்குப் பிறகு, ஒரு பொருளின் கூடுதல் அலகுகள் (additional units) நுகரப்படுமானால், ஒவ்வொரு கூடுதல் அலகின்

விளைவாகப் பெறப்படுகிற பயன்பாடு அல்லது மனநிறைவு குறைந்துகொண்டே வருகிறது என்னும் அக உண்மையை (subjective fact), ஒரு பொருளின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு தெரிவிக்கிறது. ஒரு தனிப் பொருளைப் பற்றியவரையில் இது உண்மையாக இருக்குமானால், எல்லாப் பொருள்களையும் ஒன்றாக வைத்துப் பார்க்கும்போதும் இது உண்மையாக இருக்கவேண்டும் அல்லவா ? (சேமிப்புகள்) உள்ளிட்ட எல்லாப் பொருள்களையும் ஒன்றாக வைத்துப் பார்க்கும்போது இது உண்மையாக இருக்குமானால், பெறப்பட்ட வருமானத்திற்கும் உண்மையாக இருக்கும் அல்லவா ? இவ்வாறாக நாம், ஒரு பொருளின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டில் தொடங்கி, வருமானத்தின் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டை அடைந்துவிடுகிறோம். எனவே, ஒரு பெரிய வருமானத்தின் ஓர் இறுதிநிலை டாலரைக் (marginal dollar) கொடுத்துவிடுவதால் ஏற்படுகிற தன்மறுப்பு (sacrifice), ஒரு சிறிய வருமானத்தின் ஓர் இறுதிநிலை டாலரைக் கொடுத்துவிடுவதால் ஏற்படுகிற தன்மறுப்பைவிடக் குறைவாக இருக்கிறது என்பது தெளிவு. இதே உண்மையை இன்னொரு வகையில் இயம்புவதானால், சிறிய வருமானத்திலிருந்து எடுப்பதைவிடப் பெரிய வருமானத்திலிருந்து வீதாசாரத்தை விடக் கூடுதலான எண்ணிக்கையை உடைய இறுதிநிலை டாலர்களை எடுத்துக்கொள்வதால், அந்த இரு வருமானங்களுக்கிடையே வரிச் சுமைகளைச் சமப்படுத்தமுடியும் என்று கூறலாம்.

இவ்வாறாக, குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாட்டிலிருந்து, வளர்வீத வரிமுறைக்கான நியாயத்தைக் கண்டுபிடிக்கும் முயற்சி, பல்வேறு ஐயப்பாடுகளை எழுப்பக்கூடும். ஒரு பொருளின் கூடுதல் அலகுகளிலிருந்து ஒரு தனியாள் பெறுகிற பயன்பாடு குறைந்துவரும் வீதத்தை அளப்பதற்குரிய நம்பத்தக்க புற அடையாளம் ஏதேனும் இருக்கிறதா ? இல்லை என்பது தான் இந்தக் கேள்விக்குரிய விடையாக இருக்கமுடியும். அத்தகைய அளவுகோல் ஏதும் இல்லாத நிலையில், இந்தக் குறிப்பிட்ட பொருளுக்கான இறுதிநிலைப் பயன்பாட்டுப் பட்டியல்கள் எல்லாத் தனியாட்களுக்கும் ஒரே வகையாக அமைந்திருக்கிறன என்று நாம் முடிவுகட்ட முடியுமா ? பல்வேறு ஆட்களின் விருப்பங்கள் பல்வேறு வகையாக இருக்கின்றன. நுகர்வுப் பழக்கங்களின் வளர்ச்சியாலும் பயன்பாட்டுப் பட்டியல்கள் குறிப்பிடத்தக்க அளவில் மாறுதல் அடையும். இவை யாவும் மிகவும் சிக்கலான கேள்விகள். இந்தக் கேள்விகளுக்கு நாம் தரக்கூடிய ஒரே விடை, நம் கண்களை இறுக மூடிக்கொண்டு, இத்தகைய சிக்கல்கள் இருப்பதால் நம் வாதத்தில் ஏற்படுகிற குறை

பாடுகளைக் கவனிக்காமல் இருந்துவிடுவதுதான் என்றால், இவற்றைவிட இன்னும் மிகுதியான சிக்கல் உள்ள கேள்விகள் எழுகின்றன. தனியாட்கள் அனைவருடைய வருமானப் பயன்பாட்டுப் பணிகள் (income utility functions) அளவிடக்கூடியனவாகவும், கீழ்நோக்கிய சாய்வு உடையனவாகவும்(to be downward sloping), ஒன்றை ஒன்று முற்றிலும் ஒத்திருப்பனவாகவும் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். அந் நிலையில் பயன்பாடுகளின் சமமான தன்மறுப்புகள் (equal sacrifice of utilities) ஏற்பட வேண்டுமானால், வளர்வீத வீதப்பட்டியல் (progressive rate schedule) இருந்தாகவேண்டும் என்று நாம் முடிவு செய்ய முடியுமா ?

இந்தக் கேள்விக்கு உரிய விடை, வருமானம் உயரும்போது வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு எவ்வளவு வேகமாகக் குறைகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. இந்தக் குறைவின் வேகம் மூன்று வகையான முறைகளில் ஏற்படக்கூடும். வருமானம் உயரும்போது பயன்பாடானது வீதாசாரப்படி குறைகிற சிறப்பு நிலையேமுதல் வகையாகும். இந்த வகையை ஏனைய வகைகளை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கான அடிப்படை வகையாக நாம் வைத்துக் கொள்வோம். வருமானம் உயரும்போது, இறுதிநிலைப் பயன்பாட்டின் குறைவு வீதாசாரத்தைவிடக் குறைந்த வேகத்தில் ஏற்படுவது இரண்டாவது வகை நிலைமை. இந்த நிலைமையிலேயே அளவுகளைப் பொறுத்தவரை பல்வேறு மாறுதல்கள் ஏற்படக்கூடும். வருமானம் உயரும்போது, பயன்பாட்டின் குறைவு, வீதாசாரத்தைவிட அதிக வேகத்தில் ஏற்படுவது மூன்றாவது வகை நிலைமையாகும்.

வருமானம் உயரும்போது, எல்லாத் தனியாட்களின் இறுதிநிலை அலகுகளின் பயன்பாடானது வீதாசாரப்படி குறைகிற அடிப்படை வகையைக் கருத்தாய்வு செய்வதற்கு முதலில் எடுத்துக் கொள்வோம். எடுத்துக்காட்டாக, வருமானத்தில் 50 சதவீத உயர்வு ஏற்படும்போது, வருமானத்தின் இறுதிநிலை அலகின் பயன்பாட்டில் 50 சதவீதக் குறைவு ஏற்படும். 'அ' என்பாரின் வருமானத்தைவிட 'ஆ' என்பாரின் வருமானம் இரண்டு மடங்கு கூடுதலாக இருக்குமானால், 'அ' தன் வருமானத்தின் கடைசி அலகிலிருந்து பெறுகிற மன நிறைவில் சரியாகப் பாதி அளவு மனநிறைவைத்தான் 'ஆ' தன் வருமானத்தின் கடைசி அலகிலிருந்து பெற முடியும். இந் நிலையில், இந்த இரண்டு வரி செலுத்துவோரும், சமமான பயன்பாட்டுத் தன்மறுப்புகள் உடையவர்களாக இருக்க வேண்டும் என்று நாம் விரும்பினால், 'ஆ' வின் வருமானத்திலிருந்து

ஓர் இறுதிநிலை டாலரை நாம் வரியாக எடுத்துக்கொண்டால், 'அ'வின் வருமானத்திலிருந்து அவருடைய இறுதிநிலை டாலரில் பாதியைத்தான் நாம் எடுத்துக்கொள்ள முடியும். 'அ'வின் வருமானம் 'ஆ'வின் வருமானத்தில் பாதியாக இருக்கிறது. 'அ'வின் வரியும் 'ஆ'வின் வரியில் பாதியாக இருக்கிறது. ஆகவே, இந்தச் சிறப்பு வகை நிலைமையில், தன்மறுப்புகள் சமமாக இருக்க வேண்டுமானால், வரிவீதங்கள் வருமானத்திற்கு வீதாசாரமாக (proportional to income) இருக்கவேண்டும்.[9] இறுதிநிலைப் பயன்பாட்டின் குறைவானது இந்தச் சிறப்பு வகை நிலைமையில் வளர்வீத வரி விதிப்புக்கு வழிவகுக்காது.

வருமான உயர்வைவிடக் குறைந்த வேகத்தில் இறுதிநிலைப் பயன்பாடு குறைகிற எல்லா வகைச் சாத்தியக்கூறுகளும் இரண்டாவது வகை நிலைமையில் அடங்கும். இந்த நிலைமையிலும், 'அ', 'ஆ' ஆகியோரின் வருமான நிலைமைகள் முதல் எடுத்துக்காட்டில் சுட்டிக்காட்டியதைப்போலவே இருப்பதாக வைத்துக்கொண்டால், 'ஆ'வின் வருமானம் 'அ'வின் வருமானத்தைவிட இரண்டு மடங்கு அதிகமாக இருந்தாலும், அவருடைய இறுதிநிலை டாலரின் பயன்பாடு, 'அ'வின் இறுதிநிலை டாலரின் பயன்பாட்டில் பாதியைவிட அதிமாக இருக்கும். 'ஆ'வின் இறுதிநிலை டாலரை வரியாக நாம் எடுத்துக்கொண்டால், 'அ'வின் இறுதிநிலை டாலரில் பாதியைவிட அதிகமாக நாம் எடுத்துக்கொண்டால்தான் அவர்கள் இருவருடைய தன்மறுப்புகளை நாம் சமமாக்க முடியும். 'அ'வின் வருமானம், 'ஆ' வின் வருமானத்தில் பாதியாக இருக்கிறது; ஆனால், 'அ' வின் வரி, 'ஆ'வின் வரியில் பாதியைவிட அதிகமாக இருக்கிறது. 'அ'வின் வரிவீதம் 'ஆ'வின் வரிவீதத்தைவிட அதிகமாக இருக்கிறது என்பதே இதன் பொருளாகும். இறுதிநிலைப் பயன்பாட்டின் குறைவு வேகம், வருமான உயர்வின் வேகத்தைவிடக் குறைவாக இருக்கும் இத்தகைய நிலைமைகளில், தன்மறுப்புகளைச் சமப்படுத்தவேண்டுமானால், தேய்வுவீத வரி வீதங்கள் கையாளப்படவேண்டும்.

மூன்றுவது வகை நிலைமையில்—அதாவது, வருமான உயர்வின் வேகத்தைவிட இறுதிநிலைப் பயன்பாட்டின் குறைவு வேகம் வீதாசாரத்தைவிட அதிகமாக இருக்கும் நிலைமையில், வளர்வீத வரி வீதங்கள் கையாளப்பட்டால்தான் தன்மறுப்புகளைச் சமப்படுத்த முடியும். 'ஆ'வின் வருமானம், 'அ'வின் வருமானத்தைப்போல் இரண்டு மடங்காக இருக்கிறது. ஆனால், அவருடைய வருமானத்தின் இறுதிநிலை டாலரின் பயன்பாடு, 'அ'வின் வருமானத்தின் இறுதிநிலை டாலரின் பயன்பாட்டில் பாதியைவிடக் குறைவாக இருக்கிறது.

இந் நிலையில், 'ஆ'வின் இறுதி டாலரை நாம் வரியாக எடுத்துக் கொண்டால், 'அ'வின் இறுதி டாலரில் பாதியைவிடக் குறைவாக எடுத்துக்கொள்வதன்மூலம்தான் நாம் அவ் இருவரின் தன் மறுப்புகளைச் சமப்படுத்த முடியும். 'அ'வின் வருமானத்தின் மீதான இறுதிநிலை வரிவீதம் (marginal tax rate) 'ஆ'வின் வருமானத்தின்மீதான இறுதிநிலை வரிவீதத்தைவிடக் குறைவாக இருக்கவேண்டும் என்பதே இதன் பொருளாகும். இந் நிலையில் வரிவீதப் பட்டியலில் வளர்வீத முறை இருந்தாக வேண்டும் என்பது தெளிவு.

கோட்பாட்டுச் சிக்கல்களில் சிலவற்றைமட்டுமே நாம் இது வரை ஆய்ந்து பார்த்தோமே தவிர, எல்லாவற்றையும் அலசி ஆராய்ந்து தெளிவாக்கிவிடவில்லை. வருமான உயர்வின் வேகத்தை விட இறுதிநிலை மனநிறைவுகளின் வீழ்ச்சி வேகம் மிகுதியாக இருக்கும் சமயங்களில்மட்டும்தான் வளர்வீத வரிமுறை பொருத்த மாக இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டியுள்ள, மேலே உள்ள நமமுடைய கருத்தாய்வு, பல்வேறு வருமானப் பிரிவுகளில் உள்ள வரி செலுத்துவோரிடையே நாம் சமமான பயன்பாட்டுத் தன் மறுப்பை ஏற்படுத்த விரும்புகிறோம் என்னும் பாவனையை அடிப் படையாகக் கொண்டிருப்பதாகும். ஆனால், வரிச்சுமைகளை நேர்மை யான முறையில் பயன்படுத்துவதற்கான அளவுகோலாகத் தன் மறுப்புகளின் சமநிலையைத்தான் நாம் பயன்படுத்த விரும்பு கிறோமா ? சமுதாயத்தில் வரி விதிக்கப்படுவதற்கு முன்பு உள்ள வருமானப் பங்கீட்டு முறைதான் 'பொருத்தமான' முறை என் றும், இந்தச் சமுதாயத்தில் வரி விதிக்க வேண்டியிருப்பது ஓர் இன்றியமையாத தீமை (necessary evil) என்றும் நாம் கருது வோமானால், தன்மறுப்புகளின் சமநிலையை நம்முடைய தலை யாய குறிக்கோளாக நாம் ஏற்கவேண்டியிருக்கும்.[10]

தன்மறுப்புகளின் சமநிலைக்குப் பதிலாக நாம் ஏற்கக்கூடிய மற்றோர் அடிப்படை இருக்கிறது. வரிவிதிப்புக்கு முன்பு தனி யாட்களின் வருமானங்கள் எந்த வீதாசாரத்தில் இருந்தனவோ, அதே வீதாசாரத்தில் தன்மறுப்புகளை ஏற்படுத்தத்தக்க முறையில் வரிச்சுமைகளைப் பங்கிடுவதே, அந்த மாற்று அடிப்படையாகும். இந்த அடிப்படையில், ஒரு குறிப்பிட்ட வருமானத்தை உடையவர் செய்யவேண்டிய தன்மறுப்பு, அவரைப்போல் இரண்டு மடங்கு வருமானம் உள்ள மற்றொருவர் செய்யவேண்டிய தன்மறுப்பில் பாதி அளவாக இருக்கும். வருமான உயர்வு ஏற்படுகிற அதே வீதாசாரத்தில் இறுதிநிலைப் பயன்பாடுகள் குறைகிற முதல் வகை நிலைமை இருப்பதாக வைத்துக்கொண்டால், அந் நிலையில் 5,000

டாலரை வரிக்கு முந்திய வருமானமாக உடைய 'அ' என்பார், 10 சதவீத வரிச் செலுத்தலுக்குச் சமமான பயன்பாடுகளைத் தன் மறுப்புச் செய்யவேண்டும் என்று ஏற்பட்டால், 10,000 டாலரை வரிக்கு முந்திய வருமானமாக உடைய 'ஆ' என்பார், அவருடைய வருமானத்தில் 20 சதவீதத்துக்குச் சமமான பயன்பாடுகளைத் தன்மறுப்புச் செய்யவேண்டியிருக்கும். இந் நிலையில் 'ஆ'வின் வரி, 'அ'வின் வரியைவிட நான்கு மடங்கு அதிகமாக இருக்கும். ஆகவே, முதல் வகை நிலைமையில் சமத் தன்மறுப்பு விதியைக் (equal sacrifice rule) கையாளும்போது வீதாசார வரிவிதிப்பு ஏற்படுகிறது என்பதையும், வீதாசாரத் தன்மறுப்பு விதியைக் (proportional sacrifice rule) கையாளும்போது வளர்வீத வரி விதிப்பு ஏற்படுகிறது என்பதையும் நன்றாக அறிகிறோம். வீதா சாரத் தன்மறுப்பு விதியைக் கையாண்டால், இறுதிநிலைப் பயன் பாடு குறையாமலே இருக்கிற மிகச் சிறப்பான நிலையில்மட்டும் தான், வீதாசார வரிகள் ஏற்படும். மேலே தரப்பட்ட எடுத்துக் காட்டுகளில் உள்ள 'அ', 'ஆ' ஆகிய இருவரும், அவர்களுடைய வெவ்வேறான வருமானங்களிலிருந்து, ஒரே அளவான இறுதிநிலைப் பயன்பாடுகளைப் பெறுவார்களானால், 'ஆ' தன்மறுப்புச் செய்ய வேண்டியுள்ள பயன்பாட்டில் பாதி அளவைத்தான் 'அ' தன் மறுப்புச் செய்ய வேண்டியிருக்கும். 'அ'வின் வருமானம் 'ஆ'வின் வருமானத்தில் பாதியாக இருப்பதால், வருமானத்தின்மீது வீதா சார வரிவீதத்தை விதிக்கவேண்டியிருக்கிறது. ஆகவே, வீதாச சாரத் தன்மறுப்பைச் செய்வதே நேர்மையை (equity) நிலை நாட்டுவதற்கான வழி என்று பாவித்துக்கொண்டு, அத்தகைய நிலைமையில் வருமானத்தின் பயன்பாடும் குறைகிறது என்று பாவித்துக்கொண்டால், வரிமுறையில் ஏதாவது ஓர் அளவுக்கு வளர்வீதம் இருப்பதே நியாயம் என்று ஏற்படுகிறது. வருமானத்தின் பயன்பாடு எவ்வளவு அதிகமாகக் குறைகிறதோ அவ்வளவு அதிகமாக வளர்வீதம் இருக்கும். இவ்வாறாக, சமத் தன்மறுப்பு விதியில் இல்லாத இரண்டு நன்மைகள், வீதாசாரத் தன் மறுப்பு விதியில் அடங்கியுள்ளன. மொத்தப் பயன்பாடுகளில் வரிக்குப்பின் இருக்கிற சமத்துவமின்மைகளை அது குறைத்துவிடுகிறது என்பது ஒரு நன்மை. வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு எந்த அளவு குறைகிறது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டிய தேவை இல்லாமலே வளர்வீத வரி விதிப்பின் நியாயத்தை அது நிலைநாட்டிவிடுகிறது என்பது மற்றோர் நன்மை. வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு குறை கிறது என்கிற நிலை இருந்தாலே போதும். வளர்வீத வரிவிதிப்பு நியாயம் என்கிற நிலை ஏற்பட்டுவிடுகிறது. அந்தக் குறைவு எந்த

அளவுக்கு அதிகமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு வளர்வீதத்தின் வீதமும் அதிகமாக இருக்கும்.

வரி செலுத்துவோருக்கு இடையே வரிச்சுமைகளை நேர்மையாகப் பங்கிடுவதற்கான மூன்றாவது அடிப்படை, வளர்வீதத் தன்மறுப்பு (progressive sacrifice) ஆகும். இந்த விதியின்படி, பயன்பாடுகளின் தன்மறுப்பானது, வரிக்கு முந்திய வருமானத்தோடு ஒப்பிடுகையில், வீதாசாரத்தைவிட அதிகமாக இருக்கும். இத்தகைய நிலையில், வீதாசார வரிவிதிப்பைக் கையாள்வது நியாயமாக இருக்கவேண்டுமானால், வருமானம் உயரும்போது வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடும் உயர்வதாகக் கருதப்பட வேண்டும். ஆனால், பெரும்பாலான சூழ்நிலைகளில், வளர்வீதத் தன்மறுப்பானது, வளர்வீத வரிவிதிப்பைக் கையாள்வதையே நியாயமானதாக ஆக்குகிறது.

வளர்வீத வரிவிதிப்புக்குச் சார்பான வாதங்களுக்குக் குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாடு எந்த அளவு பயன்படுகிறது? பயன்பாட்டுப் பணியை (utility function) அளக்கமுடியாமலிருத்தல், பல்வேறு ஆட்களின் பயன்பாட்டுப் பணிகளை ஒப்பிடமுடியாதிருத்தல், ஒரு குறிப்பிட்ட பொருளின் பயன்பாட்டுக்கும் வருமானத்தின் பயன்பாட்டுக்குமிடையே பொருத்தமான தொடர்புகளை ஏற்படுத்தமுடியாதிருத்தல், தன்மறுப்பை நேர்மையோடு தொடர்புபடுத்தும் மூன்று வகை அடிப்படைகளில் எதைத் தேர்ந்தெடுப்பது என்னும் சிக்கல் ஆகிய இவற்றையெல்லாம் கவனிக்கும்போது, குறைந்துசெல் பயன்பாட்டுக் கோட்பாட்டின் அடிப்படையில் வளர்வீத வரிவிதிப்பை ஆதரிக்கும் வாதம், மிகவும் பலவீனமான ஒரு வாதம் என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது. அதே சமயத்தில், மேலே கூறப்பட்ட சிக்கல்கள் யாவும், வளர்வீத வரி விதிப்புக்குப் பயன்பாட்டுக் கோட்பாட்டிலிருந்து கிடைக்கக்கூடிய ஆதரவைக் குறைத்துவிடுகின்றன என்றாலும், அச் சிக்கல்கள், வீதாசார வரிவிதிப்புக்கோ தேய்வுவீத வரிவிதிப்புக்கோ ஆதரவாக இல்லை என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அவை, வளர்வீதத்தின் சார்பில் வன்மையாக வாதாடவில்லை; வரிச்சுமைகளைப் பங்கிடுவதற்கான மாற்று அடிப்படைகளின் சார்பிலோ, வாதாடவே இல்லை.

3. அண்மை ஆண்டுகளில், பொருளாதார நிலைபேற்று நோக்கமும், பொருளாதார வளர்ச்சி நோக்கமும் வளர்வீத வரிவிதிப்புக்கான பலமான ஆதரவுகளாக அமைந்துவிட்டன. தானே இயங்கும் ஒரு சுழல் எதிர்ப்புக் கருவி (automatic counter

cyclical instrument) என்னும் முறையில், வருமானத்தின்மீதான வளர்வீத வரி ஆற்றக்கூடிய ஒரு தனிவகைத் தொண்டானது, இத் தொடர்பில் தலையாய முக்கியத்துவம் உடையதாக விளங்குகிறது. வருமானங்கள் உயரும்போது, வருமானத்தின் இறுதி நிலை டாலர்கள் உயர்ந்த வரிவீதத் தொகுதிகளை (tax rate brackets) அடைந்துவிடுகின்றன. அப்படி அடைவதால், இந்த வருமானங் களின்மீதான இறுதிநிலை வரிவீதங்களும், சராசரி வரிவீதங்களும் உயர்ந்துவிடுகின்றன. வருமானங்கள் குறையுமானால், இறுதிநிலை வரிவீதங்கள், சராசரி வரிவீதங்கள் ஆகிய இரண்டுமே குறைந்துவிடு கின்றன. இத் தொடர்பில், இரண்டு கருத்துகள் சிறப்பாகக் கவனிக்கத் தக்கவை. வரிவீதப் பட்டியலில் வளர்வீதம் (progression) அமைந்திருப்பதன் விளைவாக, வருமானத்தில் ஏற் படும் உயர்வின் அல்லது தாழ்வின் வேகத்தைவிட வரிகளின் உயர் வில் அல்லது தாழ்வில் ஏற்படும் வேகம் மிகுதியாக இருக்கிறது என்பது முதல் கருத்து. வீதாசார வீதங்கள் (proportional rates) அமைந்திருந்தால், வரிகளில் ஏற்படும் உயர்வின் அல்லது தாழ்வின் வேகம், வருமானத்தில் ஏற்படும் உயர்வின் அல்லது தாழ்வின் வேகத்தை ஒத்திருக்கும். தேய்வுவீத வீதங்கள் (regressive rates) அமைந்திருந்தால், வருமான உயர்வுதாழ்வு வேகத்தைவிட வரி களின் உயர்வுதாழ்வு வேகம் குறைவாக இருக்கும். ஆகவே, இந்த மூன்று வகையான வரிவீத முறைகளில், மிக அதிகமான சுழல் எதிர்ப்பு விளைவை உடையது, வளர்வீத வரிவிதிப்பு முறையே என்பது வெளிப்படை. வளர்வீத முறையால் ஏற்படும் இந்தச் சுழல் எதிர்ப்பு விளைவானது, முற்றிலும் தானாகவே ஏற்படு வதாகவும், கிட்டத்தட்ட உடனடியாக ஏற்படுவதாகவும், சட்ட மன்ற நடவடிக்கை எதுவும் தேவைப்படாமலே ஏற்படுவதாகவும் இருப்பதே, நம்மால் கவனிக்கப்பட வேண்டிய இரண்டாவது கருத்தாகும். சுழல் எதிர்ப்பு விளைவானது, தானாகவும் உடனடி யாகவும் ஏற்படும் நிலைமை, வளர்வீத வரிவீதங்களால் உருவானது அன்று என்பதும், வருமானத்தை வரியின் அடிப்படையாக வைத் திருப்பதால் உருவானதே என்பதும் மறுக்கமுடியாத உண்மை களே. ஆனால், தனியாள்மீதான வருமானவரி வளர்வீத வரி யாகவே இருப்பதால், அந்த வரியானது, நிலைபேற்றை உருவாக்கும் பணிக்குச் சார்பாக விரைவாகவும், ஆற்றல் மிக்க முறையிலும் தொண்டாற்றும் கருவியாகக் கருதப்படுகிறது.

வேறு சில துறைகள்மூலமாகவும், வளர்வீதக் கோட்பாடா னது, நிலைபேற்றிற்கும் வளர்ச்சிக்கும் துணைபுரிகிறது. பெரும்பா லான மக்களின் வருமானம் மிகக் குறைவானதாக இருப்பதால், அந்த வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரியும் மிகக் குறைவாக

இருக்கிறது. அப்படி இருப்பதன் விளைவாகப் பொருளாதாரத்தில் நுகர்வுத் தேவை (consumption demand) பெரும் அளவில் தொடர்ச்சியாக இருந்து, பொருளாதாரத்திற்குப் பலம் அளித்து வருகிறது. நுகர்வானது, குறுகிய கால அளவில், ஏறத்தாழ நிலை பேருக இருப்பதால், பொருளாதார வீழ்ச்சியை ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் கீழே போகாமல் அதனுல் தடுத்து நிறுத்த முடிகிறது. அதுபோலவே, தீவிரமான அமித முதலீடு(serious over-investment) ஏற்படுவதையும், தீவிரமான விலைப் பணவீக்கம் (serious price inflation) ஏற்படுவதையும் அதனுல் தடுக்கமுடிகிறது. இவ்வாருக, அது ஆற்றல் மிக்க ஒரு நிலைபேருக்கக் கருவியாக விளங்குகிறது. வளர்ச்சியின் கண்ணேட்டத்திலிருந்து பார்க்கும்போது, ஏற்கெனவே உயர்வாக இருப்பதோடு தொடர்ச்சியாக உயர்ந்து கொண்டும் இருக்கிற நுகர்வானது, நீண்ட கால அளவில், வளர்ச்சியைத் தடுக்கும் ஆற்றல் படைத்த பொருளாதார வீழ்ச்சிகளை மிகக் குறைந்த அளவுடையனவாக ஆக்குகிறது. அதோடு, உற்பத்தித்திறமையை அதிகப்படுத்துவதற்கும் அது பேருதவியாக இருக்கிறது. வளர்வீதக் கோட்பாட்டிற்கு எதிர்ப்பாக இருப்பவர்கள், முதலீட்டுத் தூண்டுதல்களை அழிப்பதன் வாயிலாகவும், முதலீடு செய்யப்படக்கூடிய நிதிகளைக் குறைத்துவிடுவதன்மூலமாகவும் வளர்வீதக் கோட்பாடானது, பொருளாதார வளர்ச்சியின் பகைவனுகத் திகழ்கிறது என்று வாதாடுகிருர்கள். ஆனுல், போருக்குப் பிந்திய காலம், உயர்ந்த வரிகளையும் வளர்வீத வரிகளையும் உடைய காலமாக இருந்துங்கூட, அதே காலம்தான் வேகமான முதலீட்டுப் பெருக்கத்தை உடைய காலமாகவும், சில சமயங்களில் அமித முதலீட்டுக் காலமாகக்கூட விளங்கியது என்னும் தெள்ளத் தெளிவான உண்மையை நாம் மறந்துவிடமுடியாது. வளர்வீத வரிகள் உயர்ந்த அளவில் விதிக்கப்பட்ட அக் காலத்தில், முதலீட்டு வளர்ச்சி ஏற்படுவதற்கு ஏதோ ஒரு சூழ்நிலை துணையாக இருந்திருக்கவேண்டும். அந்தச் சூழ்நிலையில், நுகர்வின் போக்குக்கு மிக முக்கியமான ஓர் இடம் இருந்திருக்கும் என்பதில் துளியும் ஐயமில்லை.

4. இறுதியாக, சில பொருள்கள் வேறு சில பொருள்களை விடச் சமுதாயத்திற்கு அதிகமாகத் தேவைப்படுவன என்று சமுதாயம் அளிக்கிற மதிப்புத் தீர்ப்பு (value judgment), வளர்வீத வரிமுறையின் சார்பான இன்னொரு வாதமாகத் திகழ்கிறது. சமுதாயத்தால் அற்பமானவை அல்லது தேவையற்றவை என்று கருதப்படும் விருப்பங்களை உண்மையானவை என்றும் தேவையுள்ளவை என்றும் கருதப்படும் விருப்பங்களை நிறைவேற்றுவதற்கே கிடைத்தற்கரிய சாதனங்கள் (scarce resources), தனியாட்

களின் தேவைகள்மூலமாகப் பங்கிடப்பட வேண்டும் என்பதும், அப்படிப் பங்கிடப்படுவதற்கு ஏற்ற முறையில் வருமானப் பங்கீட்டு முறை அமைந்திருக்க வேண்டும் என்பதுமே இந்த வாதத்தின் பொருளாகும். பொருள்களிலிருந்து தனியாட்கள் பெறுகிற பயன் பாடுகளை அளக்கவேண்டிய சிக்கல், இந்த வாதத்தால் அகற்றப்பட்டு விடுகிறது. ஏனென்றால், ஓர் அற்பமான விருப்பத்தை ஒரு தனி யாள் எந்த அளவு நிறைவேற்ற விரும்புகிறார் என்பதற்கும், இந்த வாதத்திற்கும் சிறிதும் தொடர்பு இல்லை. இந்த வாதத்தில், ஓரள வுக்குத் தனியாட்களுடைய விருப்பங்களின் இடத்தை சமுதாயத் தீர்ப்பு பெற்றுவிடுகிறது. போதுமான பகுத்தறிவுள்ள பொது மக்களிடையே, வருமானங்கள் சிறிய அளவில் இருக்கும் சமயங்களை விடப் பெரிய அளவில் இருக்கும் சமயங்களில்தான், அற்பமான அல்லது பயனற்ற தேவைகளை நிறைவேற்றும் போக்கு அதிகமாகக் காணப்படுவதால், உயர்ந்த வருமானங்கள்மீது அதிக வரிவிதிப் பதுதான் நியாயம் என்று ஏற்படுகிறது. வளர்வீத வரிப்பட்டிய லால் உற்பத்தித் தூண்டுதல்கள் தீவிரமான அளவில் பாதிக்கப் படாதவரையில், அந்தப் பட்டியலால் சமுதாயத்தில் ஏற்படும் வருமானம், சாதனங்கள் ஆகியவற்றின் மறுபங்கீடானது, பரந்த அளவில் சமுதாய நலனை உருவாக்குவதாக இருக்கிறது. வரிச் சுமைப் பங்கீட்டுச் சிக்கல்பற்றிய இந்தக் கருத்து, பேராசிரியர் எல்மர் ஃபேகன் (Professor Elmer Fagan) என்பாரால், 'சமூக-அரசியற் கோட்பாடு' (Socio-political Theory) என்று அழைக்கப் படுகிறது.[11] இந்தக் கோட்பாடு, வருமான மறுபங்கீட்டை, அரசாங்கக் கொள்கையின் ஒரு தலையாய நோக்கமாக ஆக்கிவிடு கிறது. வளர்வீத வரிவிதிப்பைப் பொதுமக்கள் பரவலான முறையில் ஒத்துக்கொண்டிருப்பது இந்தக் கருத்தின் அடிப்படை யில்தான் என்று நாம் உய்த்துணர முடிகிறது.

மொத்தமாகப் பார்க்கும்போது, வளர்வீத வரிவிதிப்புக்கான வாதங்கள் ஆற்றல் உடையன அல்ல என்று கூறப்படுகிறது.[12] குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாட்டின் அடிப் படையில் வளர்வீத வரி முறையை நிலைநாட்டப் பார்க்கும் நெடுங் காலப் போக்கைப் பொறுத்த அளவில், இது முற்றிலும் உண்மையே. ஆனால், இறுதிநிலைப் பயன்பாட்டு அடிப்படையால் வளர்வீத வரிமுறை நியாயமானது என்பதை நிலைநாட்ட முடிய வில்லை என்பதைப்போலவே, அந்த வரிமுறை நியாயமானதல்ல என்றும் அதனால் நிலைநாட்ட முடியவில்லை என்பதை நினைவில் வைத்துக்கொள்வது இன்றியமையாதது. ஏனென்றால், குறைந்து செல் பயன்பாட்டுக் கோட்பாடு, வளர்வீத வரிமுறைக்கு ஆதர வாக இருக்கும் அளவைவிட, வீதாசார வரிமுறைக்கோ, தேய்வு

வீத வரிமுறைக்கோ அதிக ஆதரவாக இருந்துவிடவில்லை. உண்மையைச் சொல்வதானால், சமநிலைத் தன்மறுப்பைத் தவிர வேறு எந்த வகைத் தன்மறுப்பை, பொருத்தமான வரிச்சுமைப் பங்கீட்டுக்கான அடிப்படையாக நாம் ஏற்றுக்கொண்டாலும், நிலைமை, வளர்வீத வரிமுறைக்கே ஆதரவாக இருக்கிறது. ஆனால், குறைந்துசெல் பயன்பாட்டுக் கோட்பாட்டால் வளர்வீத வரி முறையை ஆதரிக்க முடிந்தாலும் சரி, முடியாவிட்டாலும் சரி, ஒரு வளர்வீத வரியால் அதிக அளவில் வருவாய் கிடைக்கும் நிலைமை ஈடுசெய் நோக்கத்திற்காக (compensatory purpose) அதனை எளி தில் பயன்படுத்தக்கூடிய வசதி, வருமான மறுபங்கீட்டைச் செய்வ தற்கு அது தரும் உதவி ஆகிய காரணங்களால், வளர்வீத வரி முறை இன்றியமையாதது என்னும் உண்மை நிலைநாட்டப்பட்டு விடுகிறது. தற்போது எழுகிற கேள்வியெல்லாம், ஒரு முழு வரித் திட்டத்தில் (over-all tax system) வளர்வீதக் கோட்பாட்டுக்கு இடம் உண்டா இல்லையா என்பது அல்ல; அந்தத் திட்டத்தில் இருக்கவேண்டிய வளர்வீதம் (progression) எந்த அளவுக்குத் தீவிரம் உடையதாக இருக்கலாம் என்பதே.

### கட்டுப்பாட்டு வரிவிதிப்பில் சுமையின் பங்கீடு (Distribution of Burden in Sumptuary Taxation)

குறிப்பிட்ட கட்டுப்பாட்டுப் பணிபற்றிய கோட்பாட்டைத் தவிர்த்துத் தனியாகக் கட்டுப்பாட்டு வரிபற்றிய 'கோட்பாடு' (theory) எதுவும் இல்லை. ஒரு குறிப்பிட்ட பொருளின் நுகர்வைக் குறைக்கும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, அதன் விலையை உயர்த்துவதற்காக வரிவிதிப்பானது பயன்படுத்தப்படுமா னால், (எடுத்துக்காட்டு: சாராயத்தின் மீதான வரி), வரிச்சுமையைப் பங்கிடுவதற்கான அடிப்படை எளிதாக இருக்கிறது. அத்தகைய நிலைமையில், எந்த ஆளுடைய நுகர்வைக் குறைக்கவேண்டுமோ, அந்த ஆள்மீதுதான் வரி விதிக்கப்படுகிறது. நடைமுறையில் நுகர்வைக் குறைப்பதற்கு எவ்வளவு உயர்ந்த அளவு தேவைப்படு கிறதோ அந்த அளவில் வரிவிதிக்கப்பட வேண்டும். அப்படி விதிக்கப் படும்போது, வரியின் வருவாய்த்தன்மை கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படக்கூடாது. அத்தகைய நிலைமையில், ஒரு வரியானது, அதனுடைய கட்டுப்பாட்டு நோக்கத்தை நிறைவேற்றுவதில் எந்த அளவு ஆற்றல் உடையதாக இருக்கிறதோ, அந்த அளவுக்கு வரு வாயை ஈட்டித் தருவதில் அது குறைந்த ஆற்றல் உடையதாகத்தான் இருக்கமுடியும். வரி விதிப்பின் மூலமாக ஒரு பொருளின் உற்பத்தியே தடுக்கப்பட்டுவிட்டால், வரிச்சுமை என்பதே இல்லா மற் போய்விடும்.

இதுபோலவே, கட்டுப்பாட்டு வரியின் பொதுவான பொருளிலும், அதாவது செலவிடக்கூடிய அல்லது பதுக்கிவைக்கக்கூடிய நிதிகளை அங்காடியிலிருந்து அகற்றக்கூடிய வரி என்னும் பொருளிலும், கட்டுப்பாட்டுக் கோட்பாடே (theory of control) வரிக்கோட்பாடும் (theory of tax) ஆகும். இந்தத் தொடர்பில், வரிக்கோட்பாடு என்று நாம் கூறுவது, வழக்கமாக வரிகளைப்பற்றிய ஆய்வுரைகளில் பயன்படுத்தப்படும் நேர்மைச் சிக்கலோடு தொடர்புடைய கருத்தில் அல்ல; பொருத்தம் உடைமை (expediency) என்னும் கருத்திலேயே ஆகும். அத்தகைய வரியின் சுமையானது, வருவாய்த் தேவையின் விளைவாகத் தோன்றுகிற ஓர் இன்றியமையாத தீமை அன்று; விரும்பப்படுகிற ஒரு நோக்கத்தை அடைவதற்கான ஒரு வழியாகும். அதாவது, நாட்டு வருமானத்தை ஓர் உயர்ந்த வேலை அளவில் நிலைபெறுக்க வேண்டுமானால், சில ஆட்களிடமிருந்து வருமானத்தை எடுத்தாகவேண்டும். இத்தகைய நிலையில், 'சுமை' யானது, வரியின் உடனடியான தலையாய நோக்கமாகக் கொள்ளப்படுகிறது. எனவே, வரிச் சுமையின் பங்கீட்டில் கையாளப்பட வேண்டிய நேர்மைபற்றி வழக்கமாக எழுப்பப்படும் கேள்விகள், இத் தொடர்பில் எழுப்பப்பட முடியா.

சுழல் எதிர்ப்பு வரிச்சுமைகளைப் பங்கிடுவதற்கான பொருத்தமான கோட்பாடுகள் எவையாக இருக்க முடியும்? பொருத்தமுடைமை என்னும் கோட்பாடுதான் (அதனை ஒரு கோட்பாடு என்று கூறமுடியுமானால்) இத்துறையில் தலையாயதாகப் பொலிய முடியும். அதாவது, தலையாய வரிகள், பெரும் அளவுக்கு நெகிழ்ச்சியை (elasticity) உடையனவாக இருக்கவேண்டும் என்றும், பொருளாதாரத்தின் எந்தப் பகுதிகளின் வரிக்குப் பிந்திய செலவிடத்தக்க வருமானத்தை (after-tax spendable income) உயர்த்தவேண்டும் அல்லது குறைக்க வேண்டும் என்று கருதப்படுகிறதோ, அந்தப் பகுதிகளின் மீதுள்ள வரிச் சுமைகளை, விரைவாகவும் பயன்மிக்க முறையிலும் உயர்த்துவதற்கும் குறைப்பதற்கும் அந்த நெகிழ்ச்சியானது துணைபுரியவேண்டும் என்றும் கூறினர்.

ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சுழல் எதிர்ப்புத் திட்டத்தின் வரிச் சுமைகளைத் தக்க முறையில் பங்கிடுவது, நிறைவேற்றப்பட வேண்டிய குறிக்கோள்கள் எத்தகையவை என்பதைப் பொறுத்திருக்கிறது. முதலீட்டுக்கான ஆர்வத்தை வளர்ப்பது குறிக்கோளாக இருந்தால், ஆபத்தை ஏற்கும் மூலதனத்திலிருந்து (risk capital) கிடைக்கும் வருமானத்தின்மீதுள்ள வரிச் சுமை, குறைக்கப்படவேண்டும். நுகர்வை மிகுதிப்படுத்துவது நோக்கமாக இருந்தால், குறைந்த வருமானங்கள்மீதுள்ள வரிகளைக் (நுகர்வுப் பொருள்கள்மீதுள்ள

வரிகளையும்) குறைப்பது நலம் தரும். மாற்றி அமைக்கப்பட வேண்டியநிலைமைகள், வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு வகையின வாக இருக்கும் என்பது, நினைவில் நிறுத்தப்படவேண்டிய தலை சிறந்த ஓர் உண்மையாகும். இவ்வாறாக, சுழல் எதிர்ப்புக்கு ஏற்ற முறையில் சுமைகளைப் பங்கிடும் வரிகள், அவ்வப்போது உள்ள நிலைமைகளுக்குப் பொருத்தமான முறையில், தங்களை மாற்றி யமைத்துக்கொள்ளவேண்டும்.

பொழிப்புரை (Summary)

குறிப்பிட்ட வரிகளைப்பற்றிய கருத்தாய்வு செய்வதற்கு ஆயத்தமாகும் முறையில், எத்தகைய பொதுவான அடிப்படைமீது வரிமுறை முழுவதும் எழுப்பப்படவேண்டும் என்பதை நாம் இது வரை ஆராய்ந்து பார்த்தோம். வருவாய் நோக்கத்தோடு விதிக்கப் படும் வரிகள், தனியாட்களுக்கிடையே சுமைகளைப் பொருத்த மான முறையில் பங்கீடு செய்வதற்காக, செலவுக் கோட்பாட்டை யும் நன்மைக் கோட்பாட்டையும் பொதுவாகப் பயன்படுத்த முடியாது என்பதைத் தெளிவாக அறிந்துகொண்டோம். பயன் படுத்த முடியாமைக்கு உரிய காரணங்கள் இரண்டு வகைப்படும். நன்மையையும் செலவையும் தனியாட்களுக்கிடையே பகுத்தறி வுக்கு ஏற்ற முறையில் பங்கிடுவது பெரும்பாலும் இயலாத செயல் என்பது ஒரு காரணம். ஒருவேளை அப்படிப் பங்கிட முடிந்தாலும் நடைமுறையில் அக் கோட்பாடுகளைக் கையாண்டால், தலைசிறந்த பல அரசாங்கப் பணிகளைக் கைவிடவேண்டியிருக்கும் என்பது இரண்டாவது காரணம்.

வரி செலுத்துவோருக்கு இடையே வரிச்சுமையானது நேர்மை யாகப் பங்கிடப்படவேண்டும் என்னும் கருத்தில், வரிச் சுமையில் அடங்கியுள்ள தன் மறுப்புகளை ஒப்பிடவேண்டிய கட்டாயம் பொதிந்திருக்கிறது. ஆனால், இத் தன்மறுப்புகளைத் துல்லியமான வகையில் ஒப்பிடுவதற்குப் பொருத்தமான முறை எதுவும் இல்லை. இப்படிக் கூறுவதால், நேர்மைக் கோட்பாடு கைவிடப்பட வேண் டும் என்பது பொருளல்ல. மிக வெளிப்படையாகத் தெரிகிற நேர்மையின்மைகள் (inequities) தவிர்க்கப்படும் என்பதும், நீதி யைப்பற்றி மிகப் பரவலாகவும் உணர்ச்சிமயமாகவும் கொள்ளப் பட்டுள்ள கருத்துகள் நிறைவேற்றப்படும் என்பதுமே அதன் பொருளாகும். ஆனால், வரிச்சுமைப் பங்கீட்டு முறைகளை எழுப்பு வதற்காக அடிப்படைகள் வேறு சில இருக்கின்றன. பொருளா தார நிலைபேற்றையும், வழக்கமான பொருளில் வளர்ச்சியையும் ஏற்படுத்துவதற்கு உச்ச அளவில் உதவிபுரிவது, உச்ச அளவு

சமுதாய நன்மையில் (maximum social advantage) கண்ணோட்டத்தின்படி தேவைப்படுகிற பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின் உற்பத்தியை அதிகப்படுத்துவது என்னும் பொருளில் பொருளாதார வளர்ச்சிக்கு உதவி புரிவது ஆகியவை, அத்தகைய அடிப்படைகளில் சிறப்பாகக் குறிக்கத்தக்கவை ஆகும். நீண்டகால அளவில் பார்க்கும்போது, வரிகளின் வருவாய் உற்பத்தித் திறன் எந்த அளவில் இருக்கிறது என்பதைப் புறக்கணிக்க முடியாது என்பது உண்மையே. ஆனால், பேதம் காட்டுகை (discrimination), நிலை பேறின்மை (instability), அல்லது பொருளாதாரத் தேக்கம் (ecomonic stagnation) ஆகியவை அதிகமாக ஏற்படாத முறையில் போதுமான வருவாயை எழுப்புவது எப்படி என்பதுதான் நடைமுறைச் சிக்கல் ஆகும்.

எளிதில் மாறும் தன்மையே (flexibility) அதாவது, மாபெரு மாறுதல்களுக்கு உட்படாமலே மாறிக்கொண்டிருக்கும் சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தன்னைத் திருத்தி அமைத்துக்கொள்ளும் திறமையுடைமையே, ஓர் இயக்கநிலைப் பொருளாதாரத்தில் (a dynamic economy), தேவையான வேலை அளவை ஏற்படுத்துவதற்காக உருவாக்கப்படுகிற வரிமுறையில் இருந்தாகவேண்டிய தலையாய தன்மையாகும். வரிமுறையை இந்த நோக்கத்திற்காகப் பயன்படுத்துவதால், அவ்வப்போது இந்த நோக்கத்திற்கும், நேர்மையைப் பற்றிப் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள கருத்துகளுக்கும் இடையே மோதுதல் ஏற்படக்கூடும். எடுத்துக்காட்டாக, சிறப்பாக முதலீட்டால் உருவாக்கப்பட்டுள்ள ஒரு பணவீக்க நிலைமையைக் கட்டுப்படுத்தவேண்டுமானால், நுகர்பவர்கள்மீது பளுவான வரிகளை விதிக்கவேண்டியிருக்கலாம். ஆனால், இந்த நுகர்பவர்களில் சிலர், மனித உணர்ச்சி படைத்த எந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தாலும் வசதி அற்றவர்களாகவும் வறியவர்களாகவுமே இருப்பார்கள். வரவுசெலவுத் திட்டக் கோட்பாடு நடைமுறையில் உள்ள ஏனைய துறைகளைப்போலவே இந்தத் துறையிலும், நோக்கங்களிலும், அந்த நோக்கங்களை அடைவதற்கான வழிகளிலும், தெரிவுகளை (choices) செய்யவேண்டியிருக்கிறது. உடனடியாக நிறைவேற்றவேண்டிய மிக இன்றியமையாத நோக்கங்கள், உடனடியாகக் கவனிக்கப்படும் என்று நாம் எதிர்பார்க்கலாம். தான் செய்வது இன்னதுதான் என்பதைச் சமுதாயம் நன்குக அறிந்திருக்குமானால்—அதாவது, நோக்கங்கள் பகுத்தறிவுக்குப் பொருந்தியனவாகவும், அவற்றை அடைவதற்கான வழிகள் அந் நோக்கங்களை நிறைவேற்றத் தக்கனவாகவும் இருக்குமானால், சமுதாயம் முன்னேறிச் செல்லும் என்று கூறிவிடலாம். இக் காரணத்தை முன்னிட்டு, வரிச்சுமைகளின் பங்கீடானது பெரும்பாலும், வருவா

யின் உற்பத்தி அளவு, பொருளாதார நிலைபேறும் வளர்ச்சியும் தேவையான அளவு வருமான மறுபங்கீடு ஆகிய கண்ணோட்டங்களி லிருந்தே செய்யப்படும். வருமானப் பிரிவுகளுக்குப் பழக்கமாகி விட்ட பங்கீட்டு முறையைப் (distribution system) பற்றிய விதி களைத் தீவிரமான முறையில் மாற்றுமல் இருப்பதன்மூலமாகவே, பெரும்பாலும் நேர்மைக் குறிக்கோளானது நிறைவேற்றப்படக் கூடும்.

## மேலும் படித்தற்கு உரியவை


1. வால்டர் ஜே. ப்ளும் (Walter J. Blum), ஹென்ரி கால் வென் (Henry Jr. Kalven), ஆகியோரின், 'The Uneasy Case for Progressive Taxation,' சிகாகோ, சிகாகோ பல்கலைக்கழகம், 1953.

வளர்வீதத்தின் அடிப்படைகளாக நீண்ட காலமாக இருந்து வருகிற சில கருத்துகளின்மீது நிகழ்த்தப்பட்டுள்ள ஆற்றல் மிக்க தாக்குதல் இது.

2. எஸ். ஜே. சாப்மன் (S. J. Chapman), 'The Utility of Income and Prgressive Taxations', Economic Journal, மார்ச்சு 1913. இக்கட்டுரை, மஸ்கிரேவ் (Musgrave), ஷூப் (Shoup) ஆகியோரைப் பதிப்பாசிரியர்களாகக் கொண்ட 'Readings in the Economics of Taxation' என்னும் நூலின் முதல் அத்தியாயமாக எடுத்து வெளியிடப்பட்டுள்ளது.

குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாட்டை மட்டுமே ஆதாரமாகக்கொண்டு வளர்வீத வரிமுறையை நிலை நாட்ட முடியும் என்கிற பாவனையைக் கண்டிக்கும் கட்டுரை.

3. ஹ்யூ (Hugh), டால்டன் (Dalton), 'The Principles of Public Finance,' 3ஆவது பதிப்பு, லண்டன், ரட்லெட்ஜ் மற்றும் கெகன் பால் (Routledge and Kegan Paul), 1952, அத்தியாயம் 9.

நேர்மைக் கோட்பாடு கையாளப்படுகிறது என்னும் பாவனை யின் அடிப்படையில், வரிச்சுமைப் பங்கீட்டுக்கான பல்வேறு அடிப் படைகள் இந்த அத்தியாயத்தில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

4. எல்மர் டி. ஃபேகன் (Elmer D. Fagan), 'Recent and Contemporary Theories of Progressive Taxation', Journal of Political Economy, ஆகஸ்டு 1938.

வளர்வீத வரிமுறைக்கு ஆதாவாக எழுப்பப்படுகிற தலையாய கருத்துகள் ஒவ்வொன்றையும் மதிப்பீடு செய்து, சமூக, அரசியல் நோக்கத்தை முன்வைத்துதான் அதனை நிலைநாட்ட முடியும் என்று முடிவு செய்யும் கட்டுரை.

5. ஹார்லி எல். லட்ஸ் (Harley L. Lutz), 'Guideposts to a Free Economy,' நியூயார்க், மக்ரா-ஹில், 1945, அத்தியாயம் 9.

வளர்வீத வரிமுறையை எதிர்த்து, அதனுடைய உரத்த குரல் 'எதிரி'களில் ஒருவரால் எழுதப்பட்டுள்ள கருத்தாய்வு: இது, எச். எல். க்ரோவ்ஸ் (H. L. Groves) என்பாரின் 'Viewpoints on Public Finance' என்னும் நூலில் [நியூயார்க், ஹோல்ட் (Holt), அத்தியாயம் 5] எடுத்து வெளியிடப்பட்டுள்ளது.

## 13 ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. இ. ஆர். ஏ. செலிக்மன் (E. R. A. Seligman), 'Essays in Taxation,' பத்தாவது பதிப்பு, நியூயார்க், மாக்மில்லன், 1925, பக்கம் 432.

2. சென்ஸஸ் பீரோவின் 'Summary of Governmental Finances in the United States in 1957' (அட்டவணை 1, பக்கம் 22) என்னும் நூலிலிருந்து தொகுக்கப்பட்டவை: எல்லா மூலகங்களிலிருந்தும் கிடைக்கிற வருவாய் வரவுகளின் மொத்தத் தொகைகள் முற்றிலும் துல்லியமானவை அல்ல. பதவி ஓய்வு (retirment), மற்றும் இன்ன பிற ஈட்டுறுதி (insurance) நோக்கங்களுக்கான பொறுப்பு நிதி வருவாய்கள், வருவாய் அல்லாத வரவுகள் என்னும் முறையில் கழிக்கப்பட்டுள்ளன. கட்டிக்காட்டப்படமுடியாத பிற பல பொறுப்பு நிதி இனங்கள், அவ்வாறு கழிக்கப்படவில்லை. கூட்டரசாங்கப் புள்ளி விவரங்கள், வரவுசெலவுத் திட்டப் புள்ளிவிவரங்களை ஒத்திருக்கவில்லை. இதற்கு ஒரு காரணம், மேலே சொல்லப்பட்டிருக்கிறது. மற்றொரு காரணம், அஞ்சல் துறையின் மொத்த (gross) வரவுகள் இங்கே வருவாய் வரவுகளில் சேர்க்கப்பட்டிருந்தாலும், வரவு செலவுத் திட்டம் அஞ்சல் வரவுகளை நிகர வரவுகளாகக் கருதுகிறது என்பது ஆகும்.

3. ஏ. பி. லெர்னர் (A. P. Lerner) 'An Integrated Full Employment Policy', 'International Postwar Problems', பன்னாட்டு நடவடிக்கைகள் பற்றிய அமெரிக்கத் தொழிலாளர் மாநாட்டின் காலாண்டு மதிப்பீட்டு இதழ் (Quarterly Review of the American Labour Conference on International Affairs), ஜனவரி, 1946, பக்கம் 70. அதே ஆசிரியரின் 'The Economics of Control' என்னும் நூலிலும் (நியூயார்க், மாக்மில்லன், 1946, பக்கங்கள் 307-8) இக் கருத்தைக் காணலாம்.

4. எடுத்துக்காட்டாக, ஒரு கார்ப்பரேஷனின் வருமானம் என்பது, கார்ப்பரேஷனின் உரிமையாளர்களின் வருமானமாக இருப்பதன் முந்திய கட்டமே என்பதையும், அது ஒரு தனி வருமான ஓட்டம் அன்று என்பதையும் நாம் நன்கு அறிவோம். ஆகவே, கார்ப்பரேஷனின் வருமானத்தின்

மீதும் ஒருங்கே வரிகள் விதிக்கப்படுமானால், கார்ப்பரேஷன் மூலமாக வருகிற தனியாள் வருமானம், இரட்டை வரிவிதிப்புக்கு (double taxation) ஆளாகிறது. அதே சமயத்தில் கார்ப்பரேஷன் அல்லாத மூலங்களிலிருந்து கிடைக்கிற தனியாள் வருமானம் அவ்வாறு இரண்டு முறை வரிவிதிக்கப் படாவிட்டால், கார்ப்பரேஷன் மூலம் வருகிற வருமானம் வரிப் பேதம் காட்டுகைக்கு (tax discrimination) ஆளாகிறது என்பது தெளிவு.

5. வரியின் தொகையைக் கணக்கிடுவதில் வரிவீதமானது, பெருக்கும் எண்ணாக (multiplier) இருக்கிறது. வரி அடிப்படையானது (எடுத்துக் காட்டுகள்: சொத்தின் மதிப்பும் வருமானத்தின் மதிப்பும்), பெருக்கப்படும் எண்ணாக (multiplicant) இருக்கிறது. பெறுமான விகித வரிகளில் (ad valorem taxes), வரி அடிப்படையானது மதிப்பின் அடிப்படையிலும், வரி வீதமானது சதவீத அடிப்படையில் அல்லது ஒரு டாலருக்கு இத்தனை சென்ட்டுகள் (cents) என்ற அடிப்படையிலும அளக்கப்படுகின்றன. அளவை வரிகளில் (specific taxes), வரி அடிப்படையானது அளவின் அடிப் படையிலும் (எடுத்துக்காட்டுகள்: ஒரு மணங்கு கோதுமை, இருபது சிகரெட்டுகள், ஒரு மோட்டார் கார்), வரிவீதமானது வரி அடிப்படையின் ஒவ்வோர் அலகுக்கும் (unit) இத்தனை டாலர்கள் அல்லது இத்தனை சென்டுகள் என்ற அடிப்படையிலும் அளக்கப்படுகின்றன. பெறுமான விகித வரிகளுக்கு எடுத்துக்காட்டுகள்: விற்பனை வரிகள், வருமான வரிகள், சொத்து வரிகள், டாலர்களின் கணக்கில் வரி அடிப்படையை உடைய பல ஆயத் தீர்வைகள் (excise duties) ஆகியவை; அளவை வரிகளுக்கு எடுத்துக் காட்டுகள்: பல சுங்கவரிகள் (ஒவ்வொரு புஷல் கோதுமைக்கும் 42 சென்ட்டு வரி) பெட்ரோல் வரி, சிகரெட்டு வரி, பெரும்பாலான மது வரிகள் ஆகியவை.

6. சொத்து வரிகள், வாணிபம், வரிகள் விற்பனை வரிகள், ஆய வரிகள் ஆகியவற்றில் நன்மைக் கோட்பாட்டின் பல கூறுகள் தற்போது பயன் படுத்தப்படுகின்றன என்றபோதிலும், இந்த உண்மையை மறுக்க முடியாது. (இந்த அத்தியாயத்தின் 23ஆவது அட்டவணையைக் காண்க.)

7. 23ஆவது அட்டவணையைக் காண்க.

8. 'Wealth of Nations', 1776, நவீன நூல்நிலையப் பதிப்பு, பக்கம் 777.

9. 'வருமானம்' என்பது, இங்கே, வரி விதிக்கப்படக்கூடிய வருமானத்தைக் குறிக்கிறது. இந்த இரண்டு வரி செலுத்துவோருடைய வருமானத்திலும், ஒரு குறைந்த அளவு வருமானத்திற்கு வரி விதிப்பிலிருந்து விலக்கு அளிக்கப்படும். விலக்கு அளிக்கப்பட்ட அளவுக்கு மேற்பட்ட வருமானத்தின்மீதுமட்டுமே வரிவீதங்கள் பயன்படுத்தப்படும்.

10. இந்தச் சிக்கல்பற்றிய பயனுள்ள பகுத்தாய்வு வேண்டுமானால், வால்டர் ஜே. ப்ளும் (Walter J. Blum), ஹென்றி கால்வென் (Henry Kalven, Jr.) ஆகியோரின் 'The Uneasy Case for Progressive Taxation' என்னும் நூலைக் காண்க. (சிகாகோ பல்கலைக்கழக அச்சகம், 1953, பக்கங்கள் 43-45.)

11. எல்மர் டி. ஃபேகன் (Elmer D. Fagan), 'Recent and Contemporary Theories of Progressive Taxatin,' Journal of Political Economy, ஆகஸ்டு 1938, இக் கட்டுரை, மஸ்கிரேவ், ஷுப் (Musgrave and Shoup) ஆகியோரின் 'Readings in the Economics of Taxation' என்னும் நூலில் (ஹோம்வுட், இல்லினொய்ஸ, ஆர். டி. இர்வின், 1959) அப்படியே வெளியிடப்பட்டிருக் கிறது.

12. ப்ளும், கால்வென் ஆகியோரின், முன்னர்க் குறிப்பிட்ட நூல்.

# 14. வரி நிலைப்பாடும் பிற விளைவுகளும்

வரிக்கொள்கைபற்றிய அடிப்படை உண்மைகள் இரண்டு எனவும், அவை வரிக்கொள்கைபற்றிய எந்த சர்ச்சைக்கும் பொருந்தும் எனவும் நாம் கடந்த அதிகாரத்தில் குறிப்பிட்டோம். அவற்றில் முதலாவது, வரிகள் யாவும் இறுதியில் தனியாரின் வருமானத்தினின்றே செலுத்தப்படுகின்றதென்பது. இவ்விதிக்குச் சில புறனடைகள் உண்டு. ஆனால், அவை முக்கியமானவையல்ல. இதனால் வரித்தளம் கூடுமானவரை தனியார் வருமானமாகத் தான் இருக்கவேண்டுமென்ற முடிவுக்கு வந்தோம். நம்முடைய வருமானத்திலிருந்துதான் வரிகளைச் செலுத்துகின்றோம். இவ் வருமானத்தைச் சரியானபடி அளவிடுவதற்கு வேறெந்த மாற்று வரித்தளமும் அத்துணைப் பொருத்தமானதன்று. இவ்விதிக்குப் புறனடை, செலவைக் கட்டுப்படுத்தும் வரிவிதிப்பே. செலவைக் கட்டுப்படுத்துவதற்கு மிகவும் ஒரு வரம்புக்கு உட்பட்டதும் ஒரு துறைபோயதுமான வரித்தளங்கள் வேண்டும்.

நாம் குறிப்பிட்ட இரண்டாவது அடிப்படை உண்மையாவது, யாரின்மீது வரி போடப்படுகின்றதோ அவரே அவ் வரிப்பளுவைத் தாங்குகிறவராக இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதே. ஈதிவ்வாறாக, வரியைப்பற்றிய கருதுகோள், ஒரு குறிப்பிட்ட வரி போடப்படுவதனால் ஏற்படும் வரிப்பளுவை யார் இறுதியில் ஏற்கிறார்கள் என்பதைப்பற்றித் தெரிவிக்கவேண்டும். இவ்வாறு தெரிந்தாலொழிய விரும்பத்தகாத விளைவுகள் பலகாலும் ஏற்படும். வரி போடப்பெற்ற ஒருவன் தன் வரிப்பளுவை எந்தெந்த நிலைகளில் பிறர்மீது புரட்டலாம் (transfer) என்பதைப் பொதுவாக ஆய்வதே இவ்வதிகாரத்தின் நோக்கமாகும். குறிப்பிட்ட வரிகளைப்பற்றியும் அவற்றைப்பற்றிய வரி நிலைப்பாட்டைப்பற்றியும் பின்வரும் அதிகாரங்களில் ஆராய்வோம்.

**வரி நிலைப்பாடு என்பதன் பொருள்**

ஒரு வரி விதிக்கப்படும்பொழுது யார் அவ் வரியைச் செலுத்து கின்றார்களோ அவர்மீதுதான் அவ் வரியின் முதல் தாக்கு படிகின் றது. அவர் வருமானம் பெறுகிறவராகவோ, உடைமைக்கார ராகவோ அல்லது பண்டங்கள் அல்லது சேவைகளை வாங்குகிறவர் அல்லது விற்பவராகவோ இருக்கலாம். அவரே வரியைக் கொடுக்க லாம் (வரிப்பளுவைத் தாங்கலாம்); அல்லது வேறொருவரின்மீது அந்தப் பளுவைப் புரட்டலாம். எவ்வாறாயினும், ஏறக்குறைய பொரு ளியல் முககியத்துவம் உள்ள இரண்டாந்தர விளைவுகள் கோவை யாக ஏற்படலாம். வரிப்பளுவை முதற்கண் ஏற்பதனால், ஒருவரது செலவு செய்யக்கூடிய வருமானம் குறைகிறது. ஆகையால், உற்பத்திக் காரணிகளுக்கும், ஏனைய பிற பண்டங்களுக்கும் உள்ள அவருடைய தேவை பாதிக்கப்படும். வேறொருவருக்கு வரிப்பளு வைப் புரட்டுவதால், பிறரின் செலவு செய்யக்கூடிய வருமானம் குறைகிறது. வரியினால் விலை உயருமானால், வாங்குவோர்தாம் வரிப்பளுவைத் தாங்கவேண்டும். அதனால் பிற பண்டங்களை வாங்குவதற்கு அவர்களுக்குக் குறைந்த வருமானமே இருக்கும். வரியைப் புரட்டுகையினால் வரி விதிக்கப்பட்ட பண்டங்கள் முன்னிலும் குறைந்த அளவே விற்குமேயாகில், அதனால் அப் பண்டத்தை உற்பத்திசெய்வதில் ஈடுபட்டிருக்கும் உற்பத்திக் காரணிகளின் மொத்த வருமானம் குறையும். இங்ஙனமாக வரி நிலைப்பாடு எங்கு நிலைகுத்தி நின்றாலும்—வரி புரட்டப்பட்டா லும் சரி, புரட்டப்படாமலிருந்தாலும் சரி—ஒரு சங்கிலித் தொடர் போன்று பொருளியல் விளைவுகள் ஏற்படுகின்றன.

பொருளாழம் நிறைந்த, 'புரட்டுகை', 'நிலைப்பாடு' என்ற கருத்துடைய சொல்லைப் பொறுக்கியெடுத்தலே நம்முடைய முதல் பிரச்சினையாகும். அதே சமயம் அக் கருத்து, ஆய்வுக்குப் பொருந்திய தாகவும் இருக்கவேண்டும். பட்டாளம்போன்ற வரியின் விளைவு களில் ஒரு பகுதியைச் செலுத்துவதற்காகவேனும் நாம் குறுகிய ஒரு விளக்கத்தை நிலைப்பாட்டுக்குத் தரலாம். வரி வசூலினால் வந்த நிதிகளை அரசாங்கம் செலவு செய்வதனால் ஏற்படும் விளைவுகளை நாம் முதற்கண் ஒதுக்குகிறோம். அச் செலவுகளினால் ஏற்பட்ட விளைவுகளைப்பற்றி நாம் இதுகாறும் வெகுவாக ஆராய்ந்தோம். வரி விதிப்பினால் ஒருவரது வருமானம் அரசாங்கத்தின் கைக்கு மாறுகிறது. இங்ஙனம் மாறுவதால் சில விளைபொருள்களின் தேவை பாதிக்கப்படுவதையும், அங்ஙனம் பாதிக்கப்படுவதனால் ஏற்படும் விளைவுகளையும் நாம் ஆராயப்போவதில்லை. ஆராய்ச்சியில் சிக்கலைத் தவிர்ப்பதற்காக நாம் இங்ஙனம் செய்கிறோம். ஆகவே,

நமக்கு எஞ்சியிருப்பதெல்லாம் வரியின் நேரடியான பளுவின் மையம் என விளக்கம் தரப்படும் நிலைப்பாடே. வரிவிதிக்கப்பட்ட ஒருவர் வேறொருவருக்கு அவ் வரியைப் புரட்டவில்லையென்றால், வரி நிலைப்பாடு அவர்மீதே படிகிறது. ஓரளவு புரட்டினால் வரியின் பளு அவர்மீதும் பிறர்மீதும் படிகின்றது. பூராவும் புரட்டினால் அவர் வரிப்பளுவிலிருந்து தப்பித்துக்கொள்கிறார்.

இவ் விளக்கத்திலுங்கூட இரு பொருள்கள் பொதிந்திருக்கின்றன. நிலைப்பாட்டை வரிவிதிக்கப்பட்டவரோடு இணைப்பதும், வரி செலுத்துகையின் நேர் டாலர் மதிப்பை வரிப்பளுவுடன் இணைப்பதும் முதலாவது பொருளாகும். வரி பூராவுமோ அதன் ஒரு பகுதியோ புரட்டப்பட்டால், குடிமகன் அரசாங்கத்திற்கு நிதியைச் (funds) செலுத்துகின்றான். ஆயினும், இப் புரட்டுகையில் வேறொருவரின் நிகர வருமானம் குறையலாம். பிந்தியவர் அரசாங்கத்திற்கு நேரிடையாக யாதொரு தொகையும் செலுத்த வில்லை. ஆயினும், அவர் பெறவேண்டிய வருமானத்தின் ஒரு பகுதியை இழக்கின்றார். நிலைப்பாட்டின் இவ்விரண்டாவது பொருள்தான் சாதாரணமாக வழக்கில் காணப்படுகின்றது. ஆயினும், வரி விதிக்கப்படாமலிருந்தால் ஏற்பட்டிராத பல மறைமுக விளைவுகளை இவ் விளக்கம் தவிர்க்கின்றது.

### வரி புரட்டுகைக்கான நிபந்தனைகள்

வரி புரட்டுகையில் விலையின் பங்கு: வரி புரட்டுகையைப் பற்றி ஆராயும்பொழுது, முதற்கண் வரி செலுத்துவோன் வரியைப் பிறருக்குப் புரட்டுவதன்மூலம் வரித் தொகையை எங்ஙனம் எவ்வித நிலைமைகளில் ஈடு செய்கிறான் என்பதை அறிவதில் நாட்டம் கொண்டுள்ளோம். வரித்தொகையில் ஒரு பகுதியைத்தான் ஈடு செய்துகொள்ள முடியும் என்றால், வரிநிலைப்பாடு அவருக்கும் பிறருக்குமிடையே பிரிக்கப்படுகின்றது. வரி புரட்டுகையின் நிபந்தனைகளை ஊன்றி ஆராயுந்தோறும், விலை பேரத்தைப் பொறுத்துத்தான் வரி புரட்டுகை ஏற்படமுடியும் என்பதைத் தெளிவாக உணர்கிறோம். ஏனெனில், நம் பொருளியலில் இதை ஈடுசெய்ய இரண்டு வழிகளே உள்ளன—ஒன்று கொடை; மற்றொன்று விலை. கொடை வாயிலாக வரியைப் புரட்டுவதற்கு வழியில்லை என்றால் விலை வாயிலாகத்தான் வரியைப் புரட்டவேண்டும். நாம் விலைகள் என்று குறிப்பிடுவதில் பண்டங்களும், சேவைகளின் விலைகளும், உற்பத்திக் காரணிகளின் விலைகளும் (கூலி, சம்பளம், வட்டி, வாரம்) அடங்கும். இவ்வாறாக ஒரு வரி புரட்டப்பட்டால் வரியைத் தன்னுள் அடக்கிய விலையும் உயரும். அதாவது, வரி புரட்டுகை இல்லாவிட்டால் என்ன விலை

இருக்குமோ அதனைக் காட்டிலும் விலை கூடுதலாக இருக்கும். ஆயினும், தரத்தில் மாறுதல் செய்வதன் வாயிலாகவும் விலையில் மாறுதலை ஏற்படுத்தலாம். விலையை மாற்றாது பண்டத்தின் தரத்தைமட்டும் மாற்றலாம் (குறைக்கலாம்).

புரட்டப்பட்ட வரிகளை விலையில் சேர்ப்பது சர்வ சாதாரண மாக மார்க்கட்டில் காணப்பெறும் ஒரு நிகழ்ச்சியாகும். இங்ஙனம் வரிகளை விலையில் அடக்குவது எளிதில் புரட்டக்கூடிய[1] கரவு வரிகளுக்கு ('hidden' taxes) எதிரான ஒரு முகாந்திரமாகும். இம் முகாந்திரம் சர்வ சாதாரணமானதும் அறிவுக்குப் பொருந்தியதும் ஆகும். பொதுவாக, மற்றவை மாறுதிருப்பின், வரி செலுத் துகையை மக்கள் உணரும்படி செய்யவேண்டும். இங்ஙனம் செய்வது மிக இன்றியமையாததாகும் என்பதற்குத் தகுந்த காரணங்கள் உள்ளன. பெட்ரோல் வரியில் அடிப்படை விலையும், சமஷ்டி அரசாங்க வரியும், மாநில அரசாங்க வரியும்—ஆகிய இவை யாவும் அடங்கி இருக்கின்றன. இதனால் பெட்ரோலை வாங்குவோன் தான் செலுத்தவேண்டிய வரியின் அளவைத் தெளிவாக உணர் கிறான். பல விற்பனை வரிகளிலும் பேரம் முடிந்த பின்பு தனியாக வரியை வசூலிப்பதற்கும் (தண்டுவதற்கும்), அல்லது வரிகள் நீங்கலாகப் பண்டங்களின் விலையை எடுத்து எழுதுவதற்கும் (posting) சட்டம் ஆக்கம் அளிக்கிறது.[2]

முற்பட்ட புரட்டுகையும் பிற்பட்ட புரட்டுகையும் : வரி புரட்டப் படாமல் இருக்கும்போது உள்ள ஒரு பண்டத்தின் விலைக்கும், வரி புரட்டப்பட்ட பின்பு உள்ள அப்பண்டத்தின் விலைக்கும் வேறுபாடு இருக்கிறது. வரியை முற்பட்டுப் புரட்டினால் அப் பண்டத்தின் விலை ஏறும். ஏனெனில், விலைதான் வரி புரட்டுகைக்கு ஏதுவான வாயிலாகும். ஒரு வரியைப் பிற்பட்டுப் புரட்டினால் பண்டத்தின் விலை இறங்கும். சில சமயங்களில், அதன்மீது பின்னர் வரி விதிக் கப்பட்டால், அவ் வரியில் ஒரு பகுதியையோ, அல்லது முழுமையை யுமோ, பண்டத்தை வாங்குவோர், தான் யாரிடமிருந்து பண்டத்தை வாங்கினாரோ அவருக்குப் பின்னர்ப் புரட்டலாம். இங்ஙனம் புரட்டுகையில் அவர் வாங்கிய விலை குறையும். உண்மை யான பிற்பட்ட வரி புரட்டுகைக்கும், வரியை முற்பட்டுப் புரட்டு கைக்கு இயலாத நிலைக்கும் வேறுபாடு கற்பிப்பது இன்றியமை யாதது. வரி புரட்டுகை முடிந்த பின்பு வரிநிலைப்பாட்டின் ஒரு கூறு வாங்குவோர்மீதும், மற்றொரு கூறு விற்போர்மீதும் இருப்பதாக வைத்துக்கொள்வோம். விற்பவரிடமிருந்து வாங்குவோருக்கு வரியின் ஒரு கூறு முன்னால் புரட்டப்பெற்றதா, அல்லது வாங்குவோ ரிடமிருந்து விற்போருக்கு ஓரளவு பின்னால் புரட்டப்பெற்றதா

என்பதை அறுதியிடுவதற்கு, அரசாங்கம் முதன்முதலில் யார்மீது வரியை விதித்தது என்று அறிவது இன்றியமையாததாகும். முதன் முதலில் விற்பவரின்மீது வரி விதிக்கப்பெற்றிருந்தால், நாம் அவ் வரியின் ஒரு பகுதி முன்னால் புரட்டப்பட்டது எனக் கொள்வோம். அங்ஙனமில்லாது முதன்முதலில் வாங்குவோரின்மீது வரி விதிக்கப்பட்டிருந்தால் வரியின் ஒரு பகுதி பின்னால் புரட்டப்பட்டதென நாம் கொள்ளவேண்டும்.

உண்மையான பிற்பட்ட புரட்டுகைக்கு இரண்டு எடுத்துக்காட்டுகள் தருவோம். அவையாவன : வேலைக்கு அமர்த்துவோர் மீது விதிக்கப்பட்ட வேலையின்மையீட்டு வரிகளும், பழைய வேளாண்மைச் சரிக்கட்டுதல் சட்டத்தின்கீழ்ப் (Agricultural Adjustment Act) பக்குவப்படுத்தப்பட்ட தொழில்களின் மீது விதிக்கப்பட்ட வரிகளுமாம். சமூகக் காப்புச் சட்டத்தின்கீழ் வேலையின்மை யீட்டு ஆதாயங்களைச் கொடுக்கிறார்கள். இவ்வாதாயங்களுக்கான நிதியை வரிகள்மூலம் தண்டுகிறார்கள். இவ் வரிகளை வேலைக்கு அமர்த்துவோர் முதன் முதலில் செலுத்துகின்றார்கள். இருந்தபோதிலும், இவ் வரிகளின் நிலைப்பாட்டின் பெரும் பகுதியும் வேலைக்கு அமர்த்துவோரை ஒறுக்கின்றது என்பது மிகவும் அருமையே. இவ் வரிகளின் ஒரு பகுதி சாதாரணமாக வேலைக்கு அமர்த்துவோரின் விளையுள்களை வாங்குவோர்மீது முற்பட்டுப் புரட்டப்படுகிறது. ஆனால், வரியின் பெரும் பகுதியும் தொழிலாளிகளின்மீது பிற்பட்டுப் புரட்டப்படுகிறது. இப் புரட்டுகை தொழிலாளிகளின் கூலியைக் குறைப்பதன் வாயிலாக நிகழ்கிறது. மார்க்கட்டு நிலவரங்கள் சுறுசுறுப்பாக இருக்கும்பொழுதும், தொழிலாளர்களின் பேரம் செய்யும் ஆற்றல் மிகுந்திருக்கும்போதும் வரியின் பெரும் பகுதியும் வாங்குவோர்மீது முற்பட்டுப் புரட்டப்படுகிறது. ஆனால், விளையுளுக்குப் போதுமான தேவை இல்லாதுபோனாலும், தொழிலாளிகளுக்குப் பேரம் செய்யும் ஆற்றல் குன்றியிருந்தாலும், வரியின் பெரும் பகுதியையும் பிற்பட்டுத் தொழிலாளர்களின்மீது புரட்டுவதே இயல்பானதாகும். இவ்வாறு வேலைக்கு அமர்த்துவோரின்மீது வரிவிதிக்கப்பட்டாலும், அவருக்கு வரியைப் புரட்டுவதற்கு இரு வழிகள் உள்ளன. வாங்குவோருக்குத் தன் விளையுளின் வாயிலாக வரியைப் புரட்டுவது ஒரு வழியாகும்; தொழிலாளர்கள், பிற காரணிகள் இவர்களுக்குக் கொடுக்கப்படும் கூலி, ஊதியம் இவற்றின் வாயிலாக வரியைப் புரட்டுவது மற்றோர் வழியாகும். இவ்விரு வழிகளில் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் எவ் வழியை அவர் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்பது அவர் விளையுளுக்கு உள்ள தேவையின் வலுவைப் பொறுத்தும், அவர் கூலியைக் குறைக்கச் செய்யும் முயற்சிகளின்

விளைவுகளைப் பொறுத்தும் இருக்கும். இவ்விரு வழிகளும் அடைபட்டிருக்குமேயானால், அவரே தான் வரிப்பளுவைத் தாங்கவேண்டும்.

1933ஆம் ஆண்டைய வேளாண்மைச் சரிக்கட்டல் சட்டத்தின் கீழ் அரசாங்கம் கொடுக்கும் ஆதாயத் தொகைகளுக்குப் பிரதியாக வேளாளர்கள் தங்கள் விளையுளின் உற்பத்தியைக் குறைப்பதாக உறுதி அளித்தனர். அரசாங்கம் இவ்வாதாயத் தொகைகளைப் பிரத்தியேக வரிகளின்மூலம் கிடைத்த தொகையினின்று தந்தது. இப் பண்டங்களைப் பதப்படுத்துவோர்மீது இவ் வரிகள் விதிக்கப் பட்டன. இவ்வாருக இவ் வரிகளை முதன்முதலில் பதப்படுத்துவோர் செலுத்தினர். பதப்படுத்தலின்மீது விதிக்கப்படும் வரிகள் பதப்படுத்தப்பட்ட விவசாய விளையுள்களை நுகர்வோர்மீது புரட்டப்படும் என்பது வரிக் கருதுகோளாகும். நுகர்வோர் நெடுங் காலம் குறைந்த விலைவாசிகளினுல் ஆதாயம் அடைந்தனர் என்பதும், அதனுல் குடியானவர்கள் பேதுற்றனர் என்பதும், குடியானவர்களுக்கு நிவாரணம் நுகர்வோர்களிடமிருந்துதான் என்பதும் இவ்விதமான ஏற்பாட்டுக்கு முகாந்தரங்களாகும். 1937-ல் வேளாண் பொருளியற் குழாம் இவ் வரிகளின் நிலைப்பாட்டைப் பற்றி ஆராய்ச்சி செய்தது. இவ்வாராய்ச்சியின் பயனுக அக் குழாம் கீழ்க்கண்ட முடிவுக்கு வந்தது :[3]

1. பண்டங்களைப் பதப்படுத்துவோர் யாரும் இறுதியில் வரிப் பளுவின் பெரும் பகுதியைத் தாங்கவில்லை.

2. பண்டங்களை விநியோகிக்கும் எவரும் இறுதியில் வரிப்பளுவின் பெரும் பகுதியைத் தாங்கவில்லை.

3. பதப்படுத்தப்பட்ட பண்டத்திற்கான தேவை ஒப்புமையில் நெகிழ்ச்சி இல்லாததாக இருக்கும்பொழுது (உ-ம்: கோதுமை, வாற்கோதுமை, பருத்தி விளையுள்கள், தானியங்கள், சிகரெட்டுகள், தாம்பூலப் புகையிலை) வரி நிலைப்பாட்டின் பெரும் பகுதியும் நுகர்வோர்மீதே விழுகிறது. பதப்படுத்தப்பட்ட பண்டங்களுக்கான தேவை ஒப்புமையில் நெகிழ்ச்சி உள்ளதாகவும், அல்லது ஒரு பிரத்தியேகக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாகவும் [உ-ம்., ஏனப்பொருள்கள், சிகார் (cigars), புகைக்கும் புகையிலை, சர்க்கரை] இருக்கும் பொழுது வரி பெருமளவில் முற்பட்டுப் புரட்டப்படுவதில்லை.

4. ஏனப்பொருள்கள் (hog products), சிகார், புகைக்கும் புகையிலை, சர்க்கரை இவற்றின்மீது விதிக்கப்பட்ட வரிகளின் பெரும் பகுதியும் பிற்பட்டுக் குடியானவர்களின்மீது புரட்டப்பட்டன.

எவ்வெத் திசைகளில் வரிகளைப் புரட்டுதல் சாத்தியம் என்பதைப் பதப்படுத்தப்பட்டவைகளின் மீது விதிக்கப்பட்ட வரிகள் தெளிவாக நிரூபிக்கின்றன. மக்கள் வரிப்பளுவில் மாற்றங்களை எதிர்க்கின்றார்கள். இவ்வெதிர்ப்பின் ஆற்றலைப் பொறுத்துத்தான் ஒரு வரி முற்பட்டு அல்லது பிற்பட்டுப் புரட்டப்படுவது இருக்கிறது. மிகை உற்பத்தியினால் விவசாய விலைகள் மிகக் குறைவாக இருந்தமை, பிற்பட்ட வரிபுரட்டுகையை எதிர்ப்பதில் குடியானவருக்குள்ள ஆற்றலின்மையைப் புலப்படுத்துகின்றது. எந்த எந்தப் பதப்படுத்தப்பட்ட பண்டங்களுக்கு நுகர்வோரின் தேவைகள் ஒப்புமையில் நெகிழ்ச்சியுடையவாக இருந்தனவோ, அவற்றின் மீது விதிக்கப்பட்ட வரிக்குப் பிற்பட்ட புரட்டுகையைக் காட்டிலும் முற்பட்ட புரட்டுகைக்கே பெருத்த எதிர்ப்பு இருந்தது. எந்தெந்தப் பண்டங்களுக்குத் தேவைகள் நெகிழ்ச்சியில்லாமல் இருந்தனவோ, அவற்றின் மீது விதிக்கப்பட்ட வரிகளின் முற்பட்ட புரட்டுகைக்குக் குறைந்த அளவிலேயே எதிர்ப்பு இருந்தது.[4]

பிற்பட்ட புரட்டுகையில் ஒரு தனி ரகம் வரி மூலதன ஆக்கம் (tax capitalization) என்பதாகும். வரி மூலதன ஆக்கம் சாதாரணமாகக் காணப்படும் நிகழ்ச்சியே யாகும். நீடித்த நுகர்வுப் பண்டங்களைப் பொறுத்தமட்டிலேயே இவ்வாறு வரி மூலதன ஆக்கம் ஏற்படுகிறது. இவ்வாறாகத் தன்னுடைய வாழ்நாள் முழுதும், ஆண்டுதோறும் அடுத்தடுத்து வரும் தொடர்பான வரிகளைக் கொடுக்கவேண்டிய நிலையும் இப் பண்டத்திற்கு ஏற்படுகிறது. ஒரு நீடித்த நுகர்வுப் பண்டத்தை வாங்கும்பொழுது, அதன்மீது எதிர்காலத்தில் விதிக்கப்படும் எல்லா வரிகளையும் பிற்பட்டுப் புரட்டவேண்டுமெனில், எதிர்காலத்தில் விதிக்கப்படும் வரிகளை மூலதனமாக்கி விலையினின்றும் மொத்தமாகக் கழிக்கவேண்டும். ஏனெனில், விலை வாயிலாகப் பின்னர் வரியைப் புரட்டுவதற்கு யாதொரு வாய்ப்பும் நேராததே இவ்வாறு செய்வதற்குக் காரணமாகும். ஒரு நீடித்த நுகர்வுப் பண்டத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகளைப் பிற்பட்டுப் புரட்டுகைக்கும், நீடித்த நுகரமுடியாத பண்டத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகளைப் பிற்பட்டுப் புரட்டுகைக்கும் உள்ள வேறுபாடு, தரப்படும் விலையினின்றும் எவ்வளவு டாலர் தொகையைக் கழிக்கவேண்டும் என்பதைப் பொறுத்ததேயாகும். பிற்பட்ட புரட்டுகை நேரும்பொழுதெல்லாம், பண்டங்களை வாங்குவோர் அரசாங்கத்திற்கு வரியைச் செலுத்துகின்றனர். ஆயினும், வரி நிலைப்பாட்டின் பளுவை விற்பவரே தாங்கவேண்டியிருக்கிறது.

நான் ஒரு நன்செய் நிலத்தை விலைக்கு வாங்குவதாக வைத்துக்கொள்வோம். எனக்கு ஆண்டுதோறும் அந் நிலத்திலிருந்து கிடைக்

கும் சராசரி வருமானம், நான் அந்நிலத்தில் செய்யும் சராசரிச் செலவு இவற்றைப் பற்றிய என் மதிப்பீடுகள் வருமாறு :

| | | (டாலரில்) |
|---|---|---|
| ஓர் ஆண்டு விளையுளின் மொத்த மதிப்பு | ... | 5,000 |
| சொத்து வரிகள் நீங்கலாக மொத்த ஆக்கச் செலவு | ... | 3,500 |
| சொத்து வரிகளைச் செலுத்துவதற்கு முன்பு உள்ள ஒரு நிகர வருமானம் | ... | 1,500 |
| ஓர் ஆண்டுக்குள்ள சொத்து வரிகள் | ... | 300 |
| நிகர வருமானம் | ... | 1,200 |

ஆகையால், இந் நிலத்தை வாங்குவதன்மூலமும், அதன்மீது மூல தனத்தை முதலீடு செய்வதன்மூலமும் ஆண்டொன்றுக்கு எனக்கு 1,200 டாலர் நிகர வருமானமாகக் கிடைக்கும். ஆண்டொன்றுக்கு 5 சதவிகிதம் வட்டி கிடைக்கக்கூடிய அளவில் என் சேமிப்புகளை முதலீடு செய்ய நான் ஆயத்தமாக இருந்தால், நான் அந் நிலத்திற்கு 24,000 டாலர் விலையாகத் தர இணங்குவேன்.[5]

அந் நிலையில் என்னுடைய ஆண்டு நிகர வருமானம் 1,200 டாலராகும். ஆகவே, இவ் வருமானம் என்னுடைய முதலீட்டில் 5 சதவிகிதமாகும். நான் அந் நிலத்திற்கு 24,000 டாலருக்கு மேல் விலை கொடுக்க இணங்கமாட்டேன். ஆண்டு நிகர வருமானம் பற்றிய என்னுடைய மதிப்பீட்டைக் கூட்டினால் அல்லது நான் எதிர்பார்க்கின்ற ஆண்டு வருமான விகிதத்தைக் குறைத்துக் கொண்டாலன்றி, நான் 24,000 டாலருக்குமேல் அந் நிலத்திற்குக் கொடுக்கமாட்டேன்.

சொத்து வரிகளே போடமாட்டார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுதுங்கூட மேற்கூறிய கணக்குப்படி ஆண்டொன்றுக்கு எனக்கு நிகர வருமானம் 1,500 டாலராக இருக்கும். ஆகவே, அந் நிலத்திற்கு 30,000 டாலர் விலை கொடுக்க எனக்குக் கட்டுபடியாகும். ஆயினும், என் முதலீட்டினின்று கிடைக்கும் வருமானம் 5 சதவிகிதமாகவே இருக்கின்றது. இவ்வாறாக ஆண்டு தோறும் 300 டாலர் சொத்துவரிகள் கொடுக்க வேண்டும் என்று மதிப்பீடு செய்ததாலேயே, நான் நிலத்திற்குத் தரவேண்டிய விலையின் தொகையும் 6,000 டாலர் குறைவாக இருக்கிறது. இவ் வரிகளை எதிர்பார்க்கவில்லையென்றால் நிலத்திற்கு 6,000 டாலர் கூடுதலாக விலை கொடுப்பதற்கு நான் இணங்குவேன். இந்த 6,000 டாலரும் வருடாந்திர வரியை மூலதன மதிப்பாக மாற்றியதால்

ஏற்பட்டதாகும்; அல்லது 300 டாலரை 0·5 ஆல் வகுத்தாலும் இத் தொகை கிடைக்கும். இவ் வரியினுல் நான் நிலத்திற்குத் தர வேண்டிய விலை 6,000 டாலர் குறைந்ததால், நான் ஆண்டு தோறும் வரியாகச் செலுத்தவேண்டிய 300 டாலரும் நிரந்தர மாக நிலத்தை விற்பவரின்மீதே புரட்டப்படுகிறது. வேறு யாரா யினும் கூடுதல் விலைக்கு நிலத்தைக் கேட்டார்களாஞல், எனக்கு இந்த விலைக்கு நிலத்தை விற்க அவர் இணங்கார். ஆனுல், எந்தக் கூடுதல் விலையும் (1) சொத்து வரிகள் நீங்கலாக ஆண்டொன்றுக்கு 1,500 டாலருக்கு மேல் நிகர வருமானம் கிடைக்கும் என்ற மதிப் பீட்டினுலோ, அல்லது (2) ஆண்டொன்றுக்கு 5 சதவிகிதத்திற்குக் குறைவாக முதலீட்டிற்கு ஊதியம் கிடைக்கும் என்பதைப் பொறுத்தோ, அல்லது (3) ஆண்டொன்றுக்கு 300 டாலருக்குக் குறைவாகவே சொத்து வரிகள் கொடுக்க வேண்டுமென்று மதிப்பீடு செய்ததாலோ, அல்லது இவை மூன்றையும் சேர்த்துக் கணக்கிட்டதாலோ ஏற்பட்டிருக்க வேண்டும். எனக்குப் பதிலாக நிலம் வாங்குவோன் இத் தொகைகளை எவ்வளவெனக் கணக்கிட் டாலும் வரி மூலதனமாக்கப்படும்; அதனுல் வரிகள் இல்லையாஞல் என்ன விலை கொடுக்கப்படுமோ அதற்குக் குறைவாகவே கொடுக் கப்படும் விலையும் இருக்கும். புதிய வரிகளை முற்பட்டுப் புரட்ட முடியுமாஞல் ஒழிய, தற்போதுள்ள நிலக்கிழவர்கள்தாம், தங்கள் நிலத்தை வாங்கியபொழுது எதிர்பாராத அல்லது வாங்கிய பின்பு விதிக்கப்பட்ட கூடுதல் வரிகளின் நிலைப்பாட்டைத் தாங்க வேண்டும்.[6]

நாம் ஓர் எளிய உதாரணத்தின் வாயிலாக வரியை மூலதன மாக ஆக்குவதை விளக்கினேம். இருந்தபோதிலும், அக் கோட் பாட்டின் பிரயோகங்கள் பரந்துபட்டவை. பல நீடித்த நுகர்வுப் பொருள்கள், தாவரச் சொத்துகள் இவற்றை வாங்கும்பொழுது மூலதன ஆக்கம் ஏற்படுகிறது. முதலீட்டுக் கடன் பத்திரங்களையும், நீடித்த முதலீட்டுக்குரிய பண்டங்களையும் வாங்கும் பொழுதும் மூலதன ஆக்கம் ஏற்படலாம்.

முதலீட்டுக் கடன் பத்திரங்களை வாங்கும்பொழுது, வரி மூலதனமாக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. ஒரு கம்பெனியின் பங்கை வாங்கும் எவரும் நாம் மேலே குறிப்பிட்ட நன்செய் நில உதாரணத்தைப்போலவே, தாம் கொடுக்கவேண்டிய விலையைத் தீர்மானிப்பார். வருடாந்தர வரிகளைக் கொடுப்பதற்கு அவருக்கு விருப்பம் இருந்தால் ஒழிய, அவர் வரியை மூலதனமாக்குவது திண் ணம். ஒரு முதலீட்டை (வருமானம் பெறுவதற்காக) வாங்கும் பொழுது இது மிகவும் தெளிவாகத் தெரிகிறது. அதனுல் அவர் ஊக

வாணிகத்திற்காக வாங்கினால் எதிர்காலத்தில் வருமானவரியின் விதிப்புள்ளவிட்டாக இருக்கும் (கம்பெனி, தனியாள் வருமானவரி) என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். எதிர்காலத்தில் பங்குகளை என்ன விலைக்கு விற்கலாம் என்பதைச் சிறப்பாகத் தீர்மானிப்பது இவ் வரிமட்டுமேயாகும்.[7]

மாநில, தல அரசாங்கக் கடன் பத்திரங்கள்[8] இவற்றிலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீது வரி விதிப்பதிலிருந்தும் விலக்கு அளிப்பதற்கு வேண்டிய ஒரு தலையாய காரணத்தை நாம் இங்குப் பரிசீலனை செய்கிறோம். அரசாங்கக் கடன்பத்திரக் கூப்பன்களுக்கு வரிவிலக்கு இருக்குமானால், வரியை மூலதனமாக்குவதுமில்லை. வரி விதிக்கப்பட்டால் இருப்பதைவிடக் கூடுதலாகவே கடன் பத்திரங் களின் மூலதன மதிப்பும் இருக்கும். பிற முதலீடுகளினின்று கிடைக் கும் வருமானத்தின்மீது வரி விதிக்கப்பட்டால், இஃது உண்மை யெனச் சிறப்பாக உணரலாம். இதனால் விலையைப் பொறுத்தவரை அரசாங்கக் கடன் பத்திரங்களுக்கு மார்க்கட்டில் பிரத்தியேக ஆதரவு தருவதாகவே கொள்ளவேண்டும். மற்றவை மாறு திருப்பின், வரிவிலக்கு அளிக்கப்படாத கடன்பத்திரங்களுக்குத் தரப்படும் வட்டியைவிடக் குறைவாகவே, வட்டி கொடுத்தாலும், வரிவிலக்களிக்கப்பட்ட அரசாங்கக் கடன் பத்திரங்களுக்கு நல்ல தேவை இருக்கும். வரிவிலக்கினால் கடன் பத்திரங்களை வெளியிடும் அரசாங்கத்தின் கருவூலத்திற்கு வட்டி சிறிது மிச்சப்பட்டாலும், இவ்விதம் வரிவிதிப்பினின்றும் விலக்கு அளிப்பது நிதிவிவகாரத் தைப் பொறுத்தவரை விரும்பத்தக்கதா என்பது பெரிய பிரச்சினை ஆகும். வருமான வரிகள் மிகவும் வளர்வீதமாகவும், அரசாங்கக் கடன் பத்திரங்களைப் பெரும்பாலும் மிகுந்த வருமானமுடைய வர்க்கத்தினர்களே வாங்கியும் இருப்பார்களானால், குறைந்த வட்டியைக் கொடுப்பதன்மூலம் அரசாங்கத்திற்கு ஏற்படும் இலாபத்தைவிட, வரிவிதிப்பினின்றும் விலக்கு அளிப்பதனால் ஏற்படும் வருமான இழப்புப் பெரிதாக இருக்கும். இவ்வுண்மையை உணர்ந்தே கடந்த 30 ஆண்டுகளில் கூட்டு அரசாங்கத்தின் கடன் பத்திரங்களுக்கு வரிவிதிப்பினின்றும் விலக்கு அளித்தமை கைவிடப் பட்டது. இங்கு அரசாங்கத்தின் கொள்கையைத் தீர்மானிப்பதில் மூலதனமாக்கப்பட்ட வரி தலையாயதாக விளங்குகிறது.

ஒரு வரி விதிக்கப்பட்ட பொழுது அதனால் மூன்று வேறுபட்ட வரிநிலைப்பாட்டு விளைவுகள் ஏற்படக்கூடிய சாத்தியக்கூற்றை முன் னரே கண்டோம். இவ் விளைவுகள் ஒன்றுக்கொன்று முற்றும் மாறு பட்டனவாக இல்லாமல் இருக்கலாம். விலையை உயர்த்துவதன் வாயிலாக இவ் வரி விற்பவரிடமிருந்து வாங்குபவருக்கு முற்பட்டுப்

புரட்டப்படலாம்; முற்பட்டுப் புரட்டுகையில் மூலதனமாக்கல் சேர வில்லை. ஏனெனில், விற்பவர் பண்டத்துக்குரிய உரிமையை விற்கும் பொழுது, அப் பண்டம் சம்பந்தமான எந்த எதிர்கால வரிப் பொறுப்பையும் ஏற்கவில்லை. விலையைக் குறைப்பதன் வாயிலாக, வரியைப் பண்டம் வாங்குபவரிடமிருந்து விற்பவருக்குப் பிற் பட்டும் புரட்டலாம். நீடித்த நுகர்வுப் பண்டங்கள் அல்லாதன வற்றையோ, அல்லது சேவைகளையோ வாங்கும்பொழுது, ஒரே வரிசெலுத்துகையின் தொகை (amount of the single tax payment) புரட்டவேண்டிய உயர்ந்தபட்சத் தொகையைத் தீர்மானிக்கிறது. ஒரு நீடித்த நுகர்வுப் பண்டம் வாங்குபவர் வரியைப் பிற்பட்டுப் புரட்ட முயல்கிறார். அவர் புரட்ட நினைக்கும் தொகையின் அளவு எதிர்காலத்தில் அதன் சொந்தக்காரர்கள் செலுத்தவேண்டிய வரிகளின் மூலதன ஆக்க மதிப்புக்குச் சரியாகும். யார்மீது முதற் கண் வரி விதிக்கப்பட்டதோ, அவர் அவ் வரியை முற்பட்டு அல்லது பிற்பட்டுப் புரட்ட முயற்சி செய்வார். வரியைப் புரட்டுவதற்கு வாயிலாக யாதொரு விலையும் இல்லையென்றால், அவர் முற்பட்டோ அல்லது பிற்பட்டோ வரியைப் புரட்ட முடியாது. அப்பொழுது வரியின் நிலைப்பாடு அவரையே சார்ந்திருக்கும். முற்பட்டு அல்லது பிற்பட்டுப் புரட்டுகைக்கு வழிகள் இருக்குமானால், புரட்டுகைக்கு எதிர்ப்பு மிகக் குறைவாக இருக்கும் வழியையே அவர் பின் பற்றுவார். வரியை எத் திசையில் புரட்டினாலும் ஏற்படக்கூடிய விளைவுகளை முன்கூட்டி அறிந்திருப்பாரேயாகில், அதுவே வரியைப் புரட்டுகைக்கு எதிர்ப்பு மிகக் குறைவாக இருக்கும் வழியை அள விடுதற்குரிய முறையாகும். ஆகவே, சில வரிகள் ஒருபோதும் புரட் டப்படவில்லை என்பதும், சில முற்பட்டும், சில பிற்பட்டும் புரட்டப் படுகின்றன என்பதும், வேறு சில வரிகளின் நிலைப்பாடு பண்டங் களை வாங்குவோருக்கும் விற்போருக்கும் இடையே பிரிக்கப்படு கிறது என்பதும் தெளிவாகும். குறுகிய காலத்தில் உள்ள மார்க் கட்டின் நிலவரமே எத் திசையில் எத்துணை வரி புரட்டப்படுகிறது என்பதை அறுதியிடும் தலையாய கருவியாகும்.

### வரி புரட்டுகை, வரி நிலைப்பாடு இவற்றைப்பற்றிய பொதுப்படையான பகுத்தாய்வு

வரி புரட்டுகையைப்பற்றிப் பொதுப்படையாக இவ்வதிகாரத் தில் நாம் ஆராய்வோம். குறிப்பிட்ட வரிகளைப் புரட்டுவதைப் பற்றிய சர்ச்சையை அவ் வரிகளைப்பற்றிக் கூறும் அதிகாரங்களில் காண்போம். தற்போதைக்கு நிகர வருமானத்தின் மீது விதிக்கப் பட்ட வரிகள், சொத்துரிமையின்மீது விதிக்கப்பட்ட வரிகள், பண் டங்களை உற்பத்தி செய்யும்பொழுது அல்லது விற்கும்பொழுது

விதிக்கப்பட்ட வரிகள் என்ற தலைப்புகளின்கீழ்ப் பொதுவாக வரிப் புரட்டுகையைப்பற்றிக் கூறுவோம்.

**நிகர வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகள்:** தனியாளின் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட வரி பொதுவாகப் புரட்டப்படுவதில்லை. உற்பத்திக் காரணிகளின் உற்பத்தித் திறனால் தனியாரின் வருமானங்கள், வரிகள் செலுத்தப்படுவதற்கு முன்பு உயர்ந்தபட்சமாக இருக்குமானால், வரியைச் செலுத்துவதற்கு முன்புள்ள வருமானங்களின்மீது விதிக்கப்படும் வரியினால் இவ் வருமானங்களை உயர்த்துவதற்கு எந்த முகாந்தரமும் இல்லை.[9] இவ் வருமானங்களை சம்பளம், கூலி, வாரம், வட்டி அல்லது இலாபத்தின்மூலம் பெறலாம். நீடித்த காலத்தில் ஒரு பரந்த பரப்பில் குறிப்பிட்ட வருமானங்களின்மீதுமட்டுமே வரியை விதித்தாலும், அல்லது ஒரு குறுகிய பரப்பின்மீது உள்ள எல்லா வருமானங்களின்மீதும் வரியை விதித்தாலும், உழைப்பு, மூலதனம் அல்லது இயற்கை வளங்கள், வரி விதிக்கப்படாத வேறு தொழில்களுக்கோ அல்லது வரி விதிக்கப்படாத வேறு நிலப்பரப்புகளுக்கோ புடைபெயரலாம். இதனால் வரி விதிக்கப்பட்ட பரப்புகளில் உழைப்பு, மூலதனம் அல்லது இயற்கை வளங்களுக்கு முட்டுப்பாடு ஏற்படலாம். இதனால் வரி செலுத்துவதற்கு முன்பு உள்ள வருமானங்களின் நிலை உயரலாம்.[10] எல்லா நிலப்பரப்புகளிலும் உள்ள எல்லா நிகர வருமானங்களின்மீதும் ஒரு தனியாள் வருமானவரியை விதிப்பதாக நாம் கொண்டால், இவ் வரியைப் புரட்டுவதற்கான சாத்தியக்கூறுகள் மிகவும் அருகியே இருக்கும்.

வரி விதிப்புக்கு முன்பு நிலவும் மார்க்கட்டு நிலவரத்தால் சில குறிப்பிட்ட வருமானங்கள் ஏற்கெனவே உச்சகட்டத்தில் இருக்கின்றன என்பதைப் பொறுத்துத்தான் இம் முடிவு இருக்கிறது. இவ்வாறு இல்லாவிடின், மொத்த வருமானத்தில் தமக்குக் கூடுதல் பங்கு வேண்டுமென்று சில வருமானத்தைப் பெறுவோர்கள் பேரம் செய்து வெற்றியும் பெறலாம். இதனால் வேறு சிலரின் வருமானம் குறையும். ஆகவே, இவ் விஷயம் பங்கீட்டைப்பற்றி மட்டும் பொறுத்ததாகும். மொத்த வருமானமும் அதன் பங்கீடும் மாறாது ஒரு தேக்க நிலையில் இருப்பதாகக் கொண்ட எடுகோள்களை இக் கூற்றுகள் சார்ந்திருக்கின்றன என்றால், ஒரு குறிப்பிட்ட கால வரையில் வருமானங்கள் ஏறுவதாக வைத்துக்கொள்வோம். இங்கு ஏறும் வருமானத்தின் பங்கீட்டை, வரியில்லாவிடில் எங்ஙனம் பங்கீடு இருக்குமோ அதனின்று வரி மாறுபடுத்தும் என்று கூறுவதற்குக் காரணம் இருக்கின்றதா? பொதுவாக வரி எல்லோரின் மீதும் விதிக்கப்படுமானால், எந்த வருமான வர்க்கத்தினருக்கும்,

வரி பேரம் செய்யும் ஆற்றலைத் தருகிறது என்று நம்புவதற்கு யாதொரு காரணமுமில்லை, ஏனெனில், வரி விதிக்கப்படாத பொழுது இவ் வர்க்கத்தினருக்கு இல்லாத பேரம் செய்யும் ஆற்றல், வரி விதிக்கப்பட்டவுடன் புதிதாக முளைக்க முடியாது. இவ்வாறாகத் தனியாட்கள் வரியைப் பிற்பட்டுப் புரட்டும் திறன் உள்ளவர்களாக இருப்பார்கள் என்று கூறுவதற்கு யாதொரு காரணமுமில்லை.

உற்பத்திக் காரணிகளின் விலைகளைப் பொதுவான தனியாள் வருமானவரி மாற்றுவதில்லை என்ற முடிபும், ஆகவே, வருமானவரி புரட்டப்படுவதில்லை என்ற முடிபும் பெரும்பான்மையான கொள்கைபற்றிய சர்ச்சைகளில் பொதிந்திருக்கின்றன. இவ்வகையான சர்ச்சைகளில் தனியாள் வருமானவரி விதிப்பு மிக உயர்வாக இருப்பதனால், விலைகள் ஏற்றப்படும் என்பதன்று முடிபு. விளையுளுக்கு உள்ள தேவையை முழுதும் பயன்படுத்தினால், காரணிகளுக்குத் தரப்படும் தொகைகள் உயரும். இக் கூடுதல் தொகைகளை விலைகளை உயர்த்துவதன்மூலம் எங்ஙனம் ஈடுசெய்ய முடியும்? இதிலுள்ள தலையாய அபாயம் உற்பத்தி முயற்சிக்கும் ஓய்வு நேரத்திற்கும் உள்ள சமநிலையை வரி மாற்றலாம் என்பதும், அதனால் வரிக்கு உட்பட்டவரை குறைந்த முயற்சி செய்யும்படி தூண்டலாம் என்பதுமேயாகும். இதனால் பொருளியலின் ஆக்கத் திறன் குறைந்து வளர்ச்சிவீதமும் குன்றலாம். ஆனால், இவ் விளைவின் சாத்தியக்கூறை நாம் எளிதில் மிகைப்படுத்தலாம். உயர்ந்த வருமானங்களைப் பெறுகிறவர்கள் சதா காலமும் குறைந்த வருமானங்களைப் பெறுகிறவர்களுடன் போட்டியிட்டுக் கொண்டிருக்கும்பொழுது, முன்னையவர் கிடைத்த உத்தியோகம் போதுமென்று வாளாவிருக்க முடியாது. தாழ்ந்த வருமானங்கள் பெறுவோர் கூடுதலாக வருமானம் பெற்றால் மிகக் களிப்பு எய்துவார்கள்.[11]

இதனால் வெளிப்பாட்டில் சுருக்கம் ஏற்பட்டுக் காரணிகளுக்குக் கூடுதல் ஊதியம் தரும்படி நேரிடலாம். மொத்தப் பணத்தேவை ஒரே நிலையில் இருக்கவேண்டும் என்றால், விலைகளும் உயரலாம். நெடுங்காலத்தில் விளையுள்களை வாங்குவோருக்கு ஓரளவு வரி புரட்டுகை ஏற்படுமென்று துணியலாம். வரியைச் செலுத்துவதற்கு முன்புள்ள வருமானத்தைப் பெருக்குவதற்கு யாதொரு கருவியையும் தனியார் வருமானவரி தராததால், வரியின் திணிப்பு ஆக்கச் செலவுகளைப் பாதிக்காதெனவும், அதனால் விலையுயர்வு ஏற்படாதெனவும் நாம் முடிபாகக் கூறலாம்.[12] அதனால் இவ்வாறு உரைப்பதில் வரித்திணிப்புக்கு முன்பாகவே உத்தம விலை - கணியம்

உறவுகள் (optimum price-quantity relations) நடைமுறையில் இருக்கின்றன என்பதை நினைவில் இருத்தவேண்டும். அத்துடன் காரணிகளின் ஊதியத்தில் உத்தமப் பங்கீடு (optimum distribution of factor payments) இருக்கிறதென்பதையும் நினைவில் இருத்த வேண்டும். வரி விதிப்பதற்கு முன்புள்ள இலாபத்தை அதிகரிப் பதற்கு இதுவரை பயன்படுத்தப்படாத சாத்தியக்கூறு இருந்தாலும், மொத்த ஊதியத்தில் தன் பங்கை அதிகரிப்பதற்குரிய ஆற்றல் ஒரு காரணிக்கு இருந்தும், அவ்வாற்றலை இதுகாறும் பயன்படுத் தாமல் இருந்தாலும், அக் கம்பெனியோ அல்லது காரணியோ இது வரை பயன்படுத்தாத இச் சாத்தியக்கூறையும் ஆற்றலையும் பயன் படுத்திக்கொள்ளும்படி ஊக்குவிக்கலாம்.

ஒரு வியாபாரக் கம்பெனியின் நிகர வருமானத்தின்மீது திணிக்கப்பட்ட ஒரு வரியைப் புரட்டுகைபற்றி இப்பொழுது ஆராய்வோம்.[13] ஒரு தொழில் நிறுவனத்தின் இலாபம், வெளிப்பாட்டின் அளவு, விலை இவற்றைப் பாதிக்கக்கூடிய காரணிகளின் பரிசீலனையை நாம் தொடர்ந்து நடத்த வேண் டும். தேவை, போட்டி இவற்றின் நிலைகளைக் கருத்தில் கொண்டு, ஒரு நிறுவனம் வரித்திணிப்புக்கு முன்பு தன் நிகர வருமானம் உச்சகட்டத்தை அடையவேண்டும் என்று எண்ணு வதாக வைத்துக்கொள்ளலாம். வரித்திணிப்புக்குப் பின்பு, விலைக்கும் கணியத்துக்கும் வேறோர் உறவு ஏற்பட்டால் (different price-quantity relationship) வருமானமும் உச்சகட்டத்தை எய்துமா என்பது கேள்வி. அங்ஙனமானால் வரி புரட்டுகை ஏற்படும்.

இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை ஆக்கச் செலவும் சமமாக இருக்குமிடத்து, ஒரு நிறுவனத்தின் நிகர வருமானம் உச்சகட்டத் தில் இருக்கும். ஏனெனில், அங்ஙனம் சமமாக இருக்கும்பொழுது தான் வெளிப்பாடும் விலையும் உச்சகட்டத்தில் இருக்கும். வெளிப்பாட்டை விற்பது அதிகரிக்குந்தோறும் மொத்த வருவா யிலும் கூடுதல் ஏற்படும். இக் கூடுதல் வருவாயே இறுதிநிலை வருவாய் எனப்படும். வெளிப்பாடு அதிகரிக்குந்தோறும் மொத்த ஆக்கச் செலவில் கூடுதல் ஏற்படும். இக் கூடுதல் ஆக்கச் செலவே இறுதிநிலை ஆக்கச் செலவு எனப்படும். ஆகவே நிகர வருமானம் உச்சத்தில் இருக்கவேண்டுமென்றால், ஒரு நிறுவனம், எல்லா அலகு களையும் இறுதி ஆக்கச் செலவைக் காட்டிலும் கூடுதலான இறுதி நிலை வருவாயை அடையும்படி விற்கவேண்டும் என்பதும், இறுதி நிலை வருவாயைக் காட்டிலும் கூடுதலான இறுதிநிலை ஆக்கச் செலவு இருக்கும்படி ஓர் அலகையும் விற்கக்கூடாதென்பதும்

பெறப்படும். 24ஆம் அட்டவணையில் குறிப்பிட்டாங்கு இறுதிநிலை ஆக்கச் செலவு, வருவாய், இலாபம் இவ்வற்றைக் கொண்ட ஒரு கற்பனையான நிறுவனத்தை எடுத்துக்காட்டாகக் கொள்வோம். (நிலைத்த ஆக்கச் செலவுகளைப் புறக்கணித்தால்)· 200ஆவது அலகு நிகர வருமானத்திற்கு 7 டாலரைக் கூட்டுகிறது; 300ஆவது அலகு 4·67 டாலரையும், 400ஆவது அலகு 2·33 டாலரையும், 500ஆவது அலகு சூனியத்தையும் நிகரவருமானத்தோடு கூட்டுகிறது. ஐந்நூறு அலகுகளை 6 டாலர் வீதம் விலை வைத்து விற்பதில் நிகர வருமானம் உச்சநிலையை எய்துகிறது.

## அட்டவணை—24

### ஒரு கற்பனையான நிறுவனத்தின் இறுதிநிலை ஆக்கச் செலவு, இறுதிநிலை வருவாய், நிகர வருமானம்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| வெளிப்பாட்டின் கணியம் | ஓர் அலகின் தேவை விலை | மொத்த வருவாய் | இறுதிநிலை வருவாய் | இறுதிநிலை ஆக்கச் செலவு | மொத்த நிகர வருமானத்தில் இறுதிநிலை கூடுதல் |
| | (டாலரில்) | (டாலரில்) | (டாலரில்) | (டாலரில்) | (டாலரில்) |
| 100 | 10 | 1,000 | 10 | | |
| 200 | 9 | 1,800 | 8 | 1·00 | 7·00 |
| 300 | 8 | 2,400 | 6 | 1·33 | 4·67 |
| 400 | 7 | 2,800 | 4 | 1·67 | 2·33 |
| 500 | 6 | 3,000 | 2 | 2·00 | 0·00 |
| 600 | 5 | 3,000 | 0 | 2·33 | —2·33 |
| 700 | 4 | 2,800 | —2 | 2·67 | —4·67 |
| 800 | 3 | 2,400 | —4 | 3·00 | —7·00 |
| 900 | 2 | 1,800 | —6 | 3·33 | —9·33 |
| 1,000 | 1 | 1,000 | —8 | 3·67 | —11·67 |

* நூறுநூறு அலகுகளாக இறுதிநிலைக் கூடுதல்கள் ஏற்பட்டால், அவற்றின் சராசரி அலகின் வருவாய் அல்லது ஆக்கச் செலவு.

நிகர வருமானத்தின்மீது பத்து சதவிகிதம் வீதம் வரி விதிக்கப் படுவதாக நாம் வைத்துக்கொள்வோம். வரி செலுத்திய பின்பு நிகர வருமானத்தில் ஏற்பட்ட இறுதிநிலைக் கூடுதல்கள் கீழ்வருமாறு இருக்கும் :

| வெளிப்பாட்டின் அளவு | இறுதிநிலை வரி* (டாலரில்) | வரியைச் செலுத்திய பின்பு நிகர வருமானத்திற்கு ஏற் பட்ட இறுதிநிலைக் கூடுதல் |
|---|---|---|
| 200 | ·70 | 6·30 |
| 300 | ·47 | 4·20 |
| 400 | ·23 | 2·10 |
| 500 | 0 | 0 |

* 24ஆம் அட்டவணையில் 6 ஆம் காளத்தில் உள்ளதில் 10 சதவிகிதம் அல்லது இறுதிநிலை அலகை விற்பதனால் மொத்த வரியின் தொகை எவ்வளவு அதிகரிக்கிறதென்பது.

இறுதிக் காளத்துடன் 24ஆம் அட்டவணையை ஒப்பிட்டால், நிகர வருமானத்தின் கூடுதல்கள் வரியினால் குறைகின்றன என்பது புலனாகிறது. ஆயினும், நாம் சிறப்பாகக் கவனிக்கவேண்டியது என்னவெனில், ஐந்நூறு அலகுகள் வெளிப்பாடு ஏற்படும்பொழுது, வரியைச் செலுத்திய பின்னரும் வருமானம் உச்சநிலையில் (அல்லது வரியினால் ஏற்பட்ட இழப்பு மிகச் சொற்பமே) இருக்கிறது என் பதே. வெளிப்பாட்டைக் குறைப்பதன் வாயிலாக நிறுவனம் விலை யைக் கூட்டலாம். ஆயினும், விலையைக் கூட்டுவதனால் அதன் நிகர வருமானமும் குறையும். இதனால் அதன் நிகர வருமானம் மார்க்கட்டில் எவ்வளவு உச்சத்தில் இருக்கலாமோ அதற்குக் குறைவாகவே வரி செலுத்துவதற்கு முன்பும், வரி செலுத் திய பின்பும் இருக்கும். நிகர வருமானவரிகள் ஒரு கார்ப்பரேஷ னின் ஆக்கச் செலவில் அடங்கும் எனவும், இவ் வரிகள் விலையுடன் கூட்டப்படும் எனவும், அதனால் வரியில் ஒரு பகுதியாவது புரட்டப் படும் எனவும் பன்னிப்பன்னி பேசப்படுகின்றன. வரியை ஆக்கச் செலவின் ஒரு கூறாக அடக்கலாமாயினும், இலாபத்தை உச்சநிலைக் குக் கொணரும் விலை - கணியம் உறவு (price-quantity relationship) மாறாது ஒரேபடியாக இருக்கும். இவ்வாறாக ஒரு நிறுவனம் தொடர்ந்து தன் நிகர வருமானத்தை உச்சநிலையில் வைக்கும் படியான வகையில் இயங்குமானால், விலைக்கும் கணியத்துக்கும் உள்ள உறவும் மாறாது; வரியும் புரட்டப்படமாட்டாது. மேல்

விவரித்ததைக் கீழ்வருமாறு சரிபார்க்கலாம். நிகர வருமானத்தின் மீது இறுதிநிலை வரிவீதம் 100 சதவிகிதத்திற்குக் குறைவாக இருக்கும்வரை, வரி செலுத்துவதற்கு முன்பு நிலவிய உச்ச நிகர வருமானம் வரிகளைச் செலுத்திய பின்பும் உச்ச நிகர வரு மானத்தைத் தரும்.

குறுகிய காலத்தில் தேவையும் பிற ஆக்கச் செலவுகளும் குறிப்பிட்ட அளவு இருக்கின்றன எனவும், இலாபம் உச்சநிலையில் இருப்பதாகவும் கொண்டால், தொழில் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட வரியைப் புரட்ட முடியாது. வரியால் உச்ச நிகர வருமானம் குறைகிறது. வரியின் நிலைப்பாடு நிறுவனத்தின் நிகர வருமானத்திற்கு உரியவர்களான முதலாளிகள், கூட்டுப் பங்கினர் (partners) அல்லது பங்குதாரர்கள்மீது விழுகிறது. நெடுங் காலத்தில் வரியினால் தேவை அல்லது ஆக்கச் செலவில் ஏற்படாத எந்த மாறுதலும் இம் முடிவை மாற்றாது. பின்னொருகால் 24ஆம் அட்டவணையில் 2ஆவது அல்லது 3ஆவது காளங்களில் குறிப்பிட்ட புள்ளித் தொகைகள் (வரியல்லாத பிற காரணங்களுக்காக) மாறு மென்றால், மேற்கூறிய பகுத்தாய்வு தொடர்ந்துபொருந்துவதாகும். உச்ச இலாபத்தைத் தரக்கூடிய விலை வெளிப்பாட்டு உறவு மாற லாம். ஆயினும், இவ்வுறவு, வரியில்லாதிருந்தால் இருக்கும் உறவி னின்றும் வரி தொடர்ந்திருப்பதனாலேயே சிறிதும் வேறுபட்ட தாக இருக்காது.

இலாபத்தைப் பெறுவோர்கள்மீதே வரி நிலைப்பாடு இருக்கு மென்றால், நெடுங்காலத்தில் நிறுவனத்தின் தேவைப்பட்டியலில் (demand schedule) மாறுதல் நேரலாம். வரியைச் செலுத்திய பிறகு உள்ள இலாபம் போதுமானதாக இல்லாததால், சில நிறு வனங்கள் மார்க்கட்டிலிருந்து விரட்டப்படலாம். பாக்கியுள்ள நிறுவனங்கள் கூடுதலான கணியங்களை அதே விலைக்கோ அல்லது அதே கணியங்களைக் கூடுதலான விலைக்கோ விற்க முடியும். இங்கு நிகர வருமானத்திற்கு உரியவர்கள், ஒரு குறிப்பிட்ட காலவரையில், வரித்திணிப்பு ஏற்பட்டவுடன் முன்னைவிடச் சிறிது குறைந்த இலாபத்தைப் பெற்றார்கள் என்பதையும், இவ்விழப்பையும் ஈடு செய்து உச்சலாபம் பெறுவதற்கான நிலைமை வரியால் ஏற்பட்ட தென்பதையும், நாம் தெரிந்து கொள்ள வேண்டும். தொழிலில் ஏற்பட்ட மாறுதலின் விளைவாக விலைகள் ஏறியதும், அதனால் வரி முழுமையோ அல்லது அதன் ஒரு பகுதியோ புரட்டப் படக்கூடியதுமான நிலை இப்பொழுது ஏற்படுகிறது. ஆகவே, ஒரு காலவரையில் வரி மறைமுகமாகப் புரட்டப்பட்டது என்பது புலனாகும்.

நெடுங்காலத்தில் கார்ப்பரேஷன் வரிகள் புரட்டப்படுகின்றன என்பதற்குச் சான்றுவது: 1927-லிருந்து பொறிவழியாக்கக் கார்ப்பரேஷன்களில் (manufacturing corporation) முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தின்மீது வரிகளைச் செலுத்தியபின்பு, கிடைத்த ஊதியம் (return) மாறாது நிலையாயிருந்தது என்பதை 1927-லிருந்து 1952-க்கு இடைப்பட்ட காலத்தில் வரியின் பயனுள்ள விகிதம் (effective rate) 11·7 சதவிகிதத்திலிருந்து 54·6 சதவிகிதமாகக் கூடியிருந்தாலும், வாணிகச் சுழல் மாறுதல்களை அகற்றிவிட்டால் இவ்வுண்மை காணப்படுகிறதென்று லெர்னரும், ஹென்டிரிக்ஸனும்[14] கண்டனர். இருந்தாலும், இம் முடிவை ஓரளவு எச்சரிக்கையோடுதான் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏனெனில், இவ்வாசிரியர்கள் சுட்டிக்காட்டுவது போன்று, அதே காலவரையில் வரிவீதத்தில் உயர்வைக் காட்டிலும் வேறு பல மாறுதல்களும் ஏற்பட்டன. தொழில்நுட்ப அபிவிருத்திகளால் (technological improvements) மூலதன முதலீடு செய்த ஒவ்வோர் அலகுக்கும் பெருத்த அளவில் வெளிப்பாடு பெருகியது முதலாவது மாறுதலாகும். இரண்டாம் உலகப் போர் நிகழ்ந்து கொண்டிருந்தபொழுதும், அதன் பின்பும் தொடர்ந்து செழுமை நிலை நிலவியதால் எந்திர உற்பத்தித் திறனை வெகுவாகப் பயன்படுத்தியது இரண்டாவது மாறுதலாகும். முதலீடு, தொடர்ந்து பூர்வ ஆக்கச் செலவில் (original cost) நடைபெற்றதனாலும், தற்போதைய டாலர் கணக்கில் இலாபம் மதிப்பிடப்பெற்றதனாலும்] விலைவீக்கம் (price inflation) ஏற்பட்டது. இவ்வாறான முதலீட்டின்மீது கிடைத்த ஊதியம் அதிகரித்தது மூன்றாவது மாறுதலாகும். வரி விதிப்பினால் இலாபம் பாதிக்கப்படும். இவ்விதம் இலாபம் பாதிக்கப்படுவதைத் தடுப்பதற்கு முதலீடு செய்யப்பட்ட ஒவ்வொரு டாலர்மீதும் கிடைக்கும் இலாபத்தை உயர்த்தவேண்டியதாயிற்று. இவ்வுயர்வும், நிறுவனம் ஆக்கச் செலவைக் குறைக்கும் நுட்பவினை முறைகளைக் கையாண்டதன்மூலம் ஏற்பட்டது. வரியைப் புரட்ட முடியாமையினால் இவ்வாறு எல்லாம் நிகழ்ந்ததென்று முதல் விளக்கம் தெரிவிக்கின்றது. இலாபத்தின்மீது விதிக்கப்பட்ட வரி விகிதங்களின் ஏற்றத்தைச் சமன்செய்வதற்கு, இலாபத்தின்மீது வரி விதிப்பதற்கு முன்பே, இலாபத்தில் போதிய அளவு பெருக்கம் ஏற்படுவதற்கு அதிர்ஷ்டவசமான சூழ்நிலைகள் (fortunate circumstances) துணைசெய்தன என்று இரண்டாம், மூன்றும் விளக்கங்கள் கூறுகின்றன. அதே சமயம் ஒரு வரியைப் புரட்டக்கூடிய சாத்தியமான ஓர் ஆற்றல் மிக்க தேவை ஏற்பட்ட சூழ்நிலைகளையும் இரண்டாவது விளக்கம் சுட்டுகிறது. முதலீட்டிலிருந்து கிடைக்கும் ஊதி

யம் ஒரேபடித்தாக மாறுதிருப்பதால் வரி முற்றும் புரட்டப்படு கிறது என்று முடிவுகட்டுவது அவசரப் புத்தியைக் காண்பிப்ப தாகும். கார்ப்பரேஷன் வரிகள் ஏறியிருக்காவிடில், தற்பொழுது விலைகளும் இலாபங்களும் எந்த அளவில் இருக்கும் என்பதை அறி யாமையால் அவ்விதப் பொதுமையைச் (generalization)—அதா வது, வரி புரட்டப்படுகின்றது என்று—செய்வது இயலாததாகும். இருப்பினும், நெடுங்காலத்தில் வரியைப் புரட்டக்கூடிய சர்த்தியக் கூறு கருதுகோள் அளவிலாது இருப்பதால், தொடர்ந்து நெடுங் காலம் மிகவும் செழுமையாக இருந்தால் ஓரளவு வரி புரட்டுகை ஏற்பட்டிருக்கக்கூடும் என்ற முடிவுக்கு வராமலிருப்பது சிரமமான காரியமே!

2. சொத்துரிமையின்மீது விதிக்கப்பட்ட வரிகள் : இவ்வகையில் தலையாய வரி தாவரச் சொத்தின்மீதும், ஆளைப்பற்றிய சொத் தின்மீதும் (personal property) விதிக்கப்படும் தல வரியாகும். இவ்வகையில் உரிமங்களும் (licences), பெர்மிட்டுகளும், சொத்துப யோகத்தின்மீது விதிக்கப்படும் வேறு சில்லறை வரிகளும் அடங்கும். நுகர்வுக்குப் பயன்படுத்தப்படும் நீடித்த சொத்தின் மீது ஆண்டுதோறும் வரிவிதித்தால், அதைப் புரட்ட முடியாது. அச் சொத்தை வாங்கும்பொழுது வரியை மூலதனமாக ஆக்கிப் பிற்பட்டுப் புரட்ட முடியும். இதற்குக் காரணம் வரியைப் புரட்டுகைக்கு ஏதுவாக மீண்டும் மீண்டும் செலுத்தப்படும் வாயி லான விலையின்மையே. நீடித்த நுகர்வு சொத்துக்கு உதாரணம், வீட்டுச் சொந்தக்காரன் தன் வீட்டிலேயே குடியிருப்பது. மோட் டார்கார் மீது விதிக்கப்படும் வரியும், மீண்டும் மீண்டும் செலுத்தப் படும் பதிவுக் கட்டணமும் இத்தன்மையதே. நுகர்வுக்காகப் பயன் படுத்தப்படும் சொத்தின் மீது விதிக்கப்படும் வரியின் தொகை எத் துணை இருப்பினும், அச் சொத்தை வாங்கியபொழுது அவ் வரியை எதிர்பார்த்து மூலதனமாக ஆக்காவிடில், அவ்வரி சொத்துக்கு உடையவனின்மீதே சார்கிறது; பிறர்மீது புரட்டப்படு வதில்லை.

பண்டங்களை உற்பத்தி செய்யும்பொழுதும், விற்பனை செய்யும் பொழுதும் சொத்துவரிகள் விதிக்கப்படுவது வேறு வகையானது. ஏனெனில், வரியைப் புரட்டுவதற்கான வாய்ப்புகள் மீண்டும் மீண்டும் ஏற்படுகின்றன. அவ்விதமான வரியொன்று நிலைத்த ஆக்கச் செலவின் இயல்பினதாக இருக்குமானால், அதாவது, ஒரு கட்டடம், எந்திரம் அல்லது ஆலின் சொந்தப் பண்டங்கள் (fixtures) இவற்றின்மீது விதிக்கப்படும். வரித்தொகையின் அளவு

குறுங்காலத்தில் அவற்றின் விற்பனைகளில் ஏற்படும் மாறுதல்களைச் சாராது தனித்தியங்குவதாகும். [விற்பனைகளுக்குத் தக்கவாறு கையிருப்புப் பண்டங்கள் மாறுகின்றன என்று கொண்டால் கையிருப்புப் பண்டங்களின் (inventory) மீது விதிக்கப்படும் சொத்து வரி நிலைத்த ஆக்கச் செலவு ஆகாது.] தன்னுடைய ஆலைத் திறனுக்கு உட்பட்ட உச்ச லாபம் ஏற்படத்தக்கவாறு விலைக்கும் கணியத்துக்கும் உள்ள ஓர் உறவைத் தெரிந்தெடுக்க ஒரு நிறுவனம் முனைந்தால், எங்கு இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை ஆக்கச் செலவும் சமமாக இருக்கின்றதோ, அங்கு அந்த உறவு முறையோடு கூடிய ஆலைத் திறனைத் தெரிந்தெடுக்கும். ஆனால், நிலைத்த ஆக்கச் செலவுகள் வெளிப்பாட்டின் முதல் அலகிற்குப் பின்பு இறுதி நிலை ஆக்கச் செலவுகளைப் பாதிப்பதில்லை. மேலும், வரி விதிப்பதற்கு முன்பு உச்ச லாபத்தை விளைவிக்கும் விலைக்கும் கணியத்துக்குமுள்ள உறவு வரிவிதிப்பிற்குப் பின்பும் உச்ச லாபத்தை விளைவிக்கும். ஆகையால், இவ்வாறு வரியினால் மொத்த ஆக்கச் செலவுகள் கூடினாலும், திட்டவட்டமாக உச்ச லாபத்தை அடைவது என்ற கொள்கையைக் கடைப்பிடித்தால், குறுகிய காலத்தில் வரியைப் புரட்ட முடியாதென நாம் முடிவுகட்டுகிறோம். ஆயினும், சாதாரணத் தொழில் முறையின்படி ஓரளவு வரி புரட்டப்படலாம் என்பதற்கான சாத்தியக்கூறு உண்மையில் இருக்கிறது. உற்பத்தியின் மாறுகின்ற ஆக்கச் செலவுகளுடன் நிலைத்த ஆக்கச் செலவுகளை ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் சேர்ப்பது நிறுவனங்களிடையே பரவலாகக் காணப்படும் பழக்கமாகும். இவ்விதமாக வெளிப்பாட்டின் உற்பத்திப் பருமனுக்கேற்ப நிலைத்த ஆக்கச் செலவு மாறுவதாகக் கொள்ளப்படுகின்றது. இங்ஙனம் செய்தால் இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை ஆக்கச் செலவும் சமனாக உள்ள புள்ளி, ஒரு குறைந்த வெளிப்பாட்டிற்கு உயர்ந்த விலையை நிர்ணயிப்பதன்மூலம் உச்ச லாபத்தைப் பெறுவதாகக் காட்டும். அப்பொழுது முற்பட்ட புரட்டுகை நேரிடக்கூடும். வரியில் எவ்வளவு புரட்டப்படுகிறதென்பது எத் திசையில் தப்புக் கணக்கு (miscalculation) போடப்பட்டிருக்கிறது என்பதைப் பொறுத்ததாகும். நிலைத்த ஆக்கச் செலவுகளை மாறும் ஆக்கச் செலவுகளாகக் கொண்டால் அது உச்ச லாபம் ஏற்படுகின்ற புள்ளியை, தவறாகக் கணக்கிடுவதாகும். வரிவிதிப்பினால் இறுதிநிலை ஆக்கச் செலவுகள் கூடுவதும் இத் தப்புக் கணக்கில் அடங்கும். ஆக்கச் செலவுகளைத் தவறாகக் கையாண்டாலும் அல்லது தவறாகத் தேவையை மதிப்பிட்டாலும் இலாபத்தை உச்சமாக்குவது என்ற நம் எடுகோளுடன் முரண்பாடு ஏற்படுகிறது. இவ்வெடுகோளை விட்டுவிட்டால், புரட்டுகையைப்பற்றிய வேறொரு வகையான பகுத்தாய்வு தேவைப்படுகிறது.

ஆயினும், நெடுங்காலத்தில் நிலைத்த ஆக்கச் செலவுகளைப் பாதிக்கும் சொத்து வரிகள், கார்ப்பரேஷன் வருமான வரியைப் போன்றே ஓரளவு புரட்டக்கூடியன. நிலைத்த ஆக்கச் செலவு களில் ஏற்றம் ஏற்படுமானால், நிறுவனத்தின் உண்மையான ஆக்கச் செலவுகளிலும் ஏற்றம் ஏற்படும். வரிகளைச் செலுத்திய பின்பு இருக்கும் இலாபம், தொழிலைத் தொடர்ந்து நடத்துவதற்குப் போதுமானதாக இல்லாவிடில், இறுதியில் சில நிறுவனங்கள் மார்க்கெட்டைவிட்டு மறைந்தொழியும்; விளையுளுக்கு உள்ள மொத்தப் பணத்தேவை நிலையானது என்று வைத்துக்கொண்டால், எஞ்சியுள்ள நிறுவனங்களைப் பொறுத்தவரை அவற்றின் பண்டங்களுக்கான தேவை கூடுதலாகவோ, மிகவும் கூடுத லாகவோ இருக்கும். இதனால் எஞ்சியுள்ள நிறுவனங்கள் தங்கள் விலையை உயர்த்தலாம். சில நிறுவனங்கள் உற்பத்தியாளர்கள் செலுத்திய வரிகளைத் தங்கள் பண்டங்களை வாங்குவோரிடமிருந்து ஈடுசெய்து கொள்ளவும் முடியும்; நெடுங்காலத்தில் வரியில் எவ்வளவு முற்பட்டதாகப் புரட்டப்படலாமென்பது பலவகைக் காரணிகளைப் பொறுத்ததாகும். இக் காரணிகளில் தேவை நெகிழ்ச் சியும் (elasticity of demand), ஆக்கச் செலவு நெகிழ்ச்சியும் (elasticity of cost) அடங்கும்.[15]

3. பண்டங்கள் உற்பத்தி அல்லது பண்டங்கள் விற்பனை ஆகிய வற்றின்மீது விதிக்கப்படும் வரிகள்: இவ்வகையில் விற்பனை வரிகளும் ஆயத்தீர்வைகளும் அடங்கும். உற்பத்தி அல்லது விற்பனையின் பொழுதுமட்டும் ஒரே ஒரு முறை இவ் வரி விதிக்கப்படுகின்றது. ஆகவே, நம்முடைய பகுத்தாய்வில் மூலதனமாக்கல் அடங்காது. ஆயினும், வரியை முற்பட்டு அல்லது பிற்பட்டுப் புரட்டுவது சாத் தியமே.

பகுத்தாய்வுக்கு நாம் எடுத்துக்கொண்ட அலகு தனியாள் தொழில் நிறுவனம் ஆகும். இந் நிறுவனத்தின்மீது முதன்முதல் விதிக்கப்படும் வரி ஒறுக்கிறது. பண்டங்களின் விலை, அவற்றை உற்பத்தி செய்யும் கணியம் ஆகியவற்றைத் தீர்மானிப்பதும் அத் தனியாள் நிறுவனமே. நிறுவனத்திற்குப் புறம்பாகப் பண்டத் திற்குள்ள தேவை தீர்மானிக்கப்படுகிறது என்றும், ஆக்கச் செலவு பெரும்பாலும் புறத்தோரால் நிர்ணயிக்கப்படும் காரணிகளின் விலைகளால் பாதிக்கப்படுகிறது என்றும், நிறுவனத்தின் குறிக்கோள் உச்ச லாபத்தைப் பெறுவது என்றும் நாம் வைத்துக் கொள்வோம்; இங்கு நாம் நிறைகுறைப் போட்டியை வரிப்படம் வரைவதற்கு உதாரணமாக எடுத்துக்கொள்வோம். நிறைகுறைப் போட்டியில் பண்டங்களை விற்போர் அல்லது உற்பத்தி செய்வோர் இவர்களின்

தொகை மிகக் குறைவாக இருப்பதால், அவர்களில் யாரேனும் ஒருவர் தம் வெளிப்பாட்டின் அளவில் செய்யும் மாறுதல் அவர் பெறும் விலையைப் பாதிக்கும்.[16] உற்பத்தி செய்யப்படும் அல்லது விற்கப்படும் ஒவ்வோர் அலகின்மீதும் நிலைத்த வீதத்தில் ஒரு தனிப்பயன் (specific tax) விதிக்கப்படுகிறதென்று நாம் வைத்துக் கொள்வோம். ஒவ்வோர் அலகின் விலையிலும் ஒரு நிலைத்த சதவிகிதத்தை ஒரு பெறுமான விகிதவரி (ad valorem duty) எடுத்துக் கொள்ளும். நிறுவனத்தின் தேவை வளைகோடு கீழ்நோக்கிச் சரிவாகச் செல்லுமானால், பெருத்த அளவு. வெளிப்பாட்டினால் ஒவ்வோர் அலகின் விலையும் குறையும். ஆகையால், ஒவ்வோர் அலகிற்கும் குறைந்த அளவு டாலர்களே வரி வருவாயாகக் கிடைக்கும்.

தன்னுடைய நிகர வருவாயை உச்ச நிலைக்குக் கொணர ஒரு நிறுவனம் விழைந்தால் அஃது இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை ஆக்கச் செலவும் சமனாக இருக்கும் வரையில் பண்டங்களை உற்பத்தி செய்யவேண்டும். அப்பொழுது ஒவ்வோர் அலகினாலும் மொத்த ஆக்கச் செலவு அதிகரிப்பதைக் காட்டிலும், ஒவ்வோர் அலகை விற்பதன்மூலம் கூடுதலாகவே மொத்த வருவாய் அதிகரிக்கும். அந் நிறுவனம் இந்தக் கணியத்திற்கு மேற்பட்டு யாதோர் அலகையும் உற்பத்தி செய்யாது. வரிப்படத்தில் இக் கணியம் 500 அலகாகும். ஏனெனில், வரி செலுத்துவதற்கு முன்பு உள்ள இறுதிநிலை ஆக்கச் செலவு $MC_1$ ஆகும். $DD'$ என்ற தேவை வளைகோட்டிலிருந்து பெறும் இறுதிநிலை வருவாய் $MR$ ஆகும். வரிவீதம் அலகொன்றுக்கு ஒரு டாலராம். இவ் வரியை $MC_1$ உடன் சேர்த்தால், நாம் ஒரு புதிய இறுதிநிலை ஆக்கச் செலவான $MC_2$ ஐப் பெறுகிறோம். இப்பொழுது புதிய சமநிலை வெளிப்பாட்டின் கணியம் 500 அலகுகளுக்கும் குறைவு (சுமார் 457 அலகுகள்). சமநிலை விலையும் $P_1$லிருந்து $P_2$ ஆக (6 டாலரிலிருந்து 6·43 டாலராக) ஏறியிருக்கிறது. முந்திய ஆக்கச் செலவுகளுடன் வரியைக் கூட்டியதால் விளைந்த புதிய சமநிலைக்கு நிறுவனம் தன்னை ஆயத்தம் செய்து கொள்ளும்பொழுது வரி நிலைப்பாட்டுக்கு என்ன ஏற்பட்டதென்பதை நாம் இப்பொழுது காண்போம்.

விலை ஏறியிருக்கிறது என்றாலும், வரித் தொகையைவிடக் குறைவாகவே விலை ஏறியிருக்கிறதென்பதை நாம் முதலில் குறிப்பிட வேண்டும். விற்பனையின் கணியமும் குறைந்திருக்கிறது என்பதையும் நாம் குறிப்பிடவேண்டும். இறுதியாகப் புதிய சமநிலையில் வரி நீங்கலாக உள்ள ஆக்கச் செலவு ($MC_1$) 500 அலகுகள் வெளிப்பாடு ஏற்பட்டபொழுது இருந்ததைக்காட்டிலும் குறை

வாகவே இருக்கிறது. வரியின் முதல் தாக்கு, பண்டத்தை விற்ப வரின்மீது விழுந்தது. அவர் வரியை முன்பணமாக அரசாங்கத்திற் குத் தந்தார் எனலாம். பின்னர் விலையை ஏற்றுவதன்மூலம் தன் விளையுளை வாங்குபவர்மீது அவர் வரியைப் புரட்ட, தன்னால் இயன்ற அளவு முற்பட்டார். ஆனால், வரித்தொகை பூராவையும் விலையோடு கூட்ட முனைந்தால், தேவை நெகிழ்ச்சியினால், அலகுகள் விற்பதன் எண்ணிக்கை குறைந்து அதனால், இலாபமும் வெகுவாகக் குறையக்கூடும். ஆகவே, அவர் விலையை $P_2$ ஆக உயர்த்துகிறார். இதன்மூலம் புதிய சூழ்நிலைகளிலும் அவர் உச்ச லாபத்தைப் பெற முடிகிறது. இதன்மூலம் அவர் தாம் முன்பணமாகக் கொடுத்த வரியை ஓரளவு ஈடுசெய்துகொள்கிறார். ஆயினும், பூரா வரித் தொகையையும் அவரால் ஈடு செய்துகொள்ள முடியவில்லை. ஏனெனில், வரி செலுத்துவதற்கு முன்பிருந்ததைக் காட்டிலும், வரி செலுத்திய பின்பு, அவரின் மொத்த லாபம் குறைவாகவே இருக்கிறது. இங்ஙனமாக வரி நிலைப்பாடு, விளையுளை விற்போருக்கும் வாங்குவோருக்குமிடையே பிரிக்கப்படுகிறது.

வெளிப்பாடு குறையவே காரணிகளின் இறுதிநிலை ஆக்கச் செலவும் ஓரளவு குறைகிறது. அதாவது, தள அச்சுக்கும் (base axis) $MC$-க்கும் இடையே உள்ள தூரம் 500 அலகுகளுக்குப் பதிலாக 457 அலகுகளாகக் குறைகிறது. உற்பத்திக் காரணிகளுக்கான மொத்தச் செலவு, பெருத்த அளவு வெளிப்பாடு செய்வதைக் காட்டிலும் குறைந்த அளவு வெளிப்பாடு செய்யும்பொழுது குறைகிறது. இதனால் வரியில் ஒரு பகுதி உற்பத்திக் காரணிகளுக்குப் புரட்டப்படுகிறது என்பது பொருளன்று. வேலையின்மையால் ஏற்படும் பளுவில் ஓரளவை உற்பத்திக் காரணிகளும் தாங்குகின்றன என்பது உண்மையே; ஆயினும், இப் பளு வெளிப்பாட்டுக் குறைவினால் நேரிடையாகவும், வரியைச் செலுத்துகையினால் மறைமுகமாகவும் ஏற்படுகிறது. பண்டங்களை விற்பவர், வரியை முன் பணமாகக் கொடுத்ததைக் காரணிகள் ஈடுசெய்வதில்லை. வாங்குவோரின்மீது வரியைப் புரட்ட முயற்சிப்பதால் விற்கும் அலகுகளின் எண்ணிக்கை குறையும். இதனால் காரணிகள் ஓரளவு வருமானத்தை இழக்கின்றன. இவ் வரியின் ஒரு பகுதியைக் காரணிகள் ஏற்றுக் கொள்வதனால் $MC_1$ என்ற வளைகோடு கீழே சரியும். இங்ஙனம் சரிவது உற்பத்திக் காரணிகளுக்கான ஊதியத் தொகைகளின் வீதங்கள் குறைக்கப்பட்டதைப் பிரதிபலிப்பதாகும். குறுங்காலத்தில் இங்ஙனம் நேருவதில்லை. ஆயினும், நெடுங்காலத்தில் காரணிகள் வேலையின்றியிருப்பதால் அவற்றின் ஊதிய வீதங்கள் கீழ்நோக்கி இறங்கக் கூடும்.

குறுங்காலத்தில் பொதுவாகக் காணப்படும் ஓரளவு புரட்டுகையை (partial shifting) ஒன்பதாம் படத்தில் காட்டியிருக்கிறோம். இதைத் தவிர, வேறு எண்ணிறந்த உதாரணங்களையும் நாம் பரிசீலிக்கலாம். தனியாள் நிறுவனத்தை எதிர்நோக்கியுள்ள




படம் 9

**மாறும் உற்பத்திச் செலவுகளுக்கு மாறுதலற்ற முறையில் கூடுதல் ஆகும் வரி (நிறைவில்லாப் போட்டி)**

தேவை நெகிழ்ச்சிகளுக்கும், ஆக்கச் செலவு நிகழ்ச்சிகளுக்கும் இடையே உள்ள வேறுபாடுகள்தாம் இவை. இவை தனியாள் நிறுவனத்தை எதிர்நோக்கியுள்ள தேவை நெகிழ்ச்சிக்கும் அல்லது ஆக்கச் செலவு நெகிழ்ச்சிக்கும் உள்ள வேறுபாடே என்றும் கூறலாம். பத்தாம் படத்தில், வரி நீங்கலாக உள்ள இறுதிநிலை ஆக்கச்செலவு ராசியை (marginal cost function—$MC_1$) நாம் எடுத்துக்கொண்டு பல்வேறுபட்ட தேவை நெகிழ்ச்சிகளினுல் ஏற்படும் விளைவுகளைக் காண்பித்திருக்கிறோம். $D'$ என்ற தேவைக் கோட்டைக் காட்டிலும் நெடுகிலும் $D$ என்ற தேவை வளைகோடு மிகுந்த நெகிழ்ச்சியுடையதாக இருக்கிறது. இத் தேவைகள் ஒவ்வொன்றின் இறுதிநிலை வருவாய் வளைகோடும் ($MR$ and $MR'$ முறையே) படத்தில் காட்டப்பட்டிருக்கின்றன. தன் நிகர வருமானத்தை உச்ச நிலையாக்க விரும்பும் எந்த வியாபாரியும், இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை ஆக்கச் செலவும் சமனுக ஆகும் வரை உற்பத்தியைப் பெருக்க முனைவான். இதுதான் $E_1$ என்னும் புள்ளியாகும். இரண்டு தேவை ராசிகளையும் பொறுத்த வரை இப் புள்ளி $E_1$ தான். தேவை $D$யாக இருக்கும்பொழுது வரி விதிப்பதற்கு முன்புள்ள சமநிலை விலை $P_1 Q$ (நான்கு டாலர்) ஆகவும், சமநிலைக் கணியம் $OQ_1$ (400 அலகுகள்) ஆகவும் இருக்கும். தேவை $D^1$ ஆக

இருக்கும்பொழுது, சமநிலை விலை $P'_1$ $Q$ (9 டாலர்) ஆகவும், சமநிலைக் கணியம் $OQ_1$ (400 அலகுகள்) ஆகவும் இருக்கும்.

அலகொன்றுக்கு ஒரு டாலர் வீதம் ஆயத்தீர்வைகள் விதிக்கப்படின் எல்லாக் கணியங்களின் இறுதிநிலை ஆக்கச் செலவும் ஒரு




படம் 10

கணியங்கள் தேவையில் பல்வேறுபட்ட நெகிழ்ச்சிகளால் வரிடபுரட்டுகையின்மீது ஏற்பட்ட விளைவு

டாலர் உயரும். இதனால் வரியை உள்ளிட்ட ஆக்கச் செலவின் வளைகோடு $MC_2$ ஆக இருக்கும். இப்பொழுது இவ் விருவகைத் தேவை நிலைகளின்கீழ் உள்ள சமநிலைப் புள்ளிகளும் மாறுகின்றன ($E_2$ $E'_2$). தேவை நெகிழ்ச்சி கூடுதலாக இருக்கும்பொழுது ($D$) புதிய சமநிலையில் விலை $P_2$ $Q_2$ ஆகவும், கணியம் $OQ_2$ ஆகவும் இருக்கும். தேவை மிகவும் நெகிழ்ச்சியுடையதாக இருக்கும்பொழுது விலை சிறிதே ஏறுகிறது; ஆனால், கணியம் பெருத்த அளவில் குறைகிறது. இவ்வாறாகத் தேவை நெகிழ்ச்சி குறைவாக இருக்கும்

பொழுது, வரியை வாங்குவோர்மீது எளிதில் முற்பட்டுப் புரட்டலாம். வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கு வாங்குவோரிடம் காணப்படும் எதிர்ப்பு, தேவை நெகிழ்ச்சி என்ற அளவிலேயே பொருந்துவதாகும். தேவை நெகிழ்ச்சி மிக அதிகமாக இருக்கும் பொழுது புரட்டுகைக்கு எதிர்ப்பும் அதிகமாக இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட அளவு விலை ஏறும்பொழுது, வாங்கும் கணியம், ஒப்புமையில் மிகவும் குறைவதே நெகிழ்ச்சி அதிகம் என்பதன் பொருளாகும். வாங்குவது பெருத்த அளவு குறைந்தால் அது விற்பவரின் மொத்த நிகர வருமானத்தைப் பாதிக்கும் நெகிழ்ச்சி எல்லையில்லாததாய் இருப்பது, மிகத் தீவிரமான உதாரணமாகும். அப்பொழுது தேவை வளைகோடு படுகிடையாக (horizontal) இருக்கும். இவ்வித நிலையில் விலை ஏறினல், குறுங்காலத்தில் விற்பனையின் கணியம் சூனியமாக இருக்கும். மற்றேர் புறத்துத் தேவை நெகிழ்ச்சியின்மை, விளையுளின்றி இயங்கமுடியாத, கொள்வோரின் ஆற்ருமையைப் புலப்படுத்துகின்றது. மார்க்கெட்டில் கூடுதலான விலைகள் நிலவும்பொழுது அவர்கள் பண்டங்களைப் பெரும்பாலும் வாங்காது இருப்பதில்லை. இதனல் அவர்கள் முற்பட்டுப் புரட்டுகைக்குச் சரியான இரையாகின்றனர்.




படம் 11

இறுதிநிலை ஆக்கச் செலவைப்பற்றிய பல்வேறுபட்ட நெகிழ்ச்சிகளால் புரட்டுகையின்மீது ஏற்படும் விளைவு

நிறுவனத்தின் ஆக்கச் செலவுகளின் நடப்பும்-அதாவது வெளிப்பாட்டில் மாறுதல்களுக்கு ஏற்ப ஓர் அலகின் உற்பத்தி ஆக்கச்

செலவிலும் மாறுதல்கள் ஏற்படும் வீதம் ஒரு பண்டம் உற்பத்தி யாகும்பொழுது அல்லது விற்பனையாகும்பொழுது விதிக்கப்படும் வரி புரட்டுகையைப் பாதிக்கும். குறிப்பிட்ட தேவை, இறுதிநிலை வருவாய் நிலைகளில், முற்றிலும் வேறுபட்ட இரு இறுதிநிலை ஆக்கச் செலவு வளைகோடுகள் இருப்பதை 11ஆம் படம் காட்டு கிறது. வரித் திணிப்புக்கு முன்பு நிலவிய இவ் வேறுபட்ட ஆக்கச் செலவு நடப்புகளின் ரகங்களை (types of cost behaviour) $MC_1$, $MC'_1$ என்ற வளைகோடுகள் புலப்படுத்துகின்றன. காரணியின் ஆக்கச் செலவுடன் வரி சேர்க்கப்பட்டபொழுது (இவ்விரு உதா ரணங்களிலும் வரித்தொகை ஒன்றே), இதற்கீடான ஆக்கச் செலவு நிலைகளை $MC_2$-ம் $MC'_2$-ம் புலப்படுத்துகின்றன. இப் போக்கை மீண்டும் விரிவாக ஆராயாது, ஆக்கச் செலவு நிலைகள் $MC_2$ ஆக இருக்கும்பொழுது விலை $P_1$ லிருந்து $P_2$ ஆக ஏறுகிறதென்பதையும், ஆக்கச் செலவுகள் $MC'_2$ ஆக இருக்கும்பொழுது விலை $P_1$லிருந்து $P_3$ஆக மட்டும் ஏறுகிற தென்பதையும் நாம் காண்கின்றோம். இறுதிநிலை அலகின் ஆக்கச் செலவு திடீரென்று ஏறாது படிப்படியாக ஏறினால் விலையேற்றம் அதிகமாகவும், விற்கும் கணியத்தில் சரிவு அதிகமாகவும் இருக்கின்றன. இறுதிநிலை ஆக்கச் செலவு விரைவாக ஏறிக்கொண்டு வரும்போது, கடைசிச் சில அலகுகள் விற்கப் பட்டால் அதனால் இதன் மொத்த நிகர வருமானம், படிப்படியாக இறுதிநிலை ஆக்கச் செலவு ஏறும் நிலையில் உற்பத்தி செய்யும் நிறு வனத்தைவிட, அதிகமாகக் கூடுகிறதென்பதே இதற்கான காரண மாகும். (இறுதிநிலை வருவாய்க்கும் இறுதிநிலை ஆக்கச் செலவுக் கும் இடையிலுள்ள செங்குத்தான இடைவெளிகளால் மொத்த இலாபத்தில் ஏற்படும் கூடுதல்கள் அளவிடப்படுகின்றன.) இவ் வாறாக மிகவும் செங்குத்தான இறுதிநிலை ஆக்கச் செலவு ராசியை உடைய நிறுவனம் தன் விலையை ஏற்றுந்தோறும், மிகுந்த இலா பத்தை நல்கக்கூடிய இவ் விறுதிநிலை அலகுகள் கைவிடப்பட்டு நிறு வனத்தின் மொத்த இலாபமும் ஒப்புமையில் விரைவாகச் சரி கிறது.[17] கணியத்தைக் குறைப்பதனால், விலையைச் சிறிதே ஏற்றி னாலும் இலாப இழப்பு விரைவாக ஏற்படுவதால், விலையைக் கணிச மான அளவு ஏற்றுவதிலிருந்து நிறுவனம் தடுக்கப்படுகின்றது. விலையை ஏற்றுவதனால் வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கும், தானே வரியைச் செலுத்துதற்கும் இடைப்பட்ட சிறந்த நிலை $E_3$ என்ற சமநிலைப் புள்ளியில் ஏற்படுகின்றது. விலை ஏற்றத்தின் மூலம் வரியை முற்பட்டுப் புரட்டுகையினால் நேரும் விளைவுகளை சிறிது வேகக் குறைவுடன் இறுதிநிலை ஆக்கச் செலவுகள் ஏறும் நிறுவனம் நன்றாக ஏற்றுக்கொள்ளக்கூடிய நிலையில் இருக்கின்றது. இவ்வாறு, மற்றவை மாறாதிருப்பின், எவ்வளவுக் கெவ்வளவு இறுதிநிலை ஆக்கச் செலவின் ராசி குறைந்த நெகிழ்ச்சியுடையதாக

இருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு வரியை முற்பட்டுப் புரட்டு கைக்குப் பெருத்தவளவில் எதிர்ப்பு இருக்கும்.

குறுங்காலத்தில் உற்பத்தி அல்லது விற்பனை செய்யப்படும் பண்டத்தின்மீது விதிக்கப்பட்ட வரியின் நிலைப்பாட்டுச் சாத்தியக் கூற்றை நாம் இதுகாறும் ஆராய்ந்தோம். வரியை விதித்தவுடன் அல்லது நீண்டகாலமாக விதிக்கப்பட்ட ஒரு வரியின் வீதத்தைக் கூட்டியதாலோ முதன்முதலில் வரிக்கு ஆட்படுகிறவர் தூக்கலான விலையின்மூலம் வரியின் ஒரு பகுதியை முற்பட்டுப் புரட்டுகிறார் என்பதும், ஒரு பகுதியைத் தாமே தாங்குகிறார் என்பதும் நாம் சாதாரணமாக ஏற்றுக்கொண்ட எடுகோள்களாகும். அவர் வரியை எத்துணை முற்பட்டுப் புரட்டமுடியும் என்பது, விளையுளை வாங்குவோரிடமிருந்தும், தம் நிறுவனத்தின் அக ஆக்கச் செலவு நிலைகளிலிருந்தும் ஏற்படும் எதிர்ப்பின் அளவைப் பொறுத்திருக் கிறது. தேவை எத்துணை நெகிழ்ச்சியுடையதாக இருக்கின்றதோ அத்துணை எதிர்ப்பு, முற்பட்டுப் புரட்டுகைக்கு இருக்கும். இறுதிநிலை ஆக்கச் செலவில் மாறுதல் விகிதம் எத்துணைக் குறைவாக இருக் கின்றதோ, அத்துணை அதிகமாகப் புரட்டுகைக்கு எதிர்ப்பு இருக் கும். தேவை வரையறையின்றி நெகிழ்ச்சியுடையதாக இருக்கு மானால், குறுங்காலத்தில் எவ்வித முற்பட்ட புரட்டுகையும் நேரிட முடியாது என்பதை ஒரு பிரத்தியேக உதாரணத்தை எடுத்துக் கொள்வதன்மூலம் வாசகர் தமக்குத்தாமே நிரூபித்துக்கொள்ள லாம். மேலும், நெகிழ்ச்சியில் இறுதிநிலை ஆக்கச் செலவு சூனியமாக இருக்குமானால்—வளைகோடு முற்றும் செங்குத்தாக இருக்கு மானால்—குறுங்காலத்தில் எவ்விதமான முற்பட்ட புரட்டுகையும் ஏற்படமுடியாது.[18]

குறுங்காலத்தில் வரிப் புரட்டுகைக்கு வாய்ப்புகள் இல்லாது நெடுங்காலத்தில் முற்பட்ட புரட்டுகைக்கும் பிற்பட்ட புரட்டுகைக் கும் வாய்ப்புகள் இருக்கலாம். குறுங்காலத்தில் ஓரளவு வரிப் பளுவைப் பண்டத்தை விற்பவர் (seller) தாங்கிக்கொண்டால், வரி இன்றியோ அல்லது வரி போடுவதற்கு முன்போ இருந்ததைக் காட்டிலும் தாழ்வாக அவருடைய நிகர வருவாயைக் குறைக்கும் எனலாம். இறுதிநிலையில் உள்ள அல்லது இறுதிநிலையில் இருக்கும் நிறுவனங்கள் இழப்பை எய்தும். இவ் விறுதிநிலை நிறுவனங்கள் மார்க்கெட்டைவிட்டு அகலும்பொழுது, எஞ்சியுள்ள நிறுவனங்களை எதிர்நோக்கியிருக்கும் தேவை வலுப்படுகிறது—அதாவது, தேவை வளைகோடு ஏறுகிறது. மேலும், இங்ஙனம் நேரும்பொழுது விற்பனை யின் கணியத்தில் யாதொரு சரிவுமின்றி விலையை ஏற்றலாம். இவ் வாறாகக் காலப்போக்கில் முற்பட்ட புரட்டுகை ஏற்பட ஏதுவாகும்.

குறுங்காலத்தில் விற்பனை செய்யப்பட்ட கணியம் முற்பட்ட புரட்டுகையினுல் குறைவதற்கேற்ப, உற்பத்திக் காரணிக்கு வேலையின்மையும் ஓரளவு ஏற்படும். இக் காரணிகளுக்கு வேறெங்காகிலும் வேலை கிடைக்காவிடில், வேலையில் இருக்கும் காரணிகளின் ஊதிய வீதங்களையும் வலுவில் குறைக்கும்படி ஏற்படலாம். இதனுல் காலப்போக்கில் இறுதிநிலை ஆக்கச் செலவின் ராசி குறையலாம். மேலும், மற்றவை மாருதிருப்பின், குறைந்த விலையில் அதிகமான உற்பத்தியோடு கூடிய உச்ச லாபம் கிடைக்கும் புதியதோர் சமநிலை உருவாகலாம். எவ்வளவுக்கெவ்வளவு இங்ஙனம் நேருகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு வரி பிற்பட்டு உற்பத்திக் காரணிகளின்மீது புரட்டப்படுகிறது.

குறுங்காலத்தில் நிலைப்பாட்டின் பகுப்பாய்வில், குறிப்பிட்ட தேவை வளைகோடுகள், ஆக்கச் செலவு வளைகோடுகள் இவை நெடுகிலுமுள்ள இயக்கங்களில்தான் நாம் முற்றும் அக்கறை செலுத்தினேம் என்பதை வாசகர் ஏற்கெனவே கவனித்திருக்கக்கூடும். நெடுங்கால நிலைப்பாட்டைப்பற்றிய பிரச்சினைகளில் நாம் நாட்டம் செலுத்தும்பொழுது, வளைகோடுகளின் சரிவில் அல்லது ஸ்தானத்தில் மாறுதலை ஏற்படுத்தும் காரணிகளைத் தேடுகிறேம். இதில் வியப்படைவதற்கு ஒன்றும் இல்லை. குறுங்காலத்தைப் பற்றிய கருத்து என்பதில் தேவையும், ஆக்கச் செலவு நிலைகளும் குறிப்பிட்டவாறு மாருது இருக்கின்றன என்பது பொதிந்திருக்கிறது. தேவை, ஆக்கச் செலவு அமைப்புகளில் மாறுதல்கள் ஏற்படத்தக்க காலவரையை நெடுங்காலம் என்று கூறலாம்.

விற்பவரின் பண்டத்தின்மீது விதிக்கப்பட்ட வரியின் குறுங்கால நிலைப்பாட்டை, அவர் குறிப்பிட்ட வரம்புக்கு உட்பட்ட சூழ்நிலைகளில் சிறிதே மாற்ற முடியும். தேவை, ஆக்கச் செலவு இவற்றின் அமைப்புகளும் மாருது நிலைத்திருக்குமானுல், பல சமயங்களில் உற்பத்தியைக் குறைத்து அவரால் விலையைக் கூட்ட முடியும். நெடுங்காலத்தில் இவற்றைக் கூட்ட அவருக்கு நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. தேய்மானத்தின்மூலமோ அல்லது வேறு வகையாலோ அவர் தனது உற்பத்தித் திறனை மாற்ற முடியும். தம்முடைய ஆலையில் அபிவிருத்தி அடைந்த தொழில் நுட்பத்தைப் புகுத்துவதன்மூலம் தாம் முதலீடு செய்த ஒவ்வொரு டாலரின் உற்பத்தித் திறனையும் அவரால் மாற்ற முடியும். இங்ஙனம் மாற்றினுல் ஆக்கச் செலவின் அமைப்பு பாதிக்கப்படுகிறது. தம்முடைய விளையுளின் தரத்தை மேம்படுத்துவதன்மூலமாகவோ, அல்லது தம்முடைய விற்பனைத் திறனுலோ அவரால் தம்முடைய விளையுளுக்கான தேவையைப் பாதிக்க முடியும். அவர் கொணரும் மாறுதல்

களைத் தவிர்த்து, அவர் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்ட வாணிபச் சூழல், பொதுமக்களின் விருப்பம், வருமானம், விளையுள்கள், உற்பத்திக் காரணிகளின் விலைகள், மக்கள் தொகை இவற்றாலும் தேவையில் மாறுதல்கள் ஏற்படக்கூடும்.

### வரிபுரட்டுகையைப் பாதிக்கும் பிற காரணங்கள்

வரி புரட்டுகையின் திசையையும், அளவையும் பாதிக்கும் மார்க்கெட்டில் உள்ள அகக் காரணிகளின் இயல்பை முன்பு பார்த்தோம். இவை (1) வரியைப் புரட்டக்கூடிய வகையில் விலை ஒரு வாயிலாக அமைந்திருக்கிறதா என்பதும், (2) ஆக்கச் செலவில் வரியைச் சேர்த்ததனால் உச்ச லாபத்தைத் தரக்கூடிய விலைக்கும், கணியத்திற்கும் உள்ள சமநிலையில் மாறுதல்கள் ஏற்படுகின்றனவா என்பதும், (3) வரி விதிக்கப்பட்ட விற்போரின் பண்டத்திற்கான சப்ளையிலும் (அளிப்பிலும்), தேவையிலும் நெகிழ்ச்சிகள் இருக்கின்றனவா என்பதும் ஆகும். [19]

வரி புரட்டுகை தோரணையில் வேறு பல காரணிகளும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. நாம் நெடுங்கால நிலைப்பாட்டைப் பற்றி நடத்திய சர்ச்சையில் இவற்றில் சில புதைந்திருக்கின்றன. வரியைப்பற்றிய சட்டத்தின் தன்மையாலும் வரி புரட்டுகையின் மீது உண்மையான விளைவு ஏற்படக்கூடும். எடுத்துக்காட்டாக வரியை நீக்கி விலைகளை விளம்பரம் செய்வதும், அல்லது எடுத்து எழுதுவதும் வரியை முற்பட்டுப் புரட்டும் தோரணைக்குத் துணை செய்கின்றன. பண்டத்தை வாங்கும் அப்பாவியான மனிதன் விளம்பரப்படுத்தப்பட்ட அல்லது எடுத்தெழுதப்பட்ட விலையை ஆதாரமாகக் கொண்டு அப் பண்டத்தை வாங்க முற்படுகிறான். வரியை விலையுடன் சேர்த்தாலும், அவன் தான் வாங்க நினைத்ததை வாங்காமற் செல்லுவதில்லை. அதுபோலவே சிப்பங்களைக் கட்டிய பின்பு விற்பனை வரிகளை கல்லாப்பெட்டியில் வசூல் செய்வதனால் முற்பட்ட புரட்டுகைக்கு வாங்குவோரிடம் காணப்படும் எதிர்ப்பு நிலைகுலைகிறது. சில பண்டங்களின்மீது வரியைத் திணித்து அவற்றின் பதிலிகளின்மேல் வரி விதிக்காது விடுவதனால் இவ் வரிகளை முற்பட்டுப் புரட்டுகைக்கு உள்ள எதிர்ப்பு கடுமையாகிறது.

குறுங்காலத்தில் மார்க்கெட்டில் வழக்கமான விலைகள் நீடிப்பதால், நுகருவோரின்மீது வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கு ஊறு விளைகிறது. வழக்கமாக 5 சதத்திற்குச் சிகாரும் (cigar), 5 சதத்திற்குக் கற்கண்டும் (candy bar), ஒரு டாலருக்குக் கைக்கடிகாரமும்

விற்ருல், வரியை விலையுடன் கூட்டுவதன்மூலம் விற்பவர் தன்னுடைய வாடிக்கைக்காரர்களை (தொழில் நன்மதிப்பை) இழக்க நேரிடும்.[20] இது வழக்கமான விலை ஒரு சிறிய முழுத்தொகையாக இருக்குமிடத்தும், அல்லது விற்பவர் தமமுடைய விற்பனை விளம்பரத்தில் ஒரே விலையைத் திரும்பத் திரும்ப அழுத்திக் கூறியிருக்குமிடத்தும் சிறப்பாகக் காணப்படுகிறது. 'டாலர் கைக்கடிகாரம்' என்று பலரும் அறிந்ததை ஒரு டாலர் பத்து சதமாக விற்க முற்பட்டால் அதனுல் தேவைக்குக் கடுமையான பாதகங்கள் ஏற்படக் கூடும். 24 டாலர் 95 சதம் விற்ற கைக்கடிகாரத்தை 27 டாலர் 4 சதத்திற்கு விற்ருல் ஏற்படும் விளைவுகளைவிட இது கடுமையாக இருக்கும். இவ்விரண்டு உதாரணங்களிலும் விலையேற்றம் 10 சதவிகிதமே. பல மில்லியன் டாலர்களைப் புகைக்கும் புகையிலையின் விளம்பரத்தில் செலவழித்த பின்பு, அதனுல் ஏற்பட்ட தொழில் நன்மதிப்பை, வரியைப் புரட்டுகை செய்து விலையை ஏற்றுவதன் மூலம் இழக்க விற்பவர் துணியமாட்டார்.

பண்டத்தின் விலைக்கும், வரியின் பருமனுக்கும் உள்ள தொடர்பு வழக்கமான விலையுடன் நெருங்கிய தொடர்புடையது. ஒரு பண்டத்தைப் பொறிவழி ஆக்கும்பொழுது 5 சதவிகித வரியை விதித்தால், இவ் வரியை முற்பட்டுப் புரட்டுவது எளிதாகும். பொறிவழியாக்குவோர் மொத்த வியாபாரிகளுக்கு ஏராளமாகப் பண்டங்களை மொத்த விலைக்கு விற்கும்பொழுது, விலையை ஒரு சிறு சதவிகிதம் ஏற்றுவது சாத்தியமே. சில்லறை வியாபாரி ஒவ்வோர் அலகு பண்டத்தையும் 5 சதத்திற்கு விற்கிருர் என்றும், சாதாரணமாகச் சில்லறை வியாபாரியிடம் ஒரே சமயம் வாங்கப்படும் பண்டத்தின் அளவும் ஓர் அலகு என்றும் வைத்துக்கொள்வோம். வரி முழுமையும் சில்லறை வியாபாரிக்குப் புரட்டப்பட்டு, அவர் நுகருவோருக்கு அவ் வரியைப் புரட்டினுல், சில்லறை வியாபாரியின் விற்கும் விலை 5 சதவிகிதங்களுக்கு மேலாகவும் 6 சதங்களுக்கு உட்பட்டும் இருக்கவேண்டும். அவ்வாருன நிலையில் சில்லறை வியாபாரி புரட்டப்பட்ட வரியைத் தானே கொடுப்பதும், தன்மீது வரி புரட்டப்படுவதைக் கூடுமானவரை எதிர்ப்பதும் அறிவுடைமையாகும்.

புவியியல் ரீதியில் ஒரு வரிச்சட்டம் எத்துணைப் பரப்பின் மீது விதிக்கப்பட்டிருக்கிறது. என்பதும் வரிப் புரட்டுகையை அறுதியிடும் முக்கிய சாதனமாகும். ஒரு நகரம் அல்லது மாநிலம் இவற்றின் ஆட்சி அதிகாரம் முறையே அந் நகர எல்லைப்புறங்கள் வரையிலோ அல்லது மாநில எல்லைப்புறங்கள் வரையிலோ செல்லுகிறது. 1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட ஆண்டு

களில் மாநில பெட்ரோல் வரிகளின் மட்டத்தில், மாநிலங்களுக்கு இடையே பெருத்த வேறுபாடு இருந்தது. அச் சமயத்தில பெட்ரோலின் விலையில் உடனடியான மாறுதல் இல்லாது ஒருவர் குறைந்த வரிவிதிக்கும் ஒரு மாநிலத்திலிருந்து உயர்ந்த வரிவிதிக்கும் மாநிலத்திற்குப் பிரயாணம் செய்யலாம். ஒவ்வொரு மாநிலத்திலும் வரி முற்றும் புரட்டப்பட்டிருந்தால், ஒரு மாநில எல்லையைக் கடக்குந்தோறும் பெட்ரோலின் விலையில் திடீரென மாறுதலைக் காணலாம். இங்ஙனம் நிகழவில்லை என்பதிலிருந்தே வரிபுரட்டுகைக்குப் பெருத்த எதிர்ப்பு இருந்ததென்பதையும், அடுத்திருக்கும் மார்க்கெட்டில் குறைந்த விலைக்குப் பதிலி (குறைந்த வரியுள்ள பெட்ரோல்) கிடைக்கும் சாத்தியக்கூறு இருப்பதையும் இது புலப்படுத்துகிறது. உயர்ந்த வரிவிதிக்கும் மாநிலத்தின் உட்பகுதியில் பொதுவாக விலைகள் கூடுதலாகவே இருந்தன. இதற்குக் காரணம் அவற்றுக்குப் போட்டியாகக் குறைந்த விலையில் விற்கும் பதிலிகள் இன்மையே. மேலும், வரி முற்றும் புரட்டப்பட்டமையாலும் விலைகள் கூடுதலாக இருந்தன. விற்பனைகளைப் பெரிதும் பாதிக்காது முற்பட்டுப் புரட்டுகை எல்லைப்புறத்தில் சாத்தியமல்ல. இவ்வாறு இருந்தபோதிலும் வரியின் பெரும்பகுதியும் தனிப்பட்ட சில்லறை வியாபாரிகளால் ஏற்கப்பட்டதென்பதும் பொருந்தாது. வரியின் பெரும்பகுதியையும் மொத்த எண்ணெய் சுத்திகரிப்போர் ஏற்கின்றனர். அவர்கள் வெளிப்பாடு செய்யும் காலன்களின் தொகை ஒரே சீராக இருந்தது. இதற்குக் காரணம் அவர்கள் குறைந்த அடித்தள விலைகளில் சில்லறை வியாபாரிகளுக்குப் பெட்ரோலை விற்றதேயாகும்.[21]

வரி விதிக்கப்பட்ட நிலத்தின் பரப்பும் ஒரு பண்டத்தின் உற்பத்தி அல்லது விற்பனையின்மீது விதிக்கப்படும் வரியைப் புரட்டுகையைப் பாதிக்கும். அருகிலுள்ள வரி விதிக்கப்படாத மார்க்கெட்டுகளிலிருந்து பண்டத்தை வாங்கக் கூடுமானல் முற்பட்டு வரியைப் புரட்டச் செய்யப்படும் முயற்சிக்குக் கடுமையான எதிர்ப்பு ஏற்படும். வரி விதிக்கப்படாத பதிலிகள் இவ் அண்மை மார்க்கெட்டில் கிடைப்பதே இதற்குக் காரணமாகும். நுகர்வுக்குப் பயன்படுத்தப்படும் சொத்துரிமையின்மீது விதிக்கப்படும் வரிகளின் (உ-ம் : குடியிருப்புகள்) புரட்டுகையை அல்லது வருமான வரிகளின் புரட்டுகையை, வரிவிதிக்கப்பட்ட நிலப்பரப்பின் அளவு பொதுவாகப் பாதிக்காவிட்டாலும், குடியிருப்பை மாற்றியோ அல்லது வரி விதிக்கப்பட்ட சொத்தை இடம் மாற்றியோ இவ் வரிகளைத் தவிர்ப்பதற்கு உரமூட்டுவதாய் இருக்கின்றது.[22]

தேவை தேக்கநிலையில் இருக்கும்பொழுது அல்லது சரிந்து கொண்டிருக்கும்பொழுது வரியை எளிதில் புரட்ட முடியாது

என்பதற்கும், தேவை ஏறிக்கொண்டிருக்கும்பொழுது, காலப் போக்கில் எல்லா வரிகளையும் மிக எளிதில் புரட்டலாம் என்பதற் கும் தக்க காரணம் இருக்கின்றது. இவ்வாறு தேக்க நிலையில் இருக்கும் அல்லது தேய்ந்துகொண்டுவரும் ஒரு தொழிலைக் காட்டி லும், செழுமை நிலையில் இருக்கும் தொழிலின்மீது ஒரு வரியை முற்பட்டுப் புரட்டுகை மிக எளிதாகும். பொதுவான தொழில் செழுமையினுலோ அல்லது ஒரு குறிப்பிட்ட விளையுளின் தேவை யைப் பாதிக்கும் சிறப்பான காரணங்களினுலோ ஒரு விளையுளுக் குள்ள தேவை ஏறலாம். பிந்தியதில் தேவை அதிகரித்ததற்கு மக்களின் விருப்பங்களில் ஏற்பட்ட மாறுதலோ அல்லது வரிவிதிக் கப்பட்ட விளையுளுக்குத் தேவை அதிகரிக்குமாறு அரசாங்கம் வரியி லிருந்து கிடைத்த தொகைகளைச் செலவழிப்பதோ காரணமாக இருக்கலாம். பெட்ரோல் வரிகளிலிருந்து கிடைத்த தொகையை அரசாங்கம் சாலைகளின் அபிவிருத்திக்குப் பயன்படுத்துவது இதற் கோர் எடுத்துக்காட்டாகும். தேவை ஏறுந்தோறும் நெகிழ்ச்சியும் குறைந்தால் வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கு எளிதாக நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. ஆக்க வேறுபாட்டின் (product differentiation) மூலமும், ஒரு சிலர் விற்பனைச் சர்வாதீனம் (oligopoly) ஆக்கப்பட்ட தொழிலில் விலை நிர்ணயத் தலைமை (price leadership) மூலமும், அல்லது தொழில் வளமாக இருக்கும் காலத்தில் நிலவும் விற்பனையாளர்களின் மார்க்கெட்டுகளின் (sellers markets) மூலமும் முற்பட்டுப் புரட்டுகை நடைபெறலாம்.

**வரிகளின் பிற விளைவுகள்**

வரி விளைவுகளின் மொத்தக் கண்ணோட்டத்தில் ஒரு கூறுகவே வரி நிலைப்பாட்டுக்கு விளக்கம் தந்து இதுகாறும் நாம் வரி நிலைப் பாட்டைப்பற்றிய பகுப்பாய்வை நடத்தினேம். அரசாங்கத்திற்கு வரியாகச் செலுத்தப்படும் தொகை இறுதியில் நிலையாக நிற்கு மிடமே நிலைப்பாடு என்பதன் பொருளாக நாம் ஒரு வரம்புக்குட் படுத்தி இருக்கின்றேம். ஆனுல், நிலைப்பாட்டைத் தவிர்த்து வேறு பல விளைவுகளும் வரிவிதிப்பினுல் ஏற்படுகின்றனவென்றும் நாம் குறிப்பிட்டோம். நெடுங்காலத்தில், நிலைப்பாட்டைக் காட்டிலும் இவ் விளைவுகள் பன்மடங்கு முக்கியம் வாய்ந்தவை. இப் பிற விளைவு களை (1) (நிலைப்பாடு நீங்கலாக) புரட்டுகையின் தோரணையில் ஏற் பட்டவை என்றும், (2) நிலைப்பாட்டினுல் ஏற்பட்டவை என்றும் நாம், இருவகையாக முன்னர்ப் பிரித்திருக்கிறேம்.

**புரட்டுகையின் தோரணையின்போது ஏற்படும் விளைவுகள்** (Effects Created in the Process of Shifting): ஒரு வரி புரட்டப்படாத

பொழுது இவ்வகை விளைவுகள் ஏற்படுவதில்லை என்பது தெளிவு. ஆனால், ஒரு வரி புரட்டப்படும்பொழுது (நிலைப்பாட்டைத் தவிர்த்து) பலதிறப்பட்ட இனம் சுட்டும் மாதிரியான விளைவுகள் ஒரே சமயத்தில். நிகழ்கின்றன. இடப்புறத்திலிருந்து வலப் புறத்திற்குச் சரிந்து கீழ்நோக்கிச் செல்லும் தேவை வளைகோட்டையும், இடப் புறத்திலிருந்து வலப் புறத்திற்கு மேல் நோக்கிச் செல்லும் இறுதிநிலை ஆக்கச் செலவு (ஆக்கச் செலவு ஏறுகின்ற) வளைகோட்டையும் மாதிரியாகக் கொண்டால், விற்பனை ஆகும் பண்டத்தின்மீது முற்பட்டு வரியைப் புரட்டுகையினால் அப் பண்டம் விற்கப்படும் அலகுகளின் எண்ணிக்கை குறையும். இங்ஙனம் விற்பனையாகும் கணியம் குறைவதால், நிறுவனம் வேலைக்கு அமர்த்தியிருக்கும் சில உற்பத்திக் காரணிகளின் தேவையும் குறையும். வரி நிலைப்பாட்டின் ஒரு பகுதியை உற்பத்திக் காரணிகள் தாங்கும்படி நேர்ந்தால் இருபபதைவிட, வேலையிழந்த காரணிகள் உடனடியாக அவலநிலையில் இருக்கிறார்கள் என்பது புலனாகும். பொதுவாக, இவ்வுற்பத்திக் காரணிகளின் சப்ளை மிகையாக இருப்பதால் நெடுங்காலத்தில் அவற்றின் வருமானம் குறையக் கூடும்.

வரிகளினால் தொழிலமைப்பின்மீது தலையாய விளைவுகள் ஏற்படலாம். ஓர் உற்பத்திக் கட்டத்திலிருந்து இன்னோர் உற்பத்திக் கட்டத்திற்குப் பண்டம் மாறுந்தோறும் (transfer of a good from one stage in production to another) பொதுவான விற்பனை வரி ஒன்று விதிக்கப்பட்டால் அது, தொழில் செங்குத்தாக ஒன்றிப் போவதற்குத் (vertical integration of industry) தூண்டுகோலாக அமையலாம். இறுதிநிலை விளையுளை (end product) விற்பதற்கு முன்பு, எவ்வளவு எண்ணிக்கை குறைவாகப் பேரங்கள் இருக்கின்றனவோ, அதற்கேற்றவாறு வரியின் ஒரு சிறு பகுதியே இறுதியான விலையில் (final price) சேர்கிறது எனலாம். தன் பண்ணையில் விளைந்த தக்காளிப் பழத்தை விவசாயி டப்பாவில் அடைப்பவனுக்கு விற்கிறான். அவன் தக்காளிப்பழத்தை மொத்த வியாபாரிக்கு விற்கிறான். மொத்த வியாபாரி சில்லறை வியாபாரிக்குத் தக்காளிப் பழத்தை விற்கிறான். இதற்கிடையில் தக்காளிப்பழம் நான்கு முறை கை மாறுகிறது. உற்பத்தியின் ஒவ்வோர் கட்டமும் தனித்தனி ஒவ்வொருவரால் செய்யப்படுமானால், மூலப்பொருளிலிருந்து தக்காளிப்பழம் இறுதியில் துய்ப்பதற்கு முன்புவரை நான்கு முறை விலை பேரங்கள் நிகழ்கின்றன. இந்த ஒவ்வொரு பேரமும் விற்பனை வரிக்கு உட்பட்டிருக்குமானால் சில்லறை வியாபாரியின் விலை நான்கு வரிகளைத் தன்னுள் அடக்கியதாக இருக்கும். இறுதியாக விதிக்கப்பட்ட மூன்று வரிகளும், முந்திய வரிகளைக்கொண்ட

விலைகளின்பேரில் கணக்கிடப்படும். இவ்வாறுன வரியை முற்றும் புரட்டுதல் சில்லறை வியாபாரிக்கு மிகவும் கடினமாயிருக்கும். இவ் வரிகள் கூர்நுதிக் கோபுரம்போல் உயர்வதைப் பின்வரும் முறையைக் கடைப்பிடித்தால் தவிர்க்கலாம். எல்லாத் தோரணைகளையும் (உற்பத்தி நிலைகளையும்-processes) இணைத்துக் குறைந்த எண்ணிக்கையுள்ள நிறுவனங்கள்மூலம் இவற்றைச் செய்து, பேரங்களின் எண்ணிக்கையைக் குறைத்து இவ்வரிகளைத் தவிர்க்கலாம். சில்லறை மளிகைக்கடை (grocery chain) ஒன்று, தோட்டங்கள் பயிரிடுதல் (truck gardens), டப்பாக்கள் செய்தல்,மொத்த வியாபாரம் செய்தல் இவை யாவற்றையும் சொந்தமாக வைத்திருந்தால், பிற தனிப்பட்ட போட்டியாளர்களைவிடக் குறைந்த சில்லறை விலைக்கு, அது பண்டங்களை விற்க முடியும். ஒரு முறைதான் அது பண்டங்களை விற்பனை செய்வதால், அக் கடை ஒரேவொருமுறைதான் வரி விதிப்புக்கு உள்ளாகிறது. இவ்வித இணைப்பு, வரியைத் தவிர்ப்பதற்கான தெளிவான உதாரணமாகும். இதனுல் வரியைப் புரட்டுகை எளிதாகிறது; வரியைப் புரட்ட முடியாவிடில் நிலைப்பாட்டைத் தாங்குவதும் எளிதாகிறது. பொதுவான ஒரு விற்பனை வரியை விதித்தால் இணைந்த நிறுவனங்களுக்கு ஒப்புமையில் அனுகூலம் ஏற்படுகிறது. மேலும், இணைப்பு ஏற்படுவதற்கு இஃதோர் வலுவான காரணமாகும்.

**நிலைபாட்டினுல ஏற்படும் விளைவுகள் :** வரி நிலைப்பாடு யார் மீது விழுகிறதோ அவர் ஓரளவு தம் வாங்கும் சக்தியைத் தியாகம் செய்யவேண்டியவராயிருக்கிறுர். வளப்பொருள்களைத் தனியாட்களுக்கும் கோஷ்டிகளுக்கும் (கும்பல்) இடையே பங்கீடு செய்வதற்கும், வளப்பொருள்களை அரசாங்கத்திற்கும் தனியார் உபயோகத்திற்கும் இடையே பங்கீடு செய்வதற்கும், வரி முறை ஒரு வாயிலாகப் பயன்படுகிறது. நிலைப்பாட்டைத் தவிர்ப்பதற்காக மனிதர் தம் அறிவையும் ஆற்றலையும் மிகுதியும் செலவிடுவது இதனுலேற்பட்ட தலையாய விளைவு. குடியிருப்போருக்கும் தொழில் நிறுவனங்களுக்கும் ஆன போட்டி, மாநிலங்களுக்கிடையேயும் இருக்கிறது; ஸ்தலங்களுக்கிடையேயும் இருக்கிறது. இப் போட்டியால், பிற காரணங்களால் அறிவுக்கு ஒவ்வாதவையாக இருக்கும் வரிக்கொள்கைகளை அரசாங்கங்கள் மேற்கொள்ளும்படி நேரிடுகிறது. எப்பொழுதும் பணத்திலே குறியாக உள்ள தனியாள் வரி நிலைப்பாட்டைக் குறைப்பதற்கோ அல்லது தவிர்ப்பதற்கோ தன்னுலானவற்றை எல்லாம் செய்கிறுர். அவர் வரிநிலைப்பாட்டைக் குறைப்பதற்கும் தவிர்ப்பதற்கும் கிடைக்கும் எல்லா வாய்ப்புகளையும் பயன்படுத்திக் கொள்கிறுர். இவ்வாருக இலாபம் கிடைக்கும் கார்ப்பரேஷன்கள் பலகாலும் இழப்பு அடைந்த கார்ப்ப

ரேஷன்களுடன் இணைக்கப்பட்டு (merger), நடப்பு வருவாயி லிருந்து இதுகாறும் தங்களுக்கு ஏற்பட்ட இழப்புகளைக் கழித்துக் கொள்கின்றன. குறைந்த வரிவீதத்தைச் செலுத்துவதற்காகக் கார்ப்பரேஷன்கள் வருமானத்தை மூலதன ஆதாயமாகக் காட்டு கின்றன. ஆளைப்பொறுத்த வருமானத்திற்குப் (personal income) பதிலாகத் தொழில் செலவுக் கணக்குகளையும், கூடுதல் சம்பளங்களுக் குப் பதிலாகப் பங்கு விருப்ப பேரங்களையும் (stock options) காட் டிப் பல வழிகளிலும் கார்ப்பரேஷன்கள் வரிகளைத் தவிர்க்கலாம். இங்ஙனம் வரிகளைத் தவிர்ப்பதனால் அவற்றின் புரட்டுகையையும் தவிர்க்கலாம். தாம் வரியைப் பெரிதும் தவிர்ப்பதற்குத் தகுந்த முறையில் வரிச்சட்டங்களை மாற்றியமைக்க அவற்றில் அக்கறை கொண்ட கும்பல்கள் விடாமுயற்சி செய்வதுதான் மிகவும் வருத் தம் தரக்கூடியதாகும். வருவாய்கள் குறையாமல் ஒரே படித்தாக இருக்கவேண்டுமென்றால், இவ்வாறு சன்னம் சன்னமாக (சிறிது சிறிதாக) வரி அடித்தளத்தை அரிப்பதால் (erosion of tax base) பிறர்மீது உள்ள வரிப்பளு அதிகரிக்க ஏதுவாகும். இதனால் வரிப் பளுவின் பங்கீட்டில் கோணல்மாணலான ஒட்டுப் போடும் அமைப்பு (crazy quilt pattern) ஏற்படலாம். வரியில்லாவிட்டால் தான் செலவு செய்யக்கூடிய வருமானம் எவ்வளவு இருக்குமோ, அவ் வருமானம் ஒரு வரியின் நிலைப்பாட்டைத் தாங்குவதால் குறைகிறது. இதனால் வரி விதிக்கப்பட்ட தொழில் நிறுவனம் சேமிக்கும் தொகையும், முதலீடு செய்யும் தொகையும், வரி விதிக் கப்பட்ட தனியாளின் நுகர்ச்சி அல்லது சேமிப்பின் அளவும் பாதிக்கப்படும். இங்ஙனமாக நிலைப்பாட்டைப் பங்கீடு செய்வது மொத்த நுகர்ச்சியையும் முதலீட்டையும் பாதிக்கிறது. இதனால் மொத்தத்தில் ஒப்புமையில் தேவையின் வலுக் கோணங்கள் (relative strength of demand in segments of the aggregates) பாதிக் கப்படுகின்றன. இவ்வாறு நிலைப்பாடு, பங்கீட்டுப் பிரச்சினையின் மையத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிறது.

### புரட்டுகை, நிலைப்பாடுபற்றிய முடிப்புரைகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளில்[23] அண்மையில் யார் இறுதியாக வரியைச் செலுத்துகின்றனர்கள் என்பதைப்பற்றி நடத்திய புலவழி (empirical) ஆராய்ச்சியில், 1954-ல் வரிகளின் நிலைப்பாட்டைப் பொறுத்துச் சில பயன்வழி (pragmatic) முடிவுகளுக்கு வந்திருக் கின்றனர்கள். இவ்வாராய்ச்சியின் பயனாக அவர்கள் தனியார் வருமான வரிகள் புரட்டப்படுவதில்லை என்றும், கார்ப்பரேஷன் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரிகளின் நிலைப்பாட்டில் மூன்றில் இரண்டு பங்கு பங்குதாரர்களின்மீதும், ஒரு பங்கு நுகர்

வோர்மீதும் விழுகின்றது என்றும், விற்பனை வரிகள் ஆயத் தீர்வைகள், சுங்கவரிகள் ; இவை நுகர்வோர்மீது ஒறுக்கின்றன என்றும், வீட்டின் சொந்தக்காரர்களே தங்கியிருக்கும் குடியிருப்பு களின்மீது விதிக்கப்பட்ட சொத்துவரியின் நிலைப்பாடு, சொந்தக்கா ரர்களின் மீதே ஒறுக்கின்றது என்றும், தொழில் சொத்தின் (business property) மீது விதிக்கப்படும் வரியின் பெரும்பகுதியும் நுகர்வோரின் மீது விழுகின்றது என்றும் முடிவுக்கு வந்துள்ளார்கள். இம் முடிவுகள் இப் பொருளைப்பற்றி ஆராய்ச்சி நடத்திய தலையாய மாணுக்கரின் தோராயமான பொதுமைகள் (rough generalisations) என்பது தெளிவு. பாமர மக்களின் கருத்துடன் இவ் வல்லுநர் களின் முடிவுகளும் ஒத்திருக்கின்றன என்பது சுவையான உண்மை யாகும்.

நிலைப்பாட்டைப்பற்றித் தற்பொழுது ஒத்துக்கொள்ளப்படும் எடுகோள்கள் (assumptions), வரிக்கொள்கையை அறுதியிடுவதில் இன்றியமையாத பெரும்பங்கு வகிக்கின்றன. யார் வரிகளைச் செலுத்துகிறார்கள் என்பதை அறிந்திருப்பதும், இவ்வாறு அறிந் திருப்பதனுல் நிதித்துறையைச் சார்ந்த நடவடிக்கைகளின் (fiscal - action) தலையாய குறிக்கோள்கள் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்பதையும் அறிந்திருப்பது மிகவும் முக்கியமானது. வரிப்பளுவுகள் சரியான முறையில் பங்கீடு செய்யப்பட்டிருக்கின்றனவா என்பதை முடிவு கட்டுவதற்கான அடித்தளங்கள் (bases) பலவற்றைப்பற்றி பதின்மூன்றும் அதிகாரத்தில் பார்த்தோம். பகுத்தறிவுக்கு ஒத்த முறையில் தன்னல மறுப்புகளை (sacrifices) அடித்தளமாகக் கொண்டு, குடிமக்களிடை இயல்பாக நீதி அல்லது நேர்மையான (elemental justice or equity) முறையில் வரிப்பளு பங்கீடு செய்யப் பட்டிருகின்றதா என்பது முதலாவது குறிக்கோளாகும். எங்கெல் லாம் சாத்தியமோ அங்கெல்லாமிருந்து வருவாயைத் திரட்டுவது இரண்டாவது குறிக்கோளாகும். பொருளியல் முறையின் நிலை பேறும் (economic stability) வளர்ச்சியும் உச்ச அளவு ஏற்படும் படி பேணுதல் மூன்ருவது குறிக்கோளாகும். சமூக மதிப்புகளைப் பொறுத்து வளப்பொருள்களின் பங்கீட்டை (allocation of resources) உத்தமமான (optimum) அளவு முறையில் இருக்கும்படிப் பேணுவது நான்காவது குறிக்கோளாகும். இறுதியாக ஒரு குறிப் பிட்ட வரியை யார் செலுத்துகின்ருர் என்பது தெரியாத வரையில், வரிப்பங்கீட்டைப்பற்றிய இக் குறிக்கோள்கள் பொருளற்றன அல்லது பயனற்றனவாகும். முதன்முதலில் ஒரு வரியின் தாக்கு எந்த அடிப்படையில் பங்கீடு செய்யப்படுகிறது என்பதிலிருந்து, அதனுல் சமூகத்திற்கு ஏற்படும் அனுகூலத்தைப் (social advantage) பற்றியோ, ஈடுகட்டும் பயனைப் (compensatory usefulness)

பற்றியோ, அல்லது அதன் நீதியைப் பற்றியோ ஒன்றும் உறுதியாகத் தெரிவதற்கில்லை.

வரிக்கொள்கையை அறுதியிடுவதில் நிலைப்பாட்டைப்பற்றிய அறிவின் முக்கியத்துவத்தை நாம் கவனத்தில் இருத்தவேண்டும். அதேபோழ்து, புரட்டுகையைப் பாதிக்கும் காரணிகளைப் பற்றிய நம் பகுத்தாய்வு முற்றும் திட்டவட்டமானதாக இருந்தபோதிலும், எந்த வரி முறையிலும், இறுதிப் பளுவுகளைப்பற்றிய பங்கீட்டைப்பற்றி நாம் யாதொரு திட்டவட்டமான கணிய முடிவுகளுக்கும் வரமுடியாது. ஆகவே, நாம் இப் பிரிவின் தோற்றுவாயில் குறிப்பிட்டாங்கு, சில தோராயமான பொதுமைகளுக்கே (rough generalizations) வரவேண்டி இருக்கிறது. இது மட்டுமன்று; நிலைப்பாட்டைப்பற்றிக் குறுகலான பொருளில் மட்டுமல்லாது ஒரு குறிப்பிட்ட நிதித்துறையினுல் (particular fiscal system) ஏற்படும் பலதிறப்பட்ட விளைவுகளையும் தன்னுள் அடக்கிய, பொது நிதித்துறையின் விளைவுகளைப்பற்றிய பொதுவான ஒரு கருதுகோள் நமக்கு வேண்டும். அவ்விதமான ஒரு கருதுகோள் இருந்தால் தற்பொழுது எடுகோள்களை (assumptions) அடித்தளமாகக் கொண்டு சிறுகச் சிறுக நாம் ஒரு முடிவுக்கு வருவதுபோலன்றி இரண்டு மாற்றுப் பொதுநிதித் துறை முறைகளிடையே (alternaive fiscal systems) எம் முறை சிறந்ததென நாம் முடிவுக்கு வருதல் எளிதாகும்.

## மேலும் படித்தற்கு உரியவை

இ. கென்னத் பூல்டிங் (Boulding, Kenneth, E.) அமெரிக்கப் பொருளியல் சஞ்சிகையில் (American Economic Review) எழுதிய 'லாப வரியின் நிலைப்பாடு' (The Incidence of a Profits Tax), 1944, பக்கம் 567-572.

உச்சலாபம் பெறவேண்டும் என்பதை விடுத்து வேறு எடுகோள்களைக் கொள்ளும்பொழுது, இக் கட்டுரை வரி நிலைப்பாட்டைப் பற்றிய அறிவூட்டும் ஒரு பகுத்தாய்வாகும்.

ஹெச். ஜி. பிரௌன் எழுதிய 'வரிவிதிப்புப் பொருளாதாரம்' (Brown, H. G. 'The Economics of Taxation), நியூயார்க், ஹோல்ட், 1924.

வரிநிலைப்பாட்டைப்பற்றிய ஒரு நம்பகமான தரமான நூலாகும். நிறைகுறைப் போட்டிபற்றிய கருதுகோளில் பின்னர் எழுந்த வளர்ச்சியை இந் நூல் கூறுவிடினும் அது நம்மைச் சிந்திக்கவைக்கும்,

பிரமிப்பூட்டும் நூலாகும். இந் நூலில் எந்த அதிகாரத்தையும், நாம் சிறப்பாகச் சிபாரிசு செய்யாததற்குக் காரணம், ஒவ்வோர் அதிகாரமும் குறிப்பிட்ட வரிமுறைபற்றிய நிலைப்பாட்டைப் பகுத்தாய்வதே ஆகும்.

## 14ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. கடந்த காலத்தில் நீதிமன்றத் தீர்ப்புகளில் தமக்கென ஒரு நிலைத்த இடத்தைத் தேடிப் பிடித்துக் கொண்ட 'நேர்முக', 'மறைமுக' வரிகள் என்ற சொற்றொடர்களை—வரி புரட்டுகைகளைக் கொண்டுதான்—ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்திக் காட்ட முடியும். நேர்முக வரிகள் புரட்டப்படு வதில்லை; மறைமுக வரிகள் புரட்டப்படுகின்றன. பல வரிவிதிப்புகளைப் பொறுத்தவரை இங்ஙனம் பொதுப்படையாகக் கூறமுடியாமையே இச் சொற்றொடர்கள் வழக்கு அருகிவருவதற்குக் காரணம் எனலாம். சில நிலைகளில் ஒரு வரியைப் புரட்டலாம் என்பதையும், சில நிலைகளில் ஓரளவுதான் வரியைப் புரட்டமுடியும் என்பதையும், பிறிதொரு நிலையில் வரியைப் புரட்டவே முடியாது என்பதையும் நாம் பின்னர்க் காண்போம். இக் குறிப்பிட்ட வரிகளை நேர்முக வரிகள் அல்லது மறைமுக வரிகள் என்று கூறுவது வரி புரட்டுகைப் பிரச்சினையை எளிமையாக ஆக்குவதாகும்.

2. மற்றொரு பக்கத்தில் மக்களை வேண்டுமென்றே தவறான வழியில் இட்டுச்செல்ல வேண்டுமென்பதனாலோ அல்லது அறியாமையினாலோ புரட்டப்பட்ட, புரட்டப்படாத எல்லா வரிகளையும் விலை தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பதாகப் பிரசாரம் செய்யப்படுகிறது. ஒரு ஜோடி இறுக்கமான கால்சிராய்களின் (overalls) விலையில் அதன் உற்பத்திமீது விதிக்கப்பட்ட வரிகளும் அடங்கியிருக்கின்றன என்பது தெளிவு. ஆயினும், அதனைச் செய்வோர், வாணிகம் செய்வோர் இவர்களின்மீது விதிக்கப்படும் வரிகள் புரட்டப்படுவதில்லை. ஆகவே, அவை விலையில் சேருவதில்லை.

3. 'வேளாண் பொருளியற் குழாம் விவசாயச் சரிக்கட்டுதல் சட்டத் தின்கீழ் விதிக்கப்பட்ட பதப்படுத்தப்பட்ட வரிகளின், விளைவுகளின் பரிசீலனை', வாஷிங்டன், 1937, பக்கம் 4-7. வரி புரட்டுகை, வரி நிலைப்பாடு இவைபற்றிய அனுபவத்தை ஒட்டிய ஆராய்ச்சிக்கு இது சிறந்த ஓர் எடுத் துக்காட்டாகும். ஆயினும், நாம் இங்கே தந்துள்ளதைவிட அக் குழாம் வரி புரட்டுகைக்கு விரிவான விளக்கம் தந்துள்ளது. வரிவிதிப்பினால் கிடைத் துள்ள தொகைகளை எவ்வாறு செலவிடுகிறார்கள் என்பது இப் பரிசீலனையின் ஒரு கூறாக இருப்பதே இதற்குக் காரணமாகும்.

4. விலையில் ஒரு சிறிய மாறுதலால் விற்கும் பண்டங்களின் கணியத்தில் பெரிய மாறுதல் ஏற்படுவதை ஒப்புமையில் தேவையின் நெகிழ்ச்சி என்கின் றோம். அவ்விதமான நிலையில் ஒரு குறிப்பிட்ட கணியத்தை விற்கவேண்டும் என்றால், அது முற்பட்ட புரட்டுகையினால்தான் இயலும். இவ்விதப் புரட்டுகையினால் பண்டங்களின் விலை ஏறும். இதனால் விற்கப்படாது தேங்கிக் கிடக்கும் பண்டங்களின் கணியமும் மிகுதியாக இருக்கும். ஆகவே, குடியானவரின் நிலைமையும் நொய்யதாகவே இருக்கும். அவன் விற்பனைக்குக் கொணர்ந்திருக்கும் விளையுள்கள் பூராவையும் பதப்படுத்துவோர்கள் வாங்க மாட்டார்கள். விலையில் ஒரு குறிப்பிட்ட மாறுதலினால், ஒப்புமையில்

பண்டங்கள் விற்கும் கணியத்தில் சிறிய மாறுதலே ஏற்பட்டால், அதைத் தேவை நெகிழ்ச்சியின்மை என்கின்றோம். இங்கு மேலே குறிப்பிட்டதற்கு நேர் எதிரான நிலை நிலவுகிறது. முற்பட்ட புரட்டுகையை எதிர்த்து நிற்பதற்கு வேண்டிய தற்காப்புப் படைகள் நுகர்வோருக்கு இல்லாததால் அவர்கள் வலுவற்றவர்களாக இருக்கின்றார்கள். அப்பொழுதெல்லாம் விலை உயர்வின் காரணமாகப் பண்டங்களுக்கான மார்க்கெட்டு சுருங்குவதில்லை. (நுகர்வோரின் தேவை நெகிழ்ச்சி இல்லாததாக இருக்கும்பொழுது பதப்படுத்தப்பட்டவிளையுள்கள் விற்கப்படுகின்றன என்றும், அப்பொழுது மிகுதியும் முற்றுரிமை நிலைகள் நிலவுகின்றன என்றும் வைத்துக்கொள்வோம். அங்ஙனமானால், விலை முன்பே உச்சகட்டத்தில் இருக்கிறதெனவும், நுகர்வோரின் தேவை நெகிழ்ச்சி இல்லாததாக இருந்தபோதிலும் மேற்கொண்டும் விலையை உயர்த்துவதை அவர்கள் வன்மையாக எதிர்ப்பார்கள் என்றும் கொள்ளல் வேண்டும். இவ்வித நிலையில் பெருமளவு பிற்பட்ட புரட்டுகை நடக்கும் என்பது நாம் எதிர்பார்த்த விளைவே ஆகும். வரியின் ஒரு பகுதியைப் பதப்படுத்துவோர்களே கொடுப்பார்கள் என்று நாம் எதிர்பார்ப்பதும் பொருத்தமே யாகும்.)

5. 'நிரந்தர ஆண்டுத் தொகை'யின் (perpetual annuity) மூலதன மதிப்பாவது: வருடாந்தர நிகர வருமானம்/நாம் வேண்டும் வருமான விகிதம். இவ்விடத்து 1200/.05=24,000 டாலர்.

6. வாணிப நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படும் நிலத்தின்மீது விதிக்கப்படும் எதிர்பாராத புதிய சொத்து வரிகளை, விளையுளின் விலையின் ஒரு கூறாக முற்பட்டுப் புரட்டப் பொதுவாக சாத்தியக்கூறு இருக்கிறது. ஆனால், நுகர்வுக்காகப் (உ-ம் குடியிருப்புப் போன்றவை) பயன்படுத்தப்படும் நிலத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகளைப் புரட்டுவதற்கு யாதொரு வாய்ப்பும் இல்லை. மூலதனமாக்கப்படாமலும், இவ்வாறு நிலத்தை வாங்கும்பொழுது, பிற்பட்டுப் புரட்டப்படாமலும் இருக்கும் வரிகளின் நிலைப்பாடு அந் நிலக்கிழவர்களையே ஒறுக்கிறது.

7. முதலீடு செய்தாலும் செய்யாவிட்டாலும், எல்லா வருமானங்களின் மீதும் பொதுப்படையாக வரி விதிக்கப்படுகிறது என்று கொண்டால், எந்த விகிதங்களில் தனியார் முதலீடு செய்ய முனைவர் என்பதைக் குறைப்பது தான் வரியின் மொத்த விளைவாக இருக்கும். எல்லா வருமானமும் ஒரே வரி விதிப்பு வீதத்திற்கு உட்பட்டிருக்கிறது என்றும், சேமிப்பின் நாட்டம் (propensity to save) ஒரு குறிப்பிட்ட அளவு இருக்கிறது என்றும் கொண்டால், வரிகளைச் செலுத்திய பின்பு, குறைந்த ஊதியத்திற்கு முதலீடு செய்யப் பொதுவான இணக்கத்தை எல்லோரிடத்தும் ஏற்படுத்தும் என்பது வரியின் விளைவாக இருக்கும். முதலீடுகளினின்றும் கிடைக்கும் ஊதியம் கூடுதலாயிருந்தாலும் சரி, குறைவாயிருந்தாலும் சரி, பெருத்த அளவு சேமிப்புச் செய்யப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட அளவு சேமிப்பு இருக்கிறது என்று வைத்துக்கொண்டால், ஒரு பொதுவான வரிவிதிப்பின்கீழ் ஒருவர் வரிக்கு உள்ளான கடன் பத்திரங்களை வாங்குகிறாரா இல்லையா என்பதைத் தீர்மானிக்க முடியாது. இவ்வாறாக, வரியின் நீண்ட கால விளைவு, ஒருவர் முதலீடு செய்வதற்கு வேண்டும் ஊதியத்தைக் குறைக்கும். அங்ஙனம் நேருமானால், வரியை மூலதனமாக்கினாலும், முதலீட்டுக் கடன் பத்திரங்களின் விலை நிரந்தரமாகக் குறையாது. குறைந்த ஊதிய வீதம் விலைகளை விழாது தடுக்கலாம்.

8. இவை சொத்து வரிகளிலிருந்து கடன் பத்திரங்களுக்கு அளிக்கும் விலக்குக்கும் பொருந்தும்.

9. முன்னரே கண்டவாறு அரசாங்கத்தார் வரி வரவுகளைச் செலவழிப்பதன் விளைவுகளை நாம் பகுத்தாயவில்லை. இவ்வாறு அரசாங்கம் செலவழிப்பதனால் விளையுள்களுக்கு உள்ள மொத்தத் தேவையும், சில காரணிகளின் உற்பத்தித்திறனின் மதிப்பும் உயரக்கூடும். இதனால் இவற்றின் மீது வரி தண்டுவதற்கு முன்பே இவற்றின் வருமானங்கள் உயரலாம்.

10. வரி விதிக்கப்பட்ட இப் பரப்புகளில் எல்லா வருமானங்களும் உயர வேண்டுமென்பதில்லை; சில உயரலாம்; சில தாழலாம். ஆனால், அரசாங்கம் வரி வருவாய்களைச் செலவழிப்பதனால் ஏற்படும் விளைவுகளை நாம் ஒதுக்க வேண்டும். வரி விதிக்கப்பட்ட பரப்புகளில் மொத்த வருமானங்கள் ஏறுமென்று நாம் கருதுவதற்குப் போதிய முகாந்தரமில்லை. இவ்வாறாகச் சில வருமானங்கள் உயரலாம்; சில தாழலாம். இதனால் இலாபத்தினின்று கிடைக்கும் வருமானம் பாதிக்கப்படலாம். ஆயினும், இந் நிலை நெடுங்காலத்திற்குத் தொடர்ந்து காலவரையறையின்றி நீடிக்க முடியாது. ஏனெனில், இலாபம் தராத கம்பெனிகள் மறைந்தொழியும். வரிவிதிக்கப்பட்ட பரப்பில் வேலை வாய்ப்பும் குறையும்.

11. இஃது இறுதிநிலை வரிவிதிப்பின் விகிதம் 100 % -க்கும் குறைவாக இருக்கிறதென்று ஒப்புக்கொள்கிறது. ஆகவே, வரிகளைக் கொடுத்தபின்பும் கூடுதல் வருமானத்தில் ஒரு பகுதி வருமானத்தைப் பெறுவோருக்கு மிஞ்சுகிறது.

12. அதனால் தனியாள் செலவு செய்யக்கூடிய வருமானங்கள் குறைந்து, அதனால் பண்டங்களுக்கான தேவையும் குறைந்து, விலை உயர்வுகளைத் தடுக்கலாம். ஆனால், இது வரியின் ஒரு மறைமுகமான விளைவு என்று நாம் இக்காரணத்தை நம் சர்ச்சைகளினின்று ஒதுக்கிவிட்டோம். ஆகவே, இதற்கும் நாம் வரி நிலைப்பாட்டுக்குத் தந்த விளக்கத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை.

13. கூட்டரசும் மாநிலங்களும் கார்ப்பரேஷன்களின் மிகை லாபங்கள் மீதும், நிகர வருமானத்தின்மீதும் விதிக்கும் வரிகள் இந்த ரகத்தைச் சார்ந்தவை. இணைக்கப்படாத வியாபாரங்களுக்கு (unincorporated businesses) நிகர வருமானவரிகள் பிரயோகிக்கப்படாததற்குத் தலையாய காரணம் பலபடித்தான (heterogeneous) கம்பெனிகள் தொகுதியின் நிகர வருமானத்திற்கு ஒரு தெளிவான விளக்கம் கொடுத்து அதைப் பின்பற்றுவதில் உள்ள சிரமமேயாகும்.

14. செப்டம்பர் 1956-ல் தேசியவரி சஞ்சிகையில் (National Tax Journal)- யூஜனே எம். லெர்னரும், எல்டன் எஸ். ஹென்டிரிக்ஸனும், 1927லிருந்து 1952வரை கார்ப்பரேஷன் வருமானத்தின்மீது கூட்டரசின் வரிகளும் பொறி வழியாக்க முதலீட்டின் மீது கிடைத்த ஊதிய வீதமும் (Rate of return) என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையைப் பார்க்க.

15. பண்டங்களை வாங்கும் கணியத்தில் ஏற்படும சதவிகித மாறுதலுக்கும், அதன் விலையில் ஏற்படும் மாறுதலுக்கும் உள்ள உறவே நெகிழ்ச்சி என்று கூறப்படுகிறது. வெளிப்பாட்டின் மாறுதலுக்கும், ஆக்கச் செலவின் மாறு

தலுக்கும் இடையேயுள்ள உறவே ஆக்கச் செலவின் நெகிழ்ச்சி எனக் கூறப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட விலைமாறுதலின் விளைவாக ஒப்புமையில், வாங்கும கணியத்தில் சிறிதளவே மாறுதல் ஏற்பட்டால் அஃது தேவை நெகிழ்ச்சி இன்மை எனப்படுகிறது. அதேபோல நெகிழ்ச்சி இல்லாத ஆக்கச் செலவு ராசியினுல், (cost function), வெளிப்பாட்டில் ஒரு சிறிய மாறுதல் ஏற்பட்டாலும் அஃது ஆக்கச் செலவில் பெருத்த அளவு சதவிகித மாறுதலை ஏற்படுத்தும். தேவை நெகிழ்ச்சி மிகவும் கூடுதலாக இருக்குமானுல் சிறிதளவு விலை ஏறினுலும், பெருத்த கணியம் பண்டங்களை வாங்குவது குறையும். ஆகவே (மற்றவை மாருதிருப்பின்), விலையேற்றத்தின்மூலம் ஒரு வரியை முற்பட்டுப் புரட்டுகைக்குத் தேவை நெகிழ்ச்சி ஆக்கமளிப்பதில்லை. ஆக்கச் செலவு நெகிழ்ச்சி ராசியும் முற்பட்ட. புரட்டுகைக்கு ஆக்கமளிப்பதில்லை. ஏனெனில், விலையின் ஏற்றத்தால் வெளிப்பாடு குறைந்தால், இறுதி நிலை ஆக்கச் செலவுகள் மிகச் சொற்பமாகவே குறைகின்றன. இக்கருத்துகளெல்லாம் விரிவுபடுத்தப்பட்டு அடுத்த பிரிவில் பூரணமாகப் பிரயோகிக்கப்படுகின்றன.

16. தூய போட்டியில் மொத்த மார்க்கெட் வெளிப்பாட்டில் தனியொரு விற்போரின் பங்கு மிகக் குறைவாக இருப்பதால், அவர் உற்பத்தி செய்யும் பொருளின் கணியத்தில் மாறுதல்கள் ஏற்பட்டால், அதனுல் மார்க்கெட் விலையில் யாதொரு கணிசமான பயனும் ஏற்படாது.

17. $E_1$ கோணத்திற்கு ஒத்ததான $E_2$ கோணம், $E_3$ கோணத்தைவிட மிகவும் சிறிய அளவினது. $E_3$ கோணம அதற்கு ஒத்ததான $E_1$ கோணத்திற்குச் சமமாக இருக்கின்றது. இவ்வாறு வெளிப்பாட்டைக் குறைத்து $E_1$-க்கு இடப்புறமாக நாம் சாயுந்தோறும், $MC$ என்ற நிலைத்த ஆக்கச் செலவுகள் உள்ள நிறுவனத்தைக் காட்டிலும் $MC'$ என்ற நிலைத்த ஆக்கச் செலவுகள் உள்ள நிறுவனத்தின் இலாப இழப்பு மிக விரைவாக இருக்கிறது.

18. இவ்வுதாரணத்தில் இறுதிநிலை ஆக்கச் செலவுடன் வரியை இணைப்பதில் யாதொரு பயனுமில்லை. ஏனெனில், அவ்வாருன வளைகோடு, வெளிப்பாட்டின் கணிய சாத்தியம் ஒன்றே ஒன்ருகத்தான் இருக்கமுடியும் என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. இது தொழில்நுட்ப முறையைப் பொறுத்தது.

19. ஆக்கச் செலவு நிலைகளையே பொதுவாக நாம் 'சப்ளை' என்று ஈண்டுக் குறிப்பிடுகின்ருேம். தூய போட்டி நிலவும்பொழுது இறுதிநிலை ஆக்கச் செலவும், இறுதிநிலை சப்ளையும் முழுதும் ஒத்திருந்தாலும், நிறைகுறைப் போட்டியில் சப்ளை வளைகோடு என்பதாக ஒன்றும் கிடையாது.

20. கணியத்தைக் குறைத்தோ அல்லது பண்டங்களின் தரத்தைக் குறைத்தோ வரியைச் சாதுரியமாக முற்பட்டுப் புரட்ட முடியும். ஆகையால், 5 சதத்திற்கு விற்கும் கற்கண்டு சிறிய அளவினதாகவோ அல்லது குறைந்த தரமாகவோ இருக்கலாம்.

21. B என்ற மாநிலத்தில் பெட்ரோல் வரிவீதம் உயர்த்தப்பட்டபொழுது, அதை யடுத்திருக்கும் A என்ற மாநிலத்தில பெட்ரோல் விலையின் மீது ஏற்படும் விளைவுகளை ஆராய்வது அறிவுக்கு விருந்தாகும். B மாநிலத்தின் எல்லைப்புறத்தில் உள்ள சில்லறை வியாபாரிகள் எல்லைக் கோட்டிற்கு அப்பாலுள்ள A மாநிலத்தின் சில்லறை வியாபாரிகளின்மீது வரியைப் புரட்ட

முற்பட்டால் தங்கள் வாடிக்கையைப் பெரிதும் இழக்க நேரிடும். ஆயினும், B மாநிலத்தில் புதிய வரி விதித்தால், A மாநிலத்தில் நிலைமைகளில் மாறுதல் ஏற்படுவது திண்ணம். B மாநிலத்தில் விற்பனையாகும் பெட்ரோலின்மீது விதிக்கப்படும் வரியின் ஒரு பகுதியைத் தாங்களே கொடுக்குமாறு மொத்த வியாபாரிகள் அடித்தள விலைகளைக் குறைத்தால், அவர்கள் A மாநிலத்தில் உள்ள விற்பனையாளர்களுக்கு விற்கும் அடித்தள விலைகளை ஏற்றுவது சாத்தியமே. இங்ஙனம் செய்தால் வரியின் ஒரு பகுதி இரு மாநிலங்களிலும் உள்ள நுகருவோரின்மீது புரட்டப்படும்.

22. வரியைத் தவிர்ப்பதற்கும், வரியினின்று தப்பித்துக்கொள்வ தற்கும் தெளிவான வேறுபாடு கற்பிக்கவேண்டும். முன்னையது சட்டப்படி முற்றும் செல்லக்கூடியது; பின்னையது சட்டவிரோதமானதாகும். சட்டப் படி கொடுக்கவேண்டிய வரியைக் கொடாமலிருப்பது என்பது இதன் பொருளாகும். ஆள்வரி விதிக்கப்படாத ஒரு மாநிலத்துக்குக் குடிபுகுவதன் மூலம் ஒருவன் ஆள்வரியைத் தவிர்க்கலாம். வரி அதிகாரிகளின் கண்ணில் படாதவாறு இருப்பதன்மூலம் அவ் வரியினின்றும் தப்பித்துக்கொள்ளலாம்.

23. ரிச்சர்டு ஏ. மஸ்கிரேவ், 'நிலைபேற்றுக்கும் பொருளியல் வளர்ச்சிக்கு மான கூட்டரசின் வரிக்கொள்கை-வரி அமைப்பின் நிலைப்பாடும் நுகர்வின் மீது அதன் விளைவுகளும்; பொருளியல் அறிக்கை தயாரித்துக் கூட்டுக் கமிட்டிக்கு அளிக்கப்பட்ட ஏடுகள்', வாஷிங்டன், 1955 (Richard A. Musgrave, 'The Incidence of the Tax Structure and its Effects on Consumption in Federal Tax Policy for Economic Growth and Stability).

# 15. சொத்து வரிவிதிப்பு

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் சொத்து வரிகளை விதிக்கின்றன. மாநில, தல அரசாங்கங்கள் சொத்து வரியை முன்னதாகவே தமதாக்கிக் கொண்டன. அங்ஙனம் அவை ஆக்கிக்கொள்ளாவிட்டாலும், மக்கள் தொகையை அடிப்படையாகக்கொண்டன்றிக் கூட்டரசு நேர்முக வரிகளைப் போடக்கூடாது என்று அரசியல் சட்டத்தினால் தடுக்கப்பட்டிருப்பதாலும், கூட்டரசு சொத்தின்மீது வரி விதிப்பது சாத்தியமாயிராது. 25ஆம் அட்டவணையில் காட்டியவாறு, மாநில அரசாங்கங்களுக்குச் சொத்து வரியிலிருந்து கிடைக்கும் வருவாய் வெகுவாகக் குறைந்துகொண்டே வருகிறது. மாநிலங்களுக்குத் தற்பொழுது சொத்து வரியிலிருந்து பெருத்த வருவாய்கள் கிடைக்க வில்லை. பல மாநிலங்கள் சொத்து வரி விதிப்பைக் கைவிட்டதும், மாநிலங்களுக்கு வேறு பல வருவாயினங்கள் கிடைத்ததும் இதற் குக் காரணங்களாகும். மாநிலங்கள் சொத்துவரிகளைத் தங்கள் வருவாய்க்கு என நம்பியிருப்பதைக் குறைத்துக்கொண்ட அதே சமயம், தல அரசாங்கங்கள் இரண்டாம் உலகப் போர்வரை, இவ் வரிகளை அதிகமாக நம்பியிருக்க ஆரம்பித்தன. 1930-க்கும், 1940-க்கும் இடைப்பட்ட பத்து ஆண்டுகளில் மாநிலங்கள் சொத்து வரிவிதிப்பைப் பெரும்பாலும் கைவிட்டன. அவைகள் இவ்வாறு கைவிட்டதற்குத் தலையாய காரணம் தல அரசாங் கங்களுக்கு இவ் வரி இனத்தை விட்டுக்கொடுக்கவேண்டும் என் றெண்ணியதே ஆகும். 1922-க்கும் 1942-க்கும் இடையில் சொத்துவரிமூலம் மாநில அரசாங்கங்களுக்குக் கிடைத்த வருவாய் சிறிதே குறைந்தாலும் (பொது வருவாய்களின் ஒரு சதவிகிதமாகக் கணக்கிட்டபொழுது இவை மிகக் கணிசமாகக் குறைந்தாலும்), அதே காலத்தில் சொத்துவரியிலிருந்து தல அரசாங்கங்களுக்குக்

## அட்டவணை 25

### மொத்தப் பொது வருவாய்களில் சொத்து வரிகளின் சதவிகிதம் (மானியங்கள் நீங்கலாக) 1902—1958 ஆண்டுகளுக்கு*

| ஆண்டு | மாநிலம் | தல அரசாங்கம | இரண்டையும் சேர்த்து |
|---|---|---|---|
| 1902 | 44·8 | 78·2 | 71·9 |
| 1913 | 38·9 | 77·4 | 70·0 |
| 1922 | 31·2 | 83·8 | 71·2 |
| 1932 | 15·2 | 85·2 | 63·8 |
| 1942 | 4.8 | 80·9 | 40·5 |
| 1952 | 3·4 | 71·6 | 38·2 |
| 1958 | 3·1 | 70·3 | 38·6 |

* மூல ஆதாரங்கள்: மக்கள் தொகைக் குழு வெளியிட்ட மாநில, தல அரசாங்க நிதிகளைப்பற்றிய வரலாற்றுப் புள்ளி விவரங்கள், 1902–1953, பக்கம் 19, 21-ம் 1958ஆம் ஆண்டைய அரசாங்க நிதிகளின் சுருக்கம், பக்கம் 13–ம் ஆகும். (Sources: Bureau of the Census, Historical Statistics on State and Local Government Finances, 1902–1953, pp. 19, 21; and 'Summary of Governmental Finances in 1958, p. 13.)

கிடைத்த வருவாய் கிட்டத்தட்ட 50 சதவிகிதம் உயர்ந்தது. 1942-லிருந்து நகரங்களின் மக்கள் தொகை விரைவாகப் பெருகியது. இதனால் நகரங்களின் முக்கியத்துவம் உயர்ந்தது. 1958-ல் எல்லாத் தல அரசாங்கங்களுக்கும் சொத்து வரியிலிருந்து கிடைத்த வருவாய், மொத்த வருவாயில் 70 சதவிகிதமாக இருந்தது. 25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையைக் கொண்ட நகரங்களுக்குச் சொத்து வரியிலிருந்து கிடைத்த வருவாய் அவற்றின் மொத்த வருவாயில் 58 சதவிகிதமே இருந்தது. 25,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையைக் கொண்ட நகரங்களின் மொத்த வருவாய் எல்லாத் தல அரசாங்கங்களின் மொத்த வருவாயில் ஐந்தில் இரண்டு பங்காக இருந்தது.[1] மாவட்ட (county) மொத்த வருவாய்களின் நான்கில் மூன்று பங்கும், சிறிய நகரங்கள், பட்டணங்கள், நகர்ப்புறங்கள் (townships), பள்ளி மாவட்டங்கள் (school districts), தனி மாவட்டங்கள் (special districts) இவற்றின் மொத்த வருவாய்களில் எட்டில் ஏழு பங்கும் சொத்து வரிகளிலிருந்து கிடைக்கிறது.

மிகப் பழைய வரிவிதிப்புகளில் சொத்து வரியும் ஒன்றாகும். இன்றும் அஃது அமெரிக்க வரிமுறையில் ஒரு முக்கிய இடத்தை

வகிக்கிறது. ஆனால், கருதுகோள் அளவில் பார்க்கும்பொழுது அதில் போற்றத்தக்க அமிசங்கள் ஒன்றுமில்லை எனலாம். நடப்பில், நாடெங்கிலும் அதன் ஆட்சியின் தரமும், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு வேறுபடுகிறது. சில இடங்களில் ஆட்சி நன்றாகவும், சில இடங்களில் மோசமாகவும் நடைபெறுகிறது. சுருங்கக் கூறின், அது ஒரு மோசமான வரியாகும். அசட்டையாயிருக்கும் ஆட்சியினால் (indifferent administration) அதன் தீய விளைவுகள் மேலும் அதிகத் தீமை பயப்பனவாக ஆகின்றன.

### சொத்துவரியை அமுலாக்குவதில் உள்ள படிகள்

சொத்து வரியை அமுல் செய்வதில் நான்கு படிகள் உள்ளன. அவையாவன : தீர்வை (assessment), சமனாக்கல் (equalization), பங்கீடு (apportionment), வசூல் (collection). இவை ஒவ்வொன்றையும்பற்றி நாம் சற்று விரிவாக ஆராய்வோம். இவ்விதம் ஆராயும் பொழுது எவ்விதப் பிரச்சினைகள் எழுகின்றன என்பதும், ஆட்சியின் தரம் எத்தகையது என்பதும் புலனாகும். இவ்வதிகாரத்தின் இறுதியில் சொத்து வரியைப்பற்றிய கருதுகோளைப் பரிசீலிப்போம்.

தீர்வை : சொத்தின் பெறுமானத்தை அறுதியிட்டு வரி விதிப்பதைச் சொத்துவரி விதிப்பின் தளம் (base) எனலாம். இத் தளங்களின்மீது வீதாசார முறையில் (flat rate) பல மடங்கு (time) வரி செலுத்தப்படுகிறது. வரியைக் கொடுக்கவேண்டிய சொத்தின் பெறுமானத்தை அறுதியிடுவது முதற்படியாகும். இதைத்தான் தீர்வையிடுவது (to assess) என்கின்றோம். தீர்வை ராசியில் (function) இரண்டு படிகள் உள்ளன. அவையாவன : (1) வரிப் பொத்தகத்தில் வரிவிதிக்கப்படவேண்டிய சொத்தைச் சேர்ப்பது; (2) வரி நோக்கங்களுக்காகச் சொத்தின் பெறுமானத்தை நிர்ணயிப்பது. இவற்றில் ஒன்றேனும் நாம் நினைப்பதுபோல் அவ்வளவு சுளுவானதன்று. வரிப் பொத்தகத்தில் வரிவிதிக்கப்படவேண்டிய சொத்தைச் சேர்ப்பதற்கு, அவ்வாறு வரி விதிக்கப்படவேண்டிய சொத்து இருக்கின்றது என்பதை வரி அதிகாரிகள் அறிந்திருக்க வேண்டியது இன்றியமையாதது. வரி செலுத்துவோரே தம்மிடமுள்ள வரிவிதிக்கப்படவேண்டிய சொத்து இனங்களைப்பற்றி அரசாங்கத்துக்கு அறிக்கை அனுப்புவதை, வரிவிதிப்புக்கு ஆதாரமாகக் கொள்வது சாதாரணமாக எங்கும் காணப்படும் வழக்கமாகும். இம் முறையினால் தீர்வை இறுப்போருக்கு (assessor) சொத்தைப்பற்றி விரிவாகப் பரிசீலனை செய்ய வேண்டிய அவசியம் இல்லாமற்போகிறது. ஆனால், இம் முறையில் வரி செலுத்தாமல் தப்பித்துக்கொள்வதற்குப் பல வழிகள் இருக்கின்றன.

ஆண்டுதோறும் தலத்திலேயே தீர்வை இறுப்பதற்கு ஏராள மான தீர்வை இறுப்போர் வேண்டும். இதற்காகும் செலவு தாங்க முடியாததாக இருக்கும். ஆகவே, தீர்வை இறுப்புப் பெரும்பாலும் தீர்வை இறுப்போரின் அலுவலகத்திலேயே நடைபெறுகிறது. முன்னைய ஆண்டைய அறிக்கையைப் படி செய்தோ அல்லது அதில் சிறிது திருத்தியோ தீர்வையிறுப்பு நடைபெறுகிறது. தாவரச் சொத்துகளை (நிலம், கட்டடங்கள்) வரிப் பொத்தகத்தில் சேர்ப் பது எளிது. இருந்தாலும் ஒரேபடித்தான (uniformly) பெரு நிலப் பரப்புகள், தீர்வை இறுப்பினின்றும் முற்றும் தப்பித்துக் கொண்டன என்பது விசாரணைகளின்போது பலகாலும் தெரிய வந்தது. வான் ஊர்திகளில் ஏறி எடுத்த புகைப்படங்களுடன் வரிப் படங்களை (tax maps) ஒப்பிடுவது, வரிப் பொத்தகத்தில் தாவரச் சொத்தைக் கொணர்தற்கு ஒரு பயனுள்ள முறையாகும். ஆனல், தனியாள் ஜங்கமச் சொத்தை (movable personal property) வரிப் பொத்தகத்தில் கொணர்வதுடன் ஒப்பிடும்பொழுது, தாவரச் சொத்தை வரிப் பொத்தகத்தில் கொணர்வது ஒரு பெரிய பிரச்சினையன்று. தனியாள் சங்கமச் சொத்தில் புலனாகும் சொத்து (tangible), புலனாகாத சொத்து (intangible) என்று இருவகை உண்டு. தனியாள் புலனாகும் சொத்தில் எந்திரங்கள், சாதனங்கள், எடுபிடி (நாற்காலி, மேஜை முதலானவை) சாமான்கள், உடை, நகை இவையும், இவை போல்வனவும் அடங்கும். தாவரச் சொத்தில் அடங்கிய நிலமும், கட்டடங்கள் நீங்கலாக உள்ள எல்லாப் புலனாகும் பொருள்களும் (tangible things) தனியாள் புலனாகும் சொத்தில் அடங்கும். புலனாகாத தனியாள் சொத்தில் கடன் பத்திரங்களும், பாங்கு வைப்புகளும், 'நன் மதிப்பு' (good will), பேடண்டு உரிமைகளும் (patent rights) அடங்கும்.[2]

தீர்வை இறுப்போரின் கண்ணில் தனியாளின் புலனாகும் சொத்துப் படும்படி செய்வது எத்துணைச் சாத்தியம். இப்பொழுது சாதாரணமாக இருப்பதைவிட ஏராளமான விசாரணையாளர் களும், இப்பொழுது காணப்படுவதைவிட தீர்வை இறுக்கும் உத்தி யோகஸ்தர்களிடம் அதிகமான உறுதிப்பாடும், அவர்களுக்கு இல்லங்களில் புகுந்து முழுப் புலன் விசாரிப்பதற்கு வேண்டிய சட்டப்படியான அதிகாரமும் இருந்தால்தான், இப் பணியைச் சிறப் பான முறையில் நிறைவேற்ற முடியும். வரி செலுத்தாமல் தப்பித் துக் கொள்வதால் வரி செலுத்துவோருக்குக் கிடைக்கும் ஆதாயம் பெருத்தவளவில் இருப்பதாலும், வரி செலுத்தாமல் தப்பிப்பதைக் கண்டுபிடித்துத் தண்டிப்பது அருமையாதலாலும், தம் உடைமை களைப் பற்றிய அறிக்கையைத் தாமே அனுப்புமாறு சொத்தின் உரிமையாளர்களை நம்பியிருப்பதால், யாதொரு பயனுமில்லை

என்பது அனுபவவாயிலாக நமக்குத் தெரிகிறது. அதேபோல் வரி செலுத்துவோர் அனுப்பும் அறிக்கையை நம்பியிராது போதுமான தீர்வை இறுப்போர்களை நியமனம் செய்வதும், அவர்கள் தங்கள் கடமையைச் செவ்வனே ஆற்றப் போதுமான அதிகாரத்தைக் கொடுப்பதும் சாத்தியமில்லை என்பதும் அனுபவவாயிலாக நமக்குத் தெரிகிறது.[8] இதன் விளைவாகத் தனியாள் புலனுகும் சொத்தில் பெரும்பகுதியும் வரியினின்றும் தப்பித்துக்கொள் கிறது. வரிப் பொத்தகத்தில் எளிதில் சேர்க்கப்பட்ட தொழில் நிறுவனங்களின் சொத்தின்பேரிலும், மனச்சான்றுக்கு அஞ்சும் நற் பேறில்லாத தனியாள்கள், அல்லது சட்ட விளைவுகளைப்பற்றிக் காரணமின்றி அஞ்சும் தனியாள்கள்பேரிலும், தனியாள் புலனுகும் சொத்தின் வரி ஒரு சுமையாக விழுகிறது. ஆயினும், புலனுகும் சொத்தின் சில இனங்கள், வரிப் பொத்தகத்தில் சேர்க்கப்படாது தப்பித்துக்கொள்வதற்கு வாய்ப்பில்லை. எடுத்துக்காட்டாக, மோட்டார்கார்களின் சொந்தக்காரர்களைச் சுளுவில் கண்டுபிடித்து விடலாம். இதற்குக் காரணம் மாநில மோட்டார் ஊர்திப் பதிவேடுகள் (State Motor Vehicle Registration Records) தீர்வை இறுப்போர்களுக்குக் கிடைப்பதேயாகும். கார்கள் போன்ற புலனுகும் சொத்துகளை வைத்திருப்பதற்கோ, அல்லது இயக்கு வதற்கோ உரிமங்கள் தேவைப்பட்டால், அவ்வுடைமை இவ் வரி யின் பெரும் பகுதியின் தளமாக அமைகிறது.

புலனுகும் உடைமைகளைவிடப் புலனுகாத உடைமைகளின் மீது விதிக்கப்படும் வரியைக் கொடாது தப்பித்துக்கொள்வது ஒரு கடுமையான பிரச்சினையாயிருக்கிறது. தீர்வை இறுப்போர் சாலையில் நடந்து சென்றோ, அல்லது காரில் கடுகிச் சென்றோ அவற்றைக் கண்டுபிடிக்க முடியாது. தல பாங்கு வைப்புகளைத் (local bank deposits) தவிர்த்து எஞ்சிய புலனுகாத உடைமைகளைப் பற்றி அரசாங்கத்திற்கு அறிக்கை அனுப்பாமல் வரி கொடுப்பதி னின்றும் தப்பித்துக்கொள்ளலாம். வரிப் பொத்தகத்தில் தாவர சொத்தைச் சேர்ப்பதன் வாயிலாகக் கடுமையாக உழைக்கும் தீர்வை இறுப்போர் ஒருவர் நல்ல பெயரை எடுக்கமுடியும். தனியாள் புலனுகும் உடைமையைப்பொறுத்தவரை (சில இனங்கள் நீங்க லாக) அவற்றை வரிப் பொத்தகத்தில் சேர்ப்பதில் அவர் தோல்வியே காண்பார். புலனுகாத உடைமையைப் பொறுத்த வரை அவர் அவற்றை வரிப்பொத்தகத்தில் சேர்ப்பதில் முற்றும் தோல்வியே யடைவார்.[9] புலனுகாத உடைமையைப் பொறுத்த வரை ஒருவர் இறந்த பின்பு சொத்துக் கைமாறும்பொழுது, பின் னிட்டு வசூலிக்கும் வரிகளை (back taxes) வசூலித்துவிடலாம்.

வரிப் பொத்தகத்தில் சொத்தைக் கொணர்வது தீர்வை இறுப்பில் முதற்படியாகும். சொத்துதான் வரித் தளமாக (tax base) இருக்கவேண்டுமென்ருல், வரி விதிப்பதற்காக அதன் பெறுமானத்தையும் அறுதியிட வேண்டும். மார்க்கெட்டில் என்ன விலை கிடைக்குமோ அதுதான் ஒரு பொருளின் உண்மையான பெறுமானமாகும். ஆனால், வரி விதிக்கப்பட்ட உடைமையின் பெரும் பகுதியையும், அதன் உடைமைக்காரர் விற்பதில்லை. ஆகவே, அவற்றின் பெறுமானத்தைப் புறவயமாக (objective) நிர்ணயிப்பது இயலாத காரியமாகும். வியாபாரி கையிருப்பாக விற்பனைக்கு வைத்திருக்கும் பண்டங்களின் பெறுமானத்தை எளிதில் கண்டுபிடிக்க முடியாது. அரைகுறையாக முடிந்த பொருள்கள் (partly manufactured goods), தாவரச் சொத்தின் பெரும்பகுதி, பயன்படுத்தப்படும் நுகர்ச்சிப் பொருள்களின் பெரும்பகுதி இவற்றின் பெறுமானத்தைத் தீர்வை இறுப்போர், தாமே மதிப்பிடவேண்டும். இதனல் தீர்வையிடப்பட்ட மதிப்பீட்டைப்பற்றிப் பல வழக்குகள் எழுந்தன. மார்க்கெட் மதிப்புக்குக் குறைவாகவே பொதுவாகத் தீர்வை யிறுக்கப்படுகிறது; இல்லையாளுல் இன்னும் பல வழக்குகள் எழுந்திருக்கக் கூடும்.

சொத்துகளின் 'உண்மையான' மதிப்பின் ஒரு வீதாசாரமாகவே (proportion) தீர்வையை இறுக்கும்படி பொதுவாகச் சொத்துவரிச் சட்டங்கள் கோருகின்றன. சொத்தை விரும்பி வாங்கும் ஒருவருக்குச் சொத்தை விற்க, ஒருவர் விரும்பாதவிடத்து 'உண்மையான' மதிப்புக்கு ஒரு பதிலி வேண்டப்படுகிறது. ஆனல், உண்மையான மதிப்புக்கு மாற்ருக ஆளப்படும் இப் பதிலி உண்மையான மதிப்பாகாது. ஆதலால், பலகாலும் வரி செலுத்துவோர் தீர்வை மதிப்பீட்டை நீதிமன்றங்களில் மீள்நோக்கு (review) செய்கிருர்கள். பொதுவாகத் தீர்வை மதிப்பீடு குறைவாக இருந்தால், நீதிமன்ற மீள்நோக்கில், தீர்வை மதிப்பீடு உயரலாமே தவிரக் குறையாது. நீதிமன்றம் குறிப்பிட்ட தீர்வை மதிப்பீட்டின்மீது தன் கவனத்தைத் திருப்பும்பொழுது, பிற தீர்வை மதிப்பீடுகளுடன் ஒப்பிடுகையில், இம் மதிப்பீடு கூடுதலாக இருந்தாலும், சட்டப்படி செய்யவேண்டிய தீர்வை மதிப்பீட்டுக்குக் குறைவாக இருந்தால், அதை உயர்த்துவது நீதிமன்ற மீள்நோக்கின் கடமை என்பதே இதற்குக் காரணமாகும். அதனல் தீர்வை மதிப்பீட்டைப்பற்றிப் பேசாமலும், நீதிமன்றங்களுக்குப் போகாமலும் இருப்பதே நல்லது. நீதிமன்றத்துக்குச் சென்று அவர்களால் தீர்வை மதிப்பீடு உயர்த்தப்படுவதைக்காட்டிலும், இப்பொழுதுள்ள தீர்வை மதிப்பீட்டை நாம் அதிகமானதென்று கருதினலும் அவற்றை ஏற்றுக்கொள்வதே நல்லது. குறைவாகத்

தீர்வையை மதிப்பிடுவதற்கு ஒரு காரணம் வழக்குகளைத் தவிர்க்க வேண்டும் என்பதே. மற்றொரு காரணத்தைச் சமனுக்கல்பற்றி ஆராயும்பொழுது பார்ப்போம்.

தாவரச் சொத்தையும் தனியாள் புலனுகும் சொத்தையும் விடப் புலனுகாத (intangible) சொத்தைப் பொதுவாக இலகுவில் மதிப்பீடு செய்யலாம். பாங்கு வைப்புத் தொகைகளின் உண்மையான மதிப்பைக் கண்டுபிடிப்பது ஒரு பிரச்சினையன்று. பல பங்குகள், கடன் பத்திரங்கள் (bonds) பற்றிய அன்றுட மார்க்கெட் மேற்கோள்கள் (market quotations) தொடர்ந்து கிடைக்கின்றன. ஏனைய பங்குகள், கடன் பத்திரங்கள், பந்தகங்கள், பேடண்டு உரிமைகள் முதலானவற்றைப்பற்றியும், நன் மதிப்பைப் (good will) பற்றியும், ஏட்டளவிலாவது அவற்றின் மதிப்பைக் கணக்கிட முடியும். இம் மதிப்பீடுகள் வரி நோக்கங்களுக்குப் போதுமானவை. புலனுகாத உடைமையைப் (intangibles) பொறுத்தவரை, தலையாய தீர்வை மதிப்பீட்டுப் பிரச்சினையாவது அவற்றை எங்ஙனம் வரி அதிகாரிகளின் கண்முன் கொணர்வது என்பதேயல்லாது அவற்றை மதிப்பீடு செய்வது அன்று.

தனியாள் புலனுகும் உடைமைகள் பலதிறப்பட்டனவாக இருப்பதால், அவற்றை வரி விதிப்பதற்காக மதிப்பிடுவது மிகக் கடினமாகும். பழையதாய்ப்போன மோட்டார் கார்களுக்குத் தரமான வியாபார மதிப்புகள் (standard trade in values) இருக்கின்றன. அவற்றைத் தோராயமாக மதிப்பிடுவதும் கடினமன்று. ஆனுல், புலனுகும் சொத்து வகையில் அடங்கிய பிற இனங்களுக்குத் தரமான பழையதாய்ப்போன மார்க்கெட் மதிப்புகள் (standardized used market values) இன்மையால் அவற்றை வல்லுநர்தாம் மதிப்பிட வேண்டும். அவற்றின் பெறுமானத்தைக் குறைவாக மதிப்பிட்டு அரசாங்கத்திற்கு அறிக்கை அனுப்புவதால் மதிப்பிடுவதற்கு வல்லுநர்களை அமர்த்துவது சாத்தியமற்றதாகிறது. சாதாரணமாக இவ்வகைச் சொத்துகள் குறைத்தே தோராயமாக மதிப்பீடு செய்யப்படுகின்றன. இவ்வகையான சொத்துப் பெரிதும் வரியினின்றும் தப்பித்துக்கொள்கிறது. வரி போடுவதற்காக மதிப்பீட்டை நிர்ணயம் செய்வதற்கு அமர்த்தப்படும் வல்லுநர்களும் அத்துணை கெட்டிக்காரர்களல்லர்.

தாவரச் சொத்து வரிப்பட்டியலிலிருந்து தப்புவது மிகக் கடினம். தாவரச் சொத்துகள் யாவும் கிட்டத்தட்ட ஒரேபடித்தாய் இருப்பதால் அவற்றின் மதிப்பீடுகளை மார்க்கெட் விலைகளுடன் ஒப்பிடுவதும், அவற்றை மதிப்பிடுவதில் நழுவு விதி (slide rule)

முறைகளைக் கையாளுவதும் சாத்தியம். இக் காரணங்களினால், உடைமை வரி என்றாலே பொதுவாகத் தாவர சொத்து வரியைத் தான் குறிக்கின்றது. இவ் வரிபற்றிய சட்டம் நடப்பு முறைக்குத் தோதாய் இல்லாமலிருக்கலாம். வேறுவகை உடைமைகளுக்குச் சட்டம் தனிச் சலுகையோ அல்லது வரியினின்று விதிவிலக்கோ அளித்திருக்கலாம்.

சொத்து வரியைத் தீர்வை செய்வதில் முன்னேற்றம் காண்பதற்கு வழிகள் இருக்கின்றனவா? வரிப் பொத்தகத்தில் சிலவகைச் சொத்துகளைச் சேர்ப்பதில் தொல்லையாயிருந்தால், அவற்றுக்கு வரிவிதிப்பினின்றும் முழுதும் விலக்களித்தல் அல்லது எளிதான புறவய (objective) மதிப்பீட்டு முறைகளைக் கையாளுதல் ஒரு வழியாகும். இதனால் தனியாள் புலனாகும் சொத்து, புலனாகாத சொத்து இவை அனைத்திற்கும் வரிவிதிப்பினின்றும் விலக்களிக்க வேண்டி ஏற்படும். வரி கொடாது தப்பித்தல் பெருவாரியாக நிகழும்பொழுது, சட்டப்படி அச் சொத்துக்கு வரிவிதிப்பினின்று விலக்களிப்பது அறிவுடைமையாகும். இதனால் சட்டத்தை மீறுவதும், சட்டத்துக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் குடிமகன் தண்டனையடைவதும் அகலும். இதனால் அரசாங்கம், ஒப்புமையில், ஒரு சிறிது வருவாயையே இழக்கும். குறைந்த வீதங்களையுடைய வரியைக் கூடுதலாக்கினால், வரியினின்று தப்பித்துக்கொள்ளும் நாட்டமும் அதிகரிப்பது நிகழ்திறம் ஆகலாம். நல்லதல்லாத ஒரு வரியைத் தொடர்ந்து விதிப்பதனால் வரி செலுத்துவோர் அவ் வரியைக் கொடாது அதனின்றும் தப்பித்துக்கொள்வதற்குச் செய்யும் முயற்சிகள் பிற வரித் துறைகளுக்கும் பரவும். ஆகையால், தொடர்ந்து சொத்து வரியினின்றும் தப்பித்துக்கொள்ளும் மனப்பான்மையை நாம் வளர்த்துவிட்டால், அதனால் வேறு பல வரிகளைப்பற்றிய ஆட்சித் திறனிலும் கடுமையான விளைவுகள் ஏற்படலாம். (உ-ம்.) வருமானவரி.

தனியாள் புலனாகும் உடைமை, புலனாகாத உடைமை இவற்றின்மீது விதிக்கப்படும் வரிகளைக் கொடாது பலர் முற்றும் தப்பித்துக்கொள்கின்றனர். இது யாவரும் அறிந்ததொன்றேயாகும். இவ் வரியினின்றும் விலக்களிப்பதே இதற்கான தீர்வு ஆகும். சிறிதளவு வருவாயைக்கூடத் தியாகம் செய்ய ஆயத்தமாயின்மையாலும், தாவர சொத்தாயிருந்தாலும் (தனியாள்) ஜங்கம சொத்தாயிருந்தாலும், எல்லாம் ஒருவகைத்தே என்று கொண்டமையாலும், தனியாள் சொத்துக்கு வரியினின்று விலக்களித்தால் அது தாவர சொத்தின்மீது பேதங்காட்டுவதாக (discrimination) முடியும் என்பதாலும், சில மாநிலங்கள் இத் தீவிர

நடவடிக்கையை மேற்கொள்ளத் தயங்கின. இதனால் அவற்றின் வரிவிதிப்புக் கொள்கைகள் காரட்டுக்கும், காம்புக்கும் (carrot and stick) இடைப்பட்டதாக மாறிமாறி வந்தன. சில சமயம், மாநிலங்கள் குறைந்த வரிவிதிப்பின்மூலம் புலனாகாத உடைமைகளை வரிவலைக்குள் வளைத்துப்போட முயன்றன. இங்ஙனம் வரி கொடாது தப்பித்துக்கொள்வதால் பெறும் ஆதாயத்திற்கும், பிராசிகியூஷனால் (prosecution) கிடைக்கும் அபராதத்திற்கும் உள்ள இடைவெளி குறைந்தது. வேறு சில சமயம், மாநிலங்கள் வரி கொடாது தப்பிப்பவர்கள்மீது கடுமையான தண்டனைகளை (அபராதத் தொகைகளை) விதித்தும், தீர்வை மதிப்பீடு செய்வோர்க்கு யாவற்றையும் உட்புகுந்து தேடக்கூடிய அதிகாரங்கள் (search warrants) கொடுத்தும் புலனாகாத சொத்துகளை வரிவலைக்குள் இழுத்துப்போட முயன்றன. காரட் கொள்கையினால் ஒரு சிறிதே கூடுதல் வருவாய் கிடைத்தது; வரிகொடாது தப்பிப்பதும் சிறிதே குறைந்தது. காம்பின் கொள்கையும் பயன் தரவில்லை. இக் கொள்கையால் அரசாங்கத்திற்குப் புதிய எதிர்ப்புகள் முளைத்தன.[4]

வரிவிதிப்பினின்று சில சொத்தினங்களுக்கு விலக்களிப்பது வரிமுறை மரபினின்றும் பெரிதும் வழுவியதாகாது. மாநிலங்கள் ஒரு குறைந்த அளவு சொத்திற்குச் சொத்து வரியிலிருந்து பொதுவாக விலக்களித்திருக்கின்றன. (உ-ம்) 'பல்வேறுபட்ட சொத்தினங்களையும் திரட்டி அவற்றின் மொத்தத்தொகை ஒரு வரம்புக்கு உட்பட்டிருந்தால் அவற்றுக்கு வரிவிதிப்பினின்றும் விலக்கும், மேசை, நாற்காலி முதலிய எடுபிடி சாமான்கள், இசைக்கருவிகள்போன்ற சில சொத்தினங்கள் இவை ஒவ்வொன்றுக்கும் ஒரு குறும் அளவு விலக்கும் மாநிலங்கள் அளிக்கின்றன. நெடுங்காலம் போர்வீரராகப் பணிபுரிந்தவர்களுக்குச் சிறப்பாக வரி விலக்களிப்பதும் மரபாகும். உயிர்வாழ்வதற்கு வரிவிதிக்கப்படாத ஒரு குறைந்த தொகையேனும் வேண்டும் அல்லது தொடர்ந்து போனஸ் (bonus) கொடுக்கவேண்டும் என்ற கொள்கையை இவ் விலக்குகள் அடிப்படையாகக் கொண்டவை. அரசாங்க உடைமைக்கு இவ் வரியினின்று பொதுவாக விலக்களிக்கப்படுகிறது; இதற்கான காரணங்களும் தெளிவு. இலாபமின்றிச் செயலாற்றும் அற, கல்வி, சமய நிறுவனங்களுக்கும், அவை தாங்கள் கடமைகளைச் செவ்வனே இயற்றும் முறையில் இவ் வரிவிதிப்பினின்று விலக்களிக்கப்படுகிறது. இதற்கான காரணங்கள் மூன்று: தனியார் ஏஜென்ஸிகள் இப் பணிகளை மேற்கொள்ளாவிடில், அரசாங்கமே இவற்றை மேற்கொள்ள வேண்டும் என்பதும், ஆகவே வரிவிலக்குமூலம் இவற்றுக்கு ஒரு குறைந்த அளவு அரசாங்கம் ஆதரவு தரலாம் என்பதும் முதற்

காரணமாகும். தனியார் ஏஜென்ஸிகள் இப்பணிகளை மேற்கொள்ளு வதால், பிறவகைச் சொத்துகளின் வரிசெலுத்தும் திறன் கூடு கிறதென்பதும், இவ்வகைச் சொத்துகளுக்கு விலக்கு அளிப்பதால் வரிக்கு ஆட்பட்ட பிற சொத்துகளின்மீது வரிப்பளு ஏறவில்லை என்பதும் இரண்டாவது காரணமாகும். (ஓர் இருப்புப்பாதை அல்லது பொருளியல் ரீதியில் விரும்பத்தக்க எந்த நிறுவனமும் இம் முகாந்தரத்தை ஏன் பயன்படுத்தக்கூடாது என்பதற்குத் தக்க காரணம் கூற முடியாது.) இலாபம் பெருத நிறுவனங்களாக இருப்பதால் அவற்றுக்கு நிகர வருமானம் ஒன்றுமில்லை என்பதும், ஆகவே, அவற்றுக்கு வரியைச் செலுத்தும் திறனில்லை என்பதும் மூன்ருவது காரணமாகும். (இலாபம் பெருத எந்த ஒரு தொழில் நிறுவனமும், மேற்கூறிய முகாந்தரங்களுக்காகத் தமக்கும் வரி விலக்குக் கோரலாம்.) இவற்றில் முதலில் கூறப்பட்ட காரணம் தான் முக்கியமானதாகும். அவ்வித நிறுவனங்களில் பலவும் பல்லாண்டுகளாகவே தொடர்ந்து நிதி முட்டுப்பாடுகளினுல் அவதிப் படுவதால், பொது நன்மையை மனத்தில்கொண்டு, தருக்கமுறையி னின்று சிறிது பிறழ்ந்தே அவற்றுக்கு விலக்களிப்பதைச் சரியென வும் கூறலாம்.

இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் தீர்வை மதிப்பீட்டை மையமாக்குகை (centralization of assessment) தீர்வை மதிப்பீட் டைக் கூட்டுவதற்கு வேண்டிய இரண்டாவது அமிசமாகும். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாயிருந்தாலும் சரி அல்லது தல அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டவர்களாயிருந்தாலும் சரி, மாநில அரசாங்கம் இத் தீர்வை மதிப்பீடு செய்வோர்கள்மீது ஒரு கண் வைத்திருக்கவேண்டும். இதனுல் நுட்பவினை முறைகள் (techniques) ஒரேபடித்தாய் இருக்கவேண்டும் என்பது வலியுறுத்தப் பெறும். சிறப்பாகச் சொத்தின் உண்மையான (மார்க்கெட்) மதிப் பின் வீதங்களில் எத்துணை அளவு வரி விதிக்கப்பெறுகின்றதோ அதில் ஒரேபடித்தன்மை (uniformity) இருக்கவேண்டும் என்பது இதன் பொருளாகும். ஒருவருக்கொருவர் போட்டிபோட்டுக் கொண்டு குறைவாகத் தீர்வை மதிப்பீடு செய்வது, பல்வேறுபட்ட தீர்வை மதிப்பீட்டு மாவட்டங்களில் உள்ள வரி செலுத்து வோருக்கு அநீதி இழைத்ததாகும்.

தீர்வை மதிப்பீட்டு உத்தியோகஸ்தர்களிடையேயும் தீர்வை மதிப்பீட்டு முறையிலும் காணப்படும் பத்தாம்பசலித் தன்மையை (fossilization) பெரிதும் அகற்றுவது தீர்வை மதிப்பீட்டு முன்னேற் றத்திற்கு மூன்ருவதாக வேண்டப்படுவதால், சரியானபடி தீர்வை மதிப்பிடப்பட முடியாத சொத்தினங்களுக்கு (அவை புலனுகும் இனங்களாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி) பூரண விலக்

களிப்பதன்மூலம் இதைச் சாதிக்கலாம். இவையெல்லாம் ஆனபிறகு சொத்துவரி, தாவர சொத்துவரியாகமட்டுமே இருக்கும். தீர்வை மதிப்பீடு செய்வோரின் கடும் உழைப்பு காரணமாகவே வரிவிதிப்புக்கு உள்ளாகவேண்டிய சொத்து அனைத்தையும் வரிப் பட்டியலில் சேர்ப்பித்துவிடலாம். எல்லா தாவர சொத்து களையும் வரிப்பட்டியலில் கொணர்ந்த பின்பு, அவற்றை மதிப்பிடும் பிரச்சினையை ஒரு நூற்பாவாகக் (formula) கூறிவிடலாம். சில நகரங்களில் 'விஞ்ஞான முறைப்படித் தீர்வை மதிப்பீடு' செய்யப் பட்டிருக்கிறது. இம் முறையினால் அவற்றை ஆட்சி செய்வதும், சுளுவில் மாற்றங்களைச் செய்வதும் எளிதாகிறது. எளிதில் ஒரு சொத்தின் கூற்றைத் தீர்வை மதிப்பீடு செய்யும் முறையில் யாக் கப்பட்ட நூற்பாக்களின் தொகுதியே 'விஞ்ஞானமுறைத் தீர்வை மதிப்பீடு' எனப்படும். ஆயினும், அவற்றுக்கு மார்க்கெட்டில் உள்ள பெறுமானத்திற்குத் தக்கவாறு அவற்றின் வரிவீதங்களும் மாறும்.

எடுத்துக்காட்டாக, கிளீவ்லாந்து முறையை (Cleveland system) எடுத்துக்கொள்வோம். இம் முறையின்கீழ் நகரத்தில் உள்ள நிலத் தின் மதிப்பு அந்நிலத்தின் பரப்பைப் பொறுத்திருக்கிறது. ஒவ் வோர் அடி நிலத்திற்கும் இத்துணை என்று மதிப்புத் தந்து, அதை மொத்த நிலப்பரப்பால் பெருக்கி, நிலத்தின் மதிப்பை அறிகின் றனர். பல மனைகளும் ஒரே அளவு அகலமுள்ளதாக இராததால், நிலங்களின் மதிப்பு அவற்றின் அகலத்திற்கு ஏற்ப மாறுபடுகிறது. இவ்வாறு நீள அகலத்தில் ஒரு நூற்பா பிரயோகிக்கப்பெறுகிறது. கோணல்மாணலாக இருக்கும் சில நிலங்களுக்கு ஒரு முக்கோண நூற்பாவும், மூலைமுடுக்குகள் உள்ள மனைகளுக்கு ஒரு மூலை நூற்பா வும் பிரயோகிக்கப்பெறுகின்றன. இந் நூற்பாக்கள் நடப்பில் விற்பனையான நிலங்களிலிருந்தே பெறப்பட்டன. மூலை, நெடுமை, கோணல் மாணலாக இருக்கும் (shape-irregularity) வடிவம் இவற்றால் இம் மனைகளின் மார்க்கெட் மதிப்பு பாதிக்கப்படுகின்றது. ஒரு முறை வரையறுக்கப்பட்ட பின்பு இந்நூற்பாக்களில் நெடுங் காலம் மாறுதல் ஏற்படுவதில்லை. ஓர் அடிக்கு இத்துணை மதிப்பு என்பது காலந்தோறும் மாறுபடுகிறது. மனைகளின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்களைச் சதா கவனித்துவரவேண்டும். அப் பொழுதுதான் ஓரடியின் மதிப்பு இந்நாள்வரை (up-to-date) திருத்தம் பெறும். ஒரு சதுர அடிக்கு இத்துணை மதிப்பு என்று கொண்டு மொத்தப் பரப்பைப் பெருக்கி, கட்டடங்களின் மதிப்பு இறுக்கப்படுகிறது. இக்காரணி (சதுர அடி) பல்வேறுபட்ட சட்டங் களின் அமைப்புகளுக்கும், ரகங்களுக்கும் ஏற்ப மாறுபடுகிறது. கட்டடங்கள் கட்டுவதற்கு உண்மையில் எவ்வளவு செலவு பிடித்ததோ, அவற்றை எடுகோள்களாகக் (data) கொண்டே இந்

நூற்பாக்கள் அமைக்கப்படுகின்றன. கட்டட மதிப்புகளில் மாறுதல்கள் ஏற்படுவதற்கு இசைய இச் சதுரஅடிக் காரணியும் மாறுதலடையும். இந் நூற்பாவின்படி தீர்வை மதிப்பீடு செய்யப்பட்ட நிலம், கட்டடம் இவற்றின் பெறுமானத்தின் கூட்டல் தொகையே தாவர சொத்தின் தீர்வை மதிப்பீடு செய்யப்பட்ட பெறுமானமாகும்.

மேற்கண்ட தீர்வை மதிப்பீட்டு முறைகளில், மூவகைத் தீர்வை மதிப்பீடு செய்வோர் வேண்டப்படுகின்றனர். அவர்கள், (1) நூற்பாக்களையும் காரணிகளையும் தற்காலம்வரை (up-to-date) திருத்தி வைத்திருக்கவேண்டிய ஆராய்ச்சியாளர்களும், (2) முதன்முதலாக சொத்துகளின் அளவைகள் (dimensions), ரகங்கள் இவற்றைப்பற்றித் தகவல்களைச் சேகரிப்பதற்கும், சில குறிப்பிட்ட பகுதிகளில் மாறுதல்கள் அல்லது மேம்பாடுகளைக் குறிப்பதற்கும் வேண்டிய 'வெளி மனிதர்களும்' (outside man), (3) இவ்வகை நூற்பாக்களை அந்தந்தச் சொத்தினங்களுக்குப் பிரயோகிப்பதன்மூலம் தீர்வை மதிபீட்டை அறுதியிடவேண்டிய குமாஸ்தாக்களும் (எழுத்தர்களும்) ஆவார்கள். பெருநகரங்களே இவ்வாறான உத்தியோகக் கணத்தை (staff) வைத்திருக்க முடியும். இதனால் இச் சேவையின் பெரும்பகுதியை மாநில அரசே ஏன் தம் ஆட்சி உட்பிரிவுகளுக்காகச் செய்யக்கூடாது என்பதற்கு யாதொரு காரணமுமில்லை. இவ்வித மாறுதலுக்கு அடிப்படையாக வேண்டப்படுவன இரண்டு. இப்பொழுது காணப்படும் கேடுகளில் சாத்தியமான பலவற்றையும் திருத்தவேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொள்வது முதலாவதாகும். ஒரு தீய வரியைத் தீய முறையில் ஆள்வதற்குப் பணிந்துபோகாதிருத்தல் என்பது இதன் பொருளாகும். இதனால் கருத்தளவில் மாறுதல் வேண்டப்பெறுகிறது. வரிச் சட்டங்களில் ஓரளவு காட்சியளவையைப்(realism) புகுத்துவது இரண்டாவதாகும். ஒரு சொத்தை விற்காதபொழுது அதன் உண்மை மதிப்பு என்ன என்பதை இவ்வித விஞ்ஞானமுறைத் தீர்வை மதிப்பீடு முன்கூட்டியே சொல்லவில்லை. ஆனால், வரித்தளத்தின் உண்மையான மதிப்புத் தெரியாதபொழுது அதற்கு ஒரு நியாயமான பதிலைத் தருவதன்மூலம், வரித்தளம் அறிவுக்கு உகந்ததாக இருக்கின்றதா என்பதைத் தீர்மானிக்கிறது. சொத்து வரிச் சட்டங்கள், காட்சிப் பிரமாணங்கள்மூலம் இவ்வுண்மையை ஏற்றுக்கொள்ளவேண்டும். அச் சட்டங்கள் பலவமயம் தீர்வை மதிப்பீடு செய்வோரை, அவர்களால் இயலாததைச் செய்யும்படி பணிக்கிறது; அதாவது, சொத்தின் உண்மையான மதிப்பின்மீது தீர்வை மதிப்பீடு செய்யும்படி பணிக்கின்றது. பொது வசதிகளைக் கட்டுப்படுத்துவதைப் (public ability

regulation) பொறுத்தவரை இம்மாதிரியான பிரச்சினையே காணப் படுகிறது. கட்டுப்படுத்தும் குழு (regulatory commission) அறுதி யிடும் வீதங்களைப் பொறுத்தே பொது வசதிச் சொத்தின் 'உண்மை யான' மதிப்பு இருக்கின்றது. ஆகவே, வீதங்கள் சரியானவை தாமா என்று சோதனை செய்வதற்குச் சொத்தின் 'மதிப்பை'ப் பயன் படுத்துவது அறிவுக்குப் பொருந்தாததாகும். மதிப்பைச் சாராது தனித்து இயங்கும் வரித்தளத்தைக் (rate base) கடைப்பிடிப்பதன் மூலம் இவ் இக்கட்டைத் தவிர்க்கலாம். 'உண்மையான மதிப்பு'டன் ஒத்திருக்கவேண்டும் என்ற கட்டாயம் இன்றியே ஒரு நியாய மான வரித்தளத்தைக் கைக்கொள்வதும் இன்றியமையாத தாகும்.

சரியான முறையில் ஆட்சி செய்யப்பட்டு, தீர்வை மதிப்பீட்டில் முன்னேற்றமும் காணப்பட்டால் உடைமை வரி ஒரு நல்ல வரி யாகும் என்று நாம் கூறுகின்றோமில்லை. கருதுகோள் அளவில் இவ் வரி விரும்பத்தகாதது என்பதை இவ்வதிகாரத்தில் பின்னர்க் காண்போம். ஆயினும், இவ்வரி நெடுங்காலத்திற்கு அமுலில் இருக் கும். இவ் வரி இப்பொழுது நடைமுறையில் எங்ஙனம் இருக் கின்றது என்பதற்கும், எங்ஙனம் இருக்கவேண்டும் என்பதற்கும் வேறுபாடு இருக்கிறது. இவை இரண்டும் இணக்கமின்றி இருப் பதற்குக் காரணம் மெதுவல் (inertia) என்னும் ஆற்றல்மிக்க காரணியாகும். நாம் நெடுங்காலத்திற்கு ஒரு தீய வரியைச் செலுத்தவேண்டுமெனில், அதன் ஆட்சித் தரத்தையாவது உச்ச கட்டத்திற்கு உயர்த்துவதே நாம் குறைந்தபட்சம் செய்யவேண்டு வதாகும்.

**சமனுக்கல்** (Equalization): தீர்வை மதிப்பீட்டில் காணப் படும் அநீதிகளை நிரவல் செய்வதே சமனுக்கலின் நோக்கமாகும். தீர்வை மதிப்பீட்டின் நியாயத்தை நீதிமன்றம் அறுதியிடும்படி அப்பீல் செய்ய வகைசெய்வது குடியாட்சி முறைக்கு ஒத்ததாகும். எல்லாச் சொத்து வரி விதிக்கும் பரப்புகளிலும், மீள்நோக்குக் கழகங்கள் (Boards of Review) அல்லது சமனுக்கக் கழகங்கள் இருக் கின்றன. தங்கள் சொத்தின் தீர்வை மதிப்பீட்டைப்பற்றி மனக் குறை உள்ளவர்கள் இக் கழகங்களுக்குப் புகார் செய்துகொள்ள லாம். ஒரு நகரத்தின் பெரிய பட்டியலில் காணப்படும் தீர்வை மதிப்பீடுகளே அந் நகரின் வரிவீதமாகப் பிரயோகிக்கப்படுகிறது. ஆகையால், ஒரு நகரக் கழகம் (City Board), தலத் தீர்வை மதிப் பீடுகள் நியாயமான முறையில் விதிக்கப்பட்டிருக்கின்றனவா என்று தன் முடிவுகளைத் தெரிவிக்கும். அதேபோல் ஒவ்வொரு மாவட்ட மும் (county) ஒரே வரிவிகிதத்தை மாவட்டம் பூராவும் உள்ள

தீர்வை மதிப்பீடுகளுக்கும் பிரயோகிக்கிறது. அதனுல் ஒரே மாவட்டத்தில் உள்ள இரு நகரங்களின் தீர்வை மதிப்பீட்டு ஒப்புமை வீதங்களைப்பற்றி (relative levels of assessments) அதிருப்தி ஏற்படலாம். ஆகையால், மாவட்டச் சமனுக்கும் கழகம் ஒன்று வேண்டப்படுகிறது. அதேபோல் ஒரு மாநில அரசு சொத்து வரியை விதித்தால், அவ்வரசு மாநில முழுமைக்கும் செல்லத்தக்க வரிவீதத்தையே கையாளும். ஆகவே, மாநிலத்துக் கான சமனுக்கும் ஒரு கழகமும் வேண்டும். பல்வேறுபட்ட அரசாங் கங்கள் ஒரே சொத்தின்மீது வரிவிதிக்கும்பொழுது, அவை தனிப் பட்ட முறையில் சுதந்திரமாகத் தீர்வை மதிப்பீடு செய்கின்றன. (நகரம் பெரிதாக இருந்தால் மாவட்டங்கள்தோறும் தீர்வை மதிப்பீடு செய்யப்படுகிறது.) நகரப் பெரிய பட்டியல்கள், ஒரு நகரத்தில் அடங்கிய மாவட்டங்களைப்பற்றிய தீர்வை மதிப்பீடு களின் கூட்டுத் தொகையால் ஆனதாகும். அதேபோல் மாவட்டப் பெரிய பட்டியல்கள், மாவட்டத்தில் உள்ள எல்லாப் பட்டணங் களது (நகர்ப்புறங்கள்) பட்டியல்களின் கூட்டுத் தொகுப்பே யாகும். மாவட்டப் பெரிய பட்டியல்கள் அடங்கிய தொகுதியே மாநிலப் பெரிய பட்டியலாகும். வெவ்வேறு நிலைகளில் உள்ள பலதிறப்பட்ட அரசாங்கங்களுக்கும் ஒரு தீர்வை மதிப்பீடே போதுமானதாக இருப்பதால், தீர்வை மதிப்பீட்டின் தரங்களில் (standards of assessments) ஏற்றத்தாழ்வு ஏற்படலாம். இவ்வாறு வெவ்வேறு நிலைகளில் உள்ள தீர்வை மதிப்பீடுகளையும் மீள்நோக்கு (review) செய்வதற்கு வகை செய்யவேண்டும்.

ஆயினும், நடப்பில் சமனுக்கும் பணி அத்துணை முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தெரியவில்லை. தாமாகவே வலிய தம் உடைமை யைப்பற்றி உடைமைக்காரர் அறிக்கை அனுப்பிவைத்திருந்தா லொழிய, மீள்நோக்குக்குச் சில மாநிலங்களில் வகை செய்யப்பட வில்லை. தாமாகவே வலிய வந்து உடைமைக்காரர்கள் தம் உடைமையை வரிப்பட்டியலில் சேர்த்துக்கொள்வதை ஊக்குவிப் பதற்காக இவ்விதி இயற்றப்பட்டது. இங்ஙனம் சேர்த்துக்கொள்ளா தவரின் உடைமை யதேச்சையான (arbitrary) தீர்வை மதிப்பீட் டுக்கு உட்படுகிறது.[5] மீள்நோக்குக் கழகங்களுக்கு வேலை சொற்பமே. பொதுவாகக் குறைவாகத் தீர்வை மதிப்பீடு செய்யப் பட்டிருக்கும்பொழுது, மீள்நோக்குச் செய்யும்படி வேண்டிக்கொள் வது ஆபத்தை வரவழைப்பதாகும் என்பதே இதற்கான தலையாய காரணமாகும். உண்மையான மதிப்பில் 100 சதவிகிதம் சொத் தைத் தீர்வை மதிப்பிடும்படி ஒரு மாநிலச் சட்டம் கூறுகின்ற தென்று வைத்துக்கொள்வோம். A நகரத்தில் சொத்து, அதன் மதிப்பில் 70 சதவிகிதம் தீர்வை மதிப்பீடு செய்யப்படுகிற

தெனவும், அதே மாவட்டத்தில் உள்ள B நகரத்தில் சொத்தின் மதிப்பில் 50 சதவிகிதம் தீர்வை மதிப்பீடு செய்யப்படுகிற தெனவும் வைத்துக்கொள்வோம். மாவட்ட வரியைப் பொறுத்த வரை, B நகரத்தில் உறைபவர்களைவிட A நகரத்தில் உறைபவர் கள் ஒவ்வொரு டாலரின் உண்மையான மதிப்பிற்கும் கூடுதலாக வரி செலுத்துகின்றனர்கள். ஆனால், உடைமைக்காரர் மீள்நோக்குக் கழகத்திற்குப் புகார் செய்வாராகில், அவரின் தீர்வை மதிப்பீடு 100 சதவிகிதமாக உயர்த்தப்படலாம். ஆனால், B நகரத்திலும், A நகரத்திலும் உறையும் புகார் செய்யாத உடைமைக்காரர்களின் மீதுள்ள தீர்வை மதிப்பீடு முன்னிருந்த நிலையிலேயே இருக்கும். அவ்வித நிலையில் தாம் புகார் செய்யாமல் இருந்திருந்தால் கொடுப் பதைவிட, மீள்நோக்கிற்குப் பின்பு அவர் கூடுதலான வரியைச் செலுத்தவேண்டியிருக்கும். இறுதியாக, கண்டிப்பாக (tough) இருப்பதன்மூலம், ஒரு கழகம் தனக்கு மீள்நோக்குக்காக வரும் விண்ணப்பங்களைக் குறைத்துத் தன் கடமைகளைச் சுளுவாக்கிக் கொள்ளலாம்.

குறைவான தீர்வை மதிப்பீடு இத்துணைப் பரவலாகக் காணப் படுவதேன்? குறைவாகத் தீர்வை மதிப்பீடு செய்யப்பெறுவதால் புகார்கள் தடுத்து நிறுத்தப்படுகின்றன என்பது முதற் காரண மாகும். தீர்வை மதிப்பீடு செய்வோர் ஒருவர், ஒரு சொத்தின் சரியான மதிப்பீட்டை அறுதியிடும்படி பணிக்கப்பட்டால், அதைக் குறைவாக மதிப்பீடு செய்வதால் அவருக்குத் தொல்லை வராது. இதனால் பின்னர் அதன் 'உண்மையான மதிப்பு'க்கும், அவர் செய்த மதிப்பீட்டுக்குமான காரணங்களைக் கூறி நிறுவுவதற் கான அவசியமும் இராது. குறைவாகத் தீர்வை மதிப்பீடு செய்வ தால், சிறப்பாகப் பிற மாவட்டங்களைவிடக் குறைவாக மதிப்பீடு செய்வதால், அரசியல் அநுகூலங்களும் இருக்கின்றன.. ஒரு தீர்வை மதிப்பீடு செய்யும் உத்தியோகஸ்தர் தேர்ந்தெடுக்கப்பட்டிருப் பாரேயாகில், தன்னைத் தேர்ந்தெடுத்தவர்களுக்கு அவர் சலுகை கள் அளிக்க முனைவது இயல்பேயாகும். B நகரத்தைக் காட்டிலும் A நகரத்தில் தீர்வை மதிப்பீடுகள் குறைவானவாக இருந்தால், A நகரத்தில் சொத்து எத்துணைக் குறைவாகத் தீர்வை மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது என்பதை அறிவதனால் நகர வரிகளைப் பொறுத்தவரை யாதொரு பயனுமில்லை.[6] ஆனால், மாவட்ட, மாநில வரிவிதிப்பில் A நகரத்தில் குறைவாகத் தீர்வை மதிப்பீடு செய்யப்பட்டிருந்தால், அந்த நகரத்தில் உள்ள உடைமைக்காரர்கள் மாவட்டத்திற்கும் மாநிலத்திற்கும் செலுத்தவேண்டிய மொத்த வரியின் தொகையும் குறைகிறது. தீர்வை மதிப்பீடும் உத்தியோ கஸ்தர்கள் ஆட்சியாளரால் நியமனம் செய்யப்பட்டிருந்தாலும்,

மேற்கூறிய காரணங்களுக்காக ஏனைய பிரதேசங்களைக்காட்டிலும் தீர்வை மதிப்பீட்டைக் குறைவாக வைத்திருப்பது ஆட்சியின் கொள்கையாக இருக்கலாம்.

குறைவாக மதிப்பீடு செய்ய முனைவதை நாம் ஒருவேளை அளவுக்கு மீறி வலியுறுத்தியிருக்கலாம். மார்க்கெட் மதிப்பைக்காட்டிலும் தாழ்வாகவே, பொதுவாக மதிப்பீடு இருப்பதாகத் தீர்வை மதிப்பீட்டுப் புள்ளிவிவரங்கள் காட்டியபோதிலும், இப் போக்குக்கு எதிரான பல சக்திகள் இயங்குவதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். மாநில அரசாங்கங்கள் தல அரசாங்கங்களுக்குச் சொத்து வரிகளை விட்டுக்கொடுத்ததால், மாநிலங்கள் தம்முள் போட்டி போட்டுக்கொண்டு சொத்துகளைக் குறைவாக மதிப்பீடு செய்வதற்கான ஒரு வலுவான தூண்டுகோல் களையப்பட்டது. மாநிலங்கள் தல அரசாங்கங்களுக்கு எந்த நூற்பாக்களின் அடிப்படையில் உதவி மானியங்கள் (grants-in-aid) கொடுக்கின்றனவோ, அவற்றை இப் பெரிய பட்டியல்களுடன் இணைக்காவிடில் குறைவான தீர்வை மதிப்பீட்டிற்கான மற்றோர் காரணமும் அகலுகிறது. மேலும், அண்மைக் காலத்தில் தல அரசாங்கங்களுக்குப் பணமுடை பெருகியதால், அவை கூடுதலாகச் சொத்தின்மீது வரி விதிக்கும் படியும், முன்னைவிடக் கூடுதலாகக் கடன் வாங்கும்படியும் ஏற்பட்டது. ஒரு சொத்தின் கூறின்மீது வரியைக் கூட்டவேண்டும் என்றால் வரிவீதத்தை உயர்த்துவதன்மூலமே இதைச் சரிக்கட்ட வேண்டியதில்லை எனவும், ஓரளவு தீர்வை மதிப்பீட்டை உயர்த்துவதன்மூலமும் இதைச் சரிக்கட்டலாம் எனவும் பொதுமக்கள் விரும்புவதாகத் தெரிகிறது. தல அரசாங்கங்களின் கடன் வரம்புகள் பெரும்பாலும் இப் பெரிய பட்டியல்களைப் பொறுத்திருப்பதால், கடன் வரம்பின் சுமையைக் (pinch) குறைப்பதற்குப் பொதுவாகத் தீர்வை மதிப்பீட்டை உயர்த்துவது ஏற்றதொரு வழியாகும்.

பங்கீடு (Apportionment) : பங்கீட்டின் இயல்பைப்பற்றி நாம் பன்முறை குறிப்பாகக் கூறியுள்ளோம். பங்கீடு என்பது ஒரு குறிப்பிட்ட வகைச் சொத்தின்மீது பல்வேறு நிலைகளிலுள்ள அரசாங்கங்கள் விதிக்கவேண்டிய வரிவீதங்களை அறுதியிடும் போக்காகும் எனக் கூறலாம். ஓர் அதிகார வரி வரம்புக்குட்பட்ட (tax jurisdiction) வரி செலுத்துவோர்களிடையே வரிப்பளுவைப் பங்கீடு செய்யும் கருவி* ஆயிரத்தில் ஒரு கூறு (mill rate) எனப்படும். சொத்தினது முழுமதிப்பின் ஒரு வீதமே மொத்த வரிமுடையாகும் (total tax

* ஒரு டாலரில் ஆயிரத்தில் ஒரு பகுதி 'mill rate' எனப்படும்.

need) என்று வரிவிதம் கூறுகிறது. மொத்தச் சொத்தின் ஒரு பங்கே வரி செலுத்துவோரான A-யின் சொத்தாகும். எவ்வாறு மொத்த வரிமுடை சொத்தின் மொத்த மதிப்பில் ஒரு வீதமோ, அதேபோல், A செலுத்தவேண்டிய வரிப்பொறுப்பின் பங்கும் (tax liability share) அவருடைய சொத்தின் மதிப்பின் (அதே) வீதமாகும். தீர்வை மதிப்பீடும் சமனுக்கலும் முடிந்த பின்பு, பல்வேறுபட்ட அரசாங்கங்களும் பிரயோகிக்கவேண்டிய சரியான சொத்து வரிவீதங்களை அறுதியிடுவது எளிதாகும். ஒன்றுக்கு மேற்பட்ட அரசாங்கம் சொத்து வரி விதிக்கவேண்டுமெனில், ஒவ்வொன்றும் சொத்து வரி விதிப்பின்மூலம் தாம் எவ்வளவு தொகையைத் திரட்டவேண்டும் என்பதை உணர்ந்திருக்கவேண்டும். ஒவ்வோர் அரசாங்கமும் தனக்கென ஒரு பெரிய பட்டியலையும் வைத்திருக்க வேண்டும். முன்னதைப் பின்னதால் வகுத்தால், வரி வீதத்தைக் கண்டுபிடிக்க முடியும். இம் முறையை ஓர் அட்டவணையின்மூலம் விளக்குவோம் :

| வரி விதிக்கும் அரசாங்கம் | பெரிய பட்டியல் (தீர்வை மதிப்பீடு செய்யப்பட்ட சொத்தின் பெறுமானம்) (1) | முடைப்பட்ட வருவாய் (2) | வரி விகிதம் (2ஐ 1ஆல் வகுத்தது) |
|---|---|---|---|
| | (டாலரில்) | (டாலரில்) | (மில்லியன்கள்) |
| A நகரம் | 50,000,000 | 1,250,000 | 25 (2·5%) |
| 1 ஆம் மாவட்டம் (A நகரத்தைத் தன்னுள் அடக்கியது) | 200,000,000 | 800,000 | 4 (·4%) |
| 1ஆம் மாநிலம் (1ஆம் மாவட்டத்தைத் தன்னுள் அடக்கியது) | 1,000,000,000 | 4,000,000 | 4 (·4%) |
| A நகரத்தில் சொத்தின்மீது விதிக்கப்பட்ட மொத்த வரிவீதம் | | | 33 (3·3%) |

தீர்வை மதிப்பீடு செய்யப்பட்ட டாலர் பெறுமானத்தின்மீது, A நகரத்தில் உள்ள சொத்தனைத்தும் 33 மில்லியன்கள் (3·3 சத

விகிதம்) வரியாகச் செலுத்தவேண்டும். நடைமுறையில் நாம் தந்த உதாரணம் மிகவும் எளிதாக்கப்பட்டிருக்கிறது. A நகரத்தில் சில குறிப்பிட்ட சொத்து வகைகள் கூடுதலான வரிவீதங்களைச் செலுத்தலாம். பிரத்தியேக மாவட்டங்கள்மீது (பள்ளி மாவட்டம், தீ மாவட்டம், ஜலதாரை மாவட்டம் முதலானவை) சொத்து வரிகள் பிரத்தியேகத் தீர்வை மதிப்பீடுகளாக விதிக்கப்படலாம். தனக்கு முடைப்பட்ட சொத்துவரி வருவாய்கள், குறிப்பிட்ட வரி வீதங்களினால் வரியினின்று தப்பிக்கும் தொகையின் அளவு, ஏதாவது சட்டபூர்வமான வரிவீத வரம்புகள் (அங்ஙனம் ஏதாவது இருந்தால்) இவை யாவற்றையும் பொறுத்துதான் ஓர் அரசாங்கம் கடைப்பிடிக்கவேண்டிய வரிவீதம் இருக்கும். இருப்பினும், வரியாகச் செலுத்தவேண்டிய தொகையின் அளவு, தீர்வை மதிப்பீட்டைப் (வரித்தளம்) பொறுத்தும், வரி வீதத்தைப் பொறுத்தும், இருக்கும். ஆகவே, புதிதாகச் சொத்தை வாங்கியவருக்கு இப்பொழுது நடப்பில் இருக்கும் தீர்வை மதிப்பீடுகளின் மட்டம் (level of assessments) எத்துணை முக்கியமான எடுகோளோ (datum) அத்துணை முக்கியமானது வரிவீதங்களின் மட்டமும் ஆகும்.

வசூல் : சொத்து வரி ஆட்சியில் வசூல் இறுதிக் கட்டமாகும். பல்வேறுபட்ட அரசாங்கங்கள், மாவட்டங்கள் இவற்றுக்கான வரிவீதங்களை அறுதியிட்ட பின்பும், பங்கீடு முடிந்த பின்பும், வரி ரசீதுகளை (tax bills) உடைமைக்காரர்களுக்கு அனுப்பலாம். உடைமைக்காரரின் வரிசெலுத்தும் திறனுடன் ஒப்பு நோக்கும்பொழுது, காணப்படும் மொத்த வரியின் பளுவுக்கேற்பவே வரிவசூல் சுளுவாக இருக்கும். உடைமைக்காரரின் வருமானத்தைப் பொறுத்தே வரிப்பளு இருக்கும்.

வியாபார மந்த காலங்களில் உண்மை மதிப்புகள் சரிவதற்கேற்ப தீர்வை மதிப்பீடுகளைத் திருத்தாவிடில், பெருத்த அளவில் வரி கொடாது தப்பிப்பது நிகழும். சொத்து வரியையே தல அரசாங்கங்கள் பெரிதும் நம்பியிருப்பதிலிருந்தும், தல அரசாங்கங்களின் கடனுக்கு மாநில அரசாங்கங்கள் வரம்பு விதிப்பதிலிருந்தும் நாம் தல அரசாங்கங்களின் நிதிப்பிரச்சினையின் இயல்பைத் தெளிவாக அறிகிறோம். வாணிப மந்த காலங்களில், சொத்திலிருந்து கிடைக்கும் வருமானம் குறைவதால் சொத்தின் மதிப்புகளும் குறைகின்றன. இதனால் வரிவீதங்களை உயர்த்தாமல் (பெரும்பான்மையான மதிப்பீடுகளில்) தீர்வை மதிப்பீடுகளைக் குறைக்கும்படி ஏற்படுகிறது. தல அரசாங்கங்கள் தாம் செய்ய வேண்டிய அடிப்படை அலுவல்களையும் தொடர்ந்து நடத்த வேண்டும்

என்றும், வியாபார மந்த காலங்களில் தற்காலிகமாக நிவாரண அலுவல்களையும் அவை ஆற்ற வேண்டும் என்றும் விரும்பினால், அவற்றின் நிதியில் பற்றுக்குறை ஏற்பட்டுத்தான் தீரும். கடன் வரம்புகளை செயற்படுத்துவதால், சொத்து வரியிலிருந்து கிடைக்கும் வருவாய்க்குத் தக, அவை செலவுகளைக் குறைக்க வேண்டும். ஏற்கெனவே தல அரசாங்கங்கள் அளித்துவந்த நிவாரண அலுவலை 1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் கூட்டர சாங்கம் ஏற்றுக்கொண்டதற்குத் தல அரசாங்கங்களின் வருவாயில் நெகிழ்ச்சியின்மையே காரணமாகும்.

வரி செலுத்தாமல் தப்பிப்பதைச் (tax delinquency) சமாளிப் பது அரசாங்கத்திற்கு ஒரு சங்கடமான வேலையாகும். அதனால் வரி செலுத்தாதிருப்பவர்களின் சொத்தை அரசாங்கம் இறுதியில் பறி முதல் செய்யும்படிப் பலகாலும் நேர்கிறது. இதனால் கிடைக்கும் சொத்தினால் அரசாங்கத்திற்குப் பொதுவாக யாதொரு பயனு மில்லை. வரிப்பாக்கிக்காக தனியார் உடைமையைப் பறிமுதல் செய்யும் நடவடிக்கையை அரசாங்கம் கூடுமானவரை தவிர்க்கவே விரும்புகிறது. பறிமுதலைத் தவிர்ப்பதற்கு இரண்டு வழிகள் உள்ளன. வரிகொடாது தப்பிப்பதைக் காலவரையறையின்றித் தொடர்ந்து நீடிக்குமாறு அச் சொத்தைப் பறிமுதல் செய்யாதிருப் பது முதலாவது வழியாகும். வரி செலுத்தும் திறனுக்கேற்பத் தீர்வை மதிப்பீடுகளையும் வரி வீதங்களையும் மாற்றுவது இரண்டா வது வழியாகும். முதலாவது வழி, நெடுங்காலமாக இருந்து வருகின்ற வரிகொடாது தப்பிக்கின்ற பிரச்சினைக்குத் தீர்வு ஆகாது; அதற்கு மாறாக, இது வரிசெலுத்தக்கூடிய திறனும், விருப்பமும் உள்ளவர்களையும் வரிகொடாதிருக்கும்படி செய் கிறது. இரண்டாவது வழி இந் நெடுங்காலப் பிரச்சினைக்குத் தகுந்த தீர்வாகும். ஆயினும், மிகச் சிறந்த தீர்வை மதிப்பீடும் பங்கீடும் நிலவும் நிலைகளிலும், ஓரளவு வரிகொடாது தப்பிப்பது இருந்தே தீரும். தீர்வை மதிப்பீடு, சமனாக்கல், பங்கீடு ஆகிய இந் நடவடிக்கைகளைச் சரியானபடி மேற்கொண்டால், தற்பொழுது வரிகொடாது தப்பிப்பதில் பெரும் பகுதியும் நிகழாது. தல வரி முறைகளில் அதிக நெகிழ்ச்சியும், சிறப்பாகத் தல நிதிக் (fiscal) கொள்கையில் அதிக நெகிழ்ச்சியும் இருக்குமானால், தீர்வை மதிப் பீட்டை மாற்றுவதற்கும், நியாயமான வரிவீதங்களை விதிப்பதற் கும் உள்ள தலையாய தடங்கல் அகற்றப்படும். அஞ்ஞான்று அரசாங் கத்திற்குப் பெரிதும் சங்கடம் இன்றியும், வரி செலுத்துவோருக்கு வருத்தம் இன்றியும் வரிகொடாது தப்பிப்போர்மீது கடுமையான நடவடிக்கை எடுக்கவியலும்.

### பொதுச் சொத்து வரியைப்பற்றிய கருதுகோள் (Theory of the General Property Tax)

எல்லாவகைச் சொத்தினங்கள்பேரிலும்—தாவர, தனியாள் புலனாகும் உடைமை, புலனாகாத உடைமை—ஒருபடித்தான வீதத்தில், அவற்றின் உண்மை மதிப்பில் ஒருபடித்தான சதவிகிதம் வரிவிதிப்பதைப் 'பொதுச் சொத்துவரி' என்கிறோம். 'ஒருபடித்தான விதி முறைப்படி (uniform rule) தண்டப்படும் சொத்து வரி விதிப்பு என்று அதைச் சாதாரணமாக நாம் அழைக்கின்றோம்.

எளிய தலப்பொருளாகச் சூழ்நிலைகளில் சொத்து வரிவிதிப்பு வளர்ந்ததால், நாம் சொத்துரிமையை வரிசெலுத்தும் திறனைக் காட்டக்கூடிய திருப்திகரமான குறியீடாக ஓரளவுக்குத் திட்ட வட்டமாகவே ஏற்றுக்கொள்ளலாம். பொருளாதாரம் சிக்கலானதாக ஆனபின்பு இக் குறியீடு தீயதாகப்போயிற்று. பொதுவாக ஒருவரின் வரிசெலுத்தும் திறன் அவருடைய வருமானத்தைக் கொண்டே அளவிடப்பெறுகிறது. ஒருவருடைய சொத்தின் அளவிற்கும், அவர் அதிலிருந்து பெறும் வருமானத்திற்கும் பொதுவாக யாதொரு தொடர்புமில்லை. பொறிவழியாக்கம் போன்ற சில துறைகளில் ஒரு குறிப்பிட்ட வருமானத்தைப் பெறுவதற்கு ஏராளமான செல்வத்தைச் செலவழிக்க வேண்டியிருக்கிறது. ஆனால், அதே அளவு வருமானத்தைப் பெறுவதற்குத் தொழில்களில் (profession) ஒப்புமையில் சிறிதளவே செல்வத்தைச் செலவழிக்க வேண்டியிருக்கின்றது. உற்பத்தியில் ஈடுபடுத்தப்பட்ட சொத்தைக் கொண்டு, அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கணக்கிடுவது மிகவும் தவறாக இருக்கும் என்று இவ்வொப்பீட்டிலிருந்து தெரிகிறது.

மேலும், அவ் வருமானத்தைச் செலவழிப்பது அவ் வருமானத்தின் அளவைச் சரியானபடி பிரதிபலிக்கவில்லை என்பதும் போதரும். பெருத்த சொத்தின் வரித்தளங்களாக விளங்கும் நீடித்த பொருள்கள் (உ-ம். பண்ணைகள்)மீது சிலர் தம் வருமானத்தைச் செலவிட விரும்பலாம். ஏனையோர் கடன் பத்திரங்களை வாங்க விரும்பலாம். கடன் பத்திரங்கள்மீது சொத்து வரி விதிப்பின் ஒருபடித்தான விதியின்படி வரிவிதிக்க முனையலாமாயினும், அவற்றைத் தீர்வை மதிப்பீடு செய்வதில் உள்ள துன்பத்தால் கடன் பத்திரங்கள் வரியினின்றும் பூரணமாகத் தப்பிக்கலாம். வேறு சிலர் நீடித்தில்லாத பண்டங்கள், சேவைகள் இவற்றின்மீது தங்கள் நடப்பு வருவாயின் பெரும்பகுதியைச் செலவிட விரும்பலாம். இதனால் அவர்களுக்கு வரி விதிக்கக்கூடிய சொத்தினங்கள் மிகக் குறைவாகவே இருக்கும்.

இறுதியாக வரிசெலுத்தும் திறன் கொள்கை (ability-to-pay principle), வரி செலுத்துவதற்கான வருமானம் இருக்கிறதென் பதைக் காட்டுகின்றது. பெரிய குடும்பத்திற்கு ஒரு பெரிய வீடு வேண்டும். ஆயினும், (தீர்வை மதிப்பீடு செய்யப்பட்ட) வீட்டின் பரிமாணத்தைக்கொண்டே வரி செலுத்தும் திறனைத் தீர்மானிப்பது சரியாகாது. வரி செலுத்தும் திறனைக் காட்டும் வெளிப்படை யான புறவய அடையாளமாகச் சொத்துரிமையைக் கொள்ளும் வகையில், ஒரே அளவு தீர்வை மதிப்பீட்டைக் கொண்ட சொத்தையுடைய தனியாட்களை வெவ்வேறு விதமாக நடத்துவது (அவர்களின் வரிதாங்கும் வல்லமை வெவ்வேறுக இருந்தபோதிலும்) சாத்தியமன்று. அடிப்படையில் இச் சங்கடத் திற்குக் காரணம், வரிசெலுத்தும் திறனை வருமானத்தைக்கொண்டு அளவிடுவதும், சொத்தின் அளவிற்கும், அதிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கும் யாதொரு நெருங்கிய சம்பந்தம் இல்லா மையுமேயாகும்.

ஓர் எளிய வேளாண்மைப் பொருளாதாரத்தில் (simple agrarian economy) செல்வத்தினின்றே பெரும்பாலும் வருமானம் கிடைப்பதால், செல்வத்தின்மீது வரிவிதிப்புச் செய்வதன்மூலம், வரிசெலுத்தும் திறனை அடிப்படையாகக் கொண்டு பெரும்பான் மையும் நியாயம் கிடைக்க வழி ஏற்படும். பொருளாதாரம் சிக்கல் நிறைந்ததாக ஆனபொழுது, செல்வத்துடன் புலனுகாத சொத்தின்மீதும் ஒரேபடித்தாக வரிவிதிப்பதன்மூலம் அநியாயங் களை அகற்ற முடியும் என்ற கருத்து நிலவியது. இதனுல் நல்ல விளைவுகள் ஏற்படவில்லை. இருந்தாலும், இவ் வரிக்கு மாற்றுக வேறொரு சிறந்த வரியைப் புகுத்துவதற்குப் பதிலாக அரசாங்கம், இவ் வரியைச் சரியானதென நிலைநாட்டி, இவ் வரிக்கு மக்கள் எதிர்ப்பைக் குறைப்பதற்கு வேறு முறையைப் பின்பற்றுகிறது. இதனுல் சொத்து வரியைச் சரியென நிலைநாட்டுவதற்கு, ஆதாயம் அடிப்படையாகக் கொள்ளப்படுகிறது.

ஆதாயக் கருதுகோளால் (benefit theory) எவ்வாறு சொத்து வரி விதிப்பை நிலைநாட்டலாம் என்பதை நாம் இப்பொழுது காண் போம். தற்காலத்தில் மன்னிப்புக் கோரும் பாவனையில், போலீஸ் (ஊர்காவல்), தீத்தடுப்பு, தெருக்கள், நடைபாதைகள், சாக்கடை கள் இவற்றைப் பராமரிப்பது, குப்பைகூளங்கள், பனிக்கட்டி இவற்றை அகற்றுவது, பொதுமக்களுக்கான கல்வி வசதி தருவது —இவை யெல்லாம் சொத்துகளுக்குத் தனிப்பட்ட ஆதாயங்களை அளிக்கின்றன என்றும், அதனுல் சொத்தின்மீது வரிவிதிக்கலாம் என்றும் கூறுகிருர்கள். இச் சேவைகளினுல் சொத்துக்கு ஆதாயம்

ஏற்படுகிறதென்பதில் ஐயமில்லை. ஆயினும், ஒரு சொத்தின்பேரில் விதிக்கப்பட்ட வரிகளின் தொகைக்கும், அச் சொத்து அடையும் ஆதாயங்களுக்கும் ஈடுகட்ட முடியுமா? அபிவிருத்திச் செலவுக்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டதோ, அவ்வளவாவது ஒரு சொத்தின் மதிப்பு அபிவிருத்தி ஆதாயத் திட்டத்தினால் கூடியிருந்தால், அச் சொத்தின்மீது பிரத்தியேகத் தீர்வை மதிப்பீடுகள் செய்வது நியாயமே என்று முன்னர்க் கூறினோம். ஆயினும், தல வருவாய்களில் ஒரு மிகச் சிறு பகுதியே பிரத்தியேகத் தீர்வை மதிப்பீடுகள் ஆகும். சொத்திற்கும் சொத்திற்குரியவருக்கும் தெளிவாகப் பிரத்தியேக ஆதாயம் கிடைத்திருந்தால், அபிவிருத்திகளுக்காகப் பிரத்தியேகத் தீர்வை மதிப்பீடு செய்வது நியாயமே. 1958ஆம் ஆண்டுத் தல வருவாயில் 70 சதவிகிதம் (மானியங்கள் நீங்கலாக) சொத்து வரியிலிருந்து கிடைத்தது. ஆனால், தல அரசாங்கங்களின் செலவினங்கள் யாவும் கிட்டத்தட்ட சில அலுவல்களுக்காகவே மேற்கொள்ளப்பட்டன. இவ்வலுவல்களுக்கான செலவைச் சில குறிப்பிட்ட சொத்துவகை அபிவிருத்திகளுடன் இணைப்பது பொருந்தாது. 1957-ல் தல அரசாங்கங்களின் முக்கியச் செலவினங்கள் கல்வி, சாலைகள், பொது நன்மை (public welfare), உடல்நலம் (health), மருத்துவ விடுதிகள், துப்புரவு, போலீஸ் இவை ஆகும். செலவினங்களின் முக்கியத்துவமும் இதில் வரிசைக்கிரமமாக இருக்கிறது. இச் செலவினங்களில் யாதொன்றையும், சொத்து அடையும் ஆதாயங்களுடன் நேரடியாக இணைத்துப் பேச முடியாது. மேலும், வரிவிதிக்கப்பட்ட சொத்துக்குரியவராய் இருப்பதைக்கொண்டே, குறிப்பிட்ட நபர்கள் அடையும் ஆதாயங்களை அளவிடுவது சரியான அளவுகோலாகாது. இவ் வமிசத்தை மேற்கொண்டும் விரிக்காது நாம் மீண்டும் அரசாங்க அலுவல்களினால் விளையும் ஆதாயங்கள் பொதுப்படையானவை எனக் கூறுகிறோம். சொத்துரிமையுடன் அது அடையும் ஆதாயங்களையும் தொடர்புபடுத்திப் பேசுவது யதேச்சையாக (arbitrary) இருப்பதுமன்றி தருக்க அடிப்படையில் ஏற்றுக்கொள்ளக்கூடியதுமன்று.

**சொத்துவரிகளின் திறனும், ஆதாயமும், நிலைப்பாடும் (Ability, Benefit and the Incidence of Property Taxes):** சொத்து வரிகளைப்பற்றிய திறன், ஆதாயக் கருதுகோள்கள், அவ் வரிகளின் பெரும் பகுதியும் புரட்டப்படுகின்றன என்ற உண்மையை புறக்கணிக்கின்றன. வரியை மூலதனமாக்கிப் பிற்பட்டுப் புரட்டுகையினால், எதிர்காலத்தில் விதிக்கப்படும் சொத்துவரிகளின் பளு, சொத்தை விற்பவரின்மீதே விழுகிறது. எடுத்துக்காட்டாக, குடியிருப்பைப் பொறுத்தவரையில், வரியின் பெரும் பகுதியைச்

சொத்தை விற்பவரே தாங்க வேண்டியிருக்கிறது. தற்பொழுது சொத்துக்குரியவர் அரசாங்கத்திலிருந்து அடையும் ஆதாயங்களைப் பொறுத்தோ அல்லது சொத்துக்குரியவரின் வரிதாங்கு வல்லமையைப் பொறுத்தோ சொத்து வரிகள் விதிக்கப்படுகின்றன என்று நிலைநாட்டப்பெறுகிறது. ஆனால், அவற்றின் வரிப்பளு வேறொருவர் மீது விழுகிறது.

வரிவிதிக்கப்பட்ட சொத்து, தொழில் நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்பட்டால், விளையுளின் விலையை ஏற்றுவதன்மூலம் முற்பட்டுப் புரட்டுகை ஏற்படலாம். (ஆனால், பிற்பட்டுப் புரட்டுகையைப்போன்று முற்பட்டுப் புரட்டுகை சாதாரணமாகக் காணப்படுவதில்லை. ஏனெனில், நாம் முன்னர்ப் பார்த்தவாறு, நிலையான ஆக்கச் செலவின் ஏற்றத்தினால் குறுங்காலத்தில் விலையும் ஏறுவதில்லை; உற்பத்தியும் குறைவதில்லை.) முற்பட்டுப் புரட்டுகை ஏற்படும்பொழுது, வரியைத் தாங்குபவர் விளையுளை வாங்குபவரேயன்றிச் சொத்துக்குரியவரல்லர். இப் புரட்டுகை நிகழும் அளவுக்கு, சொத்துக்குரியவரின் வரிசெலுத்தும் திறனைப் பொறுத்தோ அல்லது அவர் அடையும் ஆதாயங்களைப் பொறுத்தோ வரியை நியாயமானதென நிறுவுவது அறிவுடைமையாகாது.

இருந்தாலும், எல்லாச் சொத்து வரிகளும் இவ்வாறு முற்பட்டு அல்லது பிற்பட்டுப் புரட்டப்படுவதில்லை. வரியின் பெரும் பகுதியையும், அதிலும் சிறப்பாக வரிகள் ஏறிக்கொண்டிருக்கும் பொழுது, சொத்துக்குரியவரேதான் தாங்க வேண்டும். இவ்விதச் சூழ்நிலையில் சொத்துவரியை ஒரு கருதுகோளை அடிப்படையாகக் கொண்டு நிலைநாட்டுவது அதிகாரிகளின் கடமையாகும். இவ்வாறு நிலைநாட்டினாலொழிய, சொத்து வரிக்கான ஓரே வாதம், அது மரபை ஒட்டியதாகும் என்பதே. இஃது ஒன்றுதான் சொத்து வரிக்கான முகாந்தரமாக எஞ்சி இருப்பது. சமுதாயம் இவ் வரியை நெடுங்காலமாகக் கொடுத்துப் பழக்கப்பட்டுவிட்டதால், அதன் பளுவைப்பற்றிச் சமுதாயம் கவலைப்படுவதில்லை. மற்றவை மாறாதிருப்பின், இது ஒரு வரியின் சிறந்த அமிசமாகும். ஆனால், மற்றவை மாறாதிருப்பதில்லை. கருதுகோள் அளவில் சொத்துவரிக்கான முகாந்தரம் உறுதியான அடிப்படையின்மீது இல்லாமலும், அதன் ஆட்சியும் திறம்பட இல்லாமலும் இருக்கும்பொழுது இவ்வரியை அகற்றுவதால் அதன் நீடித்த வாழ்க்கை முடிவடையும் என்றும், அதற்குப் பதிலாகப் புதிய வரி ஒன்றை விதிக்க நேரிடுமென்றும் (சொத்து வரியைக் காட்டிலும் சிறந்ததாக இருப்பினும்) சப்பை கட்டிப் பேசி இவ் வரியை அகற்றாது வைத்திருப்பதில் நமக்கு ஒரு பயனுமில்லை. ஆனால், இவ் வரியை முற்றுமோ அல்லது ஓரளவோ

கைவிட்டுவிடுவதனால், தலங்கள் தம் சுயாட்சி உரிமையைத் தியாகம் செய்ய நேரிடும் என்றும் வாதிக்கலாம். சொத்து வரிக்குப் பதிலாக விதிக்கப்படும் எந்த வரியும், மேல் அரசாங்க மட்டத்திலேயே (அதாவது, மாநில அல்லது கூட்டரசுகளால்) ஆட்சி செய்யப்படும் என்பது இன்றியமையாதது என்று கூறத் தேவையில்லை.

புலனாகாத சொத்துகளைப்பற்றிய வரிவிதிப்பைப்பற்றிய கருதுகோள் (Theory of Taxation of Intangibles) : பங்குகள், கடன் பத்திரங்கள், அடைமானங்கள், பாங்கு டிபாசிட்டுகள், ஏனைய பிற புலனாகாத உடைமைகள் இவற்றின்மீது வரி விதிப்பதை ஆதாய அடிப்படையிலேயே நிலைநாட்ட முடியாது. ஏனெனில், கல்வி வசதி, போலீஸ் பாதுகாப்பு, பனிக்கட்டியை அப்புறப்படுத்துவது, குப்பைகூளங்களை முற்றும் அகற்றுவது, சாக்கடைகளைக் கட்டுவது இவற்றினின்று கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள் அடையும் ஆதாயம் மிகச் சொற்பமே. புலனாகாத உடைமைமீது வரிவிதிப்பது, வரி செலுத்தும் திறன் கொள்கையைப் (principle of ability to pay) பொறுத்தே முற்றும் இருக்கிறது. புலனாகாத சொத்தின்மீது வரிவிதிப்பது வரிதாங்கு வல்லமையை முற்றும் திருப்திகரமாக அளவிடக்கூடிய அளவுகோல் அன்று. சொத்துவரி, பொருளின் (சொத்தின்) மீது விதிக்கப்பட்ட வரியானாலும், அதனை அளக்கக்கூடிய அளவுகோல் வரிசெலுத்துவோரின் (உடைமைக்காரரின்) திறனைப் பொறுத்ததாகும் எனக் கருதப்பட்டது. ஆகவே, வருமானத்தைப் பெறும் பலருக்கு, அதாவது, வரிதாங்கு வல்லமை உடையவருக்குத் தம் திறனுக்கேற்ற சொத்து இல்லையானால், புலனாகாத சொத்துகளும் சொத்து வரிப் பட்டியல்களில் சேர்த்துக் கொள்ளப்பட்டன.

இதனால் புலனாகாத சொத்துகளுக்கு அவை எந்தச் சொத்தைப் பிரதிபலிக்கின்றனவோ, அவற்றினின்றும் வேறுபட்ட தனியாக வரி செலுத்தும் திறன் இருக்கிறது என ஏற்படுகிறது. ஓர் எடுத்துக்காட்டின் வாயிலாக இது பிழையான வாதம் என நிரூபிக்கலாம். சமமான நிகர வருமானத்தையுடைய இரண்டு பண்ணைகளை எடுத்துக்கொள்வோம். ஒவ்வொன்றின் பெறுமானமும் 10,000 டாலர் எனக் கொள்வோம். A 10,000 டாலரை ரொக்கமாகக் கொடுத்துப் பண்ணையை வாங்குகிறார். B மற்றொரு பண்ணையை 5,000 டாலரை ரொக்கமாகத் தந்தும், 5,000 டாலரை அடைமானம் மூலம் பெற்றும் விலைக்கு வாங்குகிறார். இரண்டு பண்ணைகளின் வரி செலுத்தும் திறனும் சமமானதே. (ஆனால், இரண்டு குடியானவர்களின் வரி செலுத்தும் திறனும் சமமான

1037—8

தன்று.) Aயும் Bயும் தனித்தனியே 10,000 டாலர் தீர்வை மதிப்பீட்டின்பேரில் வரி செலுத்துகின்றனர். B-யின் பண்ணையை 5,000 டாலருக்கு அடைமானமாகப் பெற்ற C-யின்பேரிலும் ஒரே படித்தான வரிவீதம் விதிக்கப்படுகிறது. C-க்கு அடைமானத்திலிருந்து வரும் வருமானத்தின்மீது வரி விதிக்கப்படுகிறது. இவ் வருமானத்திலிருந்து வரும் வருமானமும் B-யின் பண்ணையிலிருந்து வருவதாகும். ஆகவே A-யின் பண்ணையிலிருந்து கிடைக்கும் வருமானத்தின் மீது விதிக்கப்படும் வரியைக் காட்டிலும், B-யின் பண்ணையிலிருந்து கிடைக்கும் ஒவ்வொரு டாலர் வருமானத்தின்மீதும் 50 சதவிகிதம் கூடுதலாக வரி விதிக்கப்படுகிறது.

வரி நிலைப்பாட்டைப்பற்றி நாம் பொருட்படுத்தாவிடில், B தன்னுடைய சாதாரணப் பங்குகள் (equity) மீதும் (5,000 டாலர்), C தன்னுடைய சாதாரணப் பங்குகள் (5,000 டாலர்) மீதும் வரி கொடுக்கவேண்டும் என வாதிக்கலாம். அப்பொழுது இரண்டு பண்ணைகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீதும் ஒரே அளவு வரிவீதம் விதிக்கப்படும். இது அறிவுக்கும் பொருந்தியதாகும் (புரட்டுகையைத் தவிர்த்தால்). ஆனால், இவ்வாறு உடைமை வரிச் சட்டங்கள் அமைந்திருக்கவில்லை. நாம் வரி நிலைப்பாட்டையும் சேர்த்து எண்ணினால், B தன் சொத்து அடைமானத்தின்மீது C-க்குச் செலுத்தும் வட்டியில், C செலுத்தும் வரியும் அடங்கியிருக்கிறதெனக் காண்போம். பண்ணையை வாங்கியபொழுது வரிகள் பிற்பட்டுப் புரட்டுகை நிகழ்ந்திருக்கலாம் என்ற சாத்தியக்கூறைப் புறக்கணித்தால், A தாங்கும் வரிப்பளுவை விட B தாங்கும் வரிப்பளு 50 சதவிகிதம் கூடுதலானது என்பதைக் காண்போம்.

இவ்வாறு செல்வ வரிவிதிப்பின்மூலமும், அச் செல்வத்திற்கான உரிமைகளின்மீது வரிவிதிப்பின்மூலமும் இரட்டை வரி விதிப்பு (doubl taxation) ஏற்படுகிறது. வரிவீதம் ஒரேபடித்தாக இல்லையென்பதே இரட்டை வரிவிதிப்புக்கு எதிரான தலையாய முகாந்தரமாகும். ஒரே ஒரு முறை ஒவ்வொரு சொத்தின்மீதும் இரட்டிப்பு வீதத்தில் வரிவிதித்தாலும் சரி, அல்லது ஒவ்வொரு சொத்தின்மீது இருமுறை வரிவிதித்தாலும் சரி, அதனால் விளையும் பயன் ஒன்றுதான். மேற்கூறிய உதாரணத்தில் ஒரே அளவு வருமானத்தை உடைய இரண்டு பண்ணைகள் வரிவிதிப்பைப் பற்றிய அளவில், எங்ஙனம் வெவ்வேறு விதமாக நடத்தப்பட்டன என்பதைக் கண்டோம். அவை வெவ்வேறு விதமாக நடத்தப்பட்ட விவரம் வருமாறு :

| | தாவரச் சொத்து வரி (3% வரிவீதத்தில்) | புலனாகாத சொத்து வரி (3% வரிவீதத்தில்) | மொத்தச் சொத்து வரி |
|---|---|---|---|
| A-யின் பண்ணை | 300 டாலர் | ஒன்றுமில்லை | 300 டாலர் |
| B-யின் பண்ணை | 300 டாலர் | ஒன்றுமில்லை | 450 டாலர் |
| B-யின் பண்ணையை அடைமானம் எடுத்த C | ஒன்றுமில்லை | 150 டாலர் | |

இவ் அநீதியை அகற்றுவதற்கு இரண்டு மாற்று வழிகள் உள்ளன. செல்வத்திற்கான எல்லா உரிமைகளையும், அவற்றுக்கு உண்மையில் பத்திரங்கள் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, ஒரே படித்தான இரட்டை வரிவிதிப்புக்கு உள்ளாக்குவது முதல் வழி. ஒரேபடித்தான இரட்டை வரிவிதிப்பினால் வரிவீதம் பாதியாகக் குறைக்கப்படும் என்று கொண்டால், இதனால் ஏற்படும் விளைவு வருமாறு :

| | தாவரச் சொத்து வரி ($1\frac{1}{2}\%$ விகிதத்தில்) | புலனாகாத சொத்து வரி ($3\%$ விகிதத்தில்) | மொத்தச் சொத்து வரி |
|---|---|---|---|
| A-யின் பண்ணை | 150 டாலர் | ஒன்றுமில்லை | 300 டாலர் |
| A-க்குத் தன் பண்ணையில் உள்ள சாதாரணப் பங்கு | ஒன்றுமில்லை | 150 டாலர் | |
| B-யின் பண்ணை | 150 டாலர் | ஒன்றுமில்லை | 300 டாலர் |
| B-க்குத் தன் பண்ணையில் உள்ள சாதாரணப் பங்கு | ஒன்றுமில்லை | 75 டாலர் | |
| C-யின் அடைமானம் | ஒன்றுமில்லை | 75 டாலர் | |

நீதி வழங்குவதற்காக A-யையும் B-யையும் ஒரே மாதிரி நடத்த வேண்டும் என்றால், இவ்விதமான சிக்கலான ஆட்சிப் போக்கைக் கடைப்பிடிக்க வேண்டும். புலனாகாத சொத்துகளுக்கு வரிவிதிப்பினின்றும் பூரண விலக்களிப்பதன்மூலமும் இதே முடிவைப் பெறலாம். அப்பொழுது Aயும் Bயும் தத்தம் பண்ணை

களின்மீது சமமான தொகைகளை (ஆளுக்கு 300 டாலர்) தாவரச் சொத்துவரியாகச் செலுத்தும்படி நேரிடும்.

5,000 டாலருக்குச் சொத்தை அடைமானமாகப் பெற்றிருக்கும் C, அவ்வடைமானத்தின்மீது யாதொரு வரியும் செலுத்தவில்லை என்பதே இவ்வித விலக்குக்கான எதிரிடை வாதமாகச் சாதாரணமாகக் கூறப்பெறும். ஆனல், C-யின் அடைமானத்தின்மீது விதிக்கப்படும் எந்த வரியையும் C செலுத்தமாட்டார் என்பதும், அவர் அதைக் கடன் கொண்ட B-யின்மீது புரட்டுவார் என்பதும் திண்ணம்.

அடைமானங்கள்மீது வரிவிதிப்பதால், சில சொத்துகளின்மீது விரும்பத்தகாத இரட்டை வரிவிதிப்பு ஏற்படுகின்றது என்பதை ஒப்புக்கொண்டாலும், புலனாகாத சொத்துகளின்மீது வரிவிதிப்புக்கும் இது பொருந்துமா என வினவலாம். அடைமானம் வைக்கப்பட்ட பண்ணையின்மீது இரட்டை வரி விதிக்கப்பட்டதற்குச் சில உதாரணங்களை நாம் பார்த்தோம். இதேபோன்று, ஒரு கார்ப்பரேஷனின் ஸ்தூல (physical) சொத்தின்மீது வரி விதிக்கப்படுகிறது. இது தவிர, அதன் பங்குகளையும் கடன் பத்திரங்களையும் வைத்திருப்பவர்மீதும் வரிவிதிக்கப்படுகிறது. ஆனல், பதிவு செய்யப்படாத நிறுவனத்திற்கு (unincorporated business) நிலுவைப் பாக்கியாகப் பங்குகளோ கடன் பத்திரங்களோ இல்லாவிடில், அந் நிறுவனம் வரி செலுத்தவேண்டியதில்லை. இதுவும் பேதங்காட்டுகைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். செல்வத்துக்கு உரிமையைக் காட்டும் அடையாளங்கள் பங்குகள்; ஆனல், பங்குகளே செல்வமல்ல. கார்ப்பரேஷன் வருமானத்தின் பங்கீட்டையே பங்குகளின்மீது கிடைக்கும் வருமானம் பிரதிபலிக்கிறது என்பது தெளிவு. கார்ப்பரேஷனின் வரிசெலுத்தும் திறனை (அல்லது அது அடையும் ஆதாரத்தைப்) பொறுத்து கார்ப்பரேஷனின் தாவரச் சொத்தின்மீதும் புலனாகும் சொத்தின்மீதும் வரிவிதிக்கப்பட்டால், பங்குக்கு உரியவர் (பங்குதாரர்)களின்மீது மீண்டும் வரிவிதிப்பது தகாது. ஏனெனில், பங்குக்கு உரியவர் என்பதாலேயே அவருக்குத் தனியாகப் புதிதாக வரி செலுத்தும் திறன் ஏற்படுவதில்லை. கடன் பத்திரங்கள் கார்ப்பரேஷனின் கடனைக் காட்டுபவையாகும். இவ்விதத்தில் கடன் பத்திரங்கள் அடைமானங்களை ஒத்திருக்கின்றன. ஒன்றின் மீது வரிவிதித்தால் அது இன்னொன்றின்மீதும் விதிக்கப்பட்ட வரியாகும். இரண்டின்பேரிலும் வரிவிதித்தல் இரட்டை வரி விதிப்பாகும். வரி விதிப்பதில் பேதங்காட்டுகையை அகற்ற வேண்டும் என்றால், செல்வம் அனைத்திற்கும் இரட்டை வரி விதிப்பினின்றும் விலக்களிக்க வேண்டும்; அல்லது புலனாகாத சொத்துகளுக்கு மட்டுமாவது வரியிலிருந்து விலக்கு அளிக்க

வேண்டும். புலனாகாத சொத்துகளுக்கு வரியினின்றும் விலக்களிப்பதே சரியான ஆட்சிக்கு ஏற்புடைத்தாகும்.

இவ்வாறு கருதுகோள் அளவிலும் சரி, நடப்பிலும் சரி, புலனாகாத சொத்தின்மீது வரிவிதிப்பது கண்டனத்திற்குரியது. புலனாகாத சொத்துகளுக்குத் தனியாக யாதொரு வரிசெலுத்தும் திறனுமில்லை. அவை செல்வத்தின் பிரதிநிதிகள். அவை எச் செல்வத்திற்குப் பிரதிநிதிகளாயிருக்கின்றனவோ அச் செல்வத்தைத் தவிர்த்து, தனியே அவை யாதொரு சிறப்பான ஆதாயங்களையும் அடையவில்லை. கருதுகோள் அளவிலாவது, அவற்றின்மீது வரி விதிப்பதற்கான யாதொரு முகாந்தரத்தையும் கூறமுடியாது. அவ்வித வரிகளின் நிலைப்பாடு ஸ்தூலச் (physical) சொத்தின் மீதே எப்பொழுதும் விழுகிறது. அதனால் ஒரே நபர்மீது இரட்டை வரிப்பளு ஏற்படுகிறது. இது விரும்பத்தக்கதன்று. ஆட்சியைப் பொறுத்தவரையில், புலனாகாத சொத்துகள் பெரும்பாலும் வரிப் பட்டியல்களிலிருந்து தப்பித்துவிடுகின்றன. நேர்மைக்கு இலக்கணமாக விளங்கும், அல்லது வரியிலிருந்து தப்பித்துச் செல்லும் வழிகள் தெரியாத அப்பாவிகளாக இருக்கும் மிகச் சிலர்மீதே இவ்விரட்டை வரிப்பளு விழுகிறது. இத் திறனாய்வுகளுடன் இவ் வரி வீதாச்சாரமாக இருப்பதையும் (எல்லாச் சொத்து வரிகளும் வீதாச்சாரமானவையே), அதனால் சரியான வரிப்பங்கீட்டின் கொள்கைகளின்படி (principles of appropriate tax allocation) பார்த்தால் இவ் வரி அந்த நிலைக்கு ஒத்துவரவில்லை என்பதையும் இணைத்துப் பார்க்கும்பொழுது, இங்ஙனம் முற்றும் கண்டனத்திற்கு ஆளான வேறொரு வரியைக் கற்பனையிலும் எண்ணிப் பார்ப்பது அரிது. தருக்கரீதியில் நிலைநாட்ட முடியாமற் போனாலும், புலனாகாத சொத்துகளின் வரிவிதிப்பு ஆட்சியைச் சப்பைக்கட்டுக் கட்டிப் பேசுவதும், அம் முயற்சிகள் பயனிலவாய்ப் போவதும், நிதியைப் பற்றிய மாநில, தல அரசாங்கங்களின் அறிவுக்கு ஏற்பட்ட வருந்தத்தக்க விளக்கங்கள் என்று கூறலாம்.[7]

### பாகுபடுத்திய உடைமை வரிகள் (Classified Property Taxes)

வரி நோக்கங்களுக்காக உடைமையைப் பாகுபாடு செய்வது என்பது மாநிலங்களிடையே பல காலமாக இருந்துவரும் வழக்கமாகும். ஒரு பாகுபடுத்திய உடைமை வரியின்கீழ்ப் பல்வேறுபட்ட உடைமை இனங்களையும் வெவ்வேறு வகையாக நடத்தவேண்டும் என்பது கருத்தாகும். வேற்றுமைப்படுத்திய நடப்பை (differentiated treatment) கீழ்க்காணும் இரு வழிகளில் ஒன்றின்மூலம் செயற்படுத்தலாம். சொத்தின் பல்வேறுபட்ட வருக்கங்களுக்குப் பல்வேறுபட்ட வரிவீதங்களைப் பிரயோகித்தல் ஒரு வழியாகும். எல்லா வகைச் சொத்தினங்களுக்கும் ஒரே வீதத்தைப் பிரயோகிப்பதும்,

பல்வேறுபட்ட சொத்தினங்களையும் அவற்றின் முழு மதிப்பின் வெவ்வேறு வீதாசாரங்களின்படி தீர்வை மதிப்பீடு செய்வதும் மற்றொரு வழியாகும். மாநிலங்களின் அநுபவத்திலிருந்து சொத்தைப் பாகுபாடு செய்வதற்கு மூன்று காரணங்கள் புலனாகின்றன. வரிப்பொறுப்பை, வேற்றுமைப்படுத்திய வரி செலுத்தும் திறனுக்குத் தக மாற்றி அமைப்பதன்வாயிலாக சொத்தினங்களுக்கு அதிகமான அளவு நியாயம் கிடைக்கும்படி செய்வது முதற் காரணமாகும். ஒருபடித்தான விதியின்கீழ் வரியினின்றும் தப்பித்துச் செல்லும் சொத்தினங்களின் பெரும் பகுதிக்கும் அல்லது வரியினின்றும் தப்பித்துச் செல்வதற்கு வாய்ப்பே இல்லாத குறைந்த அளவு சலுகைகளையுடைய சொத்தினங்களுக்கும் (underprivileged types of property) சில சலுகைகளை அளிப்பதன் வாயிலாக சமயத்திற்கு ஏற்றாற்போல வளைந்துகொடுப்பது இரண்டாம் காரணமாகும். வரி செலுத்துவதற்குத் திறன் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி அல்லது ஆதாயம் அடைந்தாலும் சரி, அடையாவிட்டாலும் சரி (உ-ம் அபிவிருத்தி செய்யப்பட்ட நிலம், பண்ணைச் சொத்து, சலுகையளிக்கப்பட்ட தொழில்கள்), சில வகைச் சொத்தினங்களுக்குச் சலுகைகள் அளித்தல் மூன்றாம் காரணமாகும்.

சொத்து வரிகளைச் செலுத்துவதற்குப் பல்வேறுபட்ட சொத்தினங்களுக்கு உண்மையில் பல்வேறுபட்ட திறன்கள் இருக்கின்றனவா? வேறுவகைச் சொத்திலிருந்து கிடைப்பதைவிட சிலவகைச் சொத்திலிருந்து அதிக நிகர வருமானம் கிடைக்கிறது என்பது உண்மையே. சொத்தின் பெரும் பகுதியிலிருந்து மனநிறைவைத் தவிர வேறு பணவருமானம் ஒன்றும் கிடைக்கவில்லை என்பதும் உண்மையே. ஆயினும், இவ் வேற்றுமைகள் யாவும், பல்வேறுபட்ட சொத்தினங்களின் மூலதனப் பெறுமானத்தில் (capital value) பிரதிபலிக்கின்றன. சொத்திலிருந்து எதிர்பார்க்கும் நிகர வருமானத் தொகையை மூலதனமாக்கி, அதை அவ்விதச் சொத்தின் மீது முதலீடு செய்வதற்கு நாம் எத்துணை வருவாய் வீதம் (rate of return) வேண்டும் என்கின்றோமோ அதை வகுப்பதன்மூலம் ஒரு சொத்தின் மதிப்பு வரையறுக்கப்படுகிறது. இவ்வாறாக மூலதன மதிப்பை நிர்ணயிக்கும் மூன்று தீர்மானிகள் (variable determinants) மாறியிருக்கின்றன. அவையாவன: ஆண்டுதோறும் நாம் எதிர்பார்க்கும் நிகர வருமானத் தொகை, குறிப்பிட்ட ஆபத்துடன் கூடிய (given estimated risk) முதலீடுகளின்மீது நாம் வேண்டும் வருவாய் வீதம் (rate of return), எதிர்பார்க்கும் வருவாயைத் தரவல்ல காலக்காரணி (time factor), அதாவது, வருமானம் கைக்குக் கிட்டுவதற்கு முன்பு காத்திருக்க வேண்டிய காலமும் அவ்

வருமானம் எத்துணைக் காலம் தொடர்ந்து நீடிக்கும் என்பதும், இங்ஙனமாக வரி செலுத்தும் திறனில் உள்ள வேற்றுமைகளைக் காட்டும் மாறிகளையும் (variables) கொண்டுதான் பல்வேறுபட்ட சொத்தினங்களின் மூலதன. மதிப்புகள் அறுதியிடப்படுகின்றன. அதனுல் எல்லாச் சொத்தையும் அதன் முழு மார்க்கட் மதிப்பின் படி தீர்வை மதிப்பீடு செய்தால், எல்லாவகைச் சொத்தின் தீர்வை மதிப்பிடப்பட்ட ஒவ்வொரு டாலர் பெறுமானத்திற்கும் உள்ள வரி செலுத்தும் திறன்கள் சமனுகவே இருக்கும்.[8] இங்ஙனமாக உண்மையான சொத்தின் மதிபபுகளைக் கொண்டே வரி செலுத்தும் திறனில் வேறுபாடு இருப்பதாகக் கூற முடியாது. இருந்தாலும் சரியாகத் தீர்வை மதிப்பிடப்படாவிடில், சொத்தினங்களிடையே வரி பூராவையும் அநியாயமாகப் பிரயோ கிக்கும் வரித்தளங்கள் ஏற்படலாம்.

பல்வேறுபட்ட சொத்தினங்களுக்கும், தீர்வை மதிப்பிடப் பட்ட ஒவ்வொரு டாலருக்கும் வரி செலுத்தும் திறன் ஒரு சரியான தீர்வை மதிப்பீட்டின்கீழ்ச் சமனுக இருக்கிறது என்று ஏற்றுக் கொண்டால், குறிப்பிட்ட சொத்தினங்களைப் பிரத்தியேக முறை யில் நடத்துவதற்கான பிற திறன்களும் இருக்கின்றன. சிறப்பாக வரியைப் புரட்டுகைக்கான வேறுபாட்டுத் திறன்களையும், வரியி லிருந்தும் தப்பிப்பதற்கான வேறுபாட்டுத் திறன்களையும் நாம் பல ரிடைக் காண்கின்ரேம். புலனுகாத சொத்துகளின்மீது வரி விதிப்பதைக் கடனளிக்குப் புரட்டும் தோரணையினுல், கடனை இறுக்கவேண்டிய ஸ்தூல சொத்தின்மீது இரட்டை வரிவிதிப்பு ஏற்படுகிறது. சில தொழிற் சொத்து வரிகள் (business property taxes , விலையுலை வாங்குவோர்மீது புரட்டப்படும் போக்கையும் நாம் காண்கின்ரேம். இதனுல் அரசாங்கம் வரி விதித்தபொழுது எண்ணியதற்குப் பெரிதும் மாறுபட்டே, இவ் வரியின் நிலைப்பாடு காணப்படுகிறது. ஆகையால், மொத்தத்தில் சொத்தின் திறன் அல்லது அதனை உடையவரின் வரி செலுத்தும் திறனுக்கு முர ணுகவே வரிப்பளுவுகள் புரட்டுகையால் ஏற்படுகின்றன.

புலனுகாத சொத்துகளும், தனியாள் புலனுகும் சொத்தில் பெரும்பகுதியும் சொத்து வரிகள் கொடாது தப்பிப்பது மிகவும் கூடுதலாகவே இருக்கின்றன. இதனுல் இவ்வகைச் சொத்துடைய வர்களுக்கு இழைக்கப்பட்ட 'அநீதிகளைத் துடைப்பதற்கு சாத்திய மான ஒரே வழி, இவ்வகைச் சொத்தினங்களுக்கு வரியிலிருந்தும் விலக்களிப்பதே. வரி நோக்கங்களுககு இவ்வாறுன விலக்கை ஒரு பாகுபாடு செய்யும் முறையாகவே கொள்ளலாம்.

அரசாங்கக் கொள்கையைப் பொறுத்த அளவில், ஒருவகைத் தாவரச் சொத்தின்மீது வரிவிதிப்பதில் நடைமுறையில் ஒரு சங்கடமும் இருக்கிறது. பண்ணை நிலம் அல்லது மனைக்கட்டு இவற்றின் மீது வரி தண்டுவதைப்போல, அல்லது பிற தீர்ந்துவிடக்கூடிய வளப்பொருள்களைத் (exhaustible resources) தன்னகத்தே கொண்டிருக்கும் நிலங்கள்மீதும், மரத்தைப் பயிரிடும் நிலங்கள்மீதும் வரி தண்ட முடியாது. இச் சங்கடம் சொத்து வரிவிதிப்பைப்பற்றிய கருதுகோளினால் விளையவில்லை. ஆனால், வரிக்கொள்கைக்கும் பேணல் கொள்கைக்கும் (conservation policy) உள்ள முரணால் இச் சங்கடம் விளைகிறது. உலோகங்களைத் தன்னகத்தே கொண்டிருக்கும் நிலத்தின்மீது, அதன் நடப்பு மதிப்பைத் தளமாகக் கொண்டு ஆண்டுதோறும் ஒரு வரி விதித்தால், அதனால் அவ் வளப் பொருள்கள் விரைவாகவும் வீணாகவும் செலவழிக்கப்படுவதற்கு ஊக்கம் அளித்ததாகிறது. அவற்றின் கணியம் ஒரு வரையறைக் குட்பட்டிருப்பதால், அவை தீர்ந்துபோகும் அளவும் அவற்றின் பேரில் போடப்படும் வரிகளின் மொத்தத் தொகை, அவை எவ்வளவு விரைவாகப் பயன்படுத்தப்படுகிறதோ அவற்றுக்கு நேர் எதிரிடையாகவே இருக்கும். ஆகவே, இம் மாதிரியான வளப் பொருள்களைப் பேணவும் முறையாகப் பயன்படுத்தவும் வேண்டுமென்றால், வளப்பொருள்களுக்கு வரியைப் பொறுத்தவரையில் பிரத்தியேகச் சலுகை அளிப்பது விரும்பத்தக்கது. இதனால் வளப் பொருளகளை விரைவில் தீர்ந்துபோகுமாறு செய்வதற்கான ஊக்கமும் அகலும்.

காட்டு நிலத்தின்மீது வரிவிதிப்பதும் இதே போன்றதொரு பிரச்சினையை எழுப்புகிறது. காட்டு வளப்பொருள்களை நல்ல முறையில் பயன்படுத்தவேண்டுமென்றால், மரத்தை எப்பொழுது வெட்டினால் மரமறுக்கும் தொழிலுக்கு மிகவும் பயன்படுமோ அப் பொழுதுதான் வெட்டவேண்டும். காடுகளைப் பேணவேண்டுமென்றால், வெட்டிய மரங்களுக்குப் பதிலாகப் புதிதாக மரங்களை நட்டு வளர்த்தலும் இன்றியமையாதது. ஆண்டுதோறும் காட்டு நிலத்தின்மீது வழக்கமான சொத்துவரியைப் போடலாம். அதனால் அவ்வப்பொழுது வெட்டாமல் விடப்பட்டிருக்கும் மரங்களின் மதிப்பையும் சேர்த்துத் தீர்வை மதிப்பிடும்படி நேரிடும். மரங்கள் நன்றாகச் செழித்து அடம்பாக வளர்வதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கும். ஆகவே, அவற்றை வெட்டி விற்பதன் முன்பு ஆண்டுதோறும் தொடர்ந்து அவற்றின்மீது வரிகளைச் செலுத்தும்படி இருக்கும். இதனால் மரங்களை இளம்பருவத்திலேயே வெட்டுவதும், வெட்டிய மரங்களுக்குப் பதிலாகப் புதிய மரங்களை நடுவதில் ஊக்கமின்மையும் ஏற்படும்.

வீணுக்கும் துடிப்பை அகற்றுவதும், அதே சமயம் ஏனைய சொத்துகளின்மீது வரி விதிக்கப்பட்டதை ஒத்தே இச் சொத்தின் மீதும் வரிவிதிப்பதும்தாம் சரியான வரி விதிப்புக் கொள்கை யாகும். ஆண்டுதோறும் அவ்வாருன சொத்தின்மீது குறைவான வரி விதிப்பதும், அத்துடன் அவ் விளையுளை விற்கும்பொழுது ஒரு பிரத்தியேக வரி விதிப்பதும்தாம் இப் பிரச்சினைக்குத் தருக்கரீதி யான தீர்வாகும் (logical solution) என்று எல்லோரும் ஒப்புக் கொள்கிருர்கள். சொத்துவரிகளுக்காக இவ்வாருன நிலங்களைப் பிரத்தியேகப் பாகுபாடு செய்வதும் இவ்விதமான ஏற்பாட்டினுள் அடங்கும்.

சொத்துவரி நன்ருகப் பயன்படவேண்டுமென்ருல் பொதுச் சொத்து வரியைக் (ஒருபடித்தான விதியின்படி) கை கழுவுவது இன்றியமையாதது என்பது பாகுபாடு செய்யப்பட்ட சொத்து வரிகளைப்பற்றிய நம்முடைய முடிவாகும். புலனுகாத சொத்து களுக்குத் தனியாக யாதொரு வரிதாங்கு வல்லமையும் இல்லாத தாலும், அவை பிரதிபலிக்கும் செல்வத்தினின்று அவற்றுக்கு வேருக யாதோர் ஆதாயங்களும் இல்லாததாலும், புலனுகாத சொத்துகளுக்குச் சொத்து வரியினின்று விலக்களிக்க வேண்டும் என்பது பெறப்படும். மேலும், வரி செலுத்துவோரிடையே காணப் படும் பெருத்த அநீதியைக் களைவதற்காகப் புலனுகாத சொத்து களின் பெரும்பகுதியை வரிப்பட்டியலுள் கொணர்வது முடியாத தாகும். அவை கடனைப் பிரதிபலிப்பதாக இருந்தால், பொதுவாக அவை கடன்கொண்டார்மீது புரட்டப்படுகின்றன. புலனுகாத சொத்துகள் சொத்துரிமையைப் பிரதிபலித்தால், அவை பிரதி பலிக்கும் செல்வத்தின்மீது இருமுறை வரி தண்டப்படுகிறது. இவ் வித பேதங்காட்டுகையை அரசாங்கத்தார் வேண்டுமென்றே செய் கிருர்கள் என்று எண்ணுவது சிரமமாயிருக்கிறது.

வரி செலுத்தாது தப்பிப்பதனுலும், சரியாகத் தீர்வை மதிப்பீடு செய்வது நடைமுறையில் சாத்தியமாயிராததனுலும் விளையும் அநீதிகளைத் தவிர்ப்பதற்குத் தனியாள் புலனுகும் சொத் திற்கு வரிவிலக்களிக்க வேண்டியது இன்றியமையாதது. ஆவண ஏடுகளுடன் (registration records) ஒப்பிடுவதன்மூலமும், தரமாக் கப்பட்ட இனங்களின் (standardized items) மார்க்கெட்டு விலைக ளுடன் ஒப்பிடுவதன்மூலமும் சில சொத்தினங்கள்பேரில் பிரத்தி யேகச் சொத்துவரிகள் விதிப்பதற்குச் சிறப்பான காரணங்கள் இருக்கலாம். இவ்வகைப் பண்புகளைக்கொண்ட தனியாள் புலனுகும் சொத்தினங்கள் மோட்டார் ஊர்திகளும் படகுகளுமே எனலாம்.

பொதுச் சொத்தின் பெரும்பகுதிக்கும் விலக்களிப்பதற்காகச் செய்யப்படும் பாகுபாட்டினுல் சொத்துவரி தாவரச் சொத்தின்—நிலமும், கட்டடங்களும்—மீதுமட்டும் விதிக்கப்பட்ட வரியாக ஒரு வரையறைக்குள்ளாகும். இவ்வித வரையறையினுல் சொத்து வரி விதிப்பைச் சுளுவாக ஆள ஏதுவாகும். பின்னர் மாநில அதிகாரத்தின்கீழ் மிகவும் விஞ்ஞானரீதியான தீர்வை மதிப்பீட்டு முறைகளைப் பரவலாகக் கையாளலாம். இதனுல் தீர்வை மதிப்பீட்டு வேலையும் எளிதாகும். சொத்து வரியை இவ்விதம் ஒரு வரம்புக்கு உட்பட்டுக் கையாளுவதனுல் தீர்ந்துவிடக்கூடிய உலோக வளப்பொருள்கள், காட்டு வளப்பொருள்கள் இவற்றுக்கு மட்டும் ஒரு சிறப்பான பாகுபாடு செய்யும் முறை வேண்டப்படுகிறது. இப் புறனடையில் அடங்கிய நிலத்தின்மீது ஆண்டுதோறும் வரிபோடப்படும். வரிவிதிப்புக்கு அந் நிலம் யாதொரு வளப்பொருளையும் தன்னகத்தே கொண்டதாக எண்ணப்படமாட்டாது. நிலத்திலிருந்து உலோகப் பொருள்கள் அகழ்ந்தெடுக்கப்பட்டபொழுதும், அல்லது மரங்கள் வெட்டி விற்கப்பட்டபொழுதும் கூடுதலாகச் சொத்து வரிகள் விதிப்பதற்குப் பதிலாக, ஒரு பிரத்தியேக வரியை விதிக்கலாம்.

### நிலத்திலிருந்து கிடைக்கும் 'ஈட்டாத ஊதிய உயர்வின்'மீது வரிவிதிப்பு (Taxation of the 'Unearned Increment' from Land)

இவ்விடத்தில் சொத்துவரியைப்பற்றிய ஒரு சிறப்பான கருதுகோளை ஆராய்வது பொருத்தமாகும். சில இடங்களில் இக் கருதுகோளுக்குக் கடும் எதிர்ப்பு இருந்தாலும், நடைமுறையில் பொது மக்கள் இதை ஒப்புக்கொள்கிறுர்கள். இதுதான் 'ஒற்றை வரி'யைப் பற்றிய (single tax) கருதுகோளாகும். பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிக் கூற்றில் ஹென்ரி ஜார்ஜ் (Henry George) இக் கருதுகோளுக்குச் சிறப்பான புதியதோர் வடிவத்தைத் தந்தார். இக் கருதுகோள் இருபெரும் உண்மைகளை அடிப்படையாகக் கொண்டது. (1) உற்பத்திக் காரணிகளில் நிலம் அலாதியானது (peculiar). ஏனெனில், அதை மீடடும் உற்பத்தி செய்ய முடியாது (non-reproducible). ஆகையினுல, ஒரு குறிப்பிட்ட தரத்தையுடைய எந்த நிலத்திற்கும் கிடைக்கும் விளைச்சலை ஒரு முற்றுரிமையினின்றும் கிடைக்கும் விளைவுக்குச் சமமானது எனலாம். இந் நிலத்திற்கு உரியவராக இருக்கும் ஆகூழ் சிலருக்கே கிடைத்திருக்கிறது. இக் காரணம்பற்றியே, வளர்ந்துவரும் ஒரு பொருளாதாரத்தில், நிலக்கிழவர்கள் தங்களுக்குக் கிடைக்கும் 'வார' வருவாய்களினுல் ('rent'returns) பெரும் பொருளை ஈட்டக்கூடும். (2) இவ் வருவாய்கள் நிலக்கிழவரின் முயற்சியால் கிடைத்ததல்ல. அவர்கள் செய்யவேண்

டியதெல்லாம், மக்கள் பெருக்கத்தினாலும் வாழ்க்கைத் தரம் ஏறுவதனாலும் நிலத்தின் விளையுள்களுக்குத் தேவை ஏறுந்தோறும் வாளாவிருக்கவேண்டியதே. நிலத்தின் விளையுள்களுக்கான பொது மக்களின் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகக் குறைந்த மகசூலைத் தரும் (less productive) நிலங்களைச் சாகுபடிக்குக் கொணரவேண்டியிருக்கிறது. இதனால் இம் மகசூலைத் தரும் நிலத்தின் இறுதிநிலைச் செலவைச் சமாளிக்கும் வகையில் விளையுள்களின் விலை உயர்வாயிருக்கவேண்டும் என்பது பெறப்படும். இதனால் சிறந்த நிலத்தினின்று ஏராளமான உபரி மகசூல்கள் (surplus returns) கிடைக்கின்றன. இவ்வாறு நிலத்திற்கு உயர்ந்த மதிப்புகளை ஏற்படுத்துபவர் நிலக்கிழவரல்லர், சமுதாயமே. ஆகவே, 'இவ் ஈட்டப்படாத உயர்வை'ப் (unearned increment) படைத்த சமுதாயம் தன்னுடைய நலனுக்காகவே இவ்வுயர்வு முழுதையும் வரியாகப் பெறுவது சாதாரண நீதியாகும் (நீதியின் அடிப்படையாகும்).

தான் நிலத்திற்குச் செய்த அபிவிருத்திகளுக்காக ஒரு நியாயமான மகசூலைப் (fair return) பெறும்படி நிலக்கிழவரை விட்டுவிட்டு, இவ்வுயர்வு முழுதையும் வரியாகப் பெற்றுவிடவேண்டும் என்பது ஜார்ஜின் கருத்து. இவ்வுயர்வு முழுதையும் வரியாகப் பெறவேண்டும் என்பது இன்றியமையாதன்று. இதர தாவர, தனியாள் சொத்தினங்களைக் காட்டிலும் கூடுதலாகவே நிலத்தின்மீது சொத்து வரிகள் விதிக்கவேண்டும் என இக் கருதுகோள் நிலைநாட்டுவதாகக் கொள்ளலாம். இம் முடிவிற்கு ஆதாரமாக மேலும் பல காரணங்களைக் காட்டலாம். பொதுவாக உபரி வருவாய்களின் மீது போடப்படும் வரிகளைவிட ஆக்கச் செலவினங்களின்மீது போடப்படும் வரிகளை எளிதில் புரட்டலாம். தொழில்துணிவைப் (entrepreneurship) போதுமான கணியத்திலும் தரத்திலும் ஈர்ப்பதற்கு ஓரளவு இலாபம் தேவை. ஆகவே, இலாபத்தின்மீது போடப்படும் வரி ஆக்கச் செலவின்மீது போடப்படும் வரியாகும். ஆகவே, நெடுங்காலத்தில், இவ் வரியை முற்பட்டுப் புரட்டலாம். ஆனால், உபரி லாபத்தின்மீது விதிக்கப்பட்ட வரியைப் புரட்டுவது மிகவும் எளிதன்று. வாரவருவாய் (rent return), ஆக்கச் செலவைக் காட்டிலும் உபரியாக இருப்பதனால், யார்மீது முதலில் தீர்வை மதிப்பிடப்பட்டதோ அவர்மீதே அதன் நிலைப்பாடு தங்கும் என்று உறுதியாகக் கூறலாம். மேலும், நிலத்தை விற்பதன்மூலம் இவ் வரியிலிருந்து தப்பித்துச் செல்ல விரும்பும் நிலக்கிழவர் ஒருவர், வரி மூலதனமாக்கப்பட்டு விற்கும் விலையிலிருந்து கழிக்கப்படுவதையும், அதனால் வரியிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாது என்பதையும் உணர்வார். இறுதியாக, மதிப்பின் 'ஈட்டப்படாத உயர்வுகளை'

நிலக்கிழவர்களால் பணமாக்க முடியாததால், நிலத்தில் ஊக வாணிப சாத்தியம் (land speculation) மிகவும் குறைவுபடும்.

அவ்வித வரியினால் நாம் கோரும் சமூக விளைவுகளைச் செயலாக்க வேண்டுமென்றால், அவ்வித வரியை எவ்விதம் பிரயோகிக்க வேண்டும் என்று வினவலாம் (அபிவிருத்திகளின் மதிப்புகளி லிருந்தும் வேறாக). ஆண்டுதோறும் நில மதிப்புகளின் மீது வரி போடுவதால் விரும்பிய விளைவு ஏற்படாததோடு, பல சங்கடமான தீர்வை மதிப்பீட்டுப் பிரச்சினைகளும் எழுகின்றன. கருதுகோளுக்குச் சிறிதும் முரணில்லாத வகையில் வரிவிதிக்க வேண்டும் என்றால், நிலமதிப்பின்மீது வரி விதிக்காது, நிலமதிப் புயர்வின்மீது வரிவிதிக்க வேண்டும். இவ்வாறாக, மூலதன ஆதாய வரிக்கு இணையான ஒரு வரி வேண்டப்படுகிறது. 'ஈட்டப் படாத உயர்வு' வரியில், விற்பனையால் கிடைத்த ஆதாயங்களின் பேரிலும், ஏட்டளவில் ஏற்பட்ட மதிப்புயர்வின்பேரிலும் வரி போடப்படுகிறது. இதுதான் இரண்டு வரிகளுக்கும் உள்ள வேறு பாடு. இதனால் ஒருவேளை நிலங்களை விற்கும்படியான கட்டாயம் நேரிடலாம்; அல்லது நிலத்தை மிகுந்த இலாபகரமான முறையில் பயன்படுத்தும்படியான கட்டாயம் ஏற்படலாம். உள்ளார்ந்த (potential) மார்க்கெட் மதிப்பில் ஏற்பட்ட ஏற்றத்தைத் தளமாகக் கொண்டு, கூடுதலாக வரி செலுத்தவேண்டியிருக்கும் நிலக்கிழவர் ஒருவர், அதைக் குறைந்த இலாபம் தரத்தக்க முறையிலேயே பயன்படுத்துவது அவருக்குக் கட்டுபடியாகாது.[9] இவ்வாறு நிலம் மிகச் செவ்வையாகப் பயன்படுத்தப்படும்.

ஏனைய உபரி வருவாய்களை ஒதுக்கிவிட்டு நிலத்தின் ஈட்டப் படாத உயர்வின்மீதுமட்டும் வரிவிதிக்கும் கருதுகோள் குறைபாடு உடையதே. 1890-ல் ஆல்ஃபிரெட் மார்ஷல் (Alfred Marshall) சுட் டிக் காட்டியவாறு, போட்டியிடுவோர்களின் தடையிலா நுழை வைத் தடுப்பதற்கேற்ற முறையில் காரணிகள் வேறுபடுத்தப்பட் டிருக்குமானால், எந்த உற்பத்திக் காரணிக்கும் 'வாரப்போலி' (quasirent) கிடைக்கலாம். பேடன்டுகள் உள்ள செய்வினை முறை களுக்கும் (patented processes), தொழிலில் முற்றுரிமை நிறுவனத் திற்கும், பேரெழில் படைத்த அல்லது பிற நல்ல அமிசங்கள் பொருந் திய கூத்தர்களுக்கும் உபரி வருவாய்கள் கிடைக்கலாம். ஒரு நிலவரியினால் இவ்வுபரி மகசூல்களின்பேரில் கைவைக்க முடியாது. எங்கெங்கு சமுதாயத்தால் படைக்கப்பட்ட ஆதாயங்கள் உள் ளனவோ, அவற்றையெல்லாம் ஒரு வருமானவரியை விதிப்பதன் வாயிலாகச் செவ்வனே மொட்டையடித்துவிடலாம் என்று ஒருவர் திறமையாக வாதிக்கலாம்.

எல்லா நிலத்தையும் நாட்டுடைமையாக்கி, நடப்பில் அதன் பயன்பாட்டிற்கு என்ன மதிப்போ அதற்குச் சமமாக உயர்ந்த ஏலத்திற்கு நிலத்தைக் குத்தகைக்கு விட்டு வாரத்தை வசூலிப்பது ஒருவேளை 'ஈட்டப்படாத உயர்வை' நிலத்திலிருந்து எடுக்கும் மிகச் சிறந்த முறையாக இருக்கலாம். ஆஸ்திரேலியாவின் சில பகுதி களில் இங்ஙனம் நிகழ்கிறது. இக் கொள்கையை ஓரளவு மிதமாகக் கடைப்பிடிக்கும் முயற்சிகள் ஆஸ்திரேலியாவிலும், கனடாவின் சில மாகாணங்களிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில் நகரங் களிலும் மேற்கொள்ளப்பட்டன. இவ்விடங்களிலெல்லாம் தாவர அல்லது தனியாள் சொத்தின்மீது விதிக்கப்படுவதைக் காட்டிலும் சற்றுக் கூடுதலான வீதத்திலேயே நிலத்தீர்வையை மதிப்பீடு செய் கிறார்கள். பாகுபாடு செய்யப்பட்ட சொத்துவரி விதிக்கப்பட்டது இதனாலாய பயனும். ஆயினும், மொத்தத்தில் நில மதிப்புகளின் மீது பிரத்தியேகமான ஒரு வரி விதிப்பதற்குப் பொதுமக்களின் ஆதரவு இல்லை எனலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சொத்து வரி விதிப்பின் எல்லைக்கோடுகளை (outlines), தல அரசாங்கங்கள் அறுதியிடாது மாநில அரசாங்கங்களே அறுதியிடுவதால், குடியான வர்களை ஊக்கம் இழக்கச் செய்யும் எந்த ஒரு வரிமுறையையும் தவிர்ப்பது வழக்கமான போக்காயிருந்துவருகிறது.

### வாணிபச் சுழலுக்கு எதிரான சொத்து வரிகளின் பயன் (Counter-Cycle use of Property Taxes)

வாணிபச் சுழலுக்கு எதிரிடையான வரிக்கொள்கையில் சொத்து வரிகளுக்கு இடமிருக்கலாம்; அல்லது இல்லாமலும் போகலாம். வாணிபச் சுழலின் எதிரிடையான நோக்கங்களுக் காகப் பயன்படுத்தப்படும் முறையில், உடனடியாக வரி செலுத்துகைகளின் இனங்களில் மாறுதல்கள் செய்வதற்கு, ஆண்டு தோறும் தீர்வை மதிப்பீடு செய்யப்பட்டு வசூலாகும் சொத்து வரிகளில் வாய்ப்பில்லை. மேலும், அமெரிக்காவில், நாடு முழு மைக்கும் வாணிபச் சுழலுக்கு எதிரான சொத்து வரிக் கொள்கையைக் கடைப்பிடிக்கும் சாத்தியக்கூறு இல்லை. இதற் குக் காரணம் சொத்து வரிகளைத் தல அரசாங்கங்கள் பிரயோ கிப்பதேயாகும். இறுதியாகச் சொத்துரிமைக்கும் தனியாள் வருமானத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லாததால், வாணி பச் சுழலுக்கு எதிராக வரியில் நெகிழ்ச்சியைப் புகுத்துவது சாத்தியமாயினும், நுகர்வின்மீதும் முதலீட்டின்மீதும் யாதொரு விளைவும் ஒப்புமையில் ஏற்படுவதில்லை. வாணிபச் சுழலுக்கு எதிரிடையாகத் திறமையாகப் பயன்படுத்துவதற்கு நல்ல எதிர் காலத்தோடுகூடிய தனியாள் வருமான வரிகளை மாநிலங்கள் மேற்கொண்டு, வசூல் செய்து, தல அரசாங்கங்களுக்குப் பகிர்ந்து

தருவதற்கு, இப்பொழுது அமுலில் இருக்கும் சொத்துவரி தொடர்ந்து இருப்பதோ அல்லது நாம் மேற்கூறியபடி ஒரு வரையறைக்குட்பட்ட வடிவில் இருப்பதோ உண்மையில் முட்டுக் கட்டையாக இருக்கின்றது.

**சொத்து வரி (Property Tax): முடிப்புரை**

1958-ல்,[10] அமெரிக்க ஐக்கிய நாடுகளில், தல அரசாங்கங்களால் தீர்வை மதிப்பீடு செய்யப்பட்ட மொத்தச் சொத்தின் மதிப்பில் ஐந்தில் நான்கு பங்கு தாவரச் சொத்தும், சுமார் ஐந்தில் ஒரு பங்கு புலனாகும் தனியாள் சொத்தும் ஆகும். புலனாகாத தனியாள் சொத்து ஒரு சதவிகிதத்திற்கும் சற்றுக் குறைவே. எல்லா மாநிலங்களிலும் உள்ள தல அரசாங்கங்கள் தாவரச் சொத்தின்மீது வரி விதித்தன. மூன்று மாநிலங்களைத் தவிர்த்து ஏனைய மாநிலங்களில், தல அரசாங்கங்கள் தனியாள் புலனாகும் சொத்தின்மீது ஓரளவு வரி விதித்தன. முப்பத்தைந்து மாநிலங்களில் புலனாகாத சொத்துக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. புலனாகாத சொத்துகளுக்கும், தனியாள் புலனாகும் சொத்துகளுக்கும் ஓரளவு வரிவிலக்கு அளிப்பது இப்பொழுது காணப்படும் போக்காகும். பொதுவாக இவ்வகைச் சொத்துகளைத் தீர்வை மதிப்பீடு செய்வதில் உள்ள சங்கடங்களாலேயே, இப் போக்கு எழுந்தது. மாநிலங்கள் தனியாள் வருமான வரிகளை விதித்தபொழுது, பல மாநிலங்களில் புலனாகாத சொத்துகளுக்கு வரியினின்றும் விலக்களிக்கப்பட்டது. சொத்து வரித் தளத்தில் அரிப்பு ஏற்பட்டுக்கொண்டுவந்தபோதிலும், இப்பொழுதுகூட மாநில, தல வரிமுறைகளை மொத்தமாகப் பார்க்கும்பொழுது, சொத்துவரி இன்றும் தலையாயதாகவே இருக்கிறது. தல அரசாங்கங்களைப் பொறுத்தவரையில், சொத்துவரி மிகவும் முக்கியமானதாக இப்பொழுதும் விளங்குகிறது. இரண்டாவது உலகப் போர் ஆரம்பித்த காலம் முதற்கொண்டு தீர்வை மதிப்பீடுகளும் மில் (mill) வீதங்களும் * பொதுவாக விரைவாக ஏறியே வந்திருக்கின்றன.

ஒரேபடித்தான விதியைக் கைவிட்டாலுங்கூட, கருதுகோள் அளவில் ஒரு நல்ல வரிக்கு இருக்கவேண்டிய இலக்கணத்தில் மிகவும் குறைபாடுற்றே சொத்து வரி காணப்படுகிறதென்பதை நாம் கண்டோம். தல அரசாங்கங்களிலிருந்து பெறும் ஆதாயங்கள் அல்லது அரசாங்கங்களிலிருந்து பெறும் ஆதாயங்கள் அல்லது அரசாங்கத்திற்கு வரியாகச் செலுத்தும் தனியாரின் திறன் இவற்றுக்கு ஏற்ற அளவுகோலாக வரிதாங்கும் சொத்தின் உரிமை இருக்க முடியாது. இவ் வரியை அளவுகோலாகக்கொண்டு வரிப்

* மில் வீதம் = ஒரு டாலரில் ஆயிரத்தில் ஒரு பகுதி மில் எனப்படும்.

பளுவுகளை நியாயமான முறையில் பங்கீடு செய்வது முடியாத காரியம். பெரும்பாலும் தல அரசாங்கங்களின் சொத்துவரி ஆட்சியில் நல்ல மாறுதல்களைச் செய்வதற்கு இடமிருக்கிறது. சொத்து வரிவிதிப்புக்கு இன்னமும் அரசாங்கம் தன்தீர்வை மதிப்பீட்டையே (self-assessment) பெரிதும் நம்பியிருக்கிறது. சொத்துவரி விதிப்பைத் தணிக்கை செய்யப் போதுமான தணிக்கையாளர்களும் இல்லை; தணிக்கை செய்யும் முறையும் குறைபாடுடையதாயிருக்கிறது. தல அரசாங்கங்களுக்குச் சொத்து வரியிலிருந்து கிடைக்கும் வருவாய் தலையாய ஆதாரமாக இருப்பதனால் வேறொரு சங்கடமும் ஏற்படுகிறது. தலக் கல்விச் செலவுகள் நஞ்சுபோல் ஏறிவிட்டதனாலும், பல தலங்களில் இச் செலவுகளைச் சமாளிப்பதற்குச் சொத்து வரியை உயர்த்தவேண்டியிருந்ததனாலும், அண்மைக் காலத்தில் இச் சங்கடம் எழுந்தது. தலத் திட்டமிடுதலை (local planning) பாதிக்கும் வகையிலும் இன்னொரு தலத்தைப் பாதிக்கும் வகையிலும், தன்னுடைய பெரிய பட்டியலை ஏற்றுவதற்காக ஒரு தலம் செய்யும் போட்டி முயற்சியினாலேயே இச் சங்கடம் எழுந்தது. தற்காலிகமாக வரியில் கழிவுகள் (tax rebates) தருவதன்மூலமும், அரசாங்கச் செலவில் பல வசதிகளை, அதிலும் நிறுவனங்கள் கேட்ட வசதிகளைச் செய்துகொடுப்பதன்மூலமும் தல அரசாங்கங்கள் தொழில்களைத் தம்மூர்களுக்கு ஈர்ப்பதற்கு மூர்த்தண்ணியமாக முயன்றன. தல வரித்தளத்தை உடனடியாக விசாரிப்பதே தொழில் நிறுவனங்களைத் தத்தம்பால் தல அரசாங்கங்கள் ஈர்க்க முனைவதற்குக் காரணமாகும். ஒரு தொழில் நிறுவனத்தின்மீது விதிக்கப்பட்ட சொத்துவரியைப் புரட்டக்கூடுமானல், அது பிற தலங்களில் உள்ள பண்டங்கள் வாங்குவோர்மீதும் புரட்டப்படக் கூடும். இவ்வாறு A நகரில் பள்ளிக்கூடங்களின்மீதுள்ள பளு அந் நகரவாசிகளினின்றும் B, C, D நகரங்களில் வளரும் மக்கள் மீது புரட்டப்படலாம். ஒரு தலத்தின் குடியிருப்புத் தகுதியைப் (residential character) பாதுகாக்கும் பிராந்தியச் சட்டங்களைத் திருத்திப் பெரிய வரி செலுத்துவோர்களை ஈர்ப்பதற்கு எப்பொழுதும் முயற்சிகள் நடைபெற்றவண்ணமாகவே இருக்கின்றன. அண்மையில் இழுவைப் பூங்காக்களுக்கு (trailer parks) விலக்களித்துப் பல அவசரச் சட்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன. ஏனெனில், அவற்றால் பல குழந்தைகள் பள்ளிகளில் சேர்கிறார்கள். ஆனால், அவற்றால் புதிதாக வரிவிதிக்கக் கூடிய சொத்தொன்றும் சேர்வதில்லை. சொத்தின்மீது பாரமான வரிப்பளுவுகளைச் சுமத்துந்தோறும், இந் நடவடிக்கைகள் தவறான காரணங்களுக்காக மேற்கொள்ளப்பட்டன என்பதே நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டியதாகும். அடிப்படைப் பொருளியல் காரணிகளால் நிலைநாட்ட முடியாத குடியிருப்புகளையும்

தொழில் அமைப்பையும் செயற்கையான முறையில் இந் நடவடிக்கைகள் படைக்கின்றன. ஒரு தலத்தில் குடியிருப்பு இடத்தில் (residential location) வசிப்பதன் சுதந்திரத்தையும் அவை குலேக்கின்றன. இப்பொழுது புதிதாக வாங்கப்பட்ட எந்திரங்கள் எதிர்காலத்தில் பழையனவாகப் போகும்பொழுது, தல அரசாங்கங்கள் சலுகைகள் தருவதனுல் நிதித் துன்பத்திற்கு (fiscal troubles) அடிகோலலாம். இறுதியாக, ஒரு பரந்துபட்ட சொத்து வரித் தளத்தினுல் தலங்களின் தன்மையே மாறக்கூடும். ஏனெனில், இதனுல் அறிவுக்கூர்மையுடன் திட்டமிடுதலும், பிராந்தியங்கள் வாரியாகப் பிரித்தலும் இரண்டாம் படிக்கு ஒதுக்கப்படலாம்.

தல அரசாங்க நிதிகளின் தலையாய அடிப்படையாகச் சொத்து வரி இருப்பதை எதிர்த்துத் திறனுய்வுகள் செய்யப்பட்டபோதிலும், சொத்து வரிக்கு இப்போதிருக்கும் முக்கியத்துவம் குறைந்துவிடும் என்றே அல்லது அது எழுப்பும் பிரச்சினைகள் தணியும் என்றே எதிர்பார்ப்பது பேதைமையாகும். மரபு காரணமாகவோ அல்லது தொன்றுதொட்டு வந்த பழக்கம் காரணமாகவோ, சொத்துவரி விதிப்புக்குப் பொதுமக்களிடை பெரும் ஆதரவு இருக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சொத்துவரி விதிப்பு மிகப் பழமையான வரிவிதிப்புகளில் ஒன்றுகும். தல நிதியில் அதன் பங்கைப் பெருமளவு குறைக்கவேண்டும் என்றுல், சொத்து வரிக்கு மாற்றுகக் கூறப்படும் வரிகள் யாவை? பிற தலையாய வரிவிதிப்புகள் வருமான வரியும் விற்பனை வரியுமே. பெரிய நகராண்மைக் கழகங்கள் தவிர ஏனையவற்றில் இவ் வரிகளைப் பிரயோகித்தல் எளிதன்று. சொத்து வரி ஆட்சி தீயதாக இருக்கின்றது என்பது உண்மையே. ஆயினும், வருமானவரி தண்டுவதற்கு இதைவிடத் திறமையான ஆட்சி வேண்டும். சிறிய தல அரசாங்கங்களின் ஆட்சி திறமையாக இல்லை என்பதை முன்னரே விளக்கினேம். நகரங்கள், பட்டணங்கள், நகர்ப்புறங்கள் (townships), பள்ளி மாவட்டங்கள் இவைபோல்வனவற்றின் எல்லைகள் குறுகியனவாக இருப்பதால், வரி அதிகார வரம்புகளைப்பற்றிப் (taxing jurisdictions) பல சங்கடங்கள் எழலாம். வருமானங்களை அவற்றை ஈட்டும் இடத்தில் வரிவிதிக்க வேண்டுமா அல்லது வருமானங்களை ஈட்டுவோர் குடியிருக்கும் இடத்தில் வரிவிதிக்க வேண்டுமா என்ற சில பிரச்சினைகள் இப்பொழுது மாநிலங்களிடையே தீர்க்கப்படாமல் இருக்கின்றன. சொத்து வரிகளுக்கு மாற்றுகத் தல வருமான வரிகளை விதித்தால், இப் பிரச்சினைகள் பரவலாகப் பெருகும். வரி விதிக்கக்கூடிய சொத்தைப்பற்றித் தலங்களிடையே போட்டி இருப்பது போன்றே, சொத்து வரிக்கு மாற்றுகத் தலங்கள் வருமான வரிகளை விதித்தாலும், அவற்றிடையே கடுமையான போட்டி இருந்துவரும்.

சொத்துவரிகளுக்குப் பதிலாக தல அரசாங்கங்கள் விற்பனை வரிகளைப் போடுவதும் நடவாத காரியம். தம் வருவாய்களைப் பெருக்கிக் கொள்வதற்காக பெரிய நகரங்கள் விற்பனை வரிகளைத் துணையாகக் கொள்ளலாமாயினும், பேட்டைகள், நாட்டுப் புறங்கள் இவற்றின் வருவாய்க்கண்கள் தூர்ந்துபோகும். மோட்டார்கள், நாற்காலி, மேசை முதலான எடுபிடி சாமான்கள், உடை, கட்டடச் சாதனங்கள் இவை போன்ற பெரும் பண்டங்கள் மீது விற்பனை வரி தண்டுவதால் ஏராளமான வருவாய் கிடைக்கும். இப் பண்டங்களெல்லாம் கேந்திர நகரங்களில் (core cities) உள்ள சில்லறைக் கடைகளில் வாங்கப்படுகின்றன. நாம் இலகுவில் சென்று அடையக்கூடிய பெரிய நகரங்களும் இக் கேந்திர நகரங்களே. பெரும்பாலும் குடியிருப்புப் பட்டணமாகவே இருக்கும் சிறிய நகரம் ஒன்றுக்கு இவ்வித விற்பனைகளால் ஒரு சிறிதே வருவாய் கிடைக்கும். ஆகவே, வேண்டிய வருவாயைப் பெறுவதற்கு மளிகைக் கடைகளில் விற்கும் உணவுப் பொருள்களின்மீதும் விற்பனைவரி விதிக்கவேண்டிய நிர்ப்பந்தத்தில் அச் சிறு நகரம் இருக்கும்.

தல அரசாங்கங்கள் சொத்துவரியை அதன் திறனுய்வு வரம்பு[11] (critical limit) வரையில் ஏற்றும் பிரதேசங்களில், மாநில அரசாங்கங்கள் தல அரசாங்கங்களுக்கு மிகத் தாராளமாக உதவி (aid) அளிக்க வேண்டும். இதனால் அவை இவ் வரியையே அதிகம் நம்பியிருப்பது குறையும். இவற்றை மாநிலங்கள் கையாளும்பொழுது சில சங்கடங்கள் ஏற்படுகின்றன. ஆயினும், இவ் வரிகளைத் தல அரசாங்கங்கள் கையாள முனையும்பொழுது ஏற்படுவதுபோல அவ்வளவு கடுமையாகச் சங்கடங்கள் ஒருபோதும் இருப்பதில்லை. உண்மையில் அவ் வரிகள் ஏற்கனவேயே மாநிலங்களுக்குத் தலையாய வருவாயைத் திரட்டித் தரக்கூடிய அமிசங்களாக இருக்கின்றன. குடியானவர்களைப் போன்று சொத்து வரியால், சிறப்பாகத் துயருழலும் கும்பல்களே (groups) சொத்து வரியிலிருந்து நிவாரணம் கோரி பெருத்த செல்வாக்கைக் (pressure) கொண்டு வருகின்றனர். பரந்துபட்ட நிலம் இருந்தால்தான் குடியானவர்கள் போதிய வருமானத்தை ஈட்ட முடியும். இக் கும்பல்களில் முதியோரும், குறைந்த வருமானம் உடையவரும் அடங்குவர். முதியோரின் உபகாரச் சம்பளம் நிலைத்ததாயும், ஒரு வரம்புக்கு உட்பட்டும் இருப்பதால், சொத்து வரிகள் உயர உயர அவர்கள் துன்பத்தையடைகின்றனர். ஒருவரின் வருமானத்திற்கும், அவருடைய மோட்டார்கார் அல்லது குடியிருக்கும் வீடு இவற்றின் மதிப்புக்கும் யாதொரு உறுதியான தொடர்புமில்லை என்பதைத் தன் கசப்பான அநுபவத்திலிருந்து பொதுவாகக் குறைந்த வருமானம் உடையோர்

உணர்கின்றனர். கூட்டரசாங்கம் அல்லது மாநில அரசாங்கம் அதிகமான நிதியுதவி அளிப்பதன்மூலம் தல சொத்துவரியில் ஓரளவு நிவாரணம் அளிக்கலாம் என்று கிளர்ச்சி செய்யப்படுகிறது. இது தான் எதிர்காலத்திற்கான அமைப்பாக இருக்கலாம் என்று ஒருவர் எதிர்பாக்கலாம். வரித்தளத்தின் வளர்ச்சிக்கேற்ப, சொத்து வரியிலிருந்து கிடைக்கும் மொத்த வருவாய்கள் ஏறினாலும், தல அரசாங்கங்களின் வருவாயில் சொத்துவரியின் வீதாசாரம் குறைந்து கொண்டே செல்லலாம்.

## மேற்கொண்டு படிப்பதற்கு

எல். ஃபிரடரிக் பேர்ட் (Bird, Frederick, L.) எழுதிய 'பொதுச் சொத்துவரி : அரசாங்கங்கள் எடுத்த 1957ஆம் ஆண்டு மக்கள் கணக்கின் கண்டுபிடிப்புகள்' (The General Property Tax : Findings of the 1957 Census of Governments), சிகாகோ, பொது ஆட்சிப்பணி, 1960.

1957ஆம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அமுலில் இருந்த சொத்துவரி நடைமுறைகளைப்பற்றிய அப்பட்டமான வருணனை. இந் நூலில் வரியின் தற்போதைய தன்மையைப் பற்றியும், அதன் வருவாய் உற்பத்தித் திறத்தைப் பற்றியும், அதன் ஆட்சியைப்பற்றியும் சில கூறப்பட்டிருக்கின்றன. ஜே. பி. ஜென்ஸன் (Jensen, J. P.) எழுதிய 'அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சொத்து வரி விதிப்பு' (Property Taxation in the United States) என்ற நூல், சிகாகோ, சிகாகோ பல்கலைக் கழக அச்சகம், 1931. இப் புத்தகம் வெளியானபின் சொத்துவரி விதிப்பின் நடைமுறையில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. இந் நூல் அண்மைக் காலத்தில் வெளியானதாக இல்லாமலிருந்தாலும், வியக்கத்தக்க அளவுக்கு நடப்பை ஒட்டியிருக்கிறது. வாசகருக்கு பொருளின் எத் திறம் (aspect) மீது ஈடுபாடு இருக்கிறதோ, அதற்கு ஏற்ப, வேண்டிய அதிகாரங்களைத் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். எஸ். இ. லெலண்டு (Leland, S. E.) எழுதிய 'அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பாகுபாடு செய்யப்பட்ட சொத்துவரி' (The Classified Property Tax in the United States), பாஸ்டன், ஹாட்டன் மிப்ளின், 1928. இப் புத்தகத்தின் பெரும்பகுதியும் தற்காலத்திற்குப் பொருந்தாது. ஆயினும், பாகுபாடு கருதுகோளைப்பற்றிக் கூறும் 2, 4, 5, 6ஆம் அதிகாரங்கள் அறிவுக்கு விருந்தாகும்.

'தல சொத்துவரி மதிப்பீடுகளை மாநிலம் முழுதுக்கும் சமனுக்கல் பற்றிய குழுவின் அறிக்கை' (Report of the Com-

mittee on State Equalization of Local Property Tax Assessments), Proceedings, National Tax Association, *1958*, பக்கம் *315—65*. இவ் வறிக்கை நியாயத்தை நிலைநாட்டுவதற்காகச் சமனுக்கல் எத்துணை தேவை என்பதையும், இப் பிரச்சினையை அணுகும் முறை யாது என்பதையும், பகுத்தாய்வு செய்கிறது.

வரிக்கொள்கைக் கழகம் (Tax Policy League) வெளியிட்ட 'சொத்துவரிகள்: ஒரு கருத்தரங்கு' என்ற நூல் (Property Taxes : A Symposium), நியூ யார்க், வரிக்கொள்கைக் கழகம், 1940. சொத்து வரி விதிப்பு சம்பந்தமான பல திறப்பட்ட விஷயங்களையும் இவ் வேடுகள் அலசுகின்றன. பின்வரும் அதிகாரங்களைச் சிறப் பாகச் சிபாரிசு செய்கிறோம். அவையாவன : முதலதிகாரம் ('மாநில, தலவரி முறைகளில் சொத்துவரியின் முக்கியத்துவம்'), ஏழாமதிகாரம்('பாகுபாடு செய்யப்பட்ட சொத்து வரியைப் பற்றிய சில காட்சிப் பிரமாணங்கள்'), பத்தாமதிகாரம் ('திறனின் அளவு கோலாகச் சொத்துவரி'), பதினொன்றும் அதிகாரம் ('சொத்து வரி ஒரு ஆதாய வரி'), பதின்மூன்றும் அதிகாரம் ('சொத்துவரியைப் புரட்டுகையும், மூலதனமாக்கலும்), பதினுறும் அதிகாரம் ('தனி யாள் சொத்து வரி ஆட்சியில் அபிவிருத்திகள்').

## 15 ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. மக்கள் தொகைக் குழு வெளியிட்ட, 1958ஆம் ஆண்டைய அரசாங்க நிதிகளின் சுருக்கம், பக்கம் 13, 1957ஆம் ஆண்டைய தல அரசாங்க நிதிகளின் சுருக்கம், பக்கம் 6 (Bureau of the Census, Summary of Governmental Finances in 1958, p. 13 and Compendium of City Government Finances 1957, p. 6) நெடுகிலும், அரசாங்கப் பொதுவருவாய்கள் என்றால், பிற அரசாங்கங்களிடமிருந்து பெறும் மானியங்கள் நீங்கலாக என்று பொருள் கொள்ளவேண்டும்.

2. சொத்துவரிச் சட்டங்கள் யாவும் தாவரச் சொத்து, தனியாளின் புலனுகும் சொத்து, புலனுகாத சொத்து இவற்றின் மீது வரியிறுப்பதாக வாசகர்கள் கருதக்கூடாது. குறிப்பிட்ட வரிச்சட்டங்கள், சில சொத்தினங் களுக்கு விலக்கு அளிப்பதோ அல்லது தனிச் சலுகை காட்டுவதோ ஒருபடித் தான விதியின் (uniform rule) கீழ் 'பொதுவான சொத்துவரி' விதிப்பது கருதுகோள் அளவில் விரும்பத்தக்கதல்ல என்றறிந்ததால் இருக்கலாம்; அல்லது இவ்வித விலக்கு அல்லது தனிச்சலுகை இன்றி பொதுச் சொத்து வரியைக் கூடுமானவரை நன்முறையில் நிருவகிப்பது இயலாது என்ப தால் இருக்கலாம். இவ் வதிகாரத்தில் பின்பு இதை நாம் ஆராய்வோம்.

3. சில சமயம் புலன் விசாரிப்பதற்கு வேண்டிய அதிகாரத்தைத் தீர்வை யிறுப்போருக்கு 'வரி விசாரணையாளர் சட்டங்கள்' (tax inquisitor laws) வாயிலாக மாநிலங்கள் தருகின்றன. இருந்தாலும், இவ் வதிகாரத்தைப் பிரயோகிப்பதனுல் தீர்வையிறுப்போரின் பணி கசப்பானதாக, அதிலும்

சிறப்பாக உத்தியோகஸ்தர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவராக இருந்தால், அவர் பாடு மிகவும் திண்டாட்டமாயிருக்கும். மேலும் அவ்விதச் சட்டங்களைப் பொதுமக்கள் விரும்புவதில்லை. ஏனெனில், ஒவ்வொருவருடைய வீடும் அவருடைய கோட்டையாகும் (a man's home is his castle) என்று மக்கள் நினைக்கின்றனர். அவ்விதச் சட்டங்களால் பயனுமில்லை; அவை நெடுங்காலம் நீடித்திருப்பதுமில்லை.

4. சொத்துவரி விதிப்பினின்று புலனாகாத சொத்துகளுக்கு விலக்களிப்பது நீதியுமாகும் (பொருத்தமானதும் ஆகும்) என்பதைச் சொத்து வரிவிதிப்புப் பற்றிய கருதுகோளை நாம் பின்னர் விளக்கும்பொழுது காண்போம்.

5. தாமாகவே வலிய முன்வந்து வரிப்பட்டியலில் தம் உடைமைகளைச் சேர்த்துக்கொள்ளாதவர்கள்மீது அவ்விதம் சேர்த்துக்கொள்ளும்படி ஊக்குவிப்பதற்காக அபராதம் விதிக்கப்படுகிறது. இதனால் அவர்கள் வலிய முன்வந்து தம் உடைமைகளை வரிப்பட்டியலில் சேர்த்துக் கொள்வது மேலும் உரமூட்டப்படுகிறது.

6. வேண்டிய வருவாயைத் திரட்டுவதற்குத் தீர்வை மதிப்பீட்டின் அடிப்படை பொதுவாக எத்துணைக் குறைவாக இருக்கின்றதோ, வரிவீதம் அத்துணைக் கூடுதலாக இருக்கவேண்டும். பல்வேறுபட்ட சொத்துகளின் மீது பேதங்காட்டுகையைத் தவிர்ப்பதற்காக, ஒரு நகரத்தில் தீர்வை மதிப்பீடுகள் ஒரே படித்தாக இருக்குந்தோறும், தீர்வை மதிப்பீடுகள் குறைவாகவும், வரி வீதங்கள் அதிகமாகவும் இருந்தாலும் சரி, அல்லது தீர்வை மதிப்பீடுகள் அதிகமாகவும் வரிவிகிதங்கள் குறைவாகவும இருந்தாலும் சரி, பயன் ஒன்றுதான்.

7. 1951-ல் பதின்மூன்று மாநிலங்களே சட்டபூர்வமாகப் புலனாகாத சொத்துகளுக்குச் சொத்துவரிகளினின்று விலக்களித்தன. 'வரி முறைகள்' (Tax Systems), 13 ஆம் பதிப்பு, சிகாகோ, வாணிபத் தீர்வகம் (Commerce Clearing House), 1952, பக்கம் 173-179.

8. இஃது சொத்தின் வரி செலுத்தும் திறனுக்குப் பொருந்தும். ஆனால், சொத்துக்குரியவர்களின் (சொந்தக்காரர்களின்) வரி செலுத்தும் திறன்களுக்குப் பொருந்தாது. இறுதிப் பகுத்தாய்வில் (in the last analysis), ஓர் ஆளின் வரி செலுத்தும் திறனை அளவிடுவதற்குச் சொத்துரிமை நல்ல அளவுகோல் ஆகமாட்டாது என்பது தெளிவு. தனியாளின் வருமானத்தைச் (சொத்திலிருந்தும் பிற இனங்களிலிருந்தும் கிடைக்கும் வருமானம்) கொண்டே உண்மையான வரிதாங்கு வல்லமையை அளவிட வேண்டும்.

9. நிலத்தைப் பயன்படுத்தும் முறையில் அடிக்கடி மாறுதல்கள் நேர்வதனால் பொருளாதார ஆதாயங்கள் இருக்கலாம். ஆனால், அதனால் கடுமையான சமூகப் பிரச்சினைகளும் தோன்றக்கூடும். எடுத்துக்காட்டாக, வளர்ந்து வரும் ஒரு நகரத்தின் எல்லையில் இருக்கும் ஒரு குடியானவன் வெகு காலத்திற்கு நிலத்தைச் சாகுபடி செய்துகொண்டிருக்க முடியாது. நகரத்தின் நன்மைக்காக அவன் தன் நிலத்தை விற்றே தீரவேண்டும். ஆனால், கிடைத்த விலைப்பணத்தைக் கொண்டு அவனால் காலம் தள்ளமுடியாது. ஏனெனில், அவ் விலைப் பணம் வரியாக வசூலிக்கப்பெறும். நிலத்தைப் பயன்படுத்துவதில் எத்துணை விரைவாக மாறுதல்கள் ஏற்படுகின்றனவோ, அத்

துணை விரைவாக நிலத்தின்மீது கட்டப்பட்டிருக்கும் கட்டடங்களும் பழமையாய் ஐதர் காலத்தனவாய்ப் (obsolescence) போய்விடுகின்றன. இதனால் ஏற்படும் பொருளாதார ஆதாயமும் கலப்படம் அற்றதாக இருக்கவில்லை. அதேபோன்று, மதிப்பேறிக் கொண்டே செல்லும் நிலத்தில் வேலையினின்றும் ஓய்வுபெற்ற ஒருவர் நெடுங்காலம் வாழக் கட்டுப்படியாகாது. அவர் அந் நிலத்தில் பல ஆண்டுகள் உழைத்து, தான் ஓய்வுபெற்ற பின்பு அங்கு நீடித்து வாழ்வதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்திருக்கலாம். மடிந் திருப்பாருக்கும், தலத்திலில்லா நிலக்கிழாருக்கும் ஆகூழினால், தம் முன்னோர்கள் முன்யோசனையுடன் பெரும்பொருளைத் திரட்டிவைத்த குடும்பத்தாருக்கும், இத் திட்டத்தினால் வாழ்க்கை முன்னைவிட சிரமமானதாக ஆகும் என்பது இவ் வுதாரணங்களினால் போதரும். அத்துடன் பொதுமக்களின் ஆழ்ந்த அநுதாபத்தைப் பெரிதும் பெற்றிருக்கும் பலருக்கும் இத் திட்டத்தினால் வாழ்க்கையை நடத்துவது முன்னைவிடச் சிரமமானதாக இருக்கும்.

10. மக்கட் கணக்குக் கழகம் வெளியிட்ட 'அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சொத்துவரித் தீர்வை மதிப்பீடுகள்', 1957, பக்கம் 13 (Bureau of the Census, Property Tax Assessments in the United States, 1957, p. 13).

11. சொத்துவரி அல்லது தல அரசாங்கம் சீர்குலையக் கூடிய நிலையில் இருக்கிறது என்பது இதன் பொருளன்று. ஆனால், இந் நிலையில் வரவர எண்ணிக்கையில் அதிகமான குடிமக்கள் உண்மையிலேயே இன்னலைக் கட்டாயமாக ஏற்கும்படி நேர்கிறது. தம் வருமானத்துக்கு ஒப்ப, சிறிதே வரிவிதிக்கக்கூடிய சொத்தை வைத்திருப்பவர்கள், சிறிதே துன்ப முறுகின்றனர்.

# 16. தனியாள் வருமானவரி விதிப்பு

கூட்டாட்சியின் வருவாயினங்களில் தனியாள் வருமானத்தின் மீது விதிக்கப்பட்ட வரிகள் தலையாயவை. மாநில வருவாய்களிலும் வருமான வரிகளின் பங்கு உயர்ந்துகொண்டே வருகின்றது. மேலும், வரி முறைகளை முற்றும் திருத்தி அமைப்பதற்காகப் பல சிபாரிசுகள் கூறப்பெற்றன. ஏறக்குறைய இச் சிபாரிசுகள் அனைத்தும் இவ் வரிகளுக்கு அதிகப் பங்கு தரவேண்டும் என்று ஒருமுகமாகக் கூறுகின்றன. இக் காரணங்களினால் நம்முடைய பகுத்தாய்வில் தனியாள் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரிகளைப்பற்றி நாம் அதிக கவனம் செலுத்துவோம். இவ் வதிகாரத்தில் இப்போது அமுலில் இருக்கும் தனியாள் வருமான வரிகள், அவற்றின் வரலாறு, நடப்பு, வருவாயில் அவற்றின் முக்கியத்துவம் இவைபற்றி நாம் விரிவாகக் கூறுவோம். அடுத்து வரும் மூன்று அதிகாரங்களில் வருமானவரி பற்றிய பிரச்சினைகளையும், அவற்றின் திருத்தத்திற்கான பல யோசனைகளையும் நாம் ஆராய்வோம்.

வரியைப் பற்றிய இரு அடிப்படை உண்மைகளின் முக்கியத்துவத்தை ஏற்கனவே நாம் வலியுறுத்தினோம். அவையாவன: (1) கிட்டத்தட்ட எல்லா வரிகளும் இறுதியில் தனியாள் வருமானத்திலிருந்தே தரப்படுகின்றன. (2) வரிகளைப் புத்திசாலித்தனமாகப் பிரயோகிக்கவேண்டுமென்றால், அவற்றின் நிலைப்பாட்டைப் பற்றித் தெரிந்திருக்கவேண்டும். இவ்விரு வகை முகாந்தரங்களாலும் இவ் வரியின் தளம் தனியாளின் நிகர வருமானமாக இருப்பதால், வருமானங்களை நேரிடையாகவே இவ் வரி தாக்குகிறது. வருமானக் கால்களிலிருந்தே இறுதியில் வருமானவரிகள் செலுத்தப்படுகின்றன. இதனால், சொத்துரிமை அல்லது குறிப்பிட்ட பண்டங்களை வாங்குவதன் வாயிலாக, வருமானங்களை, மறைமுகமான பாட்டைகளின் மூலம் தேடுவது தவிர்க்கப்படுகிறது. மேலும் (14ஆம் அதிகாரத்தில்) தனியாள் நிகர வருமான வரியின்

நிலைப்பாடு ஒப்புமையில் எளிதென்றும், எல்லோரும் அறிந்த தொன்று என்றும் நாம் குறிப்பிட்டோம். இவ் வரியின் நிலைப்பாடு வருமானத்தைப் பெறுகிறவர் மீதே பொதுவாக விழுகிறதென்றும், அது புரட்டப்படுவதில்லை என்றும் நாம் குறிப்பிட்டோம்.

## தனியாள் வருமான வரிகளின் வருவாய் முக்கியத்துவம் (Revenue Importance of Personal Income Taxes)

1910-லிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட சில ஆண்டுகளுக்குக் கூட்டாட்சிக்குத் தனியாள் வருமான வரிகள் மூலம் கிடைத்த வருவாய்களும், அவற்றின் ஒப்புமை முக்கியத்துவமும் 26ஆவது அட்டவணையால் விளங்கும். இப் புள்ளி விவரங்கள் முற்றும் சரியானவையல்ல. தனியாள் வருமான வரிகளுக்கு இயற்கையாகத் தரவேண்டிய ஒப்புமை முக்கியத்துவத்தைவிடக் குறைவாகவே முக்கியத்துவம் அளித்திருப்பது இப் புள்ளி விவரங்களிலுள்ள பிழையாகும். முந்திய ஆண்டுகளில் பல்வேறுபட்ட அளவுகளில் கூட்டாட்சியின் கார்ப்பரேஷன் வருமானவரி—அட்டவணையில் காட்டப்பட்ட தனியாள் வருமானவரி வசூல்களில் இஃது இடம் பெறவில்லை—கார்ப்பரேஷன் இலாப ஈவு (corporate dividends)களினின்று தனியாட்கள் பெற்ற வருமானங்களின் மீது விதிக்கப் பெற்று, மூலத்திலேயே வசூல் செய்யப்பட்டதனால் இப் பிழை ஏற்பட்டது.[1]

### அட்டவணை—26

**கூட்டாட்சியின் தனியாள் வருமானவரி வருவாய்கள், தெரிந்தெடுக்கப்பட்ட ஆண்டுகள் (அ)**

| நிதி ஆண்டு | தனியாள் வருமான வரி வருவாய் (மில்லியன் டாலரில்) | நிகர பட்ஜெட் வருவாய்கள் (a) (மில்லியன் டாலரில்) | பட்ஜெட் வருவாய்களில் தனியாள் வருமான வரியின் சதவிகிதம் |
|---|---|---|---|
| 1910 | 0 | 900 | 0 |
| 1917 | 180 | 1,449 | 12·4 |
| 1925 | 845 | 4,380 | 19·3 |
| 1930 | 1,147 | 4,883 | 23·2 |
| 1940 | 982 | 5,114 | 19·1 |
| 1945 | 17,594 | 44,475 | 39·6 |
| 1950 | 15,745 | 36,495 | 43·1 |
| 1955 | 28,747 | 60,390 | 47·7 |
| 1958 | 34,724 | 69,117 | 50·3 |

(அ) மூலங்கள் : 1910-1930: கருவூலச் செயலாளரின் ஆண்டு அறிக்கை (Annual Report of the Secretary of the Treasury).

1935, பக்கம் 323; 1940-1945; ஆண்டு அறிக்கை...1958, பக்கம் 390, 454; 1950 : 1958-லிருந்து அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசாங்கத்தின் பட்ஜெட் (Budget of the United States Government from 1958), சிறப்புப் பகுத்தாய்வு L; 1955-1958 : பட்ஜெட்...1960, சிறப்புப் பகுத்தாய்வு L.

(a) மொத்த வரவுகளிலிருந்து வரிகளைத் திருப்பித் தருதலையும் (refunds of taxes) சமுதாயக் காப்பு வரிகளைப் (social security taxes) பொறுத்த அளவில் டிரஸ்டு நிதிக் கணக்குகளுக்கு (trust fund accounts) மாற்றுதலையும் தவிர்த்து உள்ளவை நிகர பட்ஜெட் வரவுகள் எனப்படும். 1950ஆம் ஆண்டிலிருந்து வரிவரவுத் தொகைகள் வரிகளைத் திருப்பித் தந்ததற்குச் சரிக்கட்டப்பட்டிருக்கின்றன. ஆனால், 1950க்கு முந்திய தொகைகள் அவ்வாறு மூலங்களில் சரிக்கட்டப்பட (adjusted) வில்லை. ஆயினும், 1945க்கு முன்பு உள்ள தொகைகளில் பிடித்தம் செய்யப்படாததால் அவை அட்டவணையில் இடம் பெறவில்லை. 1945க்கு முந்திய ஆண்டுகளில் திருப்பித் தரப்பட்ட வரித் தொகைகள் மிகவும் சொற்பமே. 1945-ல் திருப்பித்தரப்பட்ட வரித் தொகைகள் ஏராளம். ஆனால், நமக்குக் கிடைத்துள்ள புள்ளிவிவர ஏடுகோள்களில் (data) காணப்படுகின்ற வரிகளிடையே இவை பங்கீடு செய்யப்படவில்லை. ஆகையினால், அண்மைக் காலத்திய வீதாசாரங்களைத் தளமாகக் கொண்டு, 1945ஆம் ஆண்டுக்கு, தனியாள் வருமான வரி செலுத்துவோர்களுக்குத் திருப்பித்தரப்பட்ட வரித்தொகைகள் குத்துமதிப்பாகப் பங்கீடு செய்யப்பட்டன. இவ் வேறுபாடுகளிலிருந்து 1950க்கு முந்திய ஆண்டுகளின் தொகைகளின் சதவிகிதத்தைக் கச்சிதமாக ஒப்பிடுவதற்கு முடியாதென்பதும், ஆயினும், இதனால் நேரும் பிழைகள் சொற்பமாகவே இருக்கும் என்பதும் பெறப்படும்.

கூட்டாட்சியின் தனியாள் வருமான வரியினின்று கிடைக்கும் வருவாயின் முக்கியத்துவத்தை, ஒப்புமையில், 1913 ஆம் ஆண்டில் அது முதன் முதல் விதிக்கப்பட்ட காலத்திலிருந்து இடைவிடாது இதுகாறும் ஏறி வந்திருப்பதனாலேயே அறியலாகும். இப் போக்கிலிருந்து மாறுதல்கள் ஏற்படலாம். அங்ஙனம் நிகழ்வது அவை பிற வரித் திட்டங்களின்மீது அரசாங்கம் தற்காலிகமாக அதிகமாகச் சார்ந்திருப்பதனால் இருக்கலாம்; அல்லது குறுகிய காலத்தில் தற்செயலாகப் பொருளாதாரத்தில் ஏற்படும் வாணிபச் சுழலினாலும் இருக்கலாம். இதனால் ஒரு வரிமுறையில் உள்ள ஏனைய வரிகளை விட அதிகமாகவே வருமான வரியின் தளத்தில் மாற்றம் ஏற்படலாம். 1940-லும், 1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட பல ஆண்டுகளிலும், பண்டங்களின்மீது ஆயத்தீர்வைகளை விதிப்பதையே அரசாங்கம் பெரிதும் நம்பியிருந்தது. தேசிய வருமான மட்டங்கள் குறைந்ததின் விளைவாக அக் காலத்தில் வருமானவரியின் தளம் சுருங்கியதால் இந் நிலை ஏற்பட்டது. 1958ஆம் ஆண்டைய புள்ளி விவரங்கள், பின்னிறக்கத்தினால் (recession) தனி

யாள் வருமானவரிப் பொறுப்பில் (liability) சரிவு ஏற்பட்டதைத் தெரிவிக்கிறது. 1950-லிருந்து கிடைத்த வருமானவரி வரவுகளைக் காட்டிலும் 1958-ல் கூடுதலான அளவிலேயே மொத்த பட்ஜெட் வரவுகள் ஏறின. இருப்பினும், சிறிதுகாலம் கூட்டாட்சியின் பட்ஜெட் வரவுகளில் ஏறக்குறைய ஒரு சரிபாதி, தனியார் வருமான வரியிலிருந்து கிடைத்தது.

மாநில அரசாங்கங்கள் படிப்படியாகத் தனியாள் வருமான வரிகளை அதிகமாகப் பயன்படுத்தி வருகின்றன. 1959-ல் நாற்பத் தெட்டு மாநிலங்களில் இருபத்தொன்பது இவ்வித வரிகளை விதித்தன. கூட்டாட்சியின் வரி வீதங்களுடன் ஒப்பிட்டால் மாநில அரசாங்கங்கள் விதிக்கும் வருமானவரி வீதம் குறைவே. 1959-ல் மிக மட்டமான வரிவீதங்கள் (minimum rates) 1 சதவிகிதத்தில் ¾ லுக்கும், 3 சதவிகிதத்திற்கும் இடைப்பட்டும் உச்ச வரி வீதங்கள் (maximum rates) 3 சதவிகிதத்திற்கும் 11 சதவிகிதத்திற்கும் இடைப்பட்டும் இருந்தன. பல மாநிலங்களில் தனியாட்களுக்கு அளிக்கப்பட்ட விலக்குகள் ஒப்புமையில் அதிகமே. 1958-ல் மாநிலத் தனியாள் வருமான வரிகளால் 1·5 மில்லியன் டாலர் வருவாய் கிடைத்தது. இது மாநிலங்களின் மொத்த வரி வருவாயில் 10 சதவிகிதமே யாகும். இதனால் மாநிலங்களைப் பொறுத்த அளவில் தனியாள் வருமான வரிகள் அத்துணை முக்கியத்துவம் வாய்ந்தவை யல்ல என்பது புலனாகிறது. இவ் வரிகளைத் தண்டும் மாநிலங் களின் மொத்தவரி வரவுகளில், தனியாள் வருமான வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய்கள் சுமார் 10 சதவிகிதத்திலிருந்து மூன்றி லொரு பங்கு வரை இருக்கிறது.

தல அரசாங்கங்கள் இதுவரை தனியாள் வருமான வரிகளை விதித்ததாகத் தெரியவில்லை. நமக்குக் கிடைத்திருக்கும் தகவல் சிதறுண்டும், அரைகுறையாகவும் இருந்தாலும், எட்டு அல்லது பத்து நகரங்களுக்கு மேல் இவ் வரியை விதிப்பதாகத் தெரியவில்லை. இதில் கொலம்பியா மாவட்டமும் அடங்கும். பிலடெல்பியாவும், கெண்டுக்கி மாநிலத்திலுள்ள லூயிவில், படுகா நகரங்களும், ஒஹியோ மாநிலத்திலுள்ள கொலம்பஸ், டேடன், டோலடோ, யங்டவுன், ஸ்பிங்க்பீல்டு நகரங்களும் இவ் வரியை வசூலிக்கின்றன. ஒரு புறனடையைத் தவிர்த்து (கொலம்பியா மாவட்டம்) இந் நகரங்கள் எல்லாம் குறைந்த ஒற்றைவரி வீதத்தைக் (low single tax rate) கையாளுகின்றன. கெண்டுக்கி மாநிலத்தில் உள்ள நகரங் களைத் தவிர்த்து, வேறு எந்த நகரமும் தனியாள் வருமானவரி விதிக்கும் மாநிலத்தில் இல்லாதது உன்னுதற்குரியது.

**கூட்டாட்சியின் தனியாள் வருமான வரிவிதிப்பின் ஆதி வரலாறு**
**(Early History of Federal Personal Income Taxation)**

**உள்நாட்டுப் போரின்போது விதிக்கப்பட்ட வருமானவரி:** முதன் முதலில் 1862-ல் கூட்டாட்சித் தனியாள் வருமானங்களின்மீது வரி விதித்துச் சட்டம் இயற்றப்பட்டது. இவ் வரியை 1862-ல் செலுத்த வேண்டும். ஆண்டு வருமானத்தில் முதல் 800 டாலர் நீங்கலாகப் பிற எல்லாத் தனியாள் வருமானத்தின்மீதும் ஒரே வீதாசாரத்தில் (flat rate) 3 சதவிகிதமாக இவ் வரி முதன் முதலில் போடப்பட்டது. 1862-ல் வீதங்களும், தனியாள் விலக்குகளும் மாற்றப்பட்டன. துண்டு வளர் வீதமும் (fragmentary progression) வரியில் புகுத்தப்பட்டது. இவ் வரியின் கீழ், ஆண்டொன்றுக்கு 600 டாலருக்கும், 10,000 டாலருக்கும் இடைப்பட்ட வருமானத்தின் மீது 3 சதவிகிதமும், 10,000 டாலருக்கு மேற்பட்ட வருமானத்தின்மீது 5 சதவிகிதமும் வரி விதிக்கப்பட்டது. 1865-ல் மீண்டும் வரிவீதங்கள் உயர்ந்தன. அப்பொழுது 600 டாலருக்கும், 5,000 டாலருக்கும் இடைப்பட்ட வருமானத்தின் மீது 5 சதவிகிதமும், 5000 டாலருக்கு மேற்பட்ட வருமானத்தின் மீது 10 சதவிகிதமும் வரிசெலுத்த வேண்டும் என முடிவாயிற்று. உள்நாட்டுப் போர் நிகழ்ந்த காலத்துப் போடப்பட்ட வருமான வரியின் மிகத் தீவிரமான பிரயோகம் 1865ஆம் ஆண்டையச் சட்டம் எனலாம். 1866-ல் சுமார் 460,000 ஆட்கள் தனியாள் வருமான வரிகளைச் செலுத்தினர். சுமார் 73 மில்லியன் டாலர்கள்[2] வருமான வரியாகக் கிடைத்தது. 1872-ல் இவ் வரி ரத்து செய்யப்பட்டது. 1861 ஆம் ஆண்டிலிருந்து இவ் வரியின் மூலம் கிடைத்த வருவாய் சுமார் 350 மில்லியன் டாலர்களாகும்.

உள்நாட்டுப் போர் நிகழ்ந்த காலத்தில் விதிக்கப்பட்ட வருமான வரி[3] அரசியல் சட்டத்தின்படி செல்லுபடியாகத் தக்கதா என்ற வாதம் எழுந்ததாயினும், போர்முடையை உத்தேசித்து கிட்டத் தட்ட யாவராலும் இவ் வரி மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. அரசியல் சட்டப் பிரச்சினை I ஆம் விதி, 9 ஆம் பிரிவின் கீழ் எழுந்தது. இவ் விதி ஆள்வரி அல்லது பிற நேர்வரியைக் (capitation or other direct tax) கூட்டாட்சி 'மக்கள் கணக்கு அல்லது எண்'ணுக்கு (census or enumeration) ஏற்ற வீதாசாரத்திலன்றி விதிக்கக் கூடாது என்று கூறியது. மக்கள் சங்கியைப்படியின்றி இவ் வரி, வருமானத்தைப் பொறுத்து விதிக்கப்பட்டதால், ஒரு தனியாள் வருமானவரி நேர்முக வரியா அல்லவா என்ற சிக்கல் எழுந்தது. வாதி, ஆடம் ஸ்மித், ஜான் ஸ்டூவர்ட் மில், ஜே. பி. ஸே முதலான தலைசிறந்த பொருட்புலவர்களின் பட்டியலைக் கூறி

வருமானவரி, நேர்முகவரி என்று வாதித்தார். இவர்கள் வருமான வரி நேர்முகவரி என்று ஐயந்திரிபுக்கு இடமின்றித் தம் நூல்களில் விளம்பியுள்ளார்கள். ஆயினும், 'அரசியல் சட்டத்தில் ஆளப்பட்டிருக்கின்ற பொருளின்படி ஆள்வரிகளும், தாவரச் சொத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகளும் மட்டுமே நேர்முகவரிகள் எனவும், வாதி தவருக மனுச் செய்து கொண்ட வரி ஆயத் தீர்வை [4] என்ற வகுப்பில் அடங்கு மெனவும்' நீதிமன்றம் முடிவு செய்தது. இங்ஙனமாக ஒரு தனியாள் வருமானவரி சட்டப்படி, மறைமுகவரி என்றும், அதை விதிக்கும் உரிமை கூட்டாட்சியின் அதிகாரத்திற்கு உட்பட்டதே என்றும் கூறப்பட்டன.

**1894ஆம் ஆண்டைய வருமானவரி** [5]: அமெரிக்கக் காங்கிரஸ் 1894-ல் ஒரு தனியாள் வருமான வரிச் சட்டத்தைக் கொணர்ந்தது. ஆண்டொன்றுக்கு 4,000 டாலருக்குக் கூடுதலாக இருக்கும் தனியாள் வருமானங்களின்மீது இவ் வரி விதிக்கப்பட்டது. வரி வீதம் 2 சதவிகிதமென நிர்ணயிக்கப்பட்டது. கிழக்கு மாநிலங்களின் பிரதிநிதிகளுடைய ஒரு மனதான எதிர்ப்பைப் பொருட்படுத்தாது மேற்கு, தெற்கு மாநிலங்களின் பிரதிநிதிகள் துணைகொண்டு இச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. உயர்ந்த அளவு தனியாளுக்கு வரியினின்றும் விலக்கு அளிக்கப்பட்டது. கிழக்கிந்திய மாநிலங்களில் குடியிருந்தவர் மட்டுமே இவ் வரியைப் பூராவும் செலுத்த வேண்டிய நிலை ஏற்பட்டது. இச் சட்டம் செல்வ வருக்கத்தினர் மீது பேதங்காட்டித் தொடுத்த தாக்காகக் (discriminatory attack) கொள்ளப்பட்டது.

தாவரச் சொத்தினின்றும் கிடைக்கும் வருமானத்தின் மீதும், நகராண்மைக் கழகங்களின் கடன் பத்திரங்களினின்று கிடைக்கும் வருமானத்தின்மீதும் வரி விதிப்பது அரசியல் சட்டப்படி செல்வதென உயர்நீதி மன்றம் 'பாலக்கும், குடியானவர்களின் கடன் டிரஸ்ட் கம்பெனியும்' (Pollack v. Farmer's Loan and Trust Co.)[6] என்ற வழக்கில் தீர்ப்பளித்தது. தாவரச் சொத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட வரி நேர்முக வரியானதால், மக்கள் சங்கியைப்படி விதிக்கப்பட்டிருந்தால் ஒழிய அரசியல் சட்டப்படி செல்லாதென்பது வாதத்திற்குரிய முதற் பொருளாகும். வரிகளைப்பற்றிய நூல்களும், ஆங்கிலேய நீதி மரபும் (judicial practice) இவ்வித வரியை நேர்முகவரி என்றே கொண்டன என்ற முடிவுக்கு உயர்நீதி மன்றம் வந்தது. இருந்தாலும், 'ஸ்பிரிங்கரும் அமெரிக்க ஐக்கிய நாடுகளும்' என்ற வழக்கில் ஏற்பட்டது போல, நீதிமன்றத்தார் உலக வழக்கை ஏற்றுக்கொள்ளாது, 'நேர்முகவரி' என்பதற்கு அரசியல்சட்டம் வகுத்தவர்கள் என்ன பொருள்

கொண்டார்கள் என்பதைக் கருத்தூன்றிப் பார்க்கும்படி ஏற்பட்டது. பிற மாநிலங்களிலிருந்து கிடைத்த பெரும்பான்மை பலத்தைக் கொண்டு, ஒரு மாநிலத்தில் உள்ள ஆட்கள், சொத்து இவற்றின் மீது நேரிடையாக வரி விதிக்கும் அதிகாரத்தைப் பிரயோகிப்பதினின்றும் கூட்டாட்சியைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்பதே அரசியல் சட்டத்தின் உட்கிடை என்பது தெளிவு[7] என நீதிமன்றத்தார் கருத்துத் தெரிவித்தனர். இவ்வாறாகச் சொத்தின்மீது ஒரு வரி விதிப்பது, சிறுபான்மையோரைப் பெரும்பான்மையோரின் கொடுங்கோன்மையினின்றும் காப்பதற்காகத் 'தந்த அரசியல் சட்டப் பாதுகாப்பை மீறியதாகும் எனவும், 'தாவரச் சொத்தின் வருமானத்தின் மீதும், வாரத்தின்மீதும் இச் சட்டம் வரிவிதிப்பதால், இது அரசியல் சட்டத்தை மீறியதாகு'மெனவும், ஆகவே செல்லாதென்றும் நாங்கள் அபிப்பிராயப்படுகிறோம்'[8] என நீதிமன்றத்தினர் முடிவு தெரிவித்தனர்.

நகராண்மைக் கழகங்கள் வெளியிட்ட பத்திரங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தின் பேரில் விதிக்கப்பட்ட வரி செல்லுபடியாகுமா என்பதைப் பற்றி, இவ் வரி மாநிலங்களின் வரிவிதிக்கும் அதிகாரம், அவை கடன் வாங்குவதற்குப் பயன்படுத்தும் கருவிகள் இவற்றின்மீது விதிக்கப்பட்ட வரி எனவும், ஆகவே அரசியல் சட்டத்திற்கு விரோதமானது எனவும், தீர்ப்பு அளித்தனர்.[9] 1895-ல்[10] மீண்டும் இவ் வழக்கு உயர்நீதி மன்றத்திற்கு வந்தது. முதல் வழக்கில் இரு அமிசங்களைப் பொறுத்த மட்டில் நீதிபதிகள் சம அளவில் எதிரெதிரான கருத்துகளைத் தெரிவித்திருந்தனர். அவ்விரண்டு அமிசங்களைப் பற்றியும் முடிவாகத் தங்கள் கருத்தைத் தெரிவிக்கும்படிக் கோரப்பட்டபொழுது தனியாள் எஸ்டேட்டிலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீது வரிவிதிப்பது நேர்முகவரி என்றும், அரசியல் சட்டம் கூறுகின்றவாறு இவ் வருமான வரிச் சட்டம் ஒரே படித்தாக இல்லை என்றும் முடிவு தெரிவித்தனர்.

ஆகவே, 1894ஆம் ஆண்டையச் சட்டம் பயனிலதாகப் போயிற்று. 'ஸ்பிரிங்கரும் அமெரிக்க ஐக்கிய நாடுகளும்' என்ற வழக்கில் நீதி மன்றத்தார் தந்த தீர்ப்பை இப்பொழுது முற்றும் மாற்றியதால், அரசியல் சட்டத்தைத் திருத்தினாலன்றித் தனியாள் வருமானங்கள் மீது கூட்டாட்சி வரி விதிப்பது தடுக்கப்பட்டது.

**1909ஆம் ஆண்டைய கார்ப்பரேஷன் வரியும் பதினாறுவது திருத்தமும்:** ஸ்பிரிங்கர் வழக்கில், உள்நாட்டுப் போர் நிகழ்ந்த காலத்து விதிக்கப்பட்ட வருமானவரி ஒரு ஆயத்தீர்வையே (ஒரு மறைமுக வரி) என்றும், அதனால் அதை மாநிலங்களுக்குப் பங்கீடு செய்ய

வேண்டிய அரசியல் சட்டவிதி இதற்குப் பொருந்தாது என்றும் உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்தது. போலக் வழக்கின் தீர்ப்பில் இம் முடிவு மீண்டும் வலியுறுத்தப்பட்டது. ஆனால், அத் தீர்ப்பில் தனியாள் வருமானவரி, ஆயத்தீர்வை அல்ல என்றும்—நேர்முகவரி என்றும் கூறப்பட்டது. தொழில்களை நடத்தும் சலுகைகளுக்காக 1909-ல் கார்ப்பரேஷன்கள்மீது கூட்டாட்சி ஓர் ஆயத்தீர்வையை விதித்தது. 5000 டாலருக்கு மேற்பட்ட நிகர வருமானமுடைய கார்ப்பரேஷன்கள்மீது 1 சதவிகிதம் ஆயத்தீர்வை விதிக்கப்பட்டது. நிகரவருமானத்தைக் கொண்டு அளக்கப்பட்ட ஆயத்தீர்வை என்று இவ் வரிக்கு விளக்கம் தரப்பட்டது. ஆகவே, இது ஒரு மறைமுக வரி ஆயிற்று.[11]

1913ஆம் ஆண்டைய பதினாறும் அரசியல் சட்டத் திருத்தத்திலிருந்துதான் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தனியாட்களின் வருமானங்களின்மீது தற்கால வரிவிதிப்பு தொடங்கியது எனலாம். 'மக்கள் சங்கியையையோ அல்லது கணக்கையோ பொருட்படுத்தாமலும், எந்த மூலத்திலிருந்து கிடைத்தாலும், அத்தகைய வருமானங்களின் மீது வரிவிதிக்கவும், வசூல் செய்யவும், அங்ஙனம் வசூல் செய்த தொகையை மாநிலங்களிடையே பங்கீடு செய்யாமலும், வைத்திருப்பதற்கும் காங்கிரசுக்கு அதிகாரம் இருக்கிறது' என்று இத் திருத்தம் கூறுகிறது. 1913-ல் இத் திருத்தத்தைப் பல மாநிலங்களும் ஏற்றுக்கொண்டபின்பு, உடனடியாக ஒரு தனியாள் வருமானவரி மசோதா இயற்றப்பட்டது. அவ் வாண்டில் குறிப்பிட்ட சில காப்பு வரிவீதங்களைக் குறைத்ததன் விளைவாக, அரசாங்கத்திற்கு வருவாய் குறையும் என்று எதிர்பார்த்து, அவ் விழப்பைச் சரிக்கட்டுவதற்காக இச் சட்டம் இயற்றப்பட்டது.

1913ஆம் ஆண்டையச் சட்டத்தின் தலையாய அமிசங்கள் வருமாறு: (1) ஆண்டொன்றுக்கு 3,000 டாலருக்கு மேற்பட்ட நிகர வருமானத்தின்மீது 1 சதவிகிதம் சாதாரணவரி (normal tax) விதித்தல் (ஒரு மணமான தம்பதிகளுக்கு 4,000 டாலர்); (2) (இச் சாதாரண வரியைத் தவிர்த்து) மேல் வருமானங்களின்மீது வளர் வீதத்தில் ஒரு மேல்வரி (surtax) விதித்தல்; இவ் வரியின் வீதம் 20,000டாலருக்கும், 50,000 டாலருக்கும்இடைப்பட்ட வருமானத்தின்மீது 1 சதவிகிதமும், 500,000 மேற்பட்ட வருமானங்களின்மீது மிக உச்சமான 6 சதவிகிதமும் ஆகும். (3) மூலதன ஆதாயங்களையும் (மூலதன ஆஸ்திகளை விற்றதனால் கிடைத்த ஆதாயங்கள்) வருமானமாகக் கொள்ளுதலும், மூலதன இழப்புகளை வருமானத்திலிருந்து கழிவாகக் கொள்ளுதலும்; (4) இலாப ஈவு வருமானத்தின் மீது விதிக்கப்பட்ட வரிகளை மூலத்திலேயே வசூலிப்பதற்குக்

கார்ப்பரேஷன் வருமான வரியை ஏற்ற கருவியாகக் கொள்ளுதல். இவ் வேற்பாட்டினுல் கார்ப்பரேஷன் இலாப ஈவுகளிலிருந்து கிடைக்கும் தனியாள் வருமானத்தின்மீது 1 சதவிகிதம் சாதாரண வரி விதிப்பதற்குப் பதிலியாக, கார்ப்பரேஷன் வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட 1 சதவிகித வரி கொள்ளப்பட்டது. கார்ப்பரேஷன், வருமானவரியைத் தனியாளுக்காகச் செலுத்திவிட்டதனுல், இலாப ஈவிலிருந்து கிடைத்த வருமானத்தின் பேரில் தனியாள் சாதாரண வரியைச் செலுத்தவில்லை.[12]

## கூட்டாட்சியின் வருமானவரிக் கணக்கின் எல்லைக்கோடு (Outline of Federal Income Tax Computation)

தற்போதைய சட்டத்தின் கீழ்த் தனியாள் செலுத்த வேண்டிய வருமான வரித்தொகையைக் கணக்கிடுவதில் உள்ள படிகளை நாம் இப்பொழுது சுருக்கமாகவும், பொதுப்படையாகவும் எடுத்துரைப்போம். இதனுல் வரிநோக்கங்களுக்காகக் கூட்டாட்சியின் நிகர வருமானத்தின் இயல்பைப் பற்றி வாசகர்களுக்குக் கருத்துத் தெரிவித்தவர்களாவோம். இதன் மூலம் வருமான வரி கருதுகோள் நடைமுறை இவை பற்றிய பிரச்சினைகளைப் பகுத்தாய்வதற்கு நாம் அடிகோலியவர்களாவோம்.

தனியாள் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்படும் ஒரு வரிக்கு அடிப்படையாக, நிகர வருமானத்தைப்பற்றிய ஒரே படித்தான விளக்கம் (uniform definition) வேண்டப்படுகிறது என்பதை நாம் நினைவில் இருத்தவேண்டும். பல் வேறுபட்ட மூலங்களிலிருந்து, பல் வேறுபட்ட வடிவங்களில் வருமானங்களைப் பெறும் பல்வேறுபட்ட வரிசெலுத்துவோர்களுக்கும் ஒரே பொருளைத் தரும்படியாக நிகர வருமானத்திற்குச் சட்டம் விளக்கம் தர வேண்டும். நிகரவருமானங்களைக் கண்டறிவதற்கு மொத்த வரவுகளில் எவ்வெவ் வினங்களைச் சேர்க்கவேண்டும், எவ்வெவ் வினங்களை விலக்கவேண்டும் என்ற அடிப்படையிலேயே விளக்கம் தரவேண்டும். இவ் விளக்கமும் நடைமுறைக் காரணங்களுக்காகத் தரப்பட்டதாக இருத்தல் வேண்டும். மொத்த வருமானத்திலிருந்து எந்தெந்தச் சிறப்பு இனங்களைக் கழித்தால் ஒரே படித்தாக நிர்ணயம் செய்யப்படும் நிகர வருமானத்தின் தொகையைப் பெறலாம் என்றும் கூறவேண்டும். அடுத்து வரும் சர்ச்சையில் பொதுப்படையாக நாம் சில வகை இனங்களில் நாட்டம் செலுத்துவோமேயன்றி, அருமையாகக் காணப்படும் சில சிக்கல் மிகுந்த இனங்களில் நாட்டம் செலுத்தமாட்டோம்.

1. **சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானம்** (Adjusted Gross Income) : ஒரு தனியாளின் மொத்த வருமானத்தில் அவர் ரொக்கமாகவும், தானியமாகவும் பெற்ற வரவு அனைத்தும் அடங்கும். இவ் வரவுகள் பொதுவாக இரு பிரிவின. தனியாள் சேவைகளினின்றும் கிடைக்கும் வரவுகளான கூலி, சம்பளம், கழிவு (commission), கட்டணங்கள் (fees), கைக்கூலிகள் (tips) இவையெல்லாம் சம்பளப் பட்டியலிலிருந்து பிடித்தம் செய்வதற்கு முன்பு உள்ள மொத்தத் தொகைகளாகவே குறிக்கப்படுகின்றன. சொத்துரிமையினின்றும் கிடைக்கும் வரவுகளான இலாபஈவுகள், வட்டி, வாரம், ராயல்டி (royalty), இலாபம் இவை போன்றவை, அவற்றை ஈட்டுவதற்காகும் செலவுகளைக் கழித்தபின்பு நிகர வருமானமாகக் குறிக்கப்படுகின்றன. ஓர் ஆண்டின் இடையில் சொத்தை விற்றதனால் கிடைத்த மூலதன ஆதாயங்களும், மொத்த வருமானத்தின் ஒரு கூறேயாகும். ஆனால், அவற்றை வரி செலுத்துவோரின் விருப்பத்தைப் பொறுத்து[13] வேறாகப் பிரித்து, வரி விதிப்புகளாகக் குறிப்பிட்ட முறையில் நடத்தலாம். ஒரு தனியாள் தன் வருமானத்தில் ஒரு பகுதியைப் பணமாகவும், ஒரு பகுதியைத் தானியமாகவும் பெற்றால் (உ-ம். குடியிருப்பு வசதி அல்லது உணவுக்கு வகை செய்தல் முதலானவை கூலியில் ஒரு பகுதி ஆதல்போல), இரண்டையுமே மொத்த வருமானத்தில் சேர்க்கவேண்டியதுதான். அதை ஈட்டுவதற்காகும் செலவுகளைக் கழிப்பதன் வாயிலாகவும், ஒவ்வொரு வரி செலுத்துவோர் பெறும் இலாபஈவில் முதல் ஐம்பது டாலரை விலக்குவதன் வாயிலாகவும், மொத்த வருமானம் சரிக்கட்டப்படுகிறது (adjusted). மொத்த வருமானத்திலிருந்து விலக்கப்பட்ட பெரும் வரவினங்கள் வருமாறு :

1. ஈட்டுநிதி ஏற்பாடுகள் (Insurance Settlements); ஏனெனில் ஈட்டுறுதியின் பேரில் கட்டப்படும் தவணைக் கட்டணங்களை (premiums) வரி நோக்கங்களுக்காகக் கழிக்க முடியாது. இழப்புகளை ஈடுசெய்வதற்காக ஈட்டுறுதித் தொகைகள் கொடுக்கப்படுகின்றனவாதலால், அவற்றைக் கழிக்க முடியாது.

2. நாம் வாரிசாகவும், கொடைகளாகவும் பெறும் இனங்கள். இவை ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு மாற்றப்பட்ட நிதிகளேயாகும். இவற்றை ஈட்டிய பொழுதே இவற்றை ஈட்டியவர்கள் வரியைச் செலுத்திவிட்டார்கள்.

3. நெடுங்காலமாக விலக்களிக்கப்பட்டு வரும் மாநில, தலக் கடன் பத்திரங்களிலிருந்து வரும் வட்டி. ஒரு வேளை அரசியல் சட்டத்தின்படியே இவ் விலக்கு அளிக்கப்படுகிறது போலும்.

4. தன் எஜமானருக்குச் செய்த ஊழியங்களின்போது மேற்கொண்ட செலவுகளை ஈடுசெய்தல் (reimbursement).

5. படையில் ஈடுபட்டிருக்கும் பணியாளர் தொகுதிக்குச் செலுத்தப்படும் சில இனங்கள். இவை பெரிதும் இவ் வகை அரசாங்க ஊழியர்களுக்குச் சட்டபூர்வமான சலுகையாகவே தரப்படுகின்றன.

சில பிரத்தியேகக் காரணங்களுக்காக, குறிப்பிட்ட சில வகை வருமானங்களுக்கு விலக்கு அளிப்பதற்காகவும், ஒரே வருமானத்தின் மீது இரட்டை வரி விதிப்பதைத் தவிர்ப்பதற்காகவும், மொத்த வருமானத்திலிருந்து இவற்றுக்கு விலக்கு அளிக்கப்படுகின்றன.

2. சரிக்கட்டப்பெற்ற மொத்த வருமானத்திலிருந்து பிடித்தங்கள் (Deductions from Adjusted Gross Income): ஒரு தனியாளின் சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்தை நிர்ணயித்த பின்பு பல்வேறுபட்ட பிடித்தங்கள் (deductions) செய்யப்படுகின்றன. இப் பிடித்தங்கள் முடிந்த பின்பு வரித்தளத்தை அடைகிறோம். பிடித்தங்களில் தலையாய இனங்களாவன :

1. அளிப்புகள் (Contributions) : அற, கல்வி, அல்லது சமய நிறுவனங்களுக்கு அளிக்கப்பட்ட செலுத்துகைகளைப் பொதுவாகப் பிடித்தம் செய்யலாம். ஆனால், நிறுவனங்கள் சட்டமியற்றும் நடவடிக்கைகளைப் பெரிதும் பாதிக்கத்தக்க வகையில் இறங்காமலும் அல்லது பிரசாரம் செய்யாமலும் இருக்கவேண்டும். கொடையாளிக்கு இவ்வளிப்புக்களின் மூலம் யாதாயினும் ஒரு பிரதிபலனோ, ஆதாயமோ ஏற்பட்டால் இவற்றைப் பிடித்தம் செய்யக்கூடாது. பொதுவாக, சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்தில் இவ்வாறான அறநிலையங்களுக்கான பிடித்தங்கள் 20 சதவிகிதத்திற்கு மேல் போகக் கூடாது.

(2) வட்டி : தனியாள் கடன்மீது வட்டிசெலுத்தும்பொழுது, எவ் வாண்டில் இவ் வட்டி செலுத்தப்பட்டதோ அவ் வாண்டில் இவ் வட்டித் தொகைகளைப் பிடித்தம் செய்துகொள்ளலாம். (தொழில் அல்லது உத்தியோகத்திற்காக வாங்கப்பட்ட கடன்மீது, செலுத்தப்பட்ட வட்டி சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்திலிருந்து விலக்கப்படுகிறது.) ஒரு தனியாளிடம் வாங்கிய கடனின் முதலை மட்டும் திருப்பிச் செலுத்தினாலும், அதையும் பிடித்தம் செய்யக்கூடாது. ஏனெனில், அப் பணம் கடனாக வாங்கப்பட்டபொழுது நாம் அதைக் கடனாளியின் வருமானத்துடன் சேர்க்கவில்லை. ஒரு தனியாளின் கூலி அல்லது பிற மொத்த வருமானத்திலிருந்து கிடைக்கும் 'நிகர'

வருமானத்தை வட்டி குறைப்பதால், தனியாள் கடன்களின்மீது செலுத்தப்படும் வட்டி பிடித்தம் செய்யப்படுகிறது போலும். ஆயினும், இப் பிடித்தத்தைச் சரியென நிலைநாட்டுவது கடினமே.

(3) வரிகள் பொதுவாக மாநில, தல வரிகளையும், உரிமங்களையும் (licenses), கட்டணங்களையும் (fees) பிடித்தம் செய்யலாம். ஆனால், கூட்டாட்சியின் வரிகளைப் பிடித்தம் செய்வதில்லை.

(4) மருத்துவ, பல் வைத்தியச் செலவுகள்: நோயை இன்னதென்று ஆய்ந்தறிவதற்கும், சிகிச்சை செய்வதற்கும், மருந்துகள் வாங்குவதற்கும், உடல்நல, மருத்துவநிலைய ஈட்டுறுதித் தவணைக் கட்டணங்கள் (health and hospital insurance premiums) கட்டுவதற்கும், மூக்குக் கண்ணுடிகள், கேள்விக்கான சாதனங்கள் (hearing aids), காட்சிக்கான நாய்க் கண்கள் (seeing-eye dogs), பொய்ப்பல், இன்ன பிறவும் வாங்குவதற்கும் ஆகும் செலவுகளை, எவ் வாண்டில் இச் செலவுகள் செய்யப்பட்டனவோ அவ்வாண்டிலேயே, பிடித்தம் செய்யலாம். சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்திற்கு மிகையாக 3 சதவிகிதம் வரையில் இப் பிடித்தங்களைச் செய்யலாம் என்று வரையறுக்கப்பட்டுள்ளது. அறுபத்தைந்து வயதைக் கடந்தவர்களுக்குப் பிடித்தம் செய்வதற்கு யாதொரு வரம்பும் கிடையாது.

(5) அடிபாடு இழப்புகள், கொள்ளைகள் (casualty losses and thefts): ஈட்டுறுதியால் கவரப்படாத அளவுக்கு, மதிப்பிறக்கம் ஏற்பட்ட இழப்பைப் (depreciated value of loss) பிடித்தம் செய்யக் கோரலாம். இவ் விழப்பை ஒரு தனியாளின் மூலதனத்திற்கு நேர்ந்த ஊறுபாடாகக் கொள்ளவேண்டும். ஏற்கனவே வரிக்கு உட்பட்டிருந்த வருமானத்திலிருந்து இம் மூலதனத் தொகை திரட்டப்பட்டது போலும்.

(6) செலுத்தப்பட்ட வாழ்க்கைப்படி இப் பிடித்தத்தினால் வாழ்க்கைப்படி செலுத்துதற்காகப் பயன்படுத்தப்படும் வருமானத்தின் மீது இரட்டை வரிவிதிப்பு தவிர்க்கப்படுகிறது. முறிந்து போன திருமணங்கள்பால் காங்கிரஸ் காண்பித்த பரிவு இடம் பெயர்ந்தது. முன்பு வாழ்க்கைப்படியாகப் பெறப்பட்ட தொகை மொத்த வருமானத்திலிருந்து விலக்கப்பட்டது. வாழ்க்கைப்படியைச் செலுத்துவோர்மீது வரி விதிக்கப்பட்டது. தன் வருமானத்தின் எத்துணைப் பகுதியை வாழ்க்கைப்படியாகத் தந்தாரோ அப் பகுதியின்மீதே இவ் வரி விதிக்கப்படும். தற்பொழுது வாழ்க்கைப்படியைச் செலுத்துவோர் அதைப் பிடித்தம் செய்துகொள்ளலாம்; வாழ்க்கைப் படியைப் பெறுவோர் வரிசெலுத்தவேண்டும்.

(7) தரப்பிடித்தம் (Standard deduction): எவ்வெவ்வினங்களைப் பிடித்தம் செய்யவேண்டும் அல்லது இவ்வாறு பட்டியல் தயாரிப்பதற்குப் பதிலாகத் தரப்பிடித்தம் செய்யவேண்டும் என்பது வரி செலுத்துவோரின் விருப்பத்தைப் பொறுத்ததாகும். குறைந்த வருமானத்தை உடையவராகவும், குறுகிய நமூனுவை (short form) உபயோகிப்பவராகவும் இருந்தால் வீத அமைப்பில் (rate structure) 10 சதவிகிதம் தரப்பிடித்தமாகப் புகுத்தப்பட்டுள்ளது. நீண்ட நமூனுவைப் (long form) பயன்படுத்தினுல் வரி செலுத்துவோர் தாம் பிடித்தம் செய்ய வேண்டுவனவற்றை இன வாரியாகப் பிரிக்கலாம்; அல்லது சரிக்கட்டிய மொத்த வருமானத்தில் 10 சதவிகிதமோ அல்லது 1,000 டாலரோ, இவற்றில் எது குறைவாயிருக்கிறதோ அதன்படிப் பிடித்தம் செய்துகொள்ளலாம். வருமானம் எத்துணைப் பெரியதாக இருக்கின்றதோ அத்துணை, வரி செலுத்துவோர் பிடித்தங்களை இனவாரியாகக் குறிப்பிடுவர். 15,000 டாலருக்குக் குறைந்த வருமானத்தை உடையோர் பெரும்பாலும் தரப் பிடித்தத்தையே பயன்படுத்தினர்.[14]

3: வரி தாங்கு வருமானம் (Taxable Income) : சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்திலிருந்து பிடித்தங்கள் எல்லாம் செய்த பின்பு வரி செலுத்துவோர் ஒவ்வொருவருக்கும், அவரைச் சார்ந்திருப்பவர்களுக்குமாக 600 டாலரைக் கழித்தால், வரிதாங்கு வருமானம் அல்லது, வரித்தளத்தைப் பெறுகின்ருேம். வரி செலுத்துவோரோ, அவருடைய மனைவியோ அறுபத்தைந்து வயதைக்கடந்திருந்தாலும், அல்லது கண் குருடாக இருந்தாலும், கூடுதலாக 600 டாலருக்கு விலக்கு அளிக்கப்படுகிறது. யார் யார் சார்ந்திருப்போர் (அண்டியிருப்போர்) என்று தீர்மானிப்பது மிகச் சிக்கலான பிரச்சினையாகும். வேறெந்த இனத்தைப் பொறுத்தும் காணப்படுவதைவிட, யாரார் சார்ந்திருக்கிருர்கள் என்ற வரி விவர அறிக்கையில்தான் பிழைகள் மலிந்து காணப்படுகின்றன. பொதுவாகக் கூறுமிடத்து, வரி செலுத்துவோரிடமிருந்து பாதிக்கு மேல் ஆதரவு பெறும் ஒரு அண்டியிருப்போர் (dependent), 600 டாலருக்கு மேல் மொத்த வருமானம் பெறக்கூடாது. மாணுக்கராகவோ, வரி செலுத்துவோரின் குடும்பத்தில் ஓர் உறுப்பினராகவோ, அல்லது கூடுமான வரை நெருங்கிய உறவினராகவோ இருப்பவருக்கு இது பொருந்தாது. ஆனுல், இவ் விதிகளைப்பற்றிய மாற்றுவடிவங்கள் (variants) பல உண்டு.

தனியாள் விலக்குகளை அநுமதிப்பதால், ஒவ்வொருவருக்கும் ஒருகுறைந்த அளவு, போதுமான வாழ்க்கைத்தரத்தைப் பேணுவதற்கு வேண்டிய வரியிலா நிகர வருமானம் கிடைக்கின்றது. வரி

செலுத்தும் திறனை ஒரு வரி பிரதிபலிக்க வேண்டுமென்றால், வாழ்வதற்கு வேண்டிய இன்றியமையாத செலவுக்கு ஓரளவு தள்ளுபடி செய்யவேண்டும் என்பது தெளிவு. மற்றொரு பக்கத்தில், தான் காலம் தள்ளுவதற்கு அவசியமான செலவுகளின் தொகையை வரி செலுத்துவோர் நிர்ணயிப்பதற்கோ அல்லது அவர் உண்மையில் காலம் தள்ளுவதற்கு மேற்கொள்ளும் செலவுகளை, அவசியமான செலவுகள் என்றோ சட்டம் கொள்ள முடியாது. கீழே காட்டியவாறு கூட்டாட்சியின் வருமான வரி வரலாற்றில் தனியாள் விலக்குத் தொகை பலமுறை அடிக்கடி மாறியிருக்கிறது. ஆனால், இம் மாறுதல்கள் வாழ்க்கைச் செலவின் மாறுதல்களைப் பிரதிபலிக்கவில்லை. ஒரு குறிப்பிட்ட காலத்தில் விலைவாசி ஏறிக்கொண்டே வந்தபொழுது விலக்குகளின் போக்கு குறைந்து கொண்டோ அல்லது நிலையானதாகவோ பொதுவாக இருந்திருக்கிறது.

| சட்டம் இயற்றப்பட்ட ஆண்டு | கணவனுக்கும் மனைவிக்குமான வரி விலக்கு (டாலரில்) |
|---|---|
| 1913 | 4,000 |
| 1917 | 2,000 |
| 1921 | 2,500 |
| 1926 | 3,500 |
| 1932 | 2,500 |
| 1940 | 2,000 |
| 1941 | 1,500 |
| 1942 | 1,200 |
| 1944 | 1,000 |
| 1948 | 1,200 |

4. **வரி வீதங்களின் பிரயோகம் :** சில ஆண்டுகளாகத் திருமணம் ஆகாதவர்களுக்கும், கூட்டாக வரி விவர அறிக்கைகளைச் சமர்ப்பிக்கும் திருமணமான தம்பதிகளுக்கும், குடும்பத் தலைவர்களாக இருக்கும் திருமணமாகாத அல்லது பிரிந்து வாழும் நபர்களுக்கும் தனித்தனியே வீதப்பட்டியல்கள் (rate schedules) பிரயோகிக்கப்படுகின்றன. எல்லாப் பட்டியல்களும் வளர்வீத முறையில் அமைந்தவை. வரிதாங்கு வருமானத்தின் முதல் டாலர்மீது 20 சதவிகிதத்தில் ஆரம்பித்து 91 சதவிகிதம் வரை வரிவிகிதம் ஏறிச் செல்கிறது. ஒற்றையாள் சமர்ப்பிக்கும் வரிவிவர அறிக்கையைப்போல் இருமடங்குக் கூடுதலாகத் திருமணமான தம்பதிகள் சமர்ப்பிக்கும் கூட்டு வரிவிவர அறிக்கையின் வரிவீதம் விதிக்கப்படுகிறது. இவ்வாறு வருமானத் தொகுதிகள்மீது வளர்வீத முறையில் வரிகள்

விதிக்கப்படுகின்றன. அதாவது, வரிதாங்கு வருமானத்தில் முதல் 2,000 டாலரில் 20 சதவிகிதத்தைத் திருமணமாகாத நபர் செலுத்துகின்றார்; திருமணமான கணவனும், மனைவியும் முதல் 4,000 டாலரில்தான் 20 சதவிகிதத்தை வரியாகச் செலுத்துகின்றார்கள். 200,000 டாலருக்கு மேல் வரிதாங்கு வருமானத்தை உடைய ஒற்றைக் கட்டை (single individual) வருமானத்தில் 91 சதவிகிதத்தையும் திருமணமான தம்பதிகள் 400,000 டாலருக்கு மேல் வரிதாங்கு வருமானத்தில் 91 சதவிகிதத்தையும் வரியாகச் செலுத்துகின்றனர். இவர்கள் இருவருக்கும் இடைப்பட்ட நிலையில் மணமாகாமல் அல்லது குடும்பத்திலிருந்து பிரிந்து வேறாய் வாழும் 'குடும்பத் தலைவர்கள்' இருக்கின்றார்கள். அவர்களின் வருமான அடைப்புகளும் (brackets of income) ஒற்றைக் கட்டையின் வருமான அடைப்புகளும் கிட்டத்தட்ட ஒன்றுதான். ஆனால், வருமான அடைப்புகள் ஏறும் வேகத்திற்கேற்ப, திருமணம் ஆகாத அல்லது குடும்பத்திலிருந்து பிரிந்து வந்தவர்களின் வரிவீதம் ஏறுவதில்லை.

1913ஆம் ஆண்டில் கூட்டாட்சித் தனியாள் வருமானவரி விதிப்பு தொடங்கிய காலத்திலிருந்து இதுகாறும் வளர்வீத விகிதப் பட்டியலில் (progressive rate schedule) இரு கோடிகளிலும் ஏற்பட்ட மாறுதல்களை 27ஆம் அட்டவணையில் காணலாம்.

## அட்டவணை 27

அடிமுடி வீதங்களும் வருமான அடைப்புகளும் (Bottom and Top Rates and Income Brackets): அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தனியாள் வருமான வரி, 1913—1959

(கூட்டுவரி விவர அறிக்கை, கணவனும் மனைவியும்)

| சட்டம் இயற்றப்பட்ட ஆண்டு | தொடக்க வீதம் (%) | தொடக்க வீதம் பிரயோகமாகும் நிகரவருமானம் (a) (0 டாலரிலிருந்து டாலர் வரை) | உச்ச வீதம் (%) | உச்ச வீதம் பிரயோகமாகும் நிகர வருமானம் (டாலருக்கு மேல்) |
|---|---|---|---|---|
| 1913 | 1·0 | 20,000 | 7·0 | 400,000 |
| 1916 | 2·0 | 20,000 | 5·0 | 2,000,000 |
| 1917 | 2·0 | 2,000 | 67·0 | 2,000,000 |
| 1918 | 6·0 | 4,000 | 77·0 | 1,000,000 |
| 1918 (1919-ல் அமுலுக்கு) | 4·0 | 4,000 | 73·0 | 1,000,000 |

| சட்டம் இயற்றப் பட்ட ஆண்டு | தொடக்க வீதம் (%) | தொடக்க வீதம் பிரயோகமாகும் நிகரவருமானம் (a) (0 டாலரிலிருந்து டாலர் வரை) | உச்ச வீதம் (%) | உச்ச வீதம் பிரயோக மாகும் நிகர வருமானம் (டாலருக்கு மேல்) |
|---|---|---|---|---|
| 1921 | 4·0 | 4,000 | 67·0 | 200,000 |
| 1924 | 2·0 | 4,000 | 46·0 | 500,000 |
| 1926 | 1·5 | 4,000 | 25·0 | 100,000 |
| 1928 (1929-ல் அமுலுக்கு) | 0·5 | 4,000 | 24·0 | 100,000 |
| 1928 (1930-ல் அமுலுக்கு) | 1·5 | 4,000 | 25·0 | 100,000 |
| 1932 | 4·0 | 4,000 | 63·0 | 1,000,000 |
| 1936 | 4·0 | 4,000 | 79·0 | 5,000,000 |
| 1941 | 10·0 | 2,000 | 81·0 | 5,000,000 |
| 1942 | 19·0 | 2,000 | 88·0 | 200,000 |
| 1944 | 23·0 | 2,000 | 94·0 | 200,000 |
| 1945 | 19·0 | 2,000 | 86·5 | 200,000 |
| 1948 | 16·6 | 4,000 | 82·1 | 400,000 |
| 1950 | 17·4 | 4,000 | 84·4 | 400,000 |
| 1951 | 22·2 | 4,000 | 92·0 | 400,000 |
| 1951 (1954-ல் அமுலுக்கு) | 20·0 | 4,000 | 91·0 | 400,000 |

(a) 1913-க்கும் 1945-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில், தொடக்க வீதமே சாதாரண (normal) வரி வீதமாக இருந்தது. இக் காலத்தின் பெரும் பகுதிக்கும், எல்லா வருமானத்தின் மீதும் வீதாசார வீதமே (flat rate) சாதாரண வரிவீதமாக இருந்தது. மூன்றுவது பத்தியில் உள்ள தொகை களுக்கு அப்பாற்பட்ட வருமானங்களுக்கு வளர்வீத வீதங்களோ அல்லது சிறிது வளர்வீத சாதாரண வரிவீதமோ பிரயோகிக்கப்பட்டது. 1945ஆம் ஆண்டைய சட்டத்தின்படி சாதாரண வரி, மேல் வரி (surtax) இரண்டும் ஒன்றாக ஒரே பட்டியலில் இணைக்கப்பட்டன.

தற்பொழுது கணவனும், மனைவியும் கூட்டாகச் சமர்ப்பித்த வரிவிவர அறிக்கையின்பேரில் பிரயோகிக்கப்படும் முழுப் பட்டியல் வீதங்கள் வருமாறு:

| வரிதாங்கு வருமானம் இதற்கு மேற்பட்டு இருந்தால் | | வரியின் தொகை | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| இதற்கு மேற்பட்டு (டாலர்) | இதற்கு மேற்படாதது (டாலர்) | குவிவு (Cumulative) | | இறுதிநிலை வீதம் | | | | | | (a) யின்மீது சராசரி வரி வீதம் |
| 0 | 4,000 | வருமானத்தில் | | 20% | | | | 2,000 | டாலரில் | 20·0% |
| 4,000 | 8,000 | 800 | + | 22%ம் | 4,000 | க்கு | மிகையாக இருக்கும் | 6,000 | ,, | 20·67% |
| 8,000 | 12,000 | 1,680 | + | 26% | 8,000 | ,, | ,, ,, | 10,000 | ,, | 22·0 % |
| 12,000 | 16,000 | 2,720 | + | 30% | 12,000 | ,, | ,, ,, | 14,000 | ,, | 23·71% |
| 16,000 | 20,000 | 3,920 | + | 34% | 16,000 | ,, | ,, ,, | 18,000 | ,, | 25·55% |
| 20,000 | 24,000 | 5,280 | + | 38% | 20,000 | ,, | ,, ,, | 22,000 | ,, | 27·45% |
| 24,000 | 28,000 | 6,800 | + | 43% | 24,000 | ,, | ,, ,, | 26,000 | ,, | 29·46% |
| 28,000 | 32,000 | 8,520 | + | 47% | 28,000 | ,, | ,, ,, | 30,000 | ,, | 31·53% |
| 32,000 | 36,000 | 10,400 | + | 50% | 32.000 | ,, | ,, ,, | 34.000 | ,, | 33·53% |
| 36,000 | 40,000 | 12,400 | + | 53% | 36,000 | ,, | ,, ,, | 38,000 | ,, | 35·42% |
| 40,000 | 44,000 | 14,520 | + | 56% | 40,000 | ,, | ,, ,, | 42.000 | ,, | 37·24% |
| 44,000 | 52,000 | 16,760 | + | 59% | 44,000 | ,, | ,, ,, | 50,000 | ,, | 40·60% |
| 52.000 | 64,000 | 21,480 | + | 62% | 52,000 | ,, | ,, ,, | 58,000 | ,, | 43·45% |
| 64,000 | 76,000 | 28,920 | + | 65% | 64,000 | ,, | ,, ,, | 70,000 | ,, | 46·89% |
| 76,000 | 88,000 | 36,720 | + | 69% | 76,000 | ,, | ,, ,, | 82,000 | ,, | 49·83% |
| 88,000 | 100,000 | 45,000 | + | 72% | 88,000 | ,, | ,, ,, | 94,000 | ,, | 52·47% |
| 100,000 | 120,000 | 53,640 | + | 75% | 100,000 | ,, | ,, ,, | 110,000 | ,, | 55·58% |
| 120,000 | 140,000 | 68,640 | + | 78% | 120,000 | ,, | ,, ,, | 130,000 | ,, | 58·80% |
| 140,000 | 160,000 | 84,240 | + | 81% | 140,000 | ,, | ,, ,, | 150 000 | ,, | 61 56% |
| 160,000 | 180.000 | 100,440 | + | 84% | 160.000 | ,, | ,, ,, | 170,000 | ,, | 64·02% |
| 180,000 | 200,000 | 117,240 | + | 87% | 180,000 | ,, | ,, ,, | 190,000 | ,, | 66·29% |
| 200,000 | 300,000 | 134,640 | + | 89% | 200,000 | ,, | ,, ,, | 250,000 | ,, | 71·66% |
| 300,000 | 400,000 | 223,640 | + | 90% | 300,000 | ,, | ,, ,, | 350,000 | ,, | 76·75% |
| 400,000 | | 313,640 | + | 91% | 900,000 | ,, | ,, ,, | 400,000 | ,, | 78·41% |

(a) மொத்த வரிதாங்கு வருமானத்தை மொத்த வரியால் வகுத்தால் சராசரி கிடைக்கும்.

12ஆவது படத்தில் தனியாள்வருமானவரியின் கீழ் (இது 1954-லிருந்து மாறவில்லை) 1960-லிருந்து அமுலில் இருக்கும் சராசரி, இறுதிநிலை வரிவீதங்கள் வரையப்பட்டிருக்கின்றன. பல காரணங்களை முன்னிட்டு இவ் வரை படம் அறிவுரை வழங்குவதாக அமைந்




படம் 12

இறுதிநிலை, சராசரி வரி வீதங்கள்: அமெரிக்க ஐக்கிய நாடுகள் தனியாள் வருமான வரி, 1959.
(கூட்டு விவர அறிக்கையின்மீது வீதங்கள்)

துள்ளது. இவ் விறுதிநிலை வீத அமைப்பிலிருந்து, எவ்வளவு கூடுதலாக வருமானம் இருந்தாலும், வரி வீதம் ஒரு காலும் 100 சதவிகிதமாக உயர்வதில்லை எனத் தெரிகிறது. வருமானம் எவ் வளவினதாயினும், ஒவ்வொரு இறுதி நிலை டாலரிலும் ஒரு பகுதி வரிசெலுத்துவோருக்கு விட்டுவைக்கப்படுகிறது. வருமானம் ஏற ஏற இப் பகுதி குறைவது உண்மையேயானாலும், அஃது ஒருகாலும் சூனியத்தை (zero) அடைவதில்லை. வரிவிதிப்புக்கு முன்பு எவ்வளவுக் கெவ்வளவு வருமானம் கூடுதலாக இருந்ததோ அதே போன்று வரிவிதிப்புக்குப் பின்பும் வருமானம் கூடுதலாகவே இருக்கின்றது. ஒரு பெரிய வருமானத்தின் இறுதிநிலை டாலரில் வரிசெலுத்துவோருக்கு மிச்சமாகக் கிடைப்பது மிகச் சொற்பமேயாயினும், அதை ஈட்டுவதற்குச் செய்த முயற்சி அவ்வளவு பயனுள்ளதாக இல்லாவிடினும், அஃது ஏதோ ஒரு சிறிய தொகையாகவேனும் இருப்பதே சாலும். ஒரு பெரிய வருமானத்தின்மீது இறுதிநிலை வீதம் எவ்வளவு உயர்வாக இருந்தபோதிலும், சிறிய வருமானங்களைப் போன்றே இப் பெரிய வருமானத்தின் முற்கூறுகளும் அதே அளவு தாழ்ந்த இறுதிநிலை வீதங்களையே செலுத்தவேண்டும் என்பது நாம் கவனிக்க வேண்டிய இரண்டாவது அமிசமாகும். ஒரு வருமானத்தின்மீது

91 சதவிகிதம் இறுதிநிலை வீதம் விதிக்கப்பட்டால், வருமானம் முழுதுமே இவ் வீதத்தைச் செலுத்தவேண்டும் என்று விஷயம் தெரியாதவர்கள் நினைக்கின்றார்கள். இங்ஙனம் நினைப்பது முற்றிலும் தவறாகும். 4,000 டாலரை மொத்த வருமானமாக உடையவர்கள் மீது 20 சதவிகிதம் வரி விதிக்கப்படுகிறது. அதுபோலவே ஒரு பெரிய வருமானத்தின் முதல் 4,000 டாலரின்மீதும் 20 சதவிகிதமே வரி விதிக்கப்படுகிறது. இதனால்தான் வரைபடத்தில் இறுதிநிலை வீதத்தைவிடச் சராசரி வீதம் சற்று மிதப்பாக ஏறுகிறது எனலாம்.

உயர்ந்த வருமான மட்டங்களைவிடக் குறைந்த வருமான மட்டங்களிலேயே வீத அமைப்பில் காணப்படும் வளர்வீதம் விரைவாகக் காணப்படுகிறது என்பது நாம் கவனிக்கவேண்டிய மூன்றாவது தலையாய அமிசமாகும். இறுதிநிலை வீதங்களில் ஏற்றம் படிப்படியாகவும், மாறாது அல்லது குறைந்தும் செல்வதாலும்,வருமானங்கள் ஏறுந்தோறும் இறுதிநிலை வீதங்களைப் பிரயோகிக்க வேண்டிய வருமான அடைப்புகள் பரந்துபட்டுக் காணப்படுவதாலும் இம் மாதிரி ஏற்படுகிறது. இவ்வாறாக வருமானம் ஏறுந்தோறும் சராசரி வளைகோடு தட்டையாகப் போகிறது. இதற்கான காரணம் நடைமுறையை ஒட்டியதாகும். அளவுகோலின் முடிவில் இருப்பதைக் காட்டிலும் அடியிலேயே அதிக வருமானங்கள் இருப்பதால், ஏராளமான வரித்தொகையைத் திரட்டவேண்டும் என்றால், அவ் வருமானங்களின்மீது வீதங்களை உயர்த்துவது இன்றியமையாததாகும்.[15] 32,000 டாலருக்கு மேல் இறுதிநிலை வீதங்கள், 32,000 டாலருக்கு முன்பு என்ன வீதத்தில் ஏறிக்கொண்டிருந்தனவோ அதே வீதத்தில் ஏறினால் மிக விரைவிலேயே வரி வீதங்கள் 100 சதவிகிதத்தை எட்டிவிடும் என்பது வரைபடத்தை ஒரு முறை பார்த்தாலே புலனாகும்.

மணமான தம்பதிகளின் வருமானத்தைச் சில மாநிலங்கள் நடத்திய விதத்தை வரலாற்றின் வாயிலாகப் பார்த்தால், நியாயம் பற்றிய சிறப்பான பிரச்சினை ஒன்று எழுகின்றது. 'சமுதாய உடைமை' (community property) நிலவும் மாநிலங்கள், தம்பதிகளில் ஒருவர் ஈட்டிய வருமானத்தில் ஒரு சரிபாதியை மற்றொருவருக்கு உரியதாகக் கருதுகின்றன. இருவரில் ஒருவரே வருமானத்தைப் பெற்றாலும், இம் மாநிலங்களில் கணவனும் மனைவியும் வெவ்வேறாக வரிவிவர அறிக்கைகளைத் தயாரிப்பது சாத்தியமாயிற்று. இங்ஙனம் வருமானம் வெவ்வேறாகப் பிரித்துக் கணக்கிடப்படாமல் ஒன்றாகவே கணக்கிடப்பட்டிருந்தால் அவர் செலுத்தவேண்டிய வரியின் இறுதிநிலை வீதம் கூடுதலாக இருந்திருக்கும்.

அவ்வாறின்றி வருமானத்தைப் பிரித்துத் தனித்தனியே வரிவிவர அறிக்கைகளைச் சமர்ப்பிப்பதில் குறைவாகவே இறுதிநிலை வீதம் செலுத்த வேண்டிய அநுகூலம் இருக்கிறது. தம்பதிகளில் ஒருவரே வருமானத்தைப் பெற்றால், அது ஒற்றை வருமானம் (single income) என்றும், அஃது தரமான வளர்வீத வீதங்களுக்கு (standard progressive rates) உட்பட்டது என்றும், பிற மாநிலங்களின் வருமானவரிச் சட்டம் நுவலுகிறது. சமுதாய உடைமை விதிகளால் பல்வேறு அமிசங்களிலும் அலாதியாக விளங்கும் கூட்டாட்சியின் வருமான வரிக்கு அநுகூலம் ஏற்பட்டது.

இப் புவியியல் பேதங்காட்டுகையைக் களைவதற்காகக் காங்கிரஸ் 1948-ல் கூட்டுவரி விவர அறிக்கைகளில் கண்ட வருமானத்தைப் பிரிக்கும் சலுகையை எல்லோருக்கும் அளித்தது. வரியைக் கணக்கிடுவதற்கு வரிதாங்கு வருமானம் இரண்டாக வகுக்கப் பெற்றது. இவ் வருமானத்தில் பாதிக்கு வளர்வீத வீதப் பட்டியலைப் பிரயோகித்தனர். பிறகு அங்ஙனம் கணக்கிடப்பட்ட வரியை இரண்டால் பெருக்கினர். இன்றுவரை இப் பழக்கம் தொடர்ந்து நீடித்து வந்துள்ளது. கூட்டுவரி விவர அறிக்கைகளுக்கு ஒரு பிரத்தியேக வீதப் பட்டியலைப் பிரயோகிப்பதன் வாயிலாக இவ் விளைவு தற்பொழுது நிலையாக்கப்பட்டிருக்கிறது. புவியியல் பேதங் காட்டுகை களையப்பட்ட போதிலும், அதற்குப் பதிலாக ஒரு புதிய, மிகக் கடுமையான பேதங் காட்டுகை முளைத்திருக்கிறது. குடும்பத் தலைவராக இல்லாத 'திருமணம் ஆகாதவருக்கும் அல்லது கணவனை இழந்த பெண்ணுக்கும்', திருமணமாகிக் கூட்டாக வரிவிவர அறிக்கையைச் சமர்ப்பிப்பவருக்கும் இடையே பேதங் காட்டப்படுகிறது. கூட்டு வரி விவர அறிக்கைகளைத் தவிர்த்து ஒரு தனியாளின் இறுதி நிலை வீதங்களை 12ஆவது படத்தில் வரைந்தால், கூட்டு வரி விவர அறிக்கை வளை கோட்டில் காணப்படும் ஏணிகளின் (risers) அதே எண்ணிக்கையே தனியாளின் படிக்கட்டு-படி (stair-step) வளை கோட்டிலும் இருக்கும். இவ் வேணிகளின் உயரமும் ஒரே அளவினதாக இருக்கும். ஆனால், படிகள் மட்டும் பாதி அகலமுள்ளவைகளாக இருக்கும். உண்மையான வரிப் பொறுப்பைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றால் 154ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள மாதிரி உதாரணங்களிலிருந்து, இவை யிரண்டுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்துகொள்ளலாம்.

இங்ஙனமாகப் பிரமசாரிகளின் மீதும், கைம்பெண்களின் மீதும் கடுமையான தண்டனை விதிக்கின்றனர். 1959-ல் நிலவிய வீதங்களே கிட்டத்தட்ட 1948-க்கு முன்பும் நிலவின. 1948-க்கு முன்பு திருமணமானவருக்குத் தன் மனைவி அல்லது கணவனின் நிமித்தம், கூடுதலாக ஒரு தனியாள் விலக்கு

| வரிதாங்கு வருமானம் (டாலரில்) | கூட்டு விவர அறிக்கைகளின்மீது விதிக்கப் பட்ட வரி (டாலரில்) | தனியாள் விவர அறிக்கையின்மீது விதிக்கப் பட்ட வரி (டாலரில்) |
|---|---|---|
| 4,000 | 800 | 840 |
| 6,000 | 1,240 | 1,360 |
| 8,000 | 1,680 | 1,960 |
| 10,000 | 2,200 | 2,640 |
| 20,000 | 5,280 | 7,260 |
| 40.000 | 14,520 | 19,740 |
| 100,000 | 53,640 | 67,320 |

அளித்திருந்தனர். அடிப்படை வாழ்க்கைச் செலவுகளில் உள்ள வேறுபாட்டை இக் கூடுதல் தனியாள் விலக்கு அளவிடுவதாகக் கொள்ளப்பட்டது. 1948ஆம் ஆண்டிலிருந்து வருமானத்தைத் தனித்தனியே பிரிப்பதால் திருமணம் செய்துகொள்பவர்களுக்கு ஒரு பெரிய சலுகை கிடைக்கிறது. அத்துடன் திருமணமாகாது ஒற்றைக் கட்டையாயிருப்பவர்களுக்குப்[16] பெருத்த அளவில் பேதங் காட்டுகின்றனர். இப் பேதங்காட்டுகை சிறப்பாகக் கைம்பெண்களுக்கு ஏற்படுகிறது. வரியின் ஏற்றத்தால் அவர்கள் தங்கள் தனியாள் பட்ஜெட்டுகளை மீண்டும் விரிவான முறையில் சரிக்கட்டவேண்டியிருக்கிறது.

நாம் பகுத்தாய்வதற்கு இறுதிநிலை வரிவிதிப்பு வீதங்கள் முக்கியமானவையா அல்லது சராசரி வரிவிதிப்பு வீதங்கள் முக்கியமானவையா என்ற வினவை எழுப்பலாம். இஃது ஒரு செயற்கையான வேறுபாட்டை எழுப்புவதுபோல் தோன்றலாம். ஏனெனில், இரண்டுமே ஒரே வரிப்பளு நிலையைக் கொண்ட இரு வேறு படிகளாகும். இருந்தாலும், வருமானங்கள் அனைத்திற்குமான வரிப்பளுவைப் பார்க்கும் பொழுது, சராசரி வீதம் ஒரு பயனுள்ள, எளிய கருவியாகக் காட்சி அளிக்கிறது. வரி தாங்கு வருமானத்தில் எத்துணை வீதாசாரம் வரியாக எடுத்துக் கொள்ளப்படுகிறது என்பதை 12ஆம் படத்தை ஒரு முறை பார்த்தமாத்திரத்திலேயே ஒருவர் கூறிவிடலாம். எந்த ஒரு வருமானத்திற்கும், தளத்திற்கும் சராசரி வீத வளைகோட்டிற்கும் இடையேயுள்ள செங்குத்தான தூரத்தையும் தளத்திற்கும் வரை படத்தின் உச்சியில் படுகிடையாகச் செல்லும் 100 சதவிகிதக் கோட்டிற்கும் இடையேயுள்ள செங்குத்தான தூரத்தையும் ஒப்பிடுவதன் மூலம், வரிதாங்கு வருமானத்தில் எத்துணை வீதாசாரம் வரியாகச் செலுத்தப்படு

கிறது என்பதை ஒருவர் கூறிவிடலாம். மற்றொரு புறத்தில் வீத அமைப்பின் தூண்டுகோல் விளைவுகளைப் (incentive effects) பகுத்தாய்வதற்கு இறுதிநிலை வீதமே திறனாய்வு செய்வதற்கு ஏற்றதா யிருக்கிறது. ஏனெனில், வரி வீதத்தினால் முயற்சி அல்லது முதலீடு கூடுதலாக ஊக்குவிக்கப்படுகிறதா என்பதே நம்முன் நிற்கும் கேள்வி. கூடுதல் வருமானத்தைப் பெற்றதனால் செலுத்த வேண்டிய கூடுதல் வரிக்கும், இதற்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. மொத்த வருமானத்தின் ஒவ்வொரு டாலர் மீதும் விதிக்கப்படும் சராசரி வரியைக்காட்டிலும், இறுதிநிலை வீதத்திற்கும் இதற்குமே நெருங்கிய தொடர்பு இருக்கின்றது. ஒரு குறிப்பிட்ட வருமானத்திற்கு, கூடுதலான, ஆனால் வீதாசார இறுதி நிலை (flat marginal) வீதப் பட்டியலையும் பிரயோகம் செய்வதன் மூலமும், அல்லது தாழ்வாகத் தொடங்கி மேல்நோக்கி ஏறிச் செல்லும் இறுதிநிலை வீதத்தைப் பிரயோகம் செய்வதன் மூலமும், ஒரே சராசரி வரி வீதத்தை அடையலாம். தாழ்வாகத் தொடங்கி மேல் நோக்கி ஏறிச் செல்லும் இறுதிநிலை வீதத்தைப் பிரயோகம் செய்வதால் தூண்டுகோல் மீது மிகக் கடுமையான விளைவுகள் ஒரு வேளை ஏற்படலாம்.

5. வரிக்கு எதிரான வரவுகள் (Credits Against the Tax): வீத அமைப்புப் பிரச்சினைகளை நாம் வழிவிலகி விரித்ததனால், கூட்டாட்சிச் சட்டத்தின்கீழ் வரித் தொகையை நிர்ணயிப்பதற்கு வேண்டிய படிகளை நாம் பொதுப்படையாகக் கூறிக்கொண்டிருந்தோம் என்பதை நாம் மறந்துவிட்டோம். தொடங்கிய விஷயத்திற்கே மீண்டும் வருவதற்கு, வரிதாங்கு வருமானத்திற்கு ஏற்ற வீதத்தை நாம் பிரயோகித்தோம். இதனால் இறுதி வரியைப்பற்றி நாம் அறிந்தோம் என்று கூறுவதற்கில்லை. இங்ஙனம் கணக்கிடப்பட்ட வரியிலிருந்து இரு வகை வரவுகளைக் கழிப்பது சாத்தியமே. இலாப ஈவுகளில் 4 சத விகிதத்தைச் சிறப்பாக வரவு வைப்பது முதலாவதாகும். ஆனால், இவ் வரவு வரிதாங்கு வருமானத்தில் 4 சதவிகிதத்திற்கு மேல் போகக் கூடாது. இது இலாபஈவு பெறுவோர்களுக்குத் தரப்படும் வேறொரு 'வெட்டாகும்' (break). மற்றது சரிக்கட்டப் பட்ட மொத்த வருமானத்தைப்பற்றி ஆராயும்பொழுது மொத்த வருமானத்திலிருந்து விலக்கிய 50 டாலர் இலாப ஈவுத் தொகையாகும். இலாபஈவுகள் கார்ப்பரேஷன் இலாபங்களிலிருந்தே பெறப் படுகிறதென்பதனாலும், அவ் விலாபங்களின்மீது, கார்ப்பரேஷன், கூட்டாட்சியின் கார்பரேஷன் வருமான வரியைச் செலுத்தவேண்டி யிருக்கிறதென்பதனாலும் இவ் 'வெட்டுகள்' தரப்படுகின்றன. வருமானக் கால்களில் கார்ப்பரேஷன் இலாபங்களே இவ் விரட்டை வரி விதிப்புக்கு ஆளாகின்றன. நாம் இதைப்பற்றிப் பின்னர் ஓர்

அதிகாரத்தில் மேலும் பல கூறுவோம். ஆண்டொன்றுக்கு 1,200 டாலர்வரை பெற்ற ஓய்வு வருமானத்தில் 20 சதவிகிதம் இரண்டாவது வரி வரவாகும். இது மேலே கூறப்பட்ட வரிதாங்கு வருமானத்தில் அடங்கியதாகும். இதன்மீது சட்டப்படி வரிவிதிக்க முடியாது. சமுதாயக் காப்புறுதி ஆதாயங்களின் மீதும் ஆண்டொன்றுக்கு 1,200 டாலர் வரை வரி விதிப்பதில்லை. சமுதாயக் காப்புறுதித் திட்டங்களின்கீழ் 1,200 டாலர் வரை அடைவதற்கு அருகதையற்றவர்களின் சொத்து வருமானங்களுக்கோ அல்லது தனியார் ஓய்வுத் திட்டங்களின்கீழ் இதற்கு ஈடான தொகைகளுக்கோ ஓய்வு வருமான விதிகள் வகைசெய்கின்றன. குறைந்த வருமானத்தையுடைய ஒரு வரி செலுத்துவோரைக் காட்டிலும் கூடுதலான வருமானத்தையுடைய ஒரு நபர் அதிகமாக வரி கொடாது சேமிப்பதைத் தடுக்க வேண்டி இவ் விருபது சத விகிதம் புறனடை (exclusion) பிடித்தம் (deduction), அல்லது விலக்கு (exemption) ஆகக் கொள்ளப்படாது வரிவரவாகக் கொள்ளப்படுகிறது.

வரிதாங்கு வருமானத்திற்கு வரிவீதத்தைப் பிரயோகித்த பின்பு எஞ்சி இருக்கும் தொகையில் யாதாயினும் வரிவரவைக் கழித்தால், நாம் வரியாகச் செலுத்தவேண்டிய தொகையைப் பெறலாம். ஈண்டு விவரிக்கப்பட்ட நெடிய முறி முறை (long form procedure) வரி ஆண்டின் இறுதியில் 'துப்புரவாக்கும்' (cleaning up) முறையேயாகும். ஒவ்வொரு ஆண்டின் இடையிலும் வரி செலுத்துவோர்களில் பலரின் வருமானத்திலும் பிடித்தம் செய்யப்படுகிறது. எஞ்சியுள்ளோர் ஆண்டின் தொடக்கத்திலேயே (உண்மையில் ஏப்ரல் 15க்குள்) தாம் செலுத்தவேண்டிய வரியை மதிப்பிடும் படியும், இவ்வாறு மதிப்பிடப்பட்ட வரியை அவ் வாண்டிலேயே நான்கு தவணைகளில் செலுத்தும்படியும் வேண்டப்படுகின்றனர்கள். ஆகவே, இஃது ஏற்கனவே பிடித்தம் செய்யப்பட்ட வரிக்குப் பின்னும், அல்லது மதிப்பிட்டுக் கட்டாமலும் இருந்தால் கருவூலத்திற்கு இன்னும் எவ்வளவு கட்ட வேண்டும் என்பதையும், அல்லது கருவூலத்திலிருந்து திருப்பித் தரவேண்டிய தொகை உளதா என்பதையும் நிர்ணயிப்பதற்கு நடப்பில் இருந்துவரும் ஒரு முறையாகும், நாம் மேலே விவரித்த இறுதிக் கணிப்பு (final calculation).

**கூட்டாட்சியின் தனியாள் வருமானவரியின் அடக்கம் (Coverage of the Federal Income Tax)** : இரண்டாம் உலகப்போர் தொடங்கிய சிறிது காலத்திற்குள் தான், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வருமானம் பெறுவோர்களின் பெரும்பகுதியினர் மீதும், கூட்டாட்சித் தனியாள் வருமானவரி விஸ்தரிக்கப்பட்டது. பணவீக்கத்தை எதிர்க்கும்

பொருட்டும் வருவாய் முடையை உத்தேசித்தும் இவ் விஸ்தரிப்பு மேற்கொள்ளப்பட்டது. போர்முடிந்த பின்பும் தொடர்ந்து வருவாய் முடை இருந்ததனுலும், தனியாள் வருமான வரி வாயிலாக வரிவிதிப்புச் செய்வதை யாவரும் விரும்புகின்றனர் என்பதை உணர்ந்ததனுலும், தனியாள் வருமானங்களில் கணிசமான அளவு ஏற்றம் ஏற்பட்டதனுலும், இவ் வரியைத் தாங்கியிருக்கும் தளம் தொடர்ந்து மேற்கொண்டும் விஸ்தரிக்கப்பட்டது.

## அட்டவணை 28

தனியாள் வருமானவரி அடக்கம், தெரிந்தெடுக்கப்பட்ட ஆண்டுகள், 1916—1957 (அ)

| ஆண்டு | மொத்த வரிவிவர அறிக்கைகள் (ஆயிரத்தில்) | வரிதாங்கு விவர அறிக்கைகள் (ஆயிரத்தில்) | மொத்த வரி (மில்லியன் டாலரில்) | ஒவ்வொரு வரி விவர அறிக்கைக்கும் உள்ள வரி (டாலரில்) | மக்கள் தொகையில் வரிசெலுத்துவோரின் வீதாச்சாரம் (%) |
|---|---|---|---|---|---|
| 1916 | | 429 | 173 | 403 | ·4 |
| 1919 | | 5,333 | 1,269 | 238 | 5 2 |
| 1929 | 4,137 | 4,044 | 1,002 | 248 | 3·3 |
| 1934 | 4,198 | 4,094 | 511 | 123 | 3·2 |
| 1939 | 7,715 | 7,633 | 928 | 122 | 5·5 |
| 1942 | 35,973 | 27,285 | 9,046 | 331 | 20·6 |
| 1945 | 49,965 | 42,651 | 17,050 | 400 | 30·8 |
| 1948 | 52,072 | 36,411 | 15,442 | 428 | 24·8 |
| 1957 | 59,825 | 46,865 | 34,394 | 575 | 36·5 |

(அ) கருவூலத்துறை வெளியிட்ட, வருமானப் புள்ளி விவரங்களிலிருந்து வரி விவர அறிக்கைகளில் அடங்கிய புள்ளித்தொகைகளும், செலுத்தப்பட்ட வரிகளின் தொகைகளும் எடுக்கப்பட்டன. கணிப்புக்குப் பயன்படுத்தப்பட்ட மக்கள் தொகை புள்ளி விவரங்கள் மக்கள் கணக்குத் (census) தொகைகளிலிருந்து எடுக்கப்பட்டன. 1929-க்கு முன்பு வரிதாங்காத வரி விவர அறிக்கைகள் (non-taxable returns) சமர்ப்பிக்கப்படவில்லை.

1916-க்கும் 1957-க்கும் இடைப்பட்ட, தெரிந்தெடுக்கப்பட்ட சில ஆண்டுகளுக்குத் தனியாள் வருமானவரி அடக்கத்தை எடுத்துக் காட்டும் வகையில் சில எடுகோள்களை 28ஆம் அட்டவணை தருகிறது. இரண்டாம் உலகப் போருக்கு முன்பு, கூட்டாட்சி தனியாள் வருமானவரி உண்மையிலேயே ஒரு 'செல்வரின் வரி'யாக (rich

man's tax) இருந்தது. ஆனால், 1948-ல் தொழிலாளர் படையினரில் 83 சத விகிதத்தினர் வரி விவர அறிக்கைகளைச் சமர்ப்பித்தனர். அவர்களில் 58 சதவிகிதத்தினர் தனியாள் வருமான வரிகளைச்[17] செலுத்தினர். 1916-ல் இருந்த வரி விவர அறிக்கைகளின் சராசரி வரியோடு, 1945ஆம், 1948ஆம் ஆண்டைய அறிக்கைகள் பெரிதும் ஒத்திருந்தாலும், உண்மையான வருமான அளவில் மிகக் கீழ்ப் படியில் உள்ள சராசரி ஆட்களால் இச் சராசரி வரி 1945-லும், 1948-லும் செலுத்தப்பட்டதென்பதை நாம் உணரவேண்டும்.

ஒரு குறிப்பிட்ட ஆண்டில் மக்கள் தொகையில் எவ்வளவு வீதாசாரத்தினர் வரிவிவர அறிக்கைகளைச் சமர்ப்பிக்கின்றார்கள் அல்லது வரிகளைச் செலுத்துகிறார்கள் என்பது தலையாயதான இரு மாறி வரும் காரணிகளைப் (variable factors) பொறுத்திருக்கிறது. அவையாவன : (1) தனியாள் வருமானத்தின் பருமன்; பங்கீட்டுத் தோரணி (pattern); (2) வரிவிதிப்பினின்று விலக்களிக்கப்பட்ட வருமானத் தொகையைப் பொறுத்த விதிகள் அடங்கிய வரிச் சட்டம். 1939ஆம் ஆண்டிலிருந்து வரி விவர அறிக்கைகளின் எண்ணிக்கை ஏறியதற்கு வருமானங்கள் ஏறியதும், தனியாட்களுக்கு அளிக்கப்பட்ட விலக்குகளைத் தீவிரமாகக் குறைத்ததும் ஆகிய இவை யிரண்டுமே காரணங்களாகும். 1929-லும், 1948-லும் வரிதாங்கு விவர அறிக்கைகள் குறைந்ததற்கு விலக்குகளை ஏற்றியதே காரணமாகும். (1932ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டம் விலக்குகளைக் குறைந்திருந்தபோதிலும்) 1934-ல் வரிதாங்கு விவர அறிக்கைகள் குறைந்ததற்கு வருமான மட்டங்கள் குறைந்ததே காரணமாகும்.

எவ்வளவு, மொத்த வரியாகச் செலுத்தப்படுகின்றது என்பது வருமான மட்டத்தையும், தனியாட்களுக்கு அளித்த விலக்குகளின் தொகையையும், சட்டப்படி பிரயோகிக்கவேண்டிய பட்டியல் வீதங்களையும் பொறுத்திருக்கிறது. அட்டவணையில் காட்டப்பட்ட இரண்டு தெரிந்தெடுத்த ஆண்டுகளிலும் (1934ஆம், 1948ஆம்) மொத்தம் செலுத்தப்பட்ட வரிகளில் கணிசமான சரிவு ஏற்பட்டது. 1948-ல் ஏற்பட்ட சரிவுக்குக் காரணம் வீதங்களைக் குறைத்ததும், விலக்குகளை உயர்த்தியதும் ஆகும். 1934-ல் ஏற்பட்ட சரிவுக்குக் காரணம் நாட்டு வருமானம் குறைந்ததே யாகும். இக் காலத்தில் ஒவ்வொரு வரி விவர அறிக்கையின் பேரிலும் சராசரி செலுத்தப்பட்ட வரித்தொகைகளிலிருந்து, இதிலடங்கிய மாறிகளை (variables) பற்றிய விவரம் ஒன்றும் தெரியவில்லை. பொதுவாகக் கூறுமிடத்து, தலா வரி விவர அறிக்கை ஒன்றுக்குக் கூடுதலாக வரி செலுத்தினால் வரிதாங்கு வருமானத்தின்மீது வீதங்கள் உயர்வாக இருக்கின்றன என்பது விளங்கும். 1916-லும்,[18] அதைவிடச்

சற்றுக் குறைவாக 1929-லும், ஒப்புமையில் உயர்ந்த வருமானங்களின் மீது வரிகளை குவித்ததனாலும், 1942, 1945, 1948, 1957ஆம் ஆண்டுகளில் பெரும்பான்மையான வருமானங்களின்மீது கடுமையான விதங்களில் வரிகளைத் திணித்ததாலும் இந் நிலை ஏற்பட்டிருக்கக் கூடும்.

தனியாள் வருமானத் தொகையில் எவ்வளவுக்கு விலக்கு அளிக்கப்படுகின்றது என்பதைப் பொறுத்தே வரிவிதிப்புக்கு ஆளான நபர்களின் எண் தலையாயதாக தீர்மானிக்கப்படுகிறது. வருமானப் பங்கீடு இருக்கும் தோரணையைப் பார்த்தால் (சட்டத்தில் விளக்கம் தரப்பட்டவாறு) கீழ்த்தர வருமான அடைப்புகளில் இருக்கும் ஆட்களில் மிகப் பெரும்பான்மையோர் நிகர வருமானம் பெறுகின்றனர். இதனால் தனியாள் விலக்குகளில் ஒப்புமையில் ஒரு சிறு மாறுதல் செய்தாலும், அதனால் வருமான வரிக்கு ஆளானவர்களின் எண்ணிக்கையில் பெருத்த மாறுதல் ஏற்படும் என்பது தெளிவு. 1947ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் நிலவிய நிலைமைகளில், விலக்குகளில் சிறிய மாறுதல்கள் செய்தாலும், அத்துடன் வருமான வரி அடக்க நிசழ்நிறத்திலும், வருமான வரி வருவாய்களிலும் மாறுதல்கள் ஏற்படும் என்பதை 29ஆம் அட்டவணை காட்டுகிறது.

வரிநோக்கங்களுக்காகப் பரந்து பட்ட வருமானங்களையெல்லாம் அடக்க வேண்டும் என்பதற்குப் பல காரணங்களைக் கூறலாம். கவர்ச்சி குறைந்த வேறு வரி நடவடிக்கைகளை விடுத்து தனியாள் வருமான வரிவிதிப்பைப் பரவலாக ஆக்கினால், இது மெய்யென்று உணரப்படும். நிலைப்பாட்டைப் பற்றி நாம் அறிந்த அளவிலும், பளுவுகளைப் பங்கீடு செய்வதில் கட்டுப்பாடு செய்யும் அளவிலும், வேறு வரிகளைக் கருவிகளாகக் கொள்வதைக் காட்டிலும், தனியாள் வருமானவரி மூலம் வரிவிதிப்பின் குறிக்கோள்களை நிறைவேற்றிக் கொள்வது எளிதாகும். நேர்முக வரிவிதிப்பில் இன்னொரு நன்மையும் இருக்கிறது. அதாவது, நேர்முக வரியில் வரி செலுத்துவது வரி செலுத்துவோரின் தனிப்பட்ட செயலாகும். தான் செலுத்தும் வரிகளை, வரிசெலுத்துவோர் உணர்ந்திருப்பதால், இஃது அவர்களை அரசாங்கத்தின் நிதி விவகாரங்களில் அக்கறை கொள்ளும் படிச் செய்கிறது. ஒரு பண்டத்தின் இனம் தெரியாத அமிசமாக வரியை மறைக்கும் வரித் திட்டங்களில் (மறைமுக வரிகளில்) இவ் விதமான நன்மை எதுவுமில்லை.

## மூலத்தில் வசூலித்தல் (Collection at the Source) [19]

வருமானத்தைப் பெறும்பொழுது வருமான வரியைச் செலுத்துதல் என்பது நெடுங்காலமாகவே பிரிட்டிஷ் முறையின்

# அட்டவணை 29

1947-ல் பல்வேறுபட்ட விலக்குகளின் கீழ், தனியாள் வருமானவரி செலுத்தியவர்களின் எண்ணிக்கை, அதனால் கிடைத்த வருவாய் ஆகியவற்றைப் பற்றிய மதிப்பீடு (அ)

| விலக்குகள் { a. ஒற்றைக் கட்டைகள் b. திருமணமான தம்பதிகள் c. கூடுதலாகச் சார்ந்திருப்பவர்கள் (ஒவ்வொருவரும்) } | 3000 டாலருக்குக் குறைந்த நிகர வருமானத்தை உடைய வரி செலுத்துவோர்களின் எண்ணிக்கை (000) | 3000 டாலருக்கு மேற்பட்ட நிகர வருமானத்தைஉடைய செலுத்துவோர்களின் எண்ணிக்கை (000) | வரி செலுத்துவோர்களின் மொத்த எண்ணிக்கை (000) | எதிர்பார்த்த மொத்த வருவாய் (மில்லியன் டாலரில்) |
|---|---|---|---|---|
| 1. a-500 டாலர்; b-1,000 டாலர்; c-500 டாலர் | 40,813·1 | 7,731·5 | 48,544·6 | 16,692·0 |
| 2. a-600 டாலர்; b-1,200 டாலர்; c-600 டாலர் | 36,232·4 | 7,584·4 | 43,816·7 | 15,046·1 |
| 3. a-700 டாலர்; b-1,400 டாலர்; c-700 டாலர் | 30,748·6 | 7,268·4 | 38,017·0 | 13,658·3 |
| 4. a-800 டாலர்; b-1,600 டாலர்; c-400 டாலர் | 31,811·4 | 7,680·2 | 39,491·6 | 13,383·2 |

(அ) 1947-ல், 1945-ஆம் ஆண்டைய வருவாய்ச் சட்டத்தின் வரி வீதங்களே அமலில் இருந்தன என்றும், நாட்டு வருமானம் 166 பில்லியன் டாலராக இருந்தது என்றும் கொண்டு இம் மதிப்பீடுகள் செய்யப்பட்டன. இம் மதிப்பீடு கருவூலத்தின் செயலாளரின் சான்றுடன் காணப்பட்ட ஜி அட்டவணை (Table G) யைத் தழுவியது. தனியாள் வருமான வரிக்குறைப்பு. கேள்விகள் (Hearings), வழிவகைகள்பற்றிய பிரதிநிதி சபைக்குழு, எண்பதாவது காங்கிரஸ், முதல் அமர்வு (First session), 1947, பக்கம் 32.

ஓர் இன்றியமையாத கூறாக இருந்து வந்திருக்கிறது. 1913-ல் தற்கால வருமானவரி தொடங்கப்பெற்ற காலத்திலிருந்து, ஏறக்குறைய, மூலத்தில் வசூல் செய்வது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டாட்சியால் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. தனியாள் வருமான வரிகளை விதிக்கும் மாநிலங்களில், ஒரு சிலவே மூலத்தில் வரி வசூலிப்பதைக் கையாளுகின்றன. பிரிட்டிஷ் திட்டம் 1803-லிருந்து தொடங்குகிறது. பிரிட்டனில் முதலீட்டு வருமானத்திற்கும், அர்சாங்கம், இருப்புப் பாதைகள் இவற்றினின்று கிடைக்கும் சம்பளத்திற்கும் இத் திட்டம் பிரயோகிக்கப்பட்டது. [20] யார் வருமானத்தைப் பட்டுவாடா செய்கின்றார்களோ அவர்களே, வருமானத்தைத் தரும்பொழுது, வரிக்காகப் பிடித்தம் செய்தலைத் தான் மூலத்தில் வசூலித்தல் என்கின்றோம். இங்ஙனமாக வருமானத்தைப் பெறும்பொழுதே வரிப் பிடித்தம் செய்யப்படுகிறது. இதன் பிறகு வருமானத்தைப் பெறுவோருக்கு இவ்வாறு வரி செலுத்தப்பட்ட வருமானத்திற்குத் தனியாள் வரிவிதிப்பினின்றும் விலக்களிக்கப்படுகிறது. பல சிறிய தனியாள் வரிவிவர அறிக்கைகளைத் தவிர்ப்பதும், ஒப்புமையில் சில மூலங்களிலிருந்து வரிவசூல் செய்வதும் தான் இத் திட்டத்தின் குறிக்கோளாகும்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 1913-ல் விதிக்கப்பட்ட கூட்டாட்சி வருமான வரி, மூலத்திலேயே வரியை வசூல் செய்வதற்கு வகை செய்தது. இதற்கு இரு முறைகளைக் கையாண்டது. 3,000 டாலருக்கு மேற்பட்டுத் தனியாள் ஒருவருக்குக் கூலி, சம்பளம், வட்டி முதலானவை வாயிலாக (இலாப ஈவுச் செலுத்துகைகளைத் தவிர்த்து)த் தரப்படும் தொகையிலிருந்து சாதாரண வரியான 1 சதவிகிதத்தைப் பிடித்தம் செய்து கொள்ளும்படித் தனியாளும், நிறுவனமும் அரசாங்கத்தால் வேண்டிக்கொள்ளப்பட்டனர்; இதுவே முதலாவது முறையாகும். அவ்விதம் பெற்ற வருமானத்தின் மீது சாதாரண வரியான 1 சதவிகிதம் விதிக்கப்படவில்லை. அவருடைய நிகர வருமானம் மிகப் பெருத்த அளவில் இருந்தால், அவர் ஒரு மேல்வரி (sur tax) யைச் செலுத்தவேண்டும். 1 சதவிகிதக் கார்ப்பரேஷன் நிகரவருமான வரி, மூலத்தில் வரியை வசூலிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது இரண்டாவது முறையாகும். கார்ப்பரேஷன் இவ் வரியைத் தன்னுடைய நிகர வருமானத்திலிருந்து செலுத்தியது. தனியாட்கள் இலாப ஈவுத் தொகைகளாகப் பெற்ற வருமானத்திற்கு 1 சதவிகித சாதாரண வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது. இங்ஙனமாகப் பல நபர்கள் தங்கள் சாதாரண வரி முழுமையுமோ அல்லது அவற்றின் ஒரு பகுதியையோ வருவாயைப் பெறும் பொழுதே செலுத்தினர். தம் பண்டங்கள் அல்லது சேவைகளை விற்பதன் வாயிலாக வருமானத்தைப்

பெறும் வாணிப நிறுவனங்கள் சாதாரண வரிகளைச் செலுத்த வேண்டியதே. ஏனெனில் தம் மூலத்தில் அவற்றைப் பிடித்தம் செய்வதற்கு யாதொரு வழியும் இல்லை.

இங்ஙனம் பரவலாக மூலத்தில் வசூலித்தல் நெடுங்காலமாகத் தொடர்ந்திருக்கவில்லை. நாட்டில் குடியிராத அந்நியர்களுக்குச் செலுத்தப்படும் தொகைகளைத் தவிர, வேறு கூலி, சம்பளம், வட்டி முதலானவற்றைத் (இலாப ஈவுகளைத் 'தவிர்த்து) தரு பவர்கள் வரியை மூலத்தில் பிடித்தம் செய்ய வேண்டியதில்லை என்று 1917-ல் செய்யப்பட்ட ஒரு திருத்தம் கூறியது. இவ்வாறான வருமானங்களைப் பெறுவோர் சாதாரண வரியைச் செலுத்த வேண்டியதாயிற்று. தனியாட்கள் பலருக்கும் வருமானங்களைக் கொடுக்கும் பொழுதே மூலத்தில் வரி வசூலிப்பதைக் கைவிட்ட பின்பு, காங்கிரஸ் 1918ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட ஒரு சட்டத் தின் வாயிலாக 'மூலத்தில் தகவல் தெரிவித்தலை' (information at the source) மேற்கொண்டது. இச் சட்டத்தின்படி யாராருக்குக் கூலி, சம்பளம், வட்டி முதலானவை பெருந் தொகைகளாகச் செலுத்தப்படுகின்றனவோ அவர்கள் அவ்வாறு செலுத்தும் தொகைகளையும், அத் தொகைகளைப் பெறுவோர்களின் பெயர்களை யும் அரசாங்கத்திற்குத் தரவேண்டும். இத் திட்டத்தின்படி கிடைக்கும் தகவலைக் கொண்டு அரசாங்கம் தனியாட்கள் அனுப் பும் வரிவிவர அறிக்கைகளை ஒப்பிட்டுச் சரிபார்க்க முடியும். 1942 வரை மூலத்தில் வசூல் செய்வதற்குப் (கார்ப்பரேஷன் இலாப ஈவு களைத் தவிர்த்து) பதிலியாக மூலத்தில் தகவல் தெரிவித்தல் நீடித்திருந்தது.

1918ஆம் ஆண்டைய சட்டம் இயற்றப்பட்டதிலிருந்து, தனி யாள் சாதாரண வரியை மூலத்தில் வசூலிப்பதற்குக் கார்ப்ப ரேஷன் வருமான வரியை ஒரு வாயிலாகப் பயன்படுத்தியது நின்றது. இச் சட்டத்தின்படித் தனியாட்கள் கையில் இருந்த இலாப ஈவுகளுக்குச் சாதாரண வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டது. கார்ப்பரேஷன் வருமான வரி வாயிலாக இவ் வரி கார்ப்பரேஷனிட மிருந்து வசூலிக்கப்பட்டதே இதற்குக் காரணமாகும். இருப்பி னும் தனியாள் சாதாரண வரி வீதத்துடன் கார்ப்பரேஷன் வரி வீதம் ஒத்திருந்தால்தான், கார்ப்பரேஷன் வரியை, தனியாள் வரு மான வரியை வசூலிப்பதற்கு ஏற்ற கருவியாக ஒப்புக்கொள்ள லாம். இவ் இரு வரி வீதங்களிடையே ஏற்றத்தாழ்வுகள் இருக்கு மானால், ஏனைய வருமானங்களுக்குப் பிரயோகிப்பதுபோலன்றி, இலாப ஈவு வருமானங்களுக்கு வேறுபட்ட வரி வீதங்களை பிரயோ கிக்க வேண்டி இருக்கின்றது. 1918ஆம் ஆண்டைய சட்டம் கார்ப்ப

ரேஷன் வரிவீதத்தை 12 சதவிகிதம் என்று நிர்ணயித்தது. தனியாள் சாதாரண வரிவீதத்தில் ஒரு தோராயமான வளர்வீதம் புகுத்தப்பட்டது. இவ் வீதம் மொத்த வரிதாங்கு வருமானத்தின் முதல் 4,000 டாலர் மீது 6 சதவிகிதமாகவும், 4,000 டாலருக்கு மேற்பட்ட வருமானத்தின்மீது 12 சதவிகிதமாகவும் விதிக்கப்பட்டது. இங்ஙனமாக 4,000 டாலருக்கு மேற்படாத மொத்த வரிதாங்கு வருமானத்தின் ஒரு கூருக இலாப ஈவு வருமானம் கொள்ளப்பட்டு (கார்ப்பரேஷன் வாயிலாக) 12 சதவிகிதம் வரி விதிக்கப்பட்டது. வேறு வருமான இனங்கள் மொத்தத்தில் இதே அளவு இருந்தாலும், அவற்றின் பேரில் இவ் வரி வீதத்தில் பாதிப் பங்கே விதிக்கப்பட்டது. இங்ஙனமாகக் கார்ப்பரேஷன் வரி வீதத்திற்கும், தனியாள் வருமானவரி வீதத்திற்கும் வேறுபாடு ஏற்பட்டதனுல் பல திருத்தங்கள் ஒன்றன்பின் ஒன்ருகச் செய்யப்பட்டு, இறுதியில் கார்ப்பரேஷன் வரியை மூலத்தில் வசூலிப்பதற்கு ஏற்ற வாயிலாக எழுந்த பூர்வத்தில் ஏற்பட்ட கருத்து மறைந்து ஒழிந்தது. 1936ஆம் ஆண்டையச் சட்டம் பங்கீடு செய்யப்பட்ட இலாப ஈவுகளுக்கு விலக்கு அளிக்காமலேயே கார்ப்பரேஷன் வரியை விதித்தது. வரிவீதம் வளர்வீதமாக இருந்தது. இவ் வீதங்கள் 8-லிருந்து 15 சதவிகிதம் வரை சென்றன (இவ்வாருன வரிவிலக்கு ஒருக்காலும் அளிக்கப்படவில்லை). அதே போழ்து தனியாட்கள் பெற்ற இலாப ஈவுகள் பேரில் சாதாரண வரியும் (4 சத விகிதம்), மேல் வரியும் (4-லிருந்து 7 சதவிகிதம் வரை) ஆக இரண்டு வரிகளும் விதிக்கப்பட்டன. இங்ஙனமாக இலாபஈவு வருமானங்களைக் கார்ப்பரேஷன் வருமானமாகக் கருதிக் கார்ப்பரேஷன் வரியும், தனியாள் வருமானமாகக் கருதித் தனியாள் வரிகளும் செலுத்தும்படி ஆயிற்று. ஆனுல் பிற வருமான இனங்களைத் தனியாட்கள் பெற்றபொழுதுதான் அவை வரிகளுக்கு உள்ளாயின. ஆகவே, இச் சட்டம் இயற்றப்பட்டதன் வாயிலாகத் தனியாள் வரிகளை மூலத்திலேயே வசூல் செய்யும் பழைய முறை முற்றும் மறைந்தொழிந்தது எனலாம். தனியாள் வருமானத்தினின்றும், கார்ப்பரேஷன் வருமானம் தனியானதென்றும், வேருனதென்றும் கருதப்பட்டது.

மூலத்தில் வசூல் செய்வதற்கான முதற் காரணங்கள் முற்றும் ஆதியில் ஆட்சி சம்பந்தப்பட்டவையே. தனியாள் வரிவிவர அறிக்கைகளின் எண்ணிக்கையை மிகக் குறைந்த அளவுக்குக் குறைப்பதும், வரியின் பெரும் பகுதியையும் ஒரு மைய பொறுப்பதிகாரியின் வாயிலாக வசூலிப்பதும்தான் இக் காரணங்கள். அதே வமயம் வருமானத்தைப் பெற்றபோதே அதில் ஓரளவு வரியாக வசூலிப்பதில், அநுகூலமும் இருந்தது. இதனுல் அரசாங்கத்திற்கும், வரி செலுத்துவோருக்கும் ஒருங்கே நன்மை ஏற்பட்டது. ஆயினும்,வருமானவரிப்பளுவுகள்

கடுமையாக இல்லாத பொழுது, இவ் வநுகூலங்கள் மிகச் சொற்பமே யாகும். 1936-ல் மூலத்தில் வரி வசூலிப்பதைக் கைவிட்டதற்குக் காரணங்கள் பலவாகும், முதற்கண் வீதாசார வீதங்களின்கீழ் தான் மூலத்தில் வரியை வசூலித்தல் எளிதாகவும், வரிசெலுத்து வோரின்மீது ஆட்சிப் பளு அதிகம் அழுந்தாமலும் இருக்கும். இங்ஙனமாகச் சாதாரண வரியைப் பொறுத்த வரிவிர அறிக்கை களின் எண்ணிக்கை இத் திட்டத்தினுல் மிகவும் குறைந்தது. பெருத்த அளவில் வருமானம் பெற்ற தனியாட்கள் ஒரு மேல் வரி விவர அறிக்கையைச் சமர்ப்பிக்கும்படி ஆயிற்று.. மேலும், கார்ப்ப ரேஷன் இலாப ஈவுகளைத் தவிர்த்த பிற வருமானங்கள் விஷயத்தில் வசூல் செய்த மூலங்கள் பரவலாகவும், குறைந்த எண்ணிக்கை யுடைய் வரிவிவர அறிக்கைகளால் ஏற்பட்ட அநுகூலங்கள் சில வாகவும் இருந்தன. மூலத்தில் வசூலிப்பதனுல் மொத்த ஆட்சிப் பிரச்சினை சுளுவாயிற்று என்பது ஐயத்திற்கு இடமாயிற்று. இலாப ஈவுகளின்மீது மூலத்தில் வரி விதிப்பைப் பொறுத்த வரை யில், பேதங்காட்டுகையை நாம் பொருட்படுத்தாவிட்டாலும், கார்ப்பரேஷன் வருமானம் ஏராளமான வருவாயை ஈனும் பல கூடுதல் வரிகளைப் போடுவதற்கு இலகுவில் வாய்ப்பு அளித்ததே, மூலத்தில்வ சூலித்தல் கைவிடப்பட்டதற்குக் காரணமேயன்றி வேறொன்றுமில்லை.

இரண்டாம் உலகப் போரின் தொடக்க ஆண்டுகளில் நிலவிய நிலைகளில், பரவலான அடிப்படையில் மூலத்தில் வசூலிப்பதைப் புகுத்துவது இன்றியமையாததாயிற்று. நாம் 28ஆவது அட்டவணை யில் பார்த்தவாறு தனியாள் விலக்குகளைத் தீவிரமாகக் குறைத்ததன் வாயிலாக வருமானவரி செலுத்துவோரின் எண்ணிக்கை மிகவும் பெருகியது. 1942-ல் வரிவிவர அறிக்கைகளின் எண் ணிக்கை 1939-ல் இருந்ததைவிட ஐந்து மடங்கு அதிகமாகப் பெருகியது. இதனுல் பல சிறிய வருமானங்களைப் பெறுவோர்களும் வரிவிவர அறிக்கைகளைச் செலுத்தும்படி ஆயிற்று. இதன் விளைவாக வரிகொடாது தப்பித்தலும் பரவலாக வளர ஆரம்பித்தது. வரி கொடாது தப்பித்தலை வழக்கத்திற்கு மாறுன ஆட்சி உழைப்பின் மூலமும், பெருத்த நிதிச் செலவின் மூலமுமே கட்டுப்படுத்தியிருக்க முடியும். யாராருக்கு வரிசெலுத்தாது தப்பிப்பதற்குக் காரண மில்லையோ அவர்களையே வரியைச் செலுத்தச் சொல்லுதல் யாவரும் விரும்புவது. ஏனெனில், அவர்கள் வருமானத்தைச் செலுத்துபவர்களே தவிர வருமானத்தைப் பெறுபவர்களல்லர். மேலும் வருமான வரியைப் பரவலாக்கியதனுல் முதன் முதலாகப் பலர் வருமானவரி செலுத்தும்படி ஆயிற்று. அவர்கள் வருமான வரி விதிப்பு முறைகளைப் பற்றி ஒன்றும் அறிந்திராத அப்பாவிகளாய்

இருந்தார்கள். அவர்களுடைய தனியாள் வருமான ஏடுகள் (records) முற்றும் திருப்திகரமாக இருக்கவில்லை. வரிவிவர அறிக்கை முறியின் துணை கொண்டும், அவர்களில் பலர் தாங்கள் செலுத்த வேண்டிய வரிகளைக் கச்சிதமாகக் கணக்கிடுவதில் பெரிதும் சங்கடம் அடைந்திருப்பார்கள். இங்ஙனமாக மூலத்தில் வசூல் செய்வதால் ஆட்சித் துறையில் பெருத்த அநுகூலங்கள் ஏற்பட்டன.

போர்க்காலத்தில் மூலத்தில் வரி வசூலித்ததனால், வரி செலுத்துவோர்கள், அரசாங்கத்தார் இருவருக்குமே பிற அநுகூலங்களும் ஏற்பட்டன. (1943ஆம்) ஆண்டைய நடப்புவரிச் செலுத்துகைகளின் சட்டம் (Current tax payments Act) இயற்றப் பட்டதற்கு முன்பு, முந்திய காலக் குறிப்பேட்டு ஆண்டின் (calender year) வருமானத்தின் பேரிலான வருமான வரிவிவர அறிக்கையை மார்ச்சு 15-ல் அனுப்பவேண்டும் என்றிருந்தது. அதன் பின்பு மார்ச்சு 15 தொடங்கி ஒவ்வொரு கால் ஆண்டும் கழித்து நான்கு சமமான தவணைகளில் வரியைச் செலுத்தலாம். இதனுல் ஒரு குறிப்பிட்ட ஆண்டு வருமானத்தின்பேரில் போடப்பட்ட வரியை, அதற்கு அடுத்த ஆண்டில் செலுத்தும்படி நேர்ந்தது. இதனுல் போர்க்காலத்தில் மூன்று பெரிய பிரதிகூலங்கள் ஏற்பட்டன. இது ஒப்புமையில் கூடுதலான வீதங்களில் பரவலாக வரி விதிக்கப்பட்டதும், அதனுல் நபர்கள் ஒப்புமையில் அதிக ரொக்கத் தொகைகளை மூன்று திங்களுக்கு ஒருமுறை குறிப்பிட்ட நாளில் செலுத்தும்படியும் நேர்ந்தது முதலாவது பிரதிகூலமாகும். ஒரு குறிப்பிட்ட ஆண்டின் வருமானத்தின் பேரில் போடப்பட்ட வரி, நடைமுறையில் அடுத்து வரும் ஆண்டின் வருமானத்திலிருந்தே செலுத்தப்பட்டது. ஏனெனில், சிலரே தாம் வரிசெலுத்த வேண்டிய தொகைகளை முன்னரே எதிர்பார்த்து அதற்கீடான தொகையைச் சேமித்து வரியைச் செலுத்துவதற்கு ஆயத்தமாக வைத்திருந்தனர். இதனுல் பழைய திட்டத்தில் காலம் தாழ்த்திச் செலுத்தப்பட்ட கடுமையான வரிவிதிப்பினுல் கடுமையான துன்பமும், ஒருவேளை கூடுதலான அளவு வரியிலிருந்து தப்பித்தலும் ஏற்பட்டது எனலாம். ஒரே சீராக வருமானம் இல்லாதவர்கள் விஷயத்தில் இது சிறப்பாகப் பொருந்தும். இவ்விதமாகச் சம்பளம் பட்டுவாடா செய்யப்படும் தினங்களில் சிறுசிறு தொகைகளாக வரியை மூலத்திலேயே வசூல் செய்வது வரிசெலுத்துவோருக்குச் செய்த ஒரு சேவையாகும். ஒற்றை வருடாந்திர செலுத்துகைகளினுல் அரசாங்கம் இரண்டாவது பெரிய பிரதிகூலத்திற்கு உள்ளாகிறது. சட்டம் இயற்றப்பட்டு ஓராண்டு கழிந்த பின்பே தோராயமாக அரசாங்கம் தன்னுடைய கடுமையான வரிகளிலிருந்து வருவாய்விவர அறிக்கைகளைப் பெறமுடியும். நடப்பு வரி

செலுத்துகை முறையின்கீழ் அரசாங்கத்திற்குக் கடுமையான வரிகளி லிருந்து வருவாய் உடனடியாகக் கிடைக்கிறது. அதுவுமன்றி அவற்றினுல் அரசாங்கத்திற்கு உடனடியாக ஒரு பெரிய நன்மையும் உண்டு.

காலம் தாழ்த்து வரி செலுத்தப்பட்ட பழைய முறையைத் தொடர்ந்து பயன்படுத்தியதால் மூன்ருவது பிரதிகூலம் ஒன்றும் விளையக்கூடும். போர்க் காலத்தில் பணவீக்கத்திற்கு எதிரிடையாக வரியைப் பயன்படுத்துவது இன்றியமையாதது. காலம் தாழ்த்து வரி செலுத்தப்பட்டதனுல் வரி, பணவீக்கத்திற்கு எதிரியாகச் செயற்பட முடியாதுபோயிற்று. பொதுமக்கள் செலவழிப் பதற்கு வைத்திருக்கும் நிதிகளில் ஒரு பகுதியின்மீது கடுமையான வரிகள் விதிப்பதன் வாயிலாக, விலைகளை மேல்நோக்கி அனுப்பும் அழுத்தம் (pressure) குறைந்தது. நாட்டின் வருமானம் விரைவாக ஏறிக்கொண்டும், சிவிலியன்கள் பயன்படுத்தும் நுகர்வுப் பண்டங்களின் பற்ருக்குறை அதிகரித்துக் கொண்டும் இருந்த ஒரு காலத்தில், மார்க்கட்டிலிருந்து மிகை வருமானங்களை அவை ஈட்டப்பட்டவுடனேயே அகற்றவேண்டியது அவசியம் என்பது தெளிவு.

நடப்பு வரி செலுத்துகைத் திட்டத்தை மேற்கொள்ளுவதால், சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் ஆதாயங்கள் கிடைக்கின்றன என் பதை ஏற்றுக் கொண்டால், இத் திட்டத்தில் எவ்வாறு மூலத்தில் வசூலித்தலும் அடங்கும் என்ற பிரச்சினை எழுகிறது. இதற்கான காரணங்கள் ஆட்சி சம்பந்தப்பட்டவையே. வாரந்தோறும் வருமா னங்களைப் பெறுபவர்கள் வாராந்திர வரி விவர அறிக்கைகளைச் சமர்ப்பித்தால், அதனுல் வரி செலுத்துவோருக்கும், கருவூலத்திற் கும் அச்சுறுத்தக்கூடிய அளவுக்குப் பளு ஏற்படலாம். இத் திட்டத் தைச் சுளுவான முறையில் ஆட்சி செய்ய வேண்டுமென்ருல் வரியை மூலத்திலேயே வசூலிக்கவேண்டும். வருமான காலத்தின் இறுதியில், வேலைக்கு அமர்த்துவோர் வேலைக்கு அமர்ந்தவர்களிட மிருந்து பிடித்தம் செய்து வைத்த வரிகளைப்பற்றி ஓர் அறிக்கை தரும்படிச் செய்யவேண்டும்.

நடப்பு வரிகளை மூலத்தில் வசூல் செய்யும் திட்டத்தைத் தொடங்குவதில் சில சங்கடங்களும் பிரதிகூலங்களும் இல்லாமல் இல்லை. இவற்றில் தலையாய சங்கடங்கள் வருமாறு : (1) பழைய காலம்தாழ்த்துச் செலுத்தப்படும் திட்டத்தின்கீழ், முந்தைய ஆண்டின் வருமானத்தின்பேரில், செலுத்துகைகள் நடந்து கொண்டிருந்தபொழுது, எந்த ஓர் ஆண்டிலும் நடப்பு வரி செலுத்துகைகளை ஆரம்பிப்பதில் உள்ள சங்கடம்; (2) பல்வேறு

பட்ட மூலங்களிலிருந்து கிடைக்கும் வருமானங்களின் பேரில் வளர்வீத வீதங்களைப் பிரயோகிப்பதில் உள்ள சங்கடம்; (3) சில மூலங்களிலிருந்து பெற்ற பெருந் தொகைகளுக்கன்றி, பல மூலங்களிலிருந்து பெற்ற சிறு தொகைகளுக்கு நடப்பு வசூல் ஏற்பாடுகளைச் செய்வதில் உள்ள சங்கடம். நாம் இச் சங்கடங்களையும், இவற்றைத் தீர்ப்பதற்கான முறைகளையும் இனி ஆராய்வோம்.

1943-ல் நடப்பு வரிசெலுத்தும் திட்டம் தொடங்கப்பட்ட காலே, வரி செலுத்துவோர்களில் பலர் ஏற்கனவே தாங்கள் 1942-ல் பெற்ற வருமானங்களின் மீதான வரியில ஒன்று அல்லது இரண்டு காலாண்டுத் தவணைகளைச் செலுத்தியிருந்தனர். எல்லோருமே 1943 மார்ச்சு 15-ல் தாங்கள் 1942-க்குச் செலுத்த வேண்டிய வரிகள் அனைத்தையும் மொத்தமாகச் செலுத்தியிருப்பார்களேயாகில், 1943 ஆம் ஆண்டில் பிற்பகுதியில் நடப்பு வரிசெலுத்தும் திட்டத்தை யாதொரு சிரமமுமின்றித் தொடங்கியிருக்கலாம். ஆனல், தனியாட்கள் பலரும் தாம் 1942-ல் காலாண்டுக்குக் கட்டவேண்டிய வரிகளை 1943ஆம் ஆண்டைய வருமானத்திலிருந்து செலுத்துவதாகத் திட்டமிட்டனர். 1942ஆம் ஆண்டு வரி, 1943ஆம் ஆண்டு நடப்பு வரிகள், இரண்டையும் ஒருங்கே சேர்த்து 1943ஆம் ஆண்டைய வருமானத்திலிருந்து செலுத்தவேண்டும் எனக் கோருவது தாங்கமுடியாத தொல்லையாகும். இவ் விக்கட்டுக்கு இரு தீர்வுகளே சாத்தியம். 1943ஆம் ஆண்டு மார்ச் 15-ல் செலுத்தப்பட்ட 1942க்குரிய முதல் காலாண்டு செலுத்துகையைத் தவிர, 1942ஆம் ஆண்டுக்குரிய தனியாள் வருமான வரியில் பிற பகுதிகளைச் செலுத்தவேண்டாம் என்று மன்னிப்பது முதல் தீர்வாகும். நடப்பு வரிசெலுத்தும் திட்டத்தை ஒத்திப்போடுவது (உண்மையில் கைவிடுவது) மற்றொரு தீர்வாகும். நடப்புவரி செலுத்தும் திட்டத்தில் பெருத்த அநுகூலங்கள் இருந்ததால் முதல் தீர்வை மேற்கொள்ளுவது அவசியமாயிற்று. 1942ஆம் ஆண்டைய வருமானத்தின்பேரில் விதிக்கப்பட்ட வரிகளில் முதல் காலாண்டுத் தவணையைத் தவிர்த்து பிற தவணைகள் தள்ளுபடி செய்யப்பட்டன. ஏற்கனவே தவணைகள் பூராவும் செலுத்தப்பட்டிருந்தால் அவை திருப்பித் தரப்பட்டன. இவ்வாறு 1942ஆம் ஆண்டு வருமானங்களின் பேரில் கிடைக்கக்கூடிய வருவாயில் பெரும்பகுதியைக் கருவூலம் இழந்தது. ஆயினும், பழைய முறையில் உள்ளதைவிட 1943-ல் தனியாள் வருமானவரி வரவுகள் கூடுதலாகவே இருந்தன.

பிடித்தம் செய்யப்பட்ட வரிகளின்மீது (அதாவது மூலத்தில் வசூலிக்கப்பட்ட வரிகள்) வளர்வீத வீதங்களைப் பிரயோகிப்பதில்

இதற்கு முன் தோன்ருத பல சிக்கல்கள் எழுந்தன. சாதாரண வீதாசார வரியின் கீழேயே ஏற்கனவே மூலத்தில் வரிவசூல் செய்தமையை வாசகர் நினைவு கூர்வார் என்று எண்ணுகிருேம். ஆனுல், ஒரு வளர்வீத வரியின்கீழ் வருமானம் பெறுவோர்களுக்கு அநுமதிக்கப்பட்ட சரியான விலக்குகளேயும், பிடித்தங்களேயும், பிடித்தம் செய்வோர் பிரயோகிக்கவேண்டியது இன்றியமையாததாயிற்று. வரியைப் பிடித்தம் செய்வது சம்பளங்களுக்கும், கூலிகளுக்கும் பிரயோகிக்கப்பட்டது. தொழிலாளி தான் வேலை அமர்வோரிடம் பிடித்தம் செய்யவேண்டிய (தனியாள்) விலக்குகளைப் பற்றிய அறிக்கைகளைத் தரவேண்டும் எனக் கோரப்பட்டது. சம்பளக் காலத்திற்கான பிடித்தம்செய்யும் வரித்தொகை, பிடித்தம் செய்யும் அட்டவணைகள்மூலம் நிர்ணயிக்கப்பட்டது. பொதுவாக வருமானம் பெறுவோர்களுக்குத் தரமானது எனக் கருதப்பட்ட மொத்த வருமானத்தினின்றும் மொத்தமாகப் (round sum) பிடித்தம் செய்யுமாறு சம்பளப் பட்டுவாடா செய்பவர்கள் அநுமதிக்கப்பட்டனர். ஆகவே, ஆண்டின் இறுதியில், அவ் வாண்டிற்காகக் கூலியிலாவது, சம்பளத்திலாவது பிடித்தம் செய்யப்படும் மொத்த வரிகள், ஓர் ஆண்டை அடிப்படையாகக் கொண்டு செலுத்த வேண்டிய வரியைக் கணக்கிட்ட தொகைக்குக் கிட்டத்தட்டச் சரியாகவிருக்கும்; ஆனுல் முழுதும் சரியாக விருக்காது. பிடித்தம் செய்யும் அட்டவணையில் வகை செய்யப்பட்ட தரமான பிடித்தங்களிலிருந்து தனிப்பட்ட வரிசெலுத்துவோரின் பிடித்தங்கள் மாறியிருக்கலாம் அல்லது வரிசெலுத்துவோர் ஆண்டொன்றின் ஒரு பகுதிக்கே மொத்த வருமானத்தைப் பெற்றிருக்கலாம். அவ் வருமானம் தனியாள் வரிவிலக்குத் தொகைக்கும் குறைவாக இருப்பதால் அவர் வரி செலுத்தாதிருக்கலாம். ஆனுல், ஆண்டின் எஞ்சிய பகுதியில் அவர் பெற்ற வருமானம் வரியைப் பிடித்தம் செய்யும் அளவுக்குக் கூடியிருக்கலாம். ஆகவே, ஆண்டு முழுமைக்கும், அவருடைய வருமானத்தை வருடாந்திர அடிப்படையில் கணக்கிட்டால், அவருக்குப் பிடித்தம் செய்ததைவிடக் குறைந்த மொத்த வரியையே அவர் செலுத்தியிருப்பார். அடுத்த மார்ச்சு 15-க்குள் அவ் வாண்டைய முழு வருமானத்தையும் அடக்கிய வரிவிவர அறிக்கையை அவர் தரும்படிக்கோருவதே இப் பிரச்சினைக்கான தீர்வாகும். அவர் செலுத்தவேண்டிய வரியையும், வருடாந்தர அடிப்படையிலேயே கணக்கிடவேண்டும். அவ்விதமாகக் கணக்கிடப்பட்ட வரி, அவருடைய பிடித்த ரசீதுகளில் காட்டப்பட்டவாறு, பிடித்தம் செய்யப்பட்ட மொத்த வரியைக் காட்டிலும் கூடுதலாக இருக்குமானுல், அவர் இரண்டுக்குமுள்ள வித்தியாசத்தை மொத்தமாக ஒரே தொகையாக அரசாங்கத்திற்குச் செலுத்திஞர்.

பிடித்தம் செய்யப்பட்ட வரிகளைவிட இவ்வாறு கணக்கிடப்பட்ட மொத்த வருடாந்திர வரி குறைவாக விருக்குமானால், அரசாங்கம் இரண்டுக்குமுள்ள வித்தியாசத்தை அவருக்குத் திருப்பித் தரவேண்டும். இவ்விதமாக இத் திட்டதின் வாயிலாக நடப்பில் வரித்தொகை தோராயமாக வசூலிக்கப்படுகிறது. ஏதாவது வித்தியாசம் இருந்தால் அது ஆண்டின் இறுதியில் நிரவப்படுகிறது.

நடப்புவரி செலுத்துகைகளில் சில வருமானங்களுக்குப் பிடித்தம் செய்யும் திட்டத்தைப் பிரயோகிப்பது சாத்தியமில்லாமல் இருக்கலாம். இது மூன்றுவது சங்கடமாகும். வட்டி, இலாப ஈவுகள், வாரம், ராயல்டி இவையும், மார்க்கட்டில் உள்ள பலவகை யான வாங்குவோர்களுக்குப் பண்டங்களையும் சேவைகளையும் விற் பதன் வாயிலாகப் படைக்கப்படும் வருவாய்களும் இவ் வருமானங்க ளில் அடங்கும். ஒரு தீவிர (extreme) உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். ஒரு டஜன் முட்டைகளை வாங்குவதன் மூலமாக மூலையில் மளிகைக் கடை வைத்திருக்கும் தனியாளின் வருமானத் தின் பேரில் விதிக்கப்படும் வருமான வரியைப் பிடித்தம் செய்து கொள்ளும்படி நுகர்வோரைக் கோருவது காரிய சாத்தியமற்றது என்பது திண்ணம். இவ்விதத் திட்டத்தை ஆட்சியில் கொணரு வது சாத்தியமானாலும், இவற்றுக்கான பிடித்த வீதங்கள் அடங்கிய தரமான அட்டவணைகளை, இலாப ஈவு, வட்டி இதைப் போன்ற வருமானங்களைப் பொறுத்த வரையில், நிறுவுவது முடியாத காரியம். மூலத்தில் பிடிப்பதைவிட வருமானத்தைப் பற்றி அறிக்கை சமர்ப்பித்து வரியைச் செலுத்தும் வருமானத்தைப் பெறுவோரின் எண்ணிக்கை குறைவாகவே இருக்கும். மேலும் இவ்வித வருமானங்கள் பலதிறப்பட்ட மூலங்களிலிருந்து, வருமானம் செலுத்துவோருக்குக் கிடைக்கின்றன. ஆகவே இவ் வருமான இனங்கள் பிடித்த திட்டத்திலிருந்து ஒதுக்கப்பட்டு, இவ் வருமானங்களைப் பெறுவோர்கள் கைகளுக்கு இவை கிட்டிய வுடனேயே வரிவிதிக்கப்படுகிறது. அவ்வாறன நிலையில் இவ் வருமானங்களின்மீது நடப்புவரி செலுத்துகைகளைக் கொடுப்பது எவ்வாறு? பிடித்த திட்டத்தில் இடம் பெருது, வரிதாங்கு வருமா னத்தை எதிர்பார்ப்பவர்கள் எல்லோரையும், தங்கள் வருமானத் தைப் பற்றிய மதிப்பீட்டைப் பற்றியும், அவ் வருமானத்தின் பேரில் தாங்கள் செலுத்த வேண்டிய வரித்தொகையைப் பற்றிய மதிப்பீட் டைப் பற்றியும், ஆண்டின் தொடக்கத்திலோ அல்லது ஆண்டின் எப்பகுதிக்கு இவ்வித வருமானம் எதிர்பார்க்கப்பட்டதோ அப் பகுதிக்கும் சேர்த்து ஒரு வாக்கு மூலத்தைத் தாக்கல் செய்யும்படி இச் சட்டம் கோரியது.[21] மதிப்பீடு செய்யப்பட்ட வரி எவ் வாண்டில் ஈட்டப்பட்டதோ அவ் வாண்டிலேயே நான்கு சமத்

தவணைகளில் வரியைச் செலுத்தவேண்டும்.[22] மதிப்பீடு செய்யப் பட்ட வரியைச் செலுத்திய பின்பு, மிகையாக அல்லது குறைவாகச் செலுத்தப்பட்டிருக்கும் செலுத்துகைகள், இறுதி வரிவிவர அறிக்கையைக் கொண்டு சரிக்கட்டப்படும். இவ் விறுதி வரி விவர அறிக்கையிலிருந்து அவ் வாண்டுக்கான உண்மையான வருமானமும், உண்மையான வரிப் பொறுப்பும் தெரியும்.

அகவருவாய் விதித் தொகுப்பின் (Internal Revenue Code) மூலம், எவ்வாண்டில் வருமானங்கள் பெறப்படுகின்றனவோ அவ் வாண்டிலேயே எல்லாத் தனியாள் வருமானங்களின் பெரும் பகுதியும் வரிக்கு உள்ளாகிறது.[23] சம்பளக் காலத்தை ஓரளவு பொறுத்ததே நடப்புக் கால அளவும் (degree of currency) வாரந் தோறும் பெறும் வருமானங்களில் வாராவாரமும், மாதந் தோறும் பெறும் வருமானங்களில் மாதாமாதமும் வரிப்பிடித்தம் செய்து வசூல் செய்யப்பட்டது. தங்கள் வரியைப் பிடித்தம் செய்வதற்கு ஆளாகாதவர்கள் காலக்குறிப்பேட்டு ஆண்டின் (calender year) மூலம் காலாண்டுதோறும் வரியைச் செலுத்தினார்கள். இவ் வாறான திட்டத்தினால், வரி செலுத்துவோர்களுக்கும் சரி, அரசாங்கத்தார்களுக்கும் சரி, அநுகூலமே என்பது தேற்றம். ஆயினும், இவற்றோடு சம்பந்தப்பட்ட சில குறிப்பிட்ட செலவுகளை நாம் கவனிக்கவேண்டும். கடந்த காலத்திய வரி முறைகளினின்றும் பெரிதும் மாறுபட்டிருந்ததனால், வரி செலுத்துவோர்கள் அனைவருக்கும் மீண்டும் (வரியைச் செலுத்தும் விதத்தை) அரசாங்கம் கற்றுத்தரும்படி ஆயிற்று. மற்றவை மாறுதிருப்பின் விதிகளில் இத்துணைப் பெருத்த மாறுதல்கள் செய்வது விரும்பத் தக்கது அன்று. இயல்பிலேயே வருமானவரி, அதைச் செலுத்துவோருக்குப் புரிந்து கொள்ளவதற்குச் சிக்கலானதாகவும், சங்கடமானதாகவும் இருக்கிறது. இதனால் வருமான வரியில் பெருத்த மாறுதல்களைப் புகுத்துவது உசிதமல்ல. இதனால்தான் இறுதியாகச் செலுத்த வேண்டிய வரித் தொகையைப் பொறுத்து வரி செலுத்துவோருக்கும் கருவூலத்திற்கும்[24] இடையே உறுதியற்ற தன்மை ஏற்படுகிறது.

நடப்புவரி செலுத்துகைகளினால் இரு வகை ஆட்சிப் பளுக்கள் ஏற்படுகின்றன. இத் திட்டம் வேலைக்கு அமர்த்துவோரின்மீது பெரிய பொறுப்பைச் சுமத்துகிறது. இதன்படி வேலைக்கு அமர்த்துவோர் வரிசெலுத்துவோரின் ஏஜண்டாகப் பணியாற்ற வேண்டியிருக்கிறது. ஏடுகளை வைத்திருக்கும் பொறுப்புகள், வேலையாட்களின் விலக்குகளைப் பற்றிய பிடித்தங்களின் எடுகோள்களைத் திரட்டுதல், பிடித்தத்திற்கான இரசீதுகளை வெளியிடுதல் இவை

யெல்லாம் வேலைக்கு அமர்த்துவோர் மீது கனத்த பளுக்களைச் சுமத்துகின்றன. இதே போன்று தனியாள் வசூல் எண்ணிக்கையில் பெருத்த ஏற்றம் ஏற்பட்ட பொழுதும், திருப்பித் தருதல்களின் எண்ணிக்கையில் ஏற்றம் ஏற்பட்டபொழுதும் கருவூலத்திற்குக் கணக்கிடுதல் தலைவேதனையைத் தந்தது.

நடப்புவரிச் செலுத்துகைகள் முறை, மூலத்தில் வரிவசூலித்தல் இவற்றை ஆட்சி செய்வதற்குப் பெருத்த செலவுகள் ஆன போதிலும், இம் முறையின் அநுகூலங்களுடன் இவற்றை ஒப்பிடும் பொழுது, இம் முறைக்குச் சார்பாகவே நாம் தீர்ப்புக் கூறவேண்டியிருக்கிறது. இவ்விதத் திட்டம் ஒன்றுமின்றிப் போர்க்காலத்திலும், அதைத் தொடர்ந்த பிற்காலத்திலும் விதிக்கப்பட்ட கடுமையான வரிகளை ஆட்சி செய்திருக்க முடியுமா என்பது ஐயத்திற்கிடமானதே. நடப்பு செலுத்துகைத் திட்டத்திலும், பிடித்தம் செய்வதிலும் வரிசெலுத்துவோர்களுக்கு ஏற்பட்ட அநுபவத்தால் அவர்கள் அவற்றுக்குப் பழக்கப்பட்டுப் போனதுமன்றி, சரிக்கட்டுவதில் ஏற்பட்ட கசப்புகளும் குறைந்தன. வினை முறைகளைப் (techniques) பூரணமாக்குவதன் மூலமும், எளிதாக்குவதன் மூலமும் தற்பொழுது காணப்படும் சில உறுதியற்ற தன்மைகள் குறைக்கப்படுவதுடன் அவற்றின் ஆட்சியும் அபிவிருத்தி அடையும். அதன் மூலம் பிற செலவுகளும் குறையும். நாம் ஒருக்காலும் 'ஆண்டு கழித்து' (year late)ச் செய்யப்படும் பழைய செலுத்துகைகள் முறைக்கு மீண்டும் போகப்போவதில்லை என்பது ஓரளவு உண்மையே. தற்போதைய முறையில் நாம் திருப்தியுற்றிருப்பதும் மாறுதல்கள் செய்வதில் கஷ்டம் ஏற்படும் என்பதும் இதற்கான காரணங்களாகும். உண்மையில் மாறுதல்களில் ஏற்படும் சங்கடங்களே இரண்டாவது உலகப் போர் தொடங்கும் வரை நடப்பு வரி செலுத்துகை முறையை நடைமுறையில் கடைப்பிடிக்க வொண்ணுமல் செய்தது. போர்க் காலத்திய நிதிமுடைகளே இம் முறை புகுத்தப்பட்டதற்குக் காரணமாகும்.

## மாநிலத் தனியாள் வருமான வரிகள்

தனியாட்களின் பொதுவான வருமானங்களின்பேரில் மாநில அரசாங்கங்கள் விதிக்கும் வரிகளைப் பற்றியே இப் பிரிவில் நாம் ஆராய்வோம். 1959ஆம் ஆண்டில் அலாஸ்கா, ஹவாயையும் சேர்த்து முப்பத்தொன்று மாநிலங்கள் இவ்வித வரிகளை விதித்தன. 'வருமான வரிகள்' என்ற பெயரில் சில மாநிலங்கள் வரி விதிக்கின்றன. இவ் வரிகளை நாம் நமது எண்ணிக்கையில் சேர்க்கவில்லை. சில வகைக் குறிப்பிட்ட தொழில் நிறுவனங்களின் நிகர

வருமானத்தின்பேரில் பல மாநிலங்கள் வரி விதிக்கின்றன. சொத்து வரியின் கீழ்ப் புலனாகாத சொத்துகளின்பேரில் வரி விதிக்காததற்குப் பதிலியாகச் சில மாநிலங்கள் குறிப்பிட்ட சில புலனாகாத சொத்துகளின் வருமானத்தின் பேரில் பிரத்தியேக வரிகள் விதிக்கின்றன. பின்னர்க் கூறப்பட்ட கும்பலில் நியூஹாம்ப்ஷையர், ஓஹியோ, டென்னஸ்ஸி மாநிலங்கள் அடங்கும். மஸாச்சுஸெட்ஸ் வருமான வரியும் இவ்விதமாகத்தான் தொடங்கியது. காலப்போக்கில் வரித்தளம் பரவலாக்கப்பட்டதனால் அது ஒரு பொதுத் தனியாள் வருமானவரி ஆயிற்று.

அலாஸ்காவையும் ஹவாயையும் தவிர்த்து, மீதமுள்ள இருபத்தொன்பது மாநிலங்களும் தற்பொழுது தனியாள் வருமான வரிகளை விதிக்கின்றன. இவற்றில் பதின்மூன்று மாநிலங்கள் 1930-க்கு முன்பும், பாக்கிப் பதினாறு மாநிலங்களும் 1930-க்கும் 1937-க்கும் இடையிலும் இவ் வரி விதிப்பை மேற்கொண்டன. 1930-க்கும், 1940-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் மூன்று மாநிலங்கள் தனியாள் வருமான வரிகளை விதித்தன. பின்னர் அவைகள் இவ் வரிகளைக் கைவிட்டன. மேற்கண்ட தகவலிலிருந்து இவ்வகை வரியைப் பயன்படுத்துவதில் மிக அதிகமான அளவு நிலைபேறு (stability) காணப்படுகிறது என்பது தெளிவாகும். ஒரு மாநிலம் தனியாள் வருமான வரியை மேற்கொண்டதற்கு ஆதிக் காரணம் எதுவாயினும் இவ் வரி விதிப்பால் அது நிரந்தரப் பயனை அடைந்தது.

1930-க்கு முன்பு பல மாநிலங்கள் தனியாள் வருமான வரிச் சட்டங்களை விதித்தன. இச் சட்டங்களை இயற்றியதற்குத் தம் வரி முறைகளை அதிக நீதியைப் பயக்கும் முறையில் அமைக்க அவை விரும்பியதே காரணமாகும். சில மாநிலங்கள் புலனாகாத சொத்தின்மீது வரி விதிப்புச் செய்யும் முறையில், புதிய பாதையை வகுக்க எண்ணி வருமானங்களின்மீது வரிவிதிப்பு செய்தன. ஆனால் வேறு மாநிலங்கள் மாநில மட்டத்தில் சொத்து வரிக்குப் பதிலியாகவே வருமான வரிவிதிப்பைமேற்கொண்டன. 1930ஆம் ஆண்டுக்கும் 1940ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் மாநிலங்கள் வருமான வரிச் சட்டங்களை இயற்றியதற்குத் தலையாய காரணங்கள் இரண்டு. அவையாவன: (1) வியாபார மந்தகாலத்தில் சொத்து வரியிலிருந்து கிடைக்கும் வருவாய்கள் நொய்தாகிக் கொண்டு வந்ததற்குப் பதிலியாக புதிய வருவாய்களைத் தேடியது; (2) சிறப்பாக, இல்லாதவருக்கும் குறிப்பாக வயது முதிர்ந்தோருக்கும் உதவியளிக்கும் (old age assistance) திட்டத்திற்குக் கூட்டாட்சியின் உதவிமானியங்களைப் பெறுவதற்காக மாநிலங்கள் நிதி அளிக்க

வேண்டியிருந்தது. கூட்டாட்சியிலிருந்து இந் நிதியைப் பெறுவதற்கு மாநிலங்கள் புதிய நிகர வருவாய்களைப் படைக்கவேண்டியிருந்தது. தங்கள் வரிமுறைகளில் நீள்நோக்குடன் திருத்தம் செய்யவேண்டும் என்ற விருப்பத்தினால் உந்தப்பட்டு, இவை காலந் தாழ்த்தித் தனியாள் வருமானவரிச் சட்டங்களை மேற்கொள்ளவில்லை. சந்தர்ப்பங்களின் தொல்லைகளாலேயே இவை இச் சட்டங்களை இயற்றின.[25]

1937-ல் முப்பத்தொன்று மாநிலங்கள் தனியாள் வருமான வரிகளை விதித்தன. இவற்றில் பாதிக்கு மேற்பட்ட மாநிலங்களில் இவ் வரியிலிருந்து கிடைத்த வருவாய்கள் பூராவும் மாநிலத்தின் பொது நிதிகளுடன் சேர்க்கப்பட்டன. இதனால் இவ் வருவாய்களைத் தல அரசாங்கங்களுடன் மாநிலங்கள் பங்கு போட்டுக் கொள்ளவில்லை என்பது தெளிவு. அவை குறிப்பிட்ட அரசாங்கச் செலவுகளுக்காக ஒதுக்கப்படவுமில்லை. ஏழு மாநிலங்களில், மாநில அரசாங்கங்களே இவ் வருவாய்களைக் குறிப்பிட்ட நோக்கங்களுக்காகச் செலவழித்தன. மூன்று மாநிலங்களில் இவ் வருவாய்கள் அரசாங்கப் பள்ளிகளுக்காகவும் (public schools), இரு மாநிலங்களில் வறியவர்களுக்கு உதவுவதற்காகவும் ஒதுக்கப்பட்டன. வேறிரு மாநிலங்களில் இவ் வருவாய்கள் பொது நிதிக்கும், பள்ளி நிதிகளுக்கும் பிரித்துத் தரப்பட்டன. நான்கு மாநிலங்களில் இவ் வருவாய்கள் மாநிலங்களுக்கும் தல அரசாங்கங்களுக்கும் இடையே பிரிக்கப்பட்டன; இரண்டு மாநிலங்களில் ஏறக்குறைய முழு வருவாயும் அப்படியே தல அரசாங்கங்களுக்குக் கொடுக்கப்பட்டது. இறுதியாகக் கூறப்பட்ட ஆறு மாநிலங்களிலும், புலனாகாத சொத்து வரி விதிப்புக்குப் பதிலியாக வருமான வரி எழுந்தது என்று நம்புவதற்குத் தகுந்த முகாந்தரங்கள் இருக்கின்றன. ஆயினும், பெரும்பாலும் தற்பொழுது நிலவும் தனியாள் வருமான வரிகளை ஊன்றிக் கவனித்தால், அவை சொத்தின்மீதுள்ள வரிப் பளுவைக் குறைக்க வேண்டும் என்ற கருத்துடனேயே விதிக்கப்பட்டதாகத் தெரிகிறது. மேலே சுட்டிக் காட்டியவாறு, சில மாநிலங்கள் நெடுங்காலமாக இதன் நன்மை தீமைகளைச் சீர் தூக்கிப் பார்த்த பின்பு தாமாகவே விருப்பப்பட்டு இம் முடிவுக்கு வந்தன. பிற மாநிலங்கள் வியாபார மந்தகாலத்தில சொத்து வரியிலிருந்து கிடைத்த வருவாய்கள் எதிர்பார்த்த அளவு இல்லாமையால் இவ் வரியை மேற்கொண்டன.

பொதுவான அமைப்பில் மாநில வருமான வரிகள் கூட்டாட்சியின் வரிதோறணியைப் பின்பற்றியே அமைந்திருந்தன. மொத்த வருமானத்தின் விளக்கம், பிடித்தங்களின் பட்டியல், தனியாள்

விலக்குகளின் ரகங்கள் (தொகைகள் அல்ல) இவையும் கூட்டாட்சியின் வரியை ஒத்திருந்தன. பொதுத் தனியாள் வருமான வரிகளை 1959-ல் விதித்த மாநிலங்களில் இரண்டைத் தவிர 26 ஏனையவை வருமானத்தின்மீது வளர்வீத வீதத்தில் வரி விதித்தன. கூட்டாட்சியின் வருமானவரியுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, மாநில வரிவீதங்களும், வளர்வீத அளவும் சாதாரணமானவையே என்பது தெரியவரும். ஆனால், குறிப்பிட்ட வீதங்கள் பிரயோகம் செய்யப்படும் வருமானத் தொகுதிகள் பொதுவாகச் சிறியவையாயும், உச்ச வீதங்கள் சடுதியில் அடையக்கூடியவையாயும் இருக்கின்றன. வீதப்பட்டியல்களில் பெரும்பான்மையும் அல்லது 2 சதவிகிதத்தில் தொடங்கப்பட்டு, ஓராயிரம் அல்லது ஈராயிரம் டாலருக்குக் குறைவான வரிதாங்கு வருமானங்களுக்குப் பிரயோகம் செய்யப்படுகின்றன. ஒரு மாநிலத்திற்கும், மற்றொரு மாநிலத்திற்கும் இடையே உள்ள உச்ச வீதத்தில் 3·75 சதவிகிதத்திலிருந்து 11 சதவிகிதம் வரை வேறுபாடு இருக்கின்றது. 5 சதவிகிதத்திற்கும், 8 சதவிகிதத்திற்கும் இடைப்பட்ட நிலையிலேயே மிகப் பெரிய குவிவு இருக்கிறது. உச்ச வீதங்கள் பிரயோகம் ஆகக்கூடிய வருமான அடைப்பின் பருமனிலும் மாநிலங்களிடையே வேறுபாடு இருக்கிறது. 4,000 டாலருக்கு மேற்பட்ட வருமானங்களுக்கும் (ஐயோவா, உடா) 100,000 டாலருக்கு மேற்பட்ட வருமானங்களுக்கும் (நியூமெக்ஸிகோ) இடையில் இவ் வேறுபாடு காணப்படுகிறது. 10,000 டாலருக்கும், 25,000 டாலருக்கும் இடைப்பட்ட வருமானங்களின் மீது குவிவு காணப்படுகிறது.

தனியாள் வருமானங்களின்பேரில் வரிவிதிப்புச் செய்வதில் மாநிலங்கள் காட்டும் மிதப்போக்கிற்கு, கூட்டரட்சி, தனியாள் வருமானவரி வெளியைத் தனக்கென 'முற்பட்டு ஒதுக்கி' (pre-empted) ஒப்புமையில் பிற அரசாங்கங்களுக்குச் சிறு 'சுயேச்சை' வருமானத்தை விட்டுவைத்தது என்ற பொதுவான நம்பிக்கை காரணமாக இருக்கலாம். இந் நம்பிக்கை காரணமாகவே இஃது ஓரளவு உண்மையாகிறது என்பது புதுமையாகத் தோன்றலாம். எல்லா வரிகளும் வருமானத்தின்பேரில் விழுந்தாலும், வரிவிதிப்பை ஏச் சட்டத்தின் மூலமாகச் செய்தாலும், போதிய வருமானம் இருக்கிறதென்ற எளிய உண்மையையும் புரிந்து கொள்ளாததினால், பொருட்டுறையில் வரம்பை எய்துதற்கு முன்பே வருமான வரி விதிப்பில் அரசியல் வரம்பு ஒன்று நிறுவப்படுகிறது. மற்றொரு புறத்தில் கூட்டாட்சியின் வருமான வரியைக் கணக்கிடுவதில் மாநில வருமான வரிகளைப் பிடித்தம் செய்துகொள்ளலாம் என்றிருந்தும், போருக்குப் பின்பு மிக உயர்ந்த கூட்டாட்சி வரி வீதங்கள் விதிக்கப்பட்ட பொழுது மேலும் பல மாநிலங்கள்

வருமானவரிகளை மேற்கொள்ளாதது விந்தையாகவே இருக்கின்றது. தான் செலுத்தவேண்டிய கூட்டாட்சி வருமான வரியைக் கணக்கிடும் பொழுது, பெரிய வருமானத்தைப் பெறுவோர், தாம் செய்ய வேண்டிய இனவாரியான பிடித்தங்களின் மூலம் ஆதாயம் அடைகிருர். மாநில வருமான வரிச்சட்டங்கள் [27] பிரயோகிக்கும் குறைவான (modest) வீதங்களைக் காட்டிலும், தாம் மாநில அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டிய வரி தன் நிகர வருமானத்தில் மிகச் சிறிய ப்ங்காகவே இருப்பதை அவர் உணர்கிருர். மாநில வரியைச் செலுத்தும் அளவிற்குக் கூட்டாட்சியின் வரி வருவாய் குறைகிறது. கூட்டாட்சியிலிருந்து மாநில அரசாங்கத்திற்கு வருவாய் மாற்றப்படுவது இதன் விளைவாகும். தனியாள் வருமான வரிவிதிப்புப் பற்றிய வருணனைக் கூறுகளை இவ் வதிகாரத்தில் நாம் சிறப்பாகக் கண்டோம். அதன் கருதுகோளைப் பற்றி நாம் ஒன்றும் கூறவில்லை. முன்னைய நம் சர்ச்சையில் பல இடங்களில் வருமான வரிக் கருதுகோளைப் பற்றியப் பொதுவான சில கருத்துகளைச் சூசகமாகக் குறிப்பிட்டோம். வரிசெலுத்தும் திறன் கொள்கை அடிப்படையின்பேரிலேயே வருமானங்களின்மீது வரிவிதிப்புச் செய்யப்படுகின்றது என்பது தெளிவு. வரிகள் அனைத்தும் இறுதியில் தனியாள் வருமானங்களிலிருந்தே செலுத்தப்படுகின்றன என்பதை இக் கொள்கை ஏற்றுக்கொள்கிறது. வருமானத்தின் பேரில் நேரிடையாக வரிவிதிப்புச் செய்வதாலேயே தாம் நினைத்த படி வரிப்பளுக்களைப் பங்கீடு செய்ய முடியும் என்ற சாத்தியக் கூறு இருக்கின்றது என்பதையும் இக் கொள்கை ஒப்புக்கொள்கிறது. கூட்டாட்சி வருமான வரியும், பல மாநில வருமானச் சட்டங்களும் (தனியாட்கள் மீது) வளர்வீத வீதப் பட்டியல்களைக் கடைப்பிடிக்கின்றன. பதின்மூன்ரும் அதிகாரத்தில் வரிப்பளுக்களைச் சரியான முறையில் பங்கீடு செய்வதைப்பற்றிய கொள்கைகளை நாம் சர்ச்சை செய்தோம். இஃது அவற்றை ஒத்திருக்கின்றது. ஆயினும், பிடித்தம் செய்வதனுல் இவ் விரு வரிகளின் கூட்டு விளைவு பாதிக்கப் படுகின்றது என்பதையும் முன்னரே கண்டோம்.

## மேற்கொண்டு படிப்பதற்கு

பி. எல். எக்கர் (Ecker - R, P. L.) எழுதிய 'கூட்டாட்சியின் முடைகள் வளர்ந்து கொண்டு வரும் ஒரு கால வரையறையில் மாநில வருமான வரியின் இடம்' (The Place of the State Income Tax in a Period of Expanding Federal Needs), Proceedings, National Tax Association, *1941*, பக்கம் 552-59.

தனியாள் வருமான வரியைக் கூட்டாட்சியும், மாநில அரசாங்கமும் தனித்தனியே பயன்படுத்துவதின் சாத்தியக் கூறு பற்றிய சில சர்ச்சைகளில் இந் நூலும் ஒன்றாகும்.

ஜி. இ. லெண்ட் (Lent, G. E.) என்பார் எழுதிய 'மூலத்தில் தனியாள் வருமான வரியை வசூலித்தல்' (Collection of the Personal Income Tax at the Source), Journal of Political Economy, October, *1942*, பக்கம் *719*-ம், அடுத்துவரும் பக்கங்களும்.

இக் கட்டுரையில் பல நாடுகளிலும் தனியாள் வருமான வரியைப் பயன்படுத்தும் விதத்தைப் பற்றிய நல்ல வருணனை காணப் பெறுகிறது. அந் நாடுகளின் வரிகளிலுள்ள நன்மைகளும், குறைபாடுகளும் பகுத்தாய்வு செய்யப் பெற்றிருக்கிறது.

கிளாரா பென்னிமானும் (Penniman, Clara,) டபிள்யு. டபிள்யு. ஹெல்லரும் (Heller, W. W.) எழுதிய 'மாநில வருமான வரி ஆட்சி' (State Income Tax Administration), சிகாகோ, பொது ஆட்சிப் பணி, *1959*.

நூலின் தலைப்பு கூறுவது போல், இந் நூலில் வருமான வரியின் ஆட்சி வலியுறுத்தப் பெறுகிறது. ஆனால் முதலாம் அதிகாரம் மாநில வருமான வரிகளைப் பற்றிய சிறந்த வரலாறு பூர்வமான ஓர் ஆராய்ச்சியாகும். எதிர்காலத்தில் இவ் வரிகளின் பங்கு என்னவாக இருக்கும் என்பதைப் பற்றிப் பத்தாம் அதிகாரம் சோதிடம் கூறுகிறது.

ஆர். ஏ, சிகாபூஸ் (Sigafoos, R. A.) எழுதிய முனிசிபல் வருமான வரி (The Municipal Income Tax), சிகாகோ, பொது ஆட்சிப் பணி (Public Administration Service), *1955*.

வருமான வரி விதிப்பின் சுவையான ஒரு பகுதியை இச் சிறு நூல் தன்னகத்தே கொண்டுள்ளது. இந் நூலில் ஆறு அதிகாரங்களே உள்ளன.

பி. ஜே. ஸ்ட்ரேயர் (Strayer, P. G.) எழுதிய, சிறு வருமானங்களின் வரி விதிப்பு (The Taxation of Small Incomes), நியூயார்க், ரொனல்டு, *1939*.

மேலும் விரிவாகப் படிப்பதற்கு முதல் அதிகாரமும் ('முன்னுரை'), இரண்டாம் அதிகாரமும் ('வருவாய்ப் பாகைகள்'), மூன்றும் அதிகாரமும் ('தனியாள் விலக்குகளைப் பற்றியக் கருதுகோள்') சிறப்பாகச் சிபாரிசு செய்யப்படுகிறது.

கூட்டாட்சியின் வருமான வரிச் சட்டத்தைப்பற்றியும், அதன் விளக்கத்தைப்பற்றியும் விவரங்களை அறிந்து கொள்வதற்கு, பிரன்டிஸ்ஹால் (Prentice—Hall) அல்லது வாணிபத் தீர்வகம் (Commerce Clearing House) வெளியிட்ட 'வரிப்பாடங்களில்' (tax courses) ஒன்று மிகவும் இன்றியமையாதது. ஆயினும் அக வருவாய்க்குழு (Bureau of Internal Revenue) வெளியிடும், 'உங்கள் கூட்டாட்சி வருமான வரி' (Your Federal Income Tax) என்ற சிறு நூலை (hand-book) யேனும், அல்லது ஜே. கே. லாஸர் (J.K. Lasser) எழுதிய 'உங்கள் வருமான வரி' (Your Income Tax) என்ற நூலையேனும் பயன்படுத்திக் கொள்ளுதலும் சாத்தியமேயாகும். இவ் விரு நூல்களும் ஆண்டுதோறும் வெளியிடப்படுகின்றன.

## 16 ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. அடுத்து வரும் இரண்டு அதிகாரங்களில் கூட்டாட்சியின் கார்ப்பரேஷன் வருமான வரியை நாம் ஆராய்வோம். அதுவரை நாம் இவ் வமிசத்தைப் பற்றிப் பூராவும் விவாதிக்க இயலாது. கார்ப்பரேட் பங்குகளிலிருந்து கிடைத்த ரொக்க. இலாப ஈவுகளின்மீது 1936 ஆம் ஆண்டுவரைத் தனியாட்கள் யாதொரு வரியையும் செலுத்தவில்லை யென்று சுருக்கமாகக் கூறலாம். ஏனெனில், எவ் வீட்டத்திலிருந்து இலாப ஈவுகள் பங்கீடு செய்யப்பட்டனவோ அவற்றின்மீது கார்ப்பரேஷன் ஏற்கனவேயே ஒரு வரிசெலுத்தியிருந்தது. இருந்தாலும், இலாப ஈவுகளாகக் கிடைக்கும் வருமானத்தின் மீது விதிக்கப்பட்ட மேல்வரிகளை (surtaxes)த் தனியாட்கள் செலுத்தினர். தன் ஈட்டத்தைப் பங்கீடு செய்வதற்கு முன்பு கார்ப்பரேஷன் ஒரு வருமானவரியைச் செலுத்தினுலும், 1936ஆம் ஆண்டில் தனியாட்கள் தங்கள் இலாப ஈவு வருமானங்களின்மீது சாதாரண வருமானவரி ஒன்றும், மேல்வரி ஒன்றும், ஆக இரண்டு வரிகளையும் செலுத்தும்படி ஆயிற்று. ஆகவே (1936 வரை) செலுத்தப்பட்ட கார்ப்பரேஷன் வருமான வரிகளின் ஒரு பகுதி, மூலத்திலேயே (at the source) செலுத்தப்பட்ட தனியாள் வருமான வரிகளையும் உள்ளடக்கியிருந்தது என்பது தெளிவாகும்.

2. உள்நாட்டுப் போர் நிகழ்ந்த காலத்து விதிக்கப்பட்ட வருமான வரியைப் பற்றிய உண்மைகள் பலவும் டேவிஸ் ஆர். டியூயி (Davis R. Dewey) என்பார் எழுதிய, 'அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நிதி வரலாறு' (Financial H story of the United States) என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது. 11ஆம் பதிப்பு, நியூயார்க், லாங்க்மன்ஸ், 1931, பக்கம் 305, 306.

3. ஸ்பிரிங்கரும் அமெரிக்க ஐக்கிய நாடுகளும், 102, யு. எஸ். 586 (Springer V. United States, 102 U. S. 586).

4. அதே நூல், பக்கம் 602.

5. டியூயி (Dewey) எழுதிய நூலில் பக்கம் 456–58 பார்க்க.

6. 157 அ. ஐ. 429 (1894).

7. அதே நூல், பக்கம் 583.

8. அதே நூல்.

9. அதே நூல், பக்கம் 586.

10. 158 அ. ஐ. 601.

11. பிளிண்டும், ஸ்டோன் டிரேஸி கம்பெனியும் (In Flint v. Stone Tracy Co.) 220 U. S. 107.

12. மேலே குறிப்பிட்டதை விடச் சற்றுப் பரவலாக மூலத்திலேயே வரி வசூல் உண்மையில் செய்யப்படுகிறது. பிறருக்கு வாரமாகவோ, வட்டியாகவோ, சம்பளமாகவோ 3,000 டாலருக்கு மேல் செலுத்தினுல் அவற்றின் மீது 1 சதவிகிதம் வரியைக் கழிக்கும்படி எல்லா நபர்களுக்கும், கார்ப்பரேஷன்களுக்கும் 1913 ஆம் ஆண்டைய சட்டம் கட்டளை பிறப்பித்தது. இங்ஙனமாக மூலத்திலேயே வரிசெலுத்தப்பட்டு விட்டதால் இவ் வருமானத்தைப் பெறுவோர் இவ் வருமானத்தின் மீது சாதாரண வரியைச் செலுத்த வேண்டியதில்லை. கார்ப்பரேஷன் வருமான வரியையும், தனியாள் வருமான வரியையும் ஒன்றிக்கும் பிரச்சினையில் நமக்கு ஆர்வம் இருக்கின்றது. இக் காரணம் பற்றியே, மூலத்திலேயே இலாப ஈவு வருமானத்தின் மீது வரி வசூலிப்பதை நாம் மேலே குறிப்பாகச் சுட்டிக் காட்டினேம்.

13. மூலதன ஆதாயங்கள், இழப்புகள் பற்றிய முழுப் பகுத்தாய்வைப் பின்வரும் ஓர் அதிகாரத்தில் காணலாம்.

14. 1956ஆம் ஆண்டில், 15,000 டாலருக்கும் குறைவாகச் சரிக்கட்டப் பட்ட மொத்த வருமானத்தை உடையவர்களில் 35 சதவிகிதத்தினரும், 15 000 டாலருக்கும் மேற்பட்ட வருமானத்தை உடையவர்களில் 76 சதவிகிதத்தினரும் தாங்கள் வரி செலுத்தவேண்டிய விவர அறிக்கைகளில் (taxable returns), பிடித்தங்களை இனவாரியாகச் செய்துகொண்டனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கருவூலத்துறை வெளியிட்ட, வருமானத்தைப் பற்றிய புள்ளிவிவரங்கள்...1956, தனியாள் வருமானவரி விவர அறிக்கைகள், பக்கம் 23, 35-லிருந்து கணக்கிடப்பட்டன.

15. 1956ஆம் காலக் குறிப்பேட்டு (calendar) ஆண்டிற்கு எல்லாத் தனியாள் வருமானவரி விவர அறிக்கைகளிலும் குறிப்பிட்ட சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்தில் 78·3 சதவிகிதம், ஆண்டொன்று 10,000 டாலருக்குக் குறைவான மொத்த வருமானம உடைய நபர்களால் குறிபபிடப்பட்டது. 20,000 டாலருக்குக் குறைவாக சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்தை உடைய நபர்கள் 90 சதவிகிதம் வரியாகச் செலுத்தவேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கருவூலத்துறை, 1956 ஆம் ஆண்டு வருமானப் புள்ளி விவரங்கள் : தனியாள் வருமான வரிவிவர அறிக்கைகள், பக்கம் 20 (Statistics of Income—1956 : Individual Income Tax Returns, p. 20).

16. 1956 ஆம் ஆண்டுத் தனியாள் வருமான விவர அறிக்கைகளின்படி மொத்தம் சுமார் 46 மில்லியன டாலர் வரிதாங்கும்படி ஆயிற்று. இதில் சுமார் 14 மில்லியன் டாலர் விவர அறிக்கைகள் குடும்பத் தலைவர்களாக

இல்லாத ஒற்றைக் கட்டைகளாலும் அல்லது கணவனை இழந்த கைம்பெண்க ளாலும் தரப்பட்டவை. மொத்த வரி வரவு சுமார் 32 பில்லியன் டாலர். இதில் அவர்கள் 6 பில்லியன் டாலருக்குமேல் வரியாகச் செலுத்தினர். இப் பிரச்சினை புறக்கணிக்கக் கூடியதன்று. ஏனெனில் எல்லா வரிவிவர அறிக்கைகளிலும் 31 சதவிகிதம் ஒற்றைக் கட்டைகள்ால் தரப்பட்டது. அவர்கள் மொத்த வரி யில் 19 சதவிகிதத்திற்குமேல் செலுத்தினர். வரி செலுத்துவோர்களில் ஒற் றைக் கட்டைகளாக இருப்பவர்களில்பெரும் பகுதியும் குறைந்த பிராயத்தின ராகவோ அல்லது வயது முதிர்ந்த வருக்கத்தினராகவோ இருப்பதுதான் இவ் வேறுபாட்டுக்குக் காரணம் போலும். இங்ஙனமாக அவர்களின் மொத்த வருமானம் சராசரிக்குக்குக் குறைவாக உள்ளது.

17. 1948–ல் 'தொழிலாளர் படையினரில்' 62·7 மில்லியன் ஆட்கள் இருந்த தாக மதிப்பிடப்பட்டிருக்கிறது (அமெரிக்க ஐக்கிய நாடுகளின் புள்ளி விவரத் தொகுப்பு, 1949, பக்கம், 174). 'தொழிலாளர் படையில்' 14 வயது நிரம்பியவர்களும், 14 வயதுக்கு மேற்பட்டவர்களும் அடங்குவார்கள். அவர்கள் தொழில் சந்தையில் (labour market) இருக்கவேண்டும். தொழி லாளர் படையில் தன் விருப்பின்றியே வேலையின்றி இருப்பவர்களும், உத்தி யோகத்தில் இருப்பவர்களும், தாமே சுயமாக வேலை செய்து பொரு ளீட்டுபவர்களும் அடங்குவார்கள். வரிவிவர அறிக்கைகளுக்கும் தொழிலாளர் படையினருக்கும் உள்ள தொடர்பிலிருந்து, வருமானம் பெறுவோர்களில் எவ்வளவு வீதாசாரத்தினர் திட்டவட்டமாக வரிவிவர அறிக்கைகளைச் சமர்ப் பிக்கின்றனர் என்பதை நாம் மனத்தில் கொள்ளவேண்டும். தொழிலாளர் படையில் சேராத சில ஆட்கள் வேறு வேலை பார்த்த மூலங்களிலிருந்து வரு மானங்களைப் பற்றிய சில வரிவிவர அறிக்கைகள் தயாரிக்கப்பட்டன. இருந்தாலும், இத் தொடர்பு ஒரு பயனுள்ள உடனடியான தோராயமாகும் (ready approximation).

18. 1916ஆம் ஆண்டில் தனியாள் வரிவிவர அறிக்கைகள் பெரும்பாலும் மேல் வரிவிவர அறிக்கை (ஒப்புமையில் கூடுதலான விகிதங்களில்) களாகவே இருந்தன. ஏனெனில், கார்ப்பரேஷன் வருமான வரி வாயிலாக, மூலத்திலேயே சாதாரண வரி (பொதுவாகக் குறைந்த விகிதங்களில்) யின் பெரும் பகுதியும் வசூலிக்கப்பட்டது. பக்கம் 361–யும் பார்க்க.

19. 1942, அக்டோபரில் வெளியான பொருளாதாரச் சஞ்சிகையில் (Journal of Political Economy) ஜார்ஜ் இ. லென்ட் (George E. Lent) என்பார் எழுதிய 'மூலத்தில் தனியாள் வருமான வரியை வசூலித்தல்' என்ற கட்டுரையில், மூலத்தில் வசூல் செய்வதன் பயனைப் பற்றிச் சுருக்கமாகவும், பயன் அடையும் படியாகவும் விளக்கப்பட்டிருக்கிறது.

20. Lent, பக்கம் 720—உடன் ஒப்பிடுக.

21. இக் கோரிக்கை பிடித்தத்திற்கு ஆட்படாத நபர்களுக்கும், ஆண் டொன்றுக்கு வட்டி, இலாப ஈவு, வாரம், ராயல்டி இவற்றின் மூலமாகக் கிடைக்கும் மொத்த வருமானம் நூறு டாலருக்கு மேல் இருக்கும் என்று எதிர்பார்த்தவர்களுக்கும் பொருந்தும். மேலும், யாராரின் கூலி பிடித்தத் திற்கு உள்ளாகிறதோ அவர்களின் மதிப்பீடு செய்யப்பட்ட மொத்த வரு மானம் ஆண்டொன்றுக்கு 5,000 டாலருக்கு மேல் இருக்குமானால், அவர்களும் ஓர் உறுதிமொழியைத் தாக்கல் செய்யும்படிச் சட்டம் கோரியது. மூலத்தில்

பிடித்தம் செய்யப்பட்டத் தொகைக்கு மிகையான தொகை வரிவிதிப்புக்கு உள்ளாக நேரிடும் என்ற காட்சிஉண்மையிலிருந்து இக் கோரிக்கை பிறந்தது.

22. உறுதிமொழி, ஆண்டின் இரண்டாவது காற்கூற்றில் செய்யப்படுமானால், வரியை மூன்று சமத்தவணைகளில் செலுத்தலாம்; உறுதிமொழி ஆண்டின் மூன்ருவது காற்கூற்றில் செய்யப்படுமானால், வரியை இரண்டு சமத் தவணைகளில் செலுத்த வேண்டும்.

23. 1959ஆம் ஆண்டில் தனியாள் வருமானவரி வசூல் மொத்தம் 40,729 மில்லியன் டாலர். இதில் 70 சதவிகிதம் பிடித்தம் செய்யப்பட்ட வரிகளையும் 30 சதவிகிதம் பிடித்தம் செய்யப்படாத வரிகளையும் சுட்டும்.

24. 1958ஆம் நிதியாண்டில் கருவூலம் சுமார் 3·8 மில்லியன் டாலரை, வரியை மிகையாகச் செலுத்திவிட்டதற்காகத் திருப்பித் தந்தது. கருவூலச் செயலாளரின் ஆண்டறிக்கை (Annual Report of the Secretary of the Treasury) 1958, பக்கம் 130.

25. வருவாய்ப் பற்ருக்குறையை நிரப்புவதற்கு 1933-ல் கனக்டிக்கட் மாநிலத்தில் நியமிக்கப்பட்ட பிரத்தியேக வரிக்குழு, விற்பனை வரியை நெருக்கடி காலத்திற்கு உபயோகத்துக் கொள்ளுமாறு சிபாரிசு செய்தது. தனியாள் வருமான வரியைச் சிபாரிசு செய்யவில்லை. ஏனெனில், விற்பனை வரி மட்டமான வரியாக இருப்பதால் நெருக்கடி காலம் முடிந்தவுடன் அது ரத்து செய்யப்பட்டுவிடும் என்று இக் குழு கருதியது. ஆனுல், வருமான வரியை விதித்தால், அதில் விரும்பத்தக்க பல அமிசங்கள் இருப்பதால் அது நிரந்தரமான வரியாகிவிடக்கூடும் என்றும் இக்குழு கருதியது.

26. இவ் விரண்டு மாநிலங்கள் மேரிலாந்தும், மஸாச்சுசெட்ஸும். மேரிலாந்தில் முதலீடுகளிலிருந்து வரும் வருமானங்களின்மீது 5 சதவிகிதமும், பிற வருமானத்தின்மீது 2 சதவிகிதமும் வரிவிதிக்கப்பட்டது. இவ்விகிதம் வீதாசார வீதமே (flat rate). மஸாச்சுசெட்ஸில் பல்வேறு வீதங்கள் பிரயோகிக்கப்படுகின்றன. ஆனுல் இவை வளர்வீத முறையில் இல்லை. மாஸாச்சுசெட்ஸ் மாநிலம் நால்வகை வருமானங்களிடையே வேறுபாடு கற்பிக்கிறது; ஒவ்வொரு வகை வருமானத்தின்மீதும் வெவ்வேருன வீதத்தைப் பிரயோகிக்கிறது. இவ் வகைகளும், இவற்றின் வீதங்களும் வருமாறு :

1. ஆண்டுத் தொகை வருமானம் 1·5%.
2. வேலை அல்லது வாணிபத்திலிருந்து கிடைக்கும் வருமானம் 2·5%.
3. புலனுகாத சொத்துகளை விற்பதனுல் கிடைக்கும் மூலதன ஆதாயங்கள் 6·0%.
4. இலாப ஈவுகளும் சில வட்டியும் 6·0%.

வருமான வரிவிதிப்பு உலகில், இங்கு ஒரு புதுமை காணப்படுகிறது. புலனுகாத மொத்த வரியிலிருந்து படித்தரமாக, வளர்ந்துவந்ததை இது ஓரளவு சுட்டுகிறது. இது ஒரு 'பாகுபாடு செய்யப்பட்ட வருமான வரி' ஆகும்.

27. (அகவருவாய் விதிப்புத்தொகுதி அநுமதிப்பது போன்று) கூட்டாட்சியின் வருமான வரித்தளத்திலிருந்து மாநில வரியைப் பிடித்தம் செய்த பின்பு, மாநில வரி வீதத்தளப் பெருக்கிகளை (times)க் காட்டிலும் மாநில வரியின் கூடுதலான நிகரப்பளு குறைவாகவே இருக்கிறது. இதற்கு இரண்டு உதாரணங்களை எடுத்துக்கொள்வோம். (1) மாநிலத்தில் இறுதிநிலை வருமானவரி வீதம் 5 சதவிகிதமும், கூட்டாட்சியின் இறுதிநிலை வருமான வரி வீதம் 20 சதவிகிதமும் இருக்கிறதென்றும், இவற்றை ஒரு வருமானம் பெறுவோர் செலுத்துவதாகவும் வைத்துக்கொள்வோம். இவை யிரண்டையும் கூட்டினால் இறுதிநிலை டாலரின் மீது 25 சதவிகிதம் வரிப்பளு இருப்பதில்லை. தன் இறுதிநிலை டாலரில் 0·5 டாலரை அவர் மாநில அரசாங்கத்திற்கு வரியாகச் செலுத்துகிறார். இவ் வரியை அவர் கூட்டாட்சியின் வரித்தளத்திலிருந்து பிடித்துக் கொள்கிறார். இதனால் அவருக்கு எஞ்சுவது ஒரு டாலரில் 0·95 டாலரே ஆகும். இந்த 0·95 டாலரின் மீது தான் கூட்டாட்சியின் வரிவீதம் விதிக்கப்படுகிறது என்று புலனாகிறது. இவ்வரி வீதம் 20 சதவிகிதமாகும். 0 95 டாலரில் 20 சத விகிதம் 19 டாலர். இத் தொகையைத் தான் அவர் கூட்டாட்சிக்கு வருமான வரியாகச் செலுத்துகின்றார். ஆகவே வருமானத்தின் இறுதிநிலை டாலரின் பேரில் அவர் .24 டாலர் வரியாக (மாநிலக் கூட்டாட்சி இரண்டின் வருமான வரிகளையும் சேர்த்து)ச் செலுத்துகின்றார். ஆகவே இரண்டு வரிகளும் சேர்ந்த வரி வீதம் 24 சத விகிதம் ஆகிறது. (2) மாநில அரசாங்கத்திற்குத் தன் இறுதிநிலை வருமானத்தில் 10 சதவிகிதமும், கூட்டாட்சிக்கு 80 சதவிகிதமும் ஓர் உயர்ந்த வருமானம் பெறுவோர் செலுத்துவதாக வைத்துக்கொள்வோம. தன் வருமானத்தின் இறுதிநிலை டாலரின் பேரில் அவர் ·10 டாலரை மாநில அரசாங்கத்திற்குச் செலுத்துகின்றார். இத் தொகையைப் பிடித்தம் செய்த பின்பு எஞ்சியுள்ள அவருடைய வருமானத்தின் இறுதிநிலை டாலரில் 80 சதவிகிதத்தை; அதாவது $·80 \times ·90$ டாலர் $=$ ·72டாலரை அவர் கூட்டாட்சிக்கு வரியாகச் செலுத்துகின்றார். இரண்டு வரிகளும் சேர்ந்து மொத்தம் ·82 டாலர்தான் ஆகிறது. மாநில வரி ஒன்றும் இல்லாதிருந்திருக்குமானால் அவர் தன்னுடைய இறுதிநிலை டாலரில் ·80 டாலரைக் கூட்டாட்சிக்குச் செலுத்தியிருப்பார். இங்ஙனமாக மாநில வரியின் கூடுதலான நிகர பளு அவருடைய இறுதிநிலை டாலரில் 2 சதவிகிதமே அன்றி 10 சதவிகிதம் அன்று. வருமானம் பெருத்த அளவினதாக இருந்து கூட்டாட்சியின் வீதங்களும் வளர்வீத முறையில் இருக்குமானால், ஒரு குறிப்பிட்ட மாநில வரி வீதத்தினால் ஏற்படும் வரித்தாக்கு குறைந்த அளவினதாகவே இருக்கும்.

சிறிய வருமானத்தைப் பெறுவோர் கூட்டாட்சி வரியின்கீழ் பிடித்தங்களை இனவாரியாகச் செய்வதில்லை; தரப்பிடித்தத்தையே கடைப்பிடிக்கின்றனர். இதனால் மாநில வரியின் பேரில் ஏற்படும் கூடுதல் வரித்தாக்கு, மாநிலம் முழுமைக்கும் உள்ள வரிவிகித அளவிலேயே விழுகிறது. பெருத்த வருமானங்களின்மீது கூட்டு அரசாங்கம் உயர்ந்த இறுதிநிலை வீதங்களை விதிப்பதையும் கூட்டாட்சியின் வருமான வரித்தளத்திலிருந்து சிறிய வருமானங்களைப் பெறுவோர் மாநில வரிகளைப் பிடித்தம் செய்துகொள்ள இயலாமையையும் ஒருங்கு சேர்த்துப் பார்க்கும் பொழுது, ஒரு மாநிலத்தின் வருமான வரியை ஒரு கணிசமான அளவு வளர்வீத முறையில் அமைப்பது எவ்வளவு சிரமசாத்தியமானது என்பது புலனாகிறது. இவ் விஷயத்தை 24ஆம் அதிகாரத்தில் இன்னும் விரிவாக ஆராய்வோம்.

# 17. வரி நோக்கங்களும் நிகர வருமானத்தின் இயல்பும்

## (The Nature of Net Income for Tax Purposes)

தனியாட்களின் 'நிகரவருமானத்தின்' பேரிலேயே வரி விதிக்க வேண்டும் என்ருல், நிகர வருமானத்திற்கு ஒரு விளக்கம் தரவேண்டியது இன்றியமையாததாகிறது. அப்பொழுதுதான் வரியின் கருதுகோள் நோக்கங்களேயும், நடைமுறை நோக்கங்களே யும் எய்தமுடியும். மிகச் சிறப்பாக, விளக்கம் தன்னகத்தே கொண்டுள்ள யாவற்றையும்பற்றித் திட்டவட்டமாக இருக்க வேண்டும். இவ் விளக்கம் பலதிறப்பட்ட வருமானத்திற்கும் பொருந்துவதாய் இருக்கவேண்டும். விளக்கம் தருக்க ரீதியாகவும், சரியாகவும் இருக்கவேண்டும். இவ் விளக்கத்தைப் பிரயோகிப்ப தால் வரிசெலுத்துவோருக்கு நீதி கிடைக்கும்படி இருக்க வேண் டும். மேலும் விளக்கம் சார்பற்ற முறையில் அளவீடு செய்வதற் குரிய அளவையை (magnitude) விளக்குவதாய் இருத்தல் வேண்டும்.

பொருளியல் வருமானம் என்ற சொல்லே, மூலதனம் அல்லது உழைப்பிலிருந்து (capital or labour) கிடைக்கும் மனநிறைவுகளின் தொகுதி என்ற பொருளில், நாம் பயன்படுத்துகின்ருேம். இதை உண்மையான அல்லது அகவருமானம் எனலாம். தனியாள் அல்லது பொது நன்மையைப் பற்றிப் பகுத்தாய்வு செய்வதற்கு வருமானத்தைப் பற்றிய இந்த விளக்கம் மிகவும் பயன்படுகிறது என்பதில் யாதொரு ஐயமுமில்லே. ஆயினும், அடிப்படையில் வருமானத்தை மனநிறைவுகள் என்று கொண்டாலும்,வரி நோக்கங் களுக்காக இச் சொல்லே இப் பொருளில் வழங்குவதில் பலதிறப் பட்ட தொல்லேகள் எழுகின்றன. முதற்கண், இவ் விளக்கத்தைப் பணவடிவமாக மாற்றிஞல் அன்றி, இவ் விளக்கத்திஞல் வருமான

வரி விதிப்புக்குப் பயனில்லை. ஏனெனில், வரித்தளத்தை நாம் டாலர் கணக்கில் கூற வேண்டியவர்களாக இருக்கின்றோம். இவ்வாறு அகவருமானத்தைப் பணவருமானமாக மாற்றுவதனுல், உண்மை வருமானத்திற்கும் பண வருமானத்திற்கும் இடையே உள்ள உறவின் (துள்ளுவத்தையும்) கணிப்பையும் (accuracy), கச்சிதத்தையும் (preciseness) நாம் ஓரளவு இழக்கவேண்டி யிருக்கின்றது. மன நிறைவுகளின் தொகுதியே உண்மையான வருமானம் என்று கொண்டால், இம் மன நிறைவுகளுக்கு வழிசெய்யும் பண்டங்கள், சேவைகள் ஆகியவற்றின் மார்க்கட்டு மதிபபே பண வருமானம் என்று கொள்ளுதல் வேண்டும். பண்டங்களின்மீது பத்து டாலர்களைச் செலவழித்து ஒருவன் பெறும் அதே மனநிறைவை, மற்றொருவன் பத்து டாலர்களைச் செலவழித்துப் பெறலாம் என்றெண்ணுதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது? இவர்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் ஒரு டாலரை வரியாகத் தண்டுவதன் மூலம், இருவரும் ஒரே அளவு மனநிறைவைத் தன்னல மறுப்புச் செய்திருக்கிருர்கள் என்று நாம் உறுதியாய்க் கூறமுடியாது. பண்டங்களும், சேவைகளும் ஈனும் மனநிறைவை அளப்பதற்கு நம்பகமான புறவயச் சார்ப்பற்ற அளவுகோல் இருந்தால், இதை வருமான வரித்தளத்தை அளவிடுவதற்குச் சரியான அளவுகோலாகப் பயன்படுத்தலாம். இவ்விதமான அளவுகோல் ஒன்றும் இன்மையால் நாம் வருமான வரித்தளத்தை அளவிடுவதற்கு, இவ்வளவு கோலுக்குக் கிட்டத்தட்ட நிகரானதாகப் பணவருமானத்தைப் பயன்படுத்துகின்ருேம். இவ்வாறு வரித்தளத்தை அளவிடுவதற்குப் பண வருமானத்தைப் பயன்படுத்துவதில், உண்மையான வருமானத்தை விட்டு நாம் விலகிச் செல்கின்ருேம் என்பதையும், நாம் உபயோகிக்கும் அளவுகோல் ஓரளவுதான் சரியானது என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.

வருமானத்திற்கு உண்மையான வருமானம் என்று பொருளாதார விளக்கம் தருவதானுல், எந் நிலையில் அதை வரி நோக்கங்களுக்காக அளவிட வேண்டும் என்று நிர்ணயிப்பதில் பல பிரச்சினைகள் எழுகின்றன. உண்மையான வருமானத்தை, அதைப் பெறும் நிலையில் அளவிட முடியாது என்பதை நாம் முன்னரே கண்டோம். அதாவது, அகவருமானத்தைத் துய்க்கின்ற நிலையில் அதை அளவிட முடியாது. ஆனல், நாம் பணவருமானத்தை வரித்தளமாகப் பயன்படுத்தும்பொழுது, அதைத் துய்ப்பதற்கு ஏற்ற நிலையில் அளவிடலாமா? உண்மையான வருமானம் அகவருமானமாக இருப்பதால், அகவருமானத்தைக் கிட்டத்தட்டத் துய்க்கும் நிலையிலதான் பணவருமானத்தை அளவிட வேண்டுமென்று பலர் கருதுகின்ருர்கள். இக் காரணம்பற்றியே மெய்யான

வருமானத்தின் மிகக் கச்சிதமான பண அளவுகோல், அம் மெய் யான வருமானத்தை ஆக்குவதற்கான பண்டங்கள், சேவைகள் இவற்றின் பணமதிப்பே என்று பொதுவாக நம்பப்படுகிறது. இதற்கு நுகர்வுப் பண்டங்களை வாங்குவதன் மதிப்பு என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. சிறிது சிந்தித்தால் மனநிறைவு என்றால் நுகர்வோரின் மனநிறைவுகள் என்று மட்டும் கொள்ளவேண்டிய தில்லை என்று அறிந்துகொள்வோம். ஏனெனில், தன் பண வருவாய்களில் ஒரு பகுதியைப் பிறருக்குக் கொடையாக வழங்குவ தன் மூலமாகவோ, அல்லது எதிர்காலத்தில் துய்ப்பதற்காக இப் பொழுது சேமித்து வைப்பதன் மூலமாகவோ ஒருவர் உண்மை யான வருமானத்தைப் (மன நிறைவைப்) பெறலாம். நுகர்வின் மீது செலவழித்துப் பெறும் மனநிறைவைக் காட்டிலும், சேமிப் பதன் வாயிலாகவோ, அல்லது பிறருக்குத் தருவதன் வாயி லாகவோ பெறும் மனநிறைவு பன்முறையும் கூடுதலாக இருப்பது கண்கூடு. இரண்டு நபர்கள் ஒரே விதத் தனியாள் நிலையில் இருப்ப தாகவும், அவர்கள் பெறும் சம்பளமும் ஒரே அளவினதாக இருப்ப தாகவும் வைத்துக்கொள்வோம். ஒருவர் மற்றொருவரைவிடக் கூடுதலாக நுகர்வின்மீது செலவழித்தால், இதிலிருந்து அவர் மற்றவரை விடத் தம் சம்பளத்திலிருந்து உடனடியாகப் பெறும் மன நிறைவு அதிகம் என்று கூறமுடியாது.

வருமானத்தைப் பெறுவோரின் கைக்குப் பண வருமானம் கிட்டும்பொழுது அதை அளவிடவேண்டும். அதாவது அவர் வருமானத்தை நுகர்வுக்காகவாவது அல்லது சேமிப்புக்காவது பயன்படுத்தும்பொழுது அதை அளவிடவேண்டும். வருமானத்தைப் பைசல் செய்யும்பொழுது, மனநிறைவுகளை உச்சநிலைக்குக் கொணர்தல் கொள்கையைப் பின்பற்றுவதாகக் கொள்ளவேண்டும். சேமிப்பைப் பற்றித்தான் பெரிதும் கருத்து வேற்றுமைகள் உள்ளன. சேமிப்புகளை வருமானமாகக் கொள்ளலாமா ? நுகர்வி லிருந்து கிடைக்கும் துய்ப்பே உண்மையான வருமானம் என்று ஒடுக்கமான விளக்கம் தந்தால், சேமிப்புகளை வருமானமாகக் கொள்ளக்கூடாது. நுகர்வுக்கும், சேமிப்புக்குமாகப் பண வருமானத்தைப் பிரித்தபின்புதான் அதை அளக்கவேண்டும். மற்றோர் பக்கத்தில், பணவருவாய்களைப் (இவ் வருவாய்களை ஆக்குவதற்கான செலவுகளைக் கழித்த பின்பு) பைசல் செய்வதினால் கிடைக்கும் எல்லா மனநிறைவுகளையும் உள்ளடக்கியதே உண்மை யான வருமானம் என்று பரவலாக விளக்கம் தந்தால், அதைப் பைசல் செய்வதற்கு முன்பு அளக்க வேண்டும். அங்ஙனம் அளக்கும் பொழுது சேமிப்புகளையும் வருமானம் என்றே கொள்ளுதல் வேண்டும். நாம் பரவலான விளக்கத்தையே ஏற்றுக் கொள்கிறோம்.

ஏனெனில் நடப்பு வரிகள் செலுத்தும் திறனை இவ் விளக்கம் மிகக் கச்சிதமாக அளக்கிறது; வரியைச் செலுத்துவதற்கான திறன் இருக்கும்பொழுதே வரி விதிக்கப்படுகிறது. தன் நிகர வருவாய்களைப் பைசல் செய்வதினால் 'பெற்ற மனநிறைவுகளைக் காட்டிலும், அவற்றைச் செலவழிப்பதனால் வருமானம் பெறுவோர் அடையும் மனநிறைவுகளையும், வரிசெலுத்தும் திறனையும் இவ் விளக்கம் இணைக்கிறது. தனியாள் தன் வருமானத்தில் எத் துணையை நுகர்வுக்கும், எத்துணையைச் சேமிப்புக்கும் பயன்படுத்த வேண்டும் என்று முடிவு செய்த பின்னர், மீதமிருக்கும் வருமானத் திற்குப் பாத்தியதை கொண்டாடும் நிலையில் அரசாங்கத்தை வைப்பதை விடத் தனியாள் நுகர்வு, சேமிப்புக்கான பாத்தியதைக ளுடன் அரசாங்கப் பாத்தியதையும் ஒரே நிலையில் வைத் தெண்ணப்படும் இவ் விளக்கத்தை மேற்கொள்வது நல்லதாகும்.

வரி நோக்கங்களுக்காகச் சேமிப்புகளை வருமானமாகக் கொள்ளவேண்டுமா என்ற வினாவில், சேமிப்புகளின்பேரில் பேதங்காட்டி வரிவிதிப்புச் செய்யலாம் என்ற சாத்தியக் கூறு இருப்பதையும் உய்த்துணர வேண்டும். சேமிப்புகள் நிகழ்வதற்கு முன்பேயே, சேமிப்புகளாக வரும் வருமானத்தின் ஒரு பகுதியின் பேரில் வரி விதித்தாலும், சேமிப்பின்மை (செலவு) நிகழும்போது வரிவிதித்தாலும், பேதங்காட்டுகை ஏற்படுகிறது. சேமிப்புகளின் மீது வரி விதித்தலும், சேமிப்பின்மைக்கு வரிவிலக் களித்தலும் அல்லது இதை நேர்மாற்றிச் சொன்னாலும் (சேமிப் பின்மைக்கு வரிவிதித்தலும், சேமிப்புகளுக்கு வரி விலக்களித்தலும்) இதற்கு மாற்றுகளாகும். வரிச்சட்டத்தில் வருமானத்திற்கு விளக்கம் தருவதன் வாயிலாக இப் பேதங் காட்டுகையைச் சுலுவாகத் தவிர்க்கலாம். ஆயினும், ஆட்சி ரீதியில் முற்கூறிய முறையையே (தற்பொழுது எல்லா வருமான வரிகளிலும் பயன்படுத்தப்படும் முறை) ஆட்சியாளர் பெரிதும் விரும்புகின்றனர். பின்னர்க் கூறிய முறையினால் தனியாளின் வரிவிவர அறிக்கையிலிருந்து அவருடைய சேமிப்புகளை விலக்கும்படி நேரிடும். இதனால் தன் வருமானத்தைப் பைசல் செய்த பின் தனியாளின் விரிவான கணக்குகளையும் பார்க்கும் படி நேரிடுவதோடு, வரிவிவர அறிக்கைகளின் துல்லுவத்தைச் சரிபார்ப்பதிலும் (ஒப்பு நோக்குவதிலும்) பெருத்த சங்கடம் நேரிடும். சங்கடத்தைத் தருவதான பாங்கியிலிருந்து டிபாசிட்டு களைத் திரும்ப எடுத்தலையும், கடன் பத்திரங்கள், ஏனைய தனியாள் மூலதன ஆஸ்திகள் (capital assets) இவற்றை விற்றதனால் கிடைத்த பணத் தொகைகளையும் வரிதாங்கு வருமானத்தில் சேர்க்கும்படி ஏற்படும். ஆகவே, செய்முறைக் காரணங்களை ஒட்டி, பைசல் செய்வதற்கு முன்பு மூலதனத்திலிருந்தும், உழைப்பிலிருந்தும்

தனியாள் பெற்ற நிகர வருவாய்களே வருமானம் என்று கொள்ள வேண்டி இருக்கிறது. கருதுகோள் அளவிலும், பைசல் செய்வதற்கு முன்பு ஒரே அளவு நிகர வருவாய்களையுடைய இருவருக்கு வரிகளைச் செலுத்தும் திறனும் சம அளவு இருக்கிறது என்று கொள்வது நீதிக்கும் பொருந்தியதாகும்.

நுகர்வுக்கு எத்துணை, சேமிப்புக்கு எத்துணை என்று பைசல் செய்வதற்கு முன்னரேயுள்ள நிகர வருவாய்களை, வரிநோக்கங்களுக்காக, நாம் வருமானம் என்று விளக்கம் தருகின்றோம். இதனால் தனியாளின் மூலதனத்தின் ஓர் உறுப்பாக ஆகவேண்டிய நிலையிலுள்ள நிதிகளின் பேரிலும், நாம் வரி விதிக்கவேண்டி யிருக்கின்றது. இதை மூலதன வரிவிதிப்பு என்று கூறுவது வருமானத்தினின்றே மூலதனம் படைக்கப்பட்டது என்பதை மறுப்பதாகும். இம் மறுப்பு உண்மைக்குப் புறம்பானது. ஏனெனில், மூலதனம் என்பது வருமானத்திலிருந்து பெற்ற சேமிப்புகளிலிருந்து (பணமாகவோ அல்லது பண்டங்களாகவோ) படைக்கப்பட்ட ஒரு நிதியாகும். மூலதனத்திற்கும், வருமானத்திற்கும் வேற்றுமையை விளக்கும் பிரச்சினையில் வேறோர் அமிசமும் உள்ளது. மூலதனத்திலிருந்து வருமான வரியைச் செலுத்தவேண்டு மென்பது அரசாங்கத்தின் கருத்தல்ல. மூலதனத்திலிருந்து வரியைச் செலுத்துவதனால் ஒரு நாட்டின் மூலதனம் சுருங்கும். ஆகவே, மூலதனமாக விளங்கும் வருவாயின் பகுதிகளை வருமான விளக்கத்தினின்றும் விலக்குவது இன்றியமையாதது. இதற்கு மிக எளிய உதாரணம் தேய்மானம் (depreciation) ஆகும். தேய்மானத்தைக் கழிக்காவிடில், 'நாட்டு வருமானத்தின்' ஒரு கூறு மூலதனத்திலிருந்து பெற்ற வருமானமாக இராது மூலதனமாகவே இருக்கும். உற்பத்திச் செய்முறையில் பல குறிப்பிட்ட மூலதன இனங்கள் முற்றும் கரைந்து போகின்றன (used up). இவற்றில் சில குறுங்காலத்திலும், பிற நெடுங்காலத்திலும் கரைந்துபோகின்றன. இவ்வாறு கரைவது அல்லது சேவை மதிப்பில் இழப்பு ஏற்படுவதுதான் தேய்மானம் எனப்படும். மொத்த வெளிப்பாடு அல்லது மொத்த வருவாய்களினின்று இவ் வீடுசெய்தல் (அல்லது ஈடுசெய்வதற்கான காப்பு நிதிகளைப் படைப்பது) நிகழாதிருக்குமானால்—மூலதன நிதி, படிப் படியாகக் கரைந்து முற்றும் தீர்ந்துபோகும். வருமானத்திலிருந்தே மூலதன நிதிக்கான நிகர சேர்மானங்கள் ஏற்படுகின்றன. ஆனால், வருமானத்திலிருந்து தற்போதிருக்கும் மூலதனத்தைப் பேணவில்லை.

(ஒரு நாட்டின் பொருளாதார விஷயத்திலோ ஒரு நிறுவனம் அல்லது ஒரு தனியாள் விஷயத்திலோ) மொத்த வருவாயின்

தொகுதியில் மூலதனத்திற்கும், வருமானத்திற்கும் இடையே வேறுபாடு கற்பிப்பது இன்றியமையாதது. இதை விரிவாக விளக்க வேண்டுமென்றால், இவ் வேறுபாட்டைச், செயல் முறையில் வரி நோக்கங்களுக்காக நிறைவேற்றுவதற்கு வருமானத்தின் விளக்கத்தில் ஒரு பொதுப்படையான கொள்கை இருக்கவேண்டும். வரி நோக்கங்களுக்கு திரு ஜே. ஆர். ஹிக்ஸின் (G. R. Hicks) வருமானத்தைப்பற்றிய 'மைய நியதி' (centrl criterion) நமக்குப் போதுமானது. 'வாரம் முழுதும் ஒருவன் என்ன நுகர்வானோ அதுதான் ஒரு தனியாளின் வருமானமாகும். இந் நுகர்வுக்குப் பின்பும் வாரத் தொடக்கத்தில் இருந்தது போலவே, வார இறுதியிலும் சவுக்கியமாக (சுகமாக) இருக்க முடியும் என்று அவன் கருத வேண்டும்.'[1] இன்னும் பொதுவாகக் கூறுமிடத்துப் பண வடிவத்தில் சொல்லப் புகின், எந்தக் காலக்கூறுக்கும் ஒரு தனியாளின் வருமானம் மொத்த வருவாய்களின் (பணமாகவோ, பண்டமாகவோ) ஒரு பகுதியின் பணமதிப்பாகும் எனலாம். அடுத்து வரும் இதை ஒத்த காலக்கூறில் இதற்குச் சமமான மொத்த வருவாய்கள் வரும் சாத்தியத்தை ஊறுபடுத்தாமலும் இப் பணமதிப்பு இருக்க வேண்டும். இவ் விளக்கத்தின்படி தேய்மானத்தை வருமானமாகக் கொள்ளக்கூடாது என்பது மிகத் தெளிவு. மூலதனத்துடன் கூட்டப்படும் நிகர சேர்மானங்கள் வருமானத்திலிருந்தே கிடைக்கின்றன. வருமானவரிக் கொள்கை பற்றிய பிரச்சினைகளுக்கு இவ் விளக்கத்தைப் பிரயோகம் செய்யும்பொழுது, வரி செலுத்துவோர்களிடை நீதி செயல்பட வேண்டும் எனில், நிகர வருமானத்தைப் பற்றிய இவ்வித விளக்கம் இன்றியமையாதது என்பதைக் காண்போம்.

தனியாள் வருமான வரிவிதிப்புப் பற்றிய பல பிரச்சினைகளை நாம் இப்பொழுது பார்ப்போம். இப் பிரச்சினைகள் கடந்த காலத்திலும் தொல்லை கொடுத்தன; இப்பொழுதும் தொல்லை கொடுத்துக் கொண்டிருக்கின்றன. இப் பிரச்சினைகளுக்கு வருமானத்தைப் பற்றிய விளக்கத்தைப் பிரயோகம் செய்வதிலேயே நமது நாட்டமெல்லாம் இருக்கும். இவ் விளக்கத்தை வரி செயல்முறைக்குப் பிரயோகிக்கும் சாத்தியக் கூறுகளையும் நாம் சர்ச்சை செய்வோம்.

### தனியாள் வருமானம் என்றால் என்ன ?

தனியாள் வருமானவரி, தனி நபரின்மீது வரிவிதிக்க வேண்டியதில்லை. வரி செலுத்தும் திறன் கொள்கையின் உண்மையான காரண விளக்கமாவது, ஒரு தனியாளின் வரிசெலுத்தும் திறன் என்ற கருத்தைக் கொள்ளாது, சில தனியாட்கள் சேர்ந்த ஒரு

கும்பலை அல்காகக் கொள்வதேயாகும். இக் கும்பலில் வருமானத்தைப் பெறுபவர்களும், வருமானத்தைச் செலவழிப்பவர்களும் இருக்கிருர்கள். மற்றவை மாருதிருப்பின், ஒரு குடும்பத் தலைவனைக் காட்டிலும், பிச்சுப் பிடுங்கல் இல்லாத ஓர் ஆளுக்குத் தன் வருமானத்தின் ஒவ்வொரு டாலரிலும் கூடுதலான வரிசெலுத்தும் திறன் இருக்கிறது. இவ்வாருக, குறிக்கோள் அளவில் வரித்தளமாக இருக்க வேண்டியது தனித்து வருமானம் பெறுபவர் இல்லை என்றும், செலவழிக்கும் அலகின் வருமானமே என்றும் நாம் கூறலாம். பதினுறும் அதிகாரத்தில் சர்ச்சை செய்யப்பட்ட கூட்டு வருமான விதி, 1948ஆம் ஆண்டிலிருந்து அமுலில் இருக்கிறது. வருமானத்தைப் பெறும், வருமானத்தைச் செலவழிக்கும் அலகுக் கருத்தை இவ் விதி ஒரு வகையில் ஒப்புக்கொண்டது எனலாம். வருமான வரிவீதங்களைப் பொறுத்தவரையில் கூட்டுவரி விவர அறிக்கையில், வருமானத்தைக் கணவன் மனைவியருக்குள் பிரித்துக்காட்ட அனுமதிப்பதால், முன்னதிகாரத்தில் குறிப்பிட்டவாறு திருமணமான தம்பதிகளுக்குப் பெருத்த அநுகூலம் ஏற்படுகிறது. இரண்டு கும்பல்களுக்கும் இடையே வீத அமைப்பில் உள்ள வேறுபாடு இத் தவற்றுக்குக் காரணமாகுமே தவிர, குடும்பத்தின் பொது வருமானத்தை ஓர் ஒற்றை வரிதாங்கு வருமானமாக ஏற்றுக்கொள்வதால் இன்றியமையாது விளைந்ததல்ல. ஒரு குறிப்பிட்ட வருமான அடைப்புக்குள் உள்ள குடும்ப நபர்களின் எண்ணிக்கையில் உள்ள வேற்றுமைகளையும், பிற குடும்ப அலகுக்குரிய வேற்றுமைகளையும் வெவ்வேறுபட்ட வரி வீதங்களை அமுல் செய்வதன் வாயிலாகப் பரிகாரம் காண முற்படுவதை விட, விலக்குகள், பிடித்தங்கள் வாயிலாகப் பரிகாரம் காண முற்படுவதே மிகப் பொருத்தமானதாகும்.

### வரிநோக்கங்களுக்கான வருமானத்தின் காலக் கூறு (The Income Period for Tax Purposes)

வரிவிவர அறிக்கையை, ஓர் ஆண்டினை அடிப்படையாகக் கொண்டு சமர்ப்பிக்கவேண்டும் என்று கூட்டாட்சியின் சட்டம் கோருகிறது. ஆனாலும், இவ் வாண்டு காலக்குறிப்பேட்டு ஆண்டாக (calendar year) இருக்க வேண்டியதில்லை. வரி செலுத்துவோர்கள் கணக்கு வைத்துக் கொள்ளும் முறைக்கேற்ப இக் காலக்கூறு எந்தப் பன்னிரண்டு திங்களைக் கொண்ட காலமாகவும் இருக்கலாம். ஆயினும், தனியாள் வருமான வரி ரொக்க அடிப்படையில் அன்றி அது கைக்குக் கிட்டும் (accrual) அடிப்படையில் இயங்கவில்லை என்பது நாம் கருத்தில் இருத்த வேண்டிய தலையாய உண்மையாகும். இவ்வாறு வருமானத்தைப் பெற்றபொழுது அதை ஈட்டியதாகக் கொள்ளப்படுகிறது.

பொதுப் படையாகக் கூலி, சம்பளம், வட்டி, இலாபஈவு முதலான வற்றில் இவ் வடிப்படையைப் பொதுவாக ஏற்றுக்கொள்ளலா மாயினும், இலாபம், ராயல்டி (royalty) வருமானங்களைப் பொறுத்து வரை இவ் வடிப்படையை ஏற்க முடியாது.

யதேச்சையான காலக் கூருக ஓர் ஆண்டைப் பொறுக்கி எடுத்து, அக் காலக் கூற்றில் வருமானங்கள் ஈட்டப்படுவதாகக் கொள்வது பல தனியாள் வருமானவரி செலுத்துவோர்களுக்குப் பெருத்த அநீதி இழைப்பதாக முடியலாம். வாணிக சமூகத்தின ரிடை ஓராண்டுக் காலக்கூறு பொதுவாக ஏற்றுக்கொள்ளப் படுகிறது. ஒரு புதிய வாணிபத்தைத் தொடங்கிய சில ஆண்டு களுக்கு, ஒப்புமையில், குறைந்த நிகர வருமானமும், பல தடவை களில் இழப்புகளும் ஏற்படுகின்றன. ஒரு வாணிபத்தைத் தொடங்குவதற்கான ஆக்கச் செலவுகளின் ஓர் பகுதி, வியாபார நன்மதிப்பை (good will) பெருக்கிக் கொள்வதற்கு ஆகின்றது. ஆகவே, தொழில் நன்மதிப்பின் மூலம் பின்னர்க் கிடைக்கின்ற வருமானம் அவ் வருமானத்தைப் பெறும் பன்னிரண்டு திங்கள் காலக்கூற்றுக்கு மட்டும் உரியதல்ல. தான் நிறைய வாடிக்கைக்காரர் களைப் பிடித்துக் கண்ணியமான அளவுக்கு வருமானத்தைத் தேடும் வரை ஒரு மருத்துவரோ அல்லது வழக்கறிஞரோ செட்டாகத் தான் குடும்பம் நடத்தவேண்டும். யாதொரு வருமானமும் இல்லாத ஆண்டுகளில் அவர்கள் வரி செலுத்தாதிருப்பது இயல்பே யாகும். ஆயினும், இதனுல் அவர் இறுதியில் தன் நடப்பு வருமா னத்தின்மீது செலுத்தும் வரியின் தொகை பாதிக்கப்படுவ தில்லை.

ஒரு நவீனத்தை (novel) மிகுந்த துன்பங்களுக்கிடையே அவதிப்பட்டு மூன்ருண்டுக் காலத்தில் முடிக்கும் ஒரு எழுத்தாளரின் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். இம் மூன்ருண்டு காலமும் தான் தேடிவைத்த சேமிப்புகளைக் கொண்டோ, இரந்தோ அல்லது சில துணுக்குகளை அவ்வப்பொழுது எழுதி அதனுல் தன் நிதி முடையைப் பூர்த்தி செய்துகொண்டோ தான் மேற்கொள்ளப் போகும் பெரும் பணியான நவீனத்திற்கு அவர் தன்னை ஆயத்தம் செய்துகொண்டிருக்கலாம். இம் மூவாண்டு காலத்திலும் அவருக்கு யாதொரு வரிதாங்கு வருமானமும் (taxable income) கிடையாதென்று வைத்துக்கொள்வோம். நான்காம் ஆண்டு அவருடைய நவீனம் வெளி வருகிறது. நாவலும் நன்ருக விற்பனை யாகிறதென்றும், அவ் வாண்டிலேயே ராயல்டிகளைத் தருகிற தென்றும், அதனுல் அவருடைய வரிதாங்கு நிகரவருமானம் 60,000 டாலராக இருக்கிறதென்றும் வைத்துக்கொள்வோம். ஒரே ஆண்டில் (நான்காம்) ஈட்டியதாக இத் தொகை முழுவதையும்

கொண்டு வரிவிதித்தால், 1959ஆம் ஆண்டில் நிலவிய வீதங்களின் படியும், கூட்டுவரி விவர அறிக்கையின்படியும் கணக்கிட்டால் அவர் வரியாகச் செலுத்தவேண்டியது சுமார் 26,440 டாலராகும். இவ் வறுபதினாயிரம் டாலரையும் அவற்றை ஈட்டுவதற்காகச் செலவான நான்காண்டுகளின் பேரில் பங்கிட்டால், நான்காண்டுகளுக்கும் சேர்த்து மொத்த வரி சுமார் 14,480 டாலர்தான் ஆகும். ஈண்டு நாம் வரிசெலுத்தும் திறனில் காணப்படும் ஓர் அடிப்படைப் பிரச்சினையைச் சமாளிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். ஈண்டுக் கொடுத்த உதாரணத்தில் ஆண்டுதோறும் ஒரே சீராக ஒரே அளவினதாக இருக்கும் வருமானத்தின் (60,000 டாலர்) பேரில் வரிசெலுத்தும் திறனைக்காட்டிலும், ஏதாயினும் ஓர் ஆண்டில் நாவலாசிரியரின் 60,000 டாலர் வருமானத்தின் பேரில் வரிகளைச் செலுத்தக்கூடிய உண்மையான திறன் சற்றுக் குறைவாகவே இருக்கும். ஆயினும், வரிசெலுத்தும் திறனில் உள்ள இவ்வித வேற்றுமைகளைக் கொள்ளாது, பன்னிரண்டு திங்கள் காலத்திலே வருமானத்தைப் பெற்றதால், அக் காலக் கூற்றிலேயே வருமானத்தை ஈட்டியதாகக் கொண்டு இவ் வரி விதிக்கப்படுகிறது.

வருமானத்தை, அது கைக்குக் கிட்டும் (accrual) அடிப்படையில் கணக்கிடுவதன் வாயிலாக இவ் வேற்றுமைகளை மனத்தில் கொள்வது இரு காரணங்களால் சாத்தியமில்லை. இறுதியாகக் கிடைக்கும் வருமானத்தொகையை முன்கூட்டியே துல்லியமாக அறிவிப்பது என்பது பொதுவாக இயலாததென்பது முதற் காரணமாகும். நமது நாவலாசிரியரோ, மருத்துவரோ அல்லது வழக்கறிஞரோ தம் எதிர்கால வருமானம் எவ்வளவாக இருக்கும் என்பதை முன்கூட்டியே துல்லியமாக அறியமுடியாதாகையால், ரொக்க வருமானம் கையில் கிட்டியதற்கு முந்திய ஆண்டுகளில் தனக்குக் கிட்டிய வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு தாம் செலுத்த வேண்டிய ஒரு வரியைத் துல்லியமாகக் கணக்கிட முடியாது. ரொக்க வருமானத்தைப் பெற்றதற்கு முந்திய ஆண்டுகளில் கிட்டிய வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு வரிவிதிப்புச் செய்வதற்கு இரண்டாவது எதிர்வாதமும் ஒன்றுளது. வரியாகச் செலுத்துவதற்கு வேண்டிய ரொக்கத் தொகையைத் திரட்டுவது அவருக்குப் பெருந் தொல்லையாக இருக்கலாம்.

இறுதி வரியைக் கணக்கிடுவதில் 'பின்னால் இட்டுச் செல்லும்' (carry back) முறையைக் கையாளுவதன் மூலமும், இதே குறிக்கோளை எய்தலாம். அதை ஈட்டிய காலத்தில் சமத் தவணைகளில் வருமானத்தைப் பெற்றிருந்தால் என்ன அடிப்படையில் வரிப் பொறுப்பு கணக்கிடப்பட்டிருக்குமோ, அதே அடிப்படையில்

வருமானத்தை உண்மையில் பெற்ற பின்பும் கணக்கிடலாம். மேல் பத்திக்கு முந்திய பத்தியில் 2 (paragraph) கூறப்பட்ட இரு சங்கடங் களையும் இந்த முறை தவிர்க்கிறது. ஆனால், வரியைப் பின்னால் இட்டுச் செல்வதற்கு உள்ள முகாந்திரம் அனைத்தும் வரியை முன்னால் இழுத்துச் செல்வதற்கும் இருக்கிறது. ஆக்குவதற்கு நெடுங்காலம் பிடிக்கும் வருமானங்களைப்பற்றி நாம் கூறியவை யாதாயினும் ஒரு காரணத்தால் ஆண்டு தோறும் ஒரே சீராக இன்றி ஏறியும், இறங்கியும் வரும் வருமானங்களுக்கும் பொருந்தும். ஓர் ஆண்டில் ஏற்பட்ட இழப்புகளை இன்னோர் ஆண்டில் பெற்ற வருமானத்தைக் கொண்டே எப்பொழுதும் இழப்புகள் சரிக்கட்டப் படுகின்றன என்று கூறுவதும் சாத்தியம். இவ் விழப்புகள் எதிர் கால வருமானத்தைக் கொண்டு சரிக்கட்டப்படலாம்; சரிக்கட்டப் படுகின்றன. நிகர இழப்புகள் நேரிடாத பொழுதும், வருமானம் ஏறியும் இறங்கியும் வருகின்ற காலங்களில், கூடுதலாக வருமானம் பெற்ற காலங்களிலிருந்து கிடைத்த வருமானத்தைக் குறைவாக வருமானம் பெற்ற காலங்களில் பயன்படுத்திக் கொள்வது இயல்பே யாகும்.

முன்னால் இழுத்தும், பின்னால் இட்டும் செல்லும் விதிகளில் நீதி அமிசம் (கூறு) இருப்பதல்லாமல், தூண்டுகோல் அமிசமும் இருக் கிறது. முதன்முதல் தொடங்கப்படும் எந்தப் பொருளியல் தொழிற்றுணிவினாலும் பெருத்த இழப்பு வருவதற்கும், அல்லது பெருத்த இலாபம் வருவதற்குமான சாத்தியக்கூறு இருக்கிறது. ஆகவே, குறைந்த வருமானம் உள்ள காலங்களில் ஏற்படும் இழப்பு களைப் பொருட்படுத்தாது, உயர்ந்த வருமானம் உள்ள காலங்களில் ஏற்படும் ஆதாயங்களின்மீது மட்டும் கடுமையாக வரி விதித்தால், பொருளியல் தொழுற்றுணிவினால் பெறக்கூடிய வெகுமதிகளின் கவர்ச்சி சிறிது குறைக்கப்படுகின்றது. அதே சமயம் இழப்புக் கான சாத்தியக்கூறுகள் குறைக்கப்படுவதில்லை. ஆகவே, ஆபத்தை ஏற்கும் எந்த முதலீட்டையும் பெரிதும் சார்ந்திருக்கும் ஓர் இயக்க நிலைப் (dynamic) பொருளாதாரத்தில், அவசியமற்ற பளுவுகளை ஆபத்து ஏற்போரின்மீது சுமத்தாதிருப்பது மிகவும் நல்லதாகும். உயர்ந்த அளவில் நாட்டின் வருமானத்தைப் பேணுவதற்குப் புதிதாக முதலீட்டைச் செய்யவேண்டும். இம் முதலீடு மிகவும் ஆபத்தை ஏற்கவேண்டி இருக்கலாம். வரிநோக்கங்களுக்காக, ஓர் ஆண்டிற்கு மேற்பட்ட காலத்திற்கு வருமானத்தைக் கணக்கிடுவ தால், மிக ஆபத்தான புதிய முதலீட்டை ஊக்குவிப்பது திண்ணம். தனி நபர்களின் வரிவிதிப்பைக்காட்டிலும் தொழில்களின் வரிவிதிப்பில் இதைப் பிரயோகம் செய்வது மிகவும் ஏற்புடைத்தாக இருக்காதா என்று ஒருவர் வினவலாம். இவ் விரண்டுக்கும்

பொருந்தும் என்பதே இதற்கான விடையாகும். தனியாள் வருமான வரி மூலமே பதிவு செய்யப்படாத தொழில், உத்தியோகத் தொழிற் றுணிவுகள் இவற்றின் மீது வரி விதிக்கப்படுகிறது. முதலீடு செய்வதற்கும், வாணிப ஆபத்துகளை ஏற்பதற்கும், கார்ப்பரேஷன் களுக்கு மட்டும் யாதொரு முற்றுரிமையும் இல்லை.

வரியிலுள்ள முன்னே இழுத்துச் செல்லும் விதியின் இயக்கப் போக்குகளைப் (mechanics) பற்றி நாம் இதுகாறும் அக்கறை காட்ட வில்லை. இக் கொள்கையை மேற்கொள்ள வேண்டுமெனில் நாம் ஒரு பிரச்சினையைச் சமாளித்தாகவேண்டும். பேராசிரியர் ஸைமன்ஸ் 'ஓர் எளிய சராசரிக் கருவியைச் சிபாரிசு செய்கிறார். இக் கருவியின் மூலம் முன்னே இழுத்துச் செல்லும் அல்லது பின்னே இட்டுச் செல்லும் விதிகளைப் பிரயோகிக்கலாம்.'[3] ஐந்தாண்டு காலம் பெயர்ந்து செல்லும் சராசரி (moving average)யை அடிப் படையாகக் கொண்டு, வருமானம் கணக்கிடப்பட வேண்டும். இக் கணக்கிடுதலில், ஆண்டுதோறும் கூடுதலாக அல்லது குறைவாகச் செலுத்திக் கணக்கைத் தீர்த்துக் கொள்வதற்கும் இடமிருந்தால், ஒரே சீராக இல்லாது, ஏறியும் இறங்கியும் வருமானம் உள்ளவர் களுக்கு நியாயம் வழங்குவதில் பெருத்த அளவு முன்னேற்றம் அடைய முடியும். சார்பின்றித் தனித்த பொருளில் இவ்வாறான சராசரிக் கருவி 'எளிதாக' இருக்க முடியாது. ஆனால், தற்பொழுது 'குறுகிய நமூனா'வின் (short form) இயல்பான அமிசமாயிருக்கும் குறுக்கு வழியில் செல்லுதல் போன்ற பல சிக்கல்களை அகற்றும்.[4]

அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் சரி, பிற நாடுகளிலும் சரி, முன்னே இழுத்துச் செல்லும் விதிகளுடன் அல்லது பின்னே இட்டுச் செல்லும் விதிகளும் பிரயோகிக்கப்படுகின்றன. ஆண்டுதோறும் இழப்புகளை முன்னே இழுத்துச் செல்வதற்கு இவ் விதிகள் பயன் படுத்தப்பட்டு இருக்கின்றன. அவை பெரும்பாலும் நிகர இழப்பு களைப் பற்றியதாகவே இருந்தன. ஆகவே, ஈண்டு யோசனை தெரிவித்தவாறு பல ஆண்டுகள் தொடர்ந்து வருமானத்தின் சரா சரியை உபயோகிக்க முற்படவில்லை. முன்னே இழுத்து அல்லது பின்னே இட்டுச் செல்லும் இழப்புகளில் பொதுவான இழப்புகள் சேர்க்கப்படவில்லை. தனியாள் வருமானவரி (பதிவு செய்யப் படாத நிறுவனத்திலிருந்து கிடைக்கும் தனியாள் வருமானங்கள்) கார்ப்பரேஷன், வருமான வரிகள் இவை யிரண்டின் கீழும் நிகரத் தொழில் இழப்புகளை முன்னே இழுத்துச் செல்வதற்கு அநுமதிக்கப் பட்டிருக்கிறது. தற்பொழுது அமுலில் இருக்கும் சட்டத்தின்படி நிகரத்தொழில் இழப்புகளை ஓராண்டுக்குப் பின்னிட்டுச் செல்ல லாம். இவ்வாறு பின்னே இட்டுச் செல்லப்படாத இழப்புகளை

ஐந்தாண்டுகளுக்கு முன்னே இழுத்துச் செல்லலாம். இழப்புகளை முன்னே இழுத்துச் செல்வதற்கு முன்பு, அவற்றைப் பின்னே இட்டுச் செல்லவேண்டும். குறிப்பிட்ட சில ஆண்டுகளுக்குத் தொழிலின் நிகர வருமானத்திலிருந்து தொழில் இழப்புகளைப் பிடித்தம் செய்வது நல்லதென்றால், அதே கொள்கையை எல்லாத் தனி நபர்களுக்கும் ஏன் கடைப்பிடிக்கக் கூடாது ? எந்த ஓராண்டிலும் சரிக்கட்டிய மொத்த வருமானத்திலிருந்து (adjusted gross income) விலக்குகளுக்கும், பிடித்தங்களுக்கும் மிகையாகவே முன்னே இழுத்துச் செல்லும்படியும், பின்னர் (அல்லது முன்னர்) ஏற்படும் வரிதாங்கு வருமானத்தில் இம் மிகையைப் பிரயோகிக்கும்படி ஒரு தனியாளை அநுமதிக்க வேண்டும். அடிக்கடி ஒரே சீராக இன்றி மிகவும் மாறுதல்களை அடைந்து கொண்டிருக்கும் வருமானங்களுக்கு நியாயம் கிடைப்பதற்காக, குறிப்பிட்ட சில ஆண்டு காலத்திற்கு வரிதாங்கு வருமானத்தின் சராசரியை எடுத்துக்கொள்ளும் ஒரு நடவடிக்கையை மேற்கொள்வதும் அறிவுக்குப் பொருத்தமானதே யாகும்.

தனிப்பட்ட வரிசெலுத்துவோர்களிடையே நீதியை வழங்குவதற்காகக் குறிப்பிட்ட சில ஆண்டு கால அளவுக்கு வருமானங்களின் சராசரியை எடுத்துக் கொள்ளும் முறை சிபாரிசு செய்யப்படுகிறது. இதன் மூலம் தற்பொழுது மிகுந்த ஏற்ற, இறக்கங்களைக் கொண்ட வருமானங்களைப் பெறுவோர்பேரில் காட்டப்படும் பேதங்காட்டுகை அகற்றப்படும். ஆயினும், மற்றொரு பக்கத்தில், வாணிபச் சுழலுக்கு எதிரிடையாக வருமான வரிகளைப் பயன்படுத்துவதற்கு, சராசரி முறையைக் கடைப்பிடிப்பதன் மூலம் பல பிரதிகூலங்கள் ஏற்படுகின்றன. பொருளாதார வீக்க காலங்களில், விலை வீக்கத்திற்குக் காரணமாக விருக்கும் மிகைவாங்கும் சக்தியை அகற்றுவதற்கு, வரிவிதிப்பைப் பயன்படுத்தவேண்டும். சராசரித் திட்டத்தினால் அப்பொழுது நடப்பில் உயர்ந்த வருமானத்தைப் பெறுவோர் தன் உயர்ந்த வருமானத்தின் ஒரு பகுதியைப் பின்னே இட்டுச் செல்வதன் மூலம், முந்திய வருமானங்களை அக்கால அளவிற்கான சராசரி மட்டத்திற்குக் கொணர்ந்துவிடுவார். முந்திய இழப்புகளை இங்ஙனம் சரிக்கட்ட வேண்டுமென்றால், நடப்பு ஆண்டில் பணவீக்கத்திற்கு எதிரிடையாக விதிக்கப்படும் உயர்ந்த வீதங்களிலிருந்து நடப்பு வருமானத்தின் பெரும் பகுதி தப்பித்துக் கொள்ளும். நடப்பு வருமானம் முந்திய ஆண்டுகளில் கிடைத்த குறைந்த வருமானத்துடன் சேர்க்கப்படுமானால், குறைந்த வரி வீதங்களுக்கே அது ஆட்படும். எவ்வாறாயினும் பணவீக்கத்திற்கு எதிரிடையான வரிவிதிப்

யின் நோக்கம் நிறைவேறுது. வீதப் பட்டியல்களை மேற்கொண்டு சரிக்கட்டுவதன் மூலம் இவ்வாறு வரியிலிருந்து விடுதலையடைந்த நிதிகளின் ஒரு பகுதியை மீண்டும் வரிவீச்சில் பிடித்துப் போட முடியும் [5]

## வருமானத்திலிருந்து மூலதன இனங்களை ஒதுக்குகை (Exclusion of Capital Items from Income)

பின்னிட்டு ஒரு காலத்தில் இதே அளவு வருவாய்கள் கிடைக்கக் கூடிய சாத்தியக் கூற்றை ஊறுபடுத்தாத வகையில் வருவாய்களைப் பயன்படுத்தலே என்ற நமது வருமானத்தைப்பற்றிய விளக்கத்தை மீண்டும் நினைவு கூர்வோம். வருவாயின் யாதாயினும் ஒரு பகுதியை உபயோகப்படுத்துவதனுல் இச் சாத்தியக்கூறு ஊறு படுமானுல், அவ்வாறு ஊறுபடுவது மூலதனமாகவோ அல்லது அதற்குச் சமதையான மூலதனம் ஆக்கப்பட்ட மானிட ஈட்டும் ஆற்றலாகவோதான் இருக்கக்கூடும். வரிவிதிப்பினின்று மூலதனத்திற்கு விலக்களிப்பதில் வருமானவரிச் சட்டங்கள் மிகவும் உன்னிப்பாக இருக்கின்றன. இதே விதமாக மானிட ஆஸ்திகளைப்பற்றிக் கூற முடியாது. தனியாள் சேவையின் வாயிலாக வருமானத்தைப் பெறும் ஒருவர், காலம் செல்லச் செல்ல அவருடைய தலையாய ஆஸ்தியான வருமானத்தை ஈட்டும் திறன் குன்றுவதை உணர்கிருர். வயதினுலோ, மூப்பினுலோ அல்லது மரணத்தினுலோ ஒரு குறிப்பிட்ட வயதில் மனிதன் தன்னுடைய ஈட்டும் ஆற்றலை இழந்து விடுகிருன். நுட்ப முறைப்படிக் கூற வேண்டுமாயின், அவருடைய சேவைக் காலம் ஒரு வரையறைக் குட்பட்டதே எனலாம். ஆகவே, அவர் பொருளீட்டிக் கொண்டிருந்தாலும், அவருடைய முழு ஈட்டத்தையும் (சம்பளம் அல்லது கூலி) வருமானமாகக் கொள்ள முடியாது. ஏனெனில், எந்திரம் அல்லது கட்டடத்தின் மூலதன மதிப்பிற்குச் சமதையாக, மானிடர் படிப்படியாகப் பெறும் இழப்புகளை இவ் வீட்டங்களின் ஒரு பகுதி பிரதிபலிக்கிறது. வட்டி வருமானத்தைத் தரும் மூலதனம் நிரந்தரமானதாகக் கொள்ளப் படுகிறது ஏனெனில், ஒரு குறிப்பிட்ட மூலதனக் கருவியின் ஆயுட் (சேவைச்)காலம் முடிந்த பின்பு, அதை ஒரு புதிய மூலதனக் கருவியைக் கொண்டு மாற்றுவதறகாகத் தேய்மானத்தைப் பிடித்தம் செய்த பின்புதான் அவ் வருமானத் தொகை யாங்கணும் வரையறுக்கக் கூடியதாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. இதே போன்று ஒரு மனிதனுடைய சேவைக்காலம் முடிந்தவுடன் அவனுடைய மூலதனம் ஆக்கப்பட்ட ஈட்டும சக்தியை மாற்றுவதற்கு வேண்டிய தொகையை நடப்பு வருவாயிலிருந்து பிடித்தம் செய்த பின்பே, தனியாள் சேவையுனின்று கிடைக்கும் உண்மையான வருமானத்

தையும், இதே முகாந்திரங்களைக் கொண்டே, நிர்ணயிக்க முடியும். அவர் திரட்டிய காப்பு நிதியைக் கொண்டு வேறொரு மனிதரை வாங்க முற்படுவதை இயல்பாகவே நம்மால் எண்ணவும் முடியாது. அஞ்ஞான்று தனியாளின் ஈட்டும் ஆற்றலை அவருடைய சேமிப்பு களின் நிதியைக் கொண்டே ஈடுசெய்யவேண்டும். அவருடைய சேமிப்புகளே அவருடைய ஈட்டும் ஆற்றலை நிரந்தரமானதாக ஆக்குகின்றன. ஓர் எந்திரம் எங்ஙனம் தன்னை ஈடுசெய்யும் நிதியைப் படைக்க முடியும் என்று எதிர்பார்க்க முடியாதோ, அதைப் போன்றே ஒரு மானுடனையும் தன்னை ஈடுசெய்யும் நிதியைப் படைப்பான் என்று எதிர்பார்க்க முடியாது. ஒரு தொழிலாளி இறக்கும் பொழுது அவனுடைய ஈட்டும் ஆற்றலை இழப்பதன்றி, ஈட்டும் ஆற்றலுக்கான முடையும் அவனுடன் இறக்கிறது என்று வாதிக்கும்பொழுது மூலதனத்திற்கு உரியவரின் தேவைகளும் நிரந்தரமானவை அன்று என்று வாதிக்கலாம்.

வியாபார வருமானவரி நோக்கங்களுக்காக வரிதாங்கு நிகர வருமானத்தை நிர்ணயிப்பதற்கு மூலதனத்தின் தேய்மானத்தைப் பிடித்தம் செய்யவேண்டும் என்று பொதுவாக ஒப்புக்கொள்ளப் பட்ட உண்மை வரிச்சட்டங்களில் தொடர்ந்து கையாளப்படுகிறது. இதே போலவே உலோக, பெட்ரோலியம் டிபாசிட்டுகள், மரம் (காடு) இவற்றிற்கு உரியவர்களும் தாராளமாகக் கரைந்து போத லுக்குப் (depletion) பிடித்தம் செய்து கொள்ளும்படிக் கூட்டாட்சி யின் சட்டம் அநுமதிக்கிறது. 1952ஆம் ஆண்டில் அக வருவாய் ஆணையருக்கு நவநாகரிகச் சின்னங்கள் என்று தங்களைக் கருதிக் கொண்ட சிலர் எழுதிய கடிதத்தினால் இப் பிரச்சினையின் பொது வியப்பைச் சுட்டிக் காட்டலாம். அவர்கள் தங்கள் தலையாய ஆஸ்தி களை (வனப்பும், உடற்கட்டும்) ஒரு காலக் கூறில் இழக்க நேரிடும் என்றும், அதனால் தங்களுக்கு மார்க்கட்டு இல்லாமலும், அல்லது வருவாய் குறைந்தும் போகுமென்றும்,[6] ஆகவே இக் காரணங்களுக் காக ஓரளவு வருமானவரியில் நிவாரணம் அளிக்கவேண்டும் என் றும் விண்ணிப்பித்துக்கொண்டார்கள். இப் பாத்தியதைகளின் சக்தியை, அழகை ஆராதிப்பவர்கள் மட்டுமின்றி, நீதியின் காவலர்களும் ஒப்புக்கொள்வார்கள். தனியாள் சேவைகளி லிருந்து கிடைக்கும் ஏனைய வருமானங்களையும் இதே போன்று நடத்த வேண்டும் என்பது தெளிவு. ஈண்டு உடற்கவர்ச்சியின்றி தனியாள் சேவையைச் செய்யும் திறன், கரைந்து கொண்டு போகும் ஆஸ்தியாக இருக்கும். ஆண்டொன்றுக்குக் கூலி மூலம் 4,000 டாலர் வருவாயைப் பெறுவது, அதே அளவு வட்டி வருவாய் பெறுவதைப் போன்ற தூய (கலப்பில்லாத) வருமானமன்று. வட்டி வருவாய், தேய்மானத்தைப் பிடித்தம் செய்த பின்பு கிடைத்த

வருமானமாகும். ஆனால், கூலி வருவாய் அப்படிப்பட்டதன்று. ஆகவே, ஆண்டு ஒன்றுக்கு வட்டி வருமானமாகப் பெற்ற 4,000 டாலர்மீது வரிசெலுத்தும் திறன் சற்றுக் குறைவாகவே இருக்க வேண்டும் என்பது பெறப்படும்.

கடந்த காலத்தில் தனியாள் சேவையின் மூலம் கிடைத்த வருமானத்திலிருந்து ஒரு பிரத்தியேகமான பிடித்தத்தைச் செய்து கொள்ளவதற்குக் கூட்டாட்சியின் வருமான வரி வகை செய்தது. இவ் விதியைப் பயன்படுத்திய பொழுது அஃது 'ஈட்டிய வருமான வரவு' (earned income credit) என்று குறிக்கப் பெற்றது. இச் சொற்றொடரைப் பயன்படுத்தியது நம்முடைய ஆகூழ் அன்று. இதனால் பிடித்தத்திற்கான காரண விளக்கம் புரியாததாக ஆயிற்று. ஏனெனில், தனியாள் சேவையிலிருந்து கிடைத்த வருமானம் 'ஈட்டிய வருமானம்' என்று சொல்லப்பட்டது. உடைமை அல்லது செல்வத்திலிருந்து கிடைத்த வருமானம் 'ஈட்டப் படாத வருமானம்' என்றும் கூறப்பட்டது. இச் சொற்றொடர் 'ஈட்டிய வருமானம்' என்ற சொற்றொடருக்கு நேர் எதிராயிருப்ப துடன், மக்களின் வயிற்றெரிச்சலுக் குரியதாகவும் இருக்கிறது. இத னால் பொதுமக்கள் சமூகத்திற்கு ஈட்டப்படாத வருமானத்தினால் குறைந்த பயன்பாடே ஏற்படுகிறது. ஆகவே, பொருளியல் துறை யிலும் அதை அவ்வளவாகச் சரியென நிலைநாட்ட முடியாது என்ற முடிவுக்கு இயல்பாகவே வந்தனர்.

1924ஆம் ஆண்டைய சட்டத்தில் இப் பிடித்தம் முதன் முதல் தோன்றியது. 1932ஆம் ஆண்டு வரை அடுத்தடுத்து வந்த சட்டங் களிலும் இப் பிடித்தம் சாதாரண வரியில் 25 சதவிகிதமாக இருந் தது (இஃது மேல்வரிக்குச் செல்லுபடியாகாது). இச் சட்டம் முழுமையும் 1932ஆம் ஆண்டுச் சட்டத்தினால் அகற்றப்பட்டது. இப் பிடித்தம் இன்றியே, நிகர வருமானத்தில் 10 சதவிகிதமாகப் பிடித்தத்தைக் கணக்கிட்டு, மீண்டும் 1934ஆம் ஆண்டு பழைய நிலைமைக்கு இது கொணரப்பெற்றது. ஆனால், இது சாதாரண வரி நோக்கங்களுக்கு மட்டும்தான் பொருந்தும். மேலும், 3,000 டாலர் வரையிலுள்ள எல்லா நிகர வருமானமும் அவை தனியாள் சேவையி லிருந்து கிடைத்தாலும் சரி, உடைமையிலிருந்து கிடைத்தா லும் சரி, ஈட்டியதாகக் கொள்ளப்பட்டது. 14,000 டாலருக்கு மேற் பட்ட வருமானம், அஃது தனியாள் சேவையிலிருந்து கிடைத்த தாயினும் சரி, அல்லது உடைமையிலிருந்து கிடைத்ததாயினும் சரி, ஈட்டப்படாத வருமானமாகக் கொள்ளப்பட்டது. ஏற்கனவே இருந்த சாதாரண வரியின் 25 சதவிகிதத்தைவிட இத் தொகை மிகவும் 'பிசுநாறித்தனமா'ன வரவாகும். 1943-ல் ஈட்டிய

வருமான வரவு (earned income credit) ரத்து செய்யப்பட்டது. இதுவரை இதற்கு மீண்டும் புத்துயிரளிக்கவில்லை.

வரிச் சட்டங்களில் மூலதனத்தில் தேய்மானம் தொடர்ந்து அளிக்கப்பட்டதற்கும், ஈட்டிய வருமானத்தில் பிடித்தம் செய்வது வந்து போனதற்கும் காரணங்கள் யாவை? ஈட்டிய வருமான வரவுக்கான காரண விளக்கத்தைப் பொதுவாக ஒருவரும் புரிந்து கொள்ளவில்லை என்பது இதற்கான முதல் சமாதானமாகும். 'ஈட்டிய வருமான' வரவைப் பெறுவோர் இதைத் தன் சிறுமை கண்டு சட்டத்தால் தரப்பட்ட எதிர்பாராத வருமானமாக (wind fall) ஒரு வேளை கருதியிருக்கலாம். 'ஈட்டப்படாத வருமானத்தைப்' பெறுவோர் இதனை வருக்க பேதத்தைக் காட்டுவதாகக் கொண்டனர். தன்னை மீண்டும் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற விருப்பத்தினாலோ அல்லது உடைமை வருமானத்தைச் சமூகம் கண்டனம் செய்வதன் அறிவிப்பாகவோ இதைக் கொண்டனர். இக் கோட்பாட்டைப் பிரயோகிப்பதில் காங்கிரஸ் காட்டிய சலன புத்தியும் இதைத் தவறுதலாகப் புரிந்து கொண்டதைக் குறைக்கப் பயன்படவில்லை. பொதுமக்களின் குழப்பத்துடன் 1934-ல் காங்கிரஸின் குழப்பமும் சேர்ந்தது, 1934-ல் சிறிய வருமானங்களிலிருந்து ஈட்டிய வருமானங்களுக்கும் (3,000 டாலரும் அதற்குக் குறைந்த எல்லா நிகரவருமானமும் 'ஈட்டிய' வருமானம் என்று கொள்ளப்பட்டது) பெரிய வருமானங்களிலிருந்து கிடைத்த ஈட்டப்படாத வருமானங்களுக்கும் (14,000 டாலருக்கு மேற்பட்ட எல்லா நிகரவருமானமும் 'ஈட்டப்படாத' வருமானம் என்று கொள்ளப்பட்டது) வேறுபாடு கற்பிற்கக் காங்கிரஸ் தவறியது. ஈட்டிய வருமான வரவை சாதாரண வரிக்கு மட்டும் காங்கிரஸ் தொடர்ந்து பிரயோகித்தது, ஈட்டிய வருமானம் இன்னதென்று முடிவு செய்யாததாலேயே (indecision) ஆகும்.

இவ்வாறு முடிவு செய்யாமலிருந்த கொள்கைக்கு வருவாய் முடையே இரண்டாவது சமாதானமாகக் கூறப்படுகிறது.

நீதி பற்றிய முகாந்தரங்களுக்குப் பதிலாக வருவாய் பற்றிய முகாந்தரங்கள் மேலிடுகின்றன என்பது வரி வரலாற்றில் நிரம்பவும் காணப்படும் கிளர்ச்சிகளிலிருந்து தெரிகிறது. முதன் முதல் 1932-லும் மீண்டும் 1943-லும் வரவை ரத்து (repeal of the credit) செய்ததிலிருந்து தனியாள் சேவை வருமானங்களைப் பிரத்தியேகமாக நடத்துதல் ஆகூழைப் பொறுத்ததாகும் எனத் தெரிகிறது. 1943ஆம் ஆண்டு மேற்கொண்ட நடவடிக்கைக்குச் சமாதானமாக, நுகர்வுப் பண்டங்கள் மார்க்கட்டில் நிலவிய வீக்கத்தைக்

கட்டுப்படுத்துவதே அவ் வாண்டின் குறிப்பிட்ட ஒரு வரி நோக்கம் எனக் கூறலாம். பணவீக்கத்திற்கு எதிரிடையான கோணத்திலிருந்து பார்க்கும்பொழுது 'ஈட்டிய வருமானங்களைப்' பெற்றவர்கள் அப்பொழுது மிகவும் மோசமாக நடந்து கொண்டார்கள்.

காங்கிரஸின் முன்னுக்குப்பின் முரணான இந்தப் புதுமையான நடத்தைக்கு மேற்கூறிய இரண்டு சமாதானங்களும் பொதுப்படையாக இருத்தலினால், மூன்றாவது முகாந்தரம் ஒன்று சற்றுக் கடுமையாகவே கூறப்படுகிறது. சமுதாயக் காப்பு நிதிச் சட்டத்தின் ஓர் உறுப்பான (Social Security Act) முதுமையும், பிழைத்திருப்பவர்களின் ஈட்டுறுதி (old age and survivors' insurance)த் திட்டத்தின் விதிகளின்கீழ்த் தனியாள் சேவை வருமானங்களைப் பெறுபவரில் பெரும்பகுதியும் கொணரப்பட்டதனால் தனியாள் உழைப்பாளிக்குத் தன் வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்ட பின்பு வருமானம் பெறுவதற்கு வகை செய்யவேண்டிய அவசியம் இல்லாது போயிற்று. ஆகவே, இச் சட்டத்திற்குள் அடங்கிய உழைப்பாளிகள் தத்தம் கூலிகளை (பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரிகளுக்கான பிடித்தங்களுக்குப் பின்பு) உண்மையான வருமானமாகவே கொள்ளலாம். ஈட்டிய வருமான வரவைக் காங்கிரஸ் ரத்து செய்ததற்கு இதனை உண்மையான சமாதானமாக நாம் கூறவில்லை. உண்மையான சமாதானமாக நாம் கூறினாலும் இது தருக்க முறையில் ஏற்றுக் கொள்ளக்கூடிய சமாதானம் ஆகாது. பொது நலப் பாதுகாப்புத் திட்டக் கவிகையின் கீழ் 'ஈட்டிய வருமானத்தைப்' பெறும் பலர் வரவில்லை. தேய்மானப் பிடித்தங்களில் வகை செய்யப்பட்ட நடப்புக்குச் சமதையான நடப்புக்கும் இக் கவிகை வகை செய்யாதது இரண்டாவது காரணமாகும். ஏனெனில், இக் கவிகையால் உழைப்பாளிகளின் வருமானம் நிரந்தரமாக்கப்படவில்லை. சட்டப்படி ஓய்வு பெற்ற வயதிற்குப் பின்புள்ள வாழ்நாளில் உழைப்பாளிகளின் வருமானத்திற்கு இக் கவிகை வகை செய்கிறது. இறுதியாகப் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரிகள் வேலைக்கு அமர்ந்தவர்களின் சம்பளத்திலிருந்து பிடித்தம் செய்யப்பட்ட போதிலும், வருமானவரி நோக்கங்களுக்காக அவற்றைப் பிடித்தம் செய்ய முடியாது. இதனால் ஈட்டிய வருமான வரவுக்குப் பதிலியாகக் காங்கிரஸ் பொதுநலப் பாதுகாப்புத் திட்டத்தைக் கருதவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

### மூலதன ஆதாயங்களும், இழப்புகளும்

மூலதன ஆதாயங்கள், இழப்புகள் இவற்றின் இயல்பு : கூட்டாட்சியின் வருமானவரி விதிப்பின் மிகக் கஷ்டமான தீர்வு செய்யப்படாத

பிரச்சினைகளில் ஒன்று மூலதன ஆதாயங்களையும், இழப்புகளையும் நடத்துகை பற்றியதாகும். வாங்கிய விலையைவிடக் கூடுதலான விலைக்கு ஒரு மூலதன ஆஸ்தியை விற்றதன் வாயிலாக நாம் பெறும் நிதி ஆதாயமே மூலதன ஆதாயம் எனப்படும். மூலதன மதிப் பேற்றத்தினால் இவ் வாதாயம் ஏற்படுகிறது. இவ் வாதாயத்தைப் பெறுவோருக்கு வரிகளைச் செலுத்தும் திறன் இதனால் ஏற்படுகிறது என்பது தெளிவாகும்.[7] ஆஸ்திகளை விற்பதனால் இரண்டு வேறுபட்ட வகை ஆட்சி ஆதாயங்கள் ஏற்படுகின்றன. முதலாவது வகை ஆதாயங்கள் சாதாரணமாக வாணிபத் தொழிற் றுணிவுகளிலிருந்து கிடைப்பதாகும். வாணிபத்தில் பண்டங்களை வாங்கிய விலையை விடக் கூடுதலான விலைக்கே விற்கின்றனர். இவ்வித ஆதாயங்கள் வாணிப வருமானமாகும். வரி நோக்கங்களுக்காகப் பிற வருமானத்தை நடத்துவது போன்றே இவ் வாதாயங்களையும் நடத்த வேண்டும். இரண்டாவது வகையான மூலதன ஆதாயம் எப் பொழுதும் கிடைப்பதல்ல; சாதாரண முறையில் ஒருவர் ஈட்டும் வருமானத்திற்குப் புறம்பாய் வருவது. வருமான வரிவிதிப்பில் 'மூலதன ஆதாயங்கள் இழப்புக்கள்' இவற்றை நடத்துகையைப் பற்றிப் பேசும் பொழுது, நாம இவ் விரண்டாவது வகை மூலதன ஆதாயத்தையே குறிப்பிடுகின்றோம். மருத்துவர் ஒருவர் தன் தொழிலை நடத்துவதன் மூலம் பெறும் வருமானம் அவருடைய வழக்கமான வருமானமாகும். எப்பொழுதாயினும் கடன் பத்திரங் களையும், பங்குகளையும் வாங்குவதன் மூலமாகவும், விற்பதன் மூலமாகவும் அவர் அடையும் ஆதாயங்கள் இரண்டாவது வகை ஆதாயங்களுக்குச் சிறந்த உதாரணம்.

குறிப்பிட்ட சில வகை உடைமைகளை விற்பதன்மூலம் தனியாள் அடையும் ஆதாயங்கள் அல்லது இழப்புகளைக் கூட்டாட்சியின் வருமான வரிச் சட்டம், மூலதான ஆதாயங்கள், இழப்புகள் என்று விவரிக்கிறது. கீழ்க்கண்ட ஆஸ்திகளைத் தவிர வரி செலுத்துவோர் வைத்திருக்கும் பிற வகைச் சொத்துகளை இது குறிப்பிடுகிறது: (1) தன் சாதாரண வாணிபத்தில் முக்கியமாக வாடிக்கைக் காரர்களுக்கு விற்பதற்காக 'இருப்புச் சரக்கு' (stock in trade), (2) வாணிபத்தில் அல்லது தொழிலில் உபயோகப்படுத்தப்படும் தாவரச் சொத்து, (3) வாணிபத்தில் அல்லது தொழிலில் உப யோகப்படுத்தப்படும் தேய்மானத்திற்குள்ளாகும் சொத்து, அல்லது (4) அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள அரசாங்கங்களின் கடன் பத்திரங்கள்.[8] சாதாரணமாக ஒருவரின் வழக்கமான வாணிபம் அல்லது தொழிலுக்குப் புறம்பாகச் சொத்துகளை விற்பனை செய்வதன் மூலம் கிடைக்கும் ஆதாயங்களையும், இழப்புகளையும் இத் தலைப்பில் அடக்கி அவற்றைச் சிறப்பாக

நடத்துவது இதன் உட்கருத்தாகும். இவ்வாறு சம்பளங்களின் மீதும், கூலிகளின் மீதும் வரிதீட்டுவது போலவே பலசரக்குகளை வாங்கி விற்பதனுல் கிடைக்கும் ஆதாயங்களின் மீதும் வரி விதிக்கப்பெறும். ஆனுல், தன் குடியிருப்பை விற்றதனுல் கிடைக்கும் எந்த ஆதாயமும் வரி நோக்கங்களுக்கு ஒரு 'மூலதன ஆதாயமாகக்' கொள்ளப்பட்டு ஓரளவுச் சிறப்பாகவும் நடத்தப் படும். உண்மையான விற்பனை அல்லது பரிவர்த்தனை[9] யின் வாயிலாகவே ஒரு மூலதன ஆதாயம் அல்லது இழப்பைப் 'பெற முடியும்'—ஏட்டளவில் உள்ள ஆதாயங்களை ஏற்றுக்கொள்வதில்லை. நடைமுறையில் இவ்விதப் பிரத்தியேக வரி நடத்துகைக்கு ஆளான தலையாய மூலதன ஆஸ்திகள் முதலீட்டுக் கடன் பத்திரங்களும் தாவரச் சொத்துமே யாகும்.

வரிதாங்கு வருமானங்களில் சில குறிப்பிட்ட பண்புகளை உடைய ஒரு வருக்கத்தை நாம் இங்ஙனம் நடத்துகின்ரேம்.[1] இப் பண்புகளில் சில வருமாறு : (1) அவை அடிப்படையில் ஏறி இறங்கிக் கொண்டேயிருக்கும் தன்மை, (2) வரியில் அநுகூலம் பெறுவதற்சாக அவற்றைக் குயுக்தியாகக்கையாளக் கூடிய தன்மை, (3) பெருத்த வருமானம் பெறுவோர்களிடையே அவற்றைப்பற்றிய சிறப்பான நிலைப்பாடு. சாதாரணமாக வருமானத்தை ஈட்டும் நடவடிக்கைகளுக்குப் புறம்பாக இருப்பதால், ஒரு சராசரி மனிதனுக்கு மூலதன ஆதாயங்கள் அல்லது இழப்புகள் எப்போதாயினும் தான் கிடைக்கின்றன. ஆயினும், இவ் வாதாயங்களும் இழப்புகளும் பொதுவாக 'ஊக வாணிபம் செய்வோருக்கு'க் கிடைக்கின்றனவேயன்றி 'முதலீடு' செய்வோருக்குக் கிடைப்பதில்லை. மேலும் மூலதன ஆதாயங்களும், இழப்புகளும் வாணிபச் சுழலின் போக்கையும், விலைகளின் போக்கையும் பெரிதும் சார்ந்திருக்கின்றன. மூலதன ஆதாயங்கள், இழப்புகள் இவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய்கள் ஏற்ற இறக்கங்களுக்குப் பெரிதும் உட்படுகின்றன என்று கருவூலத்தின் அநுபவம் நமக்குக் காட்டுகிறது. 1926ஆம் ஆண்டிலிருந்து 1940ஆம் ஆண்டு வரை மூலதன ஆதாயங்களிலிருந்து ஆண்டுதோறும் கிடைத்த சராசரி வருவாய் சுமார் 120 மில்லியன் டாலராகும். ஆயினும் 1928ஆம் ஆண்டில்தான் மிகக் கூடுதலான 576 மில்லியன் டாலர் வருவாய் கிடைத்தது. 1930, 1931, 1932ஆம் ஆண்டுகளில் பிற வருமானத்திலிருந்து மிகையாக மூலதன இழப்புகளைப் பிடித்தம் செய்ததால் கருவூலம் உண்மையில் வருமானத்தை இழந்தது.[10]

1956ஆம் ஆண்டைய வருமானவரி விவர அறிக்கைகளில் அறிக்கை செய்யப்பட்ட மூலதன ஆதாயங்கள்அல்லது இழப்புக்களி

லிருந்து கீழ்க்கண்ட பட்டியல் தயாரிக்கப் பெற்றது. இவ்விதமான இனங்கள் உயர் வருமான வருக்கங்களிடையே[11] குவிந்திருப்பதை இப் பட்டியல் ஏடு காண்பிக்கிறது.

| சரிக்கட்டிய மொத்த வருமான வருக்கம் (டாலரில்) | மூலதன ஆதாயம் அல்லது இழப்புடன் கூடிய வரி தாங்கு விவர அறிக்கைகளின் எண்ணிக்கை (ஆயிரத்தில்) | மொத்த வரி தாங்கு விவர அறிக்கைகள் (ஆயிரத்தில்) | மொத்த வரிவிவர அறிக்கைகளின் % ஆக ஆதாயம் அல்லது இழப்புடன் கூடிய வரி விவர அறிக்கைகள் |
|---|---|---|---|
| 600 - 5,000 | 979 | 26,970 | 3·6 |
| 5,000 - 10,000 | 1,103 | 16,179 | 6·8 |
| 10,000 - 25,000 | 735 | 2,651 | 27·8 |
| 25,000 - 100,000 | 265 | 435 | 60·8 |
| 100,000-ம் அதற்கு மேலும் | 20 | 23 | 88·2 |

மூலதன ஆதாயங்கள், இழப்புகள்[12] ஆகியவை பற்றிய கூட்டாட்சி நடத்துகையின் கண்ணேட்டம் (Survey of Federal Treatment of Capital Gains and Losses) : வருமானவரி விதிப்பைப் பற்றிய பிற தொல்லை தரும் பிரச்சினைகளைப் போன்றே, மூலதன ஆதாயங்கள், இழப்புகள் இவற்றைப் பற்றிய கூட்டாட்சி நடத்தும் முறையிலும் மாறுதல்கள் ஏற்படுவதுமன்றி, யாதொரு மையக் கொள்கையையும் தொடர்ந்து பின்பற்ருத தன்மையும் புலனுகும். 1913ஆம் ஆண்டு முதலில் இயற்றப்பட்ட தற்காலக் கூட்டாட்சியின் வருமான வரி, பிற வருமானத்துடன் நிகர மூலதன ஆதாயங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தது. அத்துடன் இச் சட்டம் முழு வருமானத்தின் பேரிலும் ஒரே படித்தான சாதாரண வரி, மேல் வரி வீதங்களில் வரிவிதிப்புச் செய்தது. இச் சட்டம் நிகர மூலதன இழப்புகளை (அதாவது மூலதன ஆதாயங்களுக்கும் மிகையான மூலதன இழப்புகள்) ஒப்புக் கொள்ளவில்லை. மூலதன இழப்புகளை மூலதன ஆதாயங்களிலிருந்து பிடித்தம் செய்துகொள்ளலாம். ஆனல், ஆதாயங்களைக் காட்டிலும் இழப்புகள் மிகையாக இருந்தால் அவற்றைப் பிற வருமானத்திலிருந்து பிடித்தம் செய்யக் கூடாது. ஆகவே, தொடக்கத்தில் வரிதாங்கு வல்லமையைப் பொறுத்த வரையில் ஆதாயங்களாகப் பெற்ற ஒவ்வொரு டாலரும் பிற வருமானத்தின் மூலம் பெற்ற ஒவ்வொரு டாலருக்கும் சமதையாகக் கொள்ளப்பட்டது. எல்லா மூலதன இழப்புகளையும் எதிர்மறை

வருமானமாகக் (negative income) கொள்ளக் காங்கிரஸ் தயாராக இல்லை—அவற்றை எதிர்மறை மூலதன ஆதாயங்களாக மட்டும் ஏற்றுக் கொண்டது.

மூலதன இழப்புகளை மூலதன ஆதாயங்கள், பிற வருமானம் இவை இரண்டிலிருந்தும் முற்றும் பிடித்தம் செய்வதை 1918ஆம் ஆண்டையச் சட்டம் ஒப்புக்கொண்டது. ஆகையால், தொடர்ந்து மூலதன ஆதாயங்களும், இழப்புகளும் பூரணமான (உடன்பாட்டும் எதிர்மறையும் ஆன) வருமானங்கள் என்ற கொள்கை ஏற்றுக் கொள்ளப் பெற்றது. 1921-ல் மூலதன ஆதாயங்களையும், இழப்புகளையும் நடத்தும் விதத்தில் ஒரு மாறுதல் தோன்றியது. மூலதன ஆதாயங்களிலிருந்தும் பிற வருமானத்திலிருந்தும் மூலதன இழப்புகளை முழுதும் பிடித்தம் செய்யலாம். ஆனால், மூலதன நிகர ஆதாயத்தைப் பெறுபவருக்கு இவற்றில் ஒன்றைத் தேர்வதற்கு அநுமதி தரப்பட்டது. அவர் 12·5 சதவிகிதம் ஒரு வரியைச் செலுத்தலாம் அல்லது சாதாரணமாக அவர் தம் மூலதன ஆதாயங்களை நிகர வருமானமாகக் காட்டலாம். இந் நிகர வருமானம் சாதாரண வருமான வரிக்கும் மேல்வரிக்கும் உட்பட்டது. முந்தியதைத் தேர்ந்தெடுப்பாரேயாகில் மூலதன ஆதாயத்தையும் உள்ளிட்ட மொத்த நிகர வருமானத்தில் 12·5 சதவிகிதத்திற்குக் குறையாது அவர் மொத்த வரி செலுத்தவேண்டும். ஈராண்டுகளுக்கும் மேற்பட்டும் சொத்தின் விற்பனையிலிருந்து கிடைத்த ஆதாயங்களைமட்டும் இரண்டாவது கூறிய முறைப்படிக் கணக்கிடலாம். இதன் உட்கருத்தாவது மூலதன ஆதாயமும், பிற வருமானமும் ஒன்றல்ல என்பதே. மூலதன ஆதாயங்களைக் கூடுதல் வருமானங்களின் ஒரு பகுதியாகக் கொண்டால் இம் முறையினால் ஓரளவு நிவாரணம் ஏற்படும். ஆயினும் 1921ஆம் ஆண்டுச் சட்டத்தின் கீழ் மூலதன இழப்புகளை மூலதன ஆதாயங்களிலிருந்தும், பிற வருமானத்திலிருந்தும் பூராவும் பிடித்தம் செய்யலாம்.

1924ஆம் ஆண்டைய சட்டம் மூலதன நிகர இழப்புகளைப் பயன்படுத்துவதற்கான வரம்புகளை மீண்டும் புகுத்தியது. இவற்றை வருமானத்தைக் குறைப்பதற்குப் பயன்படுத்தலாம். மூலதன இழப்பைப் பொருட்படுத்தாது வரியைக் கணக்கிட்டால் மூலதன நிகர இழப்பில் 12·5 சதவிகிதம் பிடித்தம் செய்யலாம். ஆனால், அவ்விதமான பிடித்தத்தினால் மொத்த வரி 12·5 சத வீதத்திற்கு மேல் குறையக் கூடாது. எந்த ஆண்டிலேனும் வரியைக் குறைப்பதற்காகப் பயன்படுத்திய தொகையை விட மூலதன நிகர இழப்புகள் கூடுதலாக இருந்தால் இவ்வித இழப்புகளை முன்னே

இழுத்துச் சென்று, பின்னிட்ட ஆண்டுகளில் 'சாதாரண நிகர வருமானத்'தினின்றும் பிடித்தம் செய்து கொள்ளலாம். ஆனால், இவற்றைப் பின்னிட்ட ஆண்டுகளில் கிடைத்த நிகர ஆதாயத்திலிருந்து பிடித்தம் செய்யக் கூடாது.

1930-லிருந்து 1940 க்கு இடைப்பட்ட ஆண்டுகளில் வரி நோக்கங்களுக்காக மூலதன இழப்புகளை ஒரு வரம்புக்கு உட்படுத்தும் போக்கு தொடர்ந்து காணப்பட்டது. குறுங்கால ஆதாயங்கள் இழப்புகளுக்கும், நெடுங்கால ஆதாயங்கள் இழப்புகளுக்கும் இடையே வேறுபாடு கற்பித்ததுதான் இக் காலத்தில் ஏற்பட்ட தலையாய மாறுதலாகும். குறுங்கால ஆதாயங்களையும், இழப்புகளையும் காட்டிலும் நெடுங்கால ஆதாயங்களுக்கும், இழப்புகளுக்கும் சலுகை காட்டப் பெற்றது. குறுங்கால ஆதாயங்கள் பெரும்பாலும் ஊக வாணிகத்தன்மை உள்ளனவாகக் கருதப்பெற்றன. அதனால் (வரிக்குப் புறம்பான காரணங்களுக்காக) இவற்றுக்குக் குறைவான முக்கியத்துவம் கொடுத்தால் போதும் என்றும் கொள்ளப்பட்டது. 1920-க்கும் 1930-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் பிற்பகுதியில் ஊகவாணிகம் மிகையாக இருந்ததால், அக் கால மக்களின் மனநிலை ஊக வாணிபத்திற்குப் பரிவு காட்டுவதாக இல்லை. வரியைப்பற்றிய கருதுகோளில் மற்றொரு காரணத்திற்கான வலுத்த அடித்தளமும் இருக்கிறது. நெடுங்கால ஆதாயங்களையும் இழப்புகளையும் ஓராண்டுக்கு மேற்பட்ட காலத்தில் வந்ததாகக் கொள்ளலாம் ஆதலால், அவற்றை ஓராண்டு வருமானமாகக் கொண்டு அவற்றைப் பெற்ற ஆண்டிலேயே வரிவிதித்தால், பலர் விஷயத்தில் விரும்பத்தகாத அளவுக்கு மிகக் கடுமையான வரி வீதங்களைப் பிரயோகிக்க வேண்டி வரும். தாம் செலுத்த வேண்டிய வருமான வரித் தொகையைக் கட்டுப்படுத்துவதற்காக குறுங்கால ஆதாயங்களையும் இழப்புகளையும் திறமையாகவும், குயுக்தியாகவும் கையாள முடியும் என்று அறிந்திருந்ததும் இவ் வகை ஆதாயங்களையும் இழப்புகளையும் சற்றுக் கொடுமையாக நடத்துவதற்கான மூன்றாவது காரணமாகும். மூலதன ஆதாயங்கள் ஒன்றுமில்லாமலும், பிற நிகர வருமானத்தையும் வரி நோக்கங்களுக்காகக் குறைப்பதற்கு ஏற்ற வகையில் குறுங்கால இழப்புகளைக் காட்டுவதற்கு வாய்ப்பு இருந்தது. கூடுதல் வருமானக் கும்பல்களில் இருந்தவர்களே சிறப்பாக இப் பணியில் ஈடுபட்டனர். இதன் மூலம் அக் காலத்தில் விதிக்கப்பட்ட உயர்ந்த மேல்வரி வீதங்களைப் பயனில்லாததாகச் செய்தனர். மேலும் சிலர் விஷயத்தில் இழப்புகளை நிரூபிப்பதற்காகச் செய்யப்பட்ட விற்பனைகள், காங்கிரஸின் கருத்துப்படி நல்லெண்ணத்துடன் செய்யப்பட்டவை அல்ல. அவையெல்லாம் ஆண்டின் இறுதியில் குடும்பத்தினரிடையே அல்லது நண்பர்களிடையே

இழப்புகளை நிரூபிக்கும் நோக்கத்துடன் செய்யப்பட்ட பரிவர்த்தனைகளாகும். சிலர் விஷயத்தில் இப் பரிவர்த்தனைகள் தற்காலிகமானதென்றும் பின்பு கண்டுபிடிக்கப்பட்டது. வரித் தினத்திற்குப் பின்பு உடனேயே இக் கடன் பத்திரங்கள் யாவும் முதலில் அவற்றுக்குச் சொந்தக்காரர்களாக இருந்தவர்கள் கைக்கு மாறியது.

1932ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி குறுங்கால இழப்புகளை குறுங்கால ஆதாயத்தினின்று மட்டுமே பிடித்தம் செய்யலாம். இதனால் நிகர குறுங்கால இழப்புகளின் வாயிலாகப் பிற வருமானத்தைக் குறைக்கும் சாத்தியக்கூறு அகற்றப்பட்டது. பின்னிட்ட ஆண்டுகளுக்கு நிகரக் குறுங்கால இழப்புகளை இட்டுச் செல்வதற்கு 1933-ல் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. 1934-ல் ஆதாயங்களும் இழப்புகளும் விரிவான ஒரு பட்டியலின்படி பாகுபடுத்தப்பட்டன. இதன்படிக் கடன் பத்திரங்களைப் பத்தாண்டுகளுக்குமேல் வைத்திருந்து அதிலிருந்து கிடைத்த ஆதாயங்கள் மிக நெடுங்கால ஆதாயங்கள் எனவும், ஓராண்டுக்கு உட்பட்ட காலத்தில் கிடைத்த ஆதாயங்கள் மிகக் குறுங்கால ஆதாயங்கள் எனவும் கொள்ளப்பட்டன. முந்தியது தம் தொகையில் 30 சத விகிதமாகவும், பிந்தியது 100 சத விகிதமாகவும், இரண்டுக்கும் இடையிலுள்ளவை பல படித்தரங்களாகவும் குறிக்கப் பெற்றன. மூலதன ஆதாயங்களுடன் 2000 டாலரைக் கூட்டிய தொகையின் அளவுவரை மூலதன இழப்புகள் அநுமதிக்கப்பட்டன. ஆனால், பின்னிட்ட ஆண்டுகளுக்கு இழப்புகளை இட்டுச் செல்வது அநுமதிக்கப்படவில்லை. மேலும், ஆதாயங்களின் மீதிருந்த 12·5 சத விகித வீதாச்சார வீதமும் அகற்றப்பட்டது. வீதாச்சார வீதத்தைக் கொடுத்த பின்பும் வழக்கமான வரி வீதங்களுக்கு அவை ஆளாயின. பிற்பாடு இயற்றப்பட்ட சட்டங்கள் அனைத்தும் இந் நடத்து வீதமுறையைத் தீவிரமாக மாற்றவில்லை. ஆயினும், சத விகிதங்கள், ஹோல்டிங் கால அளவுகள் (holding periods), நிகர இழப்புக் கழிவுகள் (net loss allowances) இவை மாறுபட்டு வந்திருக்கின்றன.

1954ஆம் ஆண்டைய அக வருவாய்த் தொகுப்பு விதியின்படி, ஆஸ்திகளை ஆறு திங்களுக்கோ அல்லது அதற்குக் குறைவான காலத்திற்கோ வைத்திருந்தால், அதிலிருந்து கிடைத்த மூலதன ஆதாயங்கள் அல்லது இழப்புகள் குறுங்கால ஆதாயங்களாக அல்லது இழப்புகளாகக் கொள்ளப்பட்டன. இவ் விதிதான் தற்பொழுது அமுலில் இருப்பது. ஏனையவை எல்லாம் நெடுங்கால ஆதாயங்கள் அல்லது இழப்புகள் ஆகும். ஆதாயங்களையும், இழப்புகளையும் நடத்தும் விதம் மிகச் சிக்கலானது. ஆனால், அதன்

எல்லைக் கோடுகளை ஆறு சந்தர்ப்ப சாத்தியங்களின்கீழ்ச் சர்ச்சை செய்யலாம். முதலில் நெடுங்கால இழப்புகளிலிருந்து நெடுங்கால ஆதாயங்களைக் கழித்து நிகர நெடுங்கால ஆதாயத்தை அல்லது இழப்பை நிர்ணயிக்கிறோம். இதே போன்று குறுங்கால ஆதாயத்திற்கும், குறுங்கால இழப்புக்கும் உள்ள வேறுபாடே நிகர குறுங்கால ஆதாயம் அல்லது இழப்பாகும். இவ்வாறு நெடுங்கால, குறுங்கால நிகரப் புள்ளித் தொகைகளைச் சேர்த்தால் கீழ்க்கண்ட ஆறு விளைவுகளில் யாதாயினும் ஒன்றை நாம் பெறலாம். அவை யாவன:

**1. நிகர ஆதாயச் சாத்தியக் கூறுகள் :**

அ. *நிகர நெடுங்கால ஆதாயம்—நிகர குறுங்கால இழப்பு = நிகர ஆதாயம்.*

ஆ. *நிகர குறுங்கால ஆதாயம்—நிகர நெடுங்கால இழப்பு = நிகர ஆதாயம்*

இ. *நிகர நெடுங்கால ஆதாயம் + நிகர குறுங்கால ஆதாயம் = நிகர ஆதாயம்*

**2. நிகர இழப்புச் சாத்தியக் கூறுகள் :**

அ. *நிகர நெடுங்கால இழப்பு—நிகர குறுங்கால ஆதாயம் = நிகர இழப்பு*

ஆ. *நிகர குறுங்கால இழப்பு—நிகர நெடுங்கால ஆதாயம் = நிகர இழப்பு*

இ. *நிகர நெடுங்கால இழப்பு + நிகர குறுங்கால இழப்பு = நிகர இழப்பு*

மேலே கொடுத்தவாறு சாத்தியக் கூறுகளை நடத்தும் விதத்தைச் சட்டம் எப்படி விவரிக்கிறது என்பதை இனிக் காண்போம் :

**1. நிகர ஆதாயச் சாத்தியக் கூறுகள் :** *(அ)* மேலே *(1) (அ)* வில் குறிப்பிட்டவாறு நிகர ஆதாயம் குறுங்கால இழப்புகளை விஞ்சிய நெடுங்கால ஆதாய உபரியாக இருக்குமானால், வரி செலுத்துவோரின் விருப்பப்படி, இதை இரண்டு வழிகளில் யாதாயினும் ஒன்றின் மூலம் வரி விதிக்கலாம். எவ்வாறாயினும், இரு வழிகளிலும் நெடுங்காலமாக இருப்பதால் நிகர ஆதாயத்தில் 50 சத விகிதமே வரிக் கணக்கிடுதலில் சேர்கிறது. தன்னுடைய வரிவிவர அறிக்கையில், நிகர ஆதாயத்தில் 50 சத விகிதத்தை மொத்த

வருமானமாக வரிசெலுத்துவோர் பதிந்து, சென்ற அதிகாரத்தில் கூறியாங்கு தனது வரியைக் கணக்கிடத் துணியலாம்; அல்லது பிற வருமானத்தின்மீது கணக்கிடப்பட்ட தனியானதோர் வரியாகக்கொண்டு, இந்த நிகர ஆதாயத்தில் 50 சதவிகிதத்தின் மீது 50 சதவிகிதம் வீதாச்சார வீதமாகச் செலுத்துமாறு அநுமதிக்கப்படலாம். வருமானத்தில் வரியின் இறுதிநிலை வீதம் 25 சதவிகிதத்திற்கு மேல் இருக்குமானுல், அவர் இரண்டாவதாகக் கூறப்பட்ட முறையையே உபயோகிப்பார். நெடுங்காலத்தில் நிகர ஆதாயத்தைப் பெறும் பெருத்த வருமானம் உடையவர்களுக்கு இம் முறையினுல் ஒரு சலுகை கிடைக்கிறது.

(ஆ) 1 (ஆ)வில் குறிப்பிட்டாங்கு நிகர நெடுங்கால இழப்பைக் காட்டிலும், நிகர குறுங்கால ஆதாயம் மிகையாக இருந்து அதனுல் நிகர ஆதாயம் கிடைத்தால் எந்தப் பிற வருமானத்தையும் போலவே இந் நிகர ஆதாயமும் நடத்தப்படுகிறது. அது பூராவும் மொத்த வருமானத்தில் சேர்க்கப்பட்டு வரி செலுத்துவோரின் வருமானத்திற்கு எந்த வரி வீதங்களை விதிக்க வேண்டுமோ அதே வீதங்களுக்கு உள்ளாகிறது.

(இ) நிகர நெடுங்கால ஆதாயம், நிகர குறுங்கால ஆதாயம் இவை யிரண்டின் மொத்த விளைவே நிகர ஆதாயமானுல், வரி செலுத்துவோர் அவற்றைத் தனித் தனியே வெவ்வேருகப் பிரிக்க வேண்டும். நிகர நெடுங்கால ஆதாயம் மேலே (அ)வில் கூறியாங்கு நடத்தப்படுகிறது.

2. **நிகர இழப்பின் சாத்தியக் கூறுகள் :** (அ), (ஆ), (இ) : நெடுங்கால இழப்புகளுக்கும், குறுங்கால இழப்புகளுக்கும் இச் சட்டம் வேறுபாடு கற்பிக்கவில்லை. 1,000 டாலர் வரை பிற வருமானத்தை ஓராண்டின் நிகர இழப்புக்கு ஈடாகச் சரிக்கட்டலாம். 1,000 டாலருக்கு மிகையான தொகையை ஐந்தாண்டுகளுக்கு இட்டுச் சென்று, எந்த ஓராண்டிலும் 1,000 டாலர் வரை பிற வருமானத்திலிருந்தும், நிகர ஆதாயங்களிலிருந்தும் கழிக்கலாம்.

சுருங்கக் கூறின், எந்த ஓராண்டிலும் கிடைத்த பிற வருமானத்திலிருந்து ஓரளவே நிகர மூலதன இழப்புகளைப் பிடித்தம் செய்யலாம். ஆனுல் இவ் விழப்புகளை ஐந்தாண்டுகளுக்குக் கொண்டு செல்லலாம். ஆதாயங்களை அடைவதற்கு முன்பாக எவ்வளவு காலம் ஆஸ்திகள் வைக்கப்பட்டிருந்தன என்பதைப் பொறுத்து நிகர மூலதன ஆதாயங்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஆஸ்திகளை ஆறு திங்களுக்குமேல் வைத்திருந்து அவற்றை விற்றதனுல்

இவ் விழப்புகள் ஏற்பட்டிருந்தால், வரிசெலுத்துவோர் அவற்றை 25 சதவிகிதம் வீதாச்சார வீதத்தில் வரி விதிக்கும்படித் தேர்ந்து எடுத்துக் கொள்ளலாம் (அதாவது 50 சதவிகிதம் வீதப்படி, ஆதாயத்தில் 50 சதவிகிதத்தின்மீது வரி விதித்தல்). ஆயினும், தன்னுடைய ஆதாயங்களில் 50 சதவிகிதத்தையும் சேர்த்த பின்பு, தன்னுடைய வரி செலுத்தும் வருமானம் 20 அல்லது 22 சதவிகித அடைப்பில் அடைபடக் காண்பாரேயாகில், வரி செலுத்துவோர் அவற்றைத் தனியாக வேருகக் குறிப்பிடாது பிற வருமானத்துடன் சேர்த்தே குறிப்பிடுவார். ஆறு திங்களுக்கு அல்லது அதற்குக் குறைவான காலத்திற்கு வைத்திருந்த ஆஸ்திகளை விற்பதனுல் நிகர ஆதாயம் ஏற்படுமானுல், பிற வருமானத்தைப் போன்றே இவ் வாதயமும் நடத்தப்படுகிறது.

மூலதன ஆதாயங்கள் மூலதன இழப்புகள் இவற்றை நடத்தும் விதத்தில் குளறுபடியான மாறுதல்கள் ஏற்பட்டதை அடுத்து, சில பொதுவான தோரணைகள் தெளிவாகத் தெரிகின்றன. சுருங்கக் கூறின் மூலதன ஆதாயத்தை வருமானமாகக் கொண்டு வரி விதிக்கும் போக்கு நமக்குத் தென்படுகிறது. ஆயினும் தற்காலத்தில் பெரும் பகுதி காலக்கூற்றுக்கும், வரி செலுத்துவோருக்கும் அவ்வித ஆதாயங்களின் மீது வீதாசார வீத வரியைச் செலுத்தும் விருப்பத் தேர்வும் தரப்பட்டிருந்தது. மூலதன ஆதாயங்களை வருமானமாகக் கொண்டாலும், அவற்றுக்குப் பிற வருமானங்களுக்கு உள்ளது போல—குறைந்தது உச்ச அடைப்புகளிலாவது அதே அளவு வரி செலுத்தும் திறன் இல்லை என்பதே இதன் உட்கருத்தாகும். மூலதன இழப்புகளை நடத்துவதில் இந்த அளவு முரண்மை கூடக் காணப்படவில்லை. அவற்றை எதிர்மறையான இலாபங்களாகக் கொண்டு எக்காலத்தும் அவற்றுக்கு ஓரளவு சலுகை தரப்பட்டது. ஆயினும் பொதுவாக அவற்றை ஒரு வரம்புக்கு உட்பட்டே பிற வருமானங்களிலிருந்து பிடித்தம் செய்யலாம். 1918-க்கும் 1924-க்கும் இடைப்பட்ட காலத்திலேயே அவை முழுதும் பிடித்தம் செய்யக் கூடியவையாக இருந்தன. 1918-க்கு முன்பு அவை பிடித்தம் செய்யப்படவில்லை. 1918-1924ஆம் காலக் கூற்றிலிருந்து அவை பொதுவாகப் பெயரளவிலேயே (சிறு தொகைகளாக) பிடித்தம் செய்யப்படுகின்றன. இறுதியாக அண்மைக் காலத்தில் நெடுங்கால ஆதாயங்களுக்கும் குறுங்கால ஆதாயங்களுக்கும், குறுங்கால இழப்புகளுக்கும் நெடுங்கால இழப்புகளுக்கும் உள்ள வேறுபாடு வளர்ந்து வந்திருக்கிறது. பொதுவாகநெடுங்கால ஆதாயங்களுக்கும், இழப்புகளுக்கும் ஓரளவு சலுகை தரப்படுகிறது.

மூலதன ஆதாயங்களை வருமானமாகக் கொள்ளலாமா? வருமான வரியில் மூலதன ஆதாயங்களுக்கு யாதொரு இடமுமில்லை என்று சில சமயம் வலியுறுத்திப் பேசப்படுகிறது. ஏனெனில், மூலதன ஆதாயங்கள் வருமானமன்று. மூலதன வளங்கள், மனித வளங்கள் அல்லது இயற்கை வளங்கள் ஆகிய இவற்றிலிருந்து உற்பத்தியாகி ஓடி வரும் வரவுகளை வருமானம் என்று விளக்கம் தருவதன் மூலம் இந் நிலை ஏற்படுகிறது. அதிலிருந்து எதிர் பார்த்த பெருத்த வருமானத்தை மூலதனமாக ஆக்குவதன் மூலம், மூலதன மதிப்பேற்றம் ஏற்படலாம். ஆனால், மூலதன மதிப்பேற் றத்தையே வருமானமாகக் கொள்ள முடியாது. இக் கருத்தின்படி வருமானம் பெருகும்பொழுது அதன்மீது வருமானவரி விதிப்பது பொருத்தமாகும். ஆனால், மூலதன மதிப்பேற்றத்தின்மீது வருமான வரி விதிப்பது பொருத்தமன்று. வருமான வரியின்கீழ் மூலதன ஆதாயத்தின்பேரில் வரிவிதிப்புச் செய்வது இரட்டைவரி விதிப் பாகும் என்றுகூட வாதிக்கப்படுகிறது. இவ் வரியால் வருமானத்தி லிருந்து ஒரு பகுதி எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஆனால், மூலதன மதிப்பு வருமானத்தைப் பொறுத்துத்தான் இருக்கின்றது. இங்ஙனமிருந்தும் மூலதன மதிப்பு ஏறுமானால், மூலதன மதிப்பேற் றத்தின்மீது இரண்டாவதாக வரி ஒன்றும் விதிக்கப்படுகின்றது. மூலதனத்தைப் பேணும் நிதியிலிருந்து தனித்து வேறாகவே நாம் மதிப்பேற்றத்தைக் கொள்ளவேண்டி இருக்கலாம். மூலதன மதிப்பேற்றத்தை மதிப்பின் பாய்காலாகக் கொள்ளலாம். மேலும் மூலதனத்தை ஒரு நிதியாகவும், வருமானத்தை ஓர் ஆற்றொழுக் காகவும் கொண்டு இவை இரண்டுக்கு மிடையே வேறுபாட்டை அதிகமான அளவுக்குக் கற்பிக்கக் கூடாது. எடுத்துக்காட்டாக ஒரு சில்லறை வணிகரின் பண்டங்களின் மதிப்பு ஏறலாம். இங்ஙனம் ஏறுவது அவற்றை வாங்கியதற்கும், விற்றதற்குமான இடைப்பட்ட காலத்திலேயே நிகழ்கிறது. இம் மதிப்பில் ஒரு பகுதி உற்பத்திக் காரணிகளான உழைப்பு, கட்டுக் கடையில் வைப்பது, சிப்பம் கட்டுவது, விளம்பரம் செய்வது போன்றவைகளால் கூட்டப் படுகிறது. இவற்றினால் உற்பத்தியிலும், அதன் மதிப்பிலும் மாறுதல் ஏற்படுகிறது. ஆனால் மதிப்பேற்றத்தில் (விலையை உயர்த்துவது) ஒரு பகுதி உடைமைக்காரருக்கோ அன்றித் தொழிற்றுணிவு செய்வோருக்கோ கிடைக்கும் ஊதியமாகும். விளையுளின் சேவை களுக்கு மேற்கொள்ளப்பட்ட செலவுகளினால் இவ் வுண்மையான மூலதன மதிப்பேற்றத்திற்குக் காரணம் காட்ட முடியாது. இலாபத்தின் இவ் வமிசம் வருமானம் அல்ல,மூலதனம் தான் என்று கூறலாமா? ஒரு வருமான வரியின்கீழ் இவ் வாற்றொழுக்குப் போன்ற வரவின்மீது வரி விதிக்கக் கூடாதா? இவ் வாற்றொழுக்கு

வருமானம் என்பதும், ஆகவே அதன்பேரில் வரி விதிப்புப்புச் செய்யலாம் என்பதும் தெளிவாகும்.

வேறு முகாந்தரங்களைக் கொண்டும் மூலதன ஆதாயங்களை வருமானம் என்று துணியலாகும். முதற்கண் நாம் முன்னர் வருமானத்திற்குத் தந்த விளக்கத்திலிருந்து மூலதன ஆதாயங்களை வருமானமாகப் பாகுபாடு செய்வதைச் சரியென நிலைநாட்டலாம். பின்னிட்ட ஒரு காலத்தில் இதற்குச் சமதையான அளவு வரவுகள் பெறும் சாத்தியக் கூற்றை ஊறுபடுத்தாமல், நாம் செலவு செய்யக் கூடிய வரவுகளே வருமானம் என்று ஏற்கனவே விளக்கம் தந்தோம். மூலதனத்தில் கைவைக்காது மதிப்பில்[13] ஏற்பட்ட நிகர மதிப்பேற்றத்தின்மீது வரிவிதிப்பதனால் மூலதனத்தின் உற்பத்தித்திறன் குன்றாது. இரண்டாவதாக மூலதன ஆதாயங்களைப் பெறுவோர் அவற்றைக் கூடுதல் வருமானமாகக் கொள்வதுடன் அவற்றைத் தங்கள் விருப்பம்போல் செலவழிக்கலாம் என்றெண்ணுவது திண்ணம். உண்மையில் இவ்வாறான ஆதாயங்கள் ஒரோவழி கிடைப்பதால் அவற்றை எதிர்பாராத வருமானமாகவே (windfall income) கொள்ளலாம். ஆகவே இவ் வருமானங்களுக்கு மிகக் கூடுதலான அளவு வரிகளைச் செலுத்தும் திறன் உண்டு.

மூலதன ஆதாயங்களைத் தம் விருப்பம்போல் செலவு செய்யக் கூடிய வரவுகளாகக் கொண்டால், அவைகளைப் பெறும் தருணத்தில் அவற்றுக்கு வரிகளைச் செலுத்தும் திறன் இருப்பதைக் காணலாம். அவை ரொக்கமாகக் கூடிய நிதிகளைப் பிரதிபலிக்கின்றன. ஆகவே, மூலதனத்திலிருந்து முன்னர்க் கிடைத்த அளவுக்குக் குறையாது, தொடர்ந்து வருமானத்தைப் பெறும் சாத்தியக் கூற்றை மூலதன ஆதாயத்தின் மீது விதிக்கும் வரிகள் பாதிக்கா. இந் நிதிகளைச் செலவழிக்கலாம் அல்லது சேமிக்கலாம் (அல்லது வரி விதிக்கலாம்). மூலதன ஆதாயங்கள் தொடர்ந்து ஏற்படுவதில்லை என்பதை நாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். அவற்றைப் பயன்படுத்துவதனால், எதிர்காலத்தில் வருமானத்தைப் பெறக்கூடிய வல்லமையை அது மோசமாக்குகிறது என்பதை நாம் மறுத்தே ஆக வேண்டும். ஊக வாணிகத்தை ஒரு தொழிலாக மேற்கொண்டவருக்கு மூலதன ஆதாயங்கள்தான் அவருடைய ஒரே வருமானம். வருமானத்தைப் பெறாது மூலதனவட்டங்களாகப் (premiums) பெறுகிறாரென்றும் ஆகவே அவற்றின் பேரில் வரிவிதிப்புச் செய்யக் கூடாதென்றும் வாதிப்பதில் பொருளில்லை; ஏனெனில் இவ்விரண்டுக்கும் இடையே சிறப்பான வேறுபாடு ஒன்றுமில்லை. இவ்வாறு வரிநோக்கங்களுக்கு, தான் விற்கும் பண்டங்களின் மதிப்பேற்றத்திலிருந்து ஒரு வியாபாரி பெறும் வருமானத்திற்கும், சம்பளத்துக்கு

வேலை செய்யும் தொழிலாளியின் ஓராண்டைய வரவுக்கும் யாதொரு வேறுபாடும் இல்லை என்பதைக் காண்போம். இரண்டு வருமானங்களுக்குமுள்ள ஒரே ஒரு வேறுபாடு சம்பளம் ஓரளவு தொடர்ந்து கிடைப்பதே ஆகும். ஊக்க வாணிகத்தைத் தொழிலாக மேற்கொண்டிருப்பவரின் வருமானத்திற்கும், ஒரு வியாபாரியின் வருமானத்திற்கும் யாதொரு வேறுபாடும் இல்லை. ஊக வாணிபத்தைப் பொழுதுபோக்காகக் கொண்டவர், குறைநேரத் தொழிலாகக் கொண்டவர் இவர்கள் பெறும் வருமானத்திலிருந்து, வாணிகத்தைத் தொழிலாகக் கொண்டவரின் வருமானம் வேறுபட்டதா ? இருவரும் ஒரே காரியத்தையே செய்கின்றனர். கீழ்க்கண்ட மூவரிடையேயுள்ள வரிசெலுத்தும் வல்லமைகளில் வேறுபாடுகள் கண்டுபிடிப்பது இயலாததொன்றாகும். A, ஆண்டொன்றுக்கு 10,000 டாலரைச் சம்பளமாகப் பெறுகிறார். B, வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டிருப்பதன் மூலம் ஆண்டொன்றுக்கு 5,000 டாலரையும், ஆஸ்திகளை விற்பனை செய்ததன் மூலம் ஆண்டொன்றுக்கு 5,000 டாலர் மூலதன ஆதாயங்களாகவும் பெறுகிறார். C, ஆண்டொன்றுக்கு 10,000 டாலரை மூலதன ஆதாயங்களாகப் பெறுகிறார் ('ஆண்டொன்றுக்கு' என்று சொல்வதன் மூலம் ஆண்டுதோறும் எல்லா வருமானங்களிடையேயும் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் ஒரு சராசரிப் போக்கினால் (process) நிரவல் செய்யப்பட்டனவென்று கொள்வோம்). ஆகவே, நீதியை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்பொழுது எல்லோர் மீதும் ஒரே மாதிரியே வருமானவரி விதிப்புச் செய்யவேண்டும் என்ற முடிவிற்கு நாம் வருகிறோம். இப் பிரச்சினையைப் பற்றி எழுந்த காரசாரமான விவாதங்களைக் கருத்தில் கொண்டே நாம் இம் முடிவிற்கு வரவேண்டியிருக்கிறது.

மூலதன ஆதாய வரிவிதிப்புக்கு எதிர்வாதங்கள் : மூலதன ஆதாய வரிவிதிப்புக்கான எதிர்வாதங்களை இரு வகைகளாகப் பிரிக்கலாம். வருமான வரிவிதிப்பில் எந்த மூலதன ஆதாயங்களையும், இழப்புகளையும் சேர்க்கக்கூடாது என்பது முதல் எதிர்வாதமாகும். மூலதன ஆதாயங்களையும், இழப்புகளையும் ஒரு குறிப்பிட்ட முறையில் வரிவிதிப்புச் செய்வதற்கு மறுப்பு தெரிவிப்பது இரண்டாவது எதிர்வாதமாகும். மூலதன ஆதாயங்களும், இழப்புகளும் உண்மையில் வருமான இனங்கள்தானா என்ற வினாவைப் பொறுத்தது அவற்றின் மீது எந்தவிதமான வருமான வரிவிதிப்புக்கும் எதிர்ப்புத் தெரிவிப்பது. இது கருதுகோளளவில் ஏற்படும் பயனற்ற வினாவல்ல. ஏனெனில் பேதங்காட்டி இரட்டை வரிவிதிப்புச் செய்வதில் இதற்குத் தலையாய செயல்முறைப் பிரயோகங்கள் உண்டு. எடுத்துக்காட்டாக மூலதனத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தில் ஏற்றங்களை

எதிர்பார்த்து, மூலதன மதிப்பேற்றம் ஏற்பட்டதென்றால், அவ் வேற்றத்தை வருமானமாகக் கொண்டு வரிதீட்டியும், மீண்டும் பின்பு இப் பெருகிய வருமானத்தைப் பெற்றகாலை வரிதீட்டியும், செய்வது தருக்க முறைக்கு ஏற்றதாக இருக்குமா ? ஏட்டளவிலான ஆதாயங்களை வருமானமாகக் கொண்டு வரிவிதிப்புச் செய்தால், இவ் வினாவிற்கான விடை எதிர்மறையாக இருக்கும். ஆஸ்தியை விற்று ஆதாயத்தைப் பெற்றால்தான் வரிவிதிப்புச் செய்ய இயலும். இதனால் மூலதன ஆதாயம் ஒரு நபருக்குச் சேர்கிறது (இவ் வாதாயம் அவருடைய பிற வருமானத்தைப் போன்றதேயாகும்). வேறொருவருக்கு எதிர்பார்த்தபடி கூடுதலான வட்டியும், இலாப ஈவும் அல்லது வாரமும் கிட்டலாம். இதற்குப் பேதங்காட்டுகை என்றோ அல்லது இரட்டை வரிவிதிப்பு[14] என்றோ பட்டம் சூட்டுவது சிரமமானதாகும்.

மூலதன ஆதாயங்களை வருமானவரிக்கு உட்படுத்துவதில் இரண்டாவது எதிர்வாதம் ஒன்றும் உள்ளது. இவ் வரியினால் கார்ப்பரேஷன் கடன் பத்திரங்களைத் தடையேதுமின்றி வாங்குவதற்கும், விற்பதற்கும் இடைஞ்சல் ஏற்படுகிறது. இது பொதுவாகப் 'பூட்டி வைத்த' (locked in) பிரச்சினை என்று குறிப்பிடப்படுகிறது. எவ்வெப் பங்குதாரர்களின் பங்குகளின் மதிப்பு மார்க்கட்டில் ஏறிவிட்டதோ, அவற்றைச் சாதாரணமாக விற்றுப் பெறும் ஆதாயங்களை இவ் வரிகளின் காரணமாக அடைய முடியாது பங்குதாரர்கள் அவதிப்படுகிறார்களாம். அண்மைக் காலத்தில் மதிப்பேறிய பங்கை விற்பதும், விற்றுக் கிடைத்த நிதியைக் கொண்டு வேறு கூடுதல் இலாபம் அளிக்கக்கூடிய பங்குகளை[15] வாங்குவதும் நன்னிமித்தம் ஆகா. வரி போடப் படுவதால்தான் கடன் பத்திரங்கள் இவ்வாறு பூட்டப் படுகின்றன. இதனால் ஏற்படக்கூடிய பிரதிகூலமான விளைவுக ளாவன : (1) வரியினால் கடன் பத்திரங்களுடைய விலைகளின் நிலையற்ற தன்மை அதிகரிக்கிறது. (2) வரியினால் முதலீட்டு நிதிகளின் இடம் பெயராமையினால் உத்தமப் பகிர்வு முறையை விடக் குறைந்த அளவிலேயே வளப்பொருள்கள் பகிர்வு செய்யப் படும். முதல் விளைவைப் பொறுத்தவரை, ஒரு பங்கின் விலை ஏறிக்கொண்டிருக்குமானால், தற்பொழுதும் பங்குகளை வைத்திருப் பவர்களால் தங்கள் பங்குகளை விற்க முடியாமையினால் மார்க் கட்டில் பங்குகளின் சப்ளை குறைவதாகவும், அதனால் தற்பொழுது விற்பனையாகும் பங்குகளின் விலை எவ்வளவு உயர்ந்திருக்கக் கூடுமோ அதைவிடக் கூடுதலாகத் தேவையினால் உயர்த்தப் படுகிறதென்றும், ஒரு முகாந்தரம் கூறப்படுகிறது. மூலதன ஆதாய வரிவிதிப்பு இல்லையானால் பங்குகளை வைத்திருப்பவர்கள்

அவற்றை விற்று இலாபத்தை அடைவதன்றி விலைகளை ஏறுமுக மாக எழுப்பும் பிரச்சினைகளை எதிர்க்க முடியுமென்றும் வாதிக்கப் படுகிறது. இம் முகாந்தரத்தை முழுதும் மாற்றிப் பிற வருமா னத்தை எந்த அளவுக்கும் மூலதன இழப்புகள் ஈடுசெய்யக் கூடு மானால், பங்குதாரர்கள் விலை வீழ்ந்து கொண்டிருக்கிற மார்க்கட் டில் விற்கத் தயாராயிருப்பார்கள் என்றும், இதனால் விலைகளின் இறங்குமுகமான சக்திகளுக்கு அதிக ஊட்டம் ஏற்படுமெனவும் வாதிக்கலாம். இவ்வாறு ஆதாயங்களையும், இழப்புகளையும் வரி முறை பொருட்படுத்தாவிடில், பங்குதாரர்கள் விலையேறிக் கொண்டிருக்கின்ற மார்க்கட்டில் பங்குகளை விற்க முனைவார்களே அன்றி, விலை இறங்கிக்கொண்டிருக்கின்ற மார்க்கட்டில் விற்க முனையமாட்டார்கள். முதலீட்டு நிதிகளின் இடப்பெயர்ச்சியைப் பொறுத்தவரை மூலதன நிதிகளை வைத்திருப்பவர்கள் தற்போதைய பங்குகளில் தங்கள் நிதிகளை முடக்கியிராவிடில், இவற்றை விட அதிக இலாபத்தைத் தரும் புதிய நிறுவனங்களில் மிக விரைவாக இந் நிதிகளை முதலீடு செய்வார்கள் என்று ஒரு வாதம் கூறப் படுகிறது.

இருந்தாலும், பூட்டப்பட்ட பிரச்சினையின் கடுமையைப் பெரிதும் மிகைப்படுத்திக் கூறியதாகக் கருத இடமிருக்கிறது. கீழ்க் கண்ட முகாந்தரங்களைத் தலையாயதாகக் கொண்டு ஹெல்லர்[16] இம் முகாந்தரங்களைப் பற்றிய தனது ஐயத்தைத் தெரிவிக்கிறார். மார்க்கட்டு நிலைபேறு முகாந்தரத்தைப் பொறுத்தவரை, Aயின் பங்குகளை விற்பதனால் கிடைக்கும் வரவுகளைச் சாதாரணமாக B பங்குகளை வாங்க உபயோகப்படுத்துவதில்லையா? இங்ஙனம் உபயோகித்தால் Aயின் மீது படிந்திருக்கும் இறங்குமுகமான விற்கும் சக்திக்கு ஈடாக Bயின் ஏறுமுகமான வாங்கும்சக்தி இருக்கும். மேலும், மூலதன ஆதாயவரிகளைக் குறைத்தால், தற்பொழுது அரசாங்கத்திற்கு வரியின் வாயிலாகத் திருப்பப்படும் மார்க்கட்டு நிதிகள் மார்க்கட்டிலேயே தங்கும். இதனால் கடன் பத்திரங்களில் முதலீடு செய்தலில் அக்கறை அதிகம் ஏற்படும். அவற்றின் மொத்தத் தேவையையும் வலுவடையச் செய்யும் இந்த வேறுபாடு விரிந்தால் கடன் பத்திரங்களின் மார்க்கட்டுகளுக்கு அதிக நிதிகள் கடுகிவரும். இதனால் பங்குகளுக்கு மிக வலிவான தேவை ஏற்படும். ஒரு வலிமையான விலை வீக்கத்திற்கான அடிப்படையும் தோன்றும்.

முதலீட்டு நிதிகளைக் கூடுதல் இடப்பெயர்ச்சி உள்ளனவாகச் செய்ய விரும்புவதைப் பொறுத்தவரையில் தொலைத்தோற்றத்தைப் (perspective) பற்றிய தலையாய பிரச்சினை ஒன்றும் எழுகின்றது. வரியே இல்லாதிருக்கும் நிலையுடன் ஒப்பிடும்பொழுது, மூலதன

ஆதாய வரிவிதிப்பினுல் இடம் பெயராமை ஏற்படுகின்றது. ஹெல்லர் கூறுவது போன்று மூலதன ஆதாயங்களை வேற்றுமைப் படுத்தி நடத்தும் விதத்திஞல் 'நெடுங்கால ஆதாயவரி வரிச் சுவரின் மிகத் தாழ்ந்த பத்தி ஆகிறது.' மிகப் பெரிய வேற்றுமைப்பாட்டுக்கு வகை செய்யப்படுமாஞல் பங்கு மார்க்கட்டில் நிதிகள் ஆற் ருெழுக்குப்போல் வந்து சேருவது ஒருவேளை மேலும் விரி வடையலாம். ஆனல் இவ்வித 'இடப்பெயர்ச்சி' விரும்பப் படுகின்றதா ? வரிக்குப் புறம்பான முடிவுகளிஞல் நிதிகளின் ஒழுக்கு பாதிக்கப்படுகின்றது. ஆகவே இவ் வேறுபாட்டைக் களைவதன் வாயிலாக நாம் விரும்பும் இடப்பெயர்ச்சியை நன்ருக அபிவிருத்தி அடையச் செய்யலாம். பிற வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரிவீதங்களைத் தாழ்த்தியோ அல்லது நெடுங் கால ஆதாயங்களின்மீது விதிக்கப்படும் வரிவீதங்களை உயர்த் தியோ நாம் இவ் வேறுபாட்டைக் களைந்து இடப்பெயர்ச்சியை அதிகரிக்கலாம்.

மூலதன ஆதாயங்களின்மீது வரிவிதிக்கும் குறிப்பிட்ட முறை களுக்குப் பல எதிர்வாதங்கள் உள்ளன. மூலதன இழப்புகளை முழுதும் பிடித்தம் செய்து, மூலதன ஆதாயங்களைப் போன்று அவற்றைச் சமதையாக நடத்தாத வரையில், மூலதன ஆதாயங் களின் மீது வரிவிதிப்பதை முற்றும் எதிர்ப்பது இவ் வெதிர் வாதங் களில் தலையாயதாகும். மூலதன ஆதாயங்களிலிருந்து மூலதன இழப்புகளைப் பிடித்தம் செய்வதற்கு அநுமதி தரக்கூடாது என்ற எண்ணம் ஒருபோதும் இருந்ததில்லை. ஆனல், பிறவருமானத்தி லிருந்து நிகர மூலதன இழப்புகளைக் கணிசமான அளவு பிடித்தம் செய்வதை அண்மைக் காலத்தில் அரசாங்கம் தொடர்ந்து உறுதி யுடன் எதிர்த்து வந்திருக்கின்றது. இச் செயல் முறையை இரண்டு சமாதானங்கள் கூறி விளக்கலாம். ஆனுல் இச் செயலைச் சரியென்று நிலைநாட்ட முடியாது. மூலதன இழப்புகள் முழுதும் பிடித்தம் செய்யக்கூடியவையாயிருந்தால் உயர்ந்த வருமான அடைப்புகளில் கூடுதலான வரிகளைத் தவிர்க்கும் நோக்கத்துடன், விற்பனைக்கான கடன்பத்திரங்களைச் சரியானபடி பொறுக்கியெடுப்பதன் வாயி லாகப் பெரும் முதலீடு செய்வோர் அடிக்கடி மூலதன இழப்புகளைப் படைக்க முடியும் என்பது முதலாவது சமாதானமாகும். இவ்வாறு பிற வருமானத்திலிருந்து அதிக வருவாய்களைக் கூடுதல் வீதங் களின் வாயிலாகப் பெறும் திறன் பெரிதும் பாதிக்கப்படும். வரி நோக்கங்களுக்காக இழப்புகளை வேண்டுமென்றே படைத் தாலும் சரி, படைக்கா விட்டாலும் சரி, வாணிபச் சுழலின் இறங்கு முகச் சுற்று பெருத்த முதலீட்டு இழப்புகளை இன்றியமையாது ஏற்படுத்துவதோடு, குறைந்த மட்டத்தையுடைய 'சாதாரண

வருமானத்தையும்' படைக்கும். இவ்விதமாக இறங்குமுகச் சுற்றில் வருமானவரி வருவாய்களில் சாதாரணமாகப் பெரும் குறைச்சல் ஏற்படுகிறது. பிற வருமானத்திலிருந்து இழப்புகளைப் பிடித்தம் செய்யும் பொழுது, இக் குறைச்சல் மூலதன இழப்புகள் மூலம் அதிகமாக்கப்படுகிறது. வாணிபச் சுழலின் இறங்குமுகச் சுற்றின் போது வரிப் பளுக்கள் வெகுவாகக் குறைவது விரும்பத்தக்கதா என்பதை, இழப்புகளை முழுதும் பிடித்தம் செய்தற்குக் கூறப்பட்ட வருவாய் எதிர்வாதம், கருத்தில் கொள்ளவில்லை என்பதை வாசகர் கவனிக்கவேண்டும். ஆனால், நாம் இங்கே காங்கிரஸும், கருவூலமும் வரையறைக் குட்பட்ட பிடித்தத்தை ஆதரிப்பதற்கான காரணங்களை விளக்குவதற்கு முயன்றுகொண் டிருக்கின்றோம். இந்த ஏஜன்ஸிகள் இம்மாதிரியான காலக் கூறுகளில் வருவாய் உயர்ந்த மட்டத்தில் இருக்கவேண்டும் என்பதில் அளவுக்கு மீறிய அக்கறை காண்பிப்பதை நமக்கு அநுபவம் காட்டுகிறது.

மூலதன ஆதாயங்களுக்கு ஏற்றாற் போன்று மூலதன இழப்புகளை ஒரு வரம்புக்கு உட்படுத்தவேண்டும் என்ற இரண்டாவது விளக்கம், வரிசெலுத்துவோர்களின் ஒழுக்க வுறுதிகள்பேரில் ஏற்படும் விளைவுகளை ஆதாரமாகக் கொண்டுள்ளது. முழுப் பிடித்தத்திற்கும் வகை செய்யப்படுமானால்[17], யாராருக்கு வரிகளை எளிதில் செலுத்த முடியுமோ அவர்கள்தான் கடும் வரிவிதிப்பினின்று நிச்சயமாகத் தப்பிக்க முடியும். ஏனெனில், வரியிலிருந்து தப்பிப்பதற்காக அவர்களுக் கிருக்கும் ஆஸ்திகளின் பேரில் மூலதன இழப்புகளை அவர்களால் காட்ட முடியும். 1933ஆம் ஆண்டில் பெருஞ் செல்வந்தர் பலர் இம் மூலதன இழப்புகளைத் துணையாகக் கொண்டு சிறிதே வருமானவரி செலுத்தினர் அல்லது ஒன்றுமே செலுத்தவில்லை என்பதைக் கேட்ட பாமர மக்கள் அவர்களைக் கண்டித்தனர். ஆனால், வரிச்சட்டம் உரிமை தந்ததாலேயே அச் செல்வந்தர் இவ்விதம் செய்தனர். கருவூலமும், காங்கிரஸும் இவ்வித மனக் கசப்புகளைத் தவிர்க்க விழைவது இயல்பே. இதைத் தவிர்ப்பதற்கு எளிதில் கிடைக்கும் கருவி, மூலதன இழப்புகளுக்கான பிடித்தங்களை ஒரு வரையறைக்கு உட்படுத்துவதேயாகும். 1934க்கும் 1937க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் கூடுதலான வரிக்கொள்கையைப் பின்பற்றாது அரசாங்கம் ஒரு தாழ்வான வரிக்கொள்கையைப் பின்பற்றியிருக்குமானால், குறைந்த வருமானம் உடையவர்கள் பெரும்பாலும் வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருப்பார்கள். இம் மனக் கசப்புகளும் இவ்வளவு தீவிரமாக இருந்திரா.

நம் முந்திய சர்ச்சையிலிருந்து மூலதன நிகர இழப்புகள் எவ்வாண்டில் ஏற்பட்டனவோ, அவ் வாண்டில் அவற்றைப் பிற வருமானத்திலிருந்து முழுப்பிடித்தமும் செய்யாமல், பல ஆண்டுகள்

தொடர்ந்து சராசரிப் போக்கின் மூலம் பிடித்தம் செய்யவேண்டு மென்பது தெளிவாகும். நீதியை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால் வேறெந்த முறையும் தருக்க முறையில் அமைந்ததல்ல என்பது விளங்கும். இம்மாதிரி நடவடிக்கையை மேற்கொள்ளும் படிக் கூறுவதற்கு வேருெரு காரணமும் உள்ளது. கார்ப்பரேஷன் கடன் பத்திரங்களில், சிறப்பாகச் சாதாரணப் பங்குகளில் பேரங்கள் நடப்பதன் வாயிலாகவே மூலதன ஆதாயங்கள், இழப்புகள் இவற்றின் பெரும் பகுதியும் விளைகிறது. இக் கடன் பத்திரங்களில் பெரும் பகுதியும் துணிவு மூலதனத்தை (venture capital) பிரதி பலிக்கிறது. இவை முதலீட்டினின்றே எழுகின்றன. நாம் முந்திய அதிகாரங்களில் கண்டவாறு நாட்டு வருமானத்தின் மட்டத்திற்கு, முதலீட்டின் மட்டம் ஒரு தலையாய திறவுகோலாகும். ஆனால், மூலதன ஆதாயங்களின் பேரில் கடுமையான வரிவிதித்து, மூலதன இழப்புகளை அடியோடு விலக்காது விட்டுவிட்டால் துணிவு மூலதன முதலீட்டுக்குத் துணிவின்மை ஏற்படலாம்.[18] சில இடங் களில் இப் பிரச்சினையின் இக் கூறு மிகத் தலையாயதாகக் கருதப் படுவதால், ஆதாயங்களுடன் இழப்புகளையும் ஒரேபடியாய் நடத் துதல் தோற்றுவாய் எனவே கொள்ளப்படுகிறது. இக் கருத்தின்படி மூலதன ஆதாயங்களைக் காட்டிலும், மூலதன இழப்புகளைச் சிறிது உயர்ந்த விதமாய் நடத்தவேண்டும். அவை முற்றும் பிடித்தம் செய்யக் கூடியதாக இருக்கவேண்டும். பிற வருமானத்திலிருந்து மூலதன ஆதாயங்களை வேருகப் பிரித்து அவற்றின் பேரில் குறைந்த வீதாச்சார வீதங்களில் வரி போடவேண்டும். துணிவு மூலதனம் மிகவும் நொய்தாக இருக்கிறதென்றும், சிறப்பாக வாணிபச் சுழலுக்கு எதிரிடையான வரிக்கொள்கையை மனப்பூர்வமாகப் பின்பற்றுவதனுல் இங்ஙனம் காணப்படுகிறது என்றும் இக் கருத்து கொள்கிறது. முதலீட்டில் பற்ருக்குறை நேர்ந்தால், வரி வீதங்கள் குறையும் என்றும், அதனுல் மூலதன ஆதாயங்களுக்கும், அத்துடன் பிற வருமானத்திற்கும் ஓரளவு உண்மையான நிவாரணம் ஏற்படு கிறது என்றும் இக் கருத்து கொள்கிறது.

மொத்தத்தில் சீர்தூக்கிப் பார்க்கும்பொழுது, மூலதன ஆதாயங்களையும், இழப்புகளையும் சிறப்பாக நடத்தவேண்டும் என்பதற்கான முகாந்தரங்களில் நமக்கு முழுதும் நம்பிக்கை ஏற்பட வில்லை. இவ்விதம் நடத்துவதனுல் ஆதாயங்களின் மீதான வரிப் பளு குறையும். இதனுல் இதைவிடக் கூடுதலாக வரிசெலுத்தும் திறன் இல்லாத பிறவகை வருமானத்தின்பேரில் பேதங்காட்டுவ தாக முடியும். மூலதன ஆதாயங்களுக்குச் சமதையாகவே மூலதன இழப்புகளை நடத்துவதனுல் முதலீடு செய்தல் கடுமையாகப் பாதிக்கப்படுமென்று நிரூபிக்கப்படவில்லை. குறிப்பாக மூலதன

இழப்புகளை முழுதும் பிடித்தம் செய்வதால் முதலீடு செய்தல் பாதிக்கப்படமாட்டாது. மூலதன இழப்புகளை முழுதும் பிடித்தம் செய்யவேண்டும் என்றால் வரிவிதிப்பில் பெருத்த மாறுதலைச் செய்யவேண்டும். இம் 'மாறுதல் நீதி அடிப்படையில் வேண்டப் படுவதே. இதனால் துணிச்சலாகத் தொழிற் றுணிவுகளில் முதலீடு செய்வதற்கான தற்காலத்திய தடை ஒன்று அகற்றப்படும். வருமானங்களின் சராசரியை ஒரு காலக்கூற்றுக்கு எடுத்துக் கொள்ள வேண்டியது இரண்டாவது பெருத்த மாறுதலாகும். மூலதன ஆதாயங்கள், இழப்புகளைப் பொறுத்தவரையில் இவ்விதச் சராசரியினால் நெடுங்கால ஆதாயங்கள், இழப்புகளையும், குறுங்கால ஆதாயங்கள் இழப்புகளையும் தனித்தனியாக வேறுபடுத்திக் காண் பதற்கான முடையிருக்காது. எல்லா ஆதாயங்களும், இழப்புகளும் நெடுங்காலத்தைச் சேர்ந்த வகையினதாகவே கொள்ளப்படும். ஏற்ற இறக்கங்களோடு கூடிய வருமானங்களின் வரிசெலுத்தும் திறனை, அவ் வருமானங்களை மாறுததாகக் கொண்டு அளவிடும் தீர்மானத்துடன் இஃது முற்றும் ஒத்திருக்கிறது. வருமானத்தைப் பெறும் காலத்திலேயே அதன்மீது வரிவிதிப்புச் செய்வதுதான் சிறந்த குறிக்கோளாகும். தருக்க முறையில் ஓராண்டுக்குக் குறை வான காலக்கூற்றின் ஆதாயங்களை அவ் வாண்டின் வருமானமாகக் கொண்டு வரி போடுவதே ஏற்புடைத்தாகும். ஓராண்டுக்கு மேற்பட்ட காலக்கூற்றில் கிடைத்த ஆதாயங்களை அக் காலக் கூற்றின் வருமானமாகக் கொண்டு வரிவிதிக்கவேண்டும். வருமானம் கிடைத்த காலக்கூற்றில் ஒவ்வோர் ஆண்டிலும் கிடைத்த வருமானப் பகுதியின்மீதுதான் வரிவிதிக்கவேண்டும். நிலையற்ற நடப்பு வருமானங்களுக்கான ஒரு பொதுவான சராசரித் திட்டம் இல்லாதவரையிலும், ஆதாயங்களுக்கும் இழப்புகளுக்கும் மட்டுமே சராசரி முறையைப் பிரயோகிக்க வேண்டும் என வாதிடுவது சிரமமாகும். ஆனால், நடைமுறையில் இயங்கக்கூடிய எளிதான திட்டத்தை ஆதாயங்களுக்கும், இழப்புகளுக்கும் பிரயோகிக்கலாம். குறுங்கால ஆதாயங்கள், இழப்புகளிலிருந்து, நெடுங்கால ஆதாயங்களையும், இழப்புகளையும், செறிவு (holding) காலக் கூறுகள் மூலமாக வேறுபடுத்தலாம். செறிவு காலக்கூற்றைப் பொறுத்து மாறுதல்டையும் ஆதாயத் தொகைகளின்மீது வரிவிதிப்புச் செய்யலாம். ஆயினும், தற்போதுள்ள முறை முற்றும் திருப்தி கரமாக இல்லை. மிகக் குறுகிய கால்க்கூறு ஓராண்டாக இருக்க வேண்டுமேயன்றி ஆறு திங்களாக இருக்கக் கூடாது. மிகக் குறுகிய கால்க்கூற்றை அடுத்துப் பல அடையாளங் காட்டக் கூடிய காலக் கூறுகள் (identifiable periods) இருக்க வேண்டும். இக் காலக் கூறுகள் ஒவ்வொன்றிலும் வரித்தளத்தில் வெவ்வேறுபட்ட வீதா சாரங்களைச் சேர்க்கவேண்டும். காலக்கூறுகளைப் பொறுத்து

ஆதாயம் அல்லது இழப்பின் வேறுபட்ட சதவிகிதங்களை, நீதி அடிப்படையில் சரியென் நிலைநாட்டலாமாயினும், நெடுங்கால ஆதாயங்களுக்குச் சிறப்பான ஒரு வீதத்தைப் பிரயோகிப்பதைச் சரியென் நிலை நாட்ட முடியாது. வருமானத்தைச் சராசரி ஆக்குவதற்குப் பதிலியாக நெடுங்கால் ஆஸ்திகளை (long-term assets) விற்பதன்மூலம் கிடைக்கும் நிகர ஆதாயத்தில் 50 சதவிகிதத்தைச் சேர்க்கலாமாயினும், அவற்றுக்குப் பிரயோகிக்கும் வீதாசார வீதமான 50 சதவிகிதத்தைச் சரியெனக் கொள்வதற்கு ஒருதலைப்பற்றை (favouritism)த் தவிர வேறொரு முகாந்தரமும் இல்லை.

மூலதன் ஆதாயங்கள், இழப்புகள் இவற்றை நடத்தும் விதத்தைப் பற்றிய பிறநிலையான பிரச்சினைகளும் இருக்கின்றன. இவற்றைச் சரியாகச் சர்ச்சை செய்வதனுல் இந்தப் பொருளைப் பற்றிய நம்முடைய கட்டுரையை அளவுக்கு மீறி நீட்டவேண்டி வரும். ஆகவே, நாம் ஏற்கனவே சர்ச்சை செய்த விஷயங்களில் பொதிந்துள்ளவைகளை மீண்டும் கீழே சுருக்கித் தருகின்றோம். வேறு சில அமிசங்களையும் சுருக்கிக் கூறுகின்றோம். இவற்றை ஒதுக்கவும் முடியாது; ஆனுல் சுட்டிச் செல்லலாம்.

### மூலதன ஆதாயங்கள், இழப்புகள் இவற்றின் வரிவிதிப்பில் திருத்தங்கள்

இவ் வதிகாரத்தின் பகுத்தாய்விலிருந்து நாம் கீழ்க்காணும் தீர்மானங்களுக்கு வருகிறோம். சில இடங்களில் இவற்றைச் சிலர் கடுமையாக எதிர்க்கலாம். மூலதன ஆதாயங்கள் இழப்புகள் இவைகளின் இயல்பைப் பொறுத்த சிறுபான்மையோர் நம்பிக்கைகளை இத் தீர்மானங்கள் புறக்கணிப்பதாலோ அல்லது தற்பொழுது துய்த்து வருகின்ற சிறப்பான சில அநுகூலங்களை இவை அகற்றுவதாலோ இத் தீர்மானங்களைச் சிலர் வன்மையாக எதிர்க்கலாம். ஆயினும், தருக்க முறைப்படி இப் பிரச்சினையை அணுகினுல் இவற்றை விரும்புவதன் காரணம் புலனுகும்.

1. தொடர்ச்சியாகக் கிடைக்காத பிற வருமானங்களுக்கும், மூலதன ஆதாயங்களுக்கும்,இழப்புகளுக்கும் யாதொரு வேறுபாடும் இல்லாததால், பிற வருமானங்களை நடத்துவது போன்றே இவற்றையும் நடத்த வேண்டும்.

2. தொடர்ச்சியாகக் கிடைக்காத வருமானங்களாக இருப்பதால் ஆதாயங்களையும், இழப்புகளையும் ஒரு சராசரித் திட்டத்திற்கு உட்படுத்துவது சிறந்த குறிக்கோளாயிருக்கும். எல்லா

வருமானங்களுக்கும் பொதுவான ஒரு சராசரித் திட்டம் இல்லாத விடத்தும் மூலதன ஆதாயங்களுக்கும், இழப்புகளுக்கும் மட்டும் பொருந்தக் கூடிய ஒரு பதிலியைக் கடைப்பிடிப்பதற்குப் போதிய முகாந்தரம் இருக்கின்றது. ஏனெனில், இத் தரத்தில் தொடர்ச்சி யற்ற தன்மைதான் சருவ சாதாரணம். செறிவு காலக்கூறுகளை அடிப்படையாகக் கொண்டு வேற்றுமைப்படுத்துவதே இப் பதிலி யாகும். மிகக் குறுகிய செறிவு காலக்கூறு, தருக்க முறையில் ஓராண்டுக்குக் குறைந்ததாக இருக்கமுடியாது. ஏனெனில், ஓராண்டுக்கு உட்பட்ட காலக்கூற்றில் ஏற்படும் வருமானத்தின் தொடர்ச்சியற்ற தன்மைகள் அவ்வாண்டிலேயே தாமாகவே நிரவல் செய்யப்படுகின்றன. ஆனால், ஓராண்டுக்கு மேற்பட்டு, மூன்று அல்லது நான்கு கூடுதல் செறிவு காலக்கூறுகள் வேண்டும். செறிவு காலக்கூறுகளில் உள்ள வேறுபாடு, அவ் வாண்டு பெற்ற வருமானத் தில் சேர்க்கப்பட்ட மூலதன ஆதாயங்கள் அல்லது இழப்புகளின் வேறுபட்ட வீதாசாரங்களில் பிரதிபலிக்கிறது. சராசரித் திட்டத்தி னால் எத்துணை வரிக் 'கடிப்பு' (bite) ஏற்படுமோ அத் துணையே தான் தொடர்ந்த பல ஆண்டுகளில் இவ் வேறுபாடு கொண்ட தொகைகளின் மூலமும் கிட்டும்.

3. மூலதன ஆதாயங்களையும், மூலதன இழப்புகளையும் ஒரே மாதிரி நடத்த வேண்டும். தற்போதுள்ள இழப்பு வரையறையை அகற்ற வேண்டும். செறிவுக் காலக்கூறுகளைத் தளமாகக் கொண்டு இழப்புத் தொகைகளின் வேற்றுமைப்பாட்டைக் கணக்கிடுதல் சாத்தியமானதும் அறிவுக்கு உகந்ததுமாகும்.

4. பிற வருமானத்திலிருந்து ஆதாயங்களை வேறுபடுத்தக் கூடாது. வருமானத்தில் ஆதாயம் எத்துணை சேர்ந்திருக்கிறதோ அந்த அளவுக்கு ஆதாயங்களுக்குச் சாதாரண வளர்வீத முறை களிலேயே வரிவிதிக்க வேண்டும். நெடுங்கால ஆதாயங்களை ஒரு வீதாசார வீதத்தை விதித்து வரியாகப் பெறும் மாற்றுமுறையை ரத்து செய்ய வேண்டும்.

5. ஒருவருடைய இறப்பின்போதோ அல்லது ஒருவர் கொடையாகத் தந்தபோதோ ஆஸ்திகள் கை மாறுகின்றன. அவ்வாறு கை மாறும் வரை அவை அடைந்துள்ள மூலதன ஆதாயம் அல்லது இழப்பை வரிவிதிப்புக்கு உட்படுத்தவேண்டும். இறந்து போனவருக்கோ, கொடையாளிக்கோ கிடைத்த ஆதாயத்தின் பகுதியை வரியிலிருந்து விலக்குவது நடைமுறையில் உள்ள பழக்கமாகும். மூலதன ஆதாயங்களைப் பொறுத்தவரை ஒரு வாரிசுதாரர், பின்னர் ஆஸ்தியை விற்றால்தான், அவ் வாஸ்தியைப்

பெற்ற பொழுதுக்கும் விற்ற பொழுதுக்கும் இடையே அதன் மதிப்பில் ஏற்பட்ட வேறுபாட்டைத் தனது ஆதாயம் அல்லது இழப்பாகக் கணக்கிடுகிறார். இறந்து போனவர்களுக்குக் கிடைத்த ஆதாயங்களை வாரிசுதாரர் நிரந்தரமாகவே வரியிலிருந்து விலக்கி விடுகிறார். ஒரு அறநிலையத்திற்கு நன்கொடையாகக் கொடுக்கப் பட்ட ஆஸ்திகளைப் பொறுத்த அளவில் கொடையாளி அச் சொத்தின் அடக்க விலையைக் கழிக்காது அதனை அறநிலையத்திற்கு மாற்றும் பொழுது நிலவிய மதிப்பைத் தம் அளிப்பாகக் கழித்துக் கொள்கிறார். இவ்விடத்து அவருக்குக் கிடைத்த மூலதன ஆதாயம் நிரந்தரமாகவே வரியிலிருந்து தப்பித்துவிடுகிறது. பிற கொடை களைப் பொறுத்தவரையில், கொடையைப் பெறுவோர் அச் சொத்தை விற்கும்வரை வரி ஒத்திப்போடப்படுகிறதே தவிர, நிரந்தரமாக இழக்கப்படவில்லை. பிறகு அவர் தனக்குக் கிடைத்த மூலதன ஆதாயத்தைக் கொடையாளிக்கான அடக்கச் செலவைத் தளமாகக் கொண்டு கணக்கிடுகிறார்.

மூலதன ஆதாய வரிவிதிப்பின் திருத்தத்திற்கான சில யோசனைகள் இங்குக் கூறப்பட்டன. இவற்றால் மூலதன ஆதாயங் களின் மீது வரியால் ஏற்படும் கடிப்பு, ஐயத்திற் கிடமின்றி அதிக மாகும். இவ் யோசனைகளுக்குச் சில இடங்களிலிருந்து தீவிரமான எதிர்ப்பு மூளலாம். ஆனால், இவ் யோசனைகள் தருக்க முறைப்படிச் சரியாக இருந்தால் அவற்றை உடனடியாக நிறைவேற்ற விட்டா லும் படிப்படியாகவேனும் நிறைவேற்றலாம். மாறுதல் அவசிய மென்று கருதியபொழுது, பொதுவான வருமான வரிப்பளுக்களைக் குறைப்பதன் மூலம் ஒரே சமயத்தில் இவ் யோசனைகளை நிறை வேற்றலாம். ஆனால், கடந்த காலத்தில் சலுகைகளை அநுபவித்துப் பழக்கப்பட்டுப்போன குறிப்பிட்ட வரிசெலுத்துவோர்களை ஒறுப் பது இவ் யோசனைகளின் நோக்கமல்ல. நேர்மையை அடிப்படை யாகக் கொண்டு வருமானவரி விதிப்பைத் திருத்தி அமைப்பதற் கும், பொருளாதாரத்தில் வளப்பொருள்களைப் பகிர்வு செய்வதில், வரி அமைப்புக்கு உள்ள செல்வாக்கை நடுவுநிலைமை யாக்குவதற்குமே இவ் யோசனை தெரிவிக்கப்பட்டது. திருத்தி யமைப்பதில் மேலும் ஒரு பயனும் உள்ளது. ஒரு விரிசல் இருந்தால் அதைப் பெரிதாக்குவதற்காகப் பலத்த முயற்சிகள் நடப்பதை அனுபவத்தில் நாம் பார்க்கிறோம். விரிசலின் விளிம்பில் உள்ள வருமானத்தை மூலதன ஆதாயம் என விளக்கம் தருமாறு வலுவான முயற்சி செய்யப்பட்டதை மூலதன ஆதாய வரிவிதிப்பு வரலாறு சுட்டிக் காட்டுகிறது. இதனால் வருமானத்தில் மேன் மேலும் பல இனங்களையும் மூலதன ஆதாயங்களுடன் சேர்ப்பதற் காகத் தருக்கத்திற்குப் புறம்பான சந்தர்ப்பவாத விளக்கத்தை

மூலதன ஆதாயத்திற்குத் தரும்படி காலப்போக்கில் ஏற்படுகிறது. புறனடையின் வாயிலாக மிகவும் பரந்து பட்டதாக விளக்கம் ஆகுமாளுல், இவ் விளக்கத்தை மேலும் கரைப்பதற்கு உள்ள எதிர்ப்பு குறையும். விரிசல்களைப் பூராவும் அடைப்பதன் மூலமே இப் போக்கைத் தடுக்கலாம். எவ்வளவு விரைவில் இவற்றை அடைக்கின்றேமோ அவ்வளவுக்கு நல்லதாகும்.

## மேலும் படித்தற்கு உரியவை

பிரௌன் ஜோநாதன் ஏ. (Brown, Jonathan A.) எழுதிய 'The Locked-in Problem', டபிள்யு ஹெல்லர் வால்டர் (Heller, Walter W.) எழுதிய 'Investors' Decisions, Equity and the Capital-Gains Tax' ஆகிய நூல்களைப் பார்க்க. Joint Committee on the Economic Report, Federal Tax Policy for Economic Growth and Stability (Papers submitted by Panelists before the Sub-Committee on Tax Policy), வாஷிங்டன், *1955*, முறையே பக்கம் *367-80*-ம், *381-93*-ம். ஒரு பொருளாதாரத்தில் மூலதன ஆதாயங்களின்மீது வரிவிதிப்புச் செய்வதால் மூலதன இடப்பெயர்ச்சி கடுமையாக பாதிக்கப்படுகின்றதா என்ற கேள்வியின் இருதிறப்புகளையும் இவ் விரண்டு ஆராய்ச்சிக் கட்டுரைகளும் எடுத்துரைக்கின்றன.

ஹெச். எம். குரோவ்ஸ் (Groves, H. M.), Postwar Taxation and Economic Progress, N. Y. McGraw-Hill, *1946*, Chapters *7* and *8*.

வருமான வரித்தளம், வீதங்கள், விலேச்சல், வரிவிலக்கு அளிக்கப்பட்ட கடன்பத்திரங்கள், மூலதன ஆதாயங்கள், இழப்புகள் இவற்றையும் தொடர்ச்சியற்ற வருமானங்களையும் நடத்த வேண்டிய விதத்தைப் பற்றிய சர்ச்சை இந் நூலில் அடங்கியுள்ளது.

ஹெச். ஸி. சைமன்ஸ் (H. C. Simons) என்பார் எழுதிய 'Personal Income Taxation' சிகாகோ, சிகாகோ பல்கலைக் கழகம், *1938*. நல்ல படிக்கக்கூடிய பகுத்தாய்வு *2, 7, 10*ஆம் அதிகாரங்களும், துணைக்குறிப்பும் இவ் வதிகாரத்தில் அடங்கிய பொருளுக்குச் சிறப்பாகப் பிரயோகமாகும்.

எஸ். ஸர்ரே ஸ்டான்லி (Surrey, Stanley S.) எழுதிய 'Definitional Problems in Capital Gains Taxation', Joint Committee on the Economic Report, *opp. sit.*, pp. *404-18*. சாதாரண

வருமானத்தை மூலதன ஆதாயங்களிலிருந்து பிரிப்பதைப் பற்றிய எண்ணிறந்த பிரச்சினைகளில் ஈடுபாடுடைய வாசகருக்கு இந் நூல் பெரிதும் சிபாரிசு செய்யப்படுகிறது. இப் பிரிவின் இறுதியில் கூறப்பட்ட அபிவிருத்திக்கான யோசனைகள் இவ் விஷயத்தைக் கருத்தூன்றிக் கவனமாகப் படிக்கும் மாணுக்கரின் பார்வைக் குரியன.

## 17 ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. 'மதிப்பும் மூலதனமும்' (Value and Capital), ஆக்ஸ்போர்டு, 1939, பக்கம் 176. ஹெச். ஸி. ஸைமன்ஸின் (H. C. Simons) விளக்கத்துடனும் ஒப்பிடுக. (b) தனியாள் வருமான வரி விதிப்பு, சிகாகோ, சிகாகோ பல்கலைக் கழக அச்சகம், 1938, பக்கம் 49.

2. உற்பத்திக் காலம் முற்றும் குறிப்பிட்ட மொத்தத் தொகையை ஈடாகப் பரப்புவதற்கு 1948 ஆம் ஆண்டிலிருந்து வகை செய்யப்பட்டிருக் கிறது. ஆனுல், இதற்கான நிபந்தனைகள் ஒரு வரையறைக்கு உட்பட்டதாக இருக்கின்றன. (1) உற்பத்திக்குக் குறைந்தது மூன்ருண்டு காலமாவது ஆகியிருக்க வேண்டும். (2) மொத்த ஈட்டில் குறைந்தது 80 சதவிகிதமாவது வரிதாங்கவேண்டிய ஆண்டில் கிடைத்ததாக இருக்கவேண்டும். மேலே நாம் தந்த உதாரணத்தில் நாவலாசிரியருக்கு முதல் நிபந்தனை பொருந்தும். ஒருவேளை இரண்டாவது நிபந்தனை பொருந்தாததாக இருக்க லாம். ஏனெனில், நவீனத்திலிருந்து கிடைக்க வேண்டிய மொத்த ராயல்டி களில் 80 சதவிகிதத்திற்குக் குறைவாகவே அவருடைய 60,000 டாலர் வருமானம் இருக்கலாம். இரண்டாவது நிபந்தனையும் அவருக்குப் பொருந்து மாளுல், அவர் தம்முடைய 60,000 டாலர் வருமானத்தையும் நான்காண்டு களுக்கும் சமமாக நிரவிக்கொண்டு, இவ்வாண்டு ஒவ்வொன்றுக்கும் தர வேண்டிய வரியைச் செலுத்தலாம். முந்திய ஆண்டு ஒன்றுக்குப் பங்கீடு செய்யப்பட்ட வருமானம், அப்பொழுது இத் தொகைக்கு நிலவிய வீதங் களின்படி வரிவிதிப்புக்கு உள்ளாகும். அவ் வாண்டுகளில் வரிதாங்கு வருமானம் வேறு யாதாயினும் இருந்தாலும் அதுவும் இத்துடன் சேர்க்கப் படும். இவ்விதி மிகுந்த ஒடுக்கமாயிருப்பதால், ஒழுங்காக வராத பலதிரப் பட்ட வருமானத்தைச் சேர்ப்பதற்கு இஃது இடம் தரவில்லை. தாம் எழுதிய 'ஐரோப்பாவில் சிலுவைப் போர்' (Crusade in Europe) என்ற நூலிலிருந்து கிடைத்த வருவாய்களில் தளபதி ஐஸன்ஹோவர் வரிசேமிப்புச் செய்தது முற்றிலும் ஒரு வேறு விஷயமாகும். அத் தருணம் தளபதியின் தொழில் நூல் எழுதுவது அல்லவென்றும், தம் சொத்தை விற்றதற்குப் பதிலாகவே இவ் வருவாய்களைப் பெற்ருரென்றும் முடி வாயிற்று. மேலே இவ் வதிகாரத்தில் சர்ச்சை செய்யப்பட்ட மூலதன ஆதாயங்கள் வரிக்கு இவ்வாறு ஐஸன்ஹோவர் உள்ளானுர்.

3. சர்வதேசப் போருக்குப் பிற்காலத்தியப் பிரச்சினைகளில் (International Postwar Problems) 'கூட்டாட்சியின் வரிச் சீர்திருத்தம்', ஹென்ரிஸி, ஸைமன்ஸ், சர்வதேச விவகாரங்கள் பற்றிய அமெரிக்கத் தொழிலாளர்

மாநாட்டின் ஆய்வுரை (Reviews of the American Labour Conference on International Affairs), ஜனவரி 1946, பக்கம் 27.

4. எந்த வரி முறையிலும் வரி செலுத்துவோர் தாம் வரிதரங்கு நிகர வருமானத்தைப் பற்றி அனுப்பிய அறிக்கை, செலுத்திய வரி இவை பற்றிய ஆவணங்களை வைத்திருக்க வேண்டியது இன்றியமையாததாகும். இவ் வதிகாரத்தில் கூறப்பட்ட பிற சிபாரிசுகளும் சிறப்பாக மூலதன ஆதாயங்கள், இழப்புகளை எங்ஙனம் நடத்த வேண்டும் என்பது பற்றிய சிபாரிசுகளும் இப் பிரச்சினையை ஓரளவு சுருவாக்கும். கச்சிதமான கணக்கு நூற்பாக்களின் மூலம் 'எளிய சராசரிக் கருவியை'ப் பிரயோகிக் கலாம். ஆனால், இதுபற்றிய சர்ச்சை நாம் மேற்கொண்டதற்கும் அப்பாற் பட்டதான கண்ணோட்டத்தை (scope) உடையது என்று பலரும் நம்பு கின்றனர். ஆயினும், நிரம்பவும் கவனம் செலுத்தும் இழைப்பை (refinement) ஓரளவு தியாகம் செய்தும், தற்கால ஆவணங்களை வைத் திருக்குப் முறைகளைப் பயன்படுத்தியும் அவ்வாறான திட்டத்தைத் தயாரிக்க முடியும் என்று நம்புவது அறிவுக்குப் பொருத்தமானதேயாகும்.

5. மேற்சொல்லிய கூற்றுகளைத் தெளிவாக்குவதற்கு சராசரித் திட்டத் தைச் சற்று விரிவாக விளக்குவது பொருத்தமேயாகும். இதில் இருவித மாறுதல்கள் கொணரலாம். அவை ஆண்டுதோறும் கிடைக்கும் வருமானத் தில் வேறுபாடும், காலந்தோறும் வரி வீதங்களில் வேறுபாடும் ஆகும். ஓராண்டில் கிடைக்கும் உயர்ந்த வருமானத்தின் ஒரு பகுதியைப் பிற ஆண்டுகளில் கிடைக்கும் குறைந்த வருமானத்துடன் சேர்ப்பதால், வரி நோக்கங்களுக்காக, வருமானங்களில் வேறுபாடு ஏற்படுவதைச் சராசரித் திட்டம் நீக்கும். இங்ஙனம் வருமானத்துடன் சேர்க்கப்பட்டாலும் எவ் வாண்டின் வருமானத்துடன் சேர்க்கப்பட்டதோ, அவ் வாண்டில் நிலவிய வரி வீதங்களின்படி வரி விதிக்க வேண்டும் என்பது பொருளன்று. முந்திய ஆண்டுகள் வருமானத்துடன் சேர்க்கப்பட்டாலும், வாணிபச் சுழலுக்கு எதிரிடையான காரணங்களுக்காக வரி வீதங்கள் ஏற்றப் பட்டால், கூடுதல் வீத ஆண்டில் கிடைத்த வருமானம் அவ்வரி வீதங்களின் படியே வரி விதிக்கப்படும். இங்ஙனம் வருமானத்தைக் குறைந்த அடைப் புக்களுடன் சேர்ப்பதால் மொத்த வரி ரசீது (bill) குறையும். அங்ஙனமின்றி சராசரித் திட்டமும் இல்லையானால் வருமானத்தை உயர்ந்த வீத அடைப்புடன் இணைத்துக் கூடுதல் வருமானத்தைப் பெறுவார்கள்.

6. நியூயார்க் டைம்ஸ், அக்டோபர் 4, 1952.

7. ஒரு நிகர மூலதன மதிப்பேற்றத்தையே நாம் குறிப்பிடுகிறோம். ஒரு சொத்தில் மூலதனத்தை முதலீடு செய்ததனால் அதன் மதிப்பு ஏறுகிறது. அப்பொழுது மூலதன மதிப்பேற்றத்திலிருந்து அதன் மேம்பாட்டிற்கு ஆன நேரிடையான செலவைக் கழித்தால் மீதமுள்ளது மூலதன ஆதாய மாகும்.

8. Internal Revenue Code, Section 1221

9. கீழ்க்கண்ட புறனடைகளைத் தவிர்த்து (1) விலை மதிப்பில்லாத பங்குகள் அல்லது கடன்பத்திரங்கள்—இவைகளை விற்காவிட்டாலும் இழப்பு

நேர்கிறது. (2) தவணைக்கு முன் செலுத்தும் உண்டியல்கள்—கெடு முடிந்தவுடன் நிலவும் விலையை முதலில் செலுத்திய விலையுடன் ஒப்பிடும்பொழுது மூலதன ஆதாயம் அல்லது இழப்பு ஏற்படுவதாகக் காட்டலாம். (3) கார்ப்பரேஷனைக் கலைக்கும்பொழுது அறிவிக்கப்பட்ட இலாப ஈவுகளைப் பங்குதாரர்களிடையே பங்கீடு செய்வது (Internal Revenue Code, Section 23 (g) (2), k (2); Section 117 (f); Section115 (c))

10. வழிவகைகளைப் பற்றிய பிரதிநிதித்துவ சபைக்குழுவின் முன்பு ரன்டால்ப்ஃ பால் (Randolph Paul) தந்த சாட்சியத்தைப் பார்க்க. Revenue Revision of 1942, Vol. I, p.255.

11. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கருவூலத்துறை வெளியிட்ட Statistics of Income......1956, Individual Income Tax Returns, பக்கம் 23–54-லிருந்து தொகுக்கப் பெற்றது.

12. மூலதன ஆதாயங்கள், இழப்புகள் இவற்றைப் பற்றிய நடத்துகையில் ஏற்பட்ட எல்லா மாறுதல்களின் பட்டியலைத் தருவதற்கு நாம் முயலவில்லை. இப் பிரச்சினையின் இயல்பைப் பற்றிய சர்ச்சைக்குத் தலையாயதாகக் கருதப்பட்ட விதிகளே, ஈண்டு இடம் பெற்றுள்ளன.

13. அதன் அடக்கச் செலவு மதிப்பை (cost value)ப் பேணுவதற்கு ஆவதைக் காட்டிலும் மிகையாக இருக்கும் ஆதாயத்தை அளவிடுவதே ஒரு மூலதன ஆதாயத்தைக் கணக்கிடும் முறையாகும். தனியாள் நிலைமைகளின் சிக்கல்களைப் பொருட்படுத்தாது—அவை பலவாகும்—ஒரு மூலதன ஆதாயத்தைக் கணக்கிடும் பொதுவான முறை வருமாறு: விற்பனைக் காலத்து நிலவிய ஆஸ்தியின் தேய்மான மதிப்பிலிருந்து, அதைப் பெறும் அல்லது வாங்கும் தருணத்தில் நிலவிய அடக்கச் செலவு அல்லது மதிப்பின் தொகை, அபிவிருத்திகளுக்கான செலவு, விற்பனைச் செலவு இவற்றைக் கழித்தால் மூலதன ஆதாயத்திற்குச் சமதையாகும். வாங்கிய காலத்திற்கும் விற்ற காலத்திற்கும் இடையே விலைவாசிகளில் ஏற்பட்ட மாறுதலைக் கணக்கில் கொள்வதில்லை. ஆனால், உண்மையான மூலதன மதிப்பைப் பேணவேண்டுமென்றால் இம் மாறுதல்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் வருமான வரி செயல்படும் காலம் பூராவும் விலைவாசிகளில் ஏற்படும் மாறுதல்களைப் பொருட்படுத்துவதில்லை. ஆகவே இவ் வகையில் மூலதன ஆதாயங்களுக்குத் தனிச்சிறப்பு ஒன்றுமில்லை.

14. கார்ப்பரேஷனின் வருமானத்தை, கார்ப்பரேஷன் மீண்டும் முதலீடு செய்ததனால் ஏற்பட்ட மூலதன ஆதாயங்களை வரிவிதிப்புக்கு உட்படுத்துவது, பேதங்காட்டும் இரட்டை வரி விதிப்பு நிலையைச் சிறப்பாக ஏற்படுத்துவதற்குக் காரணமாகும். கார்ப்பரேஷன் வருமான வரிகளைச் செலுத்திய பிறகே, கார்ப்பரேஷனின் ஆதாயங்கள் மீண்டும் முதலீடு செய்யப்படுகின்றன. இருந்தாலும் மீண்டும் முதலீடு செய்வதனாலேயே நிலுவைக் (outstanding) கடன் பத்திரங்களின் மார்க்கட்டு மதிப்பை ஏற்றக் கூடும். இவ்வாறான கடன்பத்திரங்களைப் பின்னிட்டு விற்றால் மூலதன ஆதாயங்கள் கிடைக்கக்கூடும். மீள் முதலீட்டினால் படைக்கப்பட்ட வருமானத்தின்மீதும் மூலதன மதிப்பேற்றத்தின்மீதும் (இறுதியாக) வரி விதிக்கப்படுகிறது. இவ் வரி ஒரே தனியாளின் பேரில் விழுகிறது.

கார்ப்பரேஷனின் ஆதாயங்களைப் பங்குதாரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும்போது இவ்வாருன பேதங்காட்டுகை நேர்கிறது. கார்ப்பரேஷன் நடவடிக்கையால் தோன்றும் தனியாளின் வருமானத்திற்கு இவ்வாறு இருமுறை வரிவிதிக்கப் பெறுகிறது. ஒரு முறை கார்ப்பரேஷன் வருமானமாகவும், மீண்டும் தனியாள் வருமானமாகவும் வரிவிதிக்கப் பெறுகிறது. மூலதன ஆதாயங்களின்மீது வரிவிதிப்பதால் இவ் விரட்டை வரிவிதிப்பு ஏற்படவில்லை. கார்ப்பரேஷனுக்குத் தனியாக வருமானம் வருகிறதென்று கருதி அதன்மீது வரிவிதிப்புச் செய்வதால், இவ் விரட்டை வரிவிதிப்பு ஏற்படுகிறது.

15. இப் 'பூட்டப்பட்ட' பிரச்சினை விரிவாகவும், மாறுபட்ட வெவ்வேறு கருத்துக் கோணங்களிலிருந்தும் ஜோனுதன் ஏ. பிரௌன் (Jonathan A. Brown) என்பவராலும், வால்டர் ஹெச். ஹெல்லர் என்பவராலும் இரண்டு கட்டுரைகளில் ஆராயப்பட்டிருக்கிறது. இக் கட்டுரைகள் Federal Tax Policy for Economic Growth and Stability : Papers submitted before the Sub-committee on Tax-Policy, Joint Committe on the Economic Report, Washington, 1959, என்பதும் ஆகும்.

16. மேலே கூறிய நூல், பூட்டப்பட்ட பிரச்னையைப் பற்றி இவ்வளவு அக்கறை காட்டுவதும் ஐயத்திற்கு இடம் அளிக்கின்றது. ஏனெனில், இதைப்பற்றி மிகவும் கூப்பாடு போடுபவர்கள் பங்குமாற்றுச் சந்தையும், அதன் உறுப்பினர் நிறுவனங்களுமே. அவர்களின் வருமானப் பங்குகள் விற்பனைப் புரள்வு வீதத்தைப் பொறுத்தே பெருமளவு இருக்கின்றன.

17. இப் பிரச்சினை 1933ஆம் ஆண்டு ஜுலை 19 ஆம் நாள் வெளியான New Republic பத்திரிகையில் ஹெச். எம். குரோவ் (H. M. Grove) என்பார் எழுதிய 'வருமானமில்லாத படகுகள்' என்ற கட்டுரையில் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

18. நடைமுறையில் இத் துணிவின்மையின் அளவை மதிப்பிடுவது சிரமமே. ஆனால் இவ் வெடுகோள் மீண்டும் மீண்டும் நிதிச் சமுதாயத்தின் பிரதிநிதிகளால் உரைக்கப்படுவதால் இவ்வெடுகோளின் உண்மையை ஒப்புக் கொள்வதற்கு ஏது இருக்கிறது. ஆயினும் இவ் வெடுகோளில் சில பிரத்தியேக வாதத்தின் பண்புகளும் பொதிந்திருக்கின்றன. ஹெச். எம். குரோவ்ஸ் (H. M. Groves) என்பார் எழுதிய Postwar Taxation and Economic Progress என்ற நூலில் 222ஆம் பக்கத்தையும் ஒப்பு நோக்குக. நியூயார்க், மெக்ராஹில், 1946.

# 18. தொழில் கார்ப்பரேஷன்களிலிருந்து கிடைக்கும் தனியாள் வருமானத்தின் மீது வரிவிதிப்பு

*(1)* வரிகளின் முதல் தாக்கு எங்கு ஏற்பட்டாலும், அவை இறுதியில் தனியாள் வருமானத்திலிருந்தே செலுத்தப்படுகிறது என்பதையும், *(2)* வரியின் நிலைப்பாடு எங்கிருக்கிறதென் நமக்கு ஓரளவு திட்டவட்டமாகத் தெரிந்தாலொழிய ஒரு குறிப்பிட்ட வரி மசோதாவை நாம் ஏற்கலாமா என்பதைப் பற்றித் தீர்ப்புக் கூற முடியாது என்பதையும் நாம் மீண்டும் மீண்டும் கூறவேண்டியதில்லை. இவ் விரு வகைக் காரணங்களையும் கொண்டு பார்த்தால், ஏனைய பிற வரித் திட்டங்களைக் காட்டிலும் தனியாள் வருமான வரியே மிகச் சிறந்தது என்று நாம் துணியலாகும். இதன்படித் தனியாள் வருமானம் (எல்லா வரிசெலுத்துகைகளுக்கும் இறுதி மூலம்), வரிக்கு உடனடியான தளமென்று ஏற்படுவதுமன்றி, இம் மூலத்தை மறைமுகமாக அணுகுவதில் உள்ள மனம்போன போக்குகளையும் (vagaries) தவிர்க்கிறது. இவ் வரியின் நிலைப்பாடு மிகத் தெளிவாக இருக்கிறது. ஏனெனில் வருமானவரி புரட்டப்படுவதில்லை. இதனால் வரிமுறையை எளிதாக்க வேண்டும், திருத்தம் செய்ய வேண்டும் என்றால் பிற வரி வடிவங்களைக் குறைத்து வலியுறுத்தவும், தனியாள் வருமான வரிகளைப் பெரிதும் வலியுறுத்தவும் வேண்டும். இவ்வாறு விஷயம் இருப்பதால் தனியாள் வருமானவரி விதிப்பைப் பற்றிய சரியான முறைகளைப் பற்றிச் சிறப்பாக அக்கறை கொள்வதற்குக் காரணம் இருக்கிறது. வருமானத்தின் சரியான விளக்கத்திற்கு வரி நடைமுறை எங்ஙனம் ஒத்திருக்கிறது என்பதைப் பற்றிய சில விவரங்களை நாம் 17ஆம் அதிகாரத்தில் கண்டோம். இவ் வதிகாரத்தில் தனியாள் வருமானவரி விதிப்புக்கும், கார்ப்பரேஷன் வருமானவரி விதிப்புக்கும் உள்ள உறவில் நாம் நாட்டம் செலுத்துவோம்.

**கூட்டாட்சியின் கார்ப்பரேஷன் நிகர வருமானவரி**

1909ஆம் ஆண்டுச் சட்டத்திலிருந்து கார்ப்பரேஷன் நிகர வருமானத்தின்மீது தொடங்கிய கூட்டாட்சியின் வரிவிதிப்பு இது காறும் தொடர்ந்து அமுலில் இருந்து வருகிறது. வருவாய் உற்பத்தியைப் பொறுத்த அளவில், 1958ஆம் ஆண்டில் தனியாள் வருமான வரிக்கு அடுத்த இரண்டாவது ஸ்தானத்தை கார்ப்பரேஷன் நிகர வருமானவரி வகித்தது. அவ் வாண்டில் தனியாள் வருமான வரியிலிருந்து ஏறக்குறைய 35 பில்லியன் டாலரும், கூட்டாட்சியின் கார்ப்பரேஷன் நிகர வருமான வரியிலிருந்து 20 பில்லியன் டாலரும் வருவாயாகக் கிடைத்தது. உண்மையாகவே கார்ப்பரேஷன் நிகர வருமானவரி முதன் முதல் விதிக்கப்பட்ட நாளிலிருந்து கூட்டாட்சி வருவாய் முறையில் கார்ப்பரேஷன் வரி ஒரு பெரும் அமிசமாக இருந்து வந்திருக்கிறது. தனியாள் வருமான வரியிலிருந்து கிடைக்கும் வருவாய்களைக் கார்ப்பரேஷன் வரியிலிருந்து கிடைக்கும் வருவாய்கள் ஒருபோதும் விஞ்சவில்லையாயினும், 1933-க்கும் 1941-க்கும் இடைப்பட்ட காலத்தைத் தவிர பிற ஆண்டுகளில் தொடர்ந்து ஆயத்தீர்வைகளைவிட இவ்வரி அதிகமாகவே வருவாய் தந்திருக்கிறது. 1933-க்கும் 1941-க்கும் இடைப்பட்ட காலத்தில் கார்ப்பரேஷன் இலாபங்கள் மிகவும் படுமோசமான நிலையில் இருந்ததால், இக் காலத்தில் ஆயத்தீர்வைகளின் வரிவிதிப்பு பெரிதும் வலியுறுத்தப்பட்டது. நெருக்கடியான போர்க் காலங்களில் கார்ப்பரேஷன் வருமான வரிக்குப் பிற்சேர்க்கையாகக் கார்ப்பரேஷன் மிகை லாபங்களின் மீதும் ஒரு வரி தொடர்ந்து விதிக்கப்பட்டது. கார்ப்பரேஷன் வருமானவரி விதிப்பின் முக்கியத்துவம் படிப்படியாக வளர்ந்து வருவதை நாம் காணலாம். 1950ஆம் ஆண்டிலிருந்து சட்டவிதிகளில் யாதொரு மாறுதலும் செய்யாததாலும், கார்ப்பரேஷன் இலாபங்கள் உயர்ந்த அளவிலேயே இருந்ததாலும், இவ் வரியிலிருந்து கிடைக்கும் வருவாய்கள் உச்சக் கட்டத்திலேயே இருந்து வந்திருக்கின்றன. கூட்டாட்சியின் மொத்த வருவாய் அமைப்பில் தனியாள் வருமான வரிக்கு முக்கியத்துவம் கூடிவந்ததற்கு இணையாகவே, இவ் வரியின் முக்கியத்துவமும் ஒப்புமையில் கூடி வந்திருக்கிறது.

1909ஆம் ஆண்டிலிருந்து கார்ப்பரேஷன் வருமான வரிச்சட்டத்தின் தளத்திலும், வீதத்திலும் ஏற்பட்ட பெருத்த மாறுதல்கள் 30ஆம் அட்டவணையில் தரப்பட்டிருக்கின்றன.

## அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கார்ப்பரேஷன் வருமானவரி தேர்ந்தெடுக்கப்பட்ட விதிகள் 1909-1959

| சட்டம் இயற்றப்பட்ட காலம் | சாதாரண வரி வீதங்கள் (%) | மொத்த நிகர வருமானம் இவ்வளவு டாலருக்கு மேல் இருந்தால் உச்ச சாதாரண வீதம் (%) | சாதாரண வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்ட நிகர வருமானம் | மேல் வரி வீதங்கள்* (%) | மேல் வரி நிகர வருமானம் இவ்வளவு டாலருக்கு மேல் இருந்தால் உச்ச மேல்வரி வீதம் (%) | மேல் வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்ட வருமானம் (டாலரில்) | மிகை லாப வரி வீதங்கள்** (%) |
|---|---|---|---|---|---|---|---|
| 1909 | 1·0 | | 5,000 | | | | |
| 1913 | 1·0 | | | | | | |
| 1916 | 2·0 | | | | | | 20—60 |
| 1916 | 1,0,4·0,2·0 | | | | | | 20—40 |
| 1918 | 12·0 | | 2,000 | | | | 30—65 |
| 1918 (1919, 1920ல் வருமானம்) | 10·0 | | 2,000 | | | | 20—40 |
| 1921 | 10·0 | | 2,000 | | | | |
| 1918 (1922, 1923ல் வருமானம்) | 12·5 | | 2,000 | | | | |
| 1925 | 13·0 | | 2,000 | | | | |
| 1925 (1926, 1927ல் வருமானம்) | 13 5 | | 2 000 | | | | |
| 1928 | 12·0 | | 3,000 | | | | |
| 1928 (1929 வருமானத்தின்மீது) | 11·0 | | 3,000 | | | | |
| 1928 (1930, 1931ல் வருமானம்) | 12·0 | | 3,000 | | | | |
| 1932 | 13 75 | | | (a) | | (a) | |
| 1936 | 8·0–15.0 | | | | | | |
| 1938 | 12·5-19·0 | | | | | | |
| 1940 | 14·85–36·9 | 24%; $38,566 | | | | | 35—60 |
| 1941 | 15·0–37·0 | 24%; $38,642 | | 6·0– 7·0 | 16%; $50,000 | | 90 |
| 1942 | 15·0-31·0 | 24%; $50,000 | | 10·0–22·0 | 16%; $50,000 | | 95 |
| 1943 | 15·0-31·0 | 24%; $50,000 | | 10 0–22·0 | 14%; $50,000 | | |
| 1945 | 15·0–21·0 | 24%; $50,000 | | 6·0–22·0 | | | |
| 1950 | 23·0 | | | 19·0 | | 25,000 | 30 |
| 1951 | 28·75 | | | 22·0 | | 25,000 | 30 |
| 1951 (1952-ல், 1953 வருமானம்) | 30·0 | | | 22 0 | | 25,000 | 30 |
| 1951 (1954 வருமானம்) | 30·0b | | | 22·0 | | 25,000 | |

* 1941 ஆம் ஆண்டுக்கு முன்பு வெளியிட்ட சில அமெரிக்க ஐக்கியநாடுகளின் கடன் பத்திரங்களின் மீதான வட்டியைச் சேர்ப்பதால் சாதாரண வரி நிகரவருமானத்தைக் காட்டிலும், மேல்வரி நிகரவருமானம் கூடுதலாக இருக்கலாம்

** 1917-லிருந்து 1921 வரை விதிக்கப்பட்ட போர் இலாப வரியையும், அல்லது 1932-லிருந்து 1946 வரை அறிவிப்புச் செய்யப்பட்ட மதிப்பின் மீது மிகை லாப வரியையும் இதில் சேர்க்கவில்லை.

a. பங்கிடு செய்யப்படாத கார்ப்பரேஷன் இலாபங்களின்மீது மட்டும் விதிக்கப்பட்ட மேல்வரி; 1938-ல் ரத்து செய்யப்பட்டது.

b. 1953 ஆம் ஆண்டு இறுதியில் 25 சதவிகிதமாகப் பட்டியல் குறைப்புச் செய்யப்பட்டது ஆண்டுதோறும் தற்காலம் (1960) வரை ஒத்திப்போடப்பட்டது.

இவ் வரி 1936ஆம் ஆண்டுவரை வீதாசார வீதத்திலேயே இருந்தது. 1936-ல் இவ் வரியில் வளர்வீத வீதம் புகுத்தப்பட்டது. (1916ஆம் ஆண்டைய சட்டத்தில் 1916-ல் செய்யப்பட்ட திருத்தத்தின் படி சிறிய அளவு வளர்வீதம் புகுத்தப்பட்டது இதற்கொரு புறனடையாகும்). முதல் உலகப்போரின்போது மிகை இலாப வரியால் வளர்வீத அமிசத்திற்கு வகை செய்யப்பட்டது. 1936ஆம் ஆண்டிலிருந்து தொடர்ச்சியாக வளர்வீதம் பிரயோகிக்கப்பட்டு வருகிறது. சில சமயம் தனிப்பட்ட வெவ்வேருன சாதாரண வீதங்களின் மூலமும், மேல்வரி வீதங்களின் மூலமும் (1950-லிருந்து தற்காலம் வரை), சில சமயம் ஒவ்வொரு தரத்திற்கும் வளர்வீத வீதங்களைப் பிரயோகிப்பதன் மூலமும் (1940-லிருந்து 1945 வரை), சில சமயம் வளர்வீத சாதாரண வீதங்களின் மூலமும் (1936-லிருந்து 1938 வரை) வளர்வீத முறை பிரயோகிக்கப்பட்டு வந்திருக்கிறது. எல்லா இனங்களிலிருந்தும் கிடைத்த மொத்த வருமானத்திலிருந்து குறிப்பிட்ட சில பிடித்தங்களைக் கழித்த பின்பு எஞ்சியுள்ளதே கார்ப்பரேஷன் வரி விதிப்பதற்கான நிகர வருமானமாகக் கொள்ள வேண்டும். ஆக்கச் செலவுகள், அறநிலையங்களுக்கு அளிக்கப்படும் கொடைகள், கரைதல் (depletion), முந்திய ஆண்டுகளிலிருந்து கொணரப்பட்ட நிகர இயக்குதற்கான இழப்புகள், வரிக்குள்ளான பிற கார்ப்பரேஷன்களிலிருந்து பெற்ற இலாப ஈவுகள் இவையே தலையாய பிடித்தங்களாகும். வரியைப்பற்றிய வருணனையை இதற்கு மேலும் நாம் நீட்டிக்கமாட்டோம். ஏனெனில் நமது நாட்டம் எல்லாம் கார்ப்பரேஷன் வருமானவரிக்கும், தனியாள் வருமான வரிக்கும் உள்ள உறவைக் குறிப்பதேயாகும். கூட்டாட்சியின் அரசாங்கம் எல்லாத் தொழில் நிறுவனங்களிலிருந்தும் கார்ப்பரேஷன்களைப் பிரித்து அவற்றின்மீது ஒரு பிரத்தியேக நிகரவருமான் வரியை விதிப்பதை நாம் மனத்தில் இருத்தினுல் அது நம்முடைய தற்போதைய நோக்கங்களுக்குப் போதுமானது. கார்ப்பரேஷனின் முழு நிகர வருமான்த்தின் பேரிலும் இவ் வரி விதிக்கப்படுகிறது. நிகர வருமானமும் ஒரே படித்தாக எல்லோருக்கும் விளக்கம் செய்யப்பட்டுள்ளது.

### கார்ப்பரேஷன் வருமானவரி விதிப்புக்கும், தனியாள் வருமானவரி விதிப்புக்கும் உள்ள உறவு

பதிவு செய்யப்படாத தொழில் நிறுவனங்களின் நிகர வருமானத்தின்மீது ஒப்புமையான வரி விதிக்காது, கார்ப்பரேஷன் வருமானவரியைத் தனியாள் வருமான் வரியிலிருந்து பிரித்து வேருக்குவதன் வாயிலாகச் சில சங்கடமான பிரச்சினைகள் எழுகின்றன. கார்ப்பரேஷன்கள் படைக்கும் தனியாள் வருமானத்தின்மீது கூடுதலான வரிவிதிப்புச் செய்வது அல்லது

இரட்டை வரி விதிப்புச் செய்வதுபற்றித்தான் இப் பிரச்சினை எழுகின்றது.

ஒரு வருமானம் அல்லது ஒரு வருமானத்தைச் செலுத்துகை என்பது ஓர் உற்பத்திச் சேவைக்கான வரவு அல்லது செலுத்துகை ஆகும். கூலிகள், சம்பளங்களைப்போல் ஒரு தனியாள் செய்த சேவைக்காக இவ் வருமானத்தைப் பெற்றிருக்கலாம் அல்லது தனக்குச் சொந்தமாக இருக்கும் சில மனிதனல்லாத பிற உற்பத்திக் காரணிகள் செய்த சேவைக்காகப் பெற்ற வருமானமாகவும் இருக்கலாம். இவ் வகையில் வட்டி, வாரம், ராயல்டிகள், தூய இலாபங்கள் இவை அடங்கும். எவ்வாறுயினும் உற்பத்தியைப் பெருக்கியதற்காகச் செலுத்தப்பட்டதே வருமானம் என்பது முக்கியமானதாகும். உற்பத்தி என்றாலும், வெளியீட்டைப்படைத்தல் என்றாலும் ஒன்றுதான். ஆனால் உற்பத்தியோடு தொடர்பின்றித் தாமாகவே இயங்கும் ஏனைய பண ஒழுக்குகளும் உள்ளன. கொடைகள், வாரிசு வரவுகள் (bequests), பாங்குக் கணக்கில் டிபாசிட்டுகளைப் போடுதல் அல்லது எடுத்தல், கடன் வாங்குதல், கடன் கொடுத்தல், வரிகளைச் செலுத்துதல் இவை யாவற்றுக்கும் ஒரு பொதுவான அமிசம் இருக்கிறது. உற்பத்திச் சேவைகளைச் செய்யாது, நிதிகளையோ அல்லது பெறுமானமுள்ள பண்டங்களையோ ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு மாற்றுவதுதான் இப் பொதுவான அமிசமாகும். இவற்றை 'வருமானச் செலுத்துகை' களினின்றும் பிரித்து 'மாற்றுச் செலுத்துகை'களாகக் (transfer payments) கருதலாம். ஆனால், வரிநோக்கங்களுக்கு இவை வேறுபடுத்தப்படாதென்பதே இதிலுள்ள அபாயமாகும். அவற்றை வேறுபடுத்தாவிடில் இரட்டை வரிவிதிப்பு அல்லது கூடுதல் வரிவிதிப்பு நேரிடலாம்.[1] மாற்றுச் செலுத்துகைகளை வரிவிதிப்புக்கு உட்படுத்துவது சரிதானா என்பது பிரச்சினையல்ல. ஏனெனில், கொடைகள் மீதும், வாரிசாகப் பெற்றவைகள் மீதும் வரிவிதிப்பது சரியானதே. எல்லா வருமான இனங்களையும் ஒன்று சேர்த்து வரிவிதிக்கும் பொதுவான ஒரு தனியாள் வருமானவரியின் மூலம், சில மாற்றுச் செலுத்துகைகளின் மீதும் வரிவிதிக்க வேண்டுமா என்பதே பிரச்சினையாகும்.

கார்ப்பரேஷன் வருமானத்திற்கும், தனியாள் வருமானத்திற்கும் உள்ள உறவைத் தெளிவாகக் காண்பது இப் பகுத்தாய்விற்கு இன்றியமையாததாகும். கார்ப்பரேஷனும் ஒரு தொழில் நிறுவனமே. பிறவகைத் தொழில் அலகுகளினின்று சட்ட அந்தஸ்து பற்றிய சில விஷயங்களில்தான் கார்ப்பரேஷன் வேறுபடுகிறது. தெருவின் கோடியிலுள்ள பலசரக்குக் கடைக்கு ஒரு தனியாள்

சொந்தக்காரராயிருந்து அதை நடத்தலாம். அக்காலே இவ் வாணிபத்திலிருந்து கிடைக்கும் நிகர வருமானத்தைப் பல சரக்குக் கடைக்காரரிடமிருந்து தனியே வேருகப் பிரிப்பதை ஒருவரும் எண்ணியதில்லே. அவருடைய பலசரக்குக் கடை ஆண்டொன்றுக்கு 5,000 டாலரை நிகர வருமானமாக ஈட்டியது என்று கூறுவது, பலசரக்குக் கடைக்காரர் 5,000 டாலரை ஈட்டினர் என்று கூறுவதற்குச் சமதையாகும். பலசரக்குக் கடைக்காரரும் அவரது கடையும் சேர்ந்து 10,000 டாலரை வருமானமாக ஈட்டுகின்றனர் என்று கூறுவது மடமையாகும். நமக்குத் தெரிந்த எந்த ஒரு வருமான வரியும் இவ்வாருன வருமானத்தை வாணிபத்தின் வருமானமாகக்கொண்டு ஒரு தடவையும், அதே வருமானத்தை வாணிபத்தின் சொந்தக்காரருடையதாகக் கொண்டு மற்ருெரு தடவையும் வரிவிதிப்புச் செய்ததில்லே.

மூன்று வழக்கறிஞர்கள் தங்கள் திறமைகளே ஒன்று திரட்டிச் 'சட்ட நிறுவனம்' ஒன்றை அமைப்பதாகக் கொள்வோம். அது ஒரு தொழில் கூட்டு வியாபாரமாகும். கூட்டு வியாபாரம் என்பது ஓர் ஓடு. அந்த ஓட்டிற்குள்ளேயே அவர்கள் தங்கள் தொழிலே நடத்துகின்ருர்கள். அவ் வாண்டில் கூட்டு வியாபாரத்திற்குப் புறம்பான தனியாட்களுக்கும், நிறுவனங்களுக்கும் அவர்கள் செலுத்தும் தொகைகளேக் காட்டிலும் கூடுதலாகவே அந் நிறுவனம் நிகர வருமானத்தைப் பெறுகிறது. ஒரு நிலேயில் நமக்கு இது கூட்டு வியாபாரத்தின் (நிறுவனத்தின்) வருமானமாகத் தோற்றம் அளிக்கலாம். ஆனுல், உண்மையில் அது கூட்டாளிகளின் வருமானமேயாகும். கூட்டு வியாபார உடன்பாட்டின் விதிகளின்படி இவ் வருமானம் கூட்டாளிகளிடையே பங்கிட்டுத் தரப்படுகிறது. நிறுவனத்தின் வருமானமென்பது நிறுவனத்துக்குச் சொந்தக்காரர்களின் வருமானமேயன்றி வேறல்ல. உடனடியாகக் கைக்காமிராவினுல் போட்டோ எடுப்பதைப் போன்று இந் நிறுவனம், யாருக்குச் சேரவேண்டுமோ அவர்களுக்கு இவ் வருமானத்தைப் பங்கிட்டுக் கொடுப்பதற்கு முன்பு, கணக்குச் சுழலில் மாட்டிக்கொண்டது. பங்கிட்டுக் கொடுப்பதற்கு முன்னமேயே கூட்டாளிகளுக்குத் தனியாள் என்ற முறையில் இவ் வருமானத்தின் மீது பொருளியல் பாத்தியதை உண்டு. ஓராண்டுக் காலத்தில் இக் கூட்டு வியாபாரம் 20,000 டாலர் நிகர வருமானமாக ஈட்டிப் பின்னிட்டு இத் தொகையைக் கூட்டாளிகளிடைப் பங்கிட்டுக் கொடுத்தால், கூட்டு வியாபாரமும், கூட்டாளிகளும் சேர்ந்து அவ் வாண்டுக்கு 40,000 டாலரை நிகர வருமானமாகப் பெற்ருர்கள் என்று கூறுவதில் உண்மையோ அல்லது பயனே இருக்க முடியாது. தனியாள் சொத்துரிமை அல்லது கூட்டு

வியாபாரத்தின் வாயிலாக வரும் தொழில் வருமானங்களைப் பொறுத்தவரை இம் முடிவுகள் சரியானவைதான் என்பதில் வருமானவிரி அதிகாரிகளிடை பூரண உடன்பாடு இருக்கிறது. ஆனால் இம் முடிவுகளைத் தருக்க முறையில் கார்ப்பரேஷன்களுக்கும் விஸ்தரிப்பது இயல்பேயாயினும், இதை 1936ஆம் ஆண்டிலிருந்து வரும் வரி நடைமுறை மறுக்கிறது.

கார்ப்பரேஷனின் சொந்தக்காரர்களுக்கு (பங்குதாரர்களுக்கு) பங்கிட்டுக் கொடுப்பதற்கு இருக்கும் வருமானமே கார்ப்பரேஷனின் நிகர வருமானமாகும். அது பங்கிட்டுக் கொடுக்கப்படாமல் இருந்தாலும் பங்குதாரர்களின் வருமானமே. அவர்கள் அதை எடுத்துக்கொள்ளாது மீண்டும் கார்ப்பரேஷனிலேயே முதலீடு செய்யலாம். ஆனால், கார்ப்பரேஷன் வருமானத்தை அதன் சொந்தக்காரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பதனாலோ (அல்லது அதை அதன் சொந்தக்காரர்களாக மீண்டும் முதலீடு செய்வதனாலோ) புதிதாகக் கூடுதலாக யாதொரு வருமானமும் படைக்கப்படுவதில்லை. ஆகவே, வருமான வரியின் கீழ்க் கார்ப்பரேஷன் வருமானத்தின்மீது ஒரு வரியை விதித்தபின், யாராருக்குச் சேரவேண்டுமோ அவர்களுக்கு அவ் வருமானத்தைப் பங்கிட்டுக் கொடுத்தபொழுது மீண்டும் வரி விதிப்புச் செய்வதால், ஒற்றை வருமானத்தை இரட்டை வருமானமாகக் கணக்கிட்ட குற்றத்திற்கு நாம் ஆளாவோம். வரி செலுத்துவோர்களிடையே நீதியை நிறுவவேண்டும் என்ற கண்ணோட்டத்தில் பார்க்கும்பொழுது, இரட்டிப்புமுறைக் கணக்கிடுதல் (பூரணமாயில்லாதபொழுது) விரும்பத் தக்கதல்ல. எல்லா வருமானங்களின் பேரிலும் ஒப்புமை வீதங்களில் இரண்டு முறை வரிவிதித்தால், வரி செலுத்துவோர் எவரும் தமக்கு அநீதி இழைக்கப்பட்டதாகப் புகார் செய்யவேண்டியதில்லை. ஆயினும், அவர் இரட்டை வரியினால் ஏற்பட்ட பளுவின் தீவிரத்தைப்பற்றிப் புகார் செய்யலாம். ஆனால், பங்கிட்டுக் கொடுப்பதற்கு முன்பே கார்ப்பரேஷன் வருமானத்தின்பேரில் 30 சதவிகிதத்திலிருந்து 52 சதவிகிதம் வரையிலும் வரி விதிப்பதும், பங்கீடு செய்ததன் பின்பு 20லிருந்து 91 சதவிகிதம்[2] வரை தனியாள் வருவான வரி விதிப்பதும் இவ் வருமானங்கள்பேரில் இழைக்கப்படும் பெருத்த பேதங்காட்டுகையாகும். ஏனெனில், பிற வகைத் தொழில் நிறுவனங்களிலிருந்து கிடைத்த இலாபங்கள், அவை பங்கீடு செய்யப்படுவதற்கு முன்பு தனியாக, யாதொரு வரிக்கும் ஆட்படுவதில்லை. கூலி, சம்பளம், வட்டி, வாரம், ராயல்டி, வருமானங்கள் இவை யாவும் தனியாள் வரிகளுக்கே உட்பட்டவை. தனியாள் சொத்துரிமையிலிருந்தோ அல்லது ஒரு கூட்டு வியாபாரத்தி

லிருந்தோர்[3] கிடைக்கும் இலாப வருமானங்களும் இம்மாதிரியே தனியாள் வரிகளுக்கு உள்ளாகின்றன. கார்ப்பரேஷனிலிருந்து கிடைத்த வருமானங்கள் தனியாள் வருமான வரிகளுக்கு உள்ளாகின்றன. இதைத் தவிர்த்து மேலும் 30லிருந்து 50 சதவிகிதம் வரை கார்ப்பரேஷன் வரியைப் போடுவதும் பிரத்தியேக தண்டனை அளிப்பதை ஒக்கும். ஒரு கார்ப்பரேஷனின் வருமானத்தை அதன் சொந்தக்காரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் பொழுது இரண்டாவது வருமானம் ஆகின்றது என்ற பேதங் காட்டுகை இத் தவறுதலான எடுகோளினால் ஏற்படுகிறது. வரி செலுத்தும் திறன் கொள்கையைத் தனித்தனியே கார்ப்பரேஷன் வருமானங்களுக்கும், தனியாள் வருமானங்களுக்கும் பிரயோகிக்கும்பொழுது இக் கருதுகோள் முற்றும் குளறுபடியாகி விடுகிறது. வரி செலுத்தும் திறன் என்பதில் தியாகம் செய்யும் திறனும்—அதாவது பயன்பாட்டைத் துறத்தல்—அடங்கியிருக்கிறதென்றால், கார்ப்பரேஷன் பயன்பாட்டையோ, பயனின்மையையோ துய்க்க முடியாது. ஏனெனில், அது சட்டப்படியான பொருள்தானேயன்றி (legal entity) கார்ப்பரேஷன் இயல்பான மனிதரல்ல. ஆகவே, அது தன் முழு வருமானத்தையும் **கார்ப்பரேஷனுக்குக்** கிஞ்சிற்றும் துன்பமில்லாமல் தியாகம் செய்யலாம்; இந்தத் தருக்க முறையைப் பின்பற்றியும், இம் முகாந்திரங்களை அடிப்படையாகக் கொண்டும் கார்ப்பரேஷன் இலாபங்களை 100 சதவிகிதம் வரிக்கு உட்படுத்தினால், கார்ப்பரேஷனுக்குச் சொந்தக்காரர்களின் வருமானமே கார்ப்பரேஷனின் வருமானம் என்பதும் சொந்தக்காரர்களே கார்ப்பரேஷன் வருமான வரி விதிப்புப் பளு முழுவதையும் தாங்குகிறார்கள் என்பதும் தெற்றெனப் புலனாகும்.

**இணைப்பின் வரலாறும், சிதைவின் வரலாறும்** (The History of Integration and Dis-Integration) : *1913ஆம் ஆண்டுச் சட்டப்படித் தனியாட்கள் பெற்ற இலாப ஈவுத் தொகைகளிலிருந்து 1 சதவிகித சாதாரண வரியை மூலத்திலேயே வசூல் செய்வதற்கு 1 சதவிகித கார்ப்பரேஷன் நிகரவருமான வரி வகைசெய்தது என்று முன்னரே (16ஆம் அதிகாரத்தில்) நாம் கண்டோம். தனியாட்கள் பெற்ற இலாப ஈவுத் தொகைகளுக்குச் சாதாரண வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டது; ஆனால், அவை மேல்வரியைச் செலுத்தவேண்டும். வீதங்கள் ஒரே அளவினதாகவும், வளர்வீதமின்றியும் இருந்தால் இவ்வித ஏற்பாடு முற்றும் திருப்திகரமாக இயங்க முடியும். ஒரு தனியாளின் வரி செலுத்தும் திறனையும், கார்ப்பரேஷனின் நிகர வருமானத்தின்மீது ஒரு வளர்வீதப் பட்டியல் வீதங்களையும் தொடர்பு படுத்த முடியாது என்பது தெளிவு. வளர்வீதப்*

பட்டியல்களின்கீழ் ஒரே அளவு நிகர வருமானத்தையுடைய இரண்டு கார்ப்பரேஷன்கள் அதே வரி வீதங்களிலேயே வரி செலுத்தும். ஆயினும், ஒன்றின் சொந்தக்காரர்கள் சிலராகவும், பெருத்த வருமானங்களை உடையவர்களாகவும் இருக்கலாம். மற்றொரு கார்ப்பரேஷனின் சொந்தக்காரர்கள் பலராகவும் சிறிய வருமானங்களை உடையவர்களாகவும் இருக்கலாம். தனியாளின் நிகர வருமானத்தையன்றி, கார்ப்பரேஷனின் நிகர வருமானத்தை அடிப்படையாகக்கொண்டு வளர்வீத வரி விதிப்பை மூலத்திலேயே கையாண்டால், தனியாளின் வரி செலுத்தும் திறனைப்பற்றிய எல்லா சமாதானங்களையும் புறக் கணித்து ஒதுக்குவதே இதன் இறுதி விளைவாக இருக்கும். ஒரே மாதிரியான வீதாச்சார வீதங்களைக் கார்ப்பரேஷன் வருமானங் களுக்கும் தனியாள் வருமானங்களுக்கும் பிரயோகித்தால் அநீதி இழைக்கப்படுவது குறைக்கப்படுமாயினும், அறவே அகற்றப் படாது. 1913ஆம் ஆண்டுச் சட்டம்கூட கார்ப்பரேஷன் வருமானத்தின்மீது 1 சத விகிதம் வரியை விதித்ததன் வாயிலாகச் சிறிய வருமானம் பெறுபவர்களின் இலாப ஈவு வருமானங்களை அதே அளவு குறைத்தது. அவர்களுக்குத் தனியாள் வருமான வரியிலிருந்து விலக்களித்திருந்தால் அவர்கள் வருமானம் முழுமைக்குமே வரியிலிருந்து விலக்கு அளித்திருக்க வேண்டும்.[4] தனியாட்களுக்குக் குறைந்த அளவு ஒரு விலக்கு அளிப்பதுபோல் கார்ப்பரேஷனுக்கும் குறைந்த அளவு ஒரு விலக்கு அளித்தால் கூட இதே பயன் விளையாது.

கார்ப்பரேஷன் வரி வாயிலாக இலாப ஈவுகளின்மீதான வரிகளை மூலத்திலேயே வசூல் செய்வதால் குறைந்த வருமான முடைய பங்குதாரர்களுக்கு அநீதி இழைக்கப்படுகின்றது என்பதை அறிந்திருந்தும், இலாப ஈவு வருமானங்களை நியாய மாக நடத்தும் விதத்திலிருந்து காங்கிரஸ் மேலும் 1918-லிருந்து தொடர்ந்து பிறழ்ந்தது. 1918-ல் கார்ப்பரேஷன் வரிவீதம் அதன் வருமானத்தின்மீது 12 சதவிகிதமாயிருக்கும்பொழுது, காங்கிரஸ் படித்தரமான சாதாரண வரிவீதங்களைப் (4,000 டாலர்வரை 6 சதவிகிதமும், அதற்குமேல் 12 சதவிகிதம்வரை) புகுத்தியது. இச் சட்டத்தினுல் யாதொரு சாதாரண வரியையும் செலுத்த வேண்டி இருக்காத சிறிய வருமானங்களைப் பெறுபவர் களுக்கு இழைத்த அநீதி தொடர்ந்ததுமன்றி, 4,000 டாலருக்கு மேற்படாத வரிதாங்கு வருமானத்தை உடையவர்களுக்கும், இவ் வநீதி விஸ்தரிக்கப்பட்டது. இவ்வாறு 4,000 டாலருக்கு மேற்படாத வரிதாங்கு வருமானத்தையுடைய தனியாள் ஒருவர், தனியாள் வருமானத்தின்மீது 6 சதவிகிதம் வரியாக மூலத்தில்

செலுத்தியிருப்பார். அதே போழ்து கார்ப்பரேஷன் அவருடைய இலாப ஈவுகளின்மீது 12 சதவிகிதம் வரி செலுத்தியிருக்கும். வீதப் பட்டியல்கள் ஒன்றுயிராதபோது, இலாப ஈவுகளின் மீதான கார்ப்பரேஷன் சாதாரண வரியின் நோக்கம் நிறைவேருது.

1918-லிருந்து 1936 வரை தனியாட்களேயும், கார்ப்பரேஷன்களேயும், வீதங்களேப் பொறுத்தவரை ஒரே மாதிரி நடத்துதற்குக் காங்கிரஸ் தொடர்ந்து மறுத்துவந்தது. 1918-க்குப் பின்பு தனியாள் வருமானத்தின் மீதான சாதாரண வரிவீதங்களேக் காட்டிலும் கார்ப்பரேஷன் வரிவீதங்கள் தொடர்ந்து கூடுதலாகவே இருந்தன. 1935-ல் படித்தரமான (வளர்வீத) கார்ப்பரேஷன் வீதங்கள் முறை புகுத்தப்பட்டது. தனியாட்களுக்கான சாதாரண வரி 4 சதவிகிதம் வீதாச்சார வீதமாகக் (1924-ல்) குறைந்தது. 1936வரை தனியாட்களுக்கு இலாப ஈவு வருமானத்தின் பேரில் விதிக்கப்பட்ட சாதாரண வரிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. இவ் வரிகள் கார்ப்பரேஷனின் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட கார்ப்பரேஷன் வரி வாயிலாக வசூலிக்கப்பட்டுவிட்டது என்பதே இவ் விலக்குக்கான முகாந்திரமாகும். 1935-ல் வீதங்கள் கீழ் வருமாறு இருந்தன :

| தனியாள் சாதாரண வரி வீதம் | கார்ப்பரேஷன் வரி வீதங்கள் | |
|---|---|---|
| | கார்ப்பரேஷன் நிகர வருமானம் | |
| | 2,000 டாலர் வரை | —விலக்கு |
| 4% | 2,000—15,000 ,, ,, | —13% |
| | 15,000—40,000 ,, ,, | —14% |
| | 40,000 டாலருக்கு மேல் | —15% |

முன்னமேயே கார்ப்பரேஷன் தனக்காக 14 சதவிகித வீதத்தில் வரியைச் செலுத்திவிட்டது என்பதனுல், தன் இலாப ஈவுகளுக்கு 4 சதவிகித சாதாரண வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கிறது என்று சிறிய வருமானத்தையுடைய இலாப ஈவு பெறுவோர் ஆறுதல் அடைய முடியாது.

மூலத்தில் வசூலிப்பதற்கான ஒரு கருவியாகக் கார்ப்பரேஷன் வரியைப் பயன்படுத்துவதைக் காங்கிரஸ் 1936-ல் கைவிட்டது. இவ் வாண்டில்தான் காங்கிரஸ் கார்ப்பரேஷன் வருமானம் தனியாள் வருமானத்திலின்று வேறுபட்டது என்ற பிழையான

வாதத்தை முழுதும் ஏற்றுக் கொண்டது. 1936ஆம் ஆண்டைய சட்டத்தை இயற்றியபொழுது, தனியாள் வருமானத்திற்கும், கார்ப்பரேஷன் வருமானத்திற்கும் இடையே உள்ள தொடர்பு பற்றிய பிரச்சினை முழுதும் விரிவாகப் பரிசீலிக்கப்பட்டது. அடிப் படைக் கொள்கைகளுக்குத் திரும்பவும் வருவதற்கான ஒரு வாய்ப்பு இங்ஙனம் கிடைத்தது. ஆனால் இவ் வாய்ப்பைப் பயன் படுத்திக் கொள்ளாது பின்னிட்டு ஓர் அடி எடுத்துவைக்கப் பட்டது. இம் மசோதா விசாரணைகளின் போதும், விவாதங்களின் போதும் அளவுக்கு மீறிய கடுப்பு விளைந்தது. ஆனால், மேற் கொள்ளப்பட்ட நடவடிக்கைக்கும் இப் பிரச்சினையின் தருக்க முறைக்கும் ஒன்றும் தொடர்பே இல்லை.

அமெரிக்க அதிபதி காங்கிரஸ் கட்சிக்குக் கீழ்க்கண்ட நடவடிக் கையை மேற்கொள்ளும்படிச் சிபாரிசு செய்தார். அவர் இரு நோக்கங்களுக்காகவே சிபாரிசு செய்தார். ஒன்று வரி முறையில் பெரும் அளவு நீதியைப் புகுத்துவது. மற்றொன்று நெடுங்கால மாகத் தொடர்ந்து இருந்து வரும் ஒரு தலையாய வரி விரிசலை அடைப்பது.

1. தற்போதிருக்கும் கார்ப்பரேஷன் வருமான வரியை ரத்து செய்தல்.

2. பிற வருமானத்திற்குப் பிரயோகிக்கும் வீதங்களைத் தனியாட்கள் கையில் இருக்கும் இலாப ஈவுகளுக்கும் பிரயோகித்து வரிவிதிப்புச் செய்தல்.

3. இலாப ஈவுகளாகப் பங்கீடு செய்யப்படாத நிகர வருமானத்தின்மீது ஒரு புதிய கார்ப்பரேஷன் வரியைத் திணித்தல். இவ் வருமானத்தைப் பங்கிட்டுக் கொடுத்தால் எந்தத் தனியாள் வீதங்கள் பிரயோகமாகுமோ அவற்றுக்குக் கார்ப்பரேஷன் வரி வீதங்கள் ஏறக்குறைய ஒத்திருக்கவேண்டும்.

கார்ப்பரேஷனுக்குச் சொந்தம் கொண்டாடும் தனியாட் களின் வருமானத்திலிருந்து கார்ப்பரேஷன் வருமானம் வேறான தன்று என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டு முதல் சிபாரிசு செய்யப்பட்டது. மூலத்தில் வசூல் செய்யும் திட்டத்தினால் (கார்ப்பரேஷன் வீதங்களும், தனியாள் சாதாரண வீதங்களும் ஒத்திருந்தாலும்) சிறிய இலாப ஈவைப் பெறுவோருக்கு அநீதி இழைக்கப்பட்டது என்ற உண்மையை ஒப்புக்கொண்டும் இச் சிபாரிசு செய்யப்பட்டது. மூலத்தில் வசூலிப்பதிலிருந்து

தனியாளிடமிருந்து வசூலிப்பதற்கான மாறுதலை (திருப்பத்தை) இரண்டாவது சிபாரிசு பூரணமாக்கும். தனியாளிடமிருந்து வரிவசூலிக்கும் வீதங்கள் தனியாளின் வரிசெலுத்தும் திறனைப் பொறுத்து அளவிடப்படும் போலும். தனியாள் வரிகளைத் தவிர்க்கும்பொருட்டு கார்ப்பரேஷன் ஈட்டங்களைப் பங்கீடு செய்யாமல் பல கார்ப்பரேஷன்கள் வைத்திருக்கின்றன என்று பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மையை மனத்தில் கொண்டு மூன்றாவது சிபாரிசு செய்யப்பட்டது. பெரும் வருமானத்தைப் பெறுபவரின் அக்கறையை மனத்தில் கொண்டே இச் சிபாரிசு செய்யப்பட்டது. வருமான வரிகளைத் தவிர்ப்பதற்கு இது ஒரு தலையாய உபாயமாயிற்று. 1913ஆம் ஆண்டில் தொடங்கி இயற்றப்பட்ட எல்லா வருமான வரிச் சட்டங்களும், கார்ப்பரேஷன் வருமானத்தைப் பங்கிட்டுக் கொடுக்காது 'மோசம்' செய்யும் முறையிலோ அல்லது 'காரணமின்றியோ' வைத்திருப்பதற்குத் தண்டனை விதிக்க வகை செய்தது. இவ் விரிசல் எப்பொழுதுமே ஒப்புக்கொள்ளப்பட்டது; ஆனால் நடைமுறையில் அதை அடைப்பதற்கு வழியில்லாமல் இருந்தது. அதனால் அதிபர் கார்ப்பரேஷனின் பங்கீடு செய்யப்படாத வருமானத்தைப் பங்கீடு செய்ததாகவே கருதி வரி விதிக்கவேண்டும் என்றும், வரிவீதங்கள் கூடுமான வரையில் தற்போதிருக்கும் தனியாள் சாதாரண வரிவீதங்களையும், மேல் வரிவீதங்களையும் ஒத்திருக்க வேண்டும் என்றும் யோசனை தெரிவித்தார். இவ் வீதங்கள் தோராயமாகத்தான் தனியாள் வீதங்களுடன் ஒத்திருக்கும். ஏனெனில், பல வரி அடைப்புகளிலும் உள்ள தனியாட்கள் அதனால் பல்வேறுபட்ட வரிவீதங்களுக்கு ஆட்பட நேரிடும். இதற்குக் காரணம் அவர்கள் அனைவருக்கும் இப் பங்கீடு செய்யப்படாத வருமானம் உரியது.

தனியாள் வருமானவரிக்கும் கார்ப்பரேஷன் வருமான வரிகளுக்கும்[5] எவ்விதம் உறவு இருக்க வேண்டும் என்ற பிரச்சினைக்கு இது தெளிவான தருக்க முறையோடு கூடிய தீர்வாகும். ஆயினும் அதிபரின் சிபாரிசுகள் காங்கிரசிலும், வெளியிலும் புயல் போன்ற எதிர்ப்பை எழுப்பின. இச் சர்ச்சையில் பூராவும் கோவையாக அரசியல் கருத்துகள் வலியுறுத்தப்பட்டனவே அன்றி, பிரச்சினையின் உண்மையான அமிசங்கள் அனைத்தும் பெரும்பாலும் விடப்பட்டன.[6] இந்தச் சட்டத்திற்குத் தந்த வடிவம் யாருக்கும் திருப்தி அளிப்பதாக இல்லை. ஏனெனில் இச் சட்டம் ஒரு தருக்க முறைக்கு வேண்டுவனவற்றையும் கொண்டிருக்கவில்லை; வரிசெலுத்துவோர்களின் விருப்பங்களையும் கொண்டிருக்கவில்லை.

பிரச்சினைகளை விளக்கும் முகத்தானும், மீண்டும் சுருக்கிக் கூறும் முகத்தானும், முதன் முதல் கார்ப்பரேஷன் வரியின் வேடம் என்ன என்பதைக் காண்போம். 1936ஆம் ஆண்டில் இதற்கான மசோதா கொண்டுவரப்பட்டுச் சட்டமாக இயற்றப் பட்டது. கார்ப்பரேஷன் வாயிலாக வரும் தனியாள் வருமானத்தை நடத்தும் விதத்தைப் பற்றியே நாம் அக்கறை கொண்டுள்ளோம்.

## 1913ஆம் ஆண்டுச் சட்டம்

| தனியாள் வருமான வரி | கார்ப்பரேஷன் வருமானவரி |
|---|---|
| சாதாரண வரி (1%)—வரியை மூலத்திலேயே வசூல் செய்ததால், இலாப ஈவுகளுக்கு விலக்களிக்கப்பட்டன. | சாதாரண வரி (1%)—இலாப ஈவுகளின் மீதான வரியை மூலத்திலேயே வசூல் செய்வதற்கு ஒரு கருவியாகக் கார்ப்பரேஷன் நிகர வருமானம் வரிக்கு உட்படுத்தப்பட்டது. |
| மேல் வரி (1—6%)— இலாப ஈவுகளின்மீது மேல் வரி உண்டு. எந்த அடைப்புகளில் மொத்த வருமானம் விழுகிறதோ அதற்குப் பிரயோகமாகக் கூடிய வீதங்களில் மேல் வரி விதிக்கப்படும். | மேல்வரி—அவ்விதமான ஒரு வரியும் கிடையாது. |

இரண்டு மாற்று வழிகள் இருக்கின்றன. ஒன்று தனியாட்கள் கையில் உள்ள இலாப ஈவுகளின்மீது மட்டும் வரி விதித்துக் கார்ப்பரேஷன் வரிகளை அறவே அகற்றுதல்; மற்றொரு வழி இலாப ஈவுகளின்மீது மூலத்தில் வரி வசூலித்தற்குக் கார்ப்பரேஷன் வரியை ஒரு கருவியாகப் பயன்படுத்துதல். தனியாள் வரி விவர அறிக்கை எண்ணிக்கையைக் குறைத்து மூலத்திலேயே வரிவசூல் செய்வதற்கும், வரிசெலுத்தாது தப்பித்தலைக் குறைத்தற்கும் 1913ஆம் ஆண்டில் பிற்கூறிய மாற்றுவழி கைக்கொள்ளப் பட்டது (1913ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ் கூலி, சம்பளம், வட்டி, வருமானங்கள் இவற்றின்மீது பெரும்பாலும் வரி, மூலத்திலேயே வசூலிக்கப்பட்டது என்பதை நாம் நினைவுகூற வேண்டும்). ஆயினும் தனியாள் வரிக்கு மட்டும் மூலத்திலேயே வசூல் செய்தல் பிரயோகிக்கப்பட்டது. தனியாள் சாதாரண வீதமும், கார்ப்பரேஷன் வீதமும் சமதையாகவே இருந்தன. இம் முறையைத் தேர்ந்ததன் மூலம் சிறிய வருமானத்தையுடைய பங்குதாரரைப்

பொறுத்த வரையில்தான் அநீதி இழைக்கப்பட்டது. ஏனெனில், கார்ப்பரேஷன் வரி செலுத்தியபோது மூலத்திலேயே வரி வசூலிக்கப் பட்டிருக்காவிடில் அவருடைய வருமானம் முழுமையும் குறைவாக இருந்ததனால் வருமானவரி விதிப்பினின்று அவருடைய வருமானம் முழுமைக்கும் விலக்கு அளிக்கப்பட்டிருக்கும். இவ்வித உதாரணங்கள் பலவாக இல்லாதபடியினாலும், வரிவீதங்கள் குறைவாக இருந்ததனாலும், மூலத்திலேயே வசூல் செய்வதில் ஆட்சிக்கு ஏற்பட்ட அநுகூலங்களை ஒன்றுமில்லாதபடிச் செய்யும் அளவுக்கு இவ் வநீதியின் அளவு அதிகமாக இல்லை.

## அதிபரின் சிபாரிசுகள், 1936

| தனியாள் வருமான வரி | கார்ப்பரேஷன் வருமான வரி |
|---|---|
| சாதாரண வரி (4%)—பிற வருமானத்தைப் போல் இலாப ஈவுகளும் சாதாரண வரிக்கு உட்பட்டவை. | சாதாரண வரி—அறவே அகற்றப்பட வேண்டியது. |
| மேல் வரி (4—75%) — முன் போலவே இலாப ஈவுகள் மேல் வரிக்கு உட்பட்டவை. | மேல்வரி—**பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் வருமானத்தின் பேரில் மட்டும்** அதே மாதிரியான வருமான அடைப்புகளை ஒத்து, ஒப்புமையில் தனியாள் சாதாரண வரி, மேல்வரி இவற்றின் வீதங்களுக்கு மேல் வரி வீதங்கள் ஒத்திருக்க வேண்டும். |

இந்த யோசனையின்படி மூலத்தில் வசூல் செய்வதை விட்டுவிட வேண்டும். பிற வருமானத்தைப் போலவே இலாப ஈவு வருமானத்தின்மீதும் வரி விதிக்கப்பட வேண்டும். வீதங்களின் ஏற்றத்தினாலும், குறிப்பாகக் கார்ப்பரேஷன் வரிவீதங்களின் ஏற்றத்தினாலும், குறைந்த வருமான வருக்கத்தினர் பரவலாகப் பங்குதாரர்களாக இருந்ததினாலும், தற்போதைய முறையில் இருந்த அநீதி பெருத்த அளவினதாகக் கருதப்பட்டு, இவ் வரியை அகற்றுவது என்றும் முடிவு செய்யப்பட்டது. நெடுங்காலமாக இருந்துவந்த ஒரு விரிசலை அடைப்பதற்கு ஏற்ற கருவியாகப் பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் இலாபங்களின் மீது ஒரு வரி சிபாரிசு செய்யப்பட்டது. ஈட்டம் இலாப ஈவுகளாகப் பங்கீடு செய்யப்பட்டதா அல்லது கார்ப்பரேஷன் காப்பு நிதியில் போடப்படுகிறதா என்பதை சமபயன் உள்ளதாகச்

செய்யும் வகையில் (வரி வீதத்தைப் பொறுத்த வரையில்) வீதங்கள் போடப்பட்டன. சார்பற்ற நிலையில் காப்பு நிதிகள் திரட்சி தண்டிக்கப்படக் கூடாது. இது வழியாக எந்த விரிசலின் மூலம் பொதுவாக வருமானம், வரிவிதிப்பைத் தவிர்த்து வந்ததோ, அதை அடைப்பதன் மூலம், இதுவரை கிடைத்துவந்த சலுகை அகற்றப்படுவதே, உடனடியான ஒப்புமைத் தண்டனையாகக் கொள்ளவேண்டும். இந்த தப்பித்துச் செல்லும் வழியை அடைப்பதன் வாயிலாக ஒருவேளை இலாப ஈவுகளைப் பங்கீடு செய்வதற்கு ஊக்கம் அளிக்கப்படலாம். இதன் விளைவாக வரி வருமானங்களும் ஏறலாம். இலாப ஈவுத் தொகைகளைப் பெறுபவர்களின் நுகர்ச்சி மட்டத்தை உயர்த்துவதற்கும், ஏற்கனவேயே மிகையென்று கருதப்பட்ட பயன்படுத்தப்படாது தேங்கியிருக்கும் நிதிகளின் திரட்சியை மெதுக்கன் ஆக்குவதற்கும் ஆகிய இரு காரணங்களினாலும் பங்கீட்டை ஊக்குவிப்பது விரும்பத்தக்கதாகக் கொள்ளப்பட்டது. 1936-ல் கூடுதலாக வேலை அளிப்பதும், கூட்டாட்சிக் கொள்கையின் ஒரு தலையாய நோக்கம் என்பதையும் நாம் நினைவுகூர வேண்டும்.

## 1936ஆம் சட்டம் முதலில் இயற்றப்பட்டவாறு

| தனியாள் வருமான வரி | கூட்டாட்சி வருமான வரி |
|---|---|
| சாதாரண வரி(4%)—சாதாரண வரிக்கு இலாப ஈவுகள் உட்பட்டவை. மேல்வரி-முன் போலவே இலாப ஈவுகள் மேல் வரிக்கு உட்பட்டவை. | சாதாரண வரி (8—15%)—முன் போலவே எல்லா கார்ப்பரேஷன் நிகர வருமானங்களின் பேரிலும். மேல்வரி (7—27%)—பங்கீடு செய்யப்படாத நிகர வருமானத்தின் மேல் மட்டும். |

தனியாள், கார்ப்பரேஷன் வரிகளிடையே சரியான உறவு முறையை ஏற்படுத்துதற்கு, இரண்டு தருக்க முறையான மாற்று வழிகளினின்றும் கூடுமான வரை எவ்வளவு பிறழ்ந்து செல்ல வேண்டுமோ, அவ்வளவு தூரம் சென்று இச் சட்டம் ஒரு சமாதானத்தைச் செய்தது. பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷனின் உபரி மீது மேல் வரியை விதிப்பதன் வாயிலாகத் தற்போதிருந்த விரிசல் அடைக்கப்பட்டது. ஆனால், கார்ப்பரேஷன் வாயிலாகப் பெற்ற தனியாள் வருமானங்களுக்கு எதிராகப் பேதங்காட்டுகை மிக உச்சநிலையை அடைந்தது. முந்திய சட்டங்களில் உயிர் நாடியாகக் காணப்பட்ட சிறிய இலாப ஈவுகளுக்கு எதிராகக் காட்டப்பட்ட சிறிய பேதங் காட்டுகையை அகற்றுவதற்கு மாறாக, இச் சட்டம் எல்லா இலாப ஈவு வருமானங்களுக்கும் எதிரான ஒரு

கடுமையான பேதங்காட்டுகையை நிறுவியது. இதன் விளைவு இலாப ஈவு வருமானங்களின் பேரில் இருமுறை வரிவிதிக்கப் பட்டது (கார்ப்பரேஷன் வரியின் கீழும், தனியாள் சாதாரண வரியின் கீழும்). இதனால் கார்ப்பரேஷன் வரிக்கு உட்படாத வட்டி வருமானங்கள் 4 சதவிகிதத்திற்கு மேற்படாத சாதாரண வரி யைச் செலுத்தும் பொழுது, இலாப ஈவுகள் மொத்தத்தில் ஏறக் குறைய 15 சதவிகிதம் வீதங்கள் செலுத்தும் நிலை ஏற்பட்டது. 1939-ல் அரசியல் செல்வாக்குக் காரணமாக பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் உபரிவரி கைவிடப்பட்டது. இதனால் வரிவிரிசல் மீண்டும் திறக்கப்பட்டது.[7] கார்ப்பரேஷன் இனங்களிலிருந்து பெறப்பட்ட இலாப வருமானங்களுக்கு எதிராகக் கடுமையாகப் பேதங் காட்டுகை தான் 1936ஆம் ஆண்டு ஏற்பட்ட இக் குளறு படியின் இறுதியான விளைவாக இருந்தது (இருக்கிறது). முன்பு பெரிய அளவில் வரியிலிருந்து தப்பித்தல் நடந்தது. சட்டத்தில் திருத்தம் செய்து இத் தப்பித்தல் குறைக்கப்படவுமில்லை.[8] கார்ப்ப ரேஷன் வருமானத்தின் பெரும் பகுதியின்மீதும் ஒரு மேல் வரியை 1914 இல் விதித்ததன் காரணமாக இப் பேதங்காட்டுகை பரிபூரணமாக்கப்பட்டது.[9]

தனியாள் வரிக்கும், கார்ப்பரேஷன் வரிக்கும் இடையே நிலவிய ஆதி, தருக்கு முறை உறவை, காங்கிரஸ் வருவாய்க் காரணங்களை முன்னிட்டுக் கிட்டத்தட்ட முழுதும் சிதைத்தாலும் இச் சட்டத்தில் அறிவுக்குப் பொருந்திய வாதங்கள் அடங்கிய திட்டுக்களும் இருந்தன. தன்னுடைய வரிதாங்கு வருமானத் தைக் கணக்கிடுவதில் பிற உள்நாட்டுக் கார்ப்பரேஷன்களிலிருந்து பெறும் இலாப ஈவுகளில் கிட்டத்தட்ட அனைத்தையும் ஒரு கார்ப்ப ரேஷன் பிடித்தம் செய்துகொள்ளலாம் என்ற நெடுங்காலமாக நிலவிவந்த சட்ட விதி, முந்தியதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இவ்வாறு கார்ப்பரேஷனின் வருமானத்தின்மீதும், கார்ப்ப ரேஷனிலிருந்து தனியாட்கள் பெறும் வருமானத்தின்மீதும், ஒரே கார்ப்பரேஷன் வருமானம் ஒன்றுக்கு மேற்பட்ட தடவை வரி விதிப்புக்கு உட்படுவது பெரிதும் தவிர்க்கப்படுகிறது. B, கார்ப்ப ரேஷன் வரியைச் செலுத்தியபின்பு, Bயிடமிருந்து தன் வருமானக் கூறுகப் பெற்ற A யின் வருமானத்தின்மீது, கார்ப்ப ரேஷன் வருமானவரி விதிக்கக் கூடாதென்பதைச் சட்டசபை அறிந்திருப்பதாகக் கூறுவது இதன் உட்பொருளாகும். ஆகையி னால் இந்த விதமான மாற்றச் செலுத்துகை இனத்தைப் பொறுத்தவரையில், இந் நிலை தருக்க முறைக்கு ஒத்ததேயாகும். ஆனால், இத் தருக்க முறை பங்குதாரர்களின் இறுதிப் பங்கீட்டிற்கு விஸ்தரிக்கப்படவில்லை. 1954[10] ஆம் ஆண்டைய அகவருவாய்

வரித் தொகுப்பின் M அதிகார உட்பகுதியில் அரைகுறைத் தருக்க முறைக்கு இரண்டாவது எடுத்துக்காட்டு காணப் படுகிறது. இவ் வெடுத்துக்காட்டு 'ஒழுங்குபடுத்தப்பட்ட முதலீட்டுக் கம்பெனிகளைப்' பற்றியதாகும். இவை கடன் பத்திர முதலீட்டு டிரஸ்டுகளாகும். இவற்றின் மொத்த வருமானத்தில் 90 சதவிகிதமாவது இலாப ஈவுகள், வட்டி, கடன் பத்திரங் களின் மீதான முதலீட்டு ஆதாயங்கள் இவற்றிலிருந்து கிடைக் கிறது. இக் கம்பெனிகளின் நிகர வருமானத்தில் 90 சதவிகிதம் பங்குதாரர்களுக்கு இலாப ஈவுகளாக வரிதாங்கு ஆண்டிலேயே கொடுக்கப்படுகிறது. இங்கு குறிப்பிடப்பட்ட கொள்கை பல காலும் 'குழாய்க் கொள்கை' (conduit principle) என்றழைக்கப் படுகிறது. இறுதிப் பாத்தியதைக்காரர்களுக்குக் கார்ப்பரேஷன் வருமானத்தைப் பங்கீடு செய்ய இக் கம்பெனிகள் குழாய்களாகப் பயன்படுகின்றன. கார்ப்பரேஷன்கள் நிகர வருமானத்தைப் படைக்கின்றன. நிகர வருமானத்தின்பேரில் அவை கார்ப்ப ரேஷன் வரிமான வரிகளையும் செலுத்துகின்றன. மீதமுள்ளதில் ஒரு பகுதி முதலீட்டு டிரஸ்டுகளுக்கு இலாப ஈவுகளாகத் தரப்படு கின்றது. முதலீட்டு டிரஸ்டுகள், கார்ப்பரேஷன் கடன் பத்திரங்களை வைத்திருக்கின்றன. பின்னர் டிரஸ்டுகள் தங்கள் வருமானத்தில் கிட்டத்தட்ட முழுதையும் தம் பங்குதாரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கின்றன. கார்ப்பரேஷன்களிலிருந்து முதலீடு களின் பங்குதாரர்களுக்கு முதலீட்டு டிரஸ்டுகளின் வாயிலாகச் செல்லும் வருமானம் வரி விதிப்புக்கு உள்ளாவதில்லை. டிரஸ்டுகள் குழாய்களாகவே இவ் விடத்தில் பயன்படுகின்றன. இதுவரையில் நல்லதே. முக்கூட்டு வரி விதிப்பைத் தவிர்ப்பதற்கான முகாந் திரங்களை இரட்டை வரி விதிப்பதைத் தவிர்ப்பதற்கான முகாந் திரங்களாகவும் கூறலாம். ஆதி கார்ப்பரேஷன்களைக் குழாய்க ளாகக் கொண்டால் இரட்டை வரி விதிப்பைத் தவிர்க்கலாம்.

மூன்றுவது எடுத்துக்காட்டு இலாப ஈவை வரவு வைப்பதும், தனியாள் வருமான வரியின்கீழ் 1954-ல் முதன் முதலில் பிரயோகிக்கப்பட்ட விலக்கமும் ஆகும். இவ் விதியின்படிக் கார்ப்ப ரேஷன் வரிக்கு உட்பட்ட உள்நாட்டுக் கார்ப்பரேஷன்களிலிருந்து கிடைக்கும் இலாப ஈவுகளில் முதல் ஐம்பது டாலருக்கு மொத்த வருமானத்திலிருந்து விலக்களிக்கப்படுகிறது (ஒவ்வொரு வருக்கும் குறைந்தது 50 டாலராவது இலாப ஈவுகளாகக் கிடைத்தால், ஒரு சதி பதிக்கு நூறு டாலர் விலக்களிக்கலாம்). மேலும், இலாப ஈவுகளாகப் பெற்றதன்மேல் விதிக்கப்படும் 4 சதவிகித வரிக்கு எதிராக ஒரு வரவு வைத்தலும் (வரி தாங்கு வருமானத்தில் 4 சதவிகிதம் வரை) அனுமதிக்கப்படுகிறது.

மேலே தந்த உதாரணங்கள் முக்கூட்டு வரி விதிப்புத் தவிர்ப்பதை விளக்கின. ஆனால் இவ்வித இரட்டை வரிவிதிப்பு அல்லது கூடுதலாக வரி விதிக்கும் பிரச்சினையை நேரிடையாகவே சமாளிக்கிறது. இவ்விதி தனியாள் வரிக்கும், கார்ப்பரேஷன் வரிக்கும் இடையே ஒரு சிறிதளவு இணைப்பு ஏற்படுவதையும் அநுமதிக்கிறது. உண்மையாகவே இவ் விதியைப் பற்றிய சட்டசபை விசாரணைகள் இரட்டை வரிவிதிப்பின் பளுவைக் குறைக்கவேண்டும் என்ற அதன் கருத்தைத் தெளிவாகக் காட்டுகிறது. மேலும், இவ் விசாரணைகள்—வரவு செலவுத் திட்டம் அநுமதிக்கும் அளவுக்கு—படிப்படியாக இரட்டை வரிவிதிப்பை அகற்றுவதற்கான முதற் படியாகும் என்றும் சூசகமாகத் தெரிவிக்கின்றன.

இலாப ஈவுகளை விலக்குவதன் மூலமும், வரவு வைத்தலின் மூலமும் இரட்டை வரிவிதிப்பைக் குறைக்க முனைந்ததில், காங்கிரஸ் இரண்டு சாத்தியமான நெம்புகோல்களில் தவறுதலான ஒன்றை நீட்டியது நம்முடைய போகூழாகும். இலாப ஈவுகளை விலக்குவதையும், வரவு வைத்தலையும்விட ஒரு சிறந்த மாற்றுவழி கார்ப்பரேஷன் செலுத்தும் இலாப ஈவுகளின் மீதான கார்ப்பரேஷன் வரியைக் குறைப்பதாகும். தனியாள் வருமானங்கள் மீதான வளர்வீத வீதங்களை இம் முறைத் தீண்டவில்லை (பாதிக்கவில்லை). இவ்வாறு கார்ப்பரேஷன் வரியைக் குறைப்பதால் மிச்சமாகும் தொகையைச் சேமித்துப் பங்குதாரர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இதனால் பங்குதாரர்களுக்குக் கூடுதலாக இலாப ஈவு கிடைக்கிறது. இவ்வாறு கூடுதலாகக் கிடைத்த இலாப ஈவுகளின் தன் பங்கின்மீது, தனக்குப் பிரயோகம் ஆகக் கூடிய இறுதிநிலை வீதத்தின்படிப் பங்குதாரர் வரி செலுத்துவார். ஆயினும் தனியாள் வருமான வரியின் கீழ் பங்குதாரர்களுக்கு அளிக்கப்பட்ட இலாப ஈவு விலக்கினால் தற்பொழுது குறைவான இறுதிநிலை வீதத்தில் செலுத்துபவரைவிடக் கூடுதலான இறுதிநிலை வீதத்தில் வரி செலுத்துபவரே அதிக ஆதாயம் பெறுகிறார்.[11] வரிக்காக வரவு வைத்தல் விதிக்கு இது பொருந்தாது. எதிர் காலத்தில் இரட்டை வரிவிதிப்பை அகற்றுவதில் மேலும் முன்னேற்றம் காணப்படுமானால், அளிக்கப்படும் சலுகைகள் கார்ப்பரேஷன் வரிக்கன்றி தனியாள் வரிக்குப் பிரயோகமாகாது என்று நம்பப்படுகிறது.

**இரட்டை வரிவிதிப்பையும், பங்கீடு செய்யப்படாத ஈட்டத்தின் விரிசலையும் ஒருங்கே அகற்றும் சாத்தியமான முறைகள் :** தனியாள் வருமானவரி, கார்ப்பரேஷன் வருமானவரி இவையிரண்டும் சேர்ந்து பங்குதாரர்களுக்கு எவ்வளவு கூடுதலான

பளுவை அளிக்கின்றன என்பதை டேனியல் ஹாலண்டு என்பவர் ஆராய்ந்திருக்கிறார். அவர் 1950ஆம் ஆண்டுக்கான இக் கூடுதல் பளுக்களைக் கணக்கிட்டிருக்கிறார்.[12] 2,000 டாலர் மொத்த வருமானமாகவுடைய வருக்கத்தினரில் சராசரிப் பங்குதாரர்கள் தனியாள், கார்ப்பரேஷன் வரி இரண்டையும் சேர்த்து 34 சதவிகிதம் கூடுதலாகச் செலுத்துகிறார்கள் என்றும், பங்கீடு செய்யப்பட்ட ஈட்டங்களைக் கார்ப்பரேஷன் வருமானமாகக் கொள்ளாமல் தனியாள் வருமானமாகக் கொண்டு மட்டும் வரிவிதித்தால் 34 சதவிகிதம் குறையும் என்றும் அவர் கண்டார். 25,000 டாலர் மொத்த வருமானத்தை உடைய வருக்கத்தினருக்கு இக் கூடுதல் 30 சதவிகிதப் புள்ளிகளும், 500,000 டாலர் மொத்த வருமானமாக உடைய வருக்கத்தினருக்குச் சுமார் 11 சதவிகிதப் புள்ளிகளும் குறைவதாக அவர் கண்டார். பங்கிட்டுக் கொடுக்கப்படாத கார்ப்பரேஷன் ஈட்டங்களைப் பொறுத்தவரையில், அவை, 2,000 டாலர் மொத்த வருமானமாகவுடைய வருக்கத்தினருக்கு அவ் வீட்டங்கள் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டிருக்குமானால் இருப்பதைக் காட்டிலும், 29 சதவிகிதம் புள்ளிகள் (points) கூடுதலாக இருந்தன. ஆனால், பங்கிட்டுக் கொடுக்கப்படாத கார்ப்பரேஷன் வருமானத்தின் மீதான கூடுதல் பளு 50,000 டாலர் வருக்கத்தினருக்கு 2 சதவிகிதம் புள்ளிகளும், 500,000 டாலர் வருக்கத்தினருக்கு—33 சதவிகிதம் புள்ளிகளும் குறைந்தன. பொதுவாகப் பார்க்குமிடத்து, ஈட்டங்கள் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டாலும் அல்லது கொடுக்கப்படாவிட்டாலும், சிறிய பங்குதாரர்களின்மீது விழும் கூடுதல் பளு மிகவும் அதிகமே. ஆனால், உயர்ந்த வருமானங்களுக்கு இப் பளு குறைகிறது. உச்சநிலையில் உள்ள சில வருமானங்களுக்கு இதனால் வரியில் அநுகூலமும் ஏற்படுகிறது.[13] இவ் வநுகூலம் கார்ப்பரேஷன் ஈட்டங்களில் எவ்வளவு வீதாசாரம் பங்கிட்டுக் கொடுக்கப்படுகிறது அல்லது பங்கிட்டுக் கொடுக்காமல் வைக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பொறுத்ததாகும்.[14]

கூட்டாட்சியின் தனியாள் வருமானவரி, கார்ப்பரேஷன் வருமானவரி இவை யிரண்டையும் சரியானபடி இணைப்பதில், பொதுவாகக் கார்ப்பரேஷன் வருமானத்தின்மீதுள்ள வரியை அகற்றுவது முதற் படியாகும். இந் நடவடிக்கையினால் வருமான வரிவிதிப்பு முறையில் உண்மையான முன்னேற்றத்தைக் காண முடியும். இங்ஙனம் செய்தால் எந்த ஆண்டு ஈட்டப்பட்டதோ அந்த ஆண்டிலேயே பங்கிட்டுக் கொடுக்கப்படாத கார்ப்பரேஷன் இலாபங்களை வருமான வரியின் கீழ்க் கொணர்வது இரண்டாவது படியாக இருக்கும். இது, அப்பொழுது அமுலில் இருக்கும் எந்த சராசரித் திட்டத்திற்கும் உட்பட்டதே.

இணைப்பை ஏற்படுத்துவதற்கு மூன்று நுட்பவினை முறைகள் இருக்கின்றன.[15] 1936ஆம் ஆண்டைய பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் உபரி வரியைப் போன்றதொரு வரியை மீண்டும் போடுவது முதல் சாத்தியக் கூறாகும். தன்னால் மீண்டும் முதலீடு செய்யப்பட்ட தனியாள் வருமானத்தின் பகுதிமீது கார்ப்பரேஷன் வரி செலுத்தும். இவ் வருமானம் பங்கீடு செய்யப்படாத வருமானத்தின் தொகையைக் கொண்டு அளவிடப்படும். ஆனால், இம் முறையில் பல பலவீனங்கள் இருப்பதாலும், இதைத் தவிர சிறந்த முறைகள் இருப்பதாலும், இம் முறையை வன்மையாகச் சிபாரிசு செய்ய முடியாது. வருமானம் பங்கீடு செய்யப்பட்டிருந்தால் பொதுவாக எந்த வீதங்களில் தனியாட்கள் வரி செலுத்தியிருப்பார்களோ, அவ் வீதங்களையாவது நெருங்கும் முறையில் வரி வீதங்களை நிர்ணயிக்கவேண்டும். தற்போதைய நிலையில் (வளர்வீத தனியாள் வீதங்களில் ஒரு பரவலான வீச்சு காணப்படுகிறது. கார்ப்பரேஷன் பங்குகள் அநேகமாக எல்லா வருமான வருக்கத்தினர்களிடையேயும் பங்கீடு செய்யப்பட்டிருக்கின்றன. இதுதான் இப்போதுள்ள நிலை.) எந்தப் பட்டியல் வீதங்களைத் தேர்ந்தெடுத்தாலும் அவை மிகவும் தோராயமாகவே ஏற்ற தனியாள் வீதங்களை அணுகும். பங்கீடு செய்யப்படாத வருமானம் எவ்வளவு இருக்கின்றதோ அதன் மீதும், அல்லது மொத்த மூலதனத்தில் பிடித்தம் செய்யப்பட்ட வருமானம் எவ்வளவு வீதாசாரமோ அதன் மீதும், வீதங்களை வளர்வீதம் ஆக்கவேண்டும் என்றால், தனியாள் வரிவீதங்களைக் காட்டிலும் வேறான ஒரு தளத்தின் மீது அவை முற்றும் இயங்கவேண்டும். பல ஆண்டுகள் தொடர்ந்து தனியாள் வருமானத்தின் சராசரியை (பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் வருமானத்தையும் சேர்த்து) சேர்த்தால் தனியாளின்மீது ஏற்றதோர் வரியை விதித்தற்கும், கார்ப்பரேஷன் செலுத்தும் வரிக்கும் மேலெழுந்த வாரியாக ஓர் ஒற்றுமை இருப்பதைக் காணலாகும். மிகையாகச் செலுத்தியவைகளைத் திருப்பிக் கொடுப்பதன் மூலமும் அல்லது குறைவாகச் செலுத்தியவர்களிடமிருந்து கூடுதலாக வசூல்கள் செய்வதன் மூலமும்[16] இம் மேடுபள்ளத்தை நிரவிவிடலாம் என்பது உண்மையே. ஆனால், இவ்வித ஆண்டிறுதி சரிக்கட்டுதல்கள் ஏராளமாக இருக்குமாதலால் மாற்று வழி ஒன்றை மேற்கொள்ள வேண்டியதன் இன்றியமையாமை புலப்படும். பின்னிட்டுத் தன் கடன்பத்திரங்களை விற்பதன் மூலம் ஒரு பங்குதாரர் அடைந்த மூலதன ஆதாயத்தின்மீது ஒரு வரி விதிப்பதன் வாயிலாகவும், பங்கீடு செய்யப்படாத வருமானத்தின்மீது வரிபோடுவது இரண்டாவது சாத்தியக் கூறாகும். ஒரு வேளை இது ஒருவருக்கும் பிடிக்காததாயிருக்கலாம். இதன்படி கடன் பத்திரத்தை விற்கும்

வரை வரி வசூலுக்குக் காத்திருக்கவேண்டும்; அல்லது வரிவசூல் செய்வதற்குப் பங்குதாரர் இறக்கும்வரை காத்திருக்கவேண்டும். அப்பொழுதும் மூலதன ஆதாயம் ஏற்பட்டிருந்தால்தான் வரிவசூல் செய்ய முடியும். குரோவ்ஸ் கூறுமாறு 'எப்பொழுது வரி விதிக்கப் படுகிறது என்பது மிகவும் தலையாயது. உயிருடனிருப்பவர்களுக்கு அளிக்கப்பட்ட விலக்குகளுக்கு ஈடாக இறந்தவர்களின்மீது திணிக்கப்படும் எந்தப் பளுக்களும் இருக்குமா என்பது ஐயத்திற் கிடமானதே'.[17] தற்போதைய வரிசெலுத்தும் முறைகளைக் கொண்டு வருவதற்குக் காரணமாக இருந்த குறிக்கோள்களுக்கு இவ் யோசனை முரணாக இருப்பதால், அக் காரணங்களைக் கொண்டே இதை நிராகரித்து விடலாம். மேலும், மீண்டும் முதலீடு செய்யப் பட்ட கார்ப்பரேஷன் சேமிப்புகளை இதுபோன்று நடத்தினால், பதிவு செய்யப்படாத தொழில்களின் ஈட்டங்களையும் இதேபோல் நடத்த வேண்டியது நியாயமாகும்.

மூன்றாவது சாத்தியக் கூற்றில் எளிமை, நீதி ஆகிய இரண்டு அமிசங்களும் இருக்கின்றன. கூட்டு வியாபாரம் அல்லது தனியார் தொழிற் றுணிவின் வாயிலாகப் பெற்ற வருமானத்தைப் போன்றே கார்ப்பரேஷன் வாயிலாகக் கிடைத்த வருமானத் தையும் நடத்துவதுதான் இம் முறையாகும். பங்கீடு செய்யப் பட்ட வருமானத்தைப் பொறுத்தவரை, இவ் யோசனையை முன்னர்த் தெரிவித்த நடவடிக்கையின் மூலம் செயல்படுத்தலாம். அதாவது கார்ப்பரேஷன் வருமானவரியை ரத்து செய்வதன் மூலம் இதைச் செயல்படுத்தலாம். பங்கீடு செய்யப்படாத இலாபங்களைப் பொறுத்தவரை, வரி ஆண்டின் இறுதியில் பங்கு தாரர்களுக்கு அவர்களின் பங்குகளின்மீதான பங்கீடு செய்யப் படாத இலாபத் தொகையைக் கார்ப்பரேஷன் அறிவிக்கும். இதே மாதிரி ஒவ்வொரு பங்கின் பேரிலும் கிடைத்த எதிர்மறை யான ஈட்டங்களும் (நிகர இழப்புகள்) அறிவிக்கப்படும். தனியாள் வரி விவர அறிக்கைகளைச் சரிபார்க்கக் கருவூலத்திற்கும் இத் தகவல் தெரிவிக்கப்படும். அதன் பின்புதான் வரிவிவர அறிக்கையில் பங்குதாரர், பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் ஈட்டங்களில் தன் பங்கைத் தெரிவிப்பார். அவருடைய நிகர வருமானம் முழுமைக்கும் பொருத்தமான வீதங்களை (பங்கீடு செய்யப்படாத இலாபங்களையும் சேர்த்து) அவர் செலுத்துவார். இவ் விதமான திட்டத்தினால் எல்லாத் தனியாட்களுக்கும் நீதி கிடைக்கும். தற்பொழுது தன் இலாபஈவுக் கொள்கையைக் கார்ப்பரேஷன் நிருவாகம் தீர்மானிப்பதில் எந்த வரிக்கும் உள்ள செல்வாக்கை அகற்றுவதன் வாயிலாக இத் திட்டம் வரியிலுள்ள விரிசலையும் அடைக்கும். வருமானங்களைப் பங்கீடு செய்வதா

வேண்டாமா என்று முடிவு செய்வதில், மீண்டும் கார்ப்பரேஷன் ஈட்டங்களை முதலீடு செய்வதன் முடைதான் கருத்தில் கொள்ளப் படுமே தவிர, வருமான வரிகளைத் தவிர்ப்பதற்காகப் பங்குதாரர்கள் பலர் ஈட்டங்களைப் பங்கீடு செய்யவேண்டியதில்லை என விரும்புவது கருத்தில் கொள்ளப்படமாட்டாது.

இவ்விதமான ஒரு திட்டத்தில் சங்கடங்கள் அதிகமில்லை. ஏற்கனவே வரிவிதிக்கப்படாத வருமானத்தை வரிவிதிப்புக்கு உட்படுத்தும்பொழுது மேலும் சில கணக்கு எழுதலும், அறிக்கை செய்தலும் ஏற்படும் என்பது தெளிவு. வரியைச் செலுத்துவதற்கு வேண்டிய ரொக்கம் கையில் கிடைக்காத பொழுது வரி செலுத்து வோர் பங்கீடு செய்யப்படாத இலாபத்தின்மீது ஒரு வரியைச் செலுத்தும்படி நேரிடலாம். இவ்வித இக்கட்டு ஏற்படுவது முற்றிலும் சாத்தியமே. இவ் விக்கட்டைத் தவிர்ப்பதற்கு மூலத்தில் வசூலிக்கும் முறையைப் பயன்படுத்தலாம். இப்பொழுது கார்ப்பரேஷன், கூலிகள்மீது செலுத்திய வரிகளைப் பங்கீடு செய்யாமல் வைத்துக் கொள்கிறது. இங்ஙனம் பங்கீடு செய்யப் படாமல் வைத்திருக்கும் தொகையின் அளவு தொழிலாளியின் தனியாள் வரிப் பொறுப்பைப் பொறுத்திருக்கும். இதே போன்று சிறிய பங்குதாரர்களுக்கு நிதித்தொல்லை ஏற்படும் சாத்தியக் கூற்றுக்கும் ஓரளவு வகை செய்யலாம். இவ்வித வரிப்பொறுப்பை ஈடு செய்யும் வகையில் கார்ப்பரேஷன் போதிய ஈட்டத்தை ரொக்க இலாப ஈவுகளாகப் பங்கீடு செய்யலாம் என்று குரோவ்ஸ் யோசனை கூறுகிறார். இம்மாதிரிப் போதிய ரொக்கம் இல்லாது சங்கடப்படுபவர்கள் சிறிய பங்குதாரர்களாக இருக்கலா மென்பதையும், அவர்களுக்கு இலாபஈவுக் கொள்கையைத் தீர்மா னிப்பதில் யாதொரு முக்கியத்துவமும் இல்லாமலிருக்கலாம் என்பதையும், குரோவ்ஸ் ஒப்புக்கொள்கிறார். இறுதியாகப் பங்கீடு செய்யப்படாத இலாபத்தின்மீது வரிவிதிப்பது, சேமிப்பின்மீது சுமத்தப்பட்ட ஒரு பளுவாகும் என்ற திறனாய்வையும் நாம் குறிப்பிடவேண்டும். இது உண்மையே. கார்ப்பரேஷனின் சொந்தக்காரர்கள்பேரில் இதனால் எவ்வளவு பளு சுமத்தப்படுகிறதோ அதே அளவு பதிவு செய்யப்படாத தொழில்களின் சேமிப்பு, தனியாட்களின் சேமிப்பு இவற்றின் பேரிலும் பளு சுமத்தப்படுகிறது. இந்நாள் வரைக்கும் கார்ப்ப ரேஷன்களுக்கே சிறப்பாகச் சலுகை தரப்பட்டு வந்திருக்கிறது. பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் இலாபங்களின்மீது ஒரு வரி விதிப்பதனால் சேமிப்பு பாதிக்கப்படலாம். இவ்வாறு சேமிப்பு பாதிக்கப்படுவதைத் தற்போதைய கார்ப்பரேஷன்

சாதாரண வரிகள், மேல்வரிகள் இவற்றை அகற்றுவதன் மூலம் சரிக்கட்டலாம்.

தனியாள் வருமானத்தை ஓர் ஆற்றுக்கு ஒப்பிடலாம். தனியாளுக்கு பல இனங்களிலிருந்தும் கிடைக்கும் வருமானங்களை அவ் வாற்றின் உபநதிகள் என்று கூறலாம். தனியாள் வருமான வரிக்கும், கார்ப்பரேஷன் வருமான வரிக்கும் உள்ள உறவு எங்ஙனமிருக்கவேண்டும் என்ற நம்முடைய சர்ச்சையில் இவ் வரிகளின் பளுவைச் சமமான அளவில் இப் பல்வேறுபட்ட உபநதிகளின் மீதும் சுமத்துவது எப்படி என்று கூறியிருக்கிறோம். கார்ப்பரேஷன் வாயிலாகக் கிடைத்த தனியாள் வருமானத்தின் மீது இரட்டை வரி விதிப்புச் செய்யும் தற்போதைய முறையினால் இவ்வகை வருமானத்தின்மீது அலாதியான பளு ஏற்படுகிறது என்பதையும் நாம் கண்டோம். வருமானம் பெறுவோர்க ளிடையே சாதாரண நீதியை வழங்குவதே கார்ப்பரேஷன் வருமானவரியை அகற்றுவதன் தலையாய நோக்கம். இவ்விதப் பேதங் காட்டுகையால் மேலும் கூடுதலான ஒரு தீங்கு விளைகிறது. அதுதான் முதலீடு செய்வதை ஊக்கமிழக்கச் செய்வது. ஏனெனில் இவ்வாறான முதலீடுகள் தாம் பொருளியல் ஆபத்தின் பெரும் பகுதியையும் ஏற்பன. இம் முதலீடுகளின் நிகர வருமானத்தை பேதங்காட்டுகைக்கு உட்படுத்துவது பேதமையே.

இப் பிரச்சினையைப்பற்றிய பகுத்தாய்வினால் இப் பேதங் காட்டு கையை அகற்றுவதற்கு யாவரும் விரும்பும் ஒரு முறை இருக்கிறது என்ற முடிவுக்கு நாம் வருகிறோம். கார்ப்பரேஷன் வருமான வரியை முற்றும் அகற்றி விடுவது முதற் படியாகும். தற்போதைய வருமானவரிச் செயல் முறையில் உள்ள பிழையான ஒரு வாதத்தை இது நிவர்த்திக்கிறது. இப் பிழையான வாதமாவது பிறதொழில் வருமானங்கள் யாவும் அத்தொழில்களின் சொந்தக்காரர்களுக்கே உரியன என்றும், கார்ப்பரேஷனின் வாயிலாகப் பெறும் வருமானம் கார்ப்பரேஷன், அதன் சொந்தக்காரர்கள் ஆகிய இருவருக்குமே வருமானம் என்றும் கொள்வதேயாகும். ஒரு கூட்டு வியாபாரம் அல்லது ஒரு தனியாள் சொத்துரிமையினின்று பங்கீடு செய்யப்படாத வருமானத்தைப் போன்று, கருதுகோள் அளவிலோ அல்லது செயல்முறை அளவிலோ ஏன் பங்கீடு செய்யப் படாத கார்ப்பரேஷன் வருமானத்தையும் நடத்தக் கூடாதென்பது புலனாகவில்லை.

வருமானவரியிலிருந்து கிடைக்கும் மொத்த வருமானத்தைக் குறைக்கக்கூடிய எந்தச் சீர்திருத்த மசோதாவுக்கும் எதிராக் ஒரு

செயல்முறை எதிர்வாதத்தைக் கிளப்புவது இயல்பேயாகும். கூட்டாட்சியின் கருவூலத்திற்குக் கார்ப்பரேஷன் வருமானவரி நிரம்பவும் வருமானத்தை ஈட்டித் தருகிறது. பட்ஜெட்செலவுகள் கூடிக்கொண்டிருக்கின்ற பொழுதும், அரசாங்கக்கடன் நிறைய இருக்கும்பொழுதும் இவ் வருவாயைத் தியாகம் செய்வது எளிதாகச் செய்யக்கூடியதன்று. இருந்தாலும் மேற்கூறிய யோசனைகளை மேற்கொள்ளுவதால் தற்போது கார்ப்பரேஷன் வருமான வரியிலிருந்து கிடைக்கும் நிகரவருவாய் அனைத்தையும் இழக்க வேண்டியதில்லை என்பது தெளிவு. முதற்கண் கார்ப்பரேஷன் வருமானவரியைக் கைவிடுவதால் ஏற்படும் இழப்பில் ஓரளவை பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷனின் வருமானவரி விதிப்பைத் தனியாளிடமிருந்து வசூலிப்பதன் மூலம் நிவர்த்திக்கலாம். இரண்டாவதாகக் கார்ப்பரேஷன் வரியை அகற்றுவதனுல், கார்ப்பரேஷன் வாயிலாகத் தனியாள் பெறும் வருமானங்கள் கூடும். கூடவே, தனியாள் வருமான வரியிலிருந்து கிடைக்கும் வருவாயும் கூடும். (1) மொத்தத்தில் கார்ப்பரேஷன் வருமானத்தில் 30 சதவிகிதம் மீண்டும் முதலீடு செய்யப்படுகிற தெனவும் (2) கார்ப்பரேஷன் வருமானத்தில் 50 சதவிகிதம் சராசரி வரி வீதம் எனவும் (3) கார்ப்பரேஷன்களிலிருந்து பெற்ற வருமானத்தின் சராசரி தனியாள் வீதம் 50 சதவிகிதம் எனவும் கொண்டால் நாம் யோசனை கூறியவைகளின் விளைவாக வருவாயில் என்னென்ன மாறுதல்கள் ஏற்படும் என்பதைக் காண்போம்.

**தற்போதைய முறை :**

| | (டாலரில்) |
|---|---|
| கார்ப்பரேஷன் வருமானத்தின் ஒவ்வொரு டாலர் மீதும் விதிக்கப்பட்ட கார்ப்பரேஷன் வரிகள் | ·50 |
| கார்ப்பரேஷன் வருமானத்தில் ஒவ்வொரு டாலரின் மீதும் விதிக்கப்பட்ட தனியாள் வரிகள் (கார்ப்பரேஷன் வரியைச் செலுத்திய பின்பு உண்மையில் மீதமுள்ளது 0·50 டாலர். பங்கீடு செய்யப்பட்ட ·50 டாலரில் 70% - ம் தனியாள் வருமான வரிக்கு உள்ளாகிறது. வரி வீதம் 50 சதவிகிதம்.) | ·175 |
| கார்ப்பரேஷன் வருமானத்தில் ஒவ்வொரு டாலருக்குமான மொத்த வருவாய். | ·675 |

**யோசனைகூறும் திட்டம் :**

| | |
|---|---|
| கார்ப்பரேஷன் வருமானத்தில் ஒவ்வொரு டாலர் மீதும் விதிக்கப்பட்ட கார்ப்பரேஷன் வரிகள். | ஒன்றுமில்லை |

| | |
|---|---|
| கார்ப்பரேஷன் வருமானத்தில் ஒவ்வொரு டாலரின் மீதும் விதிக்கப்பட்ட தனியாள் வரிகள் (பங்கீடு செய்யப்பட்டனவாகக் கருதப்பட்டு 50% எல்லாக் கார்ப்பரேஷன் வருமானத்தின் மீதும் வரி விதித்தால்) | ·50 |
| கார்ப்பரேஷன் வருமானத்தில் ஒவ்வொரு டாலருக்குமான மொத்த வருவாய். | ·50 |
| கார்ப்பரேஷன் வருமானத்தில் ஒவ்வொரு டாலருக்குமான நிகர வருவாய் இழப்பு. | ·175 |

நம் எடுத்துக் காட்டின் எடுகோள்களின்படி நாம் மாறுதல் செய்தால் 26 சதவிகிதம் வருவாயில் இழப்பு நேரிடும். நம் உதாரணம் நடைமுறை உண்மைகளை முற்றும் ஒத்திருக்காவிட்டாலும் இம் மாறுதலை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற மோசக் கருத்துடன் தயாரிக்கப்பட்டது அன்று. தனியாள் வருமானவரி வீதம் 40 சதவிகிதமாக இருந்தால், நிகர வருவாய் இழப்பு ஒவ்வொரு டாலர் கார்ப்பரேஷன் வருமானத்திற்கும் 24 சென்டாக (cent)வும், 60 சதவிகிதமாக இருந்தால் 11 சென்டாகவும் இருக்கும். 1944க்கும் 1955க்கும் இடைப்பட்ட காலத்தில் கூட்டு வியாபாரங்களைப் போன்று கார்ப்பரேஷன்கள் மீதும் வரி விதித்திருந்தால் தற்போதைய வருவாயின்மீது ஏற்படும் விளைவுகளைப் பேராசிரியர் ஹாலண்டு (Professor Holland) மதிப்பிட்டிருக்கிறார்.[18] 1947-ல் 2 பில்லியன் ஆதாயமாகவும், 1951-ல் 6·5 பில்லியன் இழப்பாகவும் இவ் விளைவு இருந்திருக்கும். 1950-லிருந்து 1955-வரை ஆண்டின் சராசரி வருவாய் இழப்பு 5·1 பில்லியன் டாலராக இருந்திருக்கும். இதை ஒரு சராசரி ஆண்டில் 3·9 சதவிகித தனியாள் வரி வீதங்களை உயர்த்துவதன் மூலம் சரிக்கட்டியிருக்கலாம். வரி செயல்முறையில் இவ்விதத் திருத்தம் செய்வதில் உள்ள வருவாய்ப் பிரச்சினையின் முக்கியத்துவம் திறனுள்ள தனியாள் வருமானவரி வீதங்களுக்கும், திறனுள்ள கார்ப்பரேஷன் வரி வீதங்களுக்கும் உள்ள உறவில் அடங்கியிருக்கிறது. கார்ப்பரேஷன் வரிவீதங்கள் ஒப்புமையில் உயர்வாயிருக்கும்பொழுது, இவ் வரியைக் கைவிடுவதால் ஏராளமான வரி இழப்பு நேரிடும். ஆனால், கார்ப்பரேஷன் வீதங்கள் உயர்வாயிருக்கும்பொழுது இரட்டைவரி விதிப்பின் அநியாயம் கடுமையான பளுவுடன் காணப்படுகிறது.

வருவாய் இழப்பு நேர்ந்தபோதிலும் கார்ப்பரேஷன் வரியைக் கைவிடுவதால் நீதிக்கும், ஆபத்தை யேற்கும் மூலதனத்தை

முதலீடு செய்வதற்கும் நெடுங்காலத்திற்கு ஆக்கம் தந்ததாகும். வருவாயிலிருந்துதான் அரசாங்கச் செலவுகளைச் செய்ய முடியுமே தவிர நிதியிலிருந்து அன்று என்றாலும், நிதியை அடைந்ததும் வருவாய் முடைகளைச் சமாளிக்கும் வரிவீதங்களைக் கண்டு பிடிக்கச் செல்லும் பாதையில் நாம் முன்னேறியவர்களாவோம்.

நம்முடைய வருமான வரலாறு முழுவதும் எல்லையில் தொல்லையைத் தந்து வந்த இப் பிரச்சினைக்கு, கார்ப்பரேஷன் வருமான வரியை அகற்றுவதன் மூலமும், கார்ப்பரேஷன் இலாபங்களின் மீது—அவை பங்கீடு செய்யப்பட்டாலும் செய்யப் படாவிட்டாலும்—வரி விதிப்பதன் மூலமும் தீர்வு கண்டவர்க ளாவோம். இப் பிரச்சினையாவது கார்ப்பரேஷனைத் தனியாள் வரியை மோசம் செய்வதற்கான கருவியாகப் பயன்படுத்திக் கொண்டதேயாகும். கூடுதலான தனியாள் மேல்வரிகளைச் செலுத்துவதைத் தவிர்க்கும் பொருட்டு மிகப் பெரும் வருமா னத்தைப் பெறுவோர்கள் சில சமயங்களில் 'தங்களைப் பதிவு செய்துகொண்டிருக்கின்றனர்.' உச்ச அடைப்புக்கான கார்ப்பரேஷன் வீதங்கள் உச்ச அடைப்புத் தனியாள் மேல்வரி வீதங்களைவிட மிகக் குறைவாக இருப்பதால், உண்மையில் தனியாள் வருமானமாக இருப்பதை வரி நோக்கங்களுக்காக ஒரு கார்ப்பரேஷன் வருமானமாக மாற்றி, ஒரு தனியாள், தன்னுடைய உடனடியான வரிப்பொறுப்பைக் குறைத்துக் கொள்ளலாம். ஓராண்டுக் காலத்திற்கு ஒரு தனியாளின் நிகர வருமானம் ஒரு மில்லியன் டாலர்கள் என்று ஒரு தீவிர உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். அவ்வித வருமானத்தின் மீது திறனுள வீதம் தோராயமாக 90 சதவிகிதம் இருக்கும். இவ்வாறு ஓராண்டில் அவர் 900,000 டாலரை வரியாகச் செலுத்தவேண்டியிருக்கும். இவ் வருமானத்தின் பெரும் பகுதியையும் கார்ப்பரேஷன் வருமானமாகச் செய்வதன் மூலம் பிரயோகம் செய்யப்படவேண்டிய கார்ப்பரேஷன் வரி வீதம் 52 சதவிகிதமாக இருக்கும். 100,000 டாலர் தனியாள் வருமானமாகவும், மீதமுள்ளது கார்ப்பரேஷனின் வருமான மாகவும் கொள்ளப்படுகிறதென்று வைத்துக் கொள்வோம். அவர் செலுத்தவேண்டிய தனியாள் வருமான வரி, தோராயமாக 70,000 டாலராக இருக்கும். கார்ப்பரேஷனின் வருமானத்தின் (900,000 டாலர்) மீது உத்தேசமாக 52 சதவிகிதம் வரி விதித்தால், கார்ப்பரேஷன் வரி 52,000 டாலராக இருக்கும். ஒரு மில்லியன் டாலர் வருமானம் ஈட்டப்பட்ட அவ் வாண்டில் அவர் செலுத்த வேண்டிய மொத்தவரி இவ்வாறு 590,000 டாலராக இருக்கும். ஆனால், முழு வருமானத்தையும் தனியாள்

வருமானமாகக் கொண்டு வரிவிதித்திருந்தால், அவர் 900,000 டாலரை வரியாகச் செலுத்தவேண்டி இருந்திருக்கும். ஆயினும், இறுதியில் ஏற்படும் வேறுபாடு மிகச் சொற்பமாகவே இருக்கும். எதிர் காலத்தில் எப்பொழுதாவது அவர் கார்ப்பரேஷனிலிருந்து நிதியை எடுக்கும்பொழுது, அவர் தனியாள் வருமான வரியைச் செலுத்தவேண்டி இருக்கும். இருந்தபோதிலும், அவருடைய நடப்பு வருமானம் குறைவாக இருக்கும்பொழுதே அவர் நிதியை எடுப்பார். இதனால் அவர் குறைந்த மேல்வரி அடைப்பில் இறங்குவார் அல்லது வரி வீதங்கள் பொதுவாகக் குறைக்கப் பட்ட பொழுதும் கார்ப்பரேஷனிலிருந்து நிதியை எடுக்கலாம்; அல்லது பின்னிட்ட ஒரு காலத்தில் கார்ப்பரேஷனையே கலைத்து விட்டுச் சொத்துக்களை எல்லாம் தானே எடுத்துக் கொண்டால், அவர் 25 சதவிகிதம் தான் ஒரு மூலதன ஆதாய வரியைச் செலுத்த வேண்டி இருக்கும். அவர் இறக்கும்பொழுது கார்ப்பரேஷன் கலைக்கப்பட்டால், யாதொரு மூலதன ஆதாய வரியையும் அவர் செலுத்தவேண்டி யிருக்காது.

வருமான வரியின் கருதுகோளில் இவ்வித வரி தவிர்த்தலைப் பற்றிய பேச்சே இல்லை.[19] அண்மைக் காலத்திய வரிச் செயல் முறையில் தோன்றிய சிக்கலால் இது எழுந்தது. இவ் வரி தவிர்த்தலை ஒரு அலாதியான விரிசலாகக் கொண்டு அதை அடைக்க முற்படுவதால் தற்கால வருமானவரியின் ஒட்டுப் போட்ட, தைக்கப்பட்ட தன்மைக்கு ஆக்கம் தருவதுடன், இவ் வொட்டுப் போட்டதால் தாம் வருத்தவேண்டும் என்று கருதியிராத பிற வரி செலுத்துவோர்களையும் பாதிக்கும் ஆபத்தும் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. கார்ப்பரேஷன் வருமானத்தைத் தனியாள் வருமானமாகக் கொண்டால், நாம் எளிதாக அடிப் படைக்கே திரும்புகிறோம். இதனால் இம் முறையின் ஒட்டுப் போட்ட தன்மையும் அகற்றப்படுகிறது. ஒரு வீட்டை அடிக்கடி பழுது பார்த்துப் புதுப்பிப்பதைக் காட்டிலும் ஒரு பழைய வீட்டை இடித்துத் தள்ளிவிட்டு ஒரு புதிய வீட்டைக் கட்டுவது சாதாரண மாகச் சல்லிசாகவும் மிகவும் திருப்தியாகவும் இருக்கிறது.

## மேலும் படித்தற்கு உரியவை

ரிச்சர்டு கூட் (Goode, Richard), The Corporation Income Tax, N. Y., Wiley, *1951*, Chapters *1-3*. கார்ப்பரேஷன்களின் பேரில் தனியாகவே வரிவிதிக்க வேண்டும் என்பது வற்புறுத்தப் படுகிறது. கூட்டின் வாதத்தையும் இவ் வதிகாரத்தில் உரைக்கப்

பட்ட வாதத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும்படிச் சிபாரிசு செய்கிறோம்.

எச். எம். குரோவ்ஸ் (H. M. Groves), Postwar Taxation and Economic Progress, N.Y., McGraw-Hill, 1946, Chapters 2 and 3. தனியாள் வருமான வரியையும், கார்ப்பரேஷன் வருமான வரியையும் ஒன்றாக இணைத்தலைப் பற்றி இந் நூல் கூறுகிறது.

டேனியல் எம். ஹாலண்டு (Holland, Daniel M.), The Income Tax Burden on Stockholders, Princeton, Princeton University Press, 1958. 'இரட்டை வரி விதிப்பு'ப். பிரச்சினையைப் பற்றிய நுண் பகுத்தாய்வு. கூடுதல் பளுவை அளவிடுவதைக் குறிப்பாக வலியுறுத்துகிறது. முதன் முதல் படிப்பவருக்கு இந் நூல் கடினமாயிருக்கலாம். ஆனால், ஓரளவு பின்னணி உள்ளவர் இதைப் படிப்பதால் ஆதாயம் அடையலாம்.

ஈ. கார்டன் கீத் (Keith, E. Gordon), Economic Impact of the Corporation Income Tax, Joint Committee on the Economic Report, Federal Tax Policy for Economic Growth and Stability (Papers submitted...), Washington, 1955, pp. 658—68.

இந் நூல் இவ் வரியின் நிலைப்பாடு, நிலைப்பாட்டைப் பற்றிய முடிவுகளின் முக்கியத்துவம், கூட்டாட்சியின் வரி அமைப்பில் கார்ப்பரேஷன் வரியின் இடம் இவற்றைப் பற்றி நல்ல சுருக்கமான அறிக்கையாகும்.

கார்ல் எஸ். ஷுப் (Carl, S. Shoup), The Dividend Exclusion and Credit in the Revenue Code of 1954, National Tax Journal, March, 1955, pp. 1366 ff.

தனியாள் கார்ப்பரேஷன் வருமான வரிகளை இணைப்பதில் பங்குதாரர்களின் பேரில் ஏற்படும் 'கூடுதல் வரி விதிப்பை'க் (extra taxation) குறைப்பதன் முறைகளைப் பற்றிய ஒரு பகுத்தாய்வு.

எச். ஸி. சைமன்ஸ் (H. C. Simons), Personal Income Taxation, Chicago, University of Chicago, 1938, Chapter 9. பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் உபரியைத் தனியாள் வருமானமாகக் கொண்டு வரிவிதிப்புச் செய்ய வேண்டுமென்ற வாதம் அடங்கியதே இந் நூல்.

# 18ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. ஒரே வகை வரிக்கருவியின் மூலம், ஒரே காலக்கூற்றில் ஒரு தடவைக்கு மேலாக, ஒரே பொருளின் (வருமானம், சொத்து அல்லது வாங்குதல்) மீது வரிகளை, ஒரே அதிகார வரம்பையுடைய அரசாங்கம் (கூட்டாட்சி, மாநில அல்லது தல அரசாங்கம்) விதிப்பது என்றுதான் 'இரட்டை வரி விதிப்பு' என்ற சொற்றொடருக்குப் பொருள் கொள்ளவேண்டும். அப்பொழுது இப் பொருளும் பயனுள்ளதாயிருக்கும். இப் பிரச்சினை இயல்பாகவே நீதியைப் பற்றியதாகும், வெளிப்படையாகவே செய்தால், மேற்கூறிய விளக்கத்தில் அடங்கியிருப்பதாகக் கருதப்படும் ஒருவகை 'இரட்டை வரி விதிப்பு'க்குப் பெரிதும் எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டியதில்லை. ஆனால் சிலரின்மீது ஒற்றைவரி விதிப்பதும், பிறரின் மீது இரண்டு முறை வரி விதிப்பதும் பேதங்காட்டுகையாகும்.

2. இவ் வீதங்கள் 1959ஆம் ஆண்டு வருமானத்திற்குப் பிரயோகிக்கத் தக்கவை.

3. 'வரையறைப் பொறுப்புக்கு உட்பட்டக் கூட்டு வியாபாரமாக' இருந்தால், அது கார்ப்பரேஷனாக இருந்தால் என்ன வரி செலுத்த வேண்டுமோ அதே வரிக்கு உள்ளாகும்.

4. 1913ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ் ஒற்றையாளுக்கு 3,000 டாலர் வரை விலக்களிக்கப்பட்டது. மூவாயிரம் டாலருக்கு மேற்பட்ட வருமானம் உடையவர்களுக்கே 1 சதவிகித சாதாரண வரி பிரயோகிக்கப்பட்டது. 2,500 டாலர் வருமான வருக்கத்தைச் சேர்ந்த ஒரு பங்குதாரர், கார்ப்பரேஷன், 1 சதவிகித வரியைக் கார்ப்பரேஷனின் ஈட்டங்களில் தனக்குரிய பங்கின்மீது செலுத்திவிட்டதைக் காண்பார். இவருடைய பங்கு தனியாள் வருமான வரிக்கு மட்டும் உட்படுத்தப்பட்டு கார்ப்பரேஷன் வரிக்கு உட்படுத்தப்படாதிருந்தால் அவர் யாதொரு வரியையுமே (கார்ப்பரேஷன் அல்லது தனியாள் வருமானவரி) செலுத்தியிருக்க வேண்டியதில்லை.

5. அதிபர் சிபாரிசு செய்த திட்டத்தின் இன்றியமையாத அம்சங்கள் யாவும் 1920ஆம் ஆண்டிலேயே பேராசிரியர் எப். ஆர். ஃபேர்சைல்டினால் (Professor F. R. Fairchild) சிபாரிசு செய்யப்பட்டது. (Federal Taxation of Income and Profits, American Economic Review, 1920, p. 785).

6. எடுத்துக் காட்டாகப் பேராசிரியர் ஏ. ஜி. பியூலர் (A. G. Buehler) அதிபர் யோசனையில் கண்ட கீழ்வரும் மேற்கோள்களுக்கு உள் நோக்கங்களைக் கற்பிதம் செய்கிறார், 'கண்டனத்திற்குள்ளான செல்வ வருக்கத்தினர்கள்மீது மிகவும் கூடுதலாக வரிவிதிக்கப்படும். ஆனால் கார்ப்பரேஷன்களைத் தெரிந்தெடுத்து அவற்றின் செல்வப் பங்குதாரர்கள்மீது புதிய வரிகளை விதிப்பதற்குப் பாமர மக்களிடையே யாதொரு எதிர்ப்பும் இருக்காது', 'பெரும் கார்ப்பரேஷன்கள்மீது அதிபர் கொண்டிருந்த எல்லோருக்கும் தெரிந்த ஒரு புறச்சாய்வுக்கும், செல்வக்குவிவின்மீது அவருக்கிருந்த வெறுப்புக்கும் வடிவம் கொடுப்பதற்கு இச் சட்டம் துணை செய்யும். இந்தப் பாத்திரத்தில் பெரும் போட்டிகளை எதிர்த்து நிற்கும் சிறு தொழிற்றுணிவுகளுக்கும், கோடீசுவரரை எதிர்த்து நிற்கும் சிறு முதலாளிக்கும் வாகை வீரராகக் காட்சி அளிப்பார்' (Reprinted by

permission from pages 23-24 of 'The Undistributed Profits Tax' by A. G. Buehler, Copyright 1937 by the Mcgraw-Hill Book Co., Inc.) ஈண்டு இவ் யோசனை அரசியல் ரீதியில் இருக்கின்றதே தவிர வேறெந்த நிலையிலும் இல்லை என்பதைக் காட்டவில்லை.

7. 1936ஆம் ஆண்டுச் சட்டத்தில் பொதிந்திருந்த பங்கீடு செய்யப் படாத கார்ப்பரேஷன் உபரியின்மீது வரிவிதிப்பது என்னும் கொள்கை 1939-ல் கைவிடப்பட்டது. 'அளவுக்கு மீறிய உபரியின் திரட்சி' மீது ஒரு தண்டனையாக வரி விதிக்கப்பட்ட 1936ஆம் ஆண்டுக்கு முன்பிருந்த திட்டம் மீண்டும் நிறுவப்பட்டது.

8. 1936-ல் தனியாட்கள்மீது பிரயோகித்த வீதங்களின்படிப் பங்கீடு செய்யப்படாத இலாபங்களை வரிவிதிப்பிலிருந்து தப்பிக்கும்படி அநுமதித் தால், அவ் வாண்டில் மட்டும் ஒரு பில்லியன் டாலர்களுக்கு மேலாக வரி இழப்பு நேரிடும் என்று கருவூலம் மதிப்பிட்டது (1936-ல் கூட்டாட்சியின் மொத்த வருவாய்கள் 8·9 பில்லியன் டாலராகும்). ஆனால் இவ் விழுப்பு முழுமையானதாகவும், நிரந்தரமானதாகவும் இருக்காது. ஏனெனில் மீண் டும் முதலீடு செய்யப்பட்ட ஆதாயங்களைப் பின்னிட்ட ஒரு காலத்து மூல தன ஆதாயங்கள் வாயிலாகத் தனியாட்கள் பெறலாம். மீண்டும் ஆதாயங் களை முதலிடு செய்ததினால் பங்குகளின் மதிப்பு ஏறுகிறது. இங்ஙனம் மதிப்பேறிய பங்குகளை விற்பதனால் மூலதன ஆதாயம் கிட்டுகிறது. இங்ஙனம் மீண்டும் முதலீடு செய்யப்பட்ட நிதிகளைப் பின்னிட்டுப் பங்கீடு செய்யலாம். வரிக்காரணங்களுக்காக இவ் வீட்டம் பங்கீடு செய்யப்படா திருந்தால், குறைந்த தனியாள் வருமானம் அல்லது குறைந்த வீதங்களை யுடைய வரிச்சட்டங்கள் நிலவும்போதுதான் இவைகளின் பின்னிட்ட பங்கீட்டை எதிர்ப்பார்க்கலாம். இதனால் ஒரு கணிசமான வருவாய் இழப்பு இன்றியமையாததாகிறது.

9. பிற வரி செலுத்தும் கார்ப்பரேஷன்களிலிருந்து பெறப்பட்ட இலாப ஈவுகளைத் தவிர்த்து ஏனைய நிகர வருமானம் பூராவுக்கும் இவ்வரி பிரயோ கிக்கப்பட்டது. இவ் வரியின் வெளிப்படையான நோக்கம் கார்ப்பரேஷன்கள் வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டு வைத்திருந்த கூட்டாட்சியின் கடன் பத்திரங்களை அணுகுவதாகும். 1941-ல் வீதங்கள் 6 சதவிகிதமாகவும், 7 சதவிகிதமாகவும், 1942 ல் 10 சதவிகிதத்திலிருந்து 16 சதவிகிதமாகவும், 1945-ல் 6 சதவிகிதத்திலிருந்து 14 சதவிகிதமாகவும் இருந்தன.

10. அகவருவாய் வரித் தொகுப்பு : பிரிவுகள் 851—855.

11. கார்ல். எஸ். ஷூப் (Carl S. Shoup) எழுதிய The Dividend Exclusion and Credit in the Revenue Code of 1954, National Tax Journal, March, 1955, பக்கம் 136 ஐப் பார்க்க.

12. டேனியல் எம். ஹாலண்டு (Daniel M. Holland), The Income Tax Burden on Stockholders, Princeton University Press, 1958. இங்குக் குறிப் பிட்ட பகுதிகளை 4ஆவது அட்டவணையிலும், 36, 38 பக்கங்களிலும் காணலாம்.

13. தற்போதைய திட்டங்களுக்கு மாற்று, பங்குதாரர்கள் கையில் வைத்திருக்கும் (retained) ஈட்டங்களின்மீது விதாசாரமாக (pro-rata) வரி விதிப்பதேயாகும்.

14. பங்கீடு செய்யப்படாத ஈட்டங்களின்மீது பொருத்தமான வரிவிதிப்புச் செய்வது எளிய காரியமல்ல. 1949க்கும், 1958க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில், வரிகளைச் செலுத்திய பிறகு சுமார் 50 சதவிகிதம் கார்ப்பரேஷன் இலாபங்களில் பங்கீடு செய்யாமல் வைத்துக்கொள்ளப்பட்டது. இந்த 50 சதவிகிதம் ஓராண்டைய சராசரியாகும். 1958-ல் பங்கீடு செய்யாமலிருந்த இலாபங்கள் 34 சதவிகிதமாகவும், 1950-ல் 60 சதவிகிதமாகவும் இருந்தன. 'Economic Indicators', ஆகஸ்டு, 1959, p. 8.

15. இங்கு பரிசீலிக்கப்பட்ட சில சாத்தியக் கூறுகள் எச். எம். குரோவ்ஸ் (H. M. Groves) என்பவரால் தெரிவிக்கப்பட்டனவாகும் (op. cit., Chapter III and 'Production, Jobs and Taxes', New York. மெக்ராஹில், 1944, pp. 29—48). இப் பிரச்சினையை குரோவ்ஸ் பரிசீலிக்கும் விதம் மெத்தவும் மெச்சத் தகுந்ததாகும். ஆயினும் மேற்கோள்களாக மேலே எடுத்துக் காட்டியவற்றில் கார்ப்பரேஷன் வரிகளுக்கும், தொழில் வரிகளுக்கும் இங்கு காட்டப்பட்டது போல் வருமான அடிப்படையில் திட்டவட்டமான வேறுபாடு காட்டப்படவில்லை.

16. ஆண்டிறுதியில் வரிவிவர அறிக்கையைச் சமர்ப்பிக்கும் பொழுது, தனியாள் பங்கீடு செய்யப்படாத ஈட்டத்தைத் தன் வருமானத்தின் ஒரு கூறாக ஒரு வேளை சேர்க்கலாம். தனக்காகக் கார்ப்பரேஷன் செலுத்திய வரிகளுக்கான ரசீதைத் தந்து அவ் வாண்டிற்கான கணக்குகளை முடிக்கலாம் (சீர் செய்யலாம்). தற்போதைய வரி செலுத்துகைகளின் முறையில் இவ்வகை ஆண்டிறுதி சரிக்கட்டுதல்கள் சருவ சாதாரணம்.

17. Postwar Taxation and Economic Progress, பக்கம் 61-லிருந்து அநுமதி பெற்று மீண்டும் அச்சேற்றப்பட்டது. இதை எழுதியவர் ஹாரோல்டு எம். குரோவ்ஸ் (Harold M. Groves). இதன் பதிப்புரிமை (1946ஆம் ஆண்டைய) Committee for Economic Developmentஐச் சேர்ந்தது. இது மெக்ராஹில் புத்தகக் கம்பெனி, இங்க். வெளியிட்டது.

18. அதே நூல், பக்கம் 232.

19. வளர்வீத வீதங்களை தன்னுள் அடக்கிய பட்டியலில் காணப்படும் வரி செலுத்தும் திறன் பற்றிய ஷரத்துக்களில் உள்ள தருக்க முறையை இது பாழ் செய்வது தெளிவு.

# 19. தனியாள் வருமான வரிக்கு வலிவூட்டுதல்

முந்திய இரண்டு அதிகாரங்களிலும் விளக்கப்பட்ட விஷயங்களி லிருந்து கண்ட இன்றியமையாத முடிவே இவ் வதிகாரத்தின் தலைப்பாகும். வருவாய்த் திட்டங்களின் படைக் கொட்டிலில் தனியாள் வருமான வரிதான் மிகத் தலையாயதென்பதும், தலையாய தாக ஆகப்போகிறதென்பதும் நாம் முன்னர் கண்ட முடிவு. 'வலிவூட்டுவது' என்ற சொற்றொடரைப் பெய்ததாலேயே ஒரு காலக்கூறு முழுதும் தொடர்ந்து (விடாது) வீதங்களை உயர்த்திக் கொண்டிருப்பது என்பது பொருளன்று. மொத்த வரிமுறையில் தனியாள் வருமான வரி விதிப்பின் பங்கு விரிவடையும் என்றோ அல்லது விரிவுபடுத்தப்படவேண்டும் என்றோ இச் சொற்றொட ருக்குப் பொருள் கொள்ளக்கூடாது. தனக்குப் பணிக்கப்பட்ட வேலையை மிகவும் திறம்படவும், மிகவும் நேர்மையாகவும் செய்யத் தக்க வகையில் தனியாள் வருமான வரி விதிப்பின் அமைப்பைத் திருத்தவேண்டும் என்பதே இதன் பொருளாகும்.

தனித்தெடுத்துப் பார்க்கும்பொழுது, ஒரு நல்ல வரிக்கு இருக்க வேண்டிய எல்லா அமிசங்களையும் பாராட்டத்தக்க முறையில் நிறைவேற்றும் தகுதி தனியாள் வருமான வரிக்கு இருக்கிறது. கருதுகோள் அளவில் பார்க்கும்பொழுது, வேறெந்த வரியும் இத் தகுதிகளை நெருங்கக்கூட இல்லை. கொள்கையை வகுப் பவருக்குத் தாம் தனியாள் வருமான வரியை இன்னது செய் கின்றோம் என்பது தெரியும். ஏனெனில் (1) வருமானம் ஒரு வாய்க்கால் என்பதும், எல்லா வரிகளையும் வருமானங்களிலிருந்தே செலுத்துகிறோம் அல்லது செலுத்தக்கூடும் என்பதும் வருமானமும் இவ் வரியின் தளமும் ஒன்றே என்பதும் அவருக்குத் தெரியும். சொத்துரிமையிலிருந்து வருமானத்தை மதிப்பிட முனைவது

அல்லது வருமானத்திலிருந்து வாங்கியவற்றைக் கொண்டு வருமானத்தை மதிப்பிட முனைவது, இவற்றைவிட, ஒரு வருமானத்தை இன்னொரு வருமானத்துடன் தொடர்பு படுத்தும் வரி, வருமானத்தை மதிப்பிடுவதற்கு மிகக் கச்சிதமான கருவியாகும். (2) நிலைப்பாட்டைப் பொறுத்த நம்பகமான முடிவுகளையும், தனியாட்களுக்கும், கும்பல்களுக்கும் இடையே இறுதிப் பளு எப்படிப் பிரிக்கப்பட்டிருக்கின்றது என்பதைப் பற்றியும், வேறெந்த பெரிய வரித் திட்டத்தையும்விடத் தனியாள் வருமானவரி விஷயத்தில் ஏறக்குறைய நாம் கூறலாம். வேறெந்த பொதுவான வரிக்கருவியின்கீழ்க் காண்பதைவிட, வருமான வரியின்கீழ் கொள்கை மாறுதல்களை மிகவும் துல்லியமாக முன்னமேயே காண முடியும்.

வளர்வீத வரிமுறையைக் கடைப் பிடிப்பதற்கு பகுத்தறிவுக்கு ஒத்த ஒரே வரி தனியாள் வருமான வரியே. இதனால் பிற வரிகளை வளர்வீதமாக விதிக்க முடியாதென்பதன்று. ஆனால், மேல் பத்தியில் கூறிய காரணங்களினால் பெரும்பாலும் வருமானவரி ஒன்றே பயனுள்ள வகையில் வளர்வீதத்தைக் கடைப்பிடிக்க முடியும். நீதி, நிலைபெறு வளர்ச்சி, பொதுமக்கள் நன்மை ஆகியவைகளை அடிப்படையாக கொண்டு வளர்வீத முறையை வருமானவரி விஷயத்தில் மட்டுமே பிரயோகிக்கமுடியும்.[1] வாணிபச் சுழலுக்கு முற்றும் எதிரிடையாகவோ அல்லது அபிவிருத்திக்காகவோ பயன்படுத்துவதற்கு வளர்வீத தனியாள் வருமான வரியைப் போன்று வேறெந்தப் பொதுவான வரிக்கும் சிறப்பான அமிசங்கள் இல்லை. வருமானத்தில் மாறுதல்களுக்கேற்ப உடனடியாக வருமான வரியில் மாறுதல்கள் செய்யலாம். இது தான் இவ் வரியின் சிறப்பான அமிசம். இதனால் அதன் நிலைபேறு செய்யும் ஆற்றல் தானே இயங்குவதாகத் தெரிகிறது.

ஆகையினால் ஒரு காலக்கூறுதோறும் தனியாள் வருமானவரி விதிப்பின் பங்கு விரிவடைவது இன்றியமையாததாகும். இதனால் இவ் வரியின் இன்றியமையாமை புலனாவதுடன், ஏட்டளவில் இருக்கும் சாத்தியக் கூறுகளைச் செயல் முறையில் காணவும் வழி ஏற்படும். எதிர்காலத்தில் தனியாள் வருமானவரிக்குக் குறிப்பிட்ட ஒரு விரிவான பங்கு கொடுத்தாலும் சரி, கொடுக்காவிட்டாலும் சரி, அதன் தற்போதைய முக்கியத்துவத்தை உத்தேசித்தாவது அதைப் பொதுவாகவும், ஒரே படித்தாகவும் பிரயோகிக்கவேண்டும். தனியாள் வருமானங்களின்மீது விதிக்கப்பட்ட ஒரு பொதுவான வரியாகத்தான் வருமான வரி இருக்கவேண்டும். தனியே ஒவ்வொரு வீதப்பட்டியலைக்

கொண்டதாகவும், ஒவ்வொன்றும் பிரத்தியேகமாக வரையறுக்கப் பட்ட தளத்தை உடையதாகவும் அமைந்த கிட்டத்தட்ட ஒன்றுக் கொன்று தொடர்புடைய வரிகளின் தொகுதியாகத் தனியாள் வருமானவரி இருக்கக் கூடாது.

இம் மிகத் தலையாய வரித்திட்டத்தை 'வலிவூட்டுவ'தற்கு வேறு பல காரணங்களும் உள்ளன. ஒரு வருமானச் சட்டத்திற்கு இணங்க நடப்பதென்பது, வேறெந்த வரியைக் காட்டிலும் அதிகமாக வரிசெலுத்துவோரின் சொந்த மதிப்பீட்டையே பொறுத்திருக்கிறது என்பதற்கான காரணங்களை, வாசகர் அறிவார். தாமாகவே முன்வந்து பங்குகொள்வதற்கும், வரியி னின்றும் தப்பித்தலைக் குறைப்பதற்கும் சட்டத்தின்கீழ் எல் லோரையும் ஒரே படித்தாக நடத்துகை இன்றியமையாதது. வரியினின்றும் தப்பித்தலைப் பொறுத்தவரையில் 'ஒருவர் கேடுகளைப் பொறுத்துக்கொள்ளவேண்டும்' (one must keep up with the Joneses) என்ற பரவலான கருத்து கேடுபயக்கும். (வரலாற்று முறையில் பார்த்த அளவிலாயினும்) வருமான வரி வீதங்கள் 'கூடுதலாக' இருக்கின்றன. வரியினின்று தப்பித்தலில் வெற்றி பெறுபவருக்கு உண்மையில் பரிசுகள் கிடைக்கின்றன. வேறொருவர் வரிக்கு டிமிக்கி கொடுக்கிறார் என்பதாலும், தன் பேரில் விதிக்கப்பட்ட வரி கூடுதலாக இருக்கின்றது என்ற எண்ணத்தினாலும் வரியினின்று தப்பிப்பதற்கான விருப்பம் அதிகரிக்கிறது என்பது யாவரும் அறிந்த உண்மை. சாராம்சத்தில் உண்மையில் சட்டத்தைத் தவிர்ப்பதற்கும் இதுவே காரணம். சட்ட விரிசல்களை வளர்வீத முறையில் படைப்பதும், நெருக்கும் குழுக்களுக்கு (pressure groups) சலுகை அளிப்பதற்காகச் சில எண்ணங்களுக்கு மீண்டும் புதிய விளக்கம் தருவதும், தங்களைப் பிரத்தியேகமான முறையில் நடத்தவேண்டும் என்ற கிளர்ச்சியை மிகப் பரவலாக ஆக்குவதுடன், சட்டத்தின்கீழ் ஒரே படியாக நடத்த வேண்டும் என்ற எண்ணத்திற்கு உண்மையாகவே ஒரு பேராபத்தை ஏற்படுத்துகிறது. இப் போக்கைப் பேராசிரியர் ஹெல்லர் (Professor Heller) 'வரி செலுத்துவோர் மிகவும் விரும்பும் கொள்கை' (most favoured tax payer principle) என்று குறிப்பிடுகிறார். ஒரு கும்பலுக்கு ஒரு சலுகை தருவது கருதுகோள் அளவில், சரியாயினும் அல்லவாயினும், அது பல பரவலான சலுகைகளுக்கும் ஒரு கிளர்ச்சியை மூட்டுகிறது.

17, 18 ஆம் அதிகாரங்களில் வருமானவரியை எப் பிரதேசங் களில் வலிவூட்டினால் சரியாக இருக்கும் என்று விரிவாகச் சர்ச்சை செய்து மேற்கொள்ளவேண்டிய திருத்தத்தின் வடிவத்தையும்

நாம் கூறினோம். நிலைபேறில்லாத வருமானங்களைச் சிறிது நியாயமாக நடத்தினால் ஒரு வருமான சராசரித் திட்டத்திற்கு வகை செய்ததாகும். முதலீட்டு ஆதாயங்களுக்குச் சலுகைகள் அளிப்பதும், முதலீட்டு இழப்புக்களை நடத்தும் விதத்தில் பேதங் காட்டுகையும் அகற்றப்பட வேண்டும். ஒற்றைக் கட்டைகளுக்கு எதிரான பெருத்த பேதங்காட்டுகையைத் திருத்தவேண்டும். கார்ப்பரேஷன் ஈட்டத்தின்மீது இரட்டைவரி விதிப்பதும் அகற்றப்பட வேண்டும். மேலும் மேலும் இவற்றைச் சர்ச்சை செய்ய வேண்டியதில்லை. இனி இவ் வதிகாரத்தில் எவ்வெப் பிரதேசங்களில் ஓரளவு மிகவும் விரிவான அபிவிருத்திக்கு எதிர்காலத்தில் இடம் இருக்கிறது என்பதையும் காண்போம்.

**ஒரே படித்தன்மையையும், நேர்மையையும் வளர்ப்பதற்கு வருமானவரியில் வேண்டப்படும் மாறுதல்கள் (Income Tax Changes to Promote Uniformity and Equity)**

1. **சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்திலிருந்து விலக்குகள் :** சரிக்கட்டிய மொத்த வருமானத்தின் விளக்கமே வரித்தளத்தைப் பெரிதும் வரையறுக்கிறது. மொத்த வருமானத்திலிருந்து விலக்குவதற்கு அனுமதி அளிக்கப்பட்ட பணவரவுகள், வரித்தளம் கடுமையாக அரிக்கப்படுவதற்குப் பல வாய்ப்புக்களைப் படைக்கலாம். தற்போதுள்ள விலக்கங்களின் பட்டியல் பொதுவாக அறிவுக்கு ஒத்ததே. இருந்தாலும் முதலிலிருந்தே மறுபடியும் தொடங்கவேண்டும் என்பதும், அநீதி எனக் கருதப்படுகின்ற அநீதிகள் அல்லது செயல் முறைகளை ஒழித்துக்கட்டவேண்டும் என்பதும் நோக்கமானால், சில திருத்தங்களைச் செய்யவேண்டும். படையில் சேருவதற்குத் தரப்படும் சம்பளத்திற்கும், போர்க் காலத்தில் தரப்படும் சம்பளத்திற்கும் விலக்களித்திருப்பதை அகற்றவேண்டும் என்பது முதலாவது யோசனையாகும். இச் செலுத்துகைகள் விரும்பத்தக்கதல்ல அல்லது மிகையானவை என்பது இதன் பொருளன்று. தனியாளின் வருமான அந்தஸ்தைப் பொறுத்த அளவில் அவ் வரவுகளுக்கு வரிசெலுத்தும் திறன் இருக்கலாம் என்பதே குறிப்பாகும். இவற்றை வரிகளுக்கு உட்படுத்துவதால் அவர்களின் சம்பளத்தைக் கூட்டவேண்டியிருக்கலாம். அப்பொழுதுதான் வரியைச் செலுத்திய பின்பு தனியாளுக்குப் போதுமான வரவு கையிலிருக்கும். வரிச்சட்டத்தில் ஒரே படித்தன்மையைப் பேணவேண்டுமென்றால், இம் முறை விரும்பத்தக்கது.

சென்ற அதிகாரத்தில் இலாபஈவுகளாகப் பெற்ற தொகையில் முதல் ஐம்பது டாலரை விலக்குவதுபற்றிச் சர்ச்சை செய்யப்

பட்டது. பங்கீடு செய்யப்படாத இலாபங்களைத் தனியாள் வருமானவரியின்கீழ்க் கொணர்ந்து, தற்போதைய கார்ப்பரேஷன் வரியையும் கடந்த அதிகாரத்தில் கூறியாங்கு அகற்றி விட்டால், தனியாள் வருமானவரியிலிருந்து இவ் விலக்கையும் அகற்றி விடலாம். கார்ப்பரேஷன் வாயிலாகப் பெற்ற வருமானத்தின்மீது இரட்டைவரி விதிப்பை அகற்றுவதற்கு ஓரளவு முயற்சி செய்வதே இலாபஈவுகளை வரியினின்றும் விலக்குவதாகும். கார்ப்பரேஷன் களின் வருமானத்தின் மீது பூராவும் வரிவிதிக்காது விட்டு விடுவோமானால் இரட்டை வரிவிதிப்புப் பிரச்சினை தீர்ந்து விடும்.

எவ்விதமான சராசரித்திட்டம் வரியில் பிரயோகிக்கப்பட்டது என்பதைப் பொறுத்து, நெடுங்கால ஆஸ்திகளை (long term assets) விற்பதிலிருந்து கிடைக்கும் நிகர மூலதன ஆதாயத்தில் 50 சதவிகி தத்திற்கு வரிவிலக்கு அளிக்கவேண்டுமா அல்லது வேண்டாமா என்பதை முடிவு செய்யவேண்டி இருக்கும். இதைவிட மிகச் சிக்கலான சராசரித் திட்டத்திற்குப் பதிலியாக இவ் விலக்கைக் கொள்ளும்வரை, இவ் விலக்கு இருந்தே தீரும். ஆனால் மூலதன ஆதா யங்களைப் பெறுபவர்களுக்கு இதனால் ஒரு சலுகை ஏற்படுமானால், இவ் விலக்கை அகற்றவேண்டும். மூலதன ஆதாயங்களையும், இழப்பு களையும் வருமானமாகக் கொண்டு, பதினேழாம் அதிகாரத்தில் சிபாரிசு செய்ததைப் போல, ஒரே படித்தாக, வருமானத்தைப் போலவே வரிவிதித்தால் ஆதாயங்களுக்கும், இழப்புகளுக்கும் விளக்கம் தரவேண்டிய பிரச்சினை ஒழியும். கடந்த காலத்தில் ஏற்பட்டது போலப் பிற வருமானத்தையும் மூலதன ஆதாயம் என விளக்கம் தருவதற்கான நெருக்கமும் இருக்காது. ஏனெனில் அதன் மூலம் சலுகை ஏதும் பெறமுடியாது.

இறுதியாக நிகர வருமானத்தை ஈட்டுவதற்கான செலவுகளை வரிவிதிப்பினின்று முழுதும் நீக்குவதே முற்றும் பொருத்தமாயினும் இரு வகைகளில் இவ்விலக்கைத் திருத்தமாகச் செய்யலாம். அவை கரைந்து போதல் (depletion) படிகளை நடத்தும் விதமும், ஆராய்ச்சிக்கும், சோதனைச் செலவுகளுக்கும் 'செலவிடுவதும்' ஆகும். மொத்த வருமானத்திலிருந்து கழிவாகும் சொத்து களுக்காக உலோக, பிற இயற்கை டிபாசிட்டுகளுக்கு உரியவர்கள் ஒரு சதவிகிதம் பிரத்தியேகப் பிடித்தங்கள் செய்து கொள்வதற்கு இக் கரைந்துபோதல் (depletion) விதி வகை செய்கிறது. நிறுவனங்கள் தங்கள் மொத்த வருமானத்திலிருந்து ஆண்டு தோறும் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை ஆண்டு வரையறை யின்றிப் பிடித்தம் செய்து கொள்ள இவ் விதி அனுமதிக்கிறது.[2]

இயற்கை வளங்களைப் பொருளியல் முறையில் பயன்படுத்துவதால் ஏற்படும் மூலதனக் கழிவை, உற்பத்திப் போக்கில் ஏற்படும் செலவாகக் கொண்டு பிடித்தம் செய்ய வேண்டும் என்பது முற்றும் பொருத்தமே. ஆனால் முதலில் இருந்த டிபாசிட்டின் மதிப்பை விட மிகையாக ஒரு குறிப்பிட்ட காலவரையறை அளவும், தேய்மானத்தை அநுமதிப்பதற்கு ஒரு சட்டம் வகை செய்வதைச் சரியென நிலைநாட்டுவது கடினம். செயல் முறையில் இயற்கை வளங்களுக்கு எவ்வளவு தேய்மாமனம் ஏற்படுகிறதோ அதைவிட மிக விரைவாக தேய்மானப் படிகளை அநுமதிப்பதையும் சரியென நிலைநாட்டுவது சிரமம். தேய்மானச் சதவிகிதத்திற்கும் மொத்த வருமானத்திற்கும் தொடர்பிருக்கிறதே தவிர, தேய்மானச் சதவிகிதத்திற்கும் டிபாசிட்டின் மதிப்பிற்கும் யாதொரு தொடர்புமில்லை. ஆகவே தேய்மான சதவிகிதற்திற்கும், நடைமுறை தேய்மானத்திற்கும் யாதொரு உறவுமில்லை. இவ் வரியின்கீழ் இயற்கை வளப்பொருள்கள், தொழில்களுக்கு உதவிக் கொடை அளிப்பதை அகற்ற வேண்டுமானால், கரைதல் பிடித்தத்தை, டிபாசிட்டு எவ்வளவு கரைகிறதோ அதன் மதிப்பைப் பொறுத்தே, பிடித்தம் செய்ய வேண்டும் என்பது தெளிவாகிறது.[3] இவ்வாறு எவ்விதம் கணக்கிட்டாலும் ஒரு காலக்கூறுக்குள் செய்த பிடித்தங்களின் கூட்டுத்தொகை டிபாசிட்டின் ஆதி மதிப்பைவிட மிகையாக இருக்கக் கூடாது. இதைவிட மேலாக மொத்தக் கரைதல் படிகள் நடைமுறையில் கரைத்தலின் மதிப்பிற்குச் சமம் என்று வைத்துக் கொண்டாலும், அவ் வாஸ்தி உண்மையில் கரைவதைவிட மிக விரைவாக வரி நோக்கங்களுக்காகத் தரப்பட்டபடி இயற்கை வளத்தைத் கரைக்கக் கூடாது. இல்லாவிட்டால், வரிகள் ஒத்திப் போடப்படுகின்றன. ஒத்திப் போடப்பட்ட காலம் முழுமையும் சேமித்த பணத்தை நிறுவனம் பயன்படுத்தலாம். குறிப்பிட்ட தனியாட்கள், உதவிக் கொடைகளுக்காக மிகத் திறம்படக் கிளர்ச்சி செய்து வரியில் சலுகைகளைப் பெறுவதைத் தடுக்கும் பொருட்டு, எந்த ஆண்டிலும் என்ன உண்மையில் செலவாயிற்றோ அதை அடிப்படையாகக் கொண்டு கரைதல் படியை அநுமதிக்கும் பொதுவான பழைய முறைக்கு நாம் இவ்வாறு வந்து சேர்கிறோம்.

அகவருவாய் விதித் தொகுப்பின் 616 (a) பிரிவு ஆராய்ச்சிக்காகவும், சோதனைகளுக்காகவும் 'செலவிடுவதை' அநுமதிக்கிறது. எந்த ஆண்டில் செலவு செய்யப்பட்டதோ அந்த ஆண்டின் செலவாகவே இது முழுதும் கருதப்படும். இவை மூலதனக் கணக்கில் சேர்த்து ஆண்டுதோறும் கடன்தீர் நிதிசேர்த்தலுக்கு(amortization) ஆளாகாது.[4] ஆராய்ச்சிக்காகவும் சோதனைக்

காகவும் ஒரு தொழில் செலவழித்தால் அதனால் அது ஓர் அநுகூலம் அடைகிறது. குறிப்பிட்ட காலக்கூறுக்கு ஆண்டுதோறும் இச் செலவை ஒரு பின்னமாகப் பிடித்தம் செய்வதைக் காட்டிலும், உடனடியாகவும், மொத்தமாகவும் பிடித்தம் செய்யும் அநுகூலம் இதனால் கிட்டுகிறது. ஒரு காலக்கூற்றில் கழிவுப்பாடு செய்யப் பட்ட அதன் மதிப்பைக் காட்டிலும் அவ்வாறான செலவுகளைச் செலவழிக்கும்பொழுது தற்போது வரிகொடாது சேமிப்பதன் மதிப்பும் கூடுதலாகவே இருக்கிறது. இதனால் ஆராய்ச்சி செய்வ தற்கும், சோதனைகள் நடத்துவதற்குமான உதவித் தொகை அமிசம் இவ் வரியில் அடங்கியிருக்கிறது. இச் செலவுகளை அவற்றின் வழக்கமான வாழ்வு பூராவும் கடன்தீர நிதி சேர்த்தலில் சேர்க்க வேண்டும். இப் பழக்கம் பழையது. இதை மீண்டும் மேற்கொள்ளு வதன் மூலம் இவ் வுதவிக் கொடையை அகற்ற முடியும்.

**2. பிடித்தங்கள் :** இப் பரப்பில்தான் ஏராளமான உதவிக் கொடைகள் ஏற்படுகின்றன; தனியாள் வருமான வரித்தளத்தின் அரிப்பும் மிகக் கடுமையாக இருக்கிறது. ஊன்றி ஆராய்ச்சி செய்தால் ஆரம்ப ஆண்டுகளிலிருந்து தனியாள் வருமான வரிவிதிப்பில் அநுமதிக்கப்படும் பல பிடித்தங்கள், பிரத்தியேகக் கும்பல்களுக்குக் கொடுக்கப்பட்ட உதவிக்கொடைகள் அல்லது அவர்களுக்கு ஊக்கமளிப்பதற்குத் தரப்பட்ட மானியங்கள் என்பது விளங்கும். வாழ்வதற்கு வேண்டிய குறைந்தபடித் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய வருமானத் தொகையை ஒரு குடும்பத்திற்கு வரியின்றிச் செய்வதுதான் (இப்பொழுது வரி செலுத்துவோர் ஒவ்வொருக்கும் 600 டாலரும், அவரை அண்டியிருப்போர் ஒவ்வொருவருக்கும் 600 டாலரும்) தனி யாளுக்கு வரி விலக்களிப்பதன் நோக்கமாகும். தனியாளுக்கு வரிவிலக்களித்த தொகை போதவில்லை என்றால், இத் தொகையை உயர்த்த வேண்டியதுதான். ஆனால் இவ் வினத்தில்தான் ஒரே படித்தான வரி செலுத்துவோர் உதவிக் கொடைகள் அடங்கியிருப்ப தாகக் கருதப்படுகிறது. இந் நோக்கத்திற்காக ஆதியில் பிடித் தங்கள் செய்யப்படவில்லை. படிப்படியாகப் பிடித்தங்கள் இந் நோக்கத்திற்காக மேற்கொள்ளப்பட்டன.

ஆண்டொன்றுக்கு 5,100 டாலருக்குமேற் போகாத சரிக் கட்டப்பட்ட மொத்த வருமானத்தை ஒரு பெற்றோர் ஈட்டினால், கூலிக்கு வேலை செய்யும் பெண்தொழிலாளி அல்லது தாரமிழந்தவர் இவர்களைச் சார்ந்திருப்போர்களைப் புரக்கும் செலவுக்காக 600 டாலர்வரைப் பிடித்தம் செய்தலை மனிதாபிமான முகாந்தரங் களைக் கொண்டு வரவேற்றாலும், வருமானவரிக் கருதுகோள்

அடிப்படையில் வரவேற்க முடியாது. குழந்தைப் பராமரிப்பை வருமானத்தை ஈட்டுவதற்காக ஆகும் ஒரு செலவாகக் கருதலாம். ஆயினும், அதைப் பிரத்தியேகமாக நடத்துவதற்காகத் தனியே வேறுபடுத்துவது ஒரே படித்தான தன்மையின் கொள்கையை மீறியதாகும். ஒருவரின் வேலைக்காகச் செலவுகளைப் பரிவர்த்தனை செய்வதைப் பிடித்தமாக அநுமதிப்பதில்லை. பெற்றோர் உழைக்கவேண்டும் என்றால் குழந்தைப் பராமரிப்பு இன்றியமையாததென்று பிடித்தக் கருதுகோளைக் கொண்டால், அது பிரயோகமாகும். சரிக்கட்டிய மொத்த வருமானத்திற்கு ஏன் வரம்பு விதிக்கப்பட வேண்டும்? ஆண்டொன்றுக்கு 100,000 டாலரை ஈட்டும் ஒரு கைம்பெண்ணுக்கும் அல்லது இருவரும் வேலைபார்க்கும் பெற்றோர்களுக்கும் இப் பிடித்தம் பொருந்தும். ஆயினும் அவர்களுக்குப் பிடித்தம் அளிப்பதில்லை. குறைந்த வருமானங்களுக்கு மட்டுமே இச் சலுகையை அளிப்பதனால் பிடித்தங்கள் அளிப்பதற்குப் பதிலாகத் தனியாள் வரிவிலக்கு வாயிலாகவோ அல்லது குறைந்த வருமானங்கள் மீது குறைந்த வீதங்களை விதிப்பதன் வாயிலாகவோ இப் பிரச்சினையைச் சமாளிக்கவேண்டி யிருக்கும்.

தனியாள் கடன் வாங்கியிருக்கும் தொகையின்மீது செலுத்த வேண்டிய வட்டியைப் பிடித்தம் செய்வதை அடுத்தபடியாக எடுத்துக் கொள்வோம். இத் தரத்தில் பெரிய பிடித்தமாவது குடியிருப்பு அடமானங்கள் மீதான வட்டியே. இது வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு அளிக்கப்படும் உதவிக் கொடையே என்பது தெளிவு. வீட்டை வாங்கும் சக்தி உள்ளோருக்குத்தான் இவ் வுதவித் தொகை கிட்டும். பிற தவணைக் கடன்களிலும் இதனால் ஏற்படும் விளைவு உதவிக்கொடை அளிப்பதே. இவ் வரியெல்லாம் தனியாளின் சொந்தச் செலவைப் பற்றிய விஷயங்கள். இவற்றை வரியின் கருதுகோளில் பொதுவாக எடுத்துக் கொள்வதில்லை. ஒரு வருமான வருக்கத்தில் உள்ள ஆட்களின் மீது ஒரு படித்தாக வரி சாதாரணமாக விதிக்கப்படுகிறது என்று கொள்ளப்படுகிறது. மொத்தத் தனியாள் விலக்குகளைப் பொறுத்து, இவ் வருக்கத்திலேயே வேறுபாடுகள் இருக்கும். வரிகளைச் செலுத்திய பின்பு அவன் தன் வருமானத்தை என்ன செய்கின்றான் என்பது வருமான வரி விதிப்பில் கவனத்தில் கொள்ளத்தக்கதன்று ஆயினும் தனியாளின் செலவு விருப்பத்தைப் பொறுத்து வரித்தொகையை மாறுதல் செய்ய அநுமதிக்கப்படுகிறது. வறியவனுக்கு அக்கறை காட்டுவது சட்டத்தின் நோக்கம் எனவும் தெரிகிறது. வறியவனுக்குத் தனியாள் விலக்குகளின் மூலமும், வீதப்பட்டியல்களின் மூலமும் நன்மை செய்யலாம். மேலும் பிடித்தத்தினால்

இந் நோக்கம் சரியாக நிறைவேற்றப்படவில்லை. பிடித்தத்தின் மூலமாக சேமிக்கப்பட்ட வரி, சிறிய வருமானத்தைக் காட்டிலும் பெரிய வருமானத்திற்குச் செலுத்தப்பட்ட ஒவ்வொரு டாலர் வட்டிக்கும் அதிகம். பெரிய வருமானம் கூடுதலான இறுதிநிலை வீதத்திற்கு உள்ளாகிறது.

மேலே கூறியது மாநில வரிகளுக்கும், தல வரிகளுக்கும் அனுமதிக்கப்பட்ட பிடித்தங்களுக்கும் பெரும்பாலும் பொருந்தும். தல சொத்து வரிகளைப் பிடித்தம் செய்வது வீட்டுக்காரர்களுக்குக் கொடுக்கப்படும் மற்றொரு உதவிக்கொடையாகும். தன் வீட்டிலேயே குடியிருக்கும் ஒருவர் வீட்டின்பேரில் இருக்கும் அடமானத்திற்காகவும், சொத்து வரிகளுக்காகவும் பிடித்தங்களைச் செய்யலாம். அதேசமயம் வீட்டின் வாடகை மதிப்பைத் தன் வருமானத்தில் சேர்க்க வேண்டியதில்லை. ஆனால், குடிக்கூலிக்கு இருப்பவர் செலுத்தும் வாடகையில் வீட்டுக்காரர் செலுத்தும் வரிகளும், அடமானத்தின்பேரிலான வட்டியும் அடங்கும். வாடகைக்கு இருப்பவர் தன் மொத்த வருமானத்திலிருந்து குடிக்கூலியைப் பிடித்தம் செய்துகொள்வதற்கு அனுமதிக்கப் படுவதில்லை. இதில் பேதங்காட்டுகை தெளிவு; பேதங்காட்டுகையின் அளவும் சிறியதன்று. மாநில ஆயத்தீர்வைகளுக்காகவும், விற்பனை வரிகளுக்காகவும் பிடித்தம் செய்வதனால் போகப்பொருள்கள் மீதான வரிகள் வருமானத்திற்கு ஏற்ப வளர்வீதமாக இன்றிச் சற்றுக் குறைவாக இருப்பதும், வருமானம் ஏற ஏற பொது விற்பனை வரிகள் குறைந்த வீதமுறையில் இருப்பதும், ஏற்படும் விளைவுகளாகும். சிறிய வருமானத்தைக் காட்டிலும் பெரிய வருமானத்திற்கு, இப் பிடித்தத்தினால், ஒவ்வொரு டாலருக்கும் கூட்டாட்சியின் வருமான வரியினின்று கூடுதலான சேமிப்பு ஏற்படுகிறது. மாநில வருமான வரிகளுக்குப் பிடித்தம் செய்வதற்கும் இது பொருந்தும். ஆனால் ஓரளவு பிடித்தம் செய்வதற்குச் சிறப்பாகத் தேவை இருக்கிறது. இவ்விதப் பிடித்தம் இல்லையென்றால் வருமானத்தின் இறுதி அலகுகளின்மீது இறுதிநிலை வீதங்கள் 100 சதவிகிதத்திற்கு மேலும் இருக்கும்.[5] ஏனெனில் கூட்டாட்சியின் உச்சவீதம் 91 சதவிகிதம். மாநிலங்களின் உச்சவீதம் 9 சதவிகிதத்திற்குச் சற்றுக் கூடுதல். ஆகவே மொத்த வீதம் 100 சதவிகிதத்திற்கு மேலாகும்.

தனியாள் வருமான வரித்தளத்தை அறுதியிடுவதற்காக அற நிலையங்களுக்குத் தரப்படும் அளிப்புகளைப் பிடித்தம் செய்வதற்கு அனுமதிக்கப்படுகிறது. அறத்தினால் ஏற்படும் புண்ணை ஆற்று வதற்கு வகை செய்யும் ஒரு பண மேற்பூச்சு மருந்தாக இப் பிடித்

த்தைக் கொள்ளலாம். இம் மேற்பூச்சு மருந்தினுல் சிறிய கொடையாளியைவிடப் பெரிய கொடையாளிக்கே மறுமுறையும் அதிக நிவாரணம் கிடைக்கிறது. இப் பிடித்தங்கள் அகற்றப்படு மானுல், சிறப்பாகப் பெரும் வருமானம் படைத்தவர்கள் அற நிலையங்களுக்குத் தரும் கொடைகள் குறையும் என்பதில் ஐய மில்லை. பிடித்தங்களை அதே நிலையில் வைத்துக்கொண்டு வரிவீதங் களைக் குறைத்தாலும் கொடை அளிப்பது குறையலாம் என்றும் வைத்துக் கொள்ளலாம். பொதுவாக, ஒரு வரித்திட்டத்தை நன்கொடையைத் தூண்டுவதற்காகப் பயன்படுத்துவது விவாதத் திற்குரிய ஒரு செயல்முறையாகும். இதனுல் மனிதாபிமானம் ஒரு வருமான வருக்கத்தைவிட இன்னெரு வருக்கத்தினருக்குச் சகாயமாக்கப்படுகிறது.

வழக்கத்திற்கு மாருன மருத்துவச் செலவு, ஈட்டுறுதி செய்யப்படாத இழப்புகள், வாராக் கடன்கள் இவைகளுக்குப் பிடித்தம் அளிப்பதன் மூலம், அரசாங்கமும் இவ் வழக்கத்திற்கு மாருன பின்னிடைதல்களின் செலவில் ஒரு பங்கை ஏற்றுக்கொள் கிறது. கொள்கையளவில் இச் செயல் முறைக்கு எதிராக வாதிப்பது கடினம். ஆயினும், ஈட்டுறுதி செய்யப்படாத இழப்புகள், வாரக் கடன்கள் இவை யிரண்டையும் பொறுத்த வரையில் தனி யாள் கூறின்றி நடந்ததனுலேயே இத் தண்டனையை அடைந்தான் எனலாம். இத் தண்டனையை அரசாங்கமும் பிடித்தத்தின் மூலம் ஏற்றுக் கொள்கிறது என்பது தெளிவு. இதனு லேற்படும் ஆதாயங் களும் செல்வர்களுக்கே அதிகம். சரிக்கட்டிய மொத்த வருமா னத்தில் 3 சதவிகிதத்திற்கு மேற்பட்ட செலவுகளை மருத்துவத்திற் காகப் பிடித்தம் செய்யலாம் என்ற வரம்பு, வழக்கத்திற்கு மாருன செலவுகளுக்கு இப் பிடித்தத்தைச் சரியாகப் பிரயோகம் செய்கிறது. இருந்தாலும் எல்லா மருத்துவச் செலவுகளையும் அறுபத்தைந்து வயதானவர்கள் அல்லது அறுபத்தைந்தைக் கடந்தவர்கள் பிடித்தம் செய்துகொள்ள அனுமதிப்பது இந்நோக்கத்திற்கு முரணுனதாகும். வழக்கத்திற்கு மாருன செலவுக் கொள்கையில் காணப்படும் புறனடைகளைச் சிறிதளவு துப்புரவு செய்தலே இவ் வகைப் பிடித்தங்களைச் சிறந்த முறையில் கையாள வேண்டிய முறையாகும்.

இறுதியாகச் சரிக்கட்டிய மொத்த வருமானத்தில் 10 சதவிகி தத்தைத் தரமாகப் பிடித்தம் செய்வதும், அது 1,000 டாலருக்கு மேல் போகக்கூடா தென்பதும் பல பிரச்சினைகளை எழுப்புகின்றன. இனவாரியாக அனுமதிக்கப்பட்ட குறிப்பிட்ட பிடித்தங்களுக்குப் பதிலாக வரிசெலுத்துவோர் தரப்பிடித்தத்தை மேற்கொள்ளலாம்.

தரப்பிடித்தத்தின் தலையாய நோக்கம் கணக்குப் பதிவியலையும், வரி விவர அறிக்கை[5] தயாரித்தலையும் எளிதாக்குவதே. 1956[6] ஆம் ஆண்டுக்கான தனியாள் வருமானவரி விவர அறிக்கைகளைப் பகுத்தாய்வதில் தரப்பிடித்தங்களை வருமான வருக்கத்தினர் கீழ்க்கண்டவாறு பயன்படுத்துவது தெரிகிறது :

| சரிக்கட்டிய மொத்த வருமானம் வருக்கம் | மொத்த வரி விவர அறிக்கைகள் (ஆயிரத்தில்) | தரப் பிடித் தங்களோடு (ஆயிரத்தில்) | தரப் பிடித் தத்தோடு (1%) |
|---|---|---|---|
| 0— 5,000 டாலர் | 39,744 | 31,215 | 78·4 |
| 5,000—10,000 ,, | 16,343 | 8,323 | 50·9 |
| 10,000—15,000 ,, | 1,919 | 917 | 47·8 |
| 15,000—25,000 ,, | 732 | 224 | 30·6 |
| 25,000 டாலருக்குமேல் | 458 | 60 | 13·0 |

வரிதாங்கு விவர அறிக்கைகளும், வரிதாங்காத விவர அறிக்கைகளும் ஆகிய இரண்டும் இதில் அடங்கியிருக்கின்றன. வரிதாங்காத விவர அறிக்கைகள் முதல் வருமான வருக்கத்திலேயே கிட்டத்தட்ட முழுதும் இடம் பெறுகின்றன. இவ் வட்டவணையிலிருந்து நாம் இரண்டு முடிவுகளுக்கு வரலாம். தரப்பிடித்தம் கணக்குப் பதிவியலை எளிதாக்குகிறது. அத்துடன் வரிவிவர அறிக்கைகளை அனுப்பும் பெரும் பகுதியினருக்கும் இவ்வறிக்கைகளைத் தயாரிப்பதையும் எளிதாக்குகிறது, முதலாவது முடிவு. கடைநிலையிலும், இடைநிலையிலும் இருக்கும் வருமான வருக்கங்களில் ஏராளமான ஆட்களுக்கு இத் தரப்பிடித்தம் கணிசமான அளவு வரிச்சேமிப்பு செய்கிறது என்பது, இரண்டாவது முடிவாகும். ஆனால், வரிச்சேமிப்பைத் திட்டவட்டமாக இவ்வளவு என்று அறுதியிட்டுக் கூற வியலாது. மேற் பத்திகளில் யோசனை கூறியாங்கு, இனவாரிப் பிடித்தங்களில் பெரும் பகுதியை அகற்றினுல், தரப்பிடித்தத்தில் கணிசமான அளவு குறைப்பது பொருத்தமாக இருக்கும். சரிக்கட்டிய மொத்த வருமானத்தில் 2 சதவிகிதமாவது அல்லது 200 டாலராவது (இவற்றில் எது குறைவாக இருக்கிறதோ) அதன்படிப் பிடித்தங்களைக் குறைக்க வேண்டும். இல்லாவிட்டால் தரப்பிடித்தத்தினுல் அநேகமாக எல்லா வரிசெலுத்துவோர்களுக்கும் ஒரு பெரிய ஆதாயம் கிட்டும். இது விரும்பத்தக்கதானுல், வீதப்பட்டியலில் மாறுதல் செய்தோ அல்லது தனியாள் விலக்குகளில் மாறுதல் செய்தோ இதை நிறை

வேற்றியிருக்கலாம். மற்றோர் பக்கத்தில், தற்போதைய இன வாரியான பிடித்தங்களை வைத்திருப்போமாகில், தரப்பிடித் தத்தில் குறைப்புச் செய்வதற்கு இன்னமும் தருக்க முறையில் அடிப்படை இருக்கிறது. சரிக்கட்டிய மொத்த வருமானத்தில் 5 சதவிகிதமோ அல்லது 500 டாலரோ இவற்றில் எது குறைவாக் இருக்கின்றதோ அதன்படித் தரப்பிடித்தத்தைக் குறைத்தால், தற்போதைய சட்டத்தின்கீழ் கிடைக்கும் சலுகையின் பெரும் பகுதியும் போய்விடும். தற்போதைவிட இன்னும் அதிகமான பல வரி விவர அறிக்கைகளும் இனவாரியாகப் பிடித்தங்கள் செய் வதை அநுகூலமாகக் கொள்ளும். இதனால் மொத்தப் பிடித் தங்கள் மிகவும் குறையும். பிடித்தங்களின் நோக்கம் என்று நாம் கூறுவதும் சற்றேறக்குறைய நிறைவேறும். தரப்பிடித்தத்தை எளி தாக்குவதால் பொதுவாக மிகச் சிறிய வருமானங்களே ஆதாயம் அடையும்.

3. **விலக்குகள் :** பொதுவாகச் சட்டம் தற்பொழுது வரிசெலுத்துவோருக்கு 600 டாலரும், அவரை அண்டியிருக்கும் ஒவ்வொருவருக்கும் 600 டாலரும் வரியிலிருந்து விலக்கு அளிக் கிறது. வரி செலுத்துவோருக்கு உறவினராயும், வரிசெலுத்துவோ ரிடமிருந்து பாதிக்கு மேற்பட்ட ஆதரவைப் பெறுபவராயும் இருப்பவரே பொதுவாக அண்டியிருப்போர் என்று கூறப்படுகிறார். 1945-லிருந்து 1948 வரையுள்ள ஆண்டுகளில் ஒவ்வோர் அண்டி யிருப்போருக்கும், 500 டாலார் வரியிலிருந்து விலக்கு அளிக்கப் பட்டது. நம் வருமானவரி வரலாற்றிலேயே தற்போதிருக்கும் தனியாள் விலக்கு அளவு மிகவும் குறைவானது. 1945 ஐக் காட்டிலும் 1958-க் கான நுகர்வோர் விலைக் குறியீடு (consumer-price index) 61 சதவிகிதம் கூடியிருந்தாலும், 1940ஐ விட 103 சதவிகிதம் கூடியிருந்தாலும், ஈதுண்மையே. தனியாள் விலக்கின் நோக்கம் பிழைப்புக்கு அல்லது குறைந்த அளவு சுகத்திற்குத் தேவையான வரிவிதிக்கப்படாத குறைந்த வருமானத்தை அநுமதிப்பதுதா னகையால் இரண்டாவது உலகப் போரின் இறுதியில் இருந்ததைவிடத் தற்பொழுது சட்ட விதியின்படி அடிப்படைச் செலவுகளுக்காக ஒதுக்கப்படும் உண்மைப்படி மிகுந்த உலோபத்தனத்தைக் காட்டுவதாக உள்ளது என்பது தெளிவு. மேலும் எல்லா நிலப்பரப்புப் பகுதிகளிலும் தனியாள் விலக்கு ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. ஆனால் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் வாழ்க்கைச் செலவு ஓர் அளவினதாக இல்லை. அடுத்து, சொந்தமாகத் தாமே உற்பத்தி செய்த உணவுப் பொருள் அல்லது வேறு சாமான்களை நாம் வருமானத்தில் சேர்க்கவில்லை. ஏனையோரைக் காட்டிலும் இந்த நிலையில் உள்ளவர்களுக்கு

வாழ்க்கைச் செலவுக்காக 600 டாலருக்கு வரிவிலக்கு அளிப்பது போதுமானதாக இருக்கிறது. சட்டத்தில் இவ் வேறுபாடுகளைப் புகுத்துவது ஆட்சியாளருக்கு மிகவும் கடினமாயிருந்தாலும் வாழ்க்கைச் செலவில் பெருத்த மாறுதல்கள் ஏற்படுவதை ஒட்டி, விலக்குகளையும் சரிக்கட்ட வேண்டும் என்பதற்குத் தகுந்த காரணங்கள் இருக்கின்றன. போதிய வருவாயை அடைவதற்கு அளவுகோலில் எங்காயினும் ஓரிடத்தில் வீதங்களை உயர்த்த வேண்டியது இன்றியமையாததா யிருந்தாலும், குறைந்த வருமானக் கும்பல்களுக்குச் சிறிது தண்ணளி காண்பிப்பதன் மூலம் இந் நடவடிக்கை வரியின் வளர்வீதத்தைப் பாதுகாக்கும்.

சார்ந்திருப்போர் ஒவ்வொருவருக்கும் 600 டாலர் விலக்கு அளிக்க வேண்டும் என்ற பொதுவிதிக்குப் புறனடைகள் உள்ளன. அறுபத்தைந்து வயதைக் கடந்த வரிசெலுத்துவோருக்கும் அல்லது அவர் மனைவிக்கும், பார்வையை இழந்தவர்களுக்கும் தலைக்குக் கூடுதலாக 600 டாலர் வரிவிலக்கு அளிக்கப்படுகிறது. பத்தொன்பது வயதுக்குட்பட்ட குழந்தை அல்லது மாணுக்கர் 600 டாலருக்கு மேல் ஈட்டினுல், அவரையும் பெற்ருேர் தம்மைச் சார்ந்திருப்பவர்களில் சேர்த்துக் கொண்டு அவர்கள் ஒவ்வொரு வருக்கும் தம் வரிவிவர அறிக்கையில் மேலும் 600 டாலர் விலக்குப் பெறலாம். அசாதாரணமான பெருத்த மருத்துவச் செலவுகளை அநுமதிக்கும் வரையில், முதியோருக்கும், குருடருக்கும் கூடுதலாக விலகளிப்பது விலக்குக் கருதுகோளின்படிச் சரியெனக் நிலைநாட்ட முடியாது. இவ் விலக்குகள் தரப்படுவதற்குக் காரணம் இவர்களின் வருமானங்கள் குறைவாக இருக்கின்றன என்ற ஊகமே. ஆனுல், வருமானம் எத்துணைக் கூடுதலாக இருந்தாலும் இவ் விலக்குகள் அவற்றுக்கும் பொருந்தும். ஆகையால் வயதைக் கருத்தில் கொள்ளாது வருமானத்தில் உள்ள வேறுபாடுகளுக்குப் போதுமான விலக்களிப்பதே நல்லது. மாணுக்கர்களைப் பொறுத்த வரையில் இரட்டை விரிவிதிப்பு விலக்கை அகற்றவேண்டும். மாணுக்கர் வரிவிவர அறிக்கையை அனுப்பும்போது பெற்ருே ருக்குக் கூடுதலாக விலக்களிப்பதை நிறுத்திவிடலாம் அல்லது மாணுக்கரின் வருமானத்தை (ஏதோ ஒரு செயல்முறை எண் ணுக்கு மேல்—உ-ம் : 200 டாலருக்கு மேல்) பெற்ருேரின் வருமானத்துடன் ஒன்று சேர்த்துக் கூடுதல் விலக்கு அளிக்கும் படியும் செய்யலாம்.

**4. வரி வரவு வைத்தல் : (Tax Credits)** வரியைப் பொறுத்த வரை பொதுவான ஒரேபடித்தான தன்மையை நிறைவேற்ற வேண்டும் என்ருல் இரண்டு வரிவரவு வைத்தல்களில் ஒரு மாறுதல்

செய்ய வேண்டும். இலாப ஈவுகளாகப் பெற்ற 4 சதவிகித வரிக்கு எதிராக வரவு வைத்தல் முதலாவதாகும். கார்ப்பரேஷன் வருமான வரியை அகற்றிஞல் இதுவும் அகற்றப்பட்டுவிடும். ஏனென்னில் கார்ப்பரேஷன் வாயிலாகத் தனியாள் வருமானம் பெறுவதன் மீது 'இரட்டை வரிவிதிப்பை'ப் பிரயோகிப்பதை ஓரளவு சரிக்கட்டுவதே கார்ப்பரேஷன் வருமான வரியின் நோக்க மாகும். தற்பொழுது இலாப ஈவுகளின்மீது இரட்டை வரிவிதிப்பைக் குறைப்பதற்கு இரண்டு முறைகள் கையாளப் படுகின்றன. இவற்றில் இலாப ஈவுகளாகப் பெற்றதை வரவு வைப்பதில் பேதங்காட்டுகை இல்லே. ஆனல், இலாப ஈவிலிருந்து 50 டாலரை விலக்குவதில் பேதங்காட்டுகை இருக்கின்றது. இலாப ஈவுகளுக்கு 50 டாலர் வரை விலக்கு அளிப்பதனல் இலாப ஈவுகளாகக் கிடைக்கும் சிறிய வருமானத்தைவிடப் பெரிய வருமானத்திற்கே கூடுதலான வரிமிச்சம் ஏற்படுகிறது. ஆனல் இலாப ஈவுகளில் 4 சதவிகிதத்தை வரவு வைப்பதனல், இலாப ஈவுகளின் ஒவ்வொரு டாலரிலும் எல்லா வரிசெலுத்துவோர் களுக்கும் சமமாகவே சேமிப்பு நிகழ்கிறது. இவ்வாருகக் கார்ப்ப ரேஷன் வரியைத் திருத்தாவிடில், இலாப ஈவுக்கு விலக்கு அளிப் பதைவிட இலாப ஈவுக்கு வரிவரவு வைத்தல் மிகவும் நியாயமான விதியாகும்.

இரண்டாவது பெரிய வரவு வைத்தல் 20 சதவிகிதம் வரை காணப்படுகிறது. ஓய்வு உபகாரச் சம்பளங்கள், அன்னுயிட்டிகள், வட்டி, வாரம், இலாப ஈவுகள் இவற்றுக்கு இது பிரயோகமாகும். ஆனல், இது 240 டாலருக்குமேல் போகக் கூடாது (1200 டாலரில் 20சதவிகிதம்). வரி விதிக்கப்படாத சமுதாயக் காப்புறுதி ஆதாயங் களுடன் ஒத்துத் தனியாள் ஓய்வு வருமானத்தை நடத்துவதற்காக இவ் விதி எழுந்தது. செயல் முறையில், அறுபத்தைந்து வயதைக் கடந்தவர்களுக்குத்தான் இவ் வரவு வைத்தல் தலேயாயதாகப் பிரயோகிக்கப்படுகிறது. ஆகவே ஒரே படித்தாகத் தனியாள் விலக்குத் தொகையை அளிப்பதன் வாயிலாகவும், அல்லது வீதப் பட்டியல் வாயிலாகவும் இப் பொருளே நோக்கினல்தான் ஒரே படித்தான தன்மையை வரியில் பெறமுடியும். 1200 டாலர் சமுதாயக் காப்புறுதி ஆதாயங்களுக்கு வரியிலிருந்து விலக்கு அளிப் பதனல், காப்புறுதி ஆதாயங்களேப் பெறத் தகுதி இல்லாதவர் களுக்கும் அவர்களுடைய தனியாள் ஓய்வு வருமானத்திலிருந்து 1,200 டாலருக்கு விலக்களிக்க வேண்டும். ஆனல், பிற வருமானங் களேப் பொறுத்த வரையில் இவை இரண்டுமே நியாயமாகப் படவில்லே. வயதைக் கருதாது, யாவருக்கும் வாழ்க்கைத் தேவை களேப் பூர்த்தி செய்வதற்கு ஒரு குறைந்த அளவு வருமானத்

திற்கு விலக்களிக்க வேண்டும். முதியோருக்கு மட்டும் சலுகை அளிப்பதால் பெருத்த வருமானங்களையுடைய முதியோருக்குச் சலுகை அளித்ததாக ஆவதுமின்றி, சிறிய வருமானங்களையுடைய இளைஞர்களுக்கு எதிராகப் பேதங்காட்டுவதாகவும் முடியும்.

## இம் மாறுதல்களை மேற்கொள்வதால் வரித்தளத்தின்மீது ஏற்படும் விளைவு (The Effect of Proposed Changes upon the Tax Base)

சில குறிப்பிட்ட வகை வருமானங்களையும், குறிப்பிட்ட தனியாள் கும்பல்களையும் பிரத்தியேகமாக நடத்துவதை அகற்றினால், தனியாட்களிடையே அதிகமான அளவு ஒரே படித் தன்மை ஏற்படுவதோடன்றி அதிகமான அளவு நியாயமும் செயல் முறையில் கிடைக்கும் என்று மேல் பத்திகளில் நாம் யோசனை தெரிவித்தோம். இதனால் மொத்த வருமானத்திலிருந்து சில விலக்குகளை அகற்றவேண்டியிருக்கும். குறிப்பாகப் படைவீரரின் பிரத்தியேகச் சம்பளத்திற்கும், பெறப்பட்ட இலாப ஈவுகளின் ஒரு பகுதிக்கும், தரப்படும் விலக்குகளை அகற்ற வேண்டும். வருமானங்களை ஈட்டுவதில் ஏற்படும் சில செலவுகளுக்குச் சலுகையளிக்கும் பழக்கமும் மாறவேண்டும். கரைதல் சதவிகிதம், ஆராய்ச்சி, உலோகங்களைத் துருவி ஆராய்தல், அபிவிருத்திச் செலவுகள் இவற்றுக்குத் தரும் சலுகைகளை நீக்கவேண்டும். ஒரு சராசரிச் சட்டம் செயல்படுவதற்குத் தேவையானதற்கு மிகையாக, நெடுங் கால மூலதன ஆதாயங்களின் ஒரு பகுதியை விலக்குவதையும் கைவிட வேண்டும். ஒரு பொதுவான சராசரித் திட்டம் இல்லாத வரை மூலதன ஆஸ்திகளுக்கு இரண்டுக்கு மேற்பட்ட வைத்திருக்கும் காலக்கூறுகளைப் (holding periods) படைப்பதும் விரும்பத்தக்கதாகும்.

அனுமதிக்கப்பட்டப் பிடித்தங்களில் பலவும் தருக்க முறைக்கு ஒவ்வாதன என்றும், ஆகவே அவற்றை நீக்கவேண்டும் என்றும், நாம் யோசனை தெரிவித்தோம். இதனால் தனியாளின் மொத்த வருமானத்திலிருந்து கிடைக்கும் நிகர வருமானத்தை, வேறொருவரின் நிகர வருமானத்தைக்காட்டிலும் குறைவுபடச் செய்யும் எந்த வகையான சாதாரணமான செலவுகளையும், அவசிய மான செலவுகளையும் மட்டுமே (பெருத்த மருத்துவச் செலவுகளைப் போன்று) பிடித்தங்கள் அளிக்கவேண்டும். தரப் பிடித்தமான 10 சதவிகிதத்தை ரத்து செய்யாவிடில், மேற்கூறிய மாறுதல் களுக்கு இணங்க அதைத் திருத்த வேண்டும். கிட்டத்தட்ட ஒரே வருமானமும் செலவும் உள்ள நிலைகளில் உள்ள தனியாட்களை வரி விதிப்பதற்காக நடத்தும் விதத்தில் நாம் விரும்பும் ஒரே படித்தான

தன்மை, தனியாள் விலக்குகளைத் திருத்தி அமைப்பதன் மூலமும், வரிக்கு எதிராக வரவு வைத்தல்களை அகற்றுவதன் மூலமும் கிட்டும் என்பதும் சுட்டிக்காட்டப்பட்டது.

இதுகாறும் நாம் தெரிவித்த யோசனைகளைப் படிக்கும் வாசகர் இவற்றைப் பலதிறப்பட்ட உணர்ச்சிகளுடன் சிந்திக்கக்கூடும். வேண்டியவர்களுக்குச் சலுகை அளிப்பதை அகற்றுவதற்குச் சில யோசனைகள் மிகவும் விரும்பத்தக்கனவாக விருப்பதால் அவற்றுக்கு எதிர்வாதங்கள் இருக்க முடியாது. ஆனால் பல யோசனைகளை அப்படியே ஏற்றுக் கொண்டால், அதனால் கடைநிலை, இடைநிலை வருமானக் கும்பல்கள் மீதான வரி ஏறும். ஆகவே, இவ் யோசனைகளை ஏற்றுக் கொள்வது கடினமே. ஆயினும் பிரத்தியேக நடத்துகையை நீக்கி வரித்தளத்தைத் தருக்க முறையில் எளிதாகவும், ஒரே படித்தாகவும் விளக்கினால் வீதங்களில் கணிசமான அளவு இறக்கம் ஏற்பட்டாலும் அதே அளவு வருவாயைத் திரட்டலாம் என்பதே தலையாய அமிசமாகும். ஒதுக்கல்கள், பிடித்தங்கள், கூடுதல் விலக்குகள், வரி வரவுகள் இவற்றை நீக்குவதன் மூலம் வரித்தளத்தில் ஏற்றம் ஏற்படுமென்பது தெளிவு. ஆனால் தளம் எளிதாக்கப்பட்ட பொழுது அதற்கிணங்க வரியில் மாறுதல்களைச் செய்வதில் மேலும் பல அநுகூலங்கள் இருக்கின்றன. இப் பிரத்தியேக நடத்துகைகளில் ஒவ்வொன்றும் வரியினின்று தப்பிக்கும் சாத்தியக்கூறுகளை அதிகரிக்கும் ஒரு நிலையை படைக்கிறது. அகவருவாய்க் கழகம் இவற்றை மரியாதையாகத் 'தவறுகள்' என்று குறிப்பிடுகிறது. உண்மை என்னவென்றால் இத் 'தவறுகளில்' பலவற்றால் வரிகள் குறைவாகச் செலுத்தப்படுகின்றனவேயன்றி மிகையாகச் செலுத்தப்படுவதில்லை. எல்லா வரிவிவர அறிக்கைகளையும் தணிக்கை செய்ய முடியாமையால் பல 'தவறுகள்' கண்டுபிடிக்கப்படாமலே போகலாம். வரியினின்றும் தப்பித்தற்கு வாய்ப்புக்களைப் பெருக்கும் இச் சிக்கலான விதிகளை அகற்றினால், இரண்டு அநுகூலங்கள் கிடைக்கும் என்பது தெளிவு. வரியிலிருந்து தப்பிப்பதற்கான பல வாயில்கள் இனி அடைபட்டுப்போகும்; கணக்கைத் தணிக்கை செய்தலும் எளிதாகும். அதே வமயம் வட்டி, இலாப ஈவு வருமானம் இவற்றின்மீது வரியை மூலத்திலேயே தண்டுவதைத் தொடங்கினால், இதன் விளைவாக மொத்தத் தனியாள் வருமானத்தில் எந்த மட்டத்திலும் வரித்தளம் மிகக் கணிசமான அளவு உயரும்.

ஒதுக்கல்கள், பிடித்தங்கள், கூடுதல் விலக்குகள், வரிவரவுகள், சரியாகச் சட்டத்தை அமுல் செய்யாமை இவ் வகையான 'ஒட்டைகளை' அகற்றுவதன் மூலம் 1956ஆம் ஆண்டைய வரி

வருவாய்களில் ஏற்படும் விளைவை பெச்மான்[7] மதிப்பிட்டிருக்கிறார். இவ் வோட்டைகள் அடைக்கப்பட்டிருந்தால் 1956ஆம் ஆண்டு செயல் முறையில் இருந்த வரிவீதங்களைச் சராசரி 25 சதவிகிதம் குறைந்தால்கூட 1956ஆம் ஆண்டு வருவாயாகக் கிடைத்த அதே தொகைதான் கிடைக்கும் என்று பெச்மான் கருதுகிறார். கூட்டு வரிவிவர அறிக்கைகளில் பயன்படுத்தும் திருமணமான தம்பதிகள் வருமானத்தைப் பிரிக்கும் விதிகளையும் நீக்கினால் சுமார் மூன்றில் ஒரு பங்கு வரிவீதங்களைக் குறைக்கலாம் எனவும், அங்ஙனம் குறைத்தாலும் அதே அளவு வருவாயைத் திரட்ட முடியும் எனவும் அவர் மேலும் கூறுகிறார். வருமானவரிக் கருதுகோளின்படிச் சரியென நிலைநாட்ட முடியாத பல்வேறுபட்ட பிரத்தியேக நடத்துகைகளை நீக்குவதனால் தனியாள் வருமான வரிக்குப் புத்துயிர் அளிக்கமுடியும் என்பது மிகத் தெளிவாகும். இம் மாறுதல்களினால் வீதங்களை கணிசமான அளவு குறைக்க முடியும். இங்ஙனம் குறைத்தால் புரட்சிகரமான இம் மாறுதல்களைப் பொது மக்கள் ஏற்றுக் கொள்வார்கள்.

### வரி வீதங்கள்

சட்டத்திலுள்ள வரித்தளத்தை அரிக்கும் விதிகளையும், தருக்க முறைக்கு ஒவ்வாத விதிகளையும் நீக்கி விட்டதாக வைத்துக் கொள்வோம். இதனால் வரித்தளம் கணிசமான அளவு உயரும். இதனால் வீதங்களைக் கணிசமான அளவு குறைத்தலும் கூடும். மேலே குறிப்பிட்டவாறு 1956-ல் ஒரே படித்தான அரிக்கப்படாத வரித்தளம், அப்பொழுது நிலவிய வீதங்களின்படி 44·5 பில்லியன் டாலர்களை வருவாயாக ஈட்டியிருக்கும் என்று பெச்மான் மதிப்பிடுகிறார். இது அவ்வாண்டைய வருவாய்களைக் காட்டிலும் 12·0 பில்லியன் டாலர்கள் கூடுதலாகும். அவ் வாண்டின் வருவாய் 32·5 பில்லியன் டாலர் தான். தனியாள் வரிவிவர அறிக்கைகளுக்குப் பிரயோகிக்கப்படும் அதே வருமான அடைப்புகளையும், அதே வீதங்களையும் கூட்டுவரி விவர அறிக்கைகளுக்குப் பிரயோகிப்பதன் வாயிலாக வருமானத்தைப் பிளவு செய்தலின் அநுகூலத்தை நீக்கிவிட்டால், அவ் வாண்டில் கூடுதலாகக் கிடைத்திருக்கும் வருவாய் இன்னும் சற்று அதிகமாயிருக்கும். அவ் வாண்டின் வருவாய் 48·4 பில்லியன் டாலராக—அதாவது அவ் வாண்டில் வசூலிக்கப்பட்ட தொகையை விடச் சுமார் 16 பில்லியன் டாலர் கூடுதலாக—இருந்திருக்கும். இதனால் வீதப்பட்டியலில் பெருமளவில் மாறுதல் செய்வதற்கு இடம் ஏற்படும். வீதங்களைச் சராசரி 33 சதவிகிதம் குறைக்கலாம். இக் குறைப்பு படுகிடையாக இருக்க வேண்டும் என்ப

தில்லை. வீதப்பட்டியல் முழுமைக்கும் .இக் குறைப்பு அதே அளவு (33%) செல்லுபடியாகும்.

பொதுவான கார்ப்பரேஷன் வருமான வரியை அகற்றி அதற்குப் பதிலாகப் பங்கீடு செய்யப்படாத உபரியின்மீது தனியாள் வீதங்களில் ஒரு வரியை விதிக்கவேண்டும் என்று நாம் முன்னரே சிபாரிசு செய்தோம். இம் மாறுதலினுல் (சிபாரிசை ஏற்றுக்கொண்டால்) கிட்டத்தட்ட 5 பில்லியன் டாலர் வருவாய் இழப்பு நேரும் என்று மதிப்பிடப்படுகிறது. தனியாள் வருமான வரித்தளத்தை விரிவுபடுத்துவதன் வாயிலாகக் கிடைக்கும் 16 பில்லியன் டாலரிலிருந்து இத் தொகையைக் குறைத்தால், தனியாள் வருமானவரி வீதங்களைக் குறைப்பதற்கு[8] சுமார் 11 பில்லியன் டாலர் எஞ்சி இருக்கிறது. 'எவ்வெவ்விடத்தில் பட்டியலில் வீதக்குறைப்புகளைச் செய்யவேண்டும் என்பதில் இழுபறிச் சண்டைகள் இருக்கலாம் என்று நாம் எதிர்பார்க்க லாம். ஒரு கோடியில் வரி அமைப்பின் உச்ச வீதங்களில் கவனம் செலுத்துவோர் இருக்கின்றனர். அவர்கள் தற்போதுள்ள உச்ச இறுதிநிலை வீதமான 91 சதவிகிதத்தை மிகவும் குறைக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இவ் யோசனைகளின்படித் தற் போதைய உச்சவீதங்களை மிகவும் குறைக்கும்படி நேரிடும். சிலர் வெகு காலமாக இவ் வுச்ச வீதங்கள் 25 சதவிகிதமாக இருக்க வேண்டும் என்கின்றனர். இங்ஙனம் செய்தால் வருவாய் இழப்பு மிகவும் அதிகமாக இருக்குமாதலால், உச்சவீதங்களுக்கு அடுத்த நிலையில் உள்ள வருமானங்களுக்குக் குறைந்தது 25 சதவிகிதமாவது வரியை உயர்த்த வேண்டும். ஆயினும் உச்சவீதங்களைக் குறைப் பதற்கான பல யோசனைகளும் மிகவும் பொறுப்பானவை, மிகவும் சாதாரணமானவை எனலாம். அண்மைக் காலத்தில் பல அதிகாரிகள் உச்சவீதத்தை 91 சதவிகிதத்திலிருந்து 60—70 சதவிகிதமாகக் குறைக்கலாம் என்று யோசனை தெரிவித்திருக் கின்றனர்.

பட்டியலின் உச்ச வீதங்களைக் குறைக்கவேண்டுமென்று வலியுறுத்துபவர்கள் தங்கள் வாதத்திற்கு அடிப்படையாகப் பொருளியல் வளர்ச்சிக்கு முதலீடு, நிருவாகக் கண்காணிப்பு இவற்றின் முக்கியத்துவத்தைச் சுட்டிக் காட்டுகின்றனர். பரவ லாக—சிறப்பாக உயர்ந்த வருமான வட்டாரங்களில்—உயர்ந்த இறுதிநிலை வீதங்கள் நிருவாக முயற்சிக்கும், முதலீட்டுக்கும் குந்தகம் விளைவிப்பன எனக் கருதப்படுகிறது. முதலீட்டைப் பொறுத்தவரை உயர்ந்த வரிவீதங்கள் இரு முனைகளிலும் கூர்மை யாக விருக்கும் வாளைப் போன்றன. எதிர் காலத்தில் முதலீடு

செய்பவர்களின் கையில் இருக்கும் முதலீட்டு நிதிகளைக் குறைப்பதன் மூலம் ஒரு முனை, முதலீடு செய்வதற்கான திறனைக் குறைக்கிறது; மற்றொரு முனை முதலீட்டினால் கிடைக்கும் எந்த இலாபத்திலும் அரசாங்கம் பெரும் பங்கைக் கேட்டு அச்சுறுத்துவதனாலும், அதே வமயம் எந்த இழப்புச் சாத்தியக்கூறுகளிலும் யாதொரு பங்கையும் ஏற்க மறுப்பதனாலும், உயர்ந்த வரிவீதங்களுக்கு உட்பட்ட முதலீட்டு முனைப்புகளைச் சுவையற்றதாகவும் செய்கிறது. தனித்துப் பார்க்கும் பொழுது இவ் வாதம் நமக்குச் சரியெனவே தோன்றுகிறது. அதாவது தனியாட்கள் 'எவ்விதம் நடப்பார்கள்' அல்லது 'எவ்விதம் நடக்கவேண்டும்' என்ற நல்ல எடுகோள்களின்மீது இவ் வாதம் கட்டப்பட்டதாகத் தோன்றுகிறது. தனியாட்கள் இம்மாதிரிதான் நடக்கிறார்கள் என்பதற்கு யாதொரு சான்றுமில்லாததே இதை ஏற்றுக் கொள்வதில் உள்ள சங்கடமாகும். போருக்குப் பிற்காலத்தில் மிகவும் உயர்ந்த வரிவீதங்கள் நிலவினாலும், இக் காலம் பூராவும் தொடர்ந்து செழுமையும், கணிசமான அளவு வளர்ச்சியும் நிலவியது. மிதமிஞ்சிய தேவையின் அழுத்தத்தினால் வெளிப்படை உற்பத்தி செய்யும் பொருளாதாரத்தின் திறன் நெருக்கு வெட்டுக்கு உள்ளாகிறது. இத் தேவையின் பெரும் பகுதியும் முதலீடு செய்வதற்காக ஏற்பட்டதே. இதுதான் அப்பொழுதிருந்த பிரச்சினையாகும். இங்ஙனமாக இக்காலக் கூற்றில் முதலீடு செய்வதற்கானத் தூண்டுகோல்களுக்கு ஊக்கமூட்டியிருந்தால், இதனால் வளர்ச்சிவீதம் கணிசமான அளவு வளர்ந்திருக்காது எனவும், ஆனால் பணவீக்கம் தீவிரமாயிருக்கும் எனவும் நாம் வாதிக்கலாம்.

உயர்ந்த வருமான வீதங்கள் முதலீட்டையும், நிருவாக முயற்சியையும் குந்தகம் அடையும்படிச் செய்தாலும்சரி, செய்யாமலிருந்தாலும் சரி, ஒரு கணிசமான அளவு உடனடியாக வரிவீதங்களைக் குறைப்பதால் இத் தூண்டுதல்களுக்கு ஓர் ஊக்கம் ஏற்படும் என்பது ஒருவேளை உண்மையாயிருக்கலாம். மக்கள் இதற்குப் பழக்கப்படும் வரை இம் முன்னேற்றம் (push) காணப்படலாம்—அதாவது புதிய வீதப் பட்டியலின்படி வரிப்பளுவுகள் சாதாரணமானவை என்று கருதப்படும் காலம்வரை இஃது காணப்படலாம். போருக்குப் பிற்காலத்தில் பணவீக்கப் போக்குகளைப் பார்க்கும்பொழுது, ஒரு காலக்கூறு முழுதும் ஒரு பெரும் வீதக்குறைப்பை நிறுவுவது விரும்பத்தக்கதாகும். வரிக் குறைப்பினால் தேவை விரிவடைவதைத் தடுத்து நிறுத்துவதற்குப் பணக் கொள்கைகளையும், பிற நீதிக் கொள்கைகளையும் திறமையாகப் பயன்படுத்துவதற்கு அப்பொழுது சூழ்நிலையும் துணை செய்யும்.

உயர்ந்த வரிவீதங்களால் உண்மையில் தூண்டுதலின்மை விளைவுகள் ஏற்படுகின்றனவா என்று ஐயுறுவதாலேயே இவ் வீதங்களில் குறைப்புச் செய்வதை எதிர்ப்பதாக ஆகமாட்டாது. இவ் வீதங்களை ஏன் குறைக்கவேண்டும் என்பதற்குத் தக்க காரணங்கள் இருக்கின்றன. உயர்ந்த வீதங்கள் வரியினின்று தப்பிக்கும் மனப்பான்மைக்கு உரமூட்டுகிறது என்பதும், இங்ஙனம் தப்பிப்பதைக் குறைப்பதற்குத் தீவிரமாகச் சட்டத்தை அமுலாக்க வேண்டும் என்பதும், அதற்கு அதிகச் செலவு பிடிக்கு மென்பதும் முதற் காரணமாகும். சட்டத்தில் தற்போதிருக்கும் விரிசல்களைச் சாதகமாகப் பயன்படுத்தியும், மேலும் மேலும் பல விரிசல்களைச் சட்டத்தில் புகுத்துவதற்கு முயற்சித்தும், வரிகளைத் தவிர்க்க முயல்வதற்கு, வீதங்கள் மிகக் கடுமையாக இருக்கின்றன என்ற எண்ணமே ஆக்கமளிக்கிறது என்பது இதைவிடத் தலையாய காரணமாகும். ஒரு வகையில் தூண்டுதல் முகாந்தரம் நம்மைத் தவறான வழியில் செலுத்தும். ஏனெனில், அது பொதுவாகத் தொடர்ச்சியாகக் கிடைக்கும் வருமானங்களின் வெளியிடப்பட்ட இறுதிநிலை வீதங்களைத் தளமாகக் கொண்டிருக்கிறது. ஆனால், செயல் முறையில் செலுத்தப்படும் வீதங்களிலிருந்தே செயல் முறை விளைவுகள் ஏற்படுகின்றன. இவ் வீதங்கள், தற்போதைய சட்டத்தின் உறுப்பாக இருக்கும் பல்வேறுபட்ட பிரத்தியேக நடத்துகளைப் பற்றியதாகும்.

வீதங்களைக் குறைப்பது—குறிப்பாக உயர் வீச்சுக்களில்—இவ் வதிகாரத்தில் சிபாரிசு செய்யப்பட்ட, சீர்திருத்தங்களை மக்கள் ஏற்றுக் கொள்ளுவதற்கு இன்றியமையாத முதல் நிபந்தனையாகும். மூலதன ஆதாயங்களைத் தொடர்ச்சியாகக் கிடைக்கும் வருமானமாக நடத்துவதற்கு இது குறிப்பாகப் பொருந்தும். வீதங்களைக் குறைப்பதால் தற்போது மூலதன ஆதாயங்களுக்குப் பிரயோகமாகும் வீதங்களுக்கும், பிற வருமானத்திற்குப் பிரயோகமாகும் வீதங்களுக்கும் உள்ள வேறுபாடு குறையும். இச் சீர்திருத்தங்களைச் செய்து முடித்த பிறகு, இச் சீர்திருத்தங்களில் பிரத்தியேக சலுகைகளுக்கான புதிய விதிகளைப் புகுத்தி இவற்றை அரிக்கும் தீவிர முயற்சிகள் நடைபெறலாம். ஆனால், இம் முயற்சிகள் குறைவான வீதங்களால் தவிர்க்கப்படும்.

உயர்ந்த வீச்சுக்களில் வீதங்களைக் குறைப்பதன் மூலம் மேலும் ஓர் ஆதாயமும் கிடைக்கலாம். வீதங்களைப்பற்றிய சர்ச்சைகளில் 91 சதவிகிதத்தை அது பிரயோகமாவதைவிடப் பரவலான அளவு பிரயோகமாவதுபோல் குறிப்பிடப்படுவதை, இது

ஓரளவு அகற்றும். 1956-ல் இறுதிநிலை வீதம் 91 சதவிகிதமாக இருந்தது. ஆனால், ஒரு மில்லியன் டாலருக்கு மிகையான சரிக்கட்டிய மொத்த வருமானமுடைய வருக்கத்தினர்கள் தம் வரிதாங்கு வருமானத்தில் செலுத்திய சராசரி வீதம் 65 சதவிகிதமாகத்தான் இருந்தது. இந்தக் கும்பலில், தொடர்ச்சியான வருமான வீதங்களின்படி வரி செலுத்தியவர்கள் சராசரி 82·6 சதவிகிதமே வரியாகச் செலுத்தினர். மூலதன ஆதாயங்களின்மீது வரிவிதிக்கும் மாற்றுமுறையைப் பயன்படுத்திய ஏராளமான பேர், மூலதன ஆதாயங்களையும்[9] உள்ளிட்ட தங்கள் மொத்த வரிதாங்கு வருமானத்தில் 61·3 சதவிகிதமே சராசரி வீதமாகச் செலுத்தினர். இவ் வுண்மைகளைப் பார்க்கும்பொழுது வரி 91 சதவிகிதம் எனக் கூறியதுமே பெருத்த வருமானக் கும்பலைக் காட்டிலும் சிறிய வருமானக் கும்பல்களே இதைப்பற்றி அதிகக் கவலைப்படுகின்றன என்பது தெளிவு. இதனால் அதற்குள்ள தகுதியைவிட அதிகமாகவே 91சதவிகிதப் புள்ளித் தொகை கணிசமான அளவு பிரசாரத்திற்குப் பயன்படுகிறது என்பது புலனாகும். உச்ச இறுதிநிலை வீதத்தை 65 சதவிகிதமாகக் குறைப்பதனால் வீதங்களைப் பற்றிய சர்ச்சைகளில் உள்ள இக் குளறுபடி அகலும். இதனால் ஏற்படும் வருவாய் இழப்பும் அதிகமாயிராது. உச்சவீதம் 65 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டால் ஏற்படும் வருவாய் இழப்பு 1 பில்லியன் டாலருக்கும் கணிசமான அளவு குறைவாக இருப்பதாகப் பல மதிப்பீடுகள் கூறுகின்றன. பொதுக் கார்ப்பரேஷன் வரியை ரத்து செய்து உச்ச வீதங்களைக் குறைத்த பின்பும், அளவுகோலில் பிற விடங்களில் வீதத்தில் சரிக்கட்டுவதற்கு விரிவாக்கப்பட்ட வரித்தளம் சுமார் 10 பில்லியன் டாலர் வருவாயை மீதம் விட்டுவைக்கும்.

மறு கோடியில் பட்டியலின் அடிப்பக்கத்தில் வீதங்களைக் குறைப்பதைக் குவிக்க வேண்டுமென்று கூறுபவர்கள் இருக்கிறார்கள். இரண்டாவது உலகப் போரின்போதும் போர் முடிந்த பின்பும் குறைந்த வருமானங்கள் ஒப்புமையில் கொடுமையாக நடத்தப்பட்டன என்பதும், வீதங்களைக் குறைப்பதால் பொருளாதாரத்தின் நுகர்வுத்தளம் தொடர்ந்து ஒரே அளவில் விரிவடைவதற்கு ஊக்கம் ஏற்படும் என்பதும் இதற்கான காரணங்களாகும். குறைந்த வருமானங்களைப் பொறுத்தவரை, வரிதாங்கும் வரி விவர அறிக்கைகளின் எண்ணிக்கை 1934-ல் 4·1 மில்லியன் டாலரிலிருந்து 1939-ல் 7·6மில்லியன் டாலராகவும், 1942-ல் 27·3 மில்லியன் டாலராகவும், 1945-ல் 42·7 மில்லியன் டாலராகவும், 1956-ல் 46·3 மில்லியன் டாலராகவும் உயர்ந்தது. போரின்போது வரிவிவர அறிக்கைகள் விரைவாக ஏறியதற்கு

வருமானங்கள் ஏறியது ஓரளவு காரணமாகும். ஆனால், இதற்குத் தலையாய காரணம் தனியாள் விலக்குகளைக் குறைத்ததாகும்.[10] கணவனுக்கும் மனைவிக்கும் தரப்பட்ட விலக்கு 1939-ல் 2,500 டாலரிலிருந்து 1942-ல் 1,200 டாலராகவும், 1944-ல் 1,000 டாலராகவும் சரிந்தது. இவ்வாறு போருக்கு முன்பு யாதொரு வரியும் செலுத்தாத இலட்சக்கணக்கான ஆட்கள் தற்பொழுது இவ் வரிக்கு உள்ளாயினர். ஆரம்ப வீதங்களும் 1940-ல் 4 சதவிகிதத்திலிருந்து 1942-ல் 19சதவிகிதமாகவும், 1944-ல் 23 சதவிகிதமாகவும் ஏறின. ஆகையினால் புதிதாக ஏராளமான மக்கள் வரிகளைச் செலுத்தும்படி நேரிட்டதோடன்றி, அவர்கள் வரலாற்றிலேயே மிகக் கூடுதலான தொடக்க வீதங்களையும் செலுத்தும்படி நேர்ந்தது. போருக்குப் பிற்காலத்தில் 'சாதாரண' வரிவிதிப்புக்கு நிலையாகத் திரும்பிவிட வேண்டும் என்ற முனைப்பினால் கணவனுக்கும், மனைவிக்கும் அளிக்கப்பட்ட பிடித்தம் 1,200 டாலராக உயர்த்தப்பட்டது; தொடக்க வீதங்களும் 20 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டன. இதற்கிடையில் பணவீக்கத்தினால் பிடித்தத்தின் உண்மையான மதிப்பு குறைந்தது. திருமணமான தம்பதிகளின் விலக்கு பற்றிய பணவாட்ட மதிப்புகள் சில குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு ஈண்டுத் தரப்படுகின்றன.

| ஆண்டு | விலக்குகளின் பண மதிப்பு | நுகர்வோரின் விலைக்குறியீடு (1947-49=100) | விலக்கின் பணவாட்ட மதிப்பு |
|---|---|---|---|
| 1939 | 2,500 டாலர் | 59·4 | 2,500 டாலர் |
| 1942 | 1,200 ,, | 69·7 | 1,023 ,, |
| 1944 | 1,000 ,, | 75·2 | 790 ,, |
| 1958 | 1,200 ,, | 123·5 | 577 ,, |

இதற்கு மாறாக வீத அளவுகோலின் உச்சியிலிருந்த மக்கள் தனியாள் விலக்குகளின் குறைப்பால் சிறிதளவே பாதிக்கப்பட்டனர். அவர்களின் மிக வுயர்ந்த இறுதிநிலை வீதம் 1939-ல் 79 சதவிகிதத்திலிருந்து 1944-ல் 94 சதவிகிதமாக ஏறி, மீண்டும் தற்போது 91 சதவிகிதமாகக் குறைந்துள்ளது. 1948-ல் புகுத்தப்பட்ட வருமானத்தைப் பிரிக்கும் விதியும், ஒரு கூட்டு வரி விவர அறிக்கையின்மீது பிரயோகமாகும் உச்ச வீதத்தை 200,000 டாலரிலிருந்து 400,000 டாலராக உயர்த்தியது.

சிறிய வருமானத்தைப் பெறுபவர்களுக்கு வரி வீதக் குறைப்பின் மூலம் 'ஏதாவது' செய்ய வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறது. இம் மட்டத்தில் ஒரு சிறிய மாறுதல் செய்தாலும் பெருத்த வருவாய் இழப்பு நேரிடும் என்ற எளிய உண்மையை நாம் அறியவேண்டி யிருக்கிறது. மொத்த வரிதாங்கு வருமானத்தில் ஒரு பெரும்பகுதி, எண்ணிக்கை மிகுந்த குறைந்த வருமானக் கும்பல்களிடையிருந்து கிடைப்பதே இதற்கு ஓரளவு காரணமாகும் (1958ஆம் ஆண்டில் வரிதாங்கு விவர அறிக்கைகளின் சரிக்கட்டிய மொத்த வருமானத்தில் 56 சதவிகிதம் 7,000 டாலருக்குக்[11] குறைந்த வருமானத்தையுடைய வருக்கத்தின் பேரில் விழுகிறதென்று அகவருவாய் வரிவிதிப்புக் கூட்டுக் குழு மதிப்பிட்டது). குறைந்த வருமானங்களின்மீது வீதங்களைக் குறைப்பது, பெரும் வருவாய் இழப்பு ஏற்படுவதற்கு இரண்டாவது காரணம். ஏது செய்தாலும் அது உடனே பெரும் வருமானங்களின் முதல் அலகுகளுக்கும் பிரயோகம் ஆகிறதென்பதே யாகும்.

குறைந்த வருமானங்களுக்கு வரியிலிருந்து நிவாரணம் அளிப்பதற்கு இரண்டு யோசனைகள் கூறப்படுகின்றன. ஒன்று தனியாள் விலக்குகளை உயர்த்துவதாகும். மற்றொன்று வரி விதிக்கப்பட்ட வருமானத்தின் மிகக் குறைந்த அடைப்புக்குப் பிரயோகமாகும் வீதத்தைக் குறைப்பதாகும். இரண்டும் ஒரே நோக்கத்தையே நிறைவேற்றுவதாகத் தோன்றினும், விலக்கை உயர்த்துவதைக் காட்டிலும் வீதத்தைக் குறைப்பது விரும்பத்தக்கது என்பதற்குக் காரணங்கள் உள. விலக்கை உயர்த்தினால் பல ஆட்களை முற்றும் வரிப்பட்டியலிலிருந்து அகற்றவேண்டும். ஒரு பெரும் வரிக்கருவியின் வாயிலாக நேரிடையாகக் கூட்டாட்சியின் அலுவல்களுக்கு நிதி தருவதில் பரவலாகக் குடிமக்கள் யாவரும் கலந்துகொள்ளவேண்டும் என்பதற்கு அரசியல் காரணங்களும், பொருளியல் காரணங்களும் இருக்கின்றன. வீதக் குறைப்பை விரும்புவதற்கு இன்னொரு காரணம் வரி செலுத்துவோர் யாவரும் ஒரே அளவு டாலர் ஆதாயத்தை அடைவார்கள். ஆனால், விலக்கை உயர்த்தினால் இதனால் வரி செலுத்துவதில் மிச்சப்படுவது பெரும் வருமானங்களுக்குக் கூடுதலாயிருக்கும். எடுத்துக்காட்டாக, மிகக் குறைந்த அடைப்பின் வீதம் தற்போதைய 20 சதவிகிதத்திலிருந்து 15 சதவிகிதமாகக் குறைக்கப்படுகிறதென்று வைத்துக்கொண்டால், அம் மிகக் குறைந்த அடைப்பில் இருக்கும் வரிதாங்கு வருமானத்தில் ஒவ்வொரு டாலரிலும் 5 சதம் வரிச் சேமிப்பு ஏற்படுகிறது. இதனால் வரி செலுத்துவோர் யாவருக்கும் ஒரே படித்தாக விலக்கு அளித்த

தாகவும் ஆகிறது. மற்ருேர் பக்கத்தில் தனியாள் விலக்கை 100 டாலர் உயர்த்திஞல், அடைப்பில் வரிதாங்கு வருமானத்தை யுடைய வரி செலுத்துவோர் ஒருவருக்கு 20 டாலர் வரிச் சேமிப்பு ஏற்படுகிறது. ஆஞல், 50 சத விகிதம் இறுதிநிலே வீதத் திற்கு உட்பட்டிருக்கும் ஒருவருக்கு 50 டாலர் வரிச் சேமிப்பு ஏற்படுகிறது.

நாம் இதுகாறும் கூறியதை மீண்டும் சுருக்கிக் கூறிவிட்டுத் தனியாள் வருமான வரி அமைப்பில் திருத்தம் செய்வதற்கான பெரிய சாத்தியக் கூறுகளே வருணித்துப் பின், மேற்செல்வோம். எளிமை, ஒரே படித்தன்மை, இதன் விளேவாக வீதக் குறைப்புகள்[12] இவையே நாம் எதிர்பார்ப்பது.

1. தற்போதைய சட்டத்தில் சில குறிப்பிட்ட கும்பல் களுக்குத் தரப்படும் வரிச் சலுகைகளே ஒரேயடியாக நீக்குவதன் மூலம் வருவாய் அதிகரிக்கும் என்று பெச்மான் மதிப்பிட்டிருக் கிருர். அவருடைய மதிப்பீடுகளிலிருந்தே நாம் தொடங்கு கிருேம். வருமானத்தைப் பிளவுபடுத்துவதஞல் திருமணமான தம்பதிகளுக்குக் கிடைக்கும் ஆதாயங்களே அகற்றவேண்டும். இங்ஙனம் அகற்றிஞல் அவருடைய மதிப்பீட்டின்படித் தனியாள் வருமானவரி மூலம் சுமார் 16 பில்லியன் டாலர் வருவாய், கூடுத லாக எதிர்காலத்தில் கிடைக்கும் எனத் தெரிகிறது. வீதக் குறைப்புகளேப் பற்றிப் பரிசீலிக்கும் பொழுது இந்த ‘வருவாய்த் திண்டை’ வைத்துக்கொண்டு நாம் ‘விளேயாடலாம்’ (play with).

2. பொதுக் கார்ப்பரேஷன் வருமான வரியை நீக்க வேண்டும் என்றும், பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் இலாபங்களின்மீது தனியாள் வருமான வரிவீதங்களேப் பிரயோ கிக்க வேண்டும் என்றும், நாம் யோசனே தெரிவித்தோம். ஹாலந்தின் மதிப்பீட்டின்படி இதன் மூலம் சுமார் 5 பில்லியன் டாலர் வருவாய் இழப்பு ஏற்படும் என்று நாம் எதிர்பார்க்கலாம். இதஞல் நம் ‘திண்டு’ 11 பில்லியன் டாலராகக் குறையும்.

3. உச்ச வீதங்களே 65 சதவிகிதமாகக் குறைத்தால், நாம் தாராளமாக மதிப்பிட்டபடி சுமார் 1 பில்லியன் டாலர் இழப்பு நேரிடும். மேலும், வீதக் குறைப்புகள் செய்வதற்குப் பாக்கி யிருக்கும் சுமார் 10 பில்லியன் டாலரையும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

4. தனியாள் விலக்குகளே உயர்த்திஞல், ஒவ்வொரு தடவை 100 டாலர் உயர்த்துவதஞலும் (வயது முதிர்ந்தோர், குருடர்,

ஈட்டும் இளைஞன், இவர்களை அகற்றியும், வருமானத்தைப் பிளக்கும் அனுகூலங்களை நீக்கியும், உச்ச வீதங்களைக் குறைத்தும்) வருவாய் இழப்பு, கிட்டத்தட்ட 2·8 பில்லியன் டாலரை நெருங்கும். இவ்வாறு தனியாள் விலக்கை 600 டாலரிலிருந்து 900 அல்லது 950 டாலராக உயர்த்துவதற்கு எஞ்சியுள்ள 10 பில்லியன் டாலர் திண்டைப் பயன்படுத்தலாம்.

5. விலக்குகளை உயர்த்துவதற்குப் பதிலாக மிகக் குறைந்த அடைப்புகளின் மீதுள்ள வீதங்களைக் குறைத்தால் (வருமானத்தைப் பிளக்கும் அனுகூலங்களை அகற்றுவதாக வைத்துக் கொண்டால்) வருவாய்களைச் சுமார் 1 பில்லியன் டாலரிலிருந்து 1·5 பில்லியன் டாலர் வரை ஒருவேளை குறைக்கலாம். இங்ஙனமாக 10 பில்லியன் டாலர் வருவாய்த் திண்டையும் முதல் அடைப்பிலேயே வீதக் குறைப்புகளுக்குப் பயன்படுத்தினால் 20 சதவிகிதத்திலிருந்து, சுமார் 13 சதவிகிதமாக முதல் அடைப்பு வீதத்தைக் குறைப்பது சாத்தியமாக இருக்கும். ஆனால், இதனால் இடைநிலையில் உள்ள வருமானங்களுக்கு யாதொரு பயனும் கிட்டாது. 2,000 டாலருக்கு மேற்பட்டுள்ள வரிதாங்கு வருமானத்தையுடைய மட்டத்திற்கு விதிக்கப்படும் இறுதிநிலை வீதங்கள் 13 சதவிகிதத்திலிருந்து 23 சத விகிதமாக ஒரே தாவில் தாண்டும் நிலை ஏற்படும்.

6. மிகவும் குறைந்த வருமானத்தையும், மிகவும் உயர்ந்த வருமானத்தையுமுடைய வரி செலுத்துவோர்களுக்கு மட்டும் வரிக் குறைப்புச் செய்து நிவாரணம் அளிப்பதற்குத் தன்னால் இயன்றதை எல்லாம் செய்வதற்கு எந்தக் காங்கிரசும் விரும்பாது. தற்போதையச் சட்டத்தின்கீழ் மொத்த வரிதாங்கு வருமானத்தில் பெரும்பகுதியும் குறைந்த அளவு வீதங்களுக்கு மேலாகவும், உச்ச அளவு வீதங்களுக்குக் கீழாகவும் இருக்கிறது. வரி வீதத்தில் குறைப்புச் செய்யவேண்டும் என்ற எந்த இயக்கத்திலும் இடைநிலை வருமானங்கள் பெறுபவர்களைப் புறக்கணிக்க முடியாது. பிடித்தங்களைப் பரவலாக அகற்றுவதற்கும், வருமானத்தைப் பிளக்கும் அனுகூலத்தை அகற்றுவதற்கும் நாம் யோசனை தெரிவித்தோம். இவ் யோசனைகளின் விளைவாக இந்த வருக்கத்தின்மீது பெரும் வரித்தாக்கு ஏற்படும். மேலும், அவர்களில் பலர் மூலதன ஆதாயங்களைக் கடுமையாக நடத்துவதினாலும் பாதிக்கப்படுவர். எல்லா வருக்கத்தினரிடையேயும் நிவாரணத்தைப் பங்கீடு செய்வதற்கு எளிய வழி, வரி செலுத்துவோர் யாவருக்கும் ஒரே சதவிகித வரிக் குறைப்புச் செய்வதேயாகும். எடுத்துக்காட்டாக மேலும் வரி வீதத்தில் நிவாரணம்

அளிப்பதற்கு 10 பில்லியன் டாலரைத் திண்டாக நம் கணக்கில் விட்டுவைத்தோம். உச்ச வீதங்களை 65 சதவிகிதமாகக் குறைப் பதனால் நேரும் வருவாய் இழப்பையும் விளக்கினோம். உச்ச வீதத்தைத் தவிர்த்து[13] மற்ற எல்லா வீதங்களையும் 20 சத விகிதம் குறைப்பதற்கு இந்த 10 பில்லியன் டாலர் இடங் கொடுக்கும் என்று தோராயமாக மதிப்பிடலாம். இதிலிருந்து மிக அடியில் இருக்கும் 20 சதவிகிதம் 16 சதவிகிதமாகவும், 30 சத விகிதம் 24 சதவிகிதமாகவும், 50 சதவிகிதம் 40 சதவிகிதமாகவும் குறையும் என்பது புலனாகும். இதனால் ஒவ்வொருவருக்கும் ஏதாவது வீதக் குறைப்பு ஏற்படும். ஆனால், வளர்வீத வீதம் இதனால் குறைகிறதென்றும், ஆகவே குறைந்த வருமானங்களுக்கு இதனால் ஒப்புமையில் பாதகமே என்றும் எதிர்வாதம் செய்யலாம்.

இதிலிருந்து சிறிது மாறுபட்டதே எல்லா வரி வீதங்களையும் (65 சதவிகித உச்ச வீதத்தைத் தவிர்த்து) குறிப்பிட்ட சதவிகிதப் புள்ளிகள் குறைப்பதாகும். இறுதிநிலை வருவாய் 10 பில்லியன் டாலராக இருப்பதால் பட்டியலில் உள்ள ஒவ்வொரு வீதத்தையும் 3 சதவிகிதப் புள்ளிகள் குறைக்கலாம். இதனால் 20 சதவிகித வீதம் 17 ஆகவும், 30 சதவிகித வீதம் 27 ஆகவும், 50 சதவிகித வீதம் 47 ஆகவும் குறையும். வீதப்பட்டியல் பூராவும் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தைக் குறைப்பதைக் காட்டிலும் இம் முறையினால் வளர்வீத வீதம் ஏறக்குறைய பேணப்படும்.

குறைந்த வருமானங்களைப் பிரத்தியேகமாக நடத்துவதுடன், எல்லோருக்கும் ஒரு வீதாச்சார வீதத்தில் புள்ளிக் குறைப்பையும் செய்து இணைப்பது மூன்றாவது சாத்தியக் கூறாகும். எடுத்துக் காட்டாக, உச்சவீதமான 65 சதவிகிதத்தைத் தவிர்த்து ஏனைய எல்லா வீதங்களையும் 2 சதவிகிதப் புள்ளிகள் குறைத்தாலும், முதல் அடைப்பில் பிரத்தியேகமாகக் குறைப்புச் செய்வதற்கு இன்னமும் இடமிருக்கிறது. முதல் அடைப்பின்மீது வீதத்தை 15 சதவிகித மாகக் குறைக்கலாம். இதனால் முதல் அடைப்பிலிருந்து இரண்டாவது அடைப்புக்குச் செல்லும் பொழுது, 15 சதவிகிதத்தி லிருந்து 20 சதவிகிதத்திற்குத் தாவுவதும், உச்ச அடைப்பில் 62 சதவிகிதத்திலிருந்து 65 சதவிகிதத்திற்குத் தாவுவதும் தவிர்க்கப்படும். வேறிடங்களில் சரிக்கட்டுதவன் மூலம் இவற்றை ஒருவேளை சுமுகமாகச் செய்யலாம்.

மேலே குறிப்பிட்ட வீதங்களைக் குறைக்கும் சாத்தியக்கூறுகள் விளக்கப்பட்டன. இச் சாத்தியக் கூறுகளிலிருந்து வரித்தளம் எளிதாக்கப்பட்டுப் பரவலாக்கப்பட்டால் கொள்கை முடிவுகளின்

வீச்சில் ஏற்படும் மாறுதல்கள் தெரியவரும். வரித்தள்த்தை ஏற்றுவதும், வீதத்தை இறக்குவதுமான மொத்தத் திட்டம், தற்போது வசூலாகும் தனியாள், கார்ப்பரேஷன் வருமானவரியி லிருந்து கிடைக்கும் வருவாய்களுடன் ஒப்பிடும் முகத்தான் சர்ச்சை செய்யப்பட்டது. ஆகவே இப் புரட்சிகரமான மாறுதல் களினுல் கிடைக்கும் வருவாயில் யாதொரு பெருத்த மாறுதலும் இருக்காது. இங்ஙனமாக வரிசெலுத்துவோர் அனைவரும் பொது வாக ஏற்கனவே செலுத்திய தொகைகளையே செலுத்திக்கொண் டிருப்பார்கள். ஆனுல், குறிப்பிட்ட தனியாட்கள் செலுத்தும் வரித்தொகைகளில் பெருத்த மாறுதல்கள் ஏற்படும. இம் மாறுதல் களினுல் சிலர் ஆதாயம் பெறுவர்; பிறர் இழப்பு அடைவர். ஆயினும் தனியாட்களின் இச் சரிக்கட்டுதல்கள் அனைத்தும் அதிக நீதியை வழங்கும் திசையை நோக்கியே செல்லும். ஏற்கனவே சலுகைகள் பெற்றிருந்த வருமானங்கள் அவற்றை இழக்கும்; ஏற்கனவே எதிராகப் பேதங்காட்டுகை செய்யப்பட்டவை இப்பொழுது பேதங்காட்டுகையினின்று நீங்கும்.

வருமானவரியின் அடிப்படையில் மாறுதல்கள் செய்வதற்குப் பதிலாக, வரித்தளத்தைப் படிப்படியாக அரிக்கும் பழைய பழக்கத்தைத் தொடர்ந்து மேற்கொள்ளலாம். ஒரே படித்தன்மை கைவிடப்பட்டதால் அதை மறுபடியும் மூடுவதற்கான வாய்ப்பு இருப்பதில்லை. நாளாவட்டத்தில் விரிசல் பெரிதாகி, முதலில் சலுகை அளிக்கப்பட்டவர்களுக்கின்றி ஏனையோருக்கும் இச் சலுகைகள் விஸ்தரிக்கப்படும். கூடுதலான வருவாய்கள் வேண்டி யிருப்பதால் வீதங்கள் உயர்த்தப்படுகின்றன(அல்லது பொருளா தார வளர்ச்சியினுல் தளம் விஸ்தரிக்கும் அளவுக்கு வீதங்கள் குறைக்கப்படுவதில்லை). யாருக்குத் தங்களுக்கென்றுத் தனியாக விரிசல்களை ஏற்படுத்திக்கொள்ள முடியவில்லையோ அவர் களுக்கும், வரியிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாதவர் களுக்கும், இவ் வீதங்கள் உயர்த்தப்படுகின்றன. வரியிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாதவர்களில் பிடித்த முறையில் அகப் பட்டவர்களும் இருக்கிருர்கள். மேலும், தளத்தைப் பிரத்தியேக மாகச் சில இடங்களில் அரிப்பதால் சட்டத்தை அமுலாக் குவதில் மிகப் பெரிய சிக்கல்கள் ஏற்படுகின்றன. அத்துடன் அமுலாக்குவதைத் திறனற்றதாகவும் ஆக்குகிறது. தனியாள் வருமானவரியின்கீழ் வரியிலிருந்து தப்பிப்பது ஒரு கற்பிதமான பிரச்சினையன்று. ஏனெனில், வருமானவரி சுயமதிப்பீட்டைப் பொறுத்திருக்கிறது. இங்ஙனம் வரிசெலுத்தாது தப்பிப்பதற்கு ஐரோப்பாக் கண்டத்திலும், ஆசியாவிலும் உள்ள பலநாடுகளிலும் வழக்காற்றில் உள்ள வருமானவரி விதிப்பு முறை சான்று பகர்

கின்றது. வரியிலிருந்து தப்பிப்பதில் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டு உத்வேகம் காட்டுவது தனியாள் வருமான வரித் திட்டம் முழுதுக்கும் மிகக் கடுமையான குழிபறிப்பதாகும். வருமான வரிவிதிப்புச் சீர்குலைந்தால், விற்பனைகளின்மீது தேய்வு வீத வரிகளே, வருமானவரிக்குப் பதிலாக விதிக்கப்படுகின்றன என்று உலகம் முற்றும் அநுபவம் காட்டுகிறது.

## தனியாள் வருமானவரியில் வாணிபச் சுழலுக்கு எதிரான சரிக்கட்டுதல்கள் (Counter-Cycle Adjustments in the Personal Income Tax)

வரிசெலுத்துவோரிடையே நியாயம் வழங்குவதற்காக மட்டுமன்றி, வாணிபச் சுழலுக்கு எதிராக வருமான வரியை இன்றியமையாது பயன்படுத்துவதற்கும், அதை அடிப்படையில் வலிவூட்ட வேண்டியிருக்கிறது. பொதுவாகப் பொருளாதாரத்தில் தனியாட்கள் செலவு செய்வதைப் பாதிப்பதற்குத் தனியாள் வருமானவரி ஒரு பெரும் வாய்ப்பை நல்குகிறது. நிரப்பு நோக்கங்களுக்காக (compensatory purposes) வரியைப் புத்திசாலித்தனமாக உபயோகிக்க வேண்டுமென்றால், இவ் வரியை எளிதாக விளக்குவதும், ஒரே மாதிரி சூழ்நிலைகளில் இருப்பவர்களுக்கு ஒரே படியாகச் சட்டத்தைப் பிரயோகம் செய்வதும் தலையாயதாகும். தளத்தை விளக்குவதில் உள்ள சிக்கலால், நிரப்பு நோக்கங்களுக்காக ஒரு மாறுதலின் பொருளியல் விளைவை மதிப்பிடுவது மிகச் சிக்கலானதாகவும், அத்துணை நம்பக்கூடியதல்லவாகவும் ஆகும். மேலும் இவ் வரி ஒரேபடித்தாக பிரயோகிக்கப்படுகிறது என்று தனியாட்கள் கருதினால்தான் வருமானவரியை ஒரு நிரப்பு அளவுகோலாகப் பொதுமக்கள் ஏற்றுக்கொள்வார்கள். அதாவது பணவீக்கத்திற்கு எதிரான கருவியாக வரிவீதங்களில் ஏற்றத்தைப் பயன்படுத்த வேண்டுமென்றால், வரிப்பளு அதிகரிக்கப்பட்ட வரி செலுத்துவோர், தாம் மட்டும் பணவீக்கத்துடன் போராடத் தனியாகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்றும் நினைக்க உரிமை இருக்கிறது. ஏனெனில், பணவீக்கத்திற்கு இவர்கள் மட்டும் பொறுப்பாளிகளல்லர். எடுத்துக்காட்டாக 1950-க்கும் 1960-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளின் முற்கூற்றில் கொரியப்போரின்போது ஏற்பட்ட மீள்போர்க்கருவிகளின் தொகுதி (rearmament) யினால் பொருளாதார வீக்கம் ஏற்பட்டது. அப்பொழுது தொழிலாளர் நிறுவனங்கள் கூலி ஏற்றமின்றிக் கூடுதலான வருமானவரி வீதங்களைப் பெருமனதுடன் ஏற்றுக்கொண்டன. ஆனால், ஒரு விற்பனைவரியைப் பணவீக்கத்திற்கு எதிரான கருவியாகப் பயன்படுத்தி அதன் வீதத்தையும் கூட்டியிருந்தால் அந் நிறுவனங்கள் அவ்வளவு எளிதாக அதை ஏற்றுக்கொண்டிருக்கமாட்டா.

விற்பனை வரியைப் பயன்படுத்தியிருந்தால், பணவீக்கத்திற்கு எதிரான வரிவிதிப்பின் பளுவைப் பெரிதும் ஒரு குறிப்பிட்ட வருக்கத்தின் மீது சுமத்த முயல்வதாக, தொழிலாளர் நிறுவனம் இக் குறைந்துசெல் வீதவரிக்கு விளக்கம் தந்திருப்பார்கள். இதே போன்று. சிறப்புச் சலுகைகளினுல் வருமானவரி மேலும் அரிக்கப் படுமானுல், நிரப்பு நோக்கங்களுக்காக இக் கருவியைப் (வருமான வரியைப்) பயன்படுத்துவதில் அவநம்பிக்கை ஏற்படும்; ஏற்பட்ட பின் இவ் வரியைப் பயன்படுத்துவதும் அவ்வளவு சாத்தியமாக இராது.

வாணிபச் சுழலின் நிலைபேறு முடைகளுக்கு ஏற்ப வருமான வரிப் பொறுப்புகளைத் திருத்தவேண்டுமெனில், நடவடிக்கை மேற்கொள்ளுவதற்கு மூன்று சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. வீதங்களை ஏற்றலாம் அல்லது இறக்கலாம். தனியாள் விலக்குகளை உயர்த்தலாம் அல்லது தாழ்த்தலாம்; அல்லது சில மாநிலங்களைப் பின்பற்றி தற்காலிகமாக வரியில் குறிப்பிட்ட சதவிகிதத்தை ஏற்றலாம் அல்லது இறக்கலாம். இறுதியில் கூறிய முறையின்படி கணக்கிடப்பட்ட வரியில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் கூட்ட வேண்டும் அல்லது குறைக்க வேண்டும். இதனுல் வரி அளவையும் கெட்டியாக ஊறுபடாமல் இருப்பதோடு, இம் மாறுதலின் தற்காலிகமான தன்மையும் வலியுறுத்தப் பெறும். அளவையில் மாறுதல் செய்யாததால், தரவீதங்கள், செயல் முறைகள் இவை மக்களுக்குப் பழக்கப்பட்டுவிடுகின்றன. ஒரு காலக்கூறளவும் இது விரும்பத்தக்கது. ஏனெனில், இதனுல் எல்லோரும் சட்டத் திற்கு இணங்க நடப்பதும் எளிதாகிறது. நிலைமைகள் மாறுவதற் கேற்ப வீதங்களிலும், விலக்குகளிலும் மாறுதல்கள் செய்வது ஒப்புமையில் கடினமாகும். சட்டமியற்றுதல் சிக்கலாக இருப்பதும், குறைந்த வீதங்களையும் அல்லது உயர்த்திய விலக்குகளையும் வரிசெலுத்துவோர்கள் ஊன்றிய உரிமைகளாகக் கருதுவதுமே இதற்கான காரணங்களாகும். வேற்றுமைப்படுத்திய சதவிகித இறக்கங்கள் அல்லது ஏற்றங்களை வீதப்பட்டியலில் பயன்படுத்தி, வரிப் பளுவுகளில் ஒரு வேற்றுமைப் படுத்திய நிரப்பு மாறுதலை நிறைவேற்றுவதும் சாத்தியமே. தற்காலிகமாக நுகர்வுக்கு ஆதரவு கொடுப்பதற்காக ஒரு வரியில் சரிகட்டுதல் செய்வது இவ்விதச் சூழ்நிலைகளினுல் இன்றியமையாததாகிறது என வைத்துக் கொள்வோம். அளவுகோலின் மறுகோடியில் வீதங்களைக் குறைப் பதன் வாயிலாக இவ்விதமான ஒரு சரிக்கட்டுதல் நடக்குமென்று ஒருவர் சாதாரணமாக எதிர்பார்க்கலாம். இதனுல் வருமானங் களின் பெரும்பகுதி வரிப்பொறுப்புகள் பாதிக்கப்படுவதுடன், நுகர்வில் அதிக நாட்டம் கொண்டவர்களும் பாதிக்கப்படுவார்கள்.

யாரார்மீது வரி குறைவாக இருக்கின்றதோ அவர்களுக்குக் கணிச மான விகிதம் இறக்கம் அளிப்பதன் மூலமும் இதை நிறைவேற்ற லாம்.

பொதுவாகத் தனியாள் வருமானவரி, நிரப்பு சரிக்கட்டல் களுக்குச் சிறப்பாக வளைந்து கொடுக்கிறது. இந் நிரப்பு சரிக் கட்டுதல் வகைகள் பரவலாகவும், மூலத்தில் வேற்றுமைப்பாடின்றி செலவு செய்யக்கூடிய வருமானத்தைப் பாதிக்கும் முறையிலும் அமைக்கப்பட்டுள்ளன. அதாவது தனியாள் வருமான வரித் தாக்கின் மாறுபாடுகள் பொதுவாகச் செலவு செய்யும் வருமா னத்தைப் பாதிக்கலாம். பல்வேறுபட்ட பருமன்களையுடைய வருமானங்களின்மீது பல்வேறுபட்ட தாக்கை உடையதாகவும் வருமான வரியைச் செய்யலாம். இருந்தாலும், குறிப்பிட்ட வருமானக் கால்களின்மீது குறிப்பிட்ட தாக்கையுடையதாகச் செய்வதற்கு வருமான வரி அத்துணை ஏற்ற கருவியன்று. இவ் வதிகாரத்தில் வருமான வரியை வலிவூட்டுவதற்குச் சில யோசனை கள் தெரிவிக்கப்பட்டன. இவை இவ் வரியைக் குறிப்பிட்ட உபயோகங்களுக்கு மட்டும் பயன்படுத்தும் வாய்ப்புகளைக் குறைக்கும். ஒரு கார்ப்பரேஷன் முதலீட்டு வீக்கத்தை வளர்ப் பதோ அல்லது கட்டுப்படுத்துவதோ விரும்பத்தக்கதாயிருக்கும் பொழுது, கார்ப்பரேஷன் வருமானவரியை நீக்கிவிட்டால் ஒரு வரையறைக்குட்பட்ட நிரப்புப் பயனுக்கு உபயோகப்படும் கருவியை அழித்ததாகும். பொதுவானதாகவும், ஒரே படித் தாகவும், எளிமையாகவும் எத்துணை வரித்தளம் இருக்கின்றதோ, அத்துணைப் பொருளாதாரத்தின் குறிப்பிட்ட பகுதிகளை வரிமூலம் நடத்துகையில் மாறுதல் செய்வதற்கு வாய்ப்புகள் சிறிதே இருக்க முடியும். ஆயினும், இதை ஒரு பெரிய இழப்பு என்று கூற முடியாது. மூலத்தில் வேற்றுமைப்பாடு செய்யாது நாம் செலவழிக்கும் வருமானத்தைப் பொதுவாகப் பாதிக்கும் வரி நடவடிக்கையினால், செயல் முறையில் பல நிரப்புத் தேவைகளையும் செய்யலாம். வரி மாறுதல்களினால் மிகக் குறுகிய நோக்கங்களை நிறைவேற்ற வேண்டும் என்றால், தற்போது அமுலில் இருக்கும் வரிகள் வாயி லாகவோ, அல்லது மிக நெருக்கடியான நிலையில் ஒரு பிரத்தியேக வரியை விதிப்பதன் வாயிலாகவோ அவற்றை நிறைவேற்றிக் கொள்ளலாம்.

வேறெந்த ஒற்றை ரக வரியையும்விடத் தனியாள் வருமான வரிக்குக் கடந்த நான்கு அதிகாரங்களில் நாம் அதிகக் கவனம் செலுத்தினோம். இதற்குக் காரணம் தற்போது செயல்முறையில் இருக்கும் வரிகளில் மிகத் தலையாயது வருமான வரி என்பதா

லேயே ஆகும். மேலும், மாநிலங்களில் அதன் முக்கியத்துவமும் அதிகரிக்க வாய்ப்பு இருக்கிறது. இது தவிர வருவாய்க் கருவிகளில் ஒரு பெரிய நிதியைத் திரட்டும் கருவியாகவும் பயன்படுத்தக்கூடிய நிலையில் இவ் வரியின் தன்மைகள் இருக்கின்றன. ஆகவே, ஒரு சரியான வரி முறையில், தனியாள் வருமான வரி பெரிய மையக் கொத்தளமாக இருக்கும். ஏனைய வரிகள் தனியாள் வருமான வரிக்குப் பக்கபலமாக இருக்கும். குறிப்பிட்ட நுகர்வைக் கட்டுப்படுத்தும் நோக்கங்களுக்காகவோ, குறிப்பிட்ட வருவாய் நோக்கங்களுக்காகவோ அல்லது பிரிக்கப்பட்ட அரசியல் இறைமை (divided governmental sovereignty) காரணமாகவோ இவ் வரிகளைப் பயன்படுத்துவது விரும்பத்தக்கதாகவோ அல்லது இன்றியமையாததாகவோ இருக்கலாம்.

## மேலும் படித்தற்கு உரியவை

எப்ஃ. ஜே. ஆர். வில்லியம் ஹெல்மத் (Hellmuth, William F., Jr., Erosion of the Federal Corporation Income Tax Base, Joint Committee on the Economic Report, Federal Tax Policy for Economic Growth and Stability (Papers Submitted by Panelists Appearing before the Subcommittee on Tax Policy), Washington, 1955, pp. 886—916.

இவ் வதிகாரத்தில் கூறியதைத் தொடர்ந்து இக் கட்டுரையிலுள்ள விஷயத்தைப் படிப்பது அத்துணைப் பொருத்தமல்லவாணுலும், கீழே குறிப்பிடப்பட்ட பெச்மானின் கட்டுரையைப் படிக்கும் யாரும் தன்னுடைய ஆராய்ச்சியை இக் கட்டுரையைப் படிப்பதன் மூலம் முடித்துக்கொள்ள விரும்புவார். அதில் கூறப்பட்ட அமிசங்கள் சில இதில் மீண்டும் விவரிக்கப்பட்டுள்ளன.

ஜோசப்ஃ ஏ. பெச்மான் (Pechman, Joseph A.), 'What would a Comprehensive Individual Income Tax Yield ?', in Committee for Economic Development, Essays in Federal Taxation, 1959.

1957 மார்ச் திங்களில் National Tax Journal-ல் வெளிவந்த 'தனியாள் வருமான வரியின் அரிப்பு' (Erosion of the Individual Income Tax) என்ற பெச்மான் கட்டுரையின் மறுதிருத்தமே இது. தனியாள் வருமானத் தளத்தில் ஒரு காலக் கூற்றில் அரிப்பு ஏற்படுவதை இது அளவிடுகிறது. கூடுதல் நியாயமும், கூடுதல் வருவாயும் கிடைக்கும் வகையில் திருத்தங்களைச் செய்வதற்கு இக் கட்டுரை யோசனை கூறுகிறது.

லூயி ஷீரே (Shere, Louis), Federal Tax Revision to Promote Economic Growth and Stability என்ற தலைப்பில் சான்று பகர்ந்தவை......Hearings...Joint Economic Committee: January, 1957, Economic Report of the President, Washington, 1957, pp. 424—66.

கூட்டாட்சி வரி முறையில் என்ன மாறுதல்கள் செய்ய வேண்டும் என்பதைப் பற்றிய மிக விரிவான அறிக்கை. மேற் பிரிவில் பெச்மானல் ஆராயப்பட்டப் பிரச்சினையையே பெரிதும் ஷீரும் ஆராய்கிறார். மேலும் சாத்தியமான வீத மாறுதல்களையும், கார்ப்பரேஷன் வரியிலும், ஆயத் தீர்வைகளிலும் சரிக்கட்டுதல் செய்வதையும் தன்னுடைய கட்டுரையில் ஷீரே சேர்த்திருக்கிறார்.

## 19ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. செயல்முறையில் ஒரு குறுகிய எல்லையில், வருமானங்களைப் பொறுத்த அளவில் பிற வரிகளைக் கிட்டத்தட்ட வளர்வீதமாகச் செய்ய முடியும் அல்லது வரித்தளத்தைப் பொறுத்த அளவில் அவற்றை வளர்வீத மாகச் செய்ய முடியும். ஆனால், இங்ஙனம் செய்வதற்கு அவற்றை இனம் வாரியாகப் பிரித்துத் தனிப்பயன் வரிகளை விதிக்க முடியும். ராம்பிளர்கார் களின் (Ramblers) மீது 5சதவிகிதமும், காடில்லாக் கார்களின் மீது(Cadillacs) 25 சதவிகிதமும் ஒரு விற்பனைவரி விதிப்பது சாத்தியமே. ஆனால், இதனால் சிக்கல்கள் விளையக்கூடும். இன்றியமையாதனவல்லாத இறக்குமதிகளின் நுகர்வைக் குறைப்பதில் பிரிட்டிஷ் வாங்கும் வரி (விற்பனை வரி) வெற்றி பெற்றுள்ளது. இறக்குமதிச் செலவுக்கு ஏற்றவாறு அவ் வரியை வளர்வீத மாகச் செய்யவும் முடியும். அவருடைய வருமானக் கும்பலின் தரம் என்று கருதப்பட்ட பொருள்களை வாங்குவதினின்றும் அவர் வேண்டுமென்றே பிறழ்ந்தால், இவற்றில் (விற்பனை வரி அல்லது வாங்கும் வரி) ஒன்றும் உண்மையில் தனியாள் வாங்குவோரின் வருமானத்திற்கும் அவர் செலுத்த வேண்டிய வரித்தொகைக்கும், தொடர்பு கற்பிக்க முடியாது.

2. எவ்வளவு சதவிகிதம் தேய்மானத்திற்காகப் பிடித்தம் செய்து கொள்ளலாம் என்பதற்கு ஒரு வரம்பு இருக்கிறது. தேய்மானப் பிடித்தம் இன்றியே கணக்கிடப்பட்ட வரி தாங்கு வருமானத்தில் 50 சதவிகிதத்திற்கு மேல் இப் பிடித்தம் இருக்கக்கூடாது. ஆயினும், இதனால் எத்தனை ஆண்டு களுக்கு இச் சதவிகிதத்தைப் பிரயோகிக்கலாம் என்பதை இவ் விதி கட்டுப் படுத்தவில்லை.

3. கார்ப்பரேஷன் வரியின் கீழ் இஃது ஒரு 'பிடித்தமே'யன்றி 'விலக்' கன்று. பதிவு செய்யப்படாத நிறுவனங்களுக்கு இது மொத்த வருமானத்தி லிருந்து கழிக்கப்படுவதால் வரிவிலக்கை ஒத்திருக்கிறது.

4. உலோக டிபாசிட்டுகளைப் பொறுத்த அளவில் அவற்றைக் கண்டு பிடிப்பதற்கும், அபிவிருத்தி செய்வதற்கும் ஆகும் செலவு இதே போலத் தான் நடத்தப்படுகிறது.

5. ஜோஸப்ஃ ஏ. பெச்மான் (Joseph A. Pechman) எழுதிய Erosion of the Individual Income tax, National Tax Journal, March, 1957, p. 7ஐப் பார்க்க. இவ் வதிகாரத்தில் பொதுவாகக் கூறிய பொருளுக்கு பெச்மானின் கட்டுரை சிறந்த துணைப் படிப்பாகும்.

6. Statistics of Income......1956, Individual Income Iax Returns, pp. 45-49.

7. 'Erosion of the Individual Income Tax', National Tax Journal, March, 1957, pp. 24-25.

8. கார்ப்பரேஷன் வரியில் மாறுதல்களினுல் விளையும் வருவாய் இழப்பைப் பற்றிய ஹாலந்தின் மதிப்பீட்டை 249 ஆம் பக்கத்தில் காண்க. 1956 ஆம் ஆண்டைத் தளமாகக் கொண்டு ஹாலந்து, பெச்மான் இருவரும் மதிப்பிட்டிருப்பதால், இங்ஙனம் கழிப்பது சரியானதே.

9. Statistics of Income...1956, Individual Income Tax Returns p. 44.

10. பிடித்தங்கள் செய்வதை நிறுவியதால் ஏற்கனவே வரியிலிருந்து தப்பிய சில வரிவிவர அறிக்கைகள் புதிதாகச் சமர்ப்பிக்கப்பட்டன என்பதில் ஐயமில்லை.

11. Joint Committee, Alternative Problems for Tax Relief for Individuals, Washington, 1958, p. 1.

12. வரிமாறுதல்களால் வருவாய்களின்மீது ஏற்படும் விளைவுகளை மதிப்பீடு செய்வது நமது காலை வாரிவிட்டாலும் விடும். இவ்வாறு மதிப்பீடு செய்வதில் மிகச் சிலரே வல்லுநர்கள். இதில் பல சங்கடங்கள் இருப்பதனுல் வல்லுநர்களும் தங்கள் மதிப்பீடுகளைத் தங்களுக்குமட்டும் தெரிந்தனவாகவே, வைத்துக்கொள்ள விரும்புகின்றனர். ஒரு பொருளாதாரத்தில், மொத்தத் தனியாள் வருமானத்தில், கூடுமானவரை ஒரு குறுகிய வீச்சுக்கு மட்டுமே, ஒரு குறிப்பிட்ட வரி மாறுதலினுல், வருவாயில் ஏற்படும் விளைவைப் பற்றிய மதிப்பீடு பொருத்தமானதாயிருக்கும் என்பது யாவரும் அறிந்ததே. இம் மதிப்பீடும் இவ் வருமானத்தின் ஒரு குறிப்பிட்ட பங்கீட்டின் தோரணைக்கே பொருந்தும். 1950-க்கும், 1960-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளின் பிற்பகுதியில் நிலவிய வருமான மட்டங்களுக்கே இங்கே பாடப்பகுதியில் தரப்பட்டுள்ள மதிப்பீடுகள், திட்டவட்டமாக வேறுவிதமாகக் குறிப்பிட்டிருந்தால் ஒழிய, தோராயமாகப் பொருந்தும் என்பதை நாம் மனத்தில் இருத்தவேண்டும். பல்வேறுபட்ட வரி மாறுதல்களினுல் வருவாயில் ஏற்படும் விளைவுகளைப் பற்றி வெளியிடப்பட்ட மதிப்பீடுகளுக்கு, Tax Foundation, Tax Review, May, 1957 பத்திரிகையில் வெளியிட்ட 'What Next in Taxes?' என்ற கட்டுரையைப் பார்க்க.

13. 1958-ல் தனியாள் வருமான வரியிலிருந்து 34·7 பில்லியன் டாலர் கிடைத்தது. மேற்கூறிய 1, 2, 3 பத்திகளில் தெரிவித்த யோசனைகளுக்கு இடமளித்த பின்பு, இத்தொகை சுமார் 10 பில்லியன் டாலர் கூடுதலாக அல்லது 44·7 பில்லியன் டாலராக இருக்கும் என்று நாம் மதிப்பிடுகிறோம்.

இந்த 10 பில்லியன் டாலரையும் மேலும் வரிநிவாரணத்திற்குச் செலவிட்டு வருவாயைப் பழையபடி 34·7 பில்லியன் டாலருக்கே கொண்டுவர வேண்டு மென்ருல், பரவலாக்கப்பட்ட தளத்தில் வருவாய்களில் 22.5 சதவிகிதம் குறைப்பு செய்யவேண்டும். இவ்வாறு வரி செலுத்துவோர் ஒவ்வொரு வருக்கும் சுமார் 20 சதவிகிதம் வரிகுறைப்பை அநுமதித்தால், மொத்த வருவாய்களும் அதே வீதாசாரத்தில் குறையும்.

# 20. விற்பனை வரிகள்

**விற்பனை வரிகளின் ரகங்கள்**

பண்டங்களை விற்கும் பொழுதோ அல்லது நுகரும் பொழுதோ விதிக்கப்படும் வரிகள் பலதிறப்பட்டனவாகும். அவற்றில் சில நுகர்வோரின்மீது விழ வேண்டும் என்ற தெளிவான எண்ணத்துடனேயே விதிக்கப்படுகின்றன. மற்றவை விற்பவர்கள்மேல் விழ வேண்டும் என்ற கருதினாலும், பொதுவாகப் பண்டங்களை வாங்குவோர்களின்மீது அவை புரட்டப்படுகின்றன. வரியின் தளம் விற்பனை (அல்லது வாங்குவது)யின் தொகையைப் பொறுத்திருக்குமானால் விளையுள்களை விற்போர் அல்லது வாங்குவோர்மீது விதிக்கப்பட்ட வரிகள் அனைத்தையும் விற்பனை வரிகள் என நாம் கொள்வோம். விற்கும் பொழுதோ அல்லது உற்பத்தியின் பொழுதோ இவ் வரி விதிக்கப்படலாம். பல மாநிலங்கள் தொழில் நிறுவனங்களின்மீது போடும் வரிகள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன. இவ் வரிகள் 'தொழிலை நடத்தும் சலுகை'யின்மீது போடப்படும் வரிகள் என அழைக்கப்படுகின்றன வானாலும் இவை விற்பனைத் தொகையின்மீதே விதிக்கப்படுகின்றன. இவ்விதத் 'தொழில்' வரிகள் (business taxes) உண்மையில் விற்பனை வரிகளேயாகும். நாம் தனித்தனியே (1) சுங்கத் தீர்வைகள், (2) உற்பத்தி விற்பனை அல்லது குறிப்பிட்ட பண்டங்களைப் பயன்படுத்துதல் இவற்றின்மீது விதிக்கப்படும் வரிகள், (3) விற்றுமுதல் அல்லது பொது விற்பனை வரிகள், (4) சில்லறை விற்பனை வரிகள் ஆகிய இவற்றைப் பற்றி ஆராய்வோம்.

**சுங்கத் தீர்வைகள் :** ஒரு நாட்டில் இறக்குமதியாகும் பண்டங்களின்மீது விதிக்கப்படும் சுங்க வரிகளும், ஒருநாட்டிலேயே உற்பத்தி செய்யப்பட்டு விற்பனை செய்யும் பண்டங்களின்மீது விதிக்கப்படும் வரிகளும் தம்முள் ஒத்திருக்கின்றன. சுங்கவரிகளுக்கும், ஆயத்தீர்வைகளுக்கும் பொருளியல் அமிசத்திலும், இயங்குமுறை அமிசத்திலும்

ஒற்றுமை இருக்கிறது. இறக்குமதி செய்வோரிடமிருந்து சுங்க வரிகள் தண்டப்படுகின்றன. பண்டங்கள் நாட்டினுள் நுழையும் பொழுது சுங்கவரிகள் தண்டப்படுகின்றன. அதனால் இவ் வரி அவனுடைய பண்டங்களின் ஆக்கச் செலவின் ஒரு கூறுகிறது. பொதுவாக இத் தீர்வை போடப்படுவதின் நோக்கம் ஒரு பண்டத்தின் இறக்குமதியைக் குறைப்பதேயாகும். வரி விதிப்பதால் விலை ஏறுகிறது. விலை ஏறினால் இறக்குமதி குறையலாம். ஆனால், ஒரு உள்நாட்டு விற்பனை வரியை விதிப்பதன் நோக்கம் வருவாயைத் திரட்டுவதேயாகும். சுங்கத் தீர்வைகள் மிகக் கூடுதலான அளவு இருந்தாலொழிய இறக்குமதியை முற்றும் தடுத்து நிறுத்த முடியாது. ஆகவே ஒரு தொழிலுக்குப் பாதுகாப்பு அளிப்பதன் நிமித்தமாக சுங்கவரி விதிக்கப்பட்டிருந்தாலும், இவ் வரியிலிருந்து உடனிலேயாக வருவாயும் கிடைக்கிறது. அதே போன்று உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யப்பட்ட பண்டத்தை விற்பனை செய்யும்பொழுது ஒரு வரி விதிக்கப்பட்டாலும் அவ் வரியில் விற்பனையைக் குறைப்பதற்கான இன்றியமையாத அமிசங்களும் உள்ளன.

பிறநாட்டுப் போட்டிக்கு எதிராக, உள்நாட்டு மார்க்கட்டில், உள்நாட்டுத் தொழிலுக்கு முக்கியமாகப் பாதுகாப்பு அளிக்கும் நோக்கத்துடனேயே சுங்கத்தீர்வைகள் விதிக்கப்பட்டாலும் சில சமயம் வருவாய் திரட்டும் நோக்கத்திற்காக மட்டும் சுங்கத் தீர்வைகள் விதிக்கப்பட்டன; விதிக்கப்படக்கூடும். வருவாயைத் திரட்டுவதுதான் நோக்கம் என்றால், இறக்குமதியான பண்டத்தை வாங்குவோருக்கு விலையில் யாதொருவிதப் பிரதிகூலத்தையும் இவ் வரி விளைவிக்கக் கூடாது. வருவாய் சுங்கவரியின் (revenue tariff) நோக்கம், பெரும் வருவாயை உச்சக்கட்டம் ஆக்குவதே. அதாவது மிக உச்ச அளவு அலகுகள் விற்குமாறு ஒவ்வொரு அலகின்மீதும் வரிவிதித்தால், உள் நாட்டில் இப் பண்டம் உற்பத்தி செய்யப்படாவிடில் தீர்வை வீதம் ஒப்புமையில் குறைவாகவே இருக்கும். ஒரு பண்டத்திற்கு ஒப்புமையில் தேவை நெகிழ்ச்சியுள்ளதாக விருந்தால் தீர்வை வீதம் குறைவாக இருக்கும். ஒப்புமையில் தேவை நெகிழ்ச்சியாக உள்ள பண்டங்களின் மீது கூடுதலான தீர்வையை விதித்தால் அதனால் இறக்குமதியாகும் அளவில் பெருத்த குறைப்பு ஏற்பட்டு மிக உச்ச அளவு வருவாய் கிடைக்காமல் போகும். பண்டத்திற்குத் தேவை மிகவும் நெகிழ்ச்சியில்லாததாக இருந்தால், உயர்ந்த தீர்வை வீதங்களால் இறக்குமதியாகும் அளவு மிகக் குறைவாகவே பாதிக்கப்படும்.

ஆயினும், உள்நாட்டிலேயே ஒரு பண்டம் உற்பத்தி செய்யப் பட்டு இறக்குமதியும் செய்யப்படுவதாக நாம் ஓர் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். அஞ்ஞான்று சுங்கவரியை வருவாயைத் திரட்டுவதற்காக் மட்டும் பயன்படுத்த வேண்டும் என்ருல், உள் நாட்டில் உற்பத்தியாகும் பண்டங்களின்மீது சுங்கவரிக்குச் சமமான விற்பனைவரி ஒன்றைப் போடுவது இன்றியமையாத தாகும். இவ்வாறு வருவாயைத் திரட்டும் நோக்கத்துடன் மட்டும் விதிக்கப்பட்ட ஒரு சுங்கத் தீர்வையுடன், உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யப்பட்டு விற்பனையாகும் பண்டத்தின்மீது சுங்க வரிக்குச் சமமாக ஒரு வரியையும் போடுவது விரும்பத்தக்கதாகும். அதேபோன்று உள்நாட்டில் உற்பத்தியாகி விற்பனையாகும் பண்டத்தின் மீது ஒரு வரியைப் போட்டு வருவாயைத் திரட்ட வேண்டுமென்ருல், பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட அதே பண்டத்தின்மீது விற்பனை வரிச்குச் சமமான ஒரு சுங்கத் தீர்வை விதிப்பதும் அவசியமாகும். தன்னுடைய 'தடையிலா வாணிபக்' கொள்கைக்கு முற்றும் இணங்க, இங்கிலாந்து, முதல் உலகப் போருக்கு முன்பு இம் முறையில் சில இறக்குமதி வரிகளை விதித்தது.

வருவாய் நோக்கத்திற்காகவோ அல்லது பாதுகாப்பு நோக்கத்திற்காகவோ, எந் நோக்கத்திற்காகச் சுங்கத் தீர்வை விதிக்கப்பட்டாலும், அதுவும் ஒரு பண்டத்தின் விற்பனையின்மீது போடப்பட்ட வரியேயாகும். சுங்கவரியின் புரட்டுகை உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டு விற்பனையாகும் பண்டங்களின்மீது விதிக்கப்படும் வரிகளின் புரட்டுகையைப் போன்றதே. இதனுல் பிற விற்பனை வரிகளின் நிலைப்பாக விளைவுகளைப் பொறுத்து என்னென்ன முடிவுகளுக்கு நாம் வந்தோமோ அம் முடிவுகள் சுங்கத் தீர்வைகளுக்கும் பொருந்தும்.

**உற்பத்தி, விற்பனை அல்லது பண்டங்களின் நுகர்வின் மீதான வரிகள் :** இத் தலைப்பின் கீழ் வரித் திட்டங்களின் ஒரு கதம்பத் தொகுதியை நாம் காண்போம். இத் தொகுதியில் அடங்கிய வரிகள் தோற்றத்தில் வேறுபட்ட ரகங்களைச் சேர்ந்தனவாகக் காணப் பட்டாலும், அவற்றுக்குப் பொதுவான அடிப்படை அமிசங்கள் இருக்கின்றன. இப் பொதுவான அமிசங்களாவன : (1) இவ் வரிகள் சிறப்பாக ஒரு தெரிந்தெடுக்கப்பட்ட விளையுள்கள் பட்டியல் அல்லது விற்பவர்கள் பட்டியலுக்குப் பிரயோகிக்கப்படுகின்றன. (2) விளையுளை வாங்குவோர்களின் பேரில் முற்பட்டுப் புரட்டத் தக்க விதமாக இவ் வரிகள் பிரயோகிக்கப்படுகின்றன. இப் புரட்டு கைக்கு விலை ஊர்தியாகப் பயன்படுகிறது. இவ்வாருக இவையும்

விற்பனைகளின்மீது விதிக்கப்பட்ட வரிகளே ஆகும். இவ்வகை வரிகளில் மூன்று தொகுதிகளைப் பற்றிச் சுருக்கமாக நாம் விவரிப்போம். அவையாவன: குறிப்பிட்ட தொழில்களின் மொத்த வரவுகளின்மீது விதிக்கப்படுவன, குறிப்பிட்ட பண்டங்களின் நுகர்ச்சியின்மீது விதிக்கப்படுவன, குறிப்பிட்ட பண்டங்களின் விற்பனையின்மீது விதிக்கப்படுவன.

மாநிலத் தொழில் வரிவிதிப்புப் பொதுத்திட்டத்தின் ஒரு கூறாக, தொழில்களின் மொத்த வரவுகளின்மீது சில மாநிலங்கள் விதிக்கும் வரிகள் முதல் தொகுதியில் அடங்கும். பல தடவைகளில் இவ்விதத் 'தொழில் வரிகள்' (business taxes) பண்டம் அல்லது விற்பனை வரிகளாகக் கருதப்படுவதில்லை. அவைகள் தொழில்களின் நிகர வருமானங்களிலிருந்து செலுத்தப்பட வேண்டியவை என்று கருதப்படுகின்றன. எடுத்துக்காட்டாக பல்வேறுபட்ட தொழில்களுக்குப் பல்வேறுபட்ட வரிகள் விதிக்கப் படுகின்றன. இவ் வேறுபட்ட வரிகள் பல மாநிலத் தொழில் வரிகளில் இடம் பெற்றுள்ளன. தங்கள் நிகர வருமானங்களின்மீது விதிக்கப்பட்ட தொழில்வரிகளைப் பொதுவாகக் கார்ப்பரேஷன்கள் செலுத்தவேண்டும். அவைகளுக்கு வரிசெலுத்தும் வாணிபத் திறன் இருக்கிறது என்பதனுலோ அல்லது தாங்கள் பெற்ற ஆதாயங்களுக்குப் பதிலாகவோ, கார்ப்பரேஷன்கள்மீது வாணிப வரிகள் போடுவது சரியானதே என்று கருதப்படுகிறது. ஆனுல், பதிவு செய்யப்படாத பலவகைத் தொழில்களுக்கு ஒரே படித்தான கணக்கு முறைகள் இல்லை. ஆகவே, அவற்றின் நிகர வருமானமும் ஒரே படித்தான முறைகளால் நிர்ணயம் செய்யப்படுவதில்லை. அவற்றின்மீது விதிக்கப்படும் வாணிப வரிகள் பன்முறையும் அவற்றின் மொத்த வரவுகளைக் கொண்டோ அல்லது மொத்த வருமானத்தைக் கொண்டோ அளவிடப்படுகின்றன. பொது வசதிகளின் மீது (public utilities) மாநிலங்கள் விதிக்கும் வாணிப வரிகள் பொதுவாக அவற்றின் மொத்த வரவுகளின்மீதே விதிக்கப் படுகின்றன. ஆனுல், மொத்த வரவுகளின்மீதான வரிகளை, இலகுவில் வெளிப்பாட்டின் ஒவ்வொரு அலகின் மாறுன செலவுகளாக ஒதுக்கீடு செய்து, விலையுடன் கூட்டி முற்பட்டுப் புரட்டலாம். இவ்வாறு ஒரு குறுங்காலக் கூற்றில் நிகரவருமானத்தின்மீது விதிக்கப்பட்ட வாணிப வரிகள் பொதுவாகப் புரட்டப் படுவதில்லை. ஆனுல், மொத்த வரவுகளின்மீது விதிக்கப்படும் வரிகள் பொதுவாகப் புரட்டப்படுகின்றன. இரண்டு வரிகளின் நோக்கமும் ஒன்றுதான். வாணிபத்தின்மீது வரியைத் திணிப்பதும் அதை வாணிபத்தின் நிகர வருமானத்திலிருந்து செலுத்த வேண்டும் என்பதுமே இந் நோக்கம். ஆனுல், இரண்டு வரிகளின் விளைவுகளும் வேறுபட்டவைகளாக இருக்கின்றன. வேறு பெயரால்

அழைக்கப்பட்டாலும் மொத்த வரவுகளின்மீது 1 சதவிகிதம் விதிக்கப்பட்ட வாணிபவரி (business tax)யும், 1 சதவிகிதம் விதிக்கப்படும் ஒரு விற்பனை வரியை (sales tax) முற்றும் ஒத்திருக்கிறது. இவ் விற்பனைவரி,தொழிலின் மொத்த விற்பனையின் மீது விதிக்கப்படுகிறது. ஆகவே நாம் காட்சி அளவில் உண்மைக்கு இடங்கொடுக்க வேண்டும் என்றால், வாணிப வரிகள் என்று கூறப்படும் வரிகளையும், விற்பனை வரிகளுடன் சேர்த்தே பாகுபாடு செய்யவேண்டும்.

பண்டத்தை வாங்குவது அல்லது விற்பதன்மீது வரி விதிக்காது அதன் உபயோகத்தின்மீது விதிக்கப்படும் ஒருவகை ஆயத் தீர்வைகளைப் போன்றது 'பயன் வரிகள்' (use taxes). எடுத்துக் காட்டாக 1942-ல் கூட்டாட்சி மோட்டார் வாகனங்கள், தோணிகள் இவற்றின் உபயோகத்தின்மீது ஆண்டு ஒன்றுக்கு ஐந்து டாலர்கள் வரி விதித்தது.[1] சில மாநிலங்கள் சில்லறை விற்பனை வரிகளை விதிக்கின்றன. மாநிலத்திற்கு வெளியேயிருந்து சில்லறையில் வாங்கி வரும் பண்டங்களின் உபயோகத்தின்மீது வேறொரு வரியையும் அவை விதிக்கின்றன.மாநிலத்திற்கு வெளியி லிருந்து வாங்குவதன்மூலம் விற்பனை வரியைத் தவிர்ப்பதைக் குறைக்கும் பொருட்டு உபயோக வரி போடப்படுகிறது. விற்பனை வரியைச் செலுத்துவதன் மூலம் உள்நாட்டில் விற்பவர்களுக்குப் போட்டி போடுவதில் பாதகம் ஏற்படுவதையும் பயன்வரி அகற்றுகிறது. அவற்றின் பொருளியல் விளைவுகளைப் பொறுத்த வரையில் பயன்பாட்டு வரிகள், விற்பனை வரிகளைப் போன்றவையே. அவை பரவலாகக் கையாளப்பட்டாலும், எந்த வரி முறையிலும் அவற்றின் பங்கு சிறிதே.[2] இதற்குக் காரணம் இவ் வரிகளை அமுலாக்குவதில் ஆட்சியாளருக்கு ஏற்படும் உண்மையான சங்கடங்களே ஆகும்.

குறிப்பிட்ட பண்டங்களின் விற்பனைமீது விதிக்கப்படும் வரிகள் பொதுவாக 'ஆய்த் தீர்வைகள்' (excises) என்றோ அல்லது தெரிந்தெடுக்கப்பட்ட விற்பனை வரிகள்' (selective sales taxes) என்றோ குறிப்பிடப்படுகின்றன. கூட்டாட்சியும் மாநில ஆட்சி களும் ஒருங்கே இவற்றைப் பரவலாகப் பயன்படுத்துகின்றன. உண்மையில் சுங்கத் தீர்வைகளும் இவ் வகையைச் சேர்ந்ததே. ஆயினும், அவற்றைத் தனியாக ஒரு தலைப்பின்கீழ் ஆராய முடிவு செய்தோம். ஏனெனில் அவை உள்நாட்டுத் தொழில்களுக்குப் பாதுகாப்புத் தரும் நோக்கத்துடனேயே பெரும்பாலும்விதிக்கப்படு கின்றன. நெடுங்காலமாகக் கூட்டாட்சி புகையிலைப் பொருள்கள், சீட்டுக் கட்டுகள், மதுபான வகைகள் இவற்றின்மீது ஆயத் தீர்வைகளை விதித்து வந்திருக்கின்றது. 1930ஆம் ஆண்டிலிருந்து

மாநில அரசுகள், மக்கள் பரவலாக நுகரும் பெட்ரோல், சிகரெட்டுகள், மதுவகைகள் போன்ற சில குறிப்பிட்ட பண்டங் களின்மீதும் ஆயத் தீர்வைகள் விதிக்கின்றன. நிரந்தரமாக நிறுவப்பட்ட 'ஆயத்தீர்வைப் பட்டியலில்' அடங்கிய பண்டங் களின் தொகுதியின்மீது கூட்டாட்சியும், மாநில அரசுகளும் வரி விதிக்கின்றன. இவ் வாயத்தீர்வைகள் பொதுவாகப் பொறி வழியாக்கம் செய்வோர் அல்லது தொடக்கத்தில் பங்கீடு செய்வோர்மீது விதிக்கப்படுகின்றன. வரி ஸ்டாம்புகளை (tax stamps) வாங்குவதன் மூலம் இவ் வரி செலுத்தப்படுகிறது. இது தான் சாதாரணமாகப் பலரும் பயன்படுத்தும் வழியாகும். விளையுள், பங்கீட்டுக் கால்களை அடைவதற்குமுன் அதன்மீது ஸ்டாம்பு ஒட்ட வேண்டும்.[3] பங்கீட்டின் ஆரம்ப நிலையிலேயே இவ் வரியைப் பிரயோகிப்பதற்கான காரணம் ஆட்சியை எளி தாக்குவதும், வரிமுறைக்கு யாவரும் இணங்கும்படிச் செய்வதும் ஆகும். வரிச்சட்டத்திற்கு இணங்க நடக்கிறார்களா என்பதைச் சரிபார்க்கவே வரி ஸ்டாம்பு முறை மேற்கொள்ளப்படுகிறது. தன் வரிவிதிப்புக்கு உட்பட்ட அதிகார வரம்புக்குள் ஸ்டாம்பு ஒட்டாமல் ஒரு பண்டத்தைப் பின்னொருகால் விற்பதைத் தடுப்பதற்கே இம் முறை கையாளப்படுகிறது.

1932ஆம் ஆண்டிலிருந்து கூட்டாட்சியின் ஆயத் தீர்வைப் பட்டியல் நீண்டுகொண்டே வந்திருக்கிறது. இவ்வரி இரண் டாவது உலகப் போரின்போது அபிவிருத்தி செய்யப்பட்டது. குறிப்பிட்ட பண்டங்களின்மீது பல வரிகளைப் பல்வேறுபட்ட பங்கீட்டுநிலைகளில் கருவூலம் பிரயோகித்து வசூல்செய்தது. பொறி வழியாக்கம் செய்வோரின் தலையாய ஆயத் தீர்வைகளில் (பொறி வழியாக்கம் செய்வோரிடமிருந்து வசூலிக்கப்படுகிறது) பெட்ரோல் எண்ணெய்கள், மோட்டாரின் பகுதிகள், துணைக் கருவிகள், விளையாட்டுப் பண்டங்கள், மூட்டை முடிச்சு, வீட்டுச் சாதனங்கள், இசைக் கருவிகள், மின் சக்தி இவை அடங்கும். சில்லறை வியாபாரி களின் தலையாய ஆயத்தீர்வைகளில் சருமங்கள் (furs), அணி கலன்கள், தலை, முக அலங்காரப் பொருள்கள் (toilet preparations) இவை அடங்கும். வரவேண்டியன (dues), தீக்கைக் கட்டணங்கள் (initiation fees), நுழைவுகள் (admissions), போகக் கேளிக்கைகள், பத்திரமான வைப்புப் பெட்டிகளின் வாரங்கள் (rental of safe deposit boxes), தொலைபேசி, தந்தி இவற்றை உபயோகித்தல் ஆகிய இவற்றின்மீது சில்லறை மட்டத்தில் பிரத்தியேக ஆயத் தீர்வைகள் விதிக்கப்படுகின்றன. ஆனால், சாதாரணமாக இப் பண்டங்கள் பொறிவழி ஆக்கம் செய்வோரிடமிருந்து, மொத்த வியாபாரியின் மூலம் சில்லறை வியாபாரிக்கு விற்கப்படுவதில்லை.

போர்க் காலத்தில் ஆயத் தீர்வைகளின் பட்டியலில் மேலும் சில பண்டங்களும் சேவைகளும் சேர்க்கப்பட்டன. ஆனால், இப் பண்டங்களின்மீதான வரிகளை வசூல் செய்வதற்கு வரி ஸ்டாம்பு முறை இலாயக்குள்ளதாக இல்லை.

கூட்டாட்சியின் ஆயத் தீர்வைச் சட்டங்களில் பெறுமான வீத (ad valorem) வரிகளும், தனிப்பயன் வரிகளும் (specific taxes) இடம் பெற்றுள்ளன. பொதுவாக, மரபாக அல்லது நிரந்தரமாக இருக்கும் ஆயத்தீர்வைப் பட்டியலில் புகையிலை, சீட்டுக்கட்டு, மது, பெட்ரோல் இவ் இனங்களின்மீது விதிக்கப்படும் வரிகள் தனிப் பயன் வரிகளாகும். அதாவது விளையுளின் ஒவ்வொரு ஸ்தூல (physical) அலகுக்கும் ஒரு குறிப்பிட்ட தொகையை வரியாகச் செலுத்தவேண்டும். இங்ஙனம் வரிவிதிப்பில், அலகின் மதிப்பை (பெருமானத்தைப்) பொருட்படுத்துவதில்லை. எடுத்துக்காட்டாக, இவ் விளைவுகளில் சிலவற்றின்மீது கூட்டாட்சி, போர்க் காலத்தில் விதித்த வீதங்களாவன :

| | |
|---|---|
| வடிகட்டிய மதுக்கள் : | ஒவ்வொரு நிரூபிக்கப்பட்ட காலனுக்கு (proof gallon) 9 டாலர் (1959-ல் 10·50 டாலர்) |
| பெட்ரோல் : | காலனுக்கு $1\frac{1}{2}$ செண்டு வீதம் (1959-ல் 4 செண்டு) |
| சிகரெட்டுகள் : | ஆயிரத்துக்கு 3·5 டாலர் (1959-ல் 4 டாலர்) |
| சீட்டுக் கட்டுகள் : | ஒவ்வொரு கட்டுக்கும் 13 செண்டு |

மற்றோர் பக்கத்தில், கூட்டாட்சியின் ஆயத் தீர்வைப் பட்டியல்களில் புதிதாகச் சேர்க்கப்பட்டவர்களில் பலரும் பெருமான வீதத்திலேயே வரி விதிக்கப்படுகின்றனர். அதாவது எந்தப் பங்கீட்டு நிலையில் வரியை வசூலித்தாலும், விளையுளின் விற்கும் விலையில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதமே இவ் வரி விதிக்கப் படுகிறது.[4] பொதுவாகத் தனிப்பயன் வரியைவிடப் பெறுமான வீத வரி விரும்பத்தக்கது.[5] மலிவு ரக சாமானின்மீது தனிப்பயன் வரி பளுவாக விழுகிறது. ஏனெனில், தனிப்பயன் வரி, விற்கும் விலையில் கூடுதல் சதவிகிதமாக இருக்கிறது. மலிவு ரகச் சாமான்கள் தாங்கக்கூடிய கட்டண வீதங்களையே தனிப்பயன் வரியாக விதித்தால், மிகவும் விலையுயர்ந்த ரகங்களிலிருந்து கிடைக்கக் கூடிய வருவாய் சாத்தியக்கூற்றை அரசாங்கம் இழக்க நேரிடும். மிகவும் விலையுயர்ந்த ரகங்கள் தாங்கக்கூடியதாகக் கட்டண

வீதங்கள் இருந்தால், மலிவுரகச் சாமான்கள் மார்க்கட்டிலிருந்து விரட்டப்படும். அன்றியும் குறைந்த வருமானம் உடையவருக்கு சாமானின் விலை வரியால் ஏறும். மலிவு ரகச் சாமான் மார்க் கட்டிலிருந்து மறைவதாலும், உயர்ந்த ரகப் பண்டங்களையே அவர் வாங்கவேண்டி இருப்பதாலும், அவர் கொடுக்கவேண்டிய விலையும் ஏறுகிறது. மற்றோர் பக்கத்தில், தனிப்பயன் வரியை அமுல் செய்வது எளிதாக இருப்பது அவ் வரிக்குரிய அனுகூல மாகும்.

விற்று முதல் வரிகள் (Turnover Taxes) 'விற்று முதல்' அல்லது 'பொது விற்பனை' அல்லது 'தொழில்' வரிகள் சேவைகளின்மீதும் விதிக்கப்படுகின்றன. அத்துடன் இவ் வரிகள் பங்கீட்டின் எல்லா நிலைகளிலும் ஏற்படும் பேரங்களின் பேரிலும் விதிக்கப்படுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இவ்வகை வரி பரவலாகப் பயன் படுத்தப்படவில்லை. 1930-க்கும் 1940-க்கும் இடையில் இவ் வரி யைக் கூட்டாட்சி தம் வரியாக மேற்கொள்ள'டவுன் சென்டைட்டு கள்' (Townsendites) கிளர்ச்சி செய்தார்கள். முதியோருக்கு உப காரச் சம்பளம் தரவேண்டும் என்பது அவர்கள் திட்டம். இத் திட்டத்திற்கு வேண்டிய நிதியைப் பெறுவதற்காகவே அவர்கள் இவ்வாறு கிளர்ச்சி செய்தனர். 1952-ல் ஏழு மாநிலங்களில்[6] ஒரு பொது விற்பனை அல்லது மொத்த வருமான வரி நிலவியது. ஆனால், இவ் வரியின் செறிவு மாநிலங்கள் தோறும் வேறு பட்டது. ஆயினும், இவ் வரிக்குத் தொழில் வரி அல்லது 'தொழில் நடத்தும் சலுகையின்'மீது போடப்பட்ட வரி என்று பொதுவாகப் பட்டம் சூட்டப்பெற்றது. இவ் வேழு மாநிலங் களில் இந்தியானா, நியூமெக்சிகோ, மேற்கு வர்ஜீனியா என்ற மூன்று மாநிலங்கள் எல்லாப் பண்டங்களின்மீதும் வரி விதித்தன. ஆகவே, இவ் வரி ஒரு பொது விற்றுமுதல் வரியா யிற்று. பிற மாநிலங்கள் ஏறக்குறைய பெரிய தொழில் நிறுவனங் களுக்கு இவ் வரியிலிருந்து விலக்கு அளித்தன. இப் பல்வேறு பட்ட மாநிலங்களின் அநுபவத்திலும் வரிவீதங்களில் எந்தப் பொதுவான தோரணையும் காணப்படவில்லை. ஒன்றில் மட்டும் அவற்றிடை ஒற்றுமை காணப்படுகின்றது. சில்லறை விற்பனை களின்மீது மிகக் கூடுதலான வரிவீதங்கள் விதிக்கப்படுவதே இவ் வொற்றுமையாகும்.

பல்வேறுபட்ட பங்கீட்டு நிலைகளிலும் விற்பனையாகும் பண்டங்களுக்கு வெவ்வேறு வீதங்கள் பிரயோகிக்கப்படுகின்றன. பண்டங்களைப் பங்கீடு செய்வோர் பல்வேறுபட்ட பங்கீட்டு நிலை களில், வெவ்வேறு விலைக்குறியீட்டுக் (mark-up) கொள்கையைப்

பின்பற்றுவதனால் இவ் வேறுபாடுகள் எழுகின்றன. ஆயினும் இவ் வேறுபாடுகள் பொது விற்பனை வரிகளில் காணப் படும் தலையாய பொருளாதாரச் சிறப்பை ஏற்றுக் கொள்கின் றன. இச் சிறப்பாவது ஒரு வரியின்மீது இன்னொரு வரியை கூர்நுதிக் கோபுரம்போல் சுமத்துவதாகும். பங்கீட்டின் ஒரு நிலையில் தண்டப்பட்ட வரியை முற்பட்டுப் புரட்டிப் பண்டத்தின் விலையுடன் கூட்டினால், பங்கீட்டின் அடுத்த நிலையில் உள்ளவர் வரித்தொகையின் அளவுக்குத் தன் ஆக்கச் செலவு கூடியிருப்பதை உணர்வார். தான் விற்கும் விலையை நிர்ணயிப்பதற்காக அவர் இவ் வாக்கச் செலவுடன் இவ் வரியையும் சேர்த்துக் குறியிடு கிறார். மீண்டும் பண்டம் விற்கப்படும்பொழுது மீண்டும் விற்பனை வரியும் செலுத்தப்படுகிறது. இரண்டாவது வரியின் தளத்தில் முதல் வரியும் அடங்கியிருக்கிறது. சில்லறைவியாபாரத்திற்கு முன்பாக எத்தனை முறை பேரங்கள் நிகழ்கின்றனவோ அவ்வளவு வரியின் அமிசம் பெரிதாகக்கூர்நுதிக் கோபுரம் போன்று சில்லறை விலையில் அடங்கியிருக்கும். இதனால் சில்லறை வியாபார விலையின் மீது ஏற்படும் விளைவு திறனாய்வுக்கு உட்படுவது சிறிது குறைய லாம். இவ் வரியினால் செங்குத்தாகத் தொழில் இணைக்கப்படுவது கூடுதலாக இருக்கலாம். ஏனெனில், ஒவ்வொரு பேரத்தின்மீதும் கூடுதலாக ஒரு வரி விதித்தால், பங்கீட்டின் போக்கில் எவ்வளவு சுதந்திரமான பேரங்களைத் தவிர்க்க முடியுமோ அவ்வளவு தவிர்ப் பது போட்டியிடுவதில் ஓர் அனுகூலத்தை அளிக்கும். மூலப் பொருள் நிலையிலிருந்து சில்லறை வியாபார விற்பனைவரை எல்லா நிலைகளையும் தன்னுள் அடக்கியிருக்கும் ஒரு பண்டத்தை உற்பத்தி செய்யும் நிறுவனம் ஒரே முறைதான் வரி செலுத்தவேண்டும். சில்லறை வியாபாரத்தில் பண்டத்தை விற்கும்பொழுதுதான் நிறுவனம் இவ் வரியைச் செலுத்தவேண்டும். உற்பத்திப் போக் கிலும், பங்கீட்டுப் போக்கிலும் பல நிலைகளைப் பண்டம் கடக்க வேண்டியிருக்கிறது. ஆயினும் இறுதி நிலையைத் தவிரப் பிற நிலை கள் எல்லாம் நிறுவனத்துக்குள்ளேயே நடப்பவை. இவ்விதமாக ஒன்றாக இணையும் முனைப்பின் விளைவுகள் போட்டியைக் குறைக்கும். இது போட்டியை அபிவிருத்தி செய்யும் பொதுவான விருப்பத் திற்கு முற்றிலும் முரணானதாகும்.

எவ்வாறாயினும் முழு வரியும் முற்பட்டுப் புரட்டப்படுகிறது என்று வைத்துக்கொண்டால், ஒரு பொதுவான விற்பனை அல்லது விற்றுமுதல் வரியைவிடக் குறைந்த செலவில், ஒரு சில்லறை விற்பனை வரியின் மூலமாகவே, ஒரு குறிப்பிட்ட வருவாய்த் தொகையைத் திரட்ட முடியும். ஒரு பொதுவான விற்பனை வரியின் கீழ் பங்கீட்டின் ஆரம்ப நிலைகளில் செலுத்திய வரிகளின்

மீது பங்கீடு செய்வோர்களின் ஆதாயமும், சில்லறை விலையின் ஒரு கூறாகும். இதை ஒரு கற்பிதமான எடுத்துக்காட்டின் எண்ணிக்கை மூலம் நிரூபிக்கலாம். ஒரு விளையுளின் பங்கீட்டில் மூன்று பேரங்கள் நிகழ்வதாக வைத்துக் கொள்வோம். ஒவ்வொரு பேரம் நிகழும்பொழுதும் 10 சதவிகிதம் விற்றுமுதல் வரி பிரயோகிக்கப் படுகிறது என்றும் வைத்துக் கொள்வோம். மேலும், ஒவ்வொரு வியாபாரியும் தனக் கடக்கமான செலவுடன் 20 சதவிகிதம் கூட்டி விற்பதாகவும் வைத்துக் கொள்வோம். ஒவ்வொரு பேரத்தின் போதும் முழுவரியும் முற்பட்டுப் புரட்டப்பட்டதாக வைத்துக் கொண்டால், கீழ்க்கண்ட முடிவுகளைப் பெறலாம்:

| | | டாலரில் |
|---|---|---|
| A | வியாபாரிக்கு அடக்கச் செலவு + இலாபம் | 10 |
| | + 10% வரி | 1 |
| B | வியாபாரிக்கு அடக்கச் செலவு | 11 |
| | + 20% இலாபம் | 2·02 |
| B | யின் விற்கும் விலை (வரி நீங்கலாக) | 13·02 |
| | + 10% வரி | 1·32 |
| Cக்கு | அடக்கச் செலவு | 14·52 |
| | + 20% இலாபம் | 2·90 |
| C | யின் விற்கும் விலை (வரி நீங்கலாக) | 17·42 |
| | + 10% வரி | 1·74 |
| இறுதியில் | வாங்குவோர் தரும் விலை | 19·16 |

இப் பேரங்களின் தொடரில் மொத்த வரியாக வசூலிக்கப் பட்டது, 4·06 டாலராகும் (1 + 1·32 + 1·74). வரி இறுதி வியாபாரத்தின் (சில்லறை)போதுதான் வசூலிக்கப்படுகிறது என்ப தைத் தவிர்த்து, அதே போன்ற சூழ்நிலைகளில் இறுதியாகப் பண்டத்தை வாங்கும் ஒருவன் எவ்வளவு விலையாகக் கொடுக்க வேண்டும் என்பதை இப்பொழுது காண்போம். மீண்டும் வரி முற்றிலும் முற்பட்டுப் புரட்டப்படுகிறது.

| | | டாலரில் |
|---|---|---|
| (A | வியாபாரி) அடக்கச் செலவு + இலாபம் | 10 |
| B | வியாபாரியின் அடக்கச் செலவுக்குச் சமம் | 10 |
| | + 20% இலாபம் | 2 |
| C | வியாபாரிக்கு அடக்கச் செலவு | 12 |
| | + 20% இலாபம் | 2·04 |

| | |
|---|---|
| C யின் விற்கும் விலை (வரி நீங்கலாக) | 14·4 |
| +28.2% வரி (விற்றுமுதல் வரியின் கீழ் வசூலாகும் வருவாய்க்குச் சமமாக வரி வசூலிப்பதற்காக | 4·06 |
| இறுதியில் வாங்குவோர் தரும் விலை | 18·46 |

இரண்டு வகை வரிகளின் கீழும் இறுதியாகப் பண்டங்களை வாங்குவோர் கொடுக்கும் விலையில் வேறுபாடு இருக்கிறது (0·70 டாலர்). ஆக்கச் செலவினோடு வரிகளைச் சேர்ப்பதுமன்றி குறிப்பிட்ட விலை ஏற்றங்களைப் பிரயோகிப்பதால் நிகழும் குவிவு விளைவாகும் (cumulative effect) இது.

**சில்லறை விற்பனை வரிகள்:** மேலே தந்த இரண்டாவது எண்ணுள்ள எடுத்துக் காட்டில் நாம் ஒரு சில்லறை விற்பனை வரியை விதிப்பதாக வைத்துக்கொண்டோம். அவ் வரி இறுதி நிலை விற்பனையின் (சில்லறை) போதுதான் பிரயோகிக்கப்படுகிறது. இவ்வாறு இவ் வரி பங்கீட்டின் இணைக்கப்பட்ட முறையின் வேறுபடுத்தப்பட்ட அனுகூலத்தையும் தவிர்க்கிறது. முதன்முதலாக வரிசெலுத்துவோர்களின்[7] எண்ணிக்கையைக் குறைப்பதன் மூலம் வரியை வசூல் செய்வதில் ஆட்சியாளர்கள் படும் சங்கடங்களையும் குறைக்கிறது. இதனால் விளையுளின் இறுதிவிலையைக் குறைவாக ஏற்றுவதன் மூலமே ஒரு குறிப்பிட்ட தொகை வருவாயை வசூலிக்க முடியும். விற்றுமுதல் வரியைவிட, விற்பனையின் இறுதி நிலையில் முழு வரியையும் பிரயோகிப்பதன் மூலம், சில்லறை விற்பனை வரி, வரியாகச் செலுத்தும் தொகையின் அளவை மக்கள் பெரிதும் உணரும் படிச் செய்கிறது. மற்றோர் பக்கத்தில், வரிக்கு உள்ளாகும் நிறுவனங்களுக்கு விளக்கம் தருவதில் உள்ள இன்றியமையாத சங்கடங்களை விற்றுமுதல் வரி அகற்றுகிறது. ஏனெனில், விற்பனையின் எல்லா நிலைகளுக்கும் விற்பனை வரி பிரயோகிக்கப்படுகிறது.[8]

விற்பனை வரியில் பல ரகங்கள் உண்டு. தெரிந்தெடுக்கப்பட்ட எந்த வாங்குவோர் கும்பலுக்கும் (விற்பனை எந்த ரகத்தைச் சேர்ந்ததாயினும்) விற்பனை வரி விதிப்பிலிருந்து விலக்கு அளிப்பது சாத்தியமேயாகும். குறிப்பிட்ட சில வணிகர்களை விற்பனை வரியைச் செலுத்துவதினின்றும் விலக்குவதன் வாயிலாக வரி விலக்குக்கு வகை செய்வதே மிக எளிய முறையாகும். எடுத்துக் காட்டாக உணவுப் பண்டங்களுக்கு வரி விதிப்பிலிருந்து விலக்களிக்கவேண்டும் என்று விரும்பினால் (இது சாதாரணமாகச் செய்யப்படுகிறது) உணவுப் பண்டங்களை விற்பவர்கள் விற்பனை வரியின் எல்லா விதிகளிலிருந்தும் விலக்களிக்கப்படுவார்கள். குறிப்

பிட்ட ஒரு விளையுளை வாங்கும் குறிப்பிட்ட சிலரை மட்டும் வரியி லிருந்து விலக்க விரும்பினால் (உ-ம். அரசாங்கங்களும், அற, கல்வி; சமய நிறுவனங்களும்) விலக்கின் விதிகள் மிகச் சிக்கலானவையாகி விடுகின்றன. ஒஹியோ மாநிலம் கையாளும் திட்டமே இவ்வகை விலக்கைக் கச்சிதமாக நிறைவேற்றுவதற்கு மிகவும் அணுக்கமான நிலையில் உள்ளது என்று நாம் கூறலாம். பண்டங்களை வாங்கிய பொழுது செலுத்திய வரியை ரத்து செய்ததற்குப் பண்டங்களை வாங்குவோர்களுக்கு வியாபாரி ஒரு ரசீதைக் கொடுக்கவேண்டும் என்று ஒஹியோ மாநிலச் சட்டம் கோருகிறது. விலக்குக்கு உரிமையுள்ள வாங்குவோர்கள் பின்பு இவ் ரசீதுகளைக் கருவூலத் திற்கு அனுப்பித் தங்கள் செலவை ஈடுசெய்து[9] கொள்ளலாம். ஆயினும், இத் திட்டம் சிக்கலானது. இச் சட்ட விதிகளுக்கு இணங்க இயங்கும்படிச் செய்வது சிரமமாயிருக்கிறது. ஆகவே இதுவே, இத் திட்டம் திருப்திகரமாக இயங்குவதற்குப் பெருத்த தடையாயிருக்கிறது.

### ஆயத்தீர்வை, விற்பனை வரிவிதிப்பு ஆகியவற்றின் வீச்சு

**கூட்டாட்சி :** கூட்டாட்சி தொடங்கிய காலத்திலிருந்தே சுங்கத் தீர்வைகள் விதிக்கப்பட்டு வந்திருக்கின்றன. சுங்கத் தீர்வைகளுக் குச் செலவைக் கட்டுப்படுத்தும் நோக்கமே(பாதுகாப்பு) தலையாய தாக இருந்து வந்திருப்பதால் வருவாய் விளைவுகள் உடனிலையாகவே பெரும்பாலும் கொள்ளப்பட்டன. ஆகவே, இவ் வாராய்ச்சி நம்முடைய எல்லைக்கு அப்பாற்பட்டதாகும். கூட்டாட்சியின் வரி முறையில் ஒரு தலையாய நெகிழ்ச்சியுள்ள வருவாய் அமிசமாகக் குறிப்பிட்ட சில பண்டங்களின்மீது விதிக்கப்பட்ட ஆயத் தீர்வைகள் தொடர்ந்து அங்கம் வகித்து வந்திருக்கின்றன. ஆயத் தீர்வைகளின் பட்டியலை, செலவைக் கட்டுப்படுத்தும் நோக்கங்கள் எத்துணைப் பாதித்தன என்று சொல்வது கடினம். வரலாற்று வாயிலாகவும், நிரந்தரமாகவும் இருக்கும் ஆயத் தீர்வைகளின் பட்டியலில் தலையாய இனங்களாக மது, புகையிலை, சீட்டுக் கட்டு இவை சேர்க்கப்பட்டிருப்பதிலிருந்தே செலவைக் கட்டுப்படுத்தும் நோக்கம் தெளிவாகப் புலனாகிறது. மற்றோர் பக்கத்தில், இப் 'போகப் பொருள்'களின் தேவை, நெகிழ்ச்சி இல்லாததாக இருப்ப தாக நிரூபிக்கப்பட்டுவிட்டதால், இவ் வரிகளை வருவாய் நோக்கங் களுக்காக நன்கு பயன்படுத்தலாம். வரியினால் விலை கூடினாலும் ஒப்புமையில் நுகர்வு சிறிதே குறைகிறது. சட்டசபை உறுப்பினர் கள், வரி வசூல் செய்பவர்கள் இவர்களின் மனச்சான்றுகளைப் பண்டங்களின்மீது விதிக்கும் ஆயத் தீர்வைகள் கலக்குவதில்லை. ஆயத் தீர்வைகள் பெருத்த நிலையான வருவாய்களைத் தருகின்றன.

மது, புகையிலை, சீட்டுக் கட்டுகள், மிக அண்மைக் காலத்தில் பெட்ரோல்—இவற்றின் மீது விதிக்கப்பட்ட வரிகள் கூட்டாட்சி யின் ஆயத்தீர்வை முறையின் உறுதியான அடிப்படையாக இருந்து வருகின்றன. தற்காலத்தில் இவ் வினங்களின்மீது தொடர்ந்து கடுமையான வரிகள் விதிக்கப்பட்டு வந்திருக்கின்றன. இதற்குப் புறனடை பெட்ரோல். பெட்ரோலின்மீது மாநிலங்கள் கடும் ஆயத் தீர்வைகள் விதிக்கின்றன. இதனுல் நெருக்கடியான காலங்களில் வீதத்தை ஏற்றுவதன் வாயிலாக வருவாயைப் பெருக்கிக் கொள்வ தற்கு வாய்ப்பில்லை. வரிவிதிப்புக்கு உட்பட்ட பண்டங்களின் பட்டி யலை நீட்டிப்பதன் மூலமும், குறுக்குவதன் மூலமும் கூட்டாட்சியின் ஆயத்தீர்வை முறையில் உண்மையான வருவாய் நெகிழ்ச்சி ஏற் படுகிறது. வரி விதிக்கப்பட்ட பண்டங்களுக்குப் பொதுவாக மூன்று பண்புகள் உள்ளன. அவையாவன: (1) பரவலான நுகர்வு, (2) ஒப்புமையில் தேவை நெகிழ்ச்சியின்மை, (3) வாழ்க் கைக்கு 'இன்றியமையாதவை' என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட தொகுதிக்கு மேற்பட்ட பகுதியை வகிக்கும் பண்டங்களின் வீச்சு.

31ஆவது அட்டவணையில் கூட்டாட்சியின் ஆயத் தீர்வையி னுல் கிடைத்த வருவாயின் ஆக்கம் தரப்பட்டிருக்கிறது. வருவாய் முடைகளுக்கேற்ப வரிமுறையில் ஓரளவு கட்டுப்படுத்தப் பட்ட நெகிழ்ச்சியின் அமிசத்தை அட்டவணையில் தெரிந்தெடுக்கப் பட்ட ஆண்டுகள் தெரிவிக்கின்றன. 1912ஆம் ஆண்டிலிருந்து நாம் தொடங்குகின்ரேம். அவ் வாண்டில் ஆயத்தீர்வை வரி விதிப்புக்குள்ளானவை தர இனங்கள் மட்டுமே.

ஆயத்தீர்வைப் பட்டியலின் விஸ்தரிப்புகளில் இரண்டு காலக் கூறுகள் தலையாயனவாக உள்ளன. 1930க்கும் 1940க்கும் இடைப் பட்ட வியாபார மந்தகாலத்தில், குறிப்பாக 1933-ல் கிட்டத்தட்ட எல்லாத் தற்காலப் பொறிவழியாக்கம் செய்வோர்களின் ஆயத் தீர்வைகளும் முதன்முதலில் போடப்பட்டன. இக் காலக் கூற்றில் தான் வருவாயைப் பொறுத்தவரையில் வருமானவரியின் தளம் மோசமாகப் போய்க்கொண்டிருந்தது. ஆகவே, மிகவும் நிலையான தளமாக ஆயத்தீர்வைகள் பயன்படுத்தப்பட்டன. இரண்டாவது உலகப்போரின்போது இரண்டாம் முறையாக ஆயத்தீர்வைகள் விஸ்தரிக்கப்பட்டன. கணிசமான அளவு வரியை ஏற்றுவதன் மூலமாக விலைகளை உயர்த்திப் பற்ருக் குறையாக இருந்த பண்டங்கள், சேவைகளுக்கான தேவையைக் குறைப்பதே இவ் வரிகள் போடப்பட்டதன் தலையாய நோக்கமாகும். இக் காலக் கூற்றில்தான் கிட்டத்தட்ட எல்லாச் சில்லறை வியாபாரி

## அட்டவணை 31

### கூட்டாட்சியின் ஆயத்தீர்வை வசூல்கள்*

(மில்லியன் டாலர்களில்)

| வரிவிதிக்கப்பட்ட பிற இனங்கள் | 1912 | 1926 | 1932 | 1936 | 1945 | 1951 | 1958 |
|---|---|---|---|---|---|---|---|
| மது | 220 | 26 | 9 | 505 | 2,310 | 2,547 | 2,946 |
| புகையிலை | 71 | 371 | 399 | 501 | 932 | 1,380 | 1,734 |
| பிற ஸ்டாம்பு வரிகள் a | — | 50 | 32 | 69 | 66 | 93 | 109 |
| பொறிவழி ஆக்கம் செய்வோர்களின் ஆயத்தீர்வைகள் b | — | — | 87 | 383 | 783 | 2,384 | 3,974 |
| பெட்ரோல் | — | — | — | 177 | 406 | 589 | 1,637 |
| பிற | — | — | 87 | 206 | 377 | 1,795 | 2,337 |
| சில்லறை வியாபாரிகளின் ஆயத்தீர்வைகள் c | — | — | — | 21 | 424 | 457* | 342 |
| பலவகை ஆயத்தீர்வைகள் d | — | 253 | 3 | 44 | 1,168 | 1,423 | 1,583 |
| நுழைவுகளும் வர்த்தனைகளும் | — | 34 | 11 | 45 | 372 | 419 | 158 |

★ Sources : Statistical Abstract of the U. S., 1920, pp. 718, 720; Idem, 1926, pp. 172—73; Annual Report of the Secretary of the Treasury, 1958, pp. 455—58.

a. பெரும் இனங்கள்—மூலதனப் பங்கு வெளியீடுகளும், மூலதனப்பங்கு மாற்றங்களும், சீட்டுக் கட்டுக்களும்.

b. பெரும் இனங்கள்—மோட்டார் ஊர்திகள், பாகங்கள், கட்டுகள், வீட்டுச் சாதனங்கள்.

c. பெரும் இனங்கள்—நகைகள், சருமங்கள், தலை அலங்காரச் சாமான்கள், மூட்டை முடிச்சுகள்.

d. பெரும் இனங்கள்—தொலைபேசி, தந்தி, கடற்கீழ்த் தந்தி (புதை தந்தி), இடம் பெயர்த்தல் (transportation).

களின் ஆயத்தீர்வைகளும் விதிக்கப்பட்டன. 1920ஆம் ஆண்டில் மதுவிலக்குத் திருத்தம் செய்யப்பட்டதன் விளைவாகவும், 1933-ல் இதை ரத்து செய்ததன் விளைவாகவும் ஏற்பட்ட பலன்கள் மது ஆயத்தீர்வைப் புள்ளிவிவரங்களில் தெரிகிறது. இரண்டாவது உலகப் போரிலிருந்து ஆயத்தீர்வைப் பட்டியலிலும், வீதங்களிலும் ஒப்புமையில் சில திருத்தங்களே செய்யப்பட்டன. 1945ஆம் ஆண்டில் 10 சதவிகிதத்திற்கு மேலிருந்த பெறுமான வீதங்கள் திரும்பவும் 10 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டன. 1956ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட பாதுகாப்பு நெடுஞ்சாலைச் சட்டத்தின் (Defence Higway Act) கீழ் பெட்ரோல், சில மோட்டார் வாகன இனங்கள் இவற்றின்மீது பொறிவழியாக்கம் செய்வோர்களின் ஆயத்தீர்வைகள் கூட்டப்பட்டன. 1957-ல் நுழைவுகளுக்கான விலக்குகள் உயர்த்தப்பட்டன.

சென்ற நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் கூட்டாட்சியின் வருவாய் முறையின் ஒருதலையாய அடித்தளக் கல்லாகத் தொடர்ந்து ஆயத்தீர்வைகள் கருதப்பட்டன. 1933-ல் வருவாய் வசூலில், 19சதவிகிதம் ஆயத்தீர்வைகளிலிருந்து கிடைத்தன. வாணிப மந்தகாலத்தில் ஆயத்தீர்வைகளை விஸ்தரிப்புச் செய்ததன் பயனுக 1940-ல் அவற்றிலிருந்து 35 சதவிகிதம் வருவாயும், 1945-ல் 14 சதவிகித வருவாயும் கிடைத்தன. 1945-ல் ஆயத்தீர்வைகளிலிருந்து வருவாய் குறைந்ததற்குக் காரணம் போர்க் காலத்தில் வருமானவரி உயர்த்தப் பட்டதும், வரிவசூல்களின் மொத்தத் தொகை உயர்ந்ததுமாகும். அண்மை ஆண்டுகளில் இதிலிருந்து கிடைக்கும் வருவாயின் வீதாசாரம் குறைந்திருக்கிறது. போர் முடிந்தவுடன் ஆயத்தீர்வைகளிலிருந்து கிடைக்கும் வருவாய் ஏறியது. 1958-ல் அக வருவாய்களில் 15 சதவிகிதமே ஆயத்தீர்வைகளிலிருந்து கிடைத்தது. ஆயத்தீர்வைப் பட்டியலும் வீதங்களும் பெரும்பாலும் மாறுதிருக்கும்பொழுது, ஆயத்தீர்வையின் வரித்தளம் நிலையாக இருப்பதை, அண்மைக் காலத்தில் அதனின்றும் கிடைக்கும் வருவாய் குன்றந்தது பிரதிபலிக்கிறது. வருமானவரிகளைக் காட்டிலும் ஆயத்தீர்வைகள் வருமான மாறுதல்களால் மிகவும் மெதுவாகவே பாதிக்கப்படுகின்றன. 1950-க்கும் 1960-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் பொருளாதார வீக்கம் நிலவிய காரணத்தால் தனியாள் கார்ப்பரேஷன் வருமான வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய் அதிகரித்தது. இதனுல் ஆயத்தீர்வைகளின் முக்கியத்துவம் ஒப்புமையில் குறைந்தது. இருந்தாலும் காற்று எத்திசையிலிருந்து அடிக்கிறதோ அத் திசையில் இருக்கும் பிரதேசத்திற்கு வருவாய் நங்கூரமாக ஆயத்தீர்வைகள் பயன்படுத்தப்படுகின்றன. வருமான

இலாப வரிகளைவிட வருவாய் உற்பத்தியில் ஆயத்தீர்வைகள் மிகவும் நம்பக் கூடியனவாகவும் இருக்கின்றன. இவ் வரிக்குக் கூடுதல் அல்லது குறைந்த எண்ணிக்கையுள்ள இனங்களையோ அல்லது வணிகர்களையோ உட்படுத்துவதன் வாயிலாக ஆயத் தீர்வைகள் வருவாயைக் கணிசமான அளவு பெருக்குவதற்கும் அல்லது சுருக்குவதற்கும் வழி செய்கின்றன.[10]

**மாநில அரசாங்கங்கள் :** 1930ஆம் ஆண்டிலிருந்து பண்டவரிகளை மிகவும் கணிசமான அளவு மாநிலங்கள் பயன்படுத்துகின்றன. இப் பெருக்கம் இரு வழிகளில் ஏற்பட்டுள்ளது. குறிப்பிட்ட சில பண்டங் களின்மீது—சிறப்பாக மது, சிகரெட்டுகள், வேடிக்கைகள், பெட் ரோல்—புதிதாக ஆயத்தீர்வைகள் விதிக்கப்பட்டது முதலாவது வழி யாகும். சில்லறை விற்பனை வரிகளை விதித்தது இரண்டாவது வழி யாகும். அண்மை ஆண்டுகளில் மதுவிலிருந்து கிடைத்த வரி வருவாய்கள் பெருகியதற்குத் தலையாய காரணம் மதுவிலக்குச் சட் டத்தை ரத்து செய்த்தேயாகும். மதுபான வகைகளின் வாணிபத் தைக் கட்டுப்படுத்துவது தலையாயதாக மாநிலங்களையே சாரும். இக் கட்டுப்பாட்டுடன் இவற்றின் மீது வரியையும் மாநிலங்கள் விதிப்பதில் (அல்லது மாநிலங்களே மதுக்கடைகளை நடத்துவதில்) வியப்பொன்றுமில்லை. 1930-க்கு முன்பே பெட்ரோல் விற்பனையின் மீது எல்லா மாநிலங்களும் வரி விதித்தன. ஆனால், 1930-க் கும் 1936-க்கும் இடையில் இருபத்தொரு மாநிலங்கள் ஒரு முறை யேனும் இவ் வீதங்களை உயர்த்தின. 1936-ல் எல்லா மாநிலங் களிலும் ஒரு காலனுக்குச் சராசரி 3·85 டாலர் வரி விதிக்கப் பட்டது. 1951-ல் இச் சராசரி வரி 5·3 டாலராகவும், 1959-ல் நாற்பத்தெட்டு மாநிலங்களுக்கும் சராசரி வரி 6·04 டாலராகவும் உயர்ந்தது. சிகரெட்டுகள், பிற புகையிலைப் பண்டங்கள்மீது மாநிலங்கள் சற்று மெதுவாகவே வரி விதித்தன. 1937-ல் இருபத்தொரு மாநிலங்கள் சிகரெட்டின்மீது பிரத்தியேக வரிகள் விதித்தன. 1959-ல் இவ் வெண்ணிக்கை நாற்பத் திரண்டாகக் கூடியது. மாநிலங்கள் சற்றுப் பரவலாக உபயோ கிக்கும் பிற ஆயத்தீர்வைகளாவன : குதிரைப் பந்தயம், பதிவு செய்தல், கடன் பத்திரங்களை மாற்றுகை, தொடர் கடைகள் (chain stores).

மொத்த வரவு வரி, பொது விற்பனை வரிகள் இவற்றைத் தவிர்த்து மோட்டார் எரிபொருள்கள், மதுபான வகைகள், புகையிலை இவற்றின் மீது தலையாயதாக விதிக்கப்பட்ட ஆயத் தீர்வைகளிலிருந்து, 1958ஆம் ஆண்டில் மாநிலங்களின் மொத்த வரி வருவாயில் 35 சதவிகிதம் கிடைத்தது.[11] பொது விற்பனை

வரிகளையும், பொது வரவு வரிகளையும் சேர்த்தால் அவ் வாண்டில் மாநிலங்களின் மொத்த வரி வருவாய்களில் 63 சதவிகிதம் பண்டங்கள், சேவைகள் வரிகளிலிருந்து கிடைத்தன என்று அறிகின்றோம்.[12] சென்ற இருபத்தைந் தாண்டுகளில் மொத்த வரி வருவாயில் பிரத்தியேக ஆயத்தீர்வைகளிலிருந்து கிடைக்கும் வருவாய் ஓரளவு குறைந்திருந்தாலும், பிரத்தியேக ஆயத் தீர்வைகள், பொது விற்பனை வரிகள், மொத்த வரவு வரிகள் இவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயின் வீதம் மொத்த வரி வரி வருவாய்களில் கணிசமான அளவு உயர்ந்திருக்கிறது. இதற்குக் காரணம் இக் காலக் கூற்றில் சொத்து வரிக்குப் பதிலாக பொது விற்பனை வரிகளை மாநில வருவாய் முறைகளில் புகுத்தியதே யாகும்.

குறிப்பிட்ட ஆயத்தீர்வைகளைத் தவிர்த்து இரண்டாவது உலகப் போரின் இறுதியில் இருபத்து நான்கு மாநிலங்கள் விற்பனை வரிகளை விதித்தன.[13] இவ் விருபத்து நான்கு மாநிலங்களில் ஒன்று மட்டுமே 1930ஆம் ஆண்டுக்கு முன்பே ஒரு விற்பனை வரியை விதித்திருந்தது. வாணிப மந்த காலத்தில் சுருங்கிய தங்கள் வருவாய்களைப் பெருக்கிக் கொள்வதற்கும், கூட்டாட்சியின் மானியங்களைப் பெறுவதற்கான தகுதியைப் பெறுவதற்கும், 1932-க்கும் 1937-க்கும் இடையில் இருபத்திரண்டு மாநிலங்கள் விற்பனை வரியை மேற்கொண்டன. அதே சமயம் இவை சொத்து வரி விதிப்பைத் தல அரசாங்கங்களுக்கு விட்டுவிட்டன. 1940ஆம் ஆண்டுக்கும் 1950ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட ஆண்டுகளின் முற்பகுதியிலும் விற்பனை வரியின் உபயோகம் விஸ்தரிக்கப்பட்டது இரண்டாவது காலக் கூறுகும். ஏற்கனவே இவ் வரியை மேற்கொண்ட மாநிலங்களில் இவ் வரியின் வீதங்கள் ஏறியதுமன்றி, எட்டு மாநிலங்கள் தங்கள் வருவாய் அமைப்பில் விற்பனை வரிகளைப் பெரும் பகுதியாய்த் தொடங்கின. ஆகையினல் தற்பொழுது முப்பத்திரண்டு மாநிலங்களில் சில்லறை விற்பனை வரியோடு மொத்த வரவு வரிகளும் விதிக்கப்படுகின்றன. இதனல் இம் மாநிலங்களை 'விற்பனை மாநிலங்கள்' (sales tax states) எனலாம்.

நடப்பில் தற்போது (1959) மாநிலங்களிடையே விதிக்கப் படும் சில்லறை விற்பனை வரிகளின் வீதங்கள் 2 சதவிகிதத்தி லிருந்து 4 சதவிகிதம் வரை இருக்கிறது. அவை கீழ்வருமாறு பங்கீடு செய்யப்பட்டிருக்கின்றன :

2 சதவிகிதம் —13 மாநிலங்கள்
2½ சதவிகிதம்— 1 மாநிலம்
3 சதவிகிதம் —16 மாநிலங்கள்
3½ சதவிகிதம்— 1 மாநிலம்
4 சதவிகிதம் — 1 மாநிலம்

1952-ல் முப்பது மாநிலங்கள் விற்பனை வரிகளை விதித்தன. இதில் பதினொரு மாநிலங்கள் 1952-க்குப் பின்பு வரிவிதிப்பு வீதத்தை உயர்த்தியிருக்கின்றன; ஒரு மாநிலம் குறைத்திருக்கிறது; இருபது மாநிலங்கள் யாதொரு மாறுதலும் செய்யவில்லை. விற்பனை வரி வீதங்களைக் கூட்டுவதற்குச் சற்று எதிர்ப்பு இருக்கிறது. ஏனெனில் எந்த ஒரு மாநிலமும், அடுத்த மாநிலங்கள் இருக்கும் 'அணியிலிருந்து பிரிந்து'த் தன் எல்லைப்புறத்தில் உள்ள சில்லறை வியாபாரிகளுக்குச் சங்கடத்தை விளைவிக்க விரும்பவில்லை. இக் காரணத்தினால் வரிவீதங்களில் பிரதேசம் முற்றும் ஒரே படித்தான ஒற்றுமை காணப்படுகிறது. ஆயினும், இவ் வரி தேய்வு வீதமாக இருக்கிறதென்பதில் எல்லோருக்கும் கருத்து உடன்பாடே. வரி தேய்வு வீதமாக இருப்பதால் குறைந்த வருமானமுடைய கும்பல்கள்மீது ஒப்புமையில் கடும் வரிப் பளுக்கள் ஏற்படுவதும் அன்றி, வீதங்களில் ஏற்றம் செய்வது அருமையாகவும், மக்களின் எதிர்ப்பை ஈட்டுவதாகவும் இருக்கிறது.

சட்டத்தில் விலக்குகள் அளிக்கப்பட்டிருப்பதைப் பொறுத்தே பெரும்பாலும் ஒரு சில்லறை விற்பனைவரி எவ்வளவு பளுவுள்ளதாக அல்லது எவ்வளவு தேய்வு வீதமாக இருக்கிறதென்பது தெரியும். நுகர்வோரின் வருமானம் குறைவாகவும் இருந்து யாதொரு விலக்கும் அளிக்காமல் எல்லா நுகர்வுச் செலவின் மீதும் ஒரு சில்லறை விற்பனை வரியை விதித்தால், அது நுகர்வோர் வருமானத்தின் ஒவ்வொரு டாலரிலும் கூடுதல் வீதமாகவே இருக்கும். நுகர்வோர் வருமானம் கூடுதலாக இருந்தால் வரியின் வீதம் ஒவ்வொரு டாலரிலும் குறைவாகவே இருக்கும். இதற்குக் காரணம் வருமானம் பெருகும்பொழுது நுகர்வுச் செலவு வருமானத்தின் குறைந்த வீதமாக இருப்பதேயாகும். இங்குக் கூறப்பட்ட விஷயத்தை ஒரு கற்பிதமான எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம். யாதொரு விலக்கும் அளிக்காமல் 3 சதவிகிதத்தில் ஒரு விற்பனைவரி விதிக்கப்படுவதாக வைத்துக் கொள்வோம்.

| செலவு செய்யக் கூடிய வருமானம் | நுகர்வு நாட்டத் தின் சராசரி | வரி தாங்கு நுகர்வுச் செலவுகள் | 3% வரி | செலவு செய்யக் கூடிய வருமானத் தில் வரியின் % |
|---|---|---|---|---|
| 5,000 டாலர் | ·95 | 4,750 டாலர் | 142·50 டாலர் | 2·85 |
| 20,000 டாலர் | ·75 | 15,000 டாலர் | 450·00 டாலர் | 2·25 |

விற்பனை வரியிலிருந்து உணவைத் தற்போது விலக்கிவிட்டு, முதற் குடும்பம் திங்கள் ஒன்றுக்கு 125 டாலரும், இரண்டாம் குடும்பம் 200 டாலரும் உணவுக்காகச் செலவு செய்வதாக வைத்துக் கொள்வோம். (மேல் உபயோகித்த தலைப்புகளையே உபயோகித்தால்) கீழ்க்கண்ட புள்ளித் தொகைகள் தேறும் :

| | | | | |
|---|---|---|---|---|
| 5,000 டாலர் | ·95 | 3,250 டாலர் | 97·50 டாலர் | 1·95 |
| 20,000 டாலர் | ·75 | 12,600 டாலர் | 378·00 டாலர் | 1·85 |

இங்கே தெரிந்தெடுக்கப்பட்ட இரண்டு வருமான நிலைகளுக் கிடையேயும், உணவை வரியிலிருந்து விலக்கி விட்டால் வருமானத் தைப் பொறுத்த வரையில் விற்பனைவரி ஏறக்குறைய வீதாசார வரியாகி விடுகிறது.

1959ஆம் ஆண்டில் விற்பனை வரியை விதித்த மாநிலங்களில் மூன்றில் ஒரு பங்கிற்குச் சற்றுக் குறைவான மாநிலங்கள் உண வுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளித்தன.[14] வருமானத் தைப் பொறுத்த வரையில் பளுக்களில் வீதாசாரத்தைத் தோற்ற வளவிலாவது வைத்திருப்பதற்கு இவ் விலக்கு முக்கியமானதாக இருப்பினும், மூன்றில் ஒரு பங்கு மாநிலங்களுக்கும் குறைவாகவே உணவுப் பண்டங்களுக்கு விலக்கு அளித்தது வியப்பை யூட்டுகிறது. உணவுப் பண்டங்கள்மீது வரிவிதிப்பதற்குத் தலையாய காரணம் வருவாய் முடையே. குடும்பப் பட்ஜெட்டுகளில் உணவுப் பண்டங்கள் ஒரு பெரும் நிலையான அமிசமாக விளங்குகின்றன. உணவுப் பண்டங்களிலிருந்து ஏராளமான வருவாய் கிடைக்கிறது. மாநிலங்கள் உணவுப் பண்டங்களுக்கு விலக்களிக்க முன்வராது கருமித்தனமாக இருப்பதற்கு இன்னொரு காரணம் கூட்டாட்சியின் தனியாள் வருமானவரி மிகவும் வளர்வீதமாக இருப்பதனால், மாநில வரிகளில் ஓரளவு தேய்வுவீத வரிகளைச் சேர்த்துக் கொள்ளுதல் வரிசெலுத்துவோர் பொறுக்கக் கூடியதாக இருக்கும் என்பதே. வீதப்பட்டியலை மேலெழுந்தவாரியாக ஒரு முறை பார்த்தால் எவ்வளவு வளர்வீதமாகத் தெரிகிறதோ, அவ்வளவு வளர்வீதமாக செயல் முறையில் வருமானவரி இல்லை யென்பதை

நாம் முன்னரே நம்முடைய கூட்டாட்சியின் வருமானவரி ஆய்வில் கண்டோம். மாநில வரிவிதிப்பில் தேய்வு வீதத்தை ஒரு நல்ல அம்சமாகக் கொள்ளுவது கேள்விக்குரியதே.

மாநில விற்பனை வரிகளில் எல்லா சேவைகளுக்கும் அல்லது கிட்டத்தட்ட எல்லா சேவைகளுக்கும் பொதுவாக விலக்களிக்கப் பட்டிருக்கிறது. பல மாநிலங்கள் தற்காலிகமாகத் தங்குபவர்களிடமிருந்து வசூலிக்கும் அறை வாடகைகள் மீதும், கேளிக்கைகள் மீதும், இவை போன்ற சேவைகள்மீதும் விற்பனை வரிகளைத் திணிக்கின்றன. ஆனால், பொதுவாகப் புலனாகும் சொத்தின்மீதே இவ் வரி போடப்படுகிறது. ஒரு வரம்புக்குமேல் வருமானம் உயரும்பொழுது, கூடுதலான வீதாசாரம் சேவைகளின்மீது செலவழிக்கப்படுகிறது என்பது யாவரும் அறிந்த உண்மையாகும். இதிலிருந்து உயர்ந்த வருமானத்தையுடைய பொருளாதாரங்களில் சேவைகள் பொதுவாக வரி போடப்படாத பிரதேசமாகும். இச் சேவைகளை வருவாய் இனமாகக் கொண்டு வரி விதிக்கலாம். இதில் சில தலையாய ஆட்சிப் பிரச்சினைகள் எழலாம். ஆனால், இதை விடுத்தால் விற்பனை வரி விதிப்பிலிருந்து சேவைகளை விலக்குவதால், பெருத்த வருமானங்களைப் பொறுத்த வரை, இவ் வரி மிகவும் தேய்வுவீதமாக இருக்கும்.

பிரத்தியேகமாக ஆயத்தீர்வைகள் அல்லது பிரத்தியேகமாக மொத்த வரவு வரிகள் ஏற்கனவே விதிக்கப்பட்டிருந்தால், அப் பண்டங்களுக்கு விற்பனை வரிகளிலிருந்து பல மாநிலங்கள் விலக்கு அளிக்கின்றன. இவ்வாறு விற்பனை வரிகளிலிருந்து பெட்ரோலுக்கும், சிகரெட்டுகளுக்கும் பரவலாக விலக்களிக்கப்பட்டிருக்கின்றன. இதற்கான காரணங்களைக் கூறத் தேவையில்லை.

செய்தித்தாள்கள் விற்பனைக்குப் பொதுவாக இவ் வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கிறது. சற்றுக் குறைந்த அளவு சஞ்சிகைகளுக்கும் (magazines) விலக்களிக்கப்பட்டிருக்கின்றன. இதற்குத் தக்க காரணம் உளது. வாங்குவோரிடமிருந்து ஒரு வரியை வசூல் செய்வதற்கு விற்பவர்கள் ஒரு குறைந்த அளவுக்குமேல் விலையில் விற்க வேண்டும். இந்த அளவுக்கும் குறைவான விலையில் செய்தித்தாள்கள், சஞ்சிகைகள் விற்றால் விற்பனை வரியை வசூலிக்க முடியாது. இவ்வாறு ஒரு வாணிகர் 20 செண்டுக்குக் குறைவாக விற்றால் வாங்குவோரிடமிருந்து வரியை வசூலிக்க முடியாதெனவும், ஆனால், விற்பனைகளிலிருந்து கிடைத்த மொத்த வரவுகள் ஒரு விற்பனை வரிக்கு உட்படுத்தப்பட்டிருந்தால், வரியைப் புரட்டுவதற்கு மிகவும் கஷ்டப்படும் ஒரு வியாபாரியைத்

தனியே பொறுக்கியெடுத்தற்கு ஒப்பாகும். வரிவிதிப்புக்கு உள்ளாவதால் பத்திரிகைச் சுதந்திரம் ஓரளவு குறைகிறது என்ற எண்ணத்தை ஓரளவு பிரசாரம் செய்ததன் விளைவாகவே செய்தித்தாள்களின் விற்பனைக்குப் பொதுவாக வரியிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது என்ற நம் முடிவுக்குத் திண்ணமாக நாம் வரலாம். விலக்களிக்கப்பட்ட குறைந்த அளவுக்கும் தாழ்வாகப் பிற பண்டங்களை விற்போர், ஒவ்வோர் அலகையும் விற்றாலும், அவர்களுக்குப் பத்திரிகைகளுக்கு அளித்த சலுகைகளைத் தரவில்லை என்பதிலிருந்து இது புலனாகிறது. ஆனால் அவர்கள் மொத்த வரவுகளின்மேல் வரி செலுத்தவேண்டும்.

மாநில விற்பனை வரிகளில் பொதுவாகக் குடியானவர்களுக்குக் குறிப்பிட்ட விலக்குகள் அளிக்கப்படுகின்றன. இவ்வாறு அவர்கள் பிரத்தியேகமாக நடத்தப்படுகின்றனர். தருக்க முறைப்படி ஆடு மாடுகளின் தீனி, விதை, இராசயன உரங்கள், பூச்சிக்கொல்லிகள் இவற்றின்மீது சில்லறை விற்பனைவரிகள் போடக்கூடாது. ஏனெனில் இவை யெல்லாம் யாதாயினும் இறுதிநிலைப் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கு உபயோகமாகும் சாதனங்களாகும். இவ் விறுதி நிலைப் பண்டங்கள் விற்பனைவரிக்கு உள்ளாகின்றன அல்லது பிரத்தியேக விலக்குகள் அளிக்கப்படுகின்றன. குடியானவர்கள் மட்டுமின்றி வேறு சிலருக்கும் இவ் விலக்கு அளிக்கப்படவில்லை. எந்திரங்களை வாங்குவதற்கோ அல்லது இறுதிநிலைப் பண்டங்களின் வேறு சாதனங்களை வாங்குவதற்கோ இவ்வித விலக்குகள் அளிக்கப்படவில்லை.

இறுதியாக மருந்துகளுக்கு விலக்கு அளிப்பது சாதாரணமாகக் காணப்படுகிறது. அரசாங்கத்திற்கும், கல்வி, அறநிலையங்களுக்கும், வாங்கும் பண்டங்களுக்குப் பொதுவாக விலக்கு அளிக்கப்படுகிறது. சில மாநிலங்கள் குழந்தைகள் உடை போன்றவற்றிற்கும் பிரத்தியேக விலக்குகள் அளிக்கின்றன. இவ் விலக்குகளுக்கான காரணங்களை விரித்துக் கூறவேண்டிய அவசியமில்லை.

**தல அரசாங்கங்கள்:** இரண்டாம் உலகப்போரிலிருந்து விற்பனை வரிகள், மொத்தவரவுவரிகள், பிரத்தியேக ஆயத்தீர்வைகள் இவை கூடுதலான அளவில் தல அரசாங்கங்களால் பயன்படுத்தப்படுகின்றன. ஒப்புமையில் இவ் வரிகளின் வருவாய் முக்கியத்துவத்தைப் பார்த்தால் தல அரசாங்கங்கள் இவற்றை அதிகமான அளவு பயன்படுத்தவில்லை என்பது தெரியவரும். இவ் வகை வரிகளை மக்கள் தொகை மிகுந்த இடங்களிலும், வாணிபக் கேந்திரங்களிலுமே உபயோகப்படுத்தவேண்டும் என்பது இன்றியமையாதது; உண்மை

யானதும் கூட. 1957ஆம் ஆண்டில் தல அரசாங்கங்கள் 654 மில்லியன் டாலரைப் பொது விற்பனைவரி மூலமாகவும், மொத்த வரவு வரிகள் மூலமாகவும் திரட்டின. குறிப்பிட்ட ஆயத்தீர்வைகளின் மூலம் 279 மில்லியன் டாலரைத் திரட்டின.[15] அவற்றின் மொத்த வருவாயில் இஃது 63 சதவீதமே இருந்தது. நியூயார்க் நகரத்தை நீக்கிவிட்டால் இத் தொகைகள் முறையே 287 மில்லியன், 232 மில்லியன் டாலராகவும், 3·9 சதவிகிதமாகவும் இருக்கும். 250,000-க்கு மேற்பட்ட மக்கள் தொகையைக் கொண்ட நகரங்களை நீக்கிவிட்டால்[16], பொது விற்பனைவரி வருவாய் 162 மில்லியன் டாலராகவும் பிரத்தியேக விற்பனைவரி வருவாய் 95 மில்லியன் டாலராகவும் இருக்கும். இரண்டையும் சேர்த்தால் அவற்றின் மொத்தவரி வருவாய் 2·3 சதவிகிதமாகும்.

தல அரசாங்கங்கள் இவ் வரிகளைப் பயன்படுத்துவதை நகரங்களின் பருமனைக் கொண்டும், புவியியல் அடிப்படையைக் கொண்டும் சுட்டிக் காட்டி விடலாம். சுமார் பத்து மாநிலங்களில் உள்ள நகரங்கள் பொது சில்லறை விற்பனை வரிகளை 1957-ல் விதித்தன. கலிபோர்னியா, இல்லினொய்ஸ், மிஸிஸிப்பி நகரங்களே மிகக் கடுமையான வீதங்களைக் கையாண்டன. பல நகர விற்பனை வரி வீதங்கள் மிகக் குறைவாக இருப்பதற்குக் காரணம் இந் நகரங்களைத் தம்மகத்தே கொண்ட மாநில அரசாங்கங்கள் விற்பனை வரியைப் பெரிய வருவாய் அளவுகோலாகப் பயன்படுத்துவதே யாகும்.

குறிப்பிட்ட பண்டங்களின்மீதான விற்பனைவரிகளும், மொத்த வரவு வரிகளும் மிகவும் பரவலாகக் கையாளப்படுகின்றன. இவ் வரிகள் பொதுவாகப், பொது வசதிகள், புகையிலைப் பொருள்கள், வேடிக்கைகள், மோட்டார் எரிபொருள்கள், மதுபானங்கள் இவற்றின்மீது இதே வரிசைக் கிரமத்தில் போடப்படுகின்றன. நகரங்கள் குறிப்பிட்ட விற்பனை வரிகளையும், மொத்த வரவு வரிகளையும் கையாளும்பொழுது அவை ஏற்கனவே மாநிலங்களால் பிரத்தியேகமாக வரிவிதிக்கப்பட்ட விளையுள்கள், சேவைகள் பேரிலும், கூட்டரசாங்கத்தார் பிரத்தியேக ஆயத் தீர்வைகள் விதிக்கப்பட்ட விளையுள்கள், சேவைகள் பேரிலும் குவிக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது. இதனால் பெட்ரோல், புகையிலை, வெறிநீர் (alcohol) இப் பண்டங்களின் மீதும், எல்லா விடங்களிலும் வேடிக்கைகளின் மீதும் கடுமையான வரிப்பளுக்கள் ஏற்படுகின்றன. பிரத்தியேக ஆயத்தீர்வைகளுக்கு இவ் வினங்களைத் தல அரசாங்கங்கள் தேர்ந்தெடுக்கும்பொழுது இப் பிரதேசங்களில் மிகக் கடுமையான பளுக்கள் ஏற்படுகின்றன.

**விற்பனை வரிகளைப் புரட்டுகை**

விற்பனை வரிகள் முழுதும் முற்பட்டுப் புரட்டப்பட்டு வாங்கும் விலை கூட்டப்படுகிறது என்பது இவ் வரிகளின் நிலைப் பாட்டைப் பற்றிப் பொதுவாக மக்கள் எல்லோரும் ஏற்றுக் கொண்ட முடிவாகும். இவ் வெடுகோள் உண்மையில் நுகர்வு வரிக் கருதுகோளின் ஓர் இன்றியமையாத அமிசமாகும். முற்பட்டுப் புரட்டுகையை நாம் ஒத்துக்கொண்டாலொழிய நாம் விரும்பும் விளைவுகளை, நுகர்வு வரியை செலவைக் கட்டுப்படுத்துவதற்கேற்ற கருவியாகப் பயன்படுத்துவ்தன் மூலம் எதிர்பார்க்க முடியாது. நுகர்வு வரியைச் செலவைக் கட்டுப்படுத்துவதற்கேற்ற கருவி யாகப் பயன்படுத்தினல், காப்புச் சுங்க வரியை விதித்தால் என்ன விளைவுகள் ஏற்படுமோ, அதே விளைவுகள் தான் ஏற்படும். அதாவது பண்டத்தை வாங்குவதும் உபயோகிப்பதும் குறையும். வருவாய்க் காக மட்டும் ஆயத்தீர்வைகளை விதிக்க வேண்டுமென்றல் பொது வாகப் பரவலாகப் பயன்படுத்துவதும், குறைந்த தேவை நெகிழ்ச்சி உள்ளதுமான இனங்களைத் தெரிந்தெடுக்கவேண்டும். வரியை விலை யுடன் கூட்டுவதனல் நுகர்வு சிறிதே ஒப்புமையில் குறையும் என எதிர்பார்க்கப்படுகிறது. கூட்டாட்சியினைத் தனியாள் வருமான வரியில் மிகவும் கடுமையான வளர்வீதம் இருப்பதைச் சமன் செய் வதற்கும், வரிமுறையின் பளுக்கள் முழுமையையும் வரிசெலுத்தும் திறனுக்கேற்ப சரிக்கட்டுவதற்கும், விற்பனை வரியை மேற் கொள்ளுதல் விரும்பத்தக்கது எனவும் வாதிக்கப்படுகிறது. இதிலிருந்து 'நுகர்வு' (consumption) வரிகளின் பளு நுகர்வோர்கள் மீதே இருக்கிறதெனவும், அவர்கள் பெரும்பகுதியும் குறைந்த வருமானம் உள்ளவர்களா யிருக்கிறர்கள் என்பதும் போதரும்.

ஒரு பண்டத்தின் உற்பத்தி அல்லது விற்பனை அலகின்மீது வரி விதிப்பதால், பண்டத்தின் ஆக்கச் செலவு அல்லது விற்பனைச் செலவு அதிகரிக்கிறது. வரி தனிப் பயனுள்ளதாக இருந்தால் (ஒவ்வொரு அலகு உற்பத்தி அல்லது விற்பனை ஆகும்பொழுது ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கவேண்டும்), அவ் வரி ஒவ்வொரு அலகின் ஆக்கச் செலவிற்கும் மாறுத கூட்டலாக இருக்கும். ஆக்கச் செலவை, இறுதி நிலையைக் கொண்டோ அல்லது சராசரியைக் கொண்டோ எப்படி அளந்தாலும் பயன் ஒன்றுதான். ஒரு பண்டத்தின் விலையில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் பெருமான வீத வரியாக இருந்தால், ஒவ்வோர் அலகின் ஆக்கச் செலவு மாறிக் கும் குறைவாகவே கூட்டமுடியும். ஏனெனில், பொதுவாக எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக விற்கப்படுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு ஓர் அலகின் விலை குறைவாகவிருக்கும். மொத்த விற்பனை, அல்லது விற்பனையாளரின் மொத்த வருமானம் இவற்றின்மீது

விதிக்கப்படும் வரிகளும் இவ் வகையினைச் சேர்ந்தனவே. ஆக்கச் செலவுடன் வரியைக் கூட்டுவதால் ஏற்படும் பொதுவான விளைவு சப்ளை குறைவதாகும்—அதாவது, வரியில்லாதிருந்தால் குறிப்பிட்ட விலைகளில் எவ்வளவு விற்பனைக்கு வருமோ அக் கணியங்களை விடக் குறைவாக விற்பனைக்கு வருவதேயாகும். நாம் நிலைப்பாட்டைப் பற்றிப் பொதுப்படையாகச் சர்ச்சை செய்ததிலிருந்து இறுதிநிலை ஆக்கச் செலவு, வரியினால் கூடுகிறதெனவும், இதன் விளைவாகக் கூடுதல் விலையில் குறைந்த அளவே விற்பனையாகிறதெனவும் கண்டோம். அறைகுறைப் போட்டி நிலைகளில் இறுதி நிலை வருவாயும் இறுதி நிலை ஆக்கச் செலவும் எங்கே ஒன்றையொன்று வெட்டுகின்றனவோ, அங்கு அதாவது, அதுதான் விற்பனையாளரின் உத்தமமான வெளிப்பாட்டை நிர்ணயிக்கிறது. இவ் வெட்டுதல் இடப்பக்கம் நகரநகர, மார்க்கட்டு விலையும் ஏறும். தூய போட்டியின்கீழ் மார்க்கட்டு சப்ளையில் இறக்கம் ஏற்பட்டால் விலைகள் கூடுகின்றன. இதனால் தனிப்பட்ட விற்பனையாளருக்கு முன்னிற்கும் படுக்கைத் தேவைக் கோடும் உயர்கிறது. ஆகையினால் பொதுவாக இவ் வரித் திணிப்பினால் விலை ஏறுகிறது என்பது கண்கூடு. இக் காட்சிப் பிரமாணத்தை அடிப்படையாகக் கொண்டே முற்பட்டுப் புரட்டுகையைப் பொறுத்து பொதுவான முடிவு செய்யப்படுகிறது.

முற்பட்டுப் புரட்டுகையின் வரம்புகள் (Limitations upon Forward Shifting): ஒரு பண்ட வரியைப் போடுவதால் விலை ஏறுகிறது என்பதைக் கொண்டே வரி பூராவும் முற்பட்டுப் புரட்டப்படுகிறது எனக் கொள்ளமுடியாது. வரியில் எவ்வளவு வீதாசாரம் புரட்டப்படுகிறது என்பது தேவையின் நெகிழ்ச்சியையும், சப்ளையின் (ஆக்கச் செலவு) நெகிழ்ச்சியையும் பொறுத்திருக்கிறது. முற்றும் தேவை நெகிழ்ச்சியில்லாததாக இருக்குமானால் (ஒரு செங்குத்துக் கோடு, விலையேறுவதனால் வாங்கப்பட்ட கணியம் குறையாது) வரி பூராவும் புரட்டப்பட முடியும்[17]. மறுகோடியில் தேவை எல்லையற்ற நெகிழ்ச்சி உடையதாக இருக்குமானால் (ஒரு படுக்கைக் கோடு, கூடுதல் விலையில் யாதொரு கணியமும் வாங்கப்பட மாட்டாது) வரியை முற்பட்டுப் புரட்டவே முடியாது. இப்பொழுது வரியின் நிலைப்பாடு முற்றும் விற்பனையாளர் மீதே சாரும். இதனால் வேறு சில தலையாய பொருளாதார விளைவுகளும் ஏற்படும். அவை, உற்பத்திக் காரணிகளில் சில வேலையின்றிப் போவதும் (உற்பத்திக் குறைவுடன் இது உடனிலையாக நிகழ்வது) நுகர்வாகும் கணியத்தில் இறக்கம் ஏற்படுவதும் ஆகும்.

சாதாரணமாகப் பொதுவான நிலை, பூஜ்யத்திற்கும் எல்லையற்ற நெகிழ்ச்சிக்கும் இடையில் இருக்கும். இம்மாதிரியான நிலையில்

நிலைப்பாட்டின் ஒரு பகுதி வாங்குவோரின்மீதும், மற்றொரு பகுதி விற்பவரின்மீதும் இருக்கும். தேவை அதிக நெகிழ்ச்சி உடைய தாக இருக்குமானால்—மற்றவை மாறாதிருப்பின்—நிலைப்பாட்டின் அதிக வீதாசாரம் விற்பவரின்மீதே இருக்கும். ஆனால், மற்றவை இன்றியமையாது (தலையாயதாகச் சப்ளையின் நெகிழ்ச்சி) மாறா திருப்பதில்லை. சப்ளை, ஒப்புமையில் நெகிழ்ச்சி இல்லாததாக இருக்கும்பொழுது—அதாவது, வெளிப்பாடு ஏற்றத்திற்கு ஏற்ப இறுதி நிலை ஆக்கச் செலவுகள் மிகவும் ஏறியும், வெளிப்பாடு இறக்கத்திற்கு ஏற்ப இறுதிநிலை ஆக்கச் செலவுகள் மிகவும் சரிந்தும்—ஆக்கச் செலவில் சேமிப்பு (வரி நீங்கலாக), வெளிப்பாடு குறையுந்தோறும் விரைவாக ஏறுகிறது. இதனால் வெளிப் பாட்டில் சிறிது குறைத்தும் விலையில் சிறிது ஏற்றியும் வரியைக் கட்டலாம் என்று தோன்றுகிறது[18]. இங்ஙனமாக ஆக்கச்செலவுகள் நெகிழ்ச்சியுடையனவாக இருக்கும்பொழுது புரட்டப்படுவதைக் காட்டிலும், ஆக்கச்செலவுகள், ஒப்புமையில் நெகிழ்ச்சியில்லாதன வாக இருக்கும்பொழுது வரியின் ஒரு சிறு வீதாசாரமே வாங்கு வோர்களின்மீது புரட்டப்படுகிறது.

ஆயினும், நம்முடைய முன்னைய நிலைப்பாட்டின் பகுத் தாய்வை நினைவுகூர்வோமானால், நெடுங்காலத்தில் முற்பட்ட புரட்டுகைக் குரிய சாத்தியக்கூறுகள் உரமூட்டப் படுவதைக் காண லாம். இறுதிநிலை நிறுவனங்களின் மறைவு, தேவையின்மீது விற்ப னைத் திறத்தினால் ஏற்பட்ட விளைவு, உற்பத்தி நுட்பவினை முறை களில் மாறுதல்களைப் புகுத்துவது இவற்றின்மூலம், தேவையோ, ஆக்கச் செலவோ, அல்லது இரண்டுமோ பாதிக்கப்படலாம். ஆகவே, வரியைச் செலுத்திய பின்பும் இலாபங்களைப் பெறலாம். இரண்டாம் உலகப் போர்க்காலத்திலிருந்து நிலவி வருவதைப் போன்று, ஒரு காலக்கூறு முற்றும் தேவை வலிவாகவும், ஏறிக் கொண்டும் இருக்குமானால், இது சிறப்பாகப் பொருந்துவதாகும்.

பண்டங்களின் மீதான ஒரு வரியைப் புரட்டும் அளவை, நிறுவனக் காரணிகளும் பாதிக்கும். இவற்றில் சிறப்பானது வரியின் அகத் தடக்கமே (coverage)யாகும். தேவையைப் பாதிப் பதன் மூலமாக அகத்தடக்கம் புரட்டுகையை உண்மையில் பாதிக் கிறது. ஒரு சிறிய புவியியல் பகுதியில் வரி விதிக்கப்பட்டு, வரி விதிக்கப்பட்ட பிரதேசத்திற்கு அப்பாலிருந்து பண்டத்தை வாங்குவது கடினமாக இராத பொழுதும், வரியைப் புரட்டுவது ஒப்புமையில் கடினமாகும். வரி போடப்படாத பிரதேசத்தி லிருந்து பண்டம் தட்டுப்பாடின்றிக் கிடைக்கும்பொழுது, வரிப் பிரதேசத்தில் விலையேறினால், வெளியிலிருந்து வாங்குவது உர

மூட்டப்படும். இதிலிருந்து வரிப்பிரதேசத்தில் பண்டங்களுக்கு ஒப்புமையில் நெகிழ்ச்சி இருக்கிறது என்பதும், வரியைப் புரட்டு கைக்குப் பெருத்த எதிர்ப்பு இருக்கிறது என்பதும் புலனாகும். வரி விதிக்கப்படும் மார்க்கட்டு எத்துணைத் தனியாக ஒதுக்கப் படுகிறதோ, அத்துணைத் தேவையும் குறைந்த நெகிழ்ச்சி உடைய தாகவே இருக்கும்[19]. ஒரு குறுகிய புவியியல் பரப்பில் பிரயோ கிக்கப்படும் விற்பனை வரிகளைப் புரட்டுகையில் உள்ள சங்கடத்தை அறிந்தே விற்பனைவரி மாநிலங்களில் பல 'உபயோக வரிகளை' (usc taxes) மேற்கொண்டுள்ளன. வெளியே வாங்கப்பட்டு வரிப் பரப்புக்குள் உபயோகத்திற்காகக் கொணரப்படும் பண்டங் களின்மீது சமதையான பளுக்களை இவ் வரிகள் சுமத்துகின்றன. பரப்புக்கு வெளியே வாங்குவதற்கான வரிமுனைப்பை அகற்றுவதன் வாயிலாக வருவாய்களைப் பெருக்குவதும், அல்லது அவ்விதம் வாங்கப்பட்டவைகளிலிருந்து வரி வசூல் செய்வதும், உள்நாட்டு விற்பனையாளருக்கு வரியினால் விளைந்த போட்டியின் பாதகத்தை அகற்றுவதும் இவற்றின் நோக்கங்களாகும். இதே போன்று பதிலிகளின்மீது வரி விதிக்காது ஒரு குறுகிய பட்டியலில் கண்ட பண்டங்களின்மீது வரிவிதிப்புச் செய்வது முற்பட்டுப் புரட்டுகை யைக் கடினமானதாக ஆக்கும். விலைகளைத் தூக்கி வரியைப் புரட்ட முயற்சித்தால், வாங்குவோர்களில் பலர் வரிக்குள்ளான பண்டங்களை வாங்காது பதிலிகளை வாங்குவார்கள்.

பண்ட வரிகளின் கணிசமான பகுதி முற்பட்டுப் புரட்டப் படுகிறதென்பதை விலைக்கருதுகோள் தெளிவாகக் காட்டுகிறது. ஆயினும், ஒரு குறிப்பிட்ட உதாரணத்தில் வரியில் எத்துணைப் பகுதி உண்மையில் புரட்டப்படுகிறதென்பது பலதிறப்பட்ட விளையுள்கள், பலதிறப்பட்ட மார்க்கட்டுகள், பலதிறப்பட்ட விற்பனையாளர்கள் என்ற பல காரணிகளால் தீர்மானிக்கப் படுகிறது. குறுங்காலத்தில் வரி முழுமையும் புரட்டப்படுகிற தென்பதை ஒரு தோராயமான பொதுமையாகக் கொள்ளலாமே தவிர முற்றும் உண்மையென்று கொள்ளுதல் அறிவுக்குப் பொருந்தியதன்று. வரிச்சட்டத்திற்கு இணங்க நடப்பதிலும், வரியைப் புரட்டுகையிலும், தங்களுக்கு ஏற்படும் செலவுகள் இவற்றை மட்டும் கொண்டே, விற்பனை வரிகளின் திணிப்பிற்கு வணிகர்கள் தீவிர எதிர்ப்புத் தெரிவிப்பதை, எடைபோடக் கூடாது;[20] தங்களை ஒரு கும்பலாகப் பாவித்துக்கொண்டு பார்க்கும் பொழுது நிலைப்பாட்டின் ஒரு பகுதி, தற்காலிகமாகவாவது தங்கள் பேரில் விழுகின்றது என்பதை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். நிலைப்பாடும், பிற விளைவுகளும் பெருமளவு பரவலாக்கப்பட்ட பொழுதிலும், நுகர்வு வரிகளைப் பெரிதும் நம்பியிருக்கும். ஒரு வரி

முறை, கனத்த பளுவுடன் நுகர்வோர் வருக்கத்தின்மீது விழுதல் இன்றியமையாததாகும். நுகர்வோரில் பெரும்பாலோர் குறைந்த வருமான வருக்கத்தைச் சேர்ந்தவர்களாதலாலும், நுகர்வு வரியும் வீதாசாரமாக இருப்பதாலும், இவ்வித வரிமுறையால் விலையும் நிலைப்பாட்டையும், நிலைப்பாட்டைத் தாங்குவோரின் வரி செலுத்தும் திறனையும் ஒப்பிடுகையில் தேய்வு வீதமாக விளைவுகள் இருக்கின்றன. வாழ்க்கைச் செலவினங்களுக்குத் தாராளமாக அரசாங்கம் விலக்களித்தால் இவ்வரி விளைவில் தேய்வு வீதமாக இல்லாமலிருக்கலாம். விற்பனை வரிகளுக்கான உற்சாகத்தை, திறனுக்கேற்ப வரி செலுத்துகையிலிருந்து பின்னடைவதாகவே கொள்ள வேண்டும்.

**புரட்டுகைக்கான சட்டத் துணைக் கருவிகள்** (Legal Aids to Shifting) : சட்டசபை உறுப்பினர்கள், பண்டவரிகளை முற்பட்டு நுகர்வோருக்குப் புரட்டவேண்டுமென்றே கருதுகின்றார்கள். புரட்டுகைக்கானப் பொருளியல் தடங்கல்களையும், பிற தடங்கல் களையும் மனத்தில் கொண்டு புரட்டுகையைச் சுளுவாக்கும் பொருட்டுச் சட்டத்திலேயே விதிகள் சாதாரணமாகச் சேர்க்கப் படுகின்றன. இவ்விதமான விதிகளில் ஒன்றுதான் மேற்கூறிய உபயோக வரி. வரி விதிக்கப்பட்ட பரப்பிலிருந்து வெளியே வாங்குவதில் உள்ள வட்டத்தை (Premium) இவ் வுபயோக வரி அகற்றுகிறது.' விற்பனையாளரின் மொத்த விற்பனைகளின்மீது வரி விதிக்காது அவர் செய்யும் ஒவ்வொரு பேரத்தின் மீதும் தனித் தனியே வேருக வரிவிதிக்கும் முறையை சில மாநிலங்கள் கையாளு கின்றன. இவ் வரி ஆக்கச் செலவின் ஓர் உறுப்பு என்றும், தொழில் நடத்துவதற்கான பொதுவான செலவு அன்று என்றும், பண்டத்தை வாங்கும்போது இவ் வரியைச் செலுத்தவேண்டும் என்றும் குறிப்பிடுவதே இச் சட்ட விதியின் நோக்கமாகும். சட்ட சபையின் கருத்து, வரியைப் புரட்ட வேண்டுமென்பதே என்பதைக் கொள்வாரும் கொடுப்பாரும் மனத்தில் கொள்வதற்கு இது துணை செய்யலாம். இதனுல் விலையுடன் கூட்டி வரியைப் புரட்டுகைக்கு, வாங்குவோர் கூறும் எதிரிடை வாதங்களைத் தவிர்ப்பதோடு, வரியைப் புரட்டுகையின் முக்கியத்துவத்தை விற்பனையாளருக்கும் இவ் விதி உணர்த்துகிறது. கச்சிதமான வரிப்புரட்டுகையைச் சுளுவாக்க வேண்டிச் சில மாநிலங்கள் 'வரி ஒப்புகளை' (tax tokens) ஒன்று, இரண்டு அல்லது ஐந்து மில்கள் (mills) என்ற இனங்களில் அச்சடிக்கின்றன அல்லது பதிப்பிக்கின்றன (struck off). இதனுல் குறைந்த அளவு பண்டங்கள் வாங்கினுல் கூட, வரிகளை வீதத்துக் கேற்பக் கச்சிதமாக வசூல் செய்வது சாத்தியமாகிறது. ஆயினும், ஒப்புத்திட்டம் பரவலாக இல்லை. அதனுல் ஆட்சியின் செலவு

அதிகமாவதுடன் பண்டங்களை வாங்குவோர்களுக்கும் தொல்லை யாக இருக்கிறது. வாங்கும்பொழுது வரியை அடுத்த செண்டாகக் கணக்கிட்டு மதிப்பிடுவதே எளியதும், வழக்கத்தில் பயன்படுத்தப் படும் முறையுமாகும்.

இறுதியாகச் சில மாநிலங்களில் விற்பனை வரிச் சட்டம், வரி முழுதும் நுகர்வோரின்மீது முற்பட்டுப் புரட்டவேண்டுமென்று திட்டவட்டமாகக் கூறுகிறது. விற்கும்பொழுது விலையுடன்கூட (உதாரணமாக) 3 சதவிகிதம் வசூல் செய்யவேண்டும் என்று வேண்டுவதைக் காட்டிலும், சற்று மிகையாகவே இவ் விதியின் கருத்து இருப்பதாக மனத்திற்குப் படுகிறது. இவ்வாறு 'வரி' வசூலிக்கப்பட்டாலும், வரியின் ஒரு பகுதி விற்பனையாளரால் செலுத்தப்படுவதும் சாத்தியமே. வரியின் தொகைக்கு ஏற்ப விற்பனையாளர் விலையைக் குறைத்தும் கொடுக்கலாம். இவ்வாறாக விலையுடன் வரியைக் கூட்டிய தொகை, வரியில்லாதிருந்தால் என்ன விலை இருந்திருக்குமோ அதைவிடக் கூடுதலாக இல்லாம லிருக்கலாம். அங்ஙன மிருக்குமானால் வரி புரட்டப்படாது. வரி யைப் புரட்ட வேண்டும் என்ற சட்டவிதியை அமுல் செய்வது கடினம். வரியின் ஒரு பகுதியைத் தானே தந்துவிடுவதாக அறிவித்து எல்லா வியாபாரத்தையும் எந்த ஒரு விற்பனையாளரும் ஈர்க்காதவாறும், அதனால் அவருக்குப் போட்டியிடுவதில் அநுகூலம் ஏற்படாதவாறும் இவ் விதி செய்கிறது.

### விற்பனை வரிக்கான வாதங்கள்

1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட பத்தாண்டுகளில் புதிய வருவாய்களைத் தேடும் வேட்டையின் விளைவாகப் பல மாநிலங் களில் பண்டவரிகள் விதிக்கப்பட்டன. இப் பண்டவரிகளில் ஆயத் தீர்வைகளும் விற்பனை வரிகளும் அடங்கும். அதே காலக் கூற்றில் கூட்டாட்சியும் ஒரு விற்பனை வரியை விதிக்கவேண்டும் என்று ஒரு கிளர்ச்சி நடந்தது. மீண்டும் 1942-லும், 1943-லும் அரசாங்கம் கூடுதல் வருவாய்களைத் தேட முற்பட்டபொழுது, கூட்டாட்சி விற்பனை வரியை விதிக்கவேண்டும் என்பதற்கு அதிக முனைப்பு ஏற் பட்டது. போர் முடிந்தவுடன் இவ் வரியைக் கூட்டாட்சி மேற் கொள்ளவேண்டும் என்ற கிளர்ச்சியின் தீவிரம் குறைந்தாலும், இன் னும் சிலவட்டாரங்களில் இக் கருத்து தீவிரமாகக் காணப்படுகிறது. அண்மையில் நடந்த இக் கிளர்ச்சியில் இரண்டு குறிக்கோள்கள் மேலோங்கி நின்றன. அவை யாவன: 1. போர்க்கடனைக் குறைப் பதற்கு வருவாய் திரட்டவேண்டும்; கூட்டாட்சியின் வருமான வரிகளின் பளுக்களைக் குறைக்கவேண்டும். 2. வருமானங்களின்

மீது கடுமையாக வரிவிதிக்கவேண்டும் என்று கூட்டாட்சி முடிவு செய்த பின்பு, கூட்டாட்சி விற்பனை வரியை விதிக்கவேண்டும் என்ற கிளர்ச்சி படுத்தது. போர்க் காலத்திலிருந்து விற்பனைவரி மாநிலங்களிடையே ஒரு விவாதத்திற்குரிய பிரச்சினையாக இருந்து வருகிறது. போருக்குப்பின் விலைவாசிகளும், கூலி வீதங்களும் மிகவும் ஏறியதால் மாநிலங்கள் புதிய வருவாய்களுக்கான வேட்டையில் மீண்டும் இறங்கின. விற்பனைவரி மீண்டும் ஒரு வலு வாய்ந்த இடத்திற்குப் போட்டியிடுகிறது. விற்பனை வரிக்கும் வருமான வரிக்கும் இடையேதான் தெரிவைச் செய்யவேண்டும். ஆகவே, விற்பனை வரிக்கான வாதங்களை உன்னிப்பாகப் பகுத்தாய்வு செய்வது இன்றியமையாததாகிறது.

மாநிலங்கள் விற்பனை வரிகளை மேற்கொள்ளுவதைச் சில்லறை வியாபாரிகள்தாம் எதிர்த்துப் பெரிய கூப்பாடு போடுகிறார்கள் என்று பேராசிரியர் ஹெய்கும் (Professor Haig), பேராசிரியர் ஷூப்பும் சுட்டிக்காட்டியுள்ளார்கள்.[21] இதில் வியக்கத்தக்கது ஒன்றுமில்லை. ஏனெனில், சில்லறை விற்பனைவரியின் ஒரு பகுதியை (இவ்வகை வரிதான் பரவலாகப் பயன்படுத்தப்படு கிறது) சில்லறை வணிகரே செலுத்திவிடுகிறார். மேலும், வரியை வசூலிப்பதற்காகும் செலவில் பெரும்பகுதியும் இச் சட்ட விதி களுக்கு இணங்க நடப்பதில் ஏற்படும் செலவில் கிட்டத்தட்ட முழுதும் விற்பவரின்மீதே விழுகின்றன. ஒரு விற்பனை வரியின் கீழ்த் தாங்கள் தாங்கும் வரிப் பொறுப்பின் அளவால், வேறு இருவகை வருக்கத்தினர்களும் (நுகர்வோர்களும் தொழிலாளி களும்) ஓரளவு எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். இவ் வரியை எதிர்ப்பதில் நுகர்வோர்கள் வலுவிழந்து காணப்படுவதில் வியப்பு ஒன்றுமில்லை. அவர்கள் சட்டசபை உறுப்பினர்களிடம் தங்கள் நலன்களைத் திறமையுடன் ஒருபொழுதும் வலியுறுத்திக் கூறியதில்லை. 1930ஆம் ஆண்டுக்கும் 1940ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் இப்பிரச்சினையை முடிவு செய்தபொழுது தொழிலாளர்கள் ஒப்புமையில் வலுவற்றவர்களாக இருந்தார்க ளென்றும், மாநிலங்கள் பலவற்றிலும் இதனால் திரட்டப்பட்ட வருவாய்கள் கல்விக்கும், வேலையின்மை நிவாரணம் இவற்றின் பேரில் செலவழிக்கப்பட்டதாலும், இவ் வரியைச் சட்டமாக இயற்றுவதை முழுமூச்சுடன் எதிர்ப்பது தொழிலாளர்களுக்குச் சங்கடமாக இருந்திருக்கும் என்று பேராசிரியர் ஹெய்க்கும், பேராசிரியர் ஷூப்பும் காரணம் கூறுகிறார்கள். அண்மை ஆண்டு களில் தொழிலாளர் நிறுவனங்கள் வலுவாக ஆனதன்றியில் அதிகமான அளவு அரசியலிலும் பயிற்சி (oriented) பெற்றிருக்

கின்றன. இதனால் விற்பனைவரி விதிப்புக்கு அவற்றின் எதிர்ப்பு அண்மை ஆண்டுகளில் அதிகமாகப் பரவியிருக்கிறது.

சொத்துவரிப் பளுவை இலேசாக்குவதால்[22] ஆதாயம் பெறக் கூடிய கும்பல்களே தலையாயதாக மாநில விற்பனை வரிகளுக்காக 1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் போராடின. சிறப்பாகக் குடியானவர்களும், தாவரச் சொத்துகளின் உரிமை யாளர்களும் விற்பனைவரியில் அக்கறை காட்டினர். இவ் வரிகளை வேண்டுமென்று கூப்பாடு போட்டவர்கள் 'நெடுஞ்சாலை இடம் பெயர்த்தல் நலமிக்'களே (highway transportation interests) என்று மேற்குறிப்பிட்ட ஆசிரியர்கள் கூறுகிறார்கள். பொது அலுவல்களை மேற்கொள்ளுவதற்குப் பொதுநிதிகள் போது மானவையாக இல்லாதபொழுது நெடுஞ்சாலை நிதியில் இருக்கும் ஏராளமான நிதிகளை நெருக்கடிக்குத் திருப்பக்கூடும் என்று இவர்கள் பயந்தார்கள். மிகவும் வளர்வீதமாக இருக்கும் உயர்ந்த வருமானவரி வீதங்களைக் குறைப்பதற்கு விற்பனைவரி ஒரு வாய்ப் பளிக்கலாம் என்று பொதுவாகக் கூட்டாட்சியின் விற்பனைவரி ஆதரவாளர்கள் கருதுகிறார்கள். பதிவு செய்யப்பட்ட தொழில் களுக்கும், உயர்ந்த தனியாள் வருமான அடைப்புகளில் இருக்கும் தனியாட்களுக்கும் இதனால் வருமானவரி வீதங்கள் குறையலா மென்று இவர்கள் கருதுகிறார்கள். மேலும் சில தனியாட்கள் கூட்டாட்சி விற்பனைவரியைப் புறவய வரிக் கருதுகோள் அடிப் படையில் ஆதரிக்கின்றனர். வேறு சிலர் அரசாங்கக் கடனின் அளவைக் கண்டு மனமுடைந்தும், தற்போதைய வரிகளை மேலும் உயர்த்த முடியாது என்று நம்பியும் இறுதியில் புகலிடமாக விற்பனை வரியை ஏற்றுக்கொள்ளுகின்றனர்.

தற்போதுள்ள அல்லது இனி எதிர்காலத்தில் ஏற்படும் வரிப் பளுக்களை வேறு சில கும்பலுக்கு மாற்றிவிட வேண்டும் என்ற விருப்பத்தால் உந்தப்பட்டு விற்பனை வரியை மேற்கொள்ளுமாறு பெரும் கிளர்ச்சியும் எழுகிறது என்ற உண்மையைப் பொருட் படுத்தாவிடில், இவ் வரிக்காகப் பரிந்து வாதிபடுவர்கள் கூறும் காரணங்களைக் கீழ்வருமாறு பிரிக்கலாம் :

1. பண்டவரி வருவாய்களின் நிலைபேறு.
2. வசூல் செய்வதற்கு ஆகும் செலவு ஒப்புமையில் குறைவா யிருத்தல்.
3. வரியின் தேய்வு வீதத்தன்மை.
4. வரியில் செலவைக் கட்டுப்படுத்துவதற்கான சாத்தியக் கூறுகள் இருப்பது.

5. உடனடியாக வருவாயைத் திரட்டும் அதனுடைய திறன்.

6. வரி செலுத்துகிறோம் என்ற உணர்ச்சியை இவ் வரி அபிவிருத்தி செய்தல்.

1. **வருவாய்களின் நிலைபேறு** (Stability of Revenues): வருமான வரி வருவாய்களைக் காட்டிலும் விற்பனை வரி வருவாய்கள் கணிசமான அளவு மிகவும் நிலைபேறு உள்ளவை. ஒரு காலக்கூறு முற்றும் வருமான மட்டத்தைவிட நுகர்வு மட்டம் மிகவும் நிலைபேருக இருக்கிறது. இவ்வாறு வருமான வரியின் தளத்தைவிட நுகர்வு வரியின் தளம் மிகவும் நிலைபேறுள்ளது. மேலும் தளத்தைப் பொறுத்தவரையில் நுகர்வு வரி வீதாசாரமாகவும், வருமானவரி பொதுவாக வளர்வீதமாகவும் இருக்கிறது. ஆகையினுல் வருமான தளத்தில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படுவதனுல் வருமானவரி வருவாய்களிலும் வலுவான ஏற்ற இறக்கங்கள் ஏற்படுகின்றன. ஈதுண்மை. ஏனெனில், நாட்டின் வருமானத்தில் ஏற்றம் என்முல் சராசரித் தனியாள் வருமானங்களில் ஓரளவு ஏற்றம் என்று கொள்ள வேண்டும். இதனுல் வளர்வீதப்பட்டியலில் குறிப்பிட்டிருக்கும் கூடுதல் வீதங்கள் பல தனியாள் வருமானங் களுக்குப் பொருந்தும். நாட்டின் வருமானம் இறங்கும்பொழுது இதற்கு நேர்மாமுனது நிகழ்கிறது. வரிசெலுத்தும் திறன் கொள்கையையும், வரிமுறையின் பளுவையும் காற்றில் பறக்க விட்டால் வருவாயைப் பொறுத்த அளவில் விற்பனை வரிக்கே ஓர் அநுகூலம் இன்றும் இருக்கிறது. மற்ருெரு பக்கத்தில், பண்டவரி வருவாய்கள் முற்றும் நிலைபேருக இருக்கின்றன என்று கொள்வதும் தவறு. நடப்பில் கிடைத்த வருவாய்களை ஒப்பிடுவதன் மூலம் (ஏனெனில் அடிக்கடி விற்பனை வரிகளைப் பயன்படும் வீச்சில் மாறுதல்கள் செய்யப்படுகின்றன. விற்பனை வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய்களின் நிலைபேறற்ற தன்மையைக் கச்சிதமாக நிருபிப்பது இயலாததாயினும், 1920-க்கும் 1929-க்கும் இடையில் பொருளாதாரத்தில் மொத்த நுகர்வின் மட்டம் சுமார் 50 சதவிகிதம் ஏறியது; 1929-க்கும் 1932-க்கும் இடையில்[23] நுகர்வின் மட்டம் சுமார் 20 சதவிகிதம் இறங்கியது. வாணிபச் சுழல் காலத்தில் விற்பனைவரி வருவாய்கள் நிலைபேருக இருப்பது, கணிசமான அளவு விலக்குப் பட்டியலைப் பொறுத்திருக்கிறது. உணவுப் பொருள்களுக்கும் பிற 'இன்றியமையாதவை' (necessaries)களுக்கும் விலக்களித்துவிட்டால் விற்பனைவரி 'போகப் பொருள்களின்' (luxuries) மீது விதித்த ஒரு வரியாகிவிடும். இதனுல் விற்பனை வரி வருவாய் ஒப்புமையில் பெருத்த ஏற்ற இறக்கங்கள் நிகழும்.

பொதுவாகப் பொருளாதார நலனைச் சீர்தூக்கிப் பார்க்கும் பொழுது, வருவாய்களில் நிலைபேறு மிகவும் விரும்பத்தக்கதன்று. வருவாய்கள் நிலைபேறுக இருக்கின்றன வென்றுல் வருமானங்கள் குறையக் குறைய வரிப்பளுக்கள் கூடுகின்றன என்பதும், வருமானங்கள் ஏற ஏற வரிப்பளுக்கள் குறைக்கின்றன வென்பதும் பொருளாகும். இந் நூலின் முந்திய அதிகாரங்களைப் படித்தவர்களுக்கு இவ்விதமான நடப்பினுல் வருமான வேலை மட்டங்களில் என்ன விளைவுகள் ஏற்படும் என்பது தெளிவாகப் புலனுகும்.[24] பொதுப் பொருளாதாரக் கொள்கையில் நிதிக் கொள்கையை அடக்க வேண்டும் என்றுல் வருவாயின் நிலைபேருன தன்மையைக் கட்டுப்படுத்துவதைக் குற்றம் எனக் கூறமுடியாது.

2. வசூல் செலவு (Cost of Collection) : விற்பனைவரி 'தாகுகவே வசூலாகி விடுகிறதென்றும்', ஆகவே அதை வசூலிக்கும் செலவு ஒப்புமையில் சொற்பமே என்றும் பொதுவாக எண்ணப் படுகிறது. இவ்வாறிருந்தால் இஃது இவ் வரியின் உண்மையான நல்ல அமிசமாகும். ஆயினும் நமக்குக் கிடைத்துள்ள புள்ளித் தொகைகளை வைத்துப் பார்க்கும்பொழுது, விற்பனை வரியை ஆட்சி செய்வதற்கு ஒப்புமையில் கூடுதலாகச் செலவாகும் எனத் தெரிகிறது. பேராசிரியர் டியு (Professor Due)[25] விற்பனை வரிகளை அமுல் செய்வதற்காகும் செலவுகள் அதன் வரவுகளில் 0·67 சதவிகிதத்திலிருந்து 2·5 சதவிகிதம் வரை ஆகுமென்றும், சராசரி 1·5 சதவிகிதமென்றும் அறிவிக்கிருர். ஆயினும், அரசாங்கத்திற்கு அமுல் செய்வதற்காகும் செலவை மட்டும் இது குறிக்கும் என்பதை மனத்தில் இருத்த வேண்டும். உண்மையில் ஆட்சியாளருக்கு இவ் வரியை அமுல் நடத்துவதற்கு ஆகும் செலவைவிட மிகவும் கூடுதலாகவே இவ் வரியை வசூலிக்கும் செலவும், சட்டத்தின் விதிகளுக்கு இயைய நடக்கும் செலவும், விற்பனையாளர்களுக்கு ஆகலாம்.[26]

பல்வேறுபட்ட வரிகளையும், அவற்றை அமுல் செய்வதற்காகும் செலவுகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது முற்றிலும் திருப்தியளிக்காததுடன் கூட, துல்லியமாகவும் இருக்காது. குறிப்பிட்ட வரிச் சட்டங்களுக்காகும் ஆட்சிச் செலவுகளைத் தனியே ஒதுக்கீடு செய்வது பெரும்பாலான சமயங்களில் இயலாதுபோகலாம். சொத்து வரியை அமுல் செய்வதற்காகும் செலவு, சராசரி 2 சதவிகிதத்திலிருந்து தாழ்ந்து செல்லுகிறது என்று சில மாநிலங்களின் மதிப்பீடுகளை ஆராய்ந்ததில் தெரிகிறது.[27] இச் சொத்துவரியின் சட்டத்திற்கு இணங்க நடப்பதில் சொத்துள்ளவர்களுக்கு ஆகும் செலவு மிகச் சொற்பமே. 1951 ஆம்

நிதியாண்டுக்கு அக வருவாய்க் கழகத்தின் ஆட்சிச் செலவுகள், வசூலான வருவாயில் 1 சதவிகிதத்தில் அரைப்பங்கு ஆகும் எனக் கருவூலத்தின் செயலாளர் அறிவிக்கிறார். கிட்டத்தட்ட 50 மில்லியன் டாலர் வருவாயில் சுமார் 80 சதவிகிதம் வருமான வரியிலிருந்தும், இலாப வரியிலிருந்தும் கிடைத்ததாகும். விற்பனை வரிகளைப் போன்றே, வருமான வரியை வசூலிப்பதற்காகும் மொத்த 'செலவில்' கணிசமான பகுதிக் கூலிகள், பிற வருமானங்கள், இவற்றினின்று வரிகளைப் பிடித்தம் செய்யும் பொறுப்புள்ளவர்கள் பேரிலும், வரிவிவர அறிக்கைகளைத் தயாரித்து அனுப்ப வேண்டிய தனியாட்கள் பேரிலும் விழுகிறது. மேலும், வரவின் ஒரு சதவிகிதமாக ஒரு வரியின் ஆட்கிச் செலவைக் குறிப்பிடலாம். இவ் வாட்சிச் செலவு ஆட்சியின் திறமைக்கேற்ப நேராகவும், விதிக்கப்பட்ட வரிவீதம் அல்லது மொத்த வரி வரவு இவற்றுக்கு நேர்மாறாகவும் இருக்கும்.

நம்பத்தகுந்த புள்ளி விவரங்கள் போதுமான அளவு இன்மையால், பல்வேறுபட்ட வரிகளையும் அவற்றை வசூலிப்பதற்கும், ஆட்சி செய்வதற்கும் ஆகும் செலவுகளுக்கேற்ப ஒரு வரிசையாக அமைப்பது இயலாத காரியம். ஆயினும், இவ் வகையில் விற்பனைவரிக்கு எந்த விதமான தனி அனுகூலமும் இருப்பதாக அனுபவத்திலிருந்து தெரியவில்லை. கூட்டாட்சி ஒரு விற்பனை வரியை விதித்தால் அதை மொத்த வியாபார மட்டத்திலேயே வசூல்செய்ய வேண்டுமென்று அடிக்கடி யோசனை கூறப்படுகிறது. இங்ஙனம் செய்தால் மாநில சில்லறை விற்பனை வரிகளை வசூலிப்பதற்கும், ஆட்சி செய்வதற்கும் ஆகும் செலவைவிட ஒருவேளை செலவு குறைவாக ஆகலாம்.[28]

**3. விற்பனை வரிகளின் தேய்வுவீதத் தன்மை (Regressiveness of Sales Taxes) :** தொழில்நுட்ப முறையில் விற்பனைவரி வீதாசார வரியாயினும், அதன் நிலைப்பாடு பெரிதும் நுகர்வோர்கள் மீது விழுவதால், விற்பனைவரி தனியாள் வருமானத்தைப் பொறுத்த வரையில் ஒரு தேய்வு வீத வரியேயாகும். தனியாள் வருமானத்திலிருந்தே இவ் வரி செலுத்தப்படுகிறது. வரிப்பளுவை ஒதுக்கீடு செய்வதற்கான சரியான அடிப்படை வரி செலுத்தும் திறன் என்று பொதுவாக எல்லோரும் ஏற்றுக்கொண்டபின்பும், தேய்வு வீதத்தை ஒரு நற்பண்பாகக் கொள்வதை எண்ணி வாசகர் ஆச்சரியப்படலாம். ஏற்கனவேயே வரிமுறை மிகவும் கூடுதலான அளவு வளர்வீத முறையாயிருக்கிறது என்ற எடுகோளைக்கொண்டே விற்பனைவரி தேய்வு வீதமாக இருந்தும் அதைஆதரிக்கின்றனர்கள்.[29] ஆகவே இதை ஈடுசெய்யும் விதத்தில் குறைந்த வருமானங்கள்மீது கனமாக

விழும் வரிகளும் வேண்டும் எனக் கருதுகின்றனர்கள். வரிசெலுத்தும் திறனைக் கொண்டு பார்க்குமளவில் வருமானவரி வீதங்கள் கடும் வளர்வீத முறையில் இருக்கின்றன என்ற எடுகோளை அடிப்படையாகக் கொண்டது இம் முகாந்தரம். இந்த எடுகோளை நிரூபிக்க முடியாது—எவ்வாறாயினும்—இது அவரவர் கருத்தைப் பொறுத்ததாகும். இவ் வெடுகோளை நாம் ஏற்றுக் கொண்டால்கூட, எல்லை மீறிய உற்சாகத்தால் வளர்வீதத்தை வருமான வரியில் பிரயோகிப்பதைச் சமநிலை யாக்குவதற்கு, தேய்வு வீதத்தைக் கொண்ட ஒரு விற்பனைவரிச் சட்டத்தை இயற்றவேண்டும் என்பதற்கு யாதொரு தருக்க அடிப்படையும் இல்லை. கூட்டாட்சியின் விற்பனை வரிக்கு இதை முகாந்தரமாக உபயோகித்தால், அதற்கிருக்கும் கொஞ்சநஞ்ச சக்தியும் போய்விடுகிறது. ஏனெனில், எந்த சட்டசபைக்கு விற்பனை வரியை விதிப்பதற்கு அதிகாரம் இருக்கிறதோ, அதே சட்டசபைக்கு வருமான வரி வீதங்களைக் கூட்டுவதற்கும் குறைப்பதற்கும் அதிகாரம் இருக்கிறது. ஆகையினால் வருமானவரி வீதங்கள் மிகக் கடுமையாக வளர்வீத முறையில் இருக்கின்றன என்றால், இவ் வளர்வீதத்தைப் படிப்படியாகச் செல்லும்படிச் செய்வதுதான் தருக்க அடிப்படையில் எடுக்கவேண்டிய நடவடிக்கையாகும். உச்ச நிலையில் வீதங்களைக் குறைத்தோ, குறைந்த் வருமானங்களின்மீது வீதங்களைக் கூட்டியோ அல்லது தனியாள் விலக்குகளைக் குறைத்தோ, வளர் வீதத்தைப் படிப்படியாகச் செல்லும்படிச் செய்யலாம். (கூட்டாட்சியின் வரிகள் கடுமையான வளர்வீத முறையில் இருக்கின்றன என்று வைத்துக் கொண்டால்) மாநிலங்களைப் பொறுத்தவரையில் இம் முகாந்திரத்திற்கு அதிக வன்மை உண்டு. ஏனெனில், கூட்டாட்சியின் வரி வீதங்களில் மாறுதல்களைப் புகுத்த மாநில அரசாங்கங்களுக்கு அதிகாரமில்லை. ஆகவே, அவை புதிய வரிகளை மேற்கொள்ளலாம். திறனுக்கேற்ப சுமாராக நிலைப்பாடு ஒதுக்கிவிடப்பட்டிருக்கிறது என்று மாநில அரசாங்கங்கள் கருதினால், அவை அவ் வரிகளைத் தம் முடிவுக்கு ஏற்ப முழு வடிவினதாகச் செய்யலாம்.

4. **செலவைக் கட்டுப்படுத்தும் சாத்தியக் கூறுகள்:** குறிப்பிட்ட பண்டங்களின் விற்பனைகளைச் சற்று கச்சிதமாகப் பாதிக்கக்கூடிய கருவியாகக் குறிப்பிட்ட ஆயத் தீர்வைகள் விளங்குகின்றன. வெறிநீர் (liquor), புகையிலை, புதுப்பிக்கப்பட்ட வெண்ணெய், அடைக்கப்பட்ட பாலாடை (filled cheese) இவற்றை முதன் முதலில் கூட்டாட்சியின் ஆயத்தீர்வைப் பட்டியலில் சேர்த்ததற்கு ஒரு காரணம், இவற்றை நுகர்வதை ஒழுக்க அடிப்படையில் குறைக்கவேண்டும் என்பதே யாகும். இத் தரத்தில் குழந்தை

களின் உழைப்பைக் கொண்டு உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களின்மீது 1918ஆம் ஆண்டில் விதிக்கப்பட்ட சட்டமும்[30] அடங்கும். இச் சட்டம் பயனற்றதாகப் போயிற்று.

செயற்கை வெண்ணெய் (oleomargarine) விற்பனையின்மீது மாநிலங்கள் விதித்த ஆயத் தீர்வைகளும், பல மாநிலங்களில் தொடர் கிடங்குகளின் (chain stores) மீது விதிக்கப்பட்ட வரிகளும் இத் தரத்தில் அடங்கும். செயற்கை வெண்ணெய் மீது விதிக்கப்பட்ட ஆயத் தீர்வைகள் இப்பொழுது பெரும்பாலும் ரத்து செய்யப்பட்டுவிட்டன. இரண்டாம் உலகப் போரின்போது, சில பண்டங்கள், சேவைகள் இவற்றின் நுகர்வைக் குறைத்தற் பொருட்டும், இவற்றின் உற்பத்தியில் முடக்கப்பட்ட வளப் பொருள்களைக் குறைத்தற் பொருட்டும் ஒப்புமையில், மிகக் கூடுதலான வீதங்களில், சாதனங்கள் (appliances), நகைகள், சருமங்கள், தலை அலங்காரப் பொருள்கள், மூட்டை முடிச்சு, கைப்பைகள், தொலைபேசி சேவை, இருப்புப் பாதை, பஸ் இடம் பெயர்த்தல் இவற்றின்மீது கூட்டாட்சி புதிதாக ஆயத்தீர்வைகளைத் திணித்தது. அதே சமயம் பழைய ஆயத்தீர்வைப் பட்டியலிலுள்ள பல இனங்களின்மீதும் வீதங்கள் கூட்டப்பட்டன. இவ் வாயத் தீர்வைகளின் உயர்வோடு, தனியாள் வருமானம், கார்ப்பரேஷன் இலாபங்களின்மீதான வீதங்களும் உயர்த்தப்பட்டன. இதனால் பொதுவாக நபர்கள் செலவு செய்யக்கூடிய வருமானம் மட்டுப்படுத்தப்பட்டது.

சில பண்டங்களைப் பாதிக்கும் வகையில் செலவைக் கட்டுப்படுத்தும் நோக்கம் குறுகியதாக இருக்குமானால், குறிப்பிட்ட ஆயத் தீர்வைகள் இதற்கு மிகவும் பயனுள்ளவையாக இருக்கும். சுங்கத் தீர்வைகளைப் போன்று இவற்றை விதிப்பதன் நோக்கம் நிதி திரட்டுவதன்று; வாங்குவதைக் குறைப்பதேயாகும். மற்றோர் பக்கத்தில், வருமான வரியைக் காட்டிலும் பொதுவாகச் செலவைக் கட்டுப்படுத்தும் நோக்கங்களுக்கு, பொது சில்லறை விற்பனை வரியை விதிப்பதில், யாதொரு அநுகூலமும் இல்லை. விற்பனை வரியைப் பயன்படுத்துவதில் நிரப்பு சாத்தியக்கூறுகள் இருப்பதைத் தொடர்ந்து பல பிரதிகூலங்கள் இருக்கின்றன. அவற்றைக் கீழே ஆராய்வோம்.

**5. உடனடியான வருவாய்கள் (Immediate Revenues):** சட்டத்தை இயற்றிய சிறிது காலத்திற்குள்ளாகவே வருவாயைப் படைக்கும் திறன் விற்பனை வரிக்கு இருப்பதாகக் கூறுவது சாதாரணப் பொதுமக்கள் சொல்லும் வாதங்களில் ஒன்றாகும்.

இது ஒரு வரிக்குப் பொதுவாக இருக்க வேண்டிய மிகவும் விரும்பத் தக்க அமிசமாகும். ஆண்டு பூராவும் ஒரு வருடாந்தர வரியைச் சிறு சிறு தொகைகளாகச் செலுத்துவதனால் வரி செலுத்துவோரின் பேரில் இருக்கும் பளு சிறிது குறையும். எவ்வளவு வரிகளை உபயோகித்தால் உடனடியாக விளைவுகள் ஏற்படுமோ அவற்றைப் பயன்படுத்துவதே நாம் முன்பு கண்டபடி, வாணிபச் சுழலுக்கு எதிரான வரிக்கொள்கை தெளிவாக்குகிறது. ஆனால், இப்போட்டி பொதுவாக விற்பனை வரிகளுக்கும் வருமான வரிகளுக்கும் இடையேதான் இருக்கின்றது. கூட்டாட்சியின் வருமான வரியில் நடப்பு வரிசெலுத்துகைக்கு வகைசெய்து அவற்றை நடப்பில் வெற்றிகரமாகப் பயன்படுத்தியபொழுது விற்பனை வரியில் உள்ள இவ் வநுகூலம் மறைந்தொழிவதாகத் தெரிகிறது.

**6.** வரிப் பிரக்ஞை (Tax Consciousness): ஒரு குடியாட்சி சமுதாயத்தில், அரசாங்கத்தின் வருவாய்களுக்குத் தான் அளிக்கும் தொகையை ஒரு வரிசெலுத்துவோர் உணர்ந்திருக்க வேண்டியது விரும்பத்தக்கதாகும். வருமான வரியும் சொத்து வரியும் உயர்ந்த அளவு வரிப் பிரக்ஞையை ஏற்படுத்துகின்றன. ஆகவே, விற்பனை வரிக்கு ஆதரவாக இவ் வாதம் பெரிதும் இல்லை. மாநிலங்கள் வழக்கமாக விதிக்கும் சில்லறை விற்பனை வரியும் வருமான வரி, சொத்து வரிகளைப் போலவே அத்துணை வரிப் பிரக்ஞையை ஏற்படுத்துகிறது எனலாம். இவ் வெல்லா வரிகளும் தெரிந்தெடுக்கப்பட்ட ஆயத் தீர்வைகளைவிட விரும்பத்தக்கன.[31]

### விற்பனை வரியில் நிரப்பு சாத்தியக் கூறுகள் (Compensatory Possibilities in the Sales Tax)

**எதிர்பாராத பொருளாதார விளைவுகள் :** வரிப்பளுக்களைச் சரியான முறையில் ஒதுக்கிடுவது பற்றிய எந்த ஓர் ஒற்றைக் கருதுகோளையும் அடிப்படையாகக் கொண்டு இணைக்கப்பட்ட ஒரு முழுமையான வரி முறையிலிருந்து அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிலவும் கூட்டாட்சி, மாநில, தல வரிமுறை விளைந்ததன்று. கூடுதலாக வருவாயைத் திரட்டவேண்டும் என்ற எண்ணத்தினால் பெரிதும் உந்தப்பட்டு இம்முறை சந்தர்ப்பங்களுக்குத் தக வளர்ந்து வந்திருக்கிறது. ஆகவே அதன் மொத்தப் பொருளாதார விளைவுகளை எதிர்பாராததென்ன இயம்பலாம். இவ் வரிமுறையில் கூட்டாட்சியின் வருமான வரி, தலச் சொத்து வரி, கூட்டாட்சி, மாநில ஆயத் தீர்வைகள், விற்பனை வரிகள் இவை தலையாய இனங்கள். கூட்டாட்சி வருமான வரியின் நிலைப்பாடு யார்மீது வரி விதிக்கப்படுகிறதோ அவர் பேரிலேயே விழுகிறது. வருமான வரி

வளர்வீதமானது. சொத்து வரிகளின் நிலைப்பாடு பரவலாக இருக்கிறது. வரிவீதங்கள் ஓரளவு நிலைபேறாக இருக்கும்பொழுது கணிசமான அளவு பிற்பட்ட புரட்டுகை (மூலதன ஆக்கம்) நிகழ்கிறது. சொத்தைத் தொழில் '' நோக்கங்களுக்காகப் பயன்படுத்தும்பொழுது, மீதமுள்ள சொத்து வரிகள் பிற்பட்டுப் புரட்டப்படாமல் முற்பட்டுப் புரட்டப்படலாம். சொத்து நுகர்வுக்காகப் பயன்படும்பொழுது, வரி முற்பட்டுப் புரட்டப்படுவதில்லை. விற்பனை வரிகள், ஆயத் தீர்வைகள் இவற்றின் நிலைப்பாடு, வரிவிதிக்கப்பட்ட பொருள்களை நுகர்வோர்களின்மீதே தலையாயதாக விழுகிறது. உயர்ந்த வருமானங்களைக் காட்டிலும் குறைந்தவருமானங்களின் பெரும் பகுதியும், வரிக்கு உள்ளான இனங்களின் பேரிலேயே செலவழிக்கப்படுவதால் இவ் வரிகள் பொதுவாக விளைவில் தேய்வு வீதமாக இருக்கின்றன.

எந்தெந்த வருமான வருக்கங்கள் வரிப் பொறுப்பைத் தாங்க வேண்டும் என்று கருதப்படுகின்றனவோ அவற்றின் வருமானப் பொறுப்புத் தொகைகளையும் அவ் வருக்கங்களையும் தொடர்பு படுத்துவதுதான் இணைக்கப்பட்ட கூட்டாட்சி, மாநில, தலவரி முறைகள் எத்துணை வளர்வீதமாய் இருக்கின்றன என்று காண்பிப்பதற்கான வழியாகும். இது ஒரு எளிய காரியம் அன்று. குறிப்பிட்ட வரிகளின் நிலைப்பாட்டைப்பற்றிய கற்பிதக் கோட்பாடுகளை (hypotheses) முதலில் ஏற்றுக்கொள்வது இன்றியமையாததாகும். சில வரிகளின் நிலைப்பாடு ஒப்புமையில் எளிதாயிருக்கிறது. ஆனால், பிற வரிகளின் நிலைப்பாட்டைப் பற்றிய உண்மைகள் கச்சிதமான கணியமான பொருளில் தெளிவாக இல்லை. குறிப்பிட்ட வருமான வருக்கங்களில் உள்ள குறிப்பிட்ட வரிகளைச் செலுத்தும் தனியாட்கள் எத்துணைப் பொறுப்பு ஏற்றுர்கள் என்பது இரண்டாவதாக நிர்ணயிக்கப்பட வேண்டுவதாகும். சிதறுண்ட விவரங்களை அடிப்படையாகக்கொண்டு பொதுமை செய்யாமல் இந் நடவடிக்கையை எடுப்பதற்குப் புள்ளி விவரங்கள் ஒருகாலும் போதியன வாகமாட்டா. வருமான வருக்கங்களிடையே எவ்விதம் வரிப்பளுக்கள் பங்கீடு செய்யப்படுகின்றன என்பதைப் பற்றிய பெரும் ஆராய்ச்சிகளின் முடிவுகளை 32ஆம் அட்டவணையில் காணலாம்.

குறிப்பிட்ட வரிகளின் நிலைப்பாட்டைப் பற்றி இவர்கள் கொண்ட எடுகோள்களில் உள்ள வேறுபாடுகளையோ அல்லது பத்ததிகளில் உள்ள வேறுபாடுகளையோ, ஒன்றோடொன்றை நுட்ப வினை முறைப்படி ஒப்பிட்டு நாம் பார்க்கப்போவதில்லை. இவ் வெல்லா ஆராய்ச்சிகளிலும் திறமையான வீதங்களின்

## அட்டவணை 32

வருமான வருக்கங்களால் பல்வேறுபட்ட ஆண்டுகளுக்குச் செலுத்தப்பட்ட கூட்டாட்சி, மாநில, தல வரிகளின் கூட்டுத்திற வீதங்கள் : நான்கு ஆராய்ச்சிகளின் சுருக்கம்.

| செலவழிக்கும் அலகின் வருமானம் | டாரசோவ் 1932—1939 (a) (1%) | ஆட்லர் 1946—1947 (b) (1%) | மஸ்கிரேவ் 1948 (c) (1%) | டக்கர் 1948 (d) (1%) | மஸ்கிரேவ் 1954 (e) (1%) |
|---|---|---|---|---|---|
| 1,000 டாலருக்குக் கீழ் | 18·0 | 19·6 | 20·2 | 18·7 | 22·8 |
| 1,000—1,999 டாலர் வரை | 17·5 | 15·1 | 17·5 | 20·8 | |
| 2,000—2,999 ,, ,, | 17·4 | 17·3 | 18·8 | 23·9 | 23·5 |
| 3,000—3,999 ,, ,, | 17·7 | 17·7 | 19·1 | 25·0 | 23·8 |
| 4,000—4,999 ,, ,, | 18·2 | 22·9 | 19·3 | 26·3 | 24·7 |
| 5,000—7,499 ,, ,, | 18·7 | 24·2 | 21·4 | 28·3 | 27·4 |
| 7,500 டாலருக்கு மேற்பட்ட | 32·7 | 36·2 | 35·1 | 44·8 | 29·9—39·5 |
| மொத்தம் | 20·2 | 24·2 | 24·0 | 29·7 | 29·4 |

a. ஹெல்லன் டாரசோவ் (Helen Tarasov). 'Who does pay the Taxes?' Supplement IV,, *Social Research*, 1942, P. 5.

b. ஜான் ஆட்லர் (John Adler). 'The Fiscal System, The Distribution of Income and Public Welfare' in K. E. Poole, *Fiscal Policies and the American Economy*, New York, Prentice Hall, 1951.

c. ஆர். ஏ. மஸ்கிரேவ் (R. A. Musgrave) *et al*, 'Distribution of Tax Payments by Income Groups, A CaseStudy for 1948' *National Tax Journal*, March, 1951, கார்ப்பரேஷன் நிகர வருமான வரிகளின் நிலைப்பாடு, இலாபங்களின் மீதும், இலாப ஈவுகளின் மீதும் இருக்கிறது என்ற எடுகோளை அடிப்படையாகக் கொண்டு மஸ்கிரேவின் தொகைகள் கணக்கிடப்பட்டிருக்கின்றன.

d. ஆர். எஸ். டக்கர் (R. S. Tucker), 'Distribution of Tax Burdens in 1948,' *National Tax Journal*, September, 1951, p. 281.

e. ஆர். ஏ. மஸ்கிரேவ் (R. A. Musgrave), 'The Incidence of the Tax Structure and its Effects on consumption,' in *Federal Tax Policy for Economic Growth and Stability, Papers submitted by Panelists, Joint Committee on the Economic Report*. Washington, 1955. 7500 டாலருக்கும் அதற்கும் மேற்பட்ட வருமானங்களை உடைய கும்பலுக்கு இரண்டு தொகைகள் தரப்பட்டுள்ளன. ஏனெனில், இக் கும்பலை இரண்டு வருக்கங்களாக மஸ்கிரேவ் பிரிக்கின்றார். 7,500 டாலரிலிருந்து 10,000 டாலர் வரை உள்ள வருமானங்களுக்கு முதலாவது தொகையும், 10,000 டாலருக்கு மேற்பட்ட வருமானங்களுக்கு இரண்டாவது தொகையும் பொருந்துவதாகும்.

தோரணை கிட்டத்தட்ட ஒன்றுயிருக்கிறதென்பதே நாம் குறித்துக் கொள்ள வேண்டியதாகும். குறைந்த வருமானங்களின்மீது தேய்வு வீதமாகவும், தாழ்ந்த இடைநிலை வருமானங்களின்மீது சுமாராக வீதாசாரமாகவும், தலையாய வருமானங்களின் மீது ஓரளவு வளர்வீதமாகவும் வரிப்பளுக்கள் இருக்கின்றன என்பதே இவ் வாராய்ச்சிகள் தெரிவிக்கும் உண்மையாகும். (7,500 டால ருக்கு மேற்பட்ட எல்லா வருமானங்களையும் ஒன்றுகச் சேர்ப்ப தால் இக் கும்பலுக்கான வரிவீதம், அதிலும் சிறப்பாக 7,500 டாலரை அணுகும் வருமானங்களின்மீது உண்மைக்கு ஒவ்வாத விதத்தில் மிகவும் கூடுதலாக இருக்கிறது. ஏனெனில் 7,500 டாலருக்கும் மேற்பட்ட பலதிறப்பட்ட வருமானங்களும் செலுத்தும் சராசரி வீதமே இக் கும்பலுக்கும் காட்டப்பட்டிருக் கிறது.) மிகக் குறைந்த வருமானங்களின்மீது ஐந்தில் ஒரு பங்கும், உயர்ந்த வருமானங்களின்மீது ஐந்தில் இரண்டு பங்கும் வீதங்களை மொத்தத்தில் வரியாக விதிக்கும், எந்த இணைக்கப்பட்ட வரி முறையையும் மிகக் கூடுதலான வளர்வீத முறை என்று வருணிக்க முடியாது. இவ் வுண்மைகளில் பொதிந்துள்ள அமிசங்கள் நன்கு புலனுகின்றன. வரிமுறையில் சிறப்பாக வரிசெலுத்தும் திறன் கொள்கை பிரயோகிக்கப்படவில்லை. விற்பனைவரி, ஆயத் தீர்வைகள் வாயிலாகவும், சொத்து வரிகள், குறைந்த தனியாள் வருமானவரி விலக்குகள் வாயிலாகவும் வரிமுறை பெரிதும் நுகர்வின்மீதே விழுந்திருக்கிறது என்பது வெளிப்படை. இதில் பெரிய குற்றவாளிகள் மாநில, தல அரசாங்கங்களே. சிறப்பாக நுகர்வின்மீது ஏற்பட்ட விளைவு நச்சு ஊட்டுவதாய் (vicious) உள்ளது. ஏனெனில், வேலையின்மை மிகுந்திருக்கும் காலங்களில் நுகர்வுக்கு ஆக்கம் அளிக்க வேண்டியது இன்றியமையாததாகும். ஆனல், இக் காலங்களில்தான் மிகவும் தேய்வு வீதமான வரிகள் விஸ்தரிக்கப்பட்டு மிகப் பெருமளவில் நுகர்வு பாதிக்கப்பட்டிருக் கிறது. மாநிலங்களுக்குப் பெருத்த வருவாய்களைத் திரட்டி யளிக்கக் கூடியதாக இருப்பதால் அண்மைக் காலத்தில் விற்பனை வரிக்கு மாநிலங்களிடையே நல்ல மதிப்பு ஏற்பட்டிருக்கிறது. இதனுல் நுகர்வின்மீது எதிர்பாராத மந்த விளைவுகள் ஏற்படு கின்றன. வாணிபச் சுழலின் சில கூறுகளில் நுகர்வின்மீதான இம் முட்டுக்கட்டை பயனுள்ளதாகவும் இருக்கலாம். ஆனல், வேறு சில கூறுகளில் பெரும் அழிவைப் பயக்கத்தக்கதாகவும் இருக்க லாம்.

**பண்ட வரிகளை வேண்டுமென்றே நிரப்புக் கருவிகளாகப் பயன் படுத்துதல் (Commodity Taxes as Intentional Compensatory Instruments):** உயர்ந்த அளவு வருமானமும் வேலையும் கிடைக்க

வேண்டுமென்ற நெடுங்காலக் கொள்கையை ஊக்குவிக்க வேண்டு மென்றால், பண்டவரிகளின் விளைவு தடங்கல் ஏற்படுத்துவதாகவே இருக்கும். ஊறுபாடின்றி அவைகளை உபயோகிக்கக்கூடிய வாணிபச் சூழல் நிலைமைகள் மிகுந்த வரையறைக்கு உட்பட்ட தாகவே இருக்கும். உற்பத்தி வளங்கள் முழுதும் பயன்படுத்தப் பட்டு, மேலும் நுகர்வின்மீது அழுத்தம் ஏற்பட்டு பணவீக்கம் ஏற்படுவதைத் தடுக்க, பொருளாதார வீக்க காலங்களில் இவற்றைப் பயன்படுத்தி நுகர்வுக்கு முட்டுக்கட்டை போடலாம் என்று பேராசிரியர் ஹான்ஸன் (Professor Hansen) கூறுகிறார். தோற்றத்தில் இந் நிலை சரியெனவே படும். ஆனால், நுணுகிப் பகுத்தாய்ந்தால் இது சரியெனப் படவில்லை. பண்ட வரிகளுக்கு மாற்று, தனியாள் வருமான வரிகளில் திருத்தங்கள் செய்தலே. பொருளாதார வீக்கத்திற்கு எதிரிடையான நோக்கங் களுக்குப் பண்ட வரிகளையும், தனியாள் வருமான வரிகளையும் உபயோகிப்பதில், ஒப்புமையில் உள்ள நல்ல அமிசங்கள் பல்வேறு பட்ட காரணிகளைப் பொறுத்திருக்கும்.

பொருளாதார வீக்க காலத்தில் பணவீக்கத்தைச் சமாளிப்ப தற்குத் தனியாள் வருமானவரியைக் காட்டிலும் விற்பனை வரியைக் கருவியாகப் பயன்படுத்துவதால் சில குறிப்பிட்ட அநுகூலங்கள் இருக்கின்றன என்பதற்குப் பேராசிரியர் ஷூப் ஒரு பட்டியல் தருகிறார்.[32] முதற்கண், ஒரு வருமானவரியை விட ஒரு விற்பனைவரி சற்றுக் கூடுதலாகவே மிகை நேரம் உழைப்பதற்கு ஊக்கமூட்டலாம். உழைப்பு நேரத்தை நீட்டித்து உழைப்பாளர் சப்ளையில் ஓரளவு நெகிழ்ச்சி உண்டாக்குவது விற்பனை வரியில் உள்ள அநுகூலம். இதனால் வெளிப்பாட்டின் பருமம் கூடுதலாவ துடன், மிதமிஞ்சிய தேவையினால் ஏற்படும் பணவீக்க அழுத்தமும் குறைகிறது. மிகை நேர உழைப்புக்கு ஒரு வருமான வரியால் அவ்வளவு ஆக்கம் தர முடியாததற்குக் காரணம், வாரக்கூலி அதிகமாகும்பொழுது வருமான வரிக்கான கூலியிலிருந்து பிடித்தம் செய்வதும் அதிகமாவதே. ஆனால் தான் கூடுதலாக ஈட்டிய கூலியிலிருந்து அதிகம் நுகர்வுக்குச் செலவிடாது கட்டுப்படுத்தும் பொழுது தனியாள் ஓரளவு கனமான விற்பனை வரியைத் தவிர்க்க லாம். உண்மையில் சுமாராக மிகை நேர உழைப்பை ஏற்றுக் கொள்வதற்கு ஒரு தொழிலாளிக்கு விற்பனைவரியோ அல்லது வருமான வரியோ குறுக்கே தடங்கலாக நிற்பதாகக் கூறுவது ஐயத்திற் கிடமானதே. இரண்டாவதாகப் பொருளாதார வீக்க காலத்தில் வருமானவரியைக் காட்டிலும் விற்பனை வரி மேற் பார்வையில் சற்றுக் குறைவாகவே நிருவாகத்தில் தளர்ச்சியை உண்டுபண்ணும் என்று ஷூப் முடிவு கட்டுகிறார். பணவீக்கக்

காலத்தில் கூலியும், இலாபமும் உச்சநிலையில் இருக்கும். வருமானத்தைப் பெருக்கிக்கொள்ள முயற்சி செய்தால் கூடுதலான தனியாள் வருமானவரியைச் செலுத்த வேண்டும். ஓரளவுக்கு மேல், கூடுதல் வரிகளைச் செலுத்திய பின்பு வருமானத்தில் ஏற்படும் ஏற்றம், கூடுதலான உழைப்பு செய்வதற்கு ஏற்ப இருப்பதில்லை. மேலும் வருமானவரி வீதங்கள் கூடுதலாக இருந்தால் வீண் செலவுகள் அதிகமாகும். மொத்த வருமானத்திலிருந்து இச் செலவுகளைக் கழித்த பின்பு வரிகளைச் செலுத்தவேண்டியிருக்கும். இவ் வரிகளைச் செலுத்திய பின்பும் கைக்குக் கிடைத்த இலாபம் கூடுதலாகவே இருக்கும். இறுதியாக, பிரதேசங்கள் தோறும் வாழ்க்கைச் செலவுகள் மாறுவதற் கேற்ப, விற்பனைவரி வீதங்களிலும் மாறுதல்கள் செய்யப்படுகின்றன. ஆனால், வருமானவரியில் இங்ஙனம் செய்வதில்லை. இவ்வாறு தோராயமாக வரித் தொகையின் அளவுக்கு விற்பனைவரி நுகர்வின் செலவை உயர்த்துகிறது.[33] இவ்வாறு பிரதேச வேறுபாடுகள் பேணப்படுகின்றன. மற்றோர் பக்கத்தில், வாழ்க்கைச் செலவின் வேறுபாடுகளைப் பொருட்படுத்தாது நாடு முழுமைக்குமாக வருமானவரி விலக்குகள் நிர்ணயிக்கப்படுகின்றன. இந்த அநுகூலம் விற்பனைவரியில் இருக்கும் வரையில், விற்பனைவரியை வாணிபச் சுழவின் எந்த கூறுக்கும் பிரயோகிக்கலாம்.[34]

வருமான வரியுடன் ஒப்பிடுகையில் விற்பனைவரி பல காரணங்களை முன்னிட்டு மட்டமானது எனலாம். ஒரு பொருளாதார வீக்க காலத்திலும்கூட வரி செலுத்தும் திறன் கொள்கையைக் கைவிடுவது விரும்பத்தக்கதன்று. பொருளாதார வீக்க காலத்தில் எல்லா நுகர்வோர் வருமானங்களுக்கும் சமமான பங்கு கிடைப்பதில்லை. நெடுங்காலத்திற்குப் பல வருமானங்கள் மாறாது ஒரே நிலையிலேயே நிலையாக இருக்கின்றனர். இங்ஙனம் இருப்பதால் ஒரு குறைந்த அளவு வாழ்க்கைத்தர வருமானத்திற்கு முற்றும் விலக்களிப்பது வருமானவரிக்குள்ள சாதகமாகும். வளர்வீதத்தை வருமானவரியில் வாணிபச் சுழலின் எந்தக் கூற்றிலும் செயல்படுத்தலாம் என்பதும் வருமானவரியை நாம் மிகவும் விரும்புவதற்குரிய காரணமாகும். குறைந்த வருமானமும், நிலைத்த வருமானமும் உள்ள வருக்கத்தினரின்மீது கடுமையான பளுக்களைச் சுமத்திப் பொருளாதார வீக்கங்களைச் சமாளிக்கலாம் என்று செய்ய எந்த நிரப்புவரி விதிப்புக் கொள்கையும் (policy of compensatory taxation) தருக்க அடிப்படையில் முற்படாது. எல்லா வருமான வருக்கங்களிலிருந்தும் ஒரே படியாக விலைவாசிகளின் மீதான ஏறுமுக அழுத்தம் ஏற்படுவதில்லை. தங்களின் முந்தைய வாழ்க்கைத் தரங்களைக் குறையாது வைத்துக்கொள்வ

தற்கு வேண்டிய செலவைவிட, மிகையான வருமானங்களை நுகர்வோர் வேண்டுகின்றனர். இந் நுகர்வோரிடமிருந்தே விலைவாசிகளின் மீதான ஏறுமுக அழுத்தம் ஏற்படுகிறது என்பதும் வெளிப்படை. எல்லா டாலர் செலவுகளின்மீதும் சமமாக வரிவிதிப்பதைக் காட்டிலும், பண வீக்கத்திற்கு முன்பு நிலவிய வாழ்க்கைத்தரத்திற்கு வழி வகுப்பதற்கு வேண்டிய வருமானத்தைவிட மிகையாக இருக்கும் வருமானத்தின்மீது கடுமையான வரி விதிப்பது விரும்பத்தக்கதே.

இரண்டாவதாக முதலீட்டுச் செலவுகளினாலும் பணவீக்கம் ஏற்படலாம். பண வீக்கத்திற்கு எதிராக நுகர்வோர் வாங்கும் பண்டங்களின்மீது வரிவிதித்தல் இவ் வெளிய உண்மையைப் புறக்கணித்து விடுகிறது. மோட்டார்க்கார்கள், பானைகள் அல்லது சட்டிகள் செய்வதற்குச் சில வளப்பொருள்களும் உழைப்பாளிகளும் தேவை. அமைப்பு உருக்கு (structural steel) அல்லது எந்திரங்கள் செய்வதற்கும், சில வளப்பொருள்களும், உழைப்பாளிகளும் தேவை. ஆனால், வளப்பொருள்களும் உழைப்பாளிகளும் பற்றாக்குறையாக இருப்பதால், மோட்டார்க்கார்கள் செய்வோரும், உருக்கு செய்வோரும், பற்றாக்குறையாக இருப்பர். இவ் வளப் பொருள்களுக்கும், உழைப்பாளிகளுக்கும் தம்முள் போட்டிபோட வேண்டியிருக்கிறது. முதலீட்டுக்காக வாங்கினாலும் சரி, நுகர்வுக்காக வாங்கினாலும் சரி, விலையின்மீதேற்படும் விளைவு ஒன்றேதான். ஆகையினால் குறுங்காலத்தில் (பணவீக்க அழுத்தம் இருப்பது தோரணையில் குறுங்காலத்தில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்) முதலீட்டுப் பண்டங்களை வாங்குவதற்கான அளிப்புக் கூற்றுகளினாலும் (offers), நுகர்வுப் பண்டங்களை வாங்குவதற்கான அளிப்புக்கூற்றுகளினாலும் சமதையாகவே விலையேறுகின்றன. மற்றவை மாறாதிருப்பின், நெடுங்காலத்தில் பொருளாதாரத்தின் உற்பத்தித் திறனில் ஏற்படும் கூடுதல்கள் பணவீக்க அழுத்தங்களைத் திறமையாகக் குறைக்கின்றன என்பது உண்மையானாலும், இக்கூற்றும் மெய்யானதே. இங்ஙனமாக நெடுங்காலத்தில் 'பண வீக்கத்திற்குக் கைகண்ட மருந்து உற்பத்தியே' யானாலும், பண வீக்கக் காலத்தில் மேலும் முதலீடு செய்வதனால் உடனடியாக விளைவது மேற்கொண்டும் பணவீக்கமே. இந்த உண்மை 1946-47லும், 1956-57லும் ஐயந்திரிபுக்கு இடமின்றி நிரூபிக்கப்பட்டது. வாணிபச் சுழலுக்கு எதிரான நோக்கங்களுக்காக நுகர்வு வரிவிதிப்பைக் காட்டிலும், வருமான வரிவிதிப்பைக் கையாளுவதில் இத்தகைய சிறப்பு அநுகூலம் இருக்கிறது. மார்க்கட்டிலிருந்து தனியார் நுகர்வு வருமானத்தையும், தனியார் முதலீட்டு வருமானத்தையும் எந்திர கதியில் வருமானவரி

எடுத்துவிடுவதால் மிகை முதலீடும் (over investment) மிகை நுகர்வும் (over consumption) வரையறைக்கு உட்பட்டன வாகின்றன.

மேலும் பணவீக்கத்தைச் சமாளிப்பதற்கு வரியோசனைகளைத் தெரிந்தெடுப்பதில் சில செயல் முறைக் காரணங்களும் அல்லது நிறுவனக் காரணங்களும் இருக்கின்றன. கூலிக்காகப் பேரம் பேசுவதில் 'வாழ்க்கைச் செலவு' (cost of living) ஒரு தலையாய எடுகோளாயிருக்கிறது. பொருளாதார வீக்க காலத்தில் தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்வதில் தொழிலாளர் நிறுவனங்கள் குறிப்பிடத்தக்க வெற்றியடைகின்றன. தனியாள் வருமானவரிகள் ஏறும்பொழுது தொழிலாளிகள் கூலி உயர்வு கேட்பதைவிட வாழ்க்கைச் செலவு ஏறும்பொழுது தொழிலாளிகள் விரைந்து கூலி உயர்வுக்கான கோரிக்கைகளைச் சமர்ப்பிப்பார்கள் என்பது பொதுவாக நடைமுறையில் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இங்ஙனம் கூலி உயர்வு கேட்பது நேர்மையானதாயிருக்கலாம் அல்லது இல்லாமலுமிருக்கலாம். வருமான வரியின் உயர்வு யாவரையும் பாதிக்கிறது என்றும், நுகர்வுப் பண்டங்களின் விலை உயர்வினால் நுகர்வு (தொழிலாளி) வருக்கத்தினருக்கெதிராகப் பேதங்காட்டுகை செய்யப்படுகிறதென்றும் நம்புவதே இவ் வெண்ணம் எழுவதற்கு ஓரளவு காரணமாகும். நுகர்வு வரிகளால் விலைகள் ஏறுகின்றன. பொதுவாக நுகர்வு வரிகளின் உயர்வால் வாழ்க்கைச் செலவு ஏறுகிறது என்ற உறுதிப்பாடு கூலி வீதங்களை உயர்த்துவதற்கான ஆற்றல் மிக்க முனைப்பை ஏற்படுத்துகிறது. இவ்வாறு ஒரு தனியாள் வருமான வரியில் சற்றுக் குறைந்து காணப்படும் ஓர் அலாதியான பணவீக்க அழுத்தம் விற்பனை வரியில் புகுத்தப்படுகிறது[35] (builds into).

கூலிவீதத்தில் நிலவும் நிலைமையுடன் விவசாயப் பண்டங்களின் விலைகளில் நிலவும் நிலையை ஒப்பிடலாம். பொதுவாக அமெரிக்கப் பொருளாதாரத்தில் 'சமனிலை நூற்பா' (parity formula) ஏற்றுக் கொள்ளப்பட்டு வந்திருக்கிறது. இதனால் பிற விலைகள் ஏறும்பொழுது விவசாய விலைகளையும் ஏற்றுவது சரியென நிலைநாட்டப்படுகிறது. ஆகவே 1933ஆம் ஆண்டுக்கு முன்பிருந்த நிலை ஏற்பட்டாலொழிய, குடியானவர்கள் வாங்கும் பொருள்களின் மீதான வரிகள் ஏறினால், மேலும் விவசாயப் பொருள்களின் விலை ஏறுவதற்கு ஆக்கமளிக்கும். இவ்வாறு நாம் எதிர்பார்ப்பது அறிவுடைமையானால், வருமான வரியைக் காட்டிலும் விற்பனை வரிகளே விவசாய விலைகளின் உயர்வுக்கு வலுவான கருவியாக (இதனால் வாழ்க்கைச் செலவு கூடுவதோடு தொழில்

களுக்கு வேண்டிய பல கச்சாப் பொருள்களின் விலைகளும் ஏறும்) விளங்கும்; மிதமிஞ்சிய வாங்கும் சக்தியை விற்பனே வரியாலுைம் சரி, வருமான வரியாலுைம்சரி எடுத்துவிடும். வாங்கும் சக்தி குறையுமளவுக்குத் தேவை ஏறுமுகமாவதைத் தடுத்து நிறுத்துவதும் அதனுல் விலைகள் ஏறுவதைத் தடுப்பதும் சாத்திய மாகும். ஆனுல், அதே சமயம் செலவுகள் ஏறுமுகமாக இருப்பதனுல் விலைகள் ஏறுவதையும் நாம் கவனிக்க வேண்டும். இக் குறிப்பிடத் தக்க நிகழ்ச்சி 'செலவு விலைச் சுருள்' (cost-price spiral) என்றழைக் கப்படுகிறது. இவ்விதச் செலவேற்றம் (cost push) பகுத்தறிவுக்குப் பொருந்தியதாயினும் அல்லவாயினும், ஆக்கச் செலவுகள் முற் பட்டுப் புரட்டப்பட விற்பனே வரியால் மிகவும் பாதிக்கப்படுகிற தெனவும், வருமான வரியால் பாதிக்கப்படுவதில்லை யெனவும் நமக்குத் தெரிகிறது. பணவீக்கத்தின் எதிரான நோக்கங்களுக்கு வருமான வரியே மிக உகந்தது என்பதற்கு இவ் வேறுபாடும் ஒரு வலுவான காரணமாகும்.

பணவீக்கத்தினுல் சமுதாயத்தின்மீது பகிர்வு திருத்த விளைவுகள் ஏற்படுவதைத் தடுப்பதே பணவீக்கக் கட்டுப்பாட்டின் ஒரு தலையாய நோக்கமாகும். எல்லாத் தனியாள் வருமானங் களும் சேர்ந்தாற்போல் ஏறுவதில்லை. ஆகவே பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தாவிடில் விலைகள் ஏறுவதற்கு முன்பு நிலவிய தோரணையினின்றும் வேறுபட்ட வகையில் பண்டங்களைப் பகிர்வு செய்யும் முறை ஏற்படும். இதனுல் யாரார் வருமானங்கள் கூடியதோ அவர்களுக்குச் சில அநுகூலங்களும், யாரார் வருமானங்கள் ஒப்புமையில் மாருது நிலையாக இருக்கின்றனவோ அவர்களுக்குப் பிரதிகூலங்களும் உண்டாகும். நுகர்வின்மீது ஒரு வீதாசார வரியைத் திணித்தால், இதனுல் பாதிக்கப்பட்ட பண்டங்களின் விலைகளும், சேவைகளின் விலைகளும் வீதாசார அளவே உயரும். பண வீக்கத்திற்கு எதிரான ஒரு விற்பனே வரி விதிப்பினுல், யாரார் வருமானங்கள் ஏறவில்லையோ அவர்கள் எல்லோரும் பாதிக்கப்படுவார்கள். பணவீக்கம் தடுத்து நிறுத்தப் படாது கட்டுப்பாடின்றிச் சென்ருலும் அவர்கள் பாதிக்கப் படுவார்கள். இதற்குப் புறனடை பகிர்வு திருத்தல் இவ்வளவு தூரம் செல்லவிடப்பட்டிருக்கக்கூடாது என்பதே. பணவீக்கத்தைத் தடுப்பதற்கு நிலைத்த வருமானத்தையுடைய கும்பல்கள் தங்கள் நுகர்வில் ஒரு பகுதியையோ அல்லது சேமிப்புகளில் ஒரு பகுதியையோ தன் மறுப்பு (தியாகம்)ச் செய்ய வேண்டியிருக்கும். இங்ஙனமாகப் பண வீக்கத்திற்கு உரமூட்டுவதில் அவர்களுக்குத் தலையாய பங்கு இருக்காது. மற்ருேர் பக்கத்தில், யாரார் வருமானங்கள் ஏறிக்கொண்டிருக்கின்றனவோ, அவர்கள் தங்கள்

நுகர்வை அல்லது சேமிப்பைப் பேணுவதுடன், கூட்டவும் கூடும். இங்ஙனமாக இத் திட்டத்தின் பளு பெரிதும் தவறான இடத்திலேயே விழும். பணவீக்கத்தைக் கட்டுப்பாடு செய்வதற்கு நுகர்வு வரிகள் விதிப்பதைத் தொழிலாளர்கள் எதிர்ப்பது பெரிதும் நியாயமானதே. மேற்கூறிய அவலநிலையில் தொழிலாளர் கும்பல் இருப்பதற்குக் காரணம் கூலிகள் விலைகளுக்குப் பின்தங்குவதே ஆகும்.

ஒரு உள்ளார்ந்த பணவீக்க காலத்தில் (potentially inflationary period) உண்மையான வாங்கும் சக்தியில் பகிர்வுத் திருத்தங்களைச் செய்வதில் நுகர்வு வரிகளினாலும், தனியாள் வருமான வரியினாலும் கிட்டத்தட்ட ஒரே விளைவுகளே ஏற்படுகின்றன. பணவீக்கத்திற்கு எதிராகத் தனியாள் வருமான வரியைப் பயன்படுத்தினாலும், நுகர்வு வரிகளைப் பயன்படுத்தினாலும் பயன் ஒன்றுதான். தனியாள் விலக்குகளைக் குறைத்து, வருமானவரிகளை உயர்த்தினால் இது சிறப்பாக உண்மையாகும். ஆனால், வளர்வீதப் பட்டியல் பூராவும் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் வருமானவரி வீதங்களை உயர்த்தினால், எல்லா வருமான வருக்கங்களும் தங்கள் வருமானத்தில் ஒரு பங்கைத் தியாகம் செய்யவேண்டியிருக்கும். யாரார் வருமானங்கள் ஏற்கனவே உயர்வாகவும் இன்னும் ஏறிக் கொண்டும் இருக்கின்றனவோ, அவர்கள் நுகர்வைத் தவிர்ப்பதன் மூலம் நுகர்வு வரிகளின் பளுவில் பெரும் பகுதியிலிருந்து தப்பிவிடலாம். ஆனால் அவர்கள் தங்கள் நடப்பு சேமிப்புகளின் மீதும் வருமானவரி செலுத்தவேண்டியிருக்கும். நிகழ்காலத்திலும் சரி, எதிர்காலத்திலும் சரி, இதனால் பெரிய பகிர்வுத் திருத்த விளைவுகள் தவிர்க்கப்படும். நிரம்பவும் அதிகமாகப் போனால் பணவீக்கத்திற்கு எதிரிடையான வரிக்கொள்கை மக்களுக்குப் பிடிக்காமலிருக்கலாம். ஆகவே எல்லா வருக்கத்தினர்களுக்கும் பண வீக்கத்திற்கு எதிரிடையான வரிக்கொள்கையின் பளுக்கள் பரவலாகவும் நேர்மையாகவும் பங்கீடு செய்யப்பட்டிருக்கின்றன என்ற நம்பிக்கை இருக்குமானால், இக் கொள்கை யாவருக்கும் இனிமை பயப்பதாகவும், அரசியல் முறையில் மிகவும் சாத்தியமானதாகவும் இருக்கும்.

## மேலும் படித்தற்கு உரியவை

மௌரீஸ் கிரிஸ் (Criz, Maurice), The Use Tax, Chicago, Public Administration Service, 1941.

சுருக்கமான முழு வருணனையும் பகுத்தாய்வும் அடங்கியது இந் நூல்.

ஜே. எப்ஃ. டியு. (Due, J, F.) Sales Taxation, Urbana, University of Illinois Press, 1957.

இவ் விஷயத்தைப் படிக்கத் தலைப்படும் மாணுக்கருக்கு 1, 2, 3, 14, 15, 17, 18 இவ் வதிகாரங்களில் சிலவாயினும் அல்லது முழுமையும் மிகவும் உபயோகமாயிருக்கலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளைத் தவிர பிற நாடுகளில் நிலவும் அநுபவத்தை நூலின் எஞ்சிய பகுதி விரிவாகக் கூறுகிறது.

ஆர். எம். ஹெய்க், ஸி. ஷூப் (Haig R. M., and Shoup C.), The Sales Tax in the American States, N. Y., Columbia, 1934.

இப் புத்தகம் அண்மையக் காலத்த தல்லவாயினும், நடப்புக்கு மிகவும் ஏற்புடைத்தாகும். இவ் வதிகாரத்தில் கூறியதை விரிவாகப் படிப்பதற்கு முதலதிகாரம் (1929-1933-ல் விற்பனைவரி இயக்கம்), இரண்டாமதிகாரம் (விற்பனை வரிக்கு வரி செலுத்துவோர்களின் எதிர்வினை), நான்காமதிகாரம் (விற்பனை வரியை ஒரு மாநில நிதி நடவடிக்கையாக மதிப்பிடல்) இவை சிறப்பாகச் சிபாரிசு செய்யப்படுகின்றன.

ஜே. கே. ஹால் (Hall J. K.), Excise Tax Incidence and the Postwar Economy, American Economic Review Supplement, March, 1942, pp. 83 ff.

போர்க்காலத்தியப் பணவீக்கத்தைத் தடுப்பது எப்படி, நெடுங்காலப் போர்ப் பிற்கால முடைகள் யாவை இவைகளைப் பற்றியும் நிலைப்பாடு விளைவுகள் பற்றியும் ஒரு நல்ல சர்ச்சையாகும் இது.

ஏ. ஹெச். ஹான்ஸன், ஹெச். எஸ். பெர்லோப்ஃ (Hansen, A. H., and Perloff, H. S.), State and Local Finance in the National Economy, N. Y., Norton, 1944, Chapter 3.

மாநில, தல வரிமுறைகளின் தேய்வு வீத விளைவுகளைப் பற்றிப் பொதுவாக ஆயும் சிறந்த நூல். குறிப்பாக விற்பனை, தொழில் வரிகளைப் பற்றி விரிவாக ஆராய்கிறது.

ஹெச். பி. வால்டு (Wald, H. P.), A Comparative Analysis of Three Variations of Retail Sales Taxes, American Economic Review, June, 1944, pp. 280 ff.

விற்பனை வரியின் சில விதிகளைப் பற்றிய விளைவுகளைப் பகுத்தாய்வதற்கும், நோக்கங்களை விளக்குவதற்கும் இக் கட்டுரை மிகவும் பயன்படும். பல்வேறுபட்ட விற்பனை வரி விதிப்பு முறைகளுடன் தொடர்பும் (அறிமுகமும்) இதனால் ஏற்படும்.

## 20ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. 1945ஆம் ஆண்டின் இறுதியில் இது ரத்து செய்யப்பட்டது.

2. பொருளியல் விளைவைப் பொறுத்தவரையில் ஆண்டாண்டு விதிக்கப்படும் மோட்டார் வாகன (ஊர்தி) உரிமங்களும், பயன் வரிகளும் ஒன்றுதான்.

3. பெட்ரோல் வரிகளை ஸ்டாம்பு முறையின் மூலம் வசூலிக்க முடியாதென்பது தெளிவு.

4. தனிப்பயன் வரிகளைப் பொறுத்த மட்டிலேயே, ஸ்டாம்புகளை வரி விதிக்கப்பட்ட பண்டங்களின்மீதே ஒட்ட வேண்டும் என்ற விதி பொருந்தும். ஏனெனில் விலையில் மாறுதல்கள் ஏற்பட்டால் வரித் தொகையிலும் பெறுமான வீத வரியின்கீழ் மாறுதல்கள் செய்ய வேண்டியிருக்கும். இதற்குப் பல்வேறுபட்ட பிரிவுகளிலும் (denominations) ஸ்டாம்பு வேண்டியிருக்கும். விலைகள் மாறிக்கொண் டிருக்கும்பொழுது பண்டங்களை வாங்கினால் கச்சிதமாக எந்த விலையுள்ள ஸ்டாம்புகளை ஒட்ட வேண்டுமென்று நிர்ணயிப்பது சாத்தியமன்று.

5. ஆயினும் சிறப்பாகச் சில விலக்குகள் அளிக்கலாம்.

6. அரிஸோ, இந்தியானா, மிஸிஸிப்பி, நியூ மெக்ஸிகோ, வர்ஜீனியா, வாஷிங்டன், மேற்கு வர்ஜீனியா. மேலும் குறிப்பிட்ட தொழில்களுக்குக் கிட்டத்தட்ட எல்லா மாநிலங்களிலும் மொத்த வரவு வரிகள் தொழில் வரிகள் என்று பிரயோகம் செய்யப்பட்டன. ஆனால் இவ்வரிகள் போடப்பட்டதன் கருத்து மொத்த விற்பனைகளின்மீது வரி வதிப்புச் செய்ய வேண்டும் என்பதல்ல. Tax Systems, 1952ஆம் ஆண்டைய பதிப்பு.

7. ஒரு சில்லறை விற்பனை வரியைக் காட்டிலும் பொறி வழி ஆக்கம் செய்வோர்கள், பண்டங்களைப் பக்குவப்படுத்துவோர்கள், அல்லது மொத்தமாகப் பங்கீடு செய்வோர்கள் இவர்களின் பேரில் ஒரு விற்பனை வரியை விதித்தால், வசூல் செய்வது எளிதாக இருக்கும். ஏனெனில் குறைந்த எண்ணிக்கையுள்ள நிறுவனங்களிலிருந்தே வரியை வசூல் செய்யும்படி இருக்கும். மற்றோர் பக்கத்தில், இது வரிவிதிப்புக்கு உள்ளாகிறவர்களை விளக்குவதில் பல பிரச்சினைகளை எழுப்பும். ஏனெனில், புலவகைப்பட்ட நிறுவனங்கள் பங்கீட்டின் முதல் (அல்லது ஆதி) நிலையில் இருக்கின்றன. அடுத்தடுத்து வரும் பங்கீட்டுப் படிகளில் கூர்நுதிக் கோபுரம் போன்று விலையேற்றங்களைச் சுமத்துவதற்கும் வகை செய்யும்.

8. எல்லாப் பேரங்களும் ஒரே வீத வரி விதிப்புக்கு உள்ளானால்தான் இஃது உண்மையாகும். விற்பனையின் பல்வேறுபட்ட நிலைகளில் பல்வேறு பட்ட வீதங்கள் பிரயோகிக்கப்படுமானால், இந் நிலைகளை விளக்குவது எளிதாயிராது.

9. இம்முறை விரிவாக (மிகுந்த உணர்ச்சியுடன்) வருணிக்கப்படு கிறது. Hearings, Committee on Ways and Means, Revenue Revision of 1942, vol. 2, p. 1788.

10. ஒரு பிரத்தியேக நெருக்கடியான காலத்தில் ஆயத் தீர்வைகளைப் பயன்படுத்த முடியும் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. செலவைக் கட்டுப்படுத்துவதற்கு ஏற்றதொரு கருவியாக அவற்றை ஒருமுகமாகப் பயன்படுத்துவதற்கு இவ் வரிகள் இடமளிக்கின்றன. எடுத்துக்காட்டாக இரண்டாவது உலகப் போர் நடந்து கொண்டிருந்த காலத்தில் பலவகை இனங்கள் ஆயத்தீர்வைப் பட்டியலில் சேர்க்கப்பட்டன. இதற்குக் காரணம் அவற்றை வாங்குவதை அல்லது பயன்படுத்துவதைக் குறைக்க வேண்டும் என்பதுதான். மோட்டார் கார்கள், அவற்றின் பாகங்கள், வழுக்காக்கும் எண்ணெய்கள் (lubricating oils), கட்டுகள் இவற்றின்மீது வரிவிதித்ததற்கு அவைகளும், மோட்டார் எரிபொருளும் (motor fuel) பற்றுக்குறையாக இருந்தமையே காரணமாகும். மின்சாரம், தொலைபேசி, தந்தி, இச்சேவை கள்மீது அதிக வரி விதித்ததற்கும் இதுவே காரணமாகும். போக நுகர்வுப் பொருள்களான மூட்டைமுடிச்சுகள், நகைகள் இவற்றின் பேரில் கடும் வரிவிதித்தற்குப் பெருகிய வருமானங்களை இப் பண்டங்களை வாங்குவதில் செலவிடாது திருப்பிவிடும் நோக்கம்தான் காரணம்.

11. Bureau of Census Compendium of State Government Finances in 1958, p. 11

12. Ibid.

13. Tax Systems, 1946

14. மாநில வரி விதிகளின் சுருக்கங்களை Commerce Clearing House பதிப்பிக்கும் States Tax Guide-ல் காணலாம். இது ஏடேடாக இருந் தாலும் மாநிலங்களில் தற்காலம்வரை ஏற்பட்ட மாறுதல்கள் இதில் காணக் கிடைக்கின்றன. அடுத்த வாக்கியத்தில் காணப்படும் 'உணவு' (food) என்னும் சொல் மளிகைச் சாமான்களைக் குறிப்பிடுமேயன்றி ஓட்டல் சாப் பாட்டைக் குறிக்காது. ஓட்டல் சாப்பாட்டுக்கு இன்னும் குறைந்த எண்ணிக்கையுள்ள மாநிலங்களிலேயே வரியிலிருந்து விலக்குத் தரப்படு கிறது.

15. Bureau of the Census, Summary of Government Finances in 1957 p. 23.

Bureau of the Census, Compendium of City Government Finances in 1957, p. 28.

17. ஏற்கனவே விலை, தேவைக்குத் தக்கவாறு எவ்வளவு உச்ச நிலை யில் இருக்கலாமோ அவ்வளவ உச்சநிலையில் இல்லையென்றால்

18. 72-ஆம் பக்கத்தில் உள்ள 11-ஆம் படத்தைப் பார்க்க.

19. வரியைப் புரட்ட முயற்சி செய்வதால் தேவை மிகவும் நெகிழ்ச்சி யுடையதாக ஆகும் என்று நாம் கூறுகின்றோமில்லை. இதைக் கவனத்தில் இருத்த வேண்டும். பல்வேறுபட்ட விலைகளில் விற்பனையாளர்களிடமிருந்து வாங்கப்படும் கணியங்களின் ஒரு பட்டியலே விற்பனையாளர்கள் கண்முன் நிற்கும் தேவையாகும். போட்டி மார்க்கட்டுகளிலும் இதையொத்த பொருள்கள் கிடைக்கின்றன. இக் கணியங்கள் எடு கோள்களாகக் கொள் ளப்படுகின்றன. வரியின் திணிப்பும், விலையைக் கூட்டி, அதைப் புரட்டச் செய்யப்படும் பின்னிட்ட முயற்சிகளும் தேவை. நெகிழ்ச்சியை நிருபிக்கின் றனவேயன்றி அவற்றால் அதைப் படைக்க முடியாது.

20. வரிச் சட்டத்துக்கு இணங்க நடப்பதில் விற்பனையாளருக்கு நேரும் செலவைச் சில மாநிலங்கள் ஒத்துக்கொள்கின்றன. மொத்த விற்பனைகளில் தாம் செலுத்த வேண்டிய விற்பனை வரி வீதத்தைச் சிறிது குறைப்பதனாலோ, மாநிலத்திற்குக் கணக்குப்படிச் சேரவேண்டிய வரித் தொகைகளில் முதல் சில டாலர்களை விற்பனையாளர்கள் வைத்திருக்கும்படி அனுமதிப்பதாலோ, அல்லது பொதுவாக விற்பனையாளர் செலுத்த வேண் டிய வரிக்கும் சிறிது கூடுதலாக வாங்குவோர்மீது வரிக்கட்டணப் பட்டியல் களை நிர்ணயிப்பதாலோ, இங்ஙனம் விற்பனையாளருக்கு நேரும் செலவை மாநிலங்கள் ஒத்துக் கொள்கின்றன. இவ்வாறு கனக்டிக்கட்டில் விற்பனை யாளர் 3 சதவிகித விற்பனை வரியை வாங்குவோர்களிடமிருந்து கீழ் வருமாறு வசூலிப்பதற்கு அரசாங்கம் கட்டளை பிறப்பித்துள்ளது :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 20 செண்டிலிருந்து | 38 செண்டு வரையாகும் விற்பனைகள் | 1 செண்டு |
| 30 | ,, | 70 ,, | ,, | 2 | ,, |
| 71 | ,, | 1·19 ,, | ,, | 3 | ,, |

விற்பனைத் தொகைகளின்மீது வசூலிக்கப்படும் தொகை கச்சிதமாக (33 செண்டு, 67 செண்டு, 1 டாலர்) அடைப்பின் அடியைக் காட்டிலும் உச்சியி லேயே இருக்கிறது என்பதைக் கவனிக்கவும். மொத்தத்தில் வரி அதிகாரிக்கு அனுப்ப வேண்டிய வரியைவிடக் கூடுதலாகவே விற்பனையா ளர் வாங்குவோரிடமிருந்து வசூலிப்பார்.

21 The Sales Tax in the American States, New York, Columbia, 1934, pp. 16-24.

22. அதே நூல்.

23. 1937-க்கும் 1941-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் ஒஹியோ மாநிலத்தில் விற்பனை வரி வசூல்கள் ஆண்டுதோறும் 40 மில்லியன் டாலரி லிருந்து 63 மில்லியன் டாலர் வரை இருந்தன. Cf. Hearings, House Committee on Ways and Means, *Revenue Revision* of 1942, Vol. 2, p. 1788.

24. குறிப்பாக, 4, 5 அதிகாரங்கள்,

25. John F. Due, *Sales Taxation,* Urbana, University of Illinois Press, 1957, p. 306.

26. தான் வரியாகச் செலுத்தும் தொகையிலிருந்து ஒரு சிறிய பகுதியை இவ் வரியை வசூலிக்கும் பணிக்காகப் பிடித்தம் செய்து கொள்ளும்படி விற்பனையாளர்களைச் சில மாநிலங்கள் அநுமதிக்கின்றன. இல்லினுய்ஸும் அர்கன்சாஸும் சுமார் 2 சத விகிதம் அநுமதிக்கின்றன. மிச்சிகன் ஆண்டொன்றுக்கு 600 டாலர் அநுமதிக்கிறது. Blakey *op. cit.*, p. 12.

27. *Studies in Current Tax Problems*, pp. 120-24.

28. பொதுவாக வருவாய் எத்துணை அதிகமாக இருக்கிறதோ வரியின் பிரயோகம் எத்துணைப் பரவலாக இருக்கின்றதோ, அத்துணை ஆட்சிச் செலவின் சதவிகிதம் குறைவாக இருக்கும். மாநில விற்பனை வரிகளைக் காட்டிலும் கூட்டாட்சியின் சில்லறை விற்பனை வரி ஒரு வேளை மிகவும் திறமையாக ஆட்சி செய்யப்படவும் கூடும்.

29. Cf. testimony of F. R. Fairchild before Committee on Ways and Means, *Revenue Revision* of 1943, p. 639; 'வருமானங்கள் சொத்துகள் முதலானவற்றின் மீது கடுமையான வளர்வீத வரிகள் தற்பொழுது விதிக்கப் படுகின்றன. இவற்றுக்கு மாருக, இவற்றை ஈடு செய்வதற்காக, வேருெரு வகை வரிகள் சிலவற்றை நாம் விதிக்க வேண்டும். அப்பொழுது முழுமையான வரி முறையின் படம் நமக்குக் கிடைக்கும்'. மேலும் 'விற்பனை வரியின் வீதம் குறைவாக இருக்கும்வரை இவ் வரியின் (விற்பனை) பளுவைத் தேய்வு வீதத்தில் பங்கீடு செய்வதை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. கூட்டாட்சியின் தனியாள் வருமான வரியும், இறப்பு வரியும் மிகவும் வளர் வீத முறையில் பங்கீடு செய்யப்பட்டிருப்பது இதைச் சமனுக்கும்.' *Report of the Connecticut Special Tax Commission of* 1933, p. 583) See also National Association of Manufacturers, *Facing the Issue of Income Tax Discrimination*, 1955, pp. 5, 6.

30. 1918-ல் அரசியல் சட்டத்திற்கு முரணுனது எனத் தீர்மானிக்கப் பட்டது. deomargarine=மாட்டுக் கொழுப்பிலிருந்து இறக்கப்படும் நீரை சுண்டச்செய்து, அத்துடன் பட்ரின் (butyrin) என்ற பொருளைச் சேர்த்தால் திரவ பதார்த்தம் ஜட பதார்த்தமாகும். இது முன்னர் பட்டரின் (butterine) என்ற பெயரிலும், தற்பொழுது மார்கரின் (margarine) என்ற பெயரிலும் விற்கப்படுகிறது; வெண்ணெய்க்குப் பதிலாக பயன்படுத்தப்படுகிறது.

31. மற்ருெரு பக்கத்தில், உற்பத்தி அல்லது மொத்த விற்பனை மட்டத்தில் ஒரு விற்பனை வரியை வசூல் செய்தால், அது 'கரவு வரிகளில்' (hidden taxes) ஒன்ருக ஆவதுடன், ஒப்புமையில் சொற்ப வரிப் பிரச்னையையே உண்டுபண்ணுகிறது.

32. இப் பிரச்சினை கார்ல் ஷுப்பினுல் (Carl Shoup) ஆயப்பட்டிருக்கிறது. *Taxing to Prevent Inflation*, New York, Columbia, 1943, pp. 92 ff. பின் வருவதில் பெரும்பகுதியும் ஷுப்பின் ஆய்விலிருந்தே எடுக்கப்பட்டது.

33. தேவை கூடுதலாகவும் ஏறிக்கொண்டும் இருப்பதால் ஒரு பொருளாதார வீக்க காலத்தில், ஒரு நுகர்வு வரியின் பெரும் பகுதியையும் முற்பட்டுப் புரட்டுவது பொதுவாக சாத்தியமானதேயாகும்.

34. விற்பனை வரியில் உள்ள வேறு அநுகூல சாத்தியங்களைப் பற்றியும் ஷுப் கூறுகிருர். அவை இவ் வாசிரியருக்கு முக்கியமானவை என்று

படவில்லையாதலால் அவை இங்கே விடப்பட்டன. இவ் வரியின் அநுகூலங்களைப்பற்றி அவர் கூறுபவை அவ்வளவு உரம் வாய்ந்தவையாக இல்லை.

35. தொழிலாளர் கழகப் புள்ளி விவர நுகர்வு விலைக் குறியீடு (The Bureau of Labour Statistics Consumer Price Index) 'வாழ்க்கைச் செலவின்' (cost of living) குறியீடாகப் பெரிதும் எண்ணப்படுகிறது. பல தொழிலாளர் ஒப்பந்தங்களில் இவ் வாழ்க்கைச் செலவு, தானுக இயங்கும் (automatic) அல்லது நகரும் படிக்கட்டின் (escalator) கூலியைச் சரிக்கட்டுவதற்குத் தளமாகப் பயன்படுத்தப்படுகிறது. இக் குறியீட்டில் வருமான வரிகளைச் சேர்ப்பதில்லை; ஆனால், நுகர்வு வரிகள் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. இங்ஙனம் நுகர்வோர் விலைக்குறியீட்டில் கூடுதலான விற்பனை வரிகள் பிரதிபலிக்கின்றன. இதனுல் கூலிகள் தாமாகவே உயரக்கூடிய அல்லது கூலி உயர்வைச் சரியென 'நிலைநாட்டக்கூடிய' நிலை ஏற்படுகிறது.

# 21. இறப்பு வரிகளும், கொடை வரிகளும்

## Death and Gift Taxes

ஒருவர் இறந்த பின்பு இன்னொருவருக்கு மாற்றப்படும் சொத்தின்மீது இறப்பு வரிகள் விதிக்கப்படுகின்றன. தனியாள் உடைமை முறையில், தான் இறந்த பின்பு[1] தன் சொத்தை எங்ஙனம் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும் என்று நிர்ணயிப்பதற்குத் தனியாளுக்கு உரிமை இருக்கவேண்டியது இன்றியமையாததாகும். பூர்வீக சமுதாயத்தில் அல்லது பூரணக் கம்யூனிசம் நிலவும் சமுதாயத்தில், சொத்துரிமை ஒரு கும்பல் அல்லது சமுதாயத்திடம் இருக்கிறது. அவ்வித சமுதாயத்தில் ஓர் உறுப்பினர் இறந்துபடுவாரானால், அதனால் உடைமை உரிமையில் யாதொரு மாறுதலும் செய்யவேண்டியதில்லை. ஏனெனில், அவருடைய வாழ்நாளில் அவர் சமுதாயத்தின் சொத்தையே பயன்படுத்திக்கொண்டிருந்தார். இன்னொரு பக்கத்தில், தனியார் உடைமை நிறுவனம் என்றாலேயே வாழ்நாளிலும், இறந்த பிறகும், ஒருவர் தன் உடைமையாய்ப் பயன்படுத்துவதற்கும், பங்கீடு செய்வதற்கும் உரிமை இருக்கிறது என்ற பொருள் பொதிந்திருக்கிறது. ஆயினும், உடைமை உரிமை ஓர் இயற்கை உரிமை (natural right) அன்று. சமூக, சட்ட முறையின் படைப்பே உடைமை உரிமை. இவ்வாறு எல்லோருடைய (பொதுவான) இணக்கத்தின்பேரில் சட்டபூர்வமாக உடைமை உரிமை நிறுவப்படுகிறது. உயில் கொடை (bequest), வாரிசாகப் பெறுதல் (inheritance) இவ் வுரிமைகளுக்குச் சட்டப்படி வரையறைகள் விதிக்கப்படலாம். தனியாள் உடைமையை ஒப்புக்கொள்ளும் ஒரு சமுதாயத்தில் தலைமகன் உரிமை (system of primogeniture) நிலவலாம். இம் முறையில் உயில் கொடை, வாரிசாகப் பெறுதல் என்னும் உரிமைகள் தெளிவாக வரையறுக்கப்படுகின்றன. தற்கால அரசுகள் பலவற்றிலும் இறந்துபட்ட தந்தையினுடைய உடைமை"யின் ஒரு பாகத்திற்குக் கைம்பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் நிலையான

சட்டபூர்வமான பாத்தியதைகள் இருக்கின்றன. இதனுல் உயில் கொடை ஒரு வரம்புக்கு உட்படுத்தப்பட்டு இருக்கிறது. இறப்பின்போது இன்னெருவருக்கு மாற்றப்படும் தனியார் உடைமையின்மீது அரசுக்குச் சட்டபூர்வமாகச் செயல்படுத்தக் கூடிய பாத்தியதை இருப்பதை இறப்பு வரிகள் ஒப்புக் கொள்கின்றன.

சமுதாய அமைப்பில் உடைமையை மாற்றுதல் என்பது அரசாங்கத்தின் கண் பார்வையிலேயே நிகழவேண்டுவதாகும். இஃது அரசாங்கத்தின் பாதுகாப்பு அலுவலின் விஸ்தரிப்பே. இறந்துபட்டவர்களின் விருப்பங்களுக்கேற்பவும், தற்போதைய வாரிசுச் சட்டங்களின்படியும் உடைமைகளைப் பங்கிடுவது இன்றியமையாத அமிசமாகும். உடைமையைப் பங்கிடும் தருணத்தில் அரசாங்கம் தன் வரி பாத்தியதைகளைச் சமர்ப்பிக்கிறது. வழக்கில் இரண்டு வகை இறப்பு வரிகள் இருக்கின்றன. சட்டபூர்வமான வாரிசுதாரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பதற்கு முன்பு இறந்தவரின் உடைமையின்மீது விதிக்கப்படும் வரி எஸ்டேட் வரி (estate tax) யாகும். ஒவ்வொரு வாரிசுதாரருக்கும் தனித்தனியே கிடைக்கும் பங்கைத் தளமாகக் கொண்டு விதிக்கப்படும் வரி வாரிசு வரி (inheritance tax) அல்லது வழியுரிமை வரி (succession tax) ஆகும். இவ் விருவகை வரிகளின் சிறப்பியல்புகளைப்பற்றி பல காலமாக விவாதம் நடந்து வந்திருக்கிறது. இறப்பு வரியின் கருதுகோளை நாம் சர்ச்சை செய்யும்பொழுது இவ் விவாதத்தில் பொதிந்துள்ள சில பிரச்சினைகளைப் பற்றியும் சிறிது கூறவேண்டி இருக்கும்.

## இறப்பு வரிவிதிப்பைப் பற்றிய கருதுகோள்கள்

வரிகளில் மிகத் தொன்மையானவை இறப்பு வரிகளே.[2] அவைகளுடைய நெடுநாளைய வரலாற்றில், கருதுகோள் அளவில், இவ் வரிகளுக்கான காரணங்களுக்குப் பஞ்சமில்லை. உண்மையில் நாம் எண்ணிப் பார்க்கக்கூடிய எல்லா வரிக் காரணங்களும் இறப்பு வரிக்கு ஏதோ ஒரு காலத்தில் கூறப்பட்டே வந்திருக்கின்றன.

1. **ஆதாயம் (Benefit) :** இறந்து போனவர்களின் விருப்பங்களுக்கேற்ப சட்டபூர்வமான வாரிசுதாரர்களுக்கு உடைமைகளைப் பங்கீடு செய்வதை உறுதிப்படுத்தி அரசாங்கம் தன் கடமையை ஆற்றுகிறது. இப் பணிக்காக அரசாங்கத்திற்குச் செலுத்தப்படும் வரியே இறப்பு வரியாகும் என்று இவ் வாதாயக் கருதுகோள் நுவல்கிறது. மரித்தவர் யாதொரு உயிலும் எழுதி வைக்கவில்லையென்றுல்,

இவ்விதச் சூழ்நிலைகளில் சமுதாயத்தின் விருப்பங்களை ஒட்டி அரசாங்கம் உடைமையைப் பங்கீடு செய்து வைக்கிறது. சமுதாயத்தின் விருப்பங்கள் சட்ட விதிகளில் தெளிவாக வெளியிடப் பட்டிருக்கின்றன. இக் கருதுகோளின்படி இப் பணியைச் செய்வதற்காக அரசாங்கத்திற்குச் செலுத்தும் வரியே இறப்பு வரியாகும். இக் கருதுகோள் உண்மையானுல் உயில் நிரூபணத்திற்கான கட்டணத்திற்கு (probate fee)மேல் யாதொரு வரியும் செலுத்த வேண்டியதில்லை. உயில் நிரூபணக் கட்டணங்களை அன்றி இறப்பு வரிகளும் தற்காலத்தில் விதிக்கப்படுகின்றன. இறப்பு வரிகள் பொதுவாக வளர்வீதமானவை. ஆகவே, ஆதாயக் கொள்கையை இறப்பு வரிக்கான போதிய கருதுகோள் தளமாகக் கொள்ள முடியாது.

வாரிசுச் சட்டங்கள், மாநிலச் சட்டங்கள் ஆனபடியினுலும், இறப்பின்போது உடைமைகளை அமைதியாக மாற்றுவது மாநில அரசாங்க ஏஜன்ஸிக்கு அலுவல் ஆனபடியினுலும், இறப்பு வரிகள் 'இயல்பாகவே' மாநில வரிகள்தாம் என்று மீட்டும் மீட்டும் வலியுறுத்தப்படுகின்றன. இக் கருத்தின்படி உடைமைகளை அல்லது வாரிசுகளாகப் பெற்றவைகளின்மீது கூட்டாட்சி வரி விதிப்புச் செய்வது, மாநில அரசாங்கங்களுக்கு உரிய வருவாய் வெளியில் அத்து மீறிச் செல்வதாகும் என்று கருதப்படுகிறது. இவ் வரி ஆதாயக் கொள்கையைத் தளமாக எத்துணை அளவு கொண்டிருக்கிறதோ அத்துணை அளவே இம் முகாந்திரத்தை நாம் ஏற்றுக்கொள்ள முடியும். தற்கால இறப்பு வரிகளை நிலைநாட்டு, வதற்கு ஆதாயக் கொள்கை போதுமானதாக இல்லாததால் இவ்வரி மாநிலங்களுக்கே சொந்தம் என்ற முகாந்திரமும் அடி பட்டுப் போகிறது.

**2. அரசுக் கூட்டு வியாபாரம்** (State Partnership): இறப்பு வரிகளை நிலைநாட்ட இன்னெரு கருதுகோளும் மொழியப் படுகிறது. இக் கருதுகோள் அத்துணை முக்கியத்துவம் வாய்ந்த தன்று. மதிப்பின் படைப்பு யாவற்றிலும் அரசாங்கம் இன்றியமையாது ஓர் உழையாக் கூட்டாளியாக இருக்கின்றது என்று இக் கருத்துக்கோள் கூறுகிறது.[3] இது உண்மையானுல், உடைமைகளைப் பங்கீடு செய்வதில் அரசாங்கத்திற்கு ஒரு பெரும் பாத்தியதை இருக்கிறது. அரசாங்கத்திற்குச் சொந்தமானதைத் தருக்க முறைப்படி இன்னெருவருக்குக் கொடுக்க இறந்தவருக்கு உரிமையில்லை என்பதும் பெறப்படும். தற்காலத்திய இறப்பு வரிவிதிப்பை நிலைநாட்டுவதற்கு இக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. இதை ஏற்றுக்கொள்வோமானுல், இக் கருதுகோளை

வருமான வரிவிதிப்புக்கும் பிரயோகிக்கலாம். வருமான வரி விதிப்பைச் சரியென நிலைநாட்ட இக் கருதுகோளைப் பயன்படுத்தினோமானால், தருக்க முறைப்படி மீண்டும் ஓர் இறப்பு வரியை நிலைநாட்ட அதே கருதுகோளை உபயோகிக்க முடியாது. மேலும் தற்கால நடப்பில் குறைந்த அளவுகள் சொத்துகளுக்கு விலக்கு அளித்தலும், வரிவிதிக்கப்பட்ட சொத்துகளுக்கு வளர்வீத முறையைப் பிரயோகித்தலும், கூட்டு வியாபாரக் கொள்கையைப் பிரதிபலிப்பதாகத் தெரியவில்லை. செல்வத்தையும் உடைமையையும் படைப்பதில் அரசாங்கமும் ஒரு கூட்டாளியென்றால், அரசாங்கம் பெரிய சொத்துகள், சிறிய சொத்துகள் இரண்டையும் படைப்பதற்குக் காரணமாகும். ஒரு சிறிய உடைமையைக் காட்டிலும் ஒரு பெரிய உடைமையின் பெரும்பங்கை அரசாங்கம் எடுத்துக்கொள்வதோ, அல்லது தொழில்களின் இழப்புக்களில் பங்கு கொள்ளாது ஆதாயங்களில் மட்டும் அரசாங்கக் 'கூட்டாளி' பங்கு கொள்வதோ, எவ்வாறு நியாயமாகும் என்பதும் நமக்கு விளங்கவில்லை.

3. **பின்னிட்ட வரிக் கொள்கை (The Back-Tax Theory) :** மரித்தவர் தம் வாழ்நாளில் செலுத்தாது தப்பித்துச் சென்ற வரிகளை வசூலிப்பதற்கு இறப்புவரி ஒரு கருவி என்று இக் கருதுகோள் கூறுகிறது[4]. உடைமை வரிகளைச் செலுத்தாது தப்பிச் செல்வதையே இது சிறப்பாகக் குறிக்கிறது. ஏனெனில், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இறப்பு வரி முதலில் மாநிலங்களின் கருவியாகவே இருந்தது. அன்றியும், அப்போது உடைமை வரிதான் மாநிலங்களின் தலையாய வரியாக இருந்தது. உடைமை வரிவிதிப்பிலிருந்து தப்பிப்பது தொடர்ந்து கூடுதலாக இருந்ததும் இக் கருதுகோளுக்கு ஓர் ஆதாரமாயிற்று. ஆயினும், ஸெலிக்மன் கூறுவது போன்று வாரிசாகப் பெற்ற அல்லது எஸ்டேட்டின் எல்லா வகை உடைமைகளின்மீதும் இறப்பு வரிகள் விதிக்கப்பட்டன. தாவர உடைமை வரியைச் செலுத்தாது டிமிக்கிக் கொடுத்தவர்கள் ஒருவருமிலர். ஆகவே, தருக்க முறைப்படி, இதுவரை செலுத்தப்படாத உடைமை வரிகளின் இறுதிக் கணக்கையே இறப்புவரி பிரதிபலிக்கிறதென்றால், அதைத் தனியாள் உடைமையின்மீது மட்டுமே விதிக்கவேண்டும். ஆனால், உடைமை வரிகளையோ பிற வரிகளையோ செலுத்தாது டிமிக்கி கொடுப்பதன் மூலமாகத்தான் பெரும் எஸ்டேட்டுகளைத் திரட்ட முடியுமென்று கொள்வது அறிவுக்குப் புறம்பானதாகும். ஆகவே, ஓர் எஸ்டேட் இருப்பதே முன்னே வரி செலுத்தாது டிமிக்கி கொடுத்ததற்குத் தோற்ற அளவில் (prima facie) சான்று எனக் கொள்வதும் அறிவுக்கு ஒவ்வாததாகும்[5].

4. **வரிசெலுத்தும் திறன் (Ability to Pay) :** இறப்பின்போது மாற்றம் செய்யப்படும் உடைமை மீது வரிவிதிப்பது வரி செலுத்தும் திறன் என்ற கொள்கையின் அடிப்படையின் பேரிலேயே என்பது - பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. உடைமையை வாரிசாகப் பெறுவதால் உடைமையைப் பெறுவோ ருக்குப் புதிய ஆஸ்திகள் கிடைக்கின்றனவென்றும், இதனுல் பிறவரிகளைச் செலுத்தும் திறனினின்றும் வேருக அரசாங்கத்திற்கு வரி செலுத்தக்கூடிய திறனை அது படைக்கிறதென்றும் இக் கருதுகோள் வலியுறுத்துகிறது. இது பெரும்பாலோரின் விஷயங் களில் உண்மையே. இன்றியமையாத விடத்து ஒரு குறைந்த அளவு வாரிசு சொத்திற்கு வரிகளினின்றும் விலக்கு அளிக்கலாம். வாரிசு சொத்துக்களைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு டால ருக்கும் வரிகளைச் செலுத்தும் திறன்மீது இரு திசைகளில் வளர் வீதங்கள் பிரயோகம் ஆகின்றன. மற்ருெரு பக்கத்தில், எத்துணைக் கூடுதல் வாரிசுச் சொத்திருக்கின்றதோ, அத்துணை ஒவ்வொரு டாலர் சொத்துக்கும் வரி செலுத்தும் திறனும் கூடுத லாக இருக்கிறது. வளர்வீத வரிவிதிப்பைப்பற்றி முன்ஞெரு அதிகாரத்தில் விரிவாக ஆராய்ந்தபொழுது இவற்றுக்கான காரணங்களை விளக்கினேம். மேலும் வாரிசுதாரர் இச் சொத்தின் வரவை எத்துணை நம்பியிருந்தார் என்பதற்கேற்பவும், வாரிசாகப் பெற்ற சொத்திலிருந்து வரிகளைச் செலுத்தும் திறனும் வேறு படுகிறது. ஒருவரைச் சார்ந்திருக்கும் விதவைகள், குழந்தைகள் இவர்கள் வாரிசாகப் பெறும் சொத்தைக் காட்டிலும், அதே அளவு எதிர்பாராது ஒருவர் சொத்துகளை அடைந்தால் பின்னதற்கு முந்தியதைவிட, ஒவ்வொரு டாலர் சொத்துக்கும் கூடுதல் வரி செலுத்தும் திறன் இருக்கிறது.

இவ்வாறு வரிசெலுத்தும் திறன் கொள்கை இறப்பு வரிகளின் வளர்வீதத்தை இரு திசைகளிலும் சுட்டிக் காட்டுகிறது. வாரிசாகப் பெற்ற அல்லது எஸ்டேட்டின் பருமன் ஏற ஏற வரி வீதமும் ஏறுவது, ஒன்ருகும்; உயில் எழுதி வைத்தவருக்கும் வாரிசுதாரருக்கும் உள்ள உறவைப் பொறுத்து வரிவீதம் ஏறுவது, இரண்டாவதாகும். அதாவது, நெருங்கிய உறவினர் களுக்குக் குறைந்த வீதமும், தூர உறவினர்களுக்குக் கூடுதல் வீதமும் விதிப்பது. உறவைப் பொறுத்துப் பல மாநிலங்களும் வாரிசுதாரர்களை மூன்று வருக்கங்களாக வகுத்திருக்கின்றன. A வருக்கத்தில் அல்லது 'நேரிடை'யான வாரிசுதாரர்களில் கணவன் அல்லது மனைவி, சேய்கள், பெற்ருேர்கள், பாட்டனர், பாட்டி, பேரப் பிள்ளைகள் அடங்குவார்கள். இவர்களுக்கு மிக உச்ச வீதம் விலக்களிக்கப்படுகிறது. இவர்கள் ஒப்புமையில்

குறைந்த (வளர்வீதமாயினும்) வரிகளும் செலுத்துகிறார்கள். B வருக்கத்தில் அல்லது தாய் (collateral) வாரிசுதாரர்களில் உடன் பிறந்தான், உடன் பிறந்தாள், தாயாதி, மாமா, சிற்றப்பன் பெரியப்பன், அத்தை, சின்னம்மை, பெரியம்மை, தத்து அல்லது அபிமானமாக எடுத்துக்கொண்ட குழந்தைகள் ஆகியவர்கள் அடங்குவார்கள். இவர்களுக்கு A வருக்கத்தினரைவிட விலக்கும் குறைவு; அவர்களைவிட வரிவீதங்களும் (வளர்வீதம்) கூடுதலாகும். நெருங்கிய உறவில்லாத வாரிசுதாரர்கள் எல்லாம் C வருக்கத்தில் அடங்குவார்கள். இவர்களை 'அயலார்கள்' (strangers) என்றும் குறிப்பிடலாம். இவர்களுக்களிக்கப்படும் விலக்குகள் மிகக் குறைவு; வீதங்களும் (வளர்வீத) மிகவும் கூடுதல். மேலே குறிப்பிட்ட வருக்கங்களுக்கான விளக்கங்களை வேறுபடுத்துவதன் வாயிலாக, மூன்றுக்கு மேற்பட்ட வருக்கங்களையும் படைக்கலாம்; அல்லது மூன்று வருக்கங்களையும் இரண்டாக்கலாம் அல்லது ஒன்றாக்கலாம். தங்கள் வருமானத்திற்குப் பதிலியாக வாரிசாகப் பெற்ற, உடைமையைச் சாத்தாரணமாகச் சார்ந்திராதவர் பெறும் ஒவ்வொரு டாலர் சொத்துக்கும், வரிசெலுத்தும் திறன் கூடுதலாக இருக்கிறது என்ற பொருளாதார உண்மையை அடிப்படையாகக் கொண்டே இப் பாகுபாடு செய்யப்பட்டது.

வரி செலுத்தும் திறனுக்கேற்ப வரியைத் திருத்தியமைக்க வேண்டும் என்ற விருப்பத்தினால் உந்தப்பட்டு பலர் எஸ்டேட்டு வரியை (estate tax) எதிர்த்து வாரிசு வரிக்கு உற்சாகமாக ஆதரவு நல்குகின்றனர். எஸ்டேட்டு வரியில் வாழ்நாள் நலன்கள் (life interests), ஒரோ வழி சொத்துகள் (contingent estates) என்ற சிக்கல்கள் இல்லை. இவ்விதப் பிரத்தியேக அல்லது ஒத்திப் போடப்பட்ட வாரிசு சொத்துக்களின்மீது வரி போடுவதற்காக மதிப்பீடு செய்வதில் பல ஆட்சிச் சிக்கல்கள் ஏற்படுகின்றன. இதனால் ஆட்சி எந்திரம் மதிப்பீடு செய்து முடிக்காது இயங்கும் வரையிலும் நெடுங்காலத்திற்குச் சட்டபூர்வமான வாரிசு தாரர்கள் சொத்தை அநுபவிக்க முடியாமல் போவதுமுண்டு. வரிசெலுத்தும் திறனுக்கேற்ப மிகவும் கச்சிதமாகச் சரிக் கட்டுதலில் உள்ள இச் சில்லறைச் சங்கடத்தைப் பொருட்படுத்தக் கூடாதென்று வாரிசுவரியின் ஆதரவாளர்கள் கூறுகின்றனர். ஒரு எஸ்டேட் ஒரே வாரிசுதாரருக்கும் இன்னொரு எஸ்டேட் பல வாரிசுதாரர்களுக்கும் பிரித்துக்கொடுக்கப்பட்டால், இரண்டு எஸ்டேட்டுகளின் வரிசெலுத்தும் திறனும் சமம் என்று கூற முடியாது. வரிசெலுத்தும் திறன் வாரிசுதாரர்களைப் பொறுத்ததே யன்றி எஸ்டேட்டைப் பொறுத்ததன்று. பிரிவினைக்கு முன்பே சொத்தின்மீது வளர்வீதத்தைப் பிரயோகிப்பது, வரி செலுத்தும்

திறன் கொள்கையை உத்தேசமாக அநுசரிப்பதேயாகும். இவ்வித மாக இறந்துபோனவருடன் உள்ள உறவு முறையைப் பார்த் தாலும் சரி, ஒவ்வொருவருக்கும் வாரிசாகக் கிடைக்கும் சொத்தின் அளவைப் பார்த்தாலும் சரி, எஸ்டேட் வரி வாரிசுதாரர்களின் வரிசெலுத்தும் திறன் என்ற எடுகோளைப் புறக்கணிக்கின்றது.

மற்றொரு பக்கத்தில், தனிப்பட்ட வாரிசுதாரர்களின் வரி செலுத்தும் திறனையும், வரியின் பளுவுகளையும் ஒப்பிடும்பொழுது எங்ஙனம் வாரிசுவரி இயங்குகிறது என்பது பல பிரச்சினைகளை எழுப்புகிறது. பெரும்பான்மையான எடுத்துக்காட்டுகளில் இவ் விரு வகை வரிகளின் விளைவுகளுக்கிடையேயும் யாதொரு செயல் முறை வேறுபாடுமில்லை. ஏனெனில், பொதுவாகக் கணவன் மனைவியரில் யார் உயிருடன் இருக்கின்றார்களோ அவர்களையே எஸ்டேட் நேரிடையாகச் சேர்கிறது. இவ்விதச் சூழ்நிலைகளில் வாரிசு வரியும் எஸ்டேட் வரியும் ஒன்றே யெனலாம். இறந்தவர் களின் எஸ்டேட்டுகள் பல பங்குகளாகப் பிரிக்கப்பட்டுப் பல வாரிசுதாரர்களிடையேயும் பிரித்துக் கொடுக்கப்படும்பொழுது ஒவ்வொரு வாரிசுதாரரும் செலுத்த வேண்டிய வரி, அவருடைய அலாதியான வரிசெலுத்தும் திறனை அளக்கிறது என்ற சிறப்பியல்பு வாரிசுவரியில் இருப்பதாகக் கூறலாம்.[6] போகூழ் காரணமாக உயில் எழுதுவோர் தம் விருப்பப்படி (அல்லது அங்ஙனம் விருப்பம் ஒன்றும் இல்லாமையினாலோ) வாரிசுவரியின் பாராட்டத்தக்க நோக்கங்களைத் தோற்கடித்துவிடலாம். ஒவ்வொருவருக்கும் வாரிசாகக் கிடைக்கும் பங்கிலிருந்து [7] வாரிசுவரிகள் பொதுவாகச் செலுத்தப்படுகின்றன என்பது உண்மையே. பல வேறுபட்ட வாரிசுதாரர்கள் பேரிலும் இவ் வரிகளால் ஏற்படும் தாக்கை உயில் எழுதுவோர் பொதுவாக முற்றும் உணர்ந்திருப்பதால், அத் தாக்குகளுக்கேற்ப, தம் சொத்தில் பங்குகளை அவர் வாரிசுதாரர் களுக்குக் கொடுக்கலாம்.

எடுத்துக்காட்டாக, உயில் எழுதும் ஒருவர் தன்னுடைய நிகர எஸ்டேட் (கடன்களையும் பிற செலவுகளையும் கழித்தபின்பு, ஆனால் வரிகளைக் கழிக்காது) 50,000 டாலராக இருக்கும் என எதிர்பார்க்கிறார் என்று வைத்துக்கொள்வோம். வாரிசு வரி நேரிடையான வாரிசுதாரர்களுக்கு 30,000 டாலர் விலக்கு அளிப்பதாகவும், அயலார்களுக்கு[8] (strangers) ஒரு விலக்கும் அளிக்கவில்லை என்றும் வைத்துக்கொள்வோம். ஏறக்குறைய தன் எஸ்டேட் முழுமையும் அவர் தன் விதவைக்கே (ஒரே நேரிடை யான வாரிசு) விட்டுச் செல்ல விரும்புகிறார் என்றும் ஆனால் அதே சமயம் தன்னுடைய செயலாளருக்கும், தன் முந்திய

தொழில் கூட்டாளிக்கும் சிறிது கொடுக்க விரும்புகிறார் என்றும் வைத்துக்கொள்வோம். யாதொரு வரியும் இல்லையென்றால் அவர் தன் மனைவிக்கு 40,000 டாலரும், தலா ஒருவருக்கு 5,000 டாலர் வீதம் இரண்டு 'அயலார்களுக்கும்' விட்டுச் செல்ல விரும்புவதாகவும் வைத்துக் கொள்வோம். வாரிசுச் சட்டத்தை அவர் படித்த பின்பு தன் விதவை 200 டாலரையும் (விலக்களிக் கப்பட்ட தொகைக்கு மிகையாக இருக்கும் தொகையின்மீது 2 சதவிகிதம்) வரியாகச் செலுத்திய பிறகு 39,800 டாலரைப் பெறுவாரென்று தெரிந்து கொள்கிறார். ஆனால், மற்ற இருவரும் யாதொரு வரிவிலக்கும் இன்றி 10 சதவிகிதம் அல்லது 500 டாலரை வரியாகச் செலுத்திய பிறகு ஆளுக்கு 4,500 டாலரை எடுத்துக் கொள்வார்களென்றும் அவர் தெரிந்துகொள்கிறார். இந்த நிலைமையைப் பார்த்து அவர் 'அயலார்கள்' இருவருக்கும் தலைக்கு 5,555 டாலர் கொடுக்கலாம். வரியைச் செலுத்திய பின்பு அவர்களுக்குத் தலைக்கு 5,000 டாலர் கிடைக்கும். இதன் விளைவாக அவர் தன் மனைவிக்கு உயில் கொடையாக 38,990 டாலர்தான் விட்டுச் செல்ல முடியும். வாரிசுவரி ஒவ்வொரு வாரிசுதாரரின் வரிசெலுத்தும் திறனைத் திட்டவட்டமாக அளக்கக் கூடும் என்ற கருத்துக்கு இவ் வுதாரணத்தில் பழுது நேர்ந்து விட்டது. வேற்றுமைப்படுத்திய வீதங்கள், விலக்குகள் இவற்றின் விளைவாக இவ் வரியின் முழுப்பளுவையும் விதவையே சுமக்க வேண்டியிருக்கிறது. வரியில்லாதிருந்தால் 'அயலாருக்கு' என்ன தொகை கிடைத்திருக்குமோ அதே தொகை வரிசெலுத்திய பின்பும் அயலாருக்குக் கிடைக்கிறது. தான் வாரிசாகப் பெற்ற ஒவ்வொரு டாலரிலிருந்தும் வரி செலுத்தும் திறன் விதவைக்குக் குறைவாக இருப்பதாகக் கருதப்படுகிறது. ஆயினும், அவள் முழு வரிப் பளுவையும் ஏற்கவேண்டி யிருக்கிறது. நாம் விளக்க வேண் டிய அமிசத்தை இவ் வெடுத்துக்காட்டின் மூலம் விளக்கி விட்டோம். ஆனால், விளக்க வேண்டிய அமிசம் இங்கே தரப்பட்ட புள்ளித்தொகைகளையும் நடவடிக்கைகளையும் பொறுத்ததில்லை. எஸ்டேட் வரியைக் காட்டிலும், மிகக் கச்சிதமாக, வாரிசுவரி வரி செலுத்தும் திறன் கொள்கையை நிறைவேற்றுகிறது என்று நாம் கூறும்பொழுது, உயில் எழுதுவோர் இதில் ஏதும் மாற்றமோ அல்லது இவ் வரி பயனின்றிப் போகும்படியோ செய்வதில்லை என்று நம்புகின்றோம். யாரார் உயில் எழுதுபவர்களின் நம்பிக் கைக்கு உரியவர்களோ அவர்களின் சான்றினால் இவ் வெடுகோள் உண்மையானதன்று என்று நிரூபிக்கலாம்.[9] ஆகையினால், வாரிசு வரிக்குச் சொல்லப்பட்ட பொருளாதாரச் சிறப்பு எல்லாமே பெரும்பாலும் கற்பனையாகவே இருக்கிறது அல்லது இருக்கக் கூடும்.

மற்றெரு பக்கத்தில், எஸ்டேட் வரியில் உள்ள ஒரு தலையாய குறைபாட்டைத் திருத்தம் செய்வதற்கு வாரிசு வரி, ஒரு வாய்ப்பை நல்குகிறது. சில சமயம் செல்வரிடையே காணப்படுவது போன்று, ஒரு வாரிசுதாரர் தன் வாழ்நாளிலேயே பல எஸ்டேட்டுகளையும் வாரிசாகப் பெற்ருல், அவற்றை யெல்லாம் திரட்டி ஒற்றை வாரிசாகக் கணக்கிடுவது சாத்தியமாக இருக்கவேண்டும். இரண்டாவதாகவும், மூன்ருவதாகவும் வாரிசாகப் பெற்ற சொத்துகள் எல்லாம் ஒரே எஸ்டேட்டின் பாகங்களாக ஒரே பங்கீட்டில் கொடுக்கப்பட்டால் என்ன வீதங்களில் வரி செலுத்துமோ அதே வளர்வீதங்களில் இப்பொழுது வரி செலுத்த வேண்டும். இறந்தவரின் எஸ்டேட்டைப் பங்கீடு செய்வதற்கு முன்னமேயே வரியைப் போடாது, வாரிசுதாரர் வரவுகளாகப் பெற்ற சொத்தின்மீது விதிக்கப்படும் வாரிசு வரியில்தான் இது சாத்தியமாகும். எஸ்டேட் வரியில் அநீதிகள் முகிழ்ப்பது யாங்ஙனம் என்பதைக் காண்போம். ஒரு வாரிசுதாரர் 600,000 டாலர் பெறுமானமுள்ள வரிதாங்கு எஸ்டேட் பெறுகிருர் என்று வைத்துக் கொள்வோம். நடப்பில் இருக்கும் கூட்டாட்சி எஸ்டேட் வரியின் வளர்வீதங்களின்படி இவர் 180,700 டாலர் வரியாகச் செலுத்தவேண்டியிருக்கும். ஒவ்வொருவரிடமிருந்தும் 200,000 டாலர் வீதம் மூன்று நிகர எஸ்டேட்டுக்களைப் பெறுவோர் மொத்தமாக 152,100 டாலர்தான் வரியாகச் செலுத்த வேண்டியிருக்கும். இது மட்டுமல்ல; மூன்று எஸ்டேட்டுகள் ஒவ்வொன்றிலும் 60,000 டாலர் பிடித்தம் செய்யப்பட்டு வரிதாங்கு எஸ்டேட் கணக்கிடப்படும். ஆனுல் முதல் உதாரணத்தில் எஸ்டேட் வரியில் ஒரு முறைதான் பிடித்தம் செய்யப்படும். இதனுல் பெருத்த அநீதி இழைக்கப்படுவது தெளிவு. இவ் வநீதியை எஸ்டேட் வரியினுல் அகற்ற முடியாது. ஏனெனில், ஒவ்வொரு எஸ்டேட்டும் தனித் தனியே கணக்கிடப்பட வேண்டும். ஆனுல், ஒருவர் வாழ்நாளில் வாரிசாகப் பெறும் சொத்துகள் எல்லாவற்றையும் ஒன்று திரட்டி, பல வாரிசுகளாகப் பெற்றவைகளிலிருந்து விளையும் அநீதியைத் துடைக்கலாம்.

வரிசெலுத்தும் திறன் கொள்கையைக் கச்சிதமாகச் செயல் படுத்துவதில் இறப்பு வரிகள் பலதடவையும் குறைபாடுடையன வாக இருந்தாலும், அவற்றைக் கருதுகோள் அளவில் நிலை நாட்டுவதற்கு வரிசெலுத்தும் திறன் கொள்கையே பெரிதும் பயன் படுகிறது. எந்த அளவுகோலைக் கொண்டு பார்த்தாலும், வாரிசு நிறுவனத்தால் வரிசெலுத்தும் திறன் முகிழ்க்கிறது என்பது உண்மையே. மீட்டும் மீட்டும் வரும் வருமானத்தினின்று முகிழ்க்கும் வரிசெலுத்தும் திறனிலிருந்து இத் தனியாள் திறன் முற்றும்

மாறுபட்டது. இரண்டு வரிகளுக்கும் கருதுகோள் தளமாக, வரிசெலுத்தும் திறன் கொள்கையை தனித்தனியே பயன்படுத்துவதும் சரியானதேயாகும்.

5. **செல்வப் பகிர்வைத் திருத்தல் (Redistribution of Wealth):** இறப்பின் போது உடைமை ஒருவர் பேரிலிருந்து இன்னொருவர் பேருக்கு மாற்றப்படும். அப்பொழுது இறப்பு வரிகள் போடப்படுகின்றன. இவ் வரியின் தளம் உடைமையே. எஸ்டேட்டின் நடப்பு வருமானத்தைக் காட்டிலும் கூடுதலாகவே பல தடவையும் வீதங்கள் பிரயோகிக்கப்படுகின்றன. ஆகவே, இறப்புவரி ஒரு செல்வவரியாக எண்ணப்படுகிறதென்பது தெளிவு. தனியாள்உடைமை நிலவும் பொருளாதாரத்தில் வருமானங்கள் மிகவும் ஏற்றத் தாழ்வுகளை உடையனவாக இருக்கின்றன. அன்றியும் பொருளாதார ஆற்றலும் மிகவும் ஏற்றத் தாழ்வாகப் பங்கீடு செய்யப் பெறுகிறது. இவைதாம் தனியாள் உடைமை நிலவும் பொருளாதாரத்தைப் பற்றிப் பரவலாகவும், நெடுங்காலமாகவும் கேட்கப்படும் திறனாய்வாகும். தொழில் வளத்தை அபிவிருத்தி செய்யவேண்டும் என்றால் பெரும் மூலதனங்களைத் திரட்டுவது இன்றியமையாததாகும் என்பது பொதுவாக யாவராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஒப்புமையில் நுகர்வில் சிறிதே நாட்டமுடைய பெருத்த வருமானத்தைப் பெறுபவர்களே பெரிதும் சேமித்து இம் மூலதனத்தைத் திரட்டுகிறார்கள் என்பதும் பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. மற்றோர் பக்கத்தில் வருமானங்களில் கூடுதலான அளவு ஏற்றத் தாழ்வுகள் இருப்பது, மக்களின் நலத்தைப் பொறுத்த அளவில், தீய விளைவுகளைப் பயப்பதாகும். இத் தீங்குகளைக் குறைப்பதற்கு நடவடிக்கைகளை மேற்கொள்ளாது, இத்துணை ஏற்றத்தாழ்வுகளைப் படைக்கும் பொருளாதார முறை தொடர்ந்து நீடித்திருக்க முடியுமா என்பது கேள்வியாகும். தனியார் உடைமை முறையைப் பெரிதும் அல்லது முற்றும் அகற்றிவிட வேண்டுமென்பது ஒரு சில தீவிரவாதிகளின் கருத்தாகும். மற்றொரு கோடியில், இத்துணை ஏற்றத் தாழ்வுகள் இருந்தாலும், வேறு எந்த மாற்று முறையின் கீழும் இருப்பதைவிட இம் முறையில் யாதொரு சலுகையும் பெறாதவர்களும் சிறந்த நிலையில் இருப்பார்கள் என்று எண்ணப்படுகிறது. தனியாள் உடைமை முறையின் அடிப்படை எல்லைக்கோடுகளை அப்படியே வைத்திருக்க வேண்டுமென்று லிபரல் (liberal) இடைநிலைக் கொள்கை கூறுகிறது. செல்வம், வருமானம் இவற்றைச் சரியாகப் பங்கீடு செய்யாததால் ஏற்பட்ட கடும் விளைவுகளைத் தணிப்பதற்கு இவர்கள் நடவடிக்கைகளை மேற்கொள்ளுவார்கள்.

இப் பொருளாதார முறையில் மிகச் சிறிதே நன்மை பெறுப வர்களின் நலனில் அக்கறை கொண்டே ஏற்றத் தாழ்வுகள் பரவ லாக இருப்பதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கப்படுவது மரபு. ஆகவே இவ் வாதம் ஒழுக்கத்தையும் நீதியையும் அடிப்படையாகக் கொண்டது. வேலை நேரத்தைக் குறைத்தல், குறைந்த பட்சக் கூலியை நிர்ணயித்தல், பொதுநலப் பாதுகாப்பு, நிவாரணச் செலவுகள், வட்டி வீதத்தைக் கட்டுப்படுத்தும் சட்டங்கள், மிகை இலாப வரிகள், வளர்வீத வருமானவரிகள், இறப்பின்போது மாற்றம் செய்யப்படும் சொத்தின்மீது வளர்வீத வரிகள் இவை யெல்லாம் ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதற்கு மேற்கொள்ளப் பட்ட நடவடிக்கைகளாகும், ஆனல் இந் நடவடிக்கைகள் அத் துணை தீவிரமானவையல்ல. ஆயினும் மிக அண்மைக் காலத்தில் பன்னெடுங்காலத் தேக்கம் (secular stagnation), வாணிபச் சுழல்கள் காலத்தில் வருமானப் பகுத்தாய்வு இவற்றில் வளர்ச்சி ஏற்பட்ட பின்பு பொருளியல் காரணங்களை மட்டும் கொண்டே பரவலான ஏற்றத்தாழ்வுகள் கண்டிக்கப்படுகின்றன. நுகர்வு மட்டத்திற்கும், நாட்டின் வருமான மட்டத்திற்கும் உள்ள காரண காரியத் தொடர்பைப் புதிய பகுத்தாய்வு வலியுறுத்துகிறது. ஆகவே, வறுமை குறைந்த வாழ்க்கைத்தரத்தைப் படைப்பதால், சமுதாய முக்கியத்துவம் வாய்ந்தது மட்டுமன்று; பொருளாதார முன்னேற்றத்திற்கு ஒரு முட்டுக்கட்டையாக இருக்கிறது. இதனல் தான் வறுமை பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்தது என்பது விளங்கும். உயர்வான மட்ட முதலீடு, வருமானம், நுகர்வு இவற்றை யெல்லாம் ஈன்றெடுக்கக் கூடிய ஆற்றல் உயர்ந்த நுகர்வு மட்டத்திற்கு இருப்பதனல், பாமர மக்கள் உயர்ந்த நுகர்வைப் பேணக்கூடிய அளவுக்குப் போதிய வருமானத்தை உடையவர்க ளாக இருக்கவேண்டும் என்ற பங்கீட்டு முறைக்குச் சிறந்த காரணமாயிருக்கிறது. விரைவாக விஸ்தரிக்கும், ஒரு பொருளா தாரத்திற்கு வேண்டிய நிதியைத் திரட்ட, சேமிக்க வேண்டுவது இன்றியமையாதது என்பதையும், இவ்விதச் சேமிப்பு, பெருத்த வருமானங்களிலிருந்தே பெரிதும் வருகின்றது என்பதையும் ஒப்புக் கொண்டாலும், நுகர்வு தொடர்ந்து ஏறிக்கொண்டே இருந்தாலொழிய விஸ்தரிப்பு வீதத்தைப் பேணமுடியாது. நுகர்வு ஏருது நிற்குமானல் பெருத்த வருமானத்தையுடையவர் களின் சேமிப்புகளைப் பதுக்கி வைத்தலும் (hoarding), அதனல் தேக்கமும் ஏற்படுகின்றன.

செல்வத்தில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுவதற்குப் பல காரணிகள் உள்ளன. அவற்றில் வாரிசு உரிமையும் ஒன்று. வருமானங்களில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுவதற்கு செல்வத்தில் ஏற்றத் தாழ்வும்

ஒரு காரணியாகும். இருந்தாலும் வாரிசு உரிமையை அகற்று வதற்கு அல்லது திருத்துவதற்குத் தீவிர வாதிகளும், லிபரல்களும் பெருங் கிளர்ச்சி செய்கிறார்கள். வாரிசு உரிமையின் ஒப்புக் கொள்ளப்பட்ட தீங்குகளைத் தணிக்கும் விருப்பத்தினால் உந்தப் பட்டு எஸ்டேட்டுகள், வாரிசுரிமைகள்மீது வளர்வீத வரிவிதிப்புத் தொடர்ந்து செய்யப்படுகின்றது. ஆயினும் தனியாள் வாரி சுரிமையை அசாத்தியமாக்குவதே இறப்பு வரிகளின் நோக்கம் என்று கூறமுடியாது. எஸ்டேட்டுகளின்மீது கூட்டாட்சி சுமாராகக் கூடுதலான வளர்வீதவரிகள் விதித்தாலும், தாராளமாக விலக்கு களும் அளிக்கின்றது. மாநில அரசாங்கங்கள் குறைந்த அளவு விலக்களித்தாலும், குறைந்த வீதங்களையே பிரயோகிக்கின்றன. ஏறக்குறைய இறந்தவரின் எஸ்டேட்டு முழுதையும் அரசாங்கத் திற்குப் பறிமுதல் செய்யும் ஒரு இறப்பு வரிமுறையினால் உண்மை யில் பெருத்த சங்கடம் ஏற்படும். பெரும்பான்மையான எடுத் துக் காட்டுகளில் இறப்பின்போது மாற்றப்பட்ட எஸ்டேட்டு களால் பாக்கியுள்ள குடும்பத்தினர்களின் நுகர்வு முன்னைய மட்டத்திலேயோ, அதற்குச் சற்றுத் தாழ்ந்த நிலையிலேயோ இருக்கிறது.

இறப்பு வரிவிதிப்பின் அடிப்படையும், நோக்கங்களும் வரிசெலுத்தும் திறனுக்கேற்ப செல்வத்தையும் வரிவிதிப்பையும் பகிர்வு திருத்தல் செய்வதேயாகும். இவ் விரண்டு நோக்கங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்டன அல்ல. தனிப்பட்டவர் விஷயங் களில் இவை முரண்படலாம். ஆனால், அப்படிப்பட்டவை சிலவாகத்தான் இருக்கமுடியும். பல்வேறுபட்ட சூழ்நிலைகளில் இருக்கும் சமுதாயத்தின் உறுப்பினர்கள் எல்லோருக்கும் ஒரே படியாக ஒரு வரியைப் பிரயோகிப்பதால் இம் மோதல் ஏற்படு கிறது. ஆயினும் பொதுவாக வாரிசுரிமை எவ்வளவு அதிகமாக இருக்கின்றதோ, அத்துணை அதிகமாக அவ் வாரிசுரிமையிலிருந்து வரிகளைச் செலுத்தும் திறனும் இருக்கிறது என்பதை மறுக்க முடி யாது. வாரிசுரிமைகளின்மீது ஒரே படித்தாக வளர்வீதங்களைப் பிரயோகிப்பது வரிசெலுத்தும் கொள்கையின் பரந்த கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டதாகும்; அதே வமயம் அது செல் வத்தில் கூடுதலான ஏற்றத்தாழ்வின் விளைவுகளையும் தணிக்கக் கூடும்.

செல்வத்தின்மீது விதிக்கப்படுவதால் இறப்பு வரிகள் உண்மை யில் பொருளாதாரத்தின் செல்வ இருப்பைக் குறைக்கிறது என்ற காட்சிப் பிரமாணத்தைச் சற்றுப் பகுத்தாய்வது இவ் விடத்தில் பொருத்தமானதாகும். இக் காட்சிப் பிரமாணம் செல்வத்தை யும், செல்வ உரிமையையும் ஒன்று சேர்த்துக் குழப்புகிறது.

எடுத்துக் காட்டாக மிகவும் நெருக்கமான உறவினர் சிலர் வைத் திருக்கும் பெருத்த கார்ப்பரேஷனை எடுத்துக் கொள்வோம். அதன் பெருத்த உரிமையாளர் சிலரில் ஒருவர் இறந்துபட்டால், இறப்பு வரிகளைச் செலுத்துவதற்குக் கார்ப்பரேஷன் 'கலைக்கப்பட்டே' ஆகவேண்டும். இறப்பு வரிகளைத் தவிர்க்கக்கூடிய சட்ட பூர்வ மான சாத்தியக் கூறுகளையும் அல்லது வரிபாத்தியதைகளைச் செலுத்துவதற்குப் பங்குகளை விற்பதையும் தவிர்ப்பதைப் புறக் கணித்து விட்டு, இறந்தவர் எஸ்டேட்டின் ஒரு பகுதியை (கார்ப்ப ரேஷனில் உள்ள பங்குகளை) ரொக்கத்திற்கு விற்று வரிகளைச் செலுத்தவேண்டும் என்று வைத்துக்கொள்வோம். இப் பங்குகளை வைத்திருக்கும் கும்பல் இவற்றைத் தம்மில் ஒருவருக்கே விற்ருல் யாதொரு மூலதன அழிவோ அல்லது சொத்துரிமைச் சிதறலோ நடைபெறவில்லை என்பது தெளிவு. ஆயினும், இறந்து போனவரைக் காட்டிலும் அவருடைய வாரிசுதாரர்கள் சிறிது குறைவாகவே பங்குகளுக்கு உரிமையாளராக இருக்கின்ருர்கள். கார்ப்பரேஷன் பெரியதாகவிருந்து பங்குகளும் நெருக்கமாகச் சிலரது கைக்குள் இருந்தால், வரிகளைச் செலுத்துவதற்குப் பங்கு மார்க்கட்டில் பங்குகளை விற்றே யாகவேண்டும். இவ் விடத்தும் கார்ப்பரேஷன் சொந்தக்காரர்களின் எண்ணிக்கை அதிக மாஞலும், யாதொரு மூலதன அழிவும் ஏற்படவில்லை. பங்குகளைக் குறைந்த விலைக்கு விற்றுத் தீரவேண்டுமாஞலும் யாதொரு மூலதன அழிவும் உண்மையில் ஏற்படவில்லை. ஆஞல், வரிகளைச் செலுத்திய பின்பு எஞ்சியிருக்கும் வாரிசுரிமைகளின் பருமன் குறைகிறது. கார்ப்பரேஷனில் இறந்துபோனவரின் சேமிப்பு களுக்குப் பதிலாக அயலார்களின் சேமிப்புகள் ஏற்படலாம். அரசாங்கம் இறந்து போனவர்களின் சேமிப்புகளில் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டது எனலாம். இங்ஙனமாகச் சொத்துரிமை களைச் சிதறவிடுவதின் நெடுங்கால விளைவுகளைப் பொதுமைகளாகக் கூறுவது சாத்தியமில்லை.

வருவாய் அளவுகோலைக் கொண்டு பார்க்கும் பொழுது, கூடுதலான இறப்பு வரிகள் தங்கள் நோக்கத்தையே தோற்கடித்து விடுவனவாகச் சில சமயம் வாதிடப்படுகிறது. வரி தாங்கக் கூடிய எஸ்டேட்டுகளைத் திரட்டுவதைத் தடுப்பதன் மூலம் இறப்பு வரி வருவாய் என்ற வாய்க்கால் வறண்டு விடுவதாகவும் கூறுகின்றனர். இஃது ஓரளவு ஐயந்திரிபுக்கு இடமின்றி உண்மையே ஆகும். இறப்பு வரியினுல் ஏற்படும் தியாகத்தைத் தணிப்பதற்கு வேறு பல வழிகள் இருக்கின்றன. ஓரளவு வரியிலிருந்து விலக்கு அளிக்கப் பட்ட ஈட்டுறுதி அளிப்புக்கூறுகளை (insurance offers) வாங்குவது ஒரு வழியாகும்; இறப்பு வரிகளைத் தவிர்ப்பதற்குப் பல்வேறு

பட்ட சட்டபூர்வமான வழிகளும் இருக்கின்றன. இவ் வழிகளின் வகையும், அவற்றின் பயனும் பல்வேறுபட்ட தளங்களிலும் தற்போது நிலவும் சட்டத்தைப் பொறுத்தனவாகும். சில சமயம் குறைந்த வரிவீதங்கள் நிலவும் மாநிலங்களில் குடியிருப்பை நிறுவுவது ஒரு வழியாகும். பொதுச் சொத்து மாநிலங்களில் (community property states) இறப்பின்போது உண்மையில் மாற்றப்பட்ட எஸ்டேட்டின் அளவு குறைவாயிருக்கலாம். இறப்புக்கு முந்தியே கணவன் அல்லது மனைவி (தம்பதிகளில் ஒருவர்) பாதிச் சொத்துகளுக்கு உடையவர் என்று சட்டபூர்வமாக ஏற்றுக் கொள்வதால் இது நிகழ்ந்ததாகும். சில மாநிலங்களில் கூட்டுக்குடி வாரத்தைப் பற்றிய (joint tenancy) சட்டச் சிக்கல்களினால் இறப்பின்போது சொத்து மாற்றப்படுவது தவிர்க்கப்பட்டு இறப்பு வரிகள் குறைக்கப்படுகின்றன. இறப்புக்கு முன்பே பிறருக்கு எஸ்டேட்டுகளைப் பெரும்பாலும் கொடுப்பதனாலும் இறப்பு வரி விதிப்பை ஓரளவு தவிர்க்கலாம். ஐயத்திற்கிடமின்றி (சமுதாயத்தில் பன்னெடுங் காலமாக எண்ணிக்கையிலும் பருமனிலும் சொத்துத் திரட்சிகள் ஏற்படுவதையும், வரிச் சட்டங்களின் மாறுதல்களையும் பொருட்படுத்தாவிட்டாலும்) வரியைத் தவிர்க்கும் அளவுக்கு இறப்பு வரிகள் பளுவாக இருந்தால் இறப்பு வரி வருவாய்கள் குறையத்தான் செய்யும்.

இறப்புவரிகள் உயர்வாக இருப்பதனால் சேமிப்பு தடைப்படும் என்று நாம் எதிர்பார்க்கலாமா என்பது வினாவாகும். காட்சிப் பிரமாண உண்மைகளைக் கொண்டு தொகுத்தறிதல் முறையின்படி இவ் வினாவுக்கு விடையிறுப்பது இயலாத காரியம். ஆயினும், இவ் வினாவுக்கு ஓரளவு முக்கியத்துவம் இருக்கிறது. இவ் வினாவுக்கு உடன்பாட்டில் பதில் கூறினால், இதையே இறப்பு வரிக்கு எதிரான வாதமாகப் பயன்படுத்துகிறார்கள். சேமிப்புத் தொகையைப் பாதிப்பவைகளில் இறப்புவரி விதிப்பும் ஒன்று. ஆனால், இறப்புவரி சேமிப்பைச் சிறிதே பாதிக்கிறது. தங்கள் வாழ்நாளில் சேமிப்புச் செய்யவோ அல்லது சேமிப்புச் செய்யாமலிருக்கவோ தனியாட்கள் தீர்மானிப்பது எஸ்டேட் அல்லது வாரிசுரிமை வரிகளைப் பொறுத்திருக்கிறது எனக் கூறுவது ஐயத்திற் கேதுவாகும். சிறு சேமிப்புகளும், ஏன் இடைநிலை சேமிப்புகளும் கூட இவ் வரிகளால் பாதிக்கப்படுவதில்லை. இறப்பின்போது பெருத்த உயில் கொடைகளை விட்டுச் செல்லும் சலுகையைக் காட்டிலும், வாழ்நாளிலேயே திரண்ட சொத்துகளினால் கிடைக்கும் சுகமும்(வசதியும்) பொருளாதார ஆற்றலும்தான், பொருளைத் திரட்டுவதற்கு வன்மை வாய்ந்த காரணங்களாகும். இது உண்மையானால் இறப்புவரிகளினால் சேமிப்புகள் சிறிதளவே பாதிக்கப்படும். பொருளாதார

நிலைபேற்றைப் பொறுத்தவரையில் குறை சேமிப்பினால் என்ன கடும் விளைவுகள் ஏற்படுகின்றனவோ அவை மிகை சேமிப்பினாலும் ஏற்படுகின்றன. இதற்கு நேர் எதிரான ஒரு சாத்தியக்கூறும் உள்ளது. வரிகளைச் செலுத்திய பின்பு தன்னுடைய வாரிசுதாரர்கள் குறிப்பிட்ட தொகைகளை அடைய வேண்டும் எனச் சேமிப்பவர்கள் எண்ணினால், இறப்பு வரியினால் கூடுதலான சேமிப்புகள் வலுக்கட்டாயமாக்கப்படுகின்றன.

## இறப்பு வரிகளின் நிலைப்பாடு (Incidence of Death Taxes)[11]

இறப்பு வரியின் நிலைப்பாடு முழுதும் வழியுரிமை பெற்றவர் (பின்னவர்-successor) அல்லது எஸ்டேட்டை வாரிசாகப் பெற்றவரின் மீதே விழுகிறது என்று பொது மக்களால் நம்பப்படுகிறது. இது இறப்புவரி, நிலைப்பாட்டைப் பற்றிய மிகவும் எளிதாக்கப்பட்ட கருதுகோளாகும். எஸ்டேட்டைத் திரட்டியவரின் இறப்புக்குப் பின்னரே இவ் வரி மதிப்பீடு செய்யப்பட்டு வசூலிக்கப்படுவதாலும், மாண்டவர்கள் வரிப்பளுவைச் சுமக்க முடியாததாலும் முன்னவரின்மீது யாதொரு நிலைப்பாடும் இருக்க முடியாது என்று இது கூறுகிறது. பின்னவருக்குப் பின்பும் வரியைப் புரட்டுவதற்கு வழி இல்லாததினால், நிலைப்பாடு முற்றும் பின்னவரின் பேரிலேயே விழுகிறது. இப் பகுத்தாய்வுக்குச் சில எளிய காட்சிப் பிரமாண உண்மைகளும் சான்று பகர்கின்றன. உயிலில் குறிப்பிடப்பட்ட வாரிசுதாரர்களுக்கிடையே பங்கீடு செய்வதற்கு நிகர எஸ்டேட் இருக்கின்றது. யாதொரு வரியும் வசூலிக்கப்படவில்லையெனில், வரியின் அளவுக்குப் பங்கீடு செய்யப்பட்ட தொகைகளின் அளவு கூடுதலாக இருக்கும். ஆகவே வாரிசுதாரர்கள்—அவர்களில் சிலராவது—தங்கள் பங்குகளிலிருந்து வரியைச் செலுத்துகின்றார்கள்.

எஸ்டேட்டுகளைத் திரட்டுபவர்கள் தங்கள் வாழ்நாளில் (1) இறப்புவரிகளைப் பற்றி யாதொரு கவலையும் படுவதில்லை என்றும், அல்லது (2) தங்கள் எஸ்டேட்டுகளை மேன் மேலும் திரட்டுவதற்காக வாழ்நாளில் தொடர்ந்து சேமிக்கிறார்கள் என்றும் கொண்டால்தான் இக் கருதுகோளை முழுதும் ஏற்றுக்கொள்ள முடியும்.

பல எடுத்துக் காட்டுகளில் இவ் வெடுகோள்கள் உண்மையுடன் ஒத்திருக்கின்றன. இறப்புவரிகளை விதிப்பதனால் எஸ்டேட்டைத் திரட்டுவதின்மீது யாதொரு விளைவும் ஏற்படுவதில்லை யென்பது இவ் வுண்மைகளில் பொதிந்திருக்கின்ற கருத்தாகும். பலர்

இம் மாதிரி வரிகள் இருப்பதே தெரியாதவர்களாக இருக்கலாம். தாங்கள் போதுமானதெனக் கருதும் ஓர் எஸ்டேட்டை (வாழ்க்கை ஈட்டுறுதியைச் சாதாரணமாக வாங்குவதன் மூலம்) அடைவதைக் குறிக்கோளாகச் சிலர் கொண்டிருக்கலாம். வேறு சிலர் தங்களைச் சார்ந்திருப்பவர்களுக்குத் தாங்கள் ஆற்றவேண்டிய கடமைகளை உணர்ந்து, உச்ச அளவு எஸ்டேட்டைத் திரட்டுவதற்காக விடாப் பிடியாகத் தொடர்ந்து வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிச் சேமிக்கலாம். இவர்களில் பலரும் 'தங்களால் ஆனமட்டும் சேமிக்கிறார்கள்.' இவர்கள் வரிவிதிப்பின் பளுவைக் குறித்து வருத்தம் தெரிவித்தாலும், இவர்கள் திரட்டும் எஸ்டேட்டின் பருமன் இதனால் பாதிக்கப்படுவதில்லை. இவ்விதச் சூழ்நிலைகளில் இவ் வரியினால் ஏற்படும் விளைவு ஒன்றே. நமக்கு நிகர எஸ்டேட் டின் பருமன் தெரியும். இதனால் வாரிசுதாரர்களின் பங்குகளி லிருந்தே இவ் வரி செலுத்தப்படுகிறது. ஆகவே இவ் வரியின் நிலைப்பாடும் அவர்கள் பேரிலேயே விழுகிறது.[12]

வேறு பல எஸ்டேட்டுகளில் இறப்பு வரியை எதிர்பார்த்தே எஸ்டேட்டைத் திரட்டும் திட்டம் மேற்கொள்ளப்படுகிறது. வரிகளைச் செலுத்திய பின்பு ஒரு குறிப்பிட்ட தொகை சொத்துக்களை (ஆஸ்திகளை)ப் படைப்பதே நோக்கமாக விருந்தால் வரி இல்லாமலிருந்தால் எத்துணை சேமித்து வைப்பாரோ அதைக் காட்டிலும் கூடுதலான அளவே உயில் எழுதியவர் தம் வாழ்நாளில் சேமிக்கும் வீதம் இருக்கும். வரிகளைச் செலுத்திய பின்பு தன் வாரிசுதாரர்களுக்கு இவ்வளவு எஸ்டேட் இருக்கவேண்டும் என்று மட்டும் அவர் சேமிக்கவில்லை. அவர் வரியைச் செலுத்து வதற்கான ஒரு நிதியையும் திரட்டுகிறார். வரியைச் செலுத்து வதற்காக அவர் கூடுதலாகத் தன்மறுப்பு (தியாகம்) செய்வது வரிகள் பளுவைப் பிரதிபலிக்கிறது. கூடுதல் சேமிப்புக்காகும் தியாகத்தின் தீவிரத்தைப் பொறுத்ததே நிலைப்பாட்டின் பளுவும். ஆனால், இவ் வெடுத்துக் காட்டில் நிலைப்பாடு முன்னவரின்மீதே இருக்கிறது என்பது தெளிவாகும். இறந்தவர்கள் வரிப்பளுக் களைத் தாள (தாங்க) முடியாதெனக் கூறுவது அத்துணை உண்மை யன்று. அவர்கள் இறந்து பட்டவர்கள் என்பதனால் யாதொரு பளுக்களையும் தாங்குவதில்லை. ஆனால் வரியை மதிப்பீடு செய்யும் நாளுக்கு முன்னதாகவே இப் பளுவை (நிலைப்பாடு) அவர் தாங்க லாம். ஆகையினால் இறப்பு வரிகளின் நிலைப்பாடு முன்னவரின் மீதோ பின்னவரின்மீதோ அல்லது இருவரின்மீதுமோ விழலாம் என்று நாம் முடிவு தெரிவிக்கிறோம். வரியை எதிர்பார்த்ததி னால் எத்துணை விரைவாக முன்னவர் எஸ்டேட்டைத் திரட்டி னாரோ, அத்துணை அளவுக்கு அவர் பேரில் நிலைப்பாடு விழுகிறது.

வரி இல்லாவிட்டாலும் இதே அளவு எஸ்டேட் இருக்குமென்ருல் இவ் வரியின் நிலைப்பாடு பின்னவர் பேரிலியே விழுகிறது. ஓரளவு இவ் வரியை முன்னவர் எதிர்பார்த்தாலும், அவரால் ஓரளவே இதற்கு வகை செய்ய முடிகிறதென்ருல், நிலைப்பாடு முன்னவருக் கும் பின்னவருக்கும் இடையே பிரிக்கப்படுகிறது. அவர் விரும்பினுல், தாமே நிலைப்பாட்டைத் தாங்கலாம் (கூடுதலாக சேமிப்பதனுலோ அல்லது கடும் உழைப்பினுலோ); அல்லது அவர் பின்னவர்களின் மீதும் நிலைப்பாட்டைச் சுமத்தலாம். பொதுவாக என்ன நேர்கிறது என்பதைப் பற்றி ஊகிப்பது அறியாமையாகும். இதை ஆராய்ச்சியின் வாயிலாகக் கண்டுபிடிப்பதும் ஏறக் குறைய இயலாததாகும்.[13]

## இறப்பு வரி விதிப்பின் அண்மைய வரலாறு (Recent History of Death Taxation)

இந்த நூற்ருண்டின் துவக்கத்தில் அமெரிக்க ஐக்கிய நாடு களில் மாநில அரசாங்கங்கள் இறப்புவரி விதிப்பை மேற் கொண்டன. இவ்வாருக இவ் வரியின் சகாப்தம் தற்காலத்தில் தான் தொடங்கியது. முதல் உலகப் போரின்போது கூட்டாட்சி முதன் முதலாக இவ் வரியை உபயோகிக்கத் தொடங்கியது. பத்தொன்பதாம் நூற்ருண்டிலேயே பல மாநிலங்கள் இவ்வித வரி களைப் போட்டன என்ருலும், 1903ஆம் ஆண்டில் விஸ்கான்ஸின் மாநிலச் சட்டம் இயற்றப்பட்ட பின்புதான் இவ் வரியில் எல்லா வாரிசுதாரர்களும், எல்லா வகைச் சொத்தும், வளர்வீதங்களும் அடக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்ருண்டில் அவ்வப் பொழுது சிறப்பாகப் போர் நெருக்கடிக் காலங்களில் கூட்டாட்சி இறப்பு வரிவிதிப்பைப் பயன்படுத்தியது. 1924ஆம் ஆண்டு வரை இறப்பு வரிகள் மாநிலங்களின் அலாதிச் சொத்தாகக் கருதப் பட்டன. அவ் வாண்டுக்கு முன்பு, நெருக்கடிக் காலம் தீர்ந்ததும் கூட்டாட்சி வரிகள் விரைவில் நீக்கப்பட்டன. ஆயினும் 1924-ல் இறந்தவர் சொத்துக்களின்மீதும் வாரிசுரிமைகள் மீதும் கூட்டாட்சியும் மாநிலங்களும் இரட்டை வரிப்பளுக்களைச் சுமத்துவதை அகற்றவேண்டும் என்ற சட்டம் கொணரப்பட்டது. போர்க் காலத்தில் விதிக்கப்பட்ட இறப்பு வரியை ரத்து செய்ய வேண்டும் என்ற விவாதம் இவ்வாறு புதிய சட்டம் கொண்டு வருவதில் முடிந்தது. இத் திட்டம் ஓர் நிரந்தரக் கூட்டாட்சி வரிக்கு அடித்தளக் கல் நாட்டியதுடன், மாநிலங்களுக்கிடையே இறப்புவரி விதிப்பிலும் ஒரே படித்தான தன்மையை உண்டாக்கும் இயக்கத்திற்கும் ஆக்கம் அளித்தது.

**மாநில இறப்பு வரிகளைச் செலுத்தியதற்குக் கூட்டாட்சி வரவு வைத்தல் (The Federal Credit for State Death Taxes Paid):** 1916-ல் கூட்டாட்சி, எஸ்டேட் வரியை விதித்தது. தற்போதைய சட்டத்துடன் ஒப்பிடும்பொழுது இவ் வரியின் வீதங்கள் மிதமாக இருந்தாலும், ஏற்கனவே கூட்டாட்சியால் விதிக்கப்பட்ட இறப்பு வரிகளின் வீதங்களைவிடக் கூடுதலாக இருந்தன.[14] 1916-ல் வளர்வீதப் பட்டியலில் உச்சவீதம் நிகர எஸ்டேட்டில் 10 சதவிகிதம் இருந்தது. 1917-ல் வீதப் பட்டியலில் உச்சவீதம் 25 சதவிகிதமாக உயர்த்தப்பட்டது. நடப்பில் இருக்கும் மாநில வாரிசுரிமை வரிகளுக்கு மேலும் எஸ்டேட்டுகளின்மீது, கூட்டாட்சி, ஒப்புமையில், புதிய கடும் வரிகளைப் போட்டதனுல் இறப்பின்போது கைமாறும் சொத்துக் களின் பேரில் கடும் பளுக்கள் ஏற்பட்டன. போர்க்காலத்தில் இவ் விரட்டை வரிவிதிப்பு பளுவானதாகத் தோன்றவில்லை. ஆனுல், போர் முடிந்ததும் இறப்பு வரிகளின் இரட்டை வரி விதிப்புப் பற்றிய பிரச்சினைக்கு அடிப்படை முடிவுகள் தேவைப்பட்டன. மாநில வரிவீதங்கள் குறைவாக இருந்தன. தங்கள் மாநிலங்களில் குடியிருப்பவர்களுக்கு இறப்பு வரிச் சலுகை தரவேண்டுமென்பதில் மாநிலங்களிடையே நல்ல போட்டியிருந்தது. மாநிலங்க ளிடையே செல்வக் குடியிருப்புக்காரர்களுக்குக் கடும்போட்டி இருந்தது. இதற்குக் காரணம் குறைவான இறப்பு வரிகள் குடியிருப்பு நிறுவுவதற்கு ஆக்கம் அளிக்கும் என்பதும், இதனுல் ஆண்டுதோறும் விதிக்கப்படும் உடைமை வரிகளிலிருந்து கிடைக் கும் வருவாய்களும் பிற வருவாய்களும் பெருகும் என்பதுமே யாகும்.[15]

போருக்குப் பின்பு போர்ச் செயலாளர் மெல்லன் (Mellon) போர்க்காலத்தில் விதிக்கப்பட்ட கூட்டாட்சி எஸ்டேட் வரியை ரத்து செய்யும்படி வற்புறுத்தினுர். இவ் வருவாய் இனத்தை மாநிலங்களுக்கே திரும்பவும் தந்துவிட வேண்டும் என்றும் அவர் கூறினுர். பிரச்சினையின் இத்தீர்வுக்கு மாநிலங்கள் பலத்த ஆதரவு தந்தன. ஆயினும், 1924 ஆம் ஆண்டைய சட்டம் கூட்டாட்சியின் வரியை அகற்றுவதற்குப் பதிலாக அதன் வீதங்களை 40 சதவிகிதம் உச்ச அளவுக்கு உயர்த்தியது. எஸ்டேட்டுகள் மாநிலம், கூட் டாட்சி இரண்டின் வரி விதிப்புக்கும் உட்பட்டிருந்தன. ஆனுல், 1924-ல் 20 சதவிகிதத்திற்கும், 1926-ல் 80 சதவிகிதத்திற்கும் சமமான அளவு மாநில வரிகள் செலுத்தப்பட்டிருப்பதாக நிரூபித்தால், கூட்டாட்சியின் வரியையும் செலுத்தப்பட்டதாக ஒப்புக்கொள்ளப்பட்டது.[ இவ்வாறு கூட்டாட்சி, மாநில இரட்டை வரிப்பளுக்களின் பிரச்சினை தீர்க்கப்பட்டது. ஏனெனில்,

எந்த மாநிலமும் கூட்டாட்சி வரவு வைத்தலில் 80 சதவிகித அளவுக்கு வரி விதிக்கவில்லை.

ஆயினும், இரட்டை வரிப் பளுவை அகற்றும் விருப்பத்திற்கு அப்பாலும் இக் கூட்டாட்சி வரவு வைத்தல் விதி சென்றது. இறப்பு வரியைப் பற்றிய செயல்முறையில் எல்லா மாநிலங்களையும் ஒருமிக்கக் கொணரும் வெளிப்படையான நோக்கத்துடனேயே இவ்விதி வகுக்கப்பட்டது. மாநிலங்களிடையே இறப்புவரி விதிப்பில் போட்டியேற்படுவதற்கு முற்றுப்புள்ளி வைத்தற்கும்[16] நாடு முழுமைக்கும் ஒரே படித்தான நிதிக் கருவியாக இறப்பு வரியை நிறுவுவதற்கும், கூட்டாட்சி வேண்டுமென்றே இம் முயற்சியைச் செய்தது. அது மிகவும் பயனளித்தது. ஏனெனில், மாநிலங்கள் அவசியமான சட்டத்தை இயற்ற மறுத்தால் அவற்றுக்கு வரவேண்டிய வருவாய் கூட்டாட்சிக்குப் போய்விடும் என்று இவ் வரவுவைத்தல் விதி கூறியது. இதனால் இறப்புவரிச் சட்டத்தை இயற்றாமல் இருக்க எந்த மாநிலமும் முன்வரவில்லை.

தற்பொழுது நாற்பத்தெட்டு மாநிலங்களில் ஏதோ ஒருவகை இறப்பு வரி[17] இருக்கிறது. கூட்டாட்சியின் வரவு வைத்தல் விதியைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்றால், 1926ஆம் ஆண்டைய கூட்டாட்சி வீதங்களில் 80 சதசதவிகிதம் வீதங்களாக உள்ள எஸ்டேட் வரிச்சட்டங்களை மாநிலங்கள் மேற்கொள்வது ஓர் இலகுவான முறையாகும். விலக்குகளும், படித்தர அளவும் (graduation scale) கூட்டாட்சி வரியை ஒத்திருக்கவேண்டும். ஆனால், சில மாநிலங்கள்தான் இவ்விதம் செய்திருக்கின்றன. 1959-ல் பதினொரு மாநிலங்களில் மட்டுமே இவ்விதச் சட்டங்கள் இருந்தன. கூட்டாட்சி இறப்பு வரிகளைத் திரும்பவும் பெறுவதற்கு, பாக்கியுள்ள மாநிலங்கள் வேறு திட்டவட்டமில்லாத கருவிகளைக் கையாளுகின்றன. வாரி சுரிமைக்கும் கூட்டாட்சி வரவு வைத்தலுக்கும் உள்ள வேறுபாட்டை, ஒரு எஸ்டேட் வரியை விதிப்பதன் மூலம் மாநிலங்கள் பொதுவாகச் சரிக்கட்டுகின்றன. முப்பத்தைந்து மாநிலங்களும், கொலம்பியா மாவட்டமும் இவ்விதக் கூட்டு எஸ்டேட் வரிகளைப்[18] (additional estate taxes) பயன்படுத்துகின்றன. கூட்டாட்சி வரவு வைக்கும் அளவுக்கு வரிவிதிப்பதிலும், இரட்டை இறப்பு வரிகளை அகற்றுவதிலும் எஞ்சியுள்ள மாநிலங்கள் நாட்டம் செலுத்துகின்றன.

பெரும்பாலும் 1920-க்கும் 1930-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளின் பிற்பகுதியில் இவ்வாறு வருவாய்களைக் கூட்டாட்சிக்கும்

மாநிலங்களுக்கும் இடையே பங்கு போட்டுக் கொள்வதுடன், மாநிலங்கள் முற்றும் திருப்தி அடைந்தன. ஆனால், 1932-ல் அதிக வருவாய் வேண்டுமென்ற முடையினால் உந்தப்பட்டு, 1926ஆம் ஆண்டுச் சட்டத்திற்கு மேலாக ஒரு 'கூட்டு எஸ்டேட் வரியை' (additional estate tax) கூட்டாட்சி விதித்தது. 'இப் புதிய சட்டம் எஸ்டேட்டுகளின் மீதான வரி வீதங்களைப் பெரிதும் உயர்த்தியது; ஆனால், கூடுதலான எஸ்டேட் வரிக்கு எதிராக மாநில வரிகள் செலுத்தப்படுவதை வரவு வைப்பதற்கு வகை செய்யவில்லை. ஆயினும், 1926ஆம் ஆண்டு வரியில் கண்ட 80 சதவிகித வரவுவைத்தல் அப்படியே வைத்துக் கொள்ளப்பட்டது. 1932ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டத்தின்மீது நடந்த விவாதத்தில் பழைய (1926) வரியை ரத்து செய்யவேண்டும் எனவும், அதற்குப் பதிலாக ஒரு புதிய பளுவான, மிகவும் வளர் வீதமான வரியை விதிக்கவேண்டும் எனவும், மாநில இறப்பு வரிகளைச் செலுத்தியதற்காகப் புதிய வரியில் 16⅔ சதவிகிதம் வரவு வைக்கவேண்டும் எனவும் யோசனை தெரிவிக்கப்பட்டது. ஆயினும், இவ் யோசனை ஏற்றுக் கொள்ளப்படவில்லை. 1926 ஆம் ஆண்டைய எஸ்டேட் வரியுடன் கூடுதலாக ஓர் எஸ்டேட் வரியும் சேர்க்கப்பட்டது.

1932ஆம் ஆண்டு நடவடிக்கையினால் இறப்பு வரி விதிப்பில் மாநிலங்கள் கலந்துகொள்வதில் யாதொரு மாறுதலும் செய்யாமல் பெரும் எஸ்டேட்டுகளிலிருந்து கிடைத்த வருவாய் களின் பெரும் பகுதியை கூட்டாட்சியின் கருவூலத்திற்குத் திருப்பி விட்டது, கூட்டாட்சியின் 'மிகப் பெரிய நயத்திற நடவடிக்கையின் வெற்றியாகும்' (tactical triumph of no small importance) என்று வருணிக்கப்படுகிறது.[19] இவ் வருணனையில் 1926-க்கும், 1932-க் கும் இடையில் இறப்புவரி வருவாய்களைப் பங்குபோட்டுக் கொள்வது பற்றிய கூட்டாட்சியின் கருத்து மாறிவிட்டது என்பது பொதிந்திருக்கிறது. கூட்டாட்சி 1926 ஆம் ஆண்டுச் சட்டத்தின் கீழ் 80 சதவிகித வரவு வைத்தலை ஏற்றுக்கொண் டிராவிடில் கூட்டாட்சி வரியை முற்றும் ரத்து செய்யவேண்டி யிருந்திருக்கும். இங்ஙனம் ரத்து செய்வதைத் தவிர்ப்பதற்கு வரவு வைத்தல் ஓர் அரசியல் சமரச உடன்பாடாக ஏற்கப்பட்டிருக்கலாம்.

1932 ஆம் ஆண்டுத் திருப்பத்தைப் பற்றிய மாநிலங்களின் கருத்துகளை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்பொழுது மிகுந்த சங்கடமானதாய் இருந்தது. இச் சங்கடத்திற்குக் காரணம் (1) மாநிலங்களுக்கே சொந்தம் என்று மரபாகக் கருதப்பட்ட ஒரு வரியைத் தன் விருப்பப்படிக் கூட்டாட்சி போக்குவரத்து செய்யும்

நிலையில் இப்பொழுது இருந்தது. (2) நடப்பில் வசூலாகும் இறப்புவரி வருவாய்களில் ஒரு சிறு பகுதியே மாநிலங்களுக்கு அளிக்கப்பட்டது. 1926 ஆம் ஆண்டில் கூட்டாட்சியின் 'உதார குணம் பாராட்டப்பட்டது; 1932-லிருந்து கூட்டாட்சியின் கருமித்தனம் இகழப்பட்டது. 1932 ஆம் ஆண்டு நடவடிக்கையினால் மாநில இறப்புவரி வருவாய்கள் குறையவில்லை என்றாலும், பெரும் எஸ்டேட்டுகளிலிருந்து கிடைக்கும் வருவாய்களில் ஏற்கனவே மாநிலங்கள் பெரும் பங்குதாரர்களாக இருந்த நிலை மாறி சிறிய பங்குதாரர்கள் ஆயின. ஆயினும், 1926ஆம் ஆண்டுச் சட்டத்தினால் மாநில இறப்புவரி வீதங்களும், வருவாய்களும் பெருகியதென்னவோ உண்மைதான். மிகவும் பெரிய மனது வைத்து இறப்பு வரியையே முற்றும் கூட்டாட்சி கைவிட்டு விடுமானால், செல்வர்களைத் தங்கள் மாநிலங்களில் குடியிருக்கச் செய்வதற்காக மாநிலங்கள் போட்டி போட்டுக் கொண்டு இறப்பு வரிகளை ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று வெகுவாகக் குறைக்கும் பழைய நிலையை எய்தும்.[20] இதனால் தற்பொழுது இருப்பதைவிடக் குறைந்த இறப்புவரி வருவாய்களை மாநிலங்கள் அடையும். வருவாயை மட்டும் பார்த்தால் கூட்டாட்சி மிகப் பளுவான ஒரு வரியைப் போடுவதும், மாநில வரிகளைச் செலுத்தியதற்காக 100 சதவிகிதம் வரவு வைத்தலும் நல்லது. இந்நிலை மாநிலங்களுக்கு இலட்சிய (சிறந்த) நிலையாக இருக்கும். மாநிலங்களின் எதிர்கால நிதி வாய்ப்புகளையும், கூட்டாட்சிக்கு இறப்பு வரியினால் மிகச் சொற்பமான வருவாய்களே கிடைக்கிறதென்பதையும் மனத்தில் கொண்டு பார்த்தால், இந்த முறை நம் பரிசீலனைக்குரியதாகும். ஆயினும், மாநிலங்களின்மீது கூட்டாட்சிக்கு மறைமுகமாக இருக்கும் நிதி ஆற்றலை இது வெளிப்படையாகக் காட்டும்.

1954ஆம் ஆண்டுவரை கூட்டாட்சி எஸ்டேட் வரி, இரு எஸ்டேட் வரிகளின் இணைப்பாக இருந்தது. 1932ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ் விதிக்கப்பட்ட கூடுதல் எஸ்டேட் வரியுடன் 1926 ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ் வசூலாகும் வரியையும் சேர்த்துக் கணக்கிடப்பட்டது. 1954ஆம் ஆண்டைய அகவருவாய் விதித்தொகுப்பின் மூலம் இவ் விரு வரிகளும் ஓர் ஒற்றை வீதப் பட்டியலாக இணைக்கப்பட்டன. மாநில வரிகளைச் செலுத்தியதற்கு ஒரு தனியான வரவு வைத்தல் பட்டியலின் மூலம் வரவு வைக்கப்பட்டது. இதனால் நடப்பில் வரவு வைத்தலின் தொகையில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. 'நிகர எஸ்டேட்டே' இவ் வரியின் தளமாகும். மொத்த எஸ்டேட்டிலிருந்து இறந்தவரை அடக்கம் செய்தல், ஆட்சிச் செலவுகள், அறக் கொடைகள் (bequests), இறந்தவரின் மனைவி அல்லது கணவனுக்குத்[21]

'திருமணப்பிடித்தமாக' (marital deduction) மொத்த எஸ்டேட்டில் 50 சதவிகிதம் பிடித்தம் செய்தல், இவைகளைக் கழித்த பின்பு எஞ்சியுள்ளதே நிகர எஸ்டேட்டாகும். நிகர எஸ்டேட்டில் 60,000 டாலருக்கு விலக்களித்த பின்பு பாக்கியுள்ள எஸ்டேட்டின் மீது வளர்வீதங்களில் வரி விதிக்கப்பட்டது. இறுதியாக இறப்பதற்கு முன்பு தன்னுடைய ஆஸ்திகளிலிருந்து ஒரு கொடை வரியைச் செலுத்தியிருந்தாரானால், அவ் வரியின் அளவுக்கும் வரவு வைக்கப்படும். இதைத் தவிர மாநில இறப்பு வரிகளைச் செலுத்தியதற்கும் வரவு வைக்கப்படும். வரிதாங்கு எஸ்டேட்டின் முதல் 5,000 டாலரின்மீது 3 சத விகிதமும், 10 மில்லியன் டாலருக்கு மேற்பட்ட நிகர எஸ்டேட்டின்மீது 77 சதவிகிதமும் வரி விதிப்பு வீதங்கள் இருந்தன.

கூட்டாட்சியின் தனியாள் வருமான வரியைப் போலவே, 1948-ல் திருமணமான தம்பதிகளுக்கு வருமானத்தைப் பிளவு செய்தலைப் புகுத்தியதனால், ஒற்றையாள் (தனிக்கட்டை) மீது பேதங் காட்டுகை ஏற்பட்டது. திருமணமான பிறகு திரட்டிய எஸ்டேட்டில் பாதியை உயிருடனிருக்கும் மனைவி அல்லது கணவனின் எஸ்டேட்டாகக் கொள்வதால், இப் பாகம் வரி விதிப்புக்கு ஆளாவதில்லை. இதனால் மற்றபடி கூடுதலாயிருக்கும் வீதங்களுக்குப் பதிலாகக் குறைந்த இறுதிநிலை வீதங்களைச் செலுத்தும்படிப் பல மாநிலங்களிலும் சட்டம் அனுமதிக்கிறது. 500,000 டாலர் பெறுமானமுள்ள ஒரு வரிதாங்கு எஸ்டேட் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இறந்து போனவருக்கும் உயிருடனிருக்கும் மனைவியோ அல்லது கணவனோ இல்லாவிடில் இவ் வெஸ்டேட்டின்மீது 145,700 டாலர் வரி செலுத்தவேண்டியிருக்கும். வரியின் சராசரி வீதம் 145,700/500,000 அல்லது 29·1 சதவிகிதமாக இருக்கும். ஆனால், மனைவியோ அல்லது கணவனோ உயிருடனிருந்தால் அவருக்குத் திருமணப் பிடித்தமாக எஸ்டேட்டில் 50 சதவிகிதம் கிடைக்கும். அப்பொழுது வரி 65,700 டாலராக இருக்கும். அதாவது மொத்த எஸ்டேட்டில் சராசரி 13·1 சதவிகிதமாக வரி இருக்கும். பிந்தியதில் மனைவி அல்லது கணவன் இறக்கும்பொழுது அவருடைய பங்கு எஸ்டேட்டின்மீதும் வரிசெலுத்த வேண்டியிருக்கும். ஆனால் மனைவியோ அல்லது கணவனோ எஸ்டேட்டில் ஒரு பகுதியையோ அல்லது முழுவதையுமோ செலவழித்துவிட்டார்களானால், இவ்விரு வரிகளையும் கூட்டிய தொகை இறந்து போன ஒற்றையாள் எஸ்டேட்டின் மீதான வரித்தொகையை விடக் குறைவாகவே இருக்கும். கணவன் அல்லது மனைவியின் எஸ்டேட் அவன் அல்லது அவள் இறக்கும் வரையில் அப்படியே

இருந்தாலும், திருமணமான தம்பதிகள் இருவரும் சேர்ந்து கொடுக்கும் வரித்தொகைகளைவிட ஒற்றையாள் கொடுக்கும் வரித்தொகை கூடுதலாகவே இருக்கும் (131,400 டாலரும், 145,700 டாலரும்). மேலும் பாதி எஸ்டேட்டின்மீது வரியாக விதிக்கப்படும் தொகையை மனைவி அல்லது கணவன் அநுபவித்திருக்கிறார்கள்.

## இறப்பு வரிகளின் வருவாய் உற்பத்தித் திறன் (Revenue Productivity of Death Taxes)

கூட்டாட்சிக்கும் மாநில அரசாங்கங்களுக்கும் காலம் தோறும் இறப்பு வரிகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தின் ஒப்புமை முக்கியத்துவத்தை 33ஆம் அட்டவணை படம் பிடித்துக் காட்டுகிறது. ஆண்டாண்டு வருவாயில் மாறுதல்கள் நேர்வதற்கு இம் மூன்று காரணங்களிலோ அல்லது அவற்றில் ஏதாயினும் ஒன்றிலோ மாறுதல்கள் ஏற்படவேண்டும். முதலாவது வரிச் சட்டங்களில் இயல்பாக இருக்கும் நுட்பவினை அமிசங்கள். இவற்றில் வரிவிதிப்பு வீதங்கள், பிரத்தியேக விலக்குகள், எந்த அளவுக்குக் கூட்டாட்சிக்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையே வருவாய்களைப் பிரிப்பது முதலானவை அடங்கும். 1926ஆம் ஆண்டைய கூட்டாட்சி நடவடிக்கையின் விளைவாக மாநிலங்கள் தங்கள் வரிகளை உயர்த்தி 1931ஆம் ஆண்டில் கூடுதல் சிறப்பு வரி வருவாய்களைப் பெற்றன (33ஆம் அட்டவணையைப் பார்க்கவும்). ஆனால், இவ் வரியிலிருந்து கூட்டாட்சிக்குக் கிடைத்த வருவாய் குறைந்தது. இதிலிருந்து 80 சதவிகித வரவு வைத்தலின்கீழ் கூட்டாட்சி இவ் வரியில் அதிகம் பங்குகொள்ள முடியவில்லை என்பது புலனாகிறது. எஸ்டேட்டுகளும் வாரிசுரிமைகளும் வரி நோக்கங்களுக்காக நடப்பு மட்டத்தில் மதிப்பிடப்படுவது இரண்டாவது காரணியாகும். கூடுதல் சொத்துப் பெறுமானங்களின்கீழ் இருப்பதைவிட 1931-ல் கூட்டாட்சி, மாநில அரசாங்கங்களின் வரிவருவாய்கள் குறைவாக இருந்தன. ஏனைய இரண்டு காரணிகளிலிருந்தும் இக் காரணி தனியாக வேறுபட்டு நிற்பதாக இவ்வெண்களிலிருந்து தெரியவில்லை. ஆனால், ஐயத்திற்கு இடமின்றி இக்காரணியும் தொடர்ந்து இயங்குகிறது. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் வரிவிதிப்புக்கு ஆளான பெரும் எஸ்டேட்டுகளின் எண்ணிக்கை மூன்றாவது காரணியாகும். இக் காரணி முற்றும் உடனிலையாக நிகழ்வதாகும். மற்றொரு பக்கத்தில் கூட்டாட்சியைக் காட்டிலும் தனிப்பட்ட மாநிலங்களுக்கு இஃது சிறந்த மாறியாக (significant variable) இருக்கலாம். ஏனெனில் கூட்டாட்சி இவ் வரியின்கீழ்ப் பரவலாக எல்லா எஸ்டேட்டு

களையும் அடக்குகிறது. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் மிகச் செல்வந்த ரான ஒரு குடியிருப்புக்காரர் இறந்துபோனால் இதனால் ஒரு மாநிலத்திற்குக் கிடைக்கும் வருவாய் ஓர் உபரி பட்ஜெட்டுக்கும் பற்றுக்குறை பட்ஜெட்டுக்கும் உள்ள வேறுபாட்டைக் காண்பிப்ப தாக இருக்கலாம். மற்றோர் பக்கத்தில் வரி விதிப்புக்கு உள்ளான பெருத்த எண்ணிக்கை எஸ்டேட்டுகளுக்குக் குறைவான விலக்கு களை மாநில வரிகள் அளிப்பதால், மாநில இறப்பு வரி வருவாய் களில் நிலைபேறு ஏற்படுவதற்கான சாத்தியம் ஏற்பட்டு வருகிறது.

## அட்டவணை 33

இறப்பு, கொடை வரிகளும், கூட்டாட்சி மாநில அரசாங்கங்களின் மொத்த வரி வருவாய்களில் அவற்றின் சதவிகிதமும், தெரிந்தெடுக்கப்பட்ட ஆண்டும், 1916—1958*

| | கூட்டாட்சி | | மாநிலம் | |
|---|---|---|---|---|
| ஆண்டு | இறப்பு, கொடை வரி வருவாய்கள் (மில்லியன் டாலரில்) | மொத்தக் கூட்டாட்சியின் வரிவருவாய் களில் சதவிகிதம் | இறப்பு, கொடை வரிவருவாய்கள் (மில்லியன் டாலரில்) | மொத்த மாநில வரி வருவாய்களில் சதவிகிதம் |
| 1916 | — | 0·0 | 29 | 8·0 |
| 1922 | 139 | 4·3 | 66 | 9·1 |
| 1927 | 100 | 3·5 | 106 | 7·8 |
| 1931 | 48 | 2·0 | 183 | 10·2 |
| 1937 | 316 | 6·8 | 115 | 3·7 |
| 1940 | 360 | 6·8 | 113 | 2·1 |
| 1944 | 510 | 1·3 | 114 | 1·7 |
| 1951 | 730 | 1·4 | 195 | 2·2 |
| 1958 | 1,393 | 2·2 | 351 | 2·3 |

* *Federal figures from Annual Report of the Secretary of the Treasury,* 1945, p. 484, 1951, p. 723 and from the *Budget* for 1960; state figures from various volumes of the *Statistical Abstract of the United States,* and *Compendium*...1951, p. 11, and 1958, p. 11.

வருவாய் அளவில் பார்த்தால், கூட்டாட்சிக்கும் சரி, மாநில அரசாங்கங்களுக்கும் சரி, இறப்பு வரிகளும் கொடை வரிகளும்[22] ஒப்புமையில் சிறிதே முக்கியத்துவம் உடையன என்பது 33ஆம்

அட்டவணையிலிருந்து துல்லியமாகத் தெரிகிறது. மேலும், இதை விடத் தலையாய நிலையாகச் சிறப்பாக அடையும்படிச் செய்வதும் அருமையே. மிகவும் வருத்தாது வீதங்களை ஓரளவு ஏற்றுவது சாத்தியமே. கூட்டாட்சியின் வரியினுல் பாதிக்கப்படும் கடை நிலை, இடைநிலை அடைப்புகளுக்குச் சிறப்பாக (அதாவது 100,000 டாலருக்கும் 500,000 டாலருக்கும் இடைப்பட்ட பெறுமானத்தை யுடைய மொத்த எஸ்டேட்டுகள்) ஆனுல் இவ்வகைச் சொத்துக் களின் எண்ணிக்கைக் குறைவாக இருப்பதால் ஒப்புமையில் குறைந்த வருவாய்களே கிடைக்கும். கூட்டாட்சி, விலக்குகளை ஓரளவு குறைப்பதும் அல்லது சிறிய எஸ்டேட்டுகள் வாரிசுரிமை கள் இவற்றின் பேரில் மாநில வீதங்களை உயர்த்துவதும் சரியான தாக இருக்கலாம். இதனுல் கணிசமான அளவு கூடுதல் வருவாய் கிடைக்கும். ஆனுல், இதனுல் அவர்களைச் சார்ந்திருக்கும் நபர் களின் பாதுகாப்புக்கு இன்றியமையாத எஸ்டேட்டுகள் வாரி சுரிமைகள் வரி விதிப்புக்கு ஆளாகலாம். தற்போதைய விலைவாசி களின்படி 500,000 டாலருக்குக் குறைவான மதிப்பையுடைய எஸ்டேட்டுகளுக்கு இறப்பு வரிகளைச் செலுத்துவதற்குச் சிறிதே வரி செலுத்தும் திறன் இருக்கிறது எனலாம்.[23]

## கொடை வரிகள்[24]

இறப்பு வரிகளை எளிதில் தவிர்க்கக்கூடிய ஓர் ஓட்டையை அடைப்பதற்கே கூட்டாட்சியும், மாநில அரசாங்கங்களும் தலையாயதாகக் கொடை வரிகளை விதிக்கின்றன. இவ் வகைக் கருவிகள் இல்லையானுல், இறப்புக்கு முன்பே சொத்துகளை மாற்றுவதன் மூலம் வாரிசுரிமைகளை வரியில்லாததாகச் செய்ய முடியும். ஆகையினுல் இறப்பு வரி விதிப்பைக் கருதுகோள் அளவி லும், செயல் முறையிலும் சரியென நிலைநாட்ட முடியுமென்ருல், வாய்மொழியாகத் தரப்படும் கொடைகளின்மீதும் வரிவிதிப்புச் செய்வதைச் சரியென நிலைநாட்ட முடியும். இறப்பு வரிக்குத் துணையாகக் கொடை வரியைப் பயன்படுத்துவதில் உள்ள ஒரு தலையாய சங்கடம் 'சாவை எண்ணிச்' (in contemplation of death) செய்யப்படும் கொடைகளுக்கு நடைமுறையில் பயன் தரும்படி விளக்கம் தருவதேயாகும். இவ்வகைக் கொடைகள் இறப்பு வரியைத் தவிர்க்கும் நோக்கத்துடனேயே செய்யப் படுகின்றன.

சாவுக்கு ஓராண்டுக் குட்பட்டுத் தரப்பட்ட கொடைகள் சாவை எண்ணித்தரப்பட்டன என்று 1924ஆம் ஆண்டு கூட்டாட்சிச் சட்டம் கொண்டு, அவ் வாண்டில்[25] தரப்பட்ட கொடைகளின்மீது ஒரு வரியை விதித்தது. 1926-ல் இக் கொடை வரி ரத்து செய்யப்

பட்டது. ஓராண்டு ஈராண்டாக்கப்பட்டது. ஆனுல் 1932-ல் இவ் வெடுகோள் (presumption) அரசியல் சட்டப்படி செல்லா தென அறிவிக்கப்பட்டது. 1932-ல் தனியாக ஒரு கொடை வரி விதிக்கப்பட்டது. எஸ்டேட்டு வரியில் உள்ள வளர்வீதங்களில் கிட்டத்தட்ட முக்கால்வாசி அளவு கொடை வரிகளின்மீதும் வளர் வீதங்கள் விதிக்கப்பட்டன.[26] எஸ்டேட் வரியில் ஏற்பட்ட மாறுதல் களுக்கு இணங்க விலக்குகளிலும், வீதங்களிலும் மாறுதல்கள் செய்யப்பட்டு, தற்பொழுது கொடை வரி செயல்முறையில் இருந்து வருகிறது. ஆண்டுதோறும் தரப்பட்ட கொடைகளின்மீது அவ் வாண்டுகளில் வரி விதித்தாலும், ஒரு எஸ்டேட்டின்மீது ஒரே ஒரு முறை செலுத்தப்படும் எஸ்டேட் வரிவீதங்களை ஒத்த வளர் வீதங்களே கொடைவரிக்கும் பிரயோகிக்கப்படுவது இவ் வரியின் அலாதி அமிசமாகும்.

வாழ்நாள் முழுமைக்கும் ஒவ்வொரு கொடையாளிக்கும் ஒரு தனிப்பயன் கொடைவரி விலக்கு அளிக்கப்படுகிறது. இவ் விலக்கை எஸ்டேட் வரியின்கீழ்த் தரப்படும் விலக்குடன் ஒப்பிடலாம். ஆனுல் எஸ்டேட் வரியின் கீழ்த் தரப்படும் விலக்கைக் காட்டிலும் கொடை வரியின் கீழ்த் தரப்படும் விலக்குக் குறைவானது.[27] எஸ்டேட்வரிக்கு பிரயோகிக்காமல் கொடை வரிக்கு மட்டும் பிரயோகமாகும் கூடுதலான விலக்கொன்றும் உண்டு. ஆண்டுதோறும் கொடை பெறும் ஒருவனுக்கு 3,000 டாலர்வரை வரியிலிருந்து விலக் களிக்கப்படுகிறது. கொடைகள்மீது (வரிக்கு ஆளாகும்படி அத்துணைப் பெரிதாக இருந்தால்) ஆண்டுதோறும் வரி விதிக்கப் படுகிறது. 1932ஆம் ஆண்டிலிருந்து அறிவிக்கப்பட்ட எல்லாக் கொடைகளையும் ஒருங்கு திரட்டி அம் மொத்தத் தொகைக்கு எந்த அடைப்பின் வீதம் பிரயோகிக்கப்பட வேண்டுமோ அவ் வாண்டில் பிரயோகிக்கிருர்கள். எடுத்துக்காட்டாக, 1959ஆம் ஆண்டில் 25,000 டாலர்கள் கொடைகளாகத் தரப்பட்டன என்றும், அச் சட்டம் அமுலுக்கு வந்த 1932ஆம் ஆண்டையும் சேர்த்து நிகரக் கொடைகளாக 450,000 டாலர்களைப் பெற்றிருக்கிருர் என்றும் வைத்துக்கொள்வோம். 1959ஆம் ஆண்டில் அளிக்கப் பட்ட 250,000 டாலர் கொடையின்மீது வரிவீதம் 24 சதவிகித மாக இருக்கும். இதே வரிவீதம்தான் 250,000 டாலருக்கும், 500,000 டாலருக்கும் இடைப்பட்டத் திரண்ட மொத்தக் கொடைகளின்மீதும் விதிக்கப்படுகிறது. தான் இறக்கும்பொழுது எஸ்டேட்டை மாற்றுகிருேமா அல்லது இறப்பதற்கு முன்பாக ஒரு காலக் கூறுக்குள் எஸ்டேட்டை மாற்றுகிருேமா என்பதைப் பற்றிக் கொடையாளி அசிரத்தையாயிருப்பதற்கு இவ்வகையான திரட்சித் திட்டம் இன்றியமையாததென்பது புலனுகும்.

சாவை எண்ணிச் செய்யப்படும் கொடைகளைத் தனியாகப் பிரிக்கும் பிரச்சினையை 1932ஆம் ஆண்டைய கொடை வரிச் சட்டமும், பிந்திய ஆண்டுகளில் செய்யப்பட்ட சட்டங்களும் முற்றும் தவிர்க்கின்றன என்பது தெளிவாகும். எல்லாக் கொடைகளுமே (குறிப்பிட்ட குறைந்த விலக்குகளுக்கு மேல்) வரிக்கு உட்பட்டவையே. இதனால் இறப்பு வரிகளைத் தவிர்ப்பதற்கு மட்டுமன்றி, தன் சொந்தக் காலிலேயே கொடைவரி ஊன்றி நிற்கிறது என்பதும், இவ் வரி வரிசெலுத்தும் திறனை முற்றும் தளமாகக் கொண்டிருப்பது சரியே என்பதும் அறியக் கிடைக்கின்றன. இறப்பின்போது செய்யும் உயிலுடைமைகளுக்கும் (bequests), வாய்மொழியாக (inter vivos) அளிக்கப்படும் கொடைகளுக்கும் அடிப்படையில் யாதொரு வேறுபாடுமில்லை. இருந்தாலும், கொடைவரி விதிப்பு இயங்கும் முறையும் அறிவிக்கப்பட்ட நோக்கமும், ஒப்புமையில் கூடுதலான விலக்கும் சேர்ந்து கொடைவரியின் தலையாய அலுவல் இறந்தவரின் எஸ்டேட் (அல்லது வாரிசுடைமை)[28] வரிக்குச் சப்பைக் கட்டுக் கட்டுவதே யாகும். இறப்புவரி விதிப்பினின்றும் தப்பிப்பதற்காகத் தங்கள் வாழ்நாளில் கணிசமான அளவு கொடைகளைத் தருபவர்களே கொடை வரிகளுக்குப் பெரிதும் இலக்கானவர்கள் போலும்.

இறப்பு வரிக்குச் சப்பைக்கட்டுக் கட்டுவதே கொடைவரியின் தலையாய அலுவலானதால் ஒப்புமையில் கொடை வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய் உற்பத்தித் திறனுக்கு யாதொரு முக்கியத்துவமும் இல்லை. செயல்முறையில் எஸ்டேட் வரி வருவாய்களை விடக் கூட்டாட்சியின் கொடைவரி வருவாய்கள் மிகவும் குறைவாகவே இருக்கின்றன.[29] மாநிலங்களிடையே இவ் விரு வரிகளிலிருந்தும் கிடைக்கும் வருவாய்களை ஒப்பிட்டுப் பார்க்க யாதொரு முயற்சியும் செய்யப்படவில்லை. ஏனெனில் இவ் வொப்பீட்டில் யாதொரு முக்கியத்துவமும் இல்லை. கொடைவரிகள் இன்றேல் (அவற்றின் வருவாய் உற்பத்தி எவ்வளவாக இருந்தாலும்) இறப்பு வரிகளினின்றும் கிடைக்கும் வருவாய்கள் தற்போது கிடைப்பதைக் காட்டிலும் குறைவாகவே கிடைக்கும் என்பதுதான் முக்கியமானது. இவ்வாறு கொடைவரியின் வருவாய் உற்பத்தி இறப்புவரி வருவாய்களில் அடங்கியிருக்கிறது.[30]

## இறப்பு வரிகளையும் கொடை வரிகளையும் இணைத்தல் (Integration of Death and Gift Taxes)

இறப்பின்போது கைமாறும் எஸ்டேட்டுகளின்மீது விதிக்கப்படும் வரிகளை ஒத்து, வாய்மொழியாகக் கொடைகள் மூலம் தரப்படும் சொத்துகளின்மீது வரிவிதித்து எஸ்டேட் வரிக்குப் பிற

சேர்க்கையாக இருப்பதே கொடைவரியின் தலையாய நோக்கம் என்பதை நாம் கண்டோம். ஆகவே, ஒருவரிடமிருந்து மற்றொரு வருக்குச் செல்வத்தை மாற்றுவதன் இரு தோற்றங்களே கொடை களும், உயிலுடைமைகளும் எனக் கொள்வது சிறப்பாகப் பொருந்தும். இக் கோணத்திலிருந்து பார்க்கும்பொழுது இவ் வரிகளைத் தற்காலத்தில் பிரயோகிப்பதில் இரு முரண்பாடுகள் காணப்படுகின்றன. தனித்தனியே வெவ்வேறான பிரத்தியேக விலக்குகளை அளிப்பது முதல் முரண்பாடாகும். எஸ்டேட்டில் முதல் 60,000 டாலருக்குக் கூட்டாட்சி எஸ்டேட் வரியிலிருந்து விலக்கு அளிக்கிறது. வாழ்நாள் முழுமைக்குமாக முப்பதினாயிரம் டாலரும், மேலும் ஆண்டுதோறும் கொடையைப் பெறுபவருக்கு மூவாயிரம் டாலரும் விலக்காகக் கொடைவரி அனுமதிக்கிறது. சாவை எண்ணிச் செய்யப்படாத தனியார் கொடைகளுக்கும், அவை ஆண்டொன்றுக்கு 500 டாலருக்கு மேல் போகாதிருந்தால் விலக் களிக்கப்படுகிறது. இத்துடன் இவை இரண்டையும் சேர்த்து ஒரே வரி விலக்காக்க வேண்டியதுதான் பொருத்தமாகும். எஸ்டேட்டுகளுக்கும், கொடைகளுக்குமாகச் சேர்த்து 60,000 டாலருக்கு விலக்களிப்பது உத்தமமானதாகும். ஆண்டுதோறும் கொடையாகப் பெறும் ஒரு கூடுதலான தொகைக்கு மேலும் கொடைவரியிலிருந்து விலக்களிப்பதை சரியென எக்காரணம் கொண்டும் நிலைநாட்ட முடியாது. ஒருவேளை இதனால் பெரிய எஸ்டேட்டுகள் சிறு சிறு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுப் பரவலாகக் கொடைகள் அளிப்பதற்கு ஆக்கம் ஏற்படுவதோடு, செல்வத்தி லும் ஓரளவு பகிர்வு திருத்தல் (redistribution) ஏற்படுகிறது. வரிகளைத் தவிர்க்க வேண்டும் என்ற ஆசையால் உந்தப்பட்டுச் சிறு சொத்துகளைத் திரட்டியவர்கள்கூட தங்கள் சொத்துகளைப் பரவலாகத் தங்களைச் சார்ந்திருப்பவர்களுக்குப் பிரித்துக் கொடுப்ப தால், அவர்களுக்கும் பெருத்த ஆதாயம் கிட்டுவதில்லை. ஆயினும், மொத்தத்தில் கொடைவரியின் கீழ் மேலும் விலக்கு அளிப்பது தருக்க முறைக்கு ஒத்ததென்றால், எஸ்டேட் வரியின் கீழும் இன்னுமொரு விலக்கு அளிப்பது தருக்கமுறைக்கு ஒத்ததே. கொடையாளியின் விருப்பம் போல்க் கொடைகளுக்கும் எஸ் டேட்டுகளுக்கும் (கொடைகளுக்கும் அல்லது எஸ்டேட்டுகளுக்கும்) பொதுவான ஒரு விலக்கு அளிப்பதே மிகவும் எளிய நியாயமான திருத்தமாகும். ஒன்றுக்கொன்று துணையாக இருக்கும் இவ்விரு வரிகளையும் மிக நெருக்கமாக இணைப்பதே இவ் விணைப்பின் சிறப் பியல்பாகும்.

கொடைகளுக்கும், எஸ்டேட்களுக்கும் தனித்தனியே வளர் வீதப் பட்டியல்களைப் பிரயோகிப்பது தற்காலச் செயல்முறையில்

காணப்படும் இரண்டாவது முரண்பாடாகும். இருவரிகளும் உண்மையில் ஒன்றேயானுல், தருக்க முறைப்படி வாய்மொழியாக அளிக்கப்பட்ட கொடைகளை இறப்பின்போது மாற்றப்பட்ட எஸ்டேட்டுடன் கூட்டி மொத்தத்திற்கும் ஒரு ஒற்றை வளர்வீதப் பட்டியலைப் பிரயோகிப்பதே சரியாகும். கொடையாளிகள் தங்கள் ஆயுட்காலம் முழுவதும் கொடைகளைத் திரட்டுகிருர்கள். கைமாறும் சொத்துகள் வரிசையில் கடைசி இனமாக எஸ்டேட்டைக் கருதுவதுதான் ஆட்சியாளருக்கு உண்மையில் எளிதாகும்.[31] பொதுவாகக் கூறுமிடத்து, தற்போது பெரும் எஸ்டேட்டுக்கு உரிமையாளராயிருக்கும் ஒருவர் புத்திசாலியாக இருந்தால் எஸ்டேட்டில் பாதியைக் கொடையாகவும், பாதியை இறப்பின் போதும் பகிர்வு செய்வார். அங்ஙனம் செய்வதனுல் அவருடைய செல்வம் கைமாறும்பொழுது குறைவான மொத்த வரிக்கே அவர் ஆளாவரர். தனியாள் வருமான வரியின்கீழ் ஓர் ஒற்றைக் குடும்பத்தின் வருமானத்தை தனித்தனியே வரிவிவர அறிக்கைகளாக அனுப்புவதில் வளர்வீத வரிவிதிப்புக் கருதுகோளுக்கு எத்துணை ஊறு நேர்கிறதோ, அதே போன்று இறப்பு வரிகளுக்கும் கொடை வரிகளுக்கும் வளர்வீத முறையைத் தனித்தனியே பிரயோகிப்பதால் ஊறு நேர்கிறது. உண்மையில் இவ் விரு வரிகளும் ஒரே வரிதான் எனலாம்; ஒரே வரியாகவே யாவரும் பொதுவாகக் கருதுகிருர்கள். அங்ஙனமிருந்தும் வீதப்பட்டியல்களையும், விலக்குகளையும் பொறுத்தவரையில் அவற்றை முற்றும் வெவ்வேறு வரிகளாகக் கருதிப் பிரயோகிப்பது விந்தையே. கூலியாகப் பெறும் வருமானம், வட்டியாகப் பெறும் வருமானம், வாரம், ராயல்டிகளாகப் பெறும் வருமானம், இலாபமாகவும் மூலதன ஆதாயமாகவும் பெறும் வருமானம் இவற்றுக்கெல்லாம் தனித் தனி விலக்குகள் அளித்தும், தனித்தனி வளர்வீதப் பட்டியல்களைப் பிரயோகித்தும், தனித்தனி வருமான வரிகளாகக் கொண்டு ஒற்றையாள் வரி செலுத்துகிருர். தற்போதைய கொடை எஸ்டேட்வரிச் செயல்முறை பல வகைகளிலும் ஒற்றையாள் வரிசெலுத்தும் முறையை ஒத்திருப்பதாகவும் கருத இடமுண்டு.

## மாநில இறப்பு வரிவிதிப்பில் மனையிடப் பிரச்சினை (The Problem of Situs in State Death Taxation)

வாரிசுரிமைகள், எஸ்டேட்டுகள் இவற்றின்மீது மாநில வரி விதிப்பில் ஒரே படித்தான தன்மை இன்மையால் மிகுந்த துன்பமும் குழப்பமும் நேர்ந்துள்ளது. வாரிசுரிமை வரியை விதிப்பதற்கு, உடைமையின் இருப்பிடத்தை விளக்க வேண்டியது அவசியம். மாநிலச் சட்டங்கள் பலதிறப்பட்ட வகையில் உடைமையின் இருப்

பிடத்தை விளக்குகின்றன. இதனுல் ஒரே உடைமை இனங்கள் மீது பெரிதும் இரட்டை வரிவிதிப்பு ஏற்படுகிறது. வரி நோக்கங்களுக்காகத் தாவரச் சொத்து வரியின் மனையிடம் தலமே என்று சரியாகவே நன்கு நிறுவப்பட்டதாகத் தெரிகிறது. பல்வகை வரி விதிப்பைப் பொறுத்த வரையில் சங்கமச் சொத்தும், சிறப்பாகப் புலனுகாத உடைமையும்தான் பெருத்த தொல்லையைத் தருகின்றன. இறந்துபோனவர் A மாநிலத்தில் குடியிருந்தார் என்று வைத்துக்கொள்வோம். 'இயங்கியற் பொருள்கள் சொத்துக்குரியவரையே பின்பற்றுகின்றன' (movables follow the owner) என்ற கொள்கையை ஒட்டி A இறந்தபொழுது அவருடைய புலனுகாத எல்லாச் சொத்துகளின் பேரிலும் இறப்பு வரியை விதிக்கலாம். Aயின் குடியிருப்புத் தளத்தையே அவருடைய வரி தாங்கும் மனையிடமாகவும் கொள்ளலாம். அவருடைய எஸ்டேட்டில் B மாநிலத்தில் பதிவு செய்யப்பட்ட கார்ப்பரேஷனின் கடன் பத்திரங்கள் அடங்கியிருப்பதாகவும், அந்தக் கார்ப்பரேஷனுக்கு C மாநிலத்தில் உடைமை இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். சில மாநிலச் சட்டங்களின்படி B, C மாநிலங்கள் இரண்டுமே இறப்புவரி விதிக்கலாம். சில மாநிலங்களின் சட்டப்படி, தன் மாநிலத்தில் பாதுகாப்பாக இருப்பதற்காக வைக்கப்பட்ட கடன் பத்திரங்களின்மீது D மாநிலமும் இறப்பு வரி பாத்தியதை கொண்டாடலாம். ஆனுல் இறந்து போனவர் D மாநிலத்தில் குடியிருக்கவில்லை. கார்ப்பரேஷனும் அம் மாநிலத்தைச் சார்ந்ததன்று.

இங்ஙனம் ஒரே உடைமையின்மீது வாரிசுரிமை வரிவிதிப்பைப் பெருக்குவதனுல் இன்றியமையாது இறப்புவரி விதிப்பின் பளு கூடுதல் இயல்பே. பங்குகள் பகிர்வு செய்யப்படுவதற்கு முன்பு எஸ்டேட்டின் மீதான வரிப்பொறுப்புச் செலவையும் மெனக்கீட்டையும் அகற்றுவதைவிட மொத்தத்தில் பெருக்கல் வரி (multiple tax) குறைந்த செலவு பிடிப்பதாயும், தொல்லை தருவதாயும் இருக்கிறது என்பது ஒரு வேளை உண்மையாக இருக்கலாம். வரிகள் பலவாகப் பெருகாவிட்டாலும், எஸ்டேட்டின் ஆட்சியாளர், அதைப் பிரிப்பதற்கு முன்பு பல மாநிலங்களிலிருந்தும் தங்கள் வரிப் பாத்தியதைகளின் சாத்தியக்கூறுகளை விட்டுக் கொடுப்பதாக இணக்கம் பெறவேண்டும். பெருக்கல் வரிவிதிப்பைத் தவிர்ப்பதற்கான வழக்கும் மிகவும் செலவு பிடிப்பதும், காலம் பிடிப்பதுமாகும்.

எப்பொழுதாவது ஒரேபடித்தான மாநிலச் சட்டங்களை நிறுவலாம், என்று எதிர்பார்ப்பது வீணே. ஆயினும், கிட்டத்தட்ட அதே பயனை பரிமாற்றச் (reciprocity) செயல் முறையின் மூலம்

பெறக்கூடும். B மாநிலம் A மாநிலத்தில் குடியிருப்பவர்களுக்கு விலக்கு அளித்தால், பரிமாற்றச் சட்டத்தின் கீழ் A மாநிலமும் B மாநிலத்தில் குடியிருந்து இறந்தபோனவர்களின் புலனுகாத உடைமையின்மீது வரி விதிப்பதில்லை. சில முற்போக்குக் கருத்துக் கொண்ட மாநிலங்கள் முதலில் தங்கள் மாநிலங்களில் குடியிருக்காதவர்களின் புலனுகாத உடைமைகளின்மீது வாரிசுரிமை வரி விதித்திருந்ததை ரத்து செய்தன. ஆனால், பிற மாநிலங்கள் இதே போல் செய்ய மறுத்ததைக் கண்டதும் தங்கள் நலனைக் காத்துக் கொள்வதற்காக முன்னைய வரிகளை மீண்டும் விதித்தன.[32] ஒரு பரிமாற்றச் சட்டத்தை இயற்றிவிடலாம். ஆனால், இன்னொரு மாநிலமும் பரிமாற்றம் செய்யும்வரை இச் சட்டம் அமுலுக்கு வராது. 1939-ல் இங்கு விவரிக்கப்பட்ட இறப்புவரி பரிமாற்றத்தில் கிட்டத்தட்ட முப்பது மாநிலங்கள் கலந்து கொண்டன.[33] மேலும், பரிமாற்ற இயக்கம் பரவுவதற்கு வழியில்லாமல் இருக்கலாம். குறைவான மக்கள் தொகையும், குறைவான செல்வமும் உடைய மாநிலங்கள் தங்கள் மாநிலங்களில் குடியிருப்பவர்களிடமிருந்து பெறுவதைக் காட்டிலும், பல தடவையும் கூடுதலான வருவாயைத் தங்கள் மாநிலங்களில் குடியில்லாதவர்களின் எஸ்டேட்டுகளிலிருந்து பெறுவதே இதற்கும் காரணமாகும்.[34]

பரிமாற்றம் பூரணமானதாயிருந்தாலும், இறந்து போனவரின் நிரந்தர உறைவிடத்தை நிர்ணயிப்பதில் சில இடர்ப்பாடுகள் இருக்கின்றன. வரிக் காரணங்களுக்காக ஒரு மாநிலத்தில் சட்டப்படி நிரந்தர உறைவிடத்தையும் (domicile), தொழில் அல்லது தனிப்பட்ட காரணங்களுக்காக [35] இன்னொரு மாநிலத்தில் குடியிருப்பும் செய்வோர்களின் விஷயத்திலேயே இச் சங்கடங்கள் சில சமயம் எழுகின்றன. இப் பிரச்சினைகளைத் தீர்ப்பு செய்வதற்கு சட்ட நடவடிக்கைகள் மட்டுமே தேவை. இது தற்போதைய நம் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டதாகும். ஒரு மாநிலத்தில் நிரந்தர உறைவிடம் இருப்பதாகச் சட்டபூர்வமான ஒரு கதையைக் கட்டிவிட்டு உண்மையில் வேறொரு மாநிலத்தில் குடியிருப்பதால் தான் இறப்புவரிக் கருதுகோள் குளறுபடியாகிறது. சட்டப்படி நிரந்தர உறைவிடம் எந்த மாநிலத்தில் இருக்கிறதோ அந்த மாநிலம் இறப்பு வரிகள் விதிப்பதற்கு உரிமை கொண்டாடுகிறது. எந்த மாநிலத்தில் குடியிருப்பு இருக்கிறதோ, அம் மாநிலம் சாதாரணமாக இறப்புவரி விதிக்க உரிமை கொண்டாட முடியாது.

## இறப்பு வரிகளின் நிரப்புப் பயன் (Compensatory Use of Death Taxes)

வாணிபச் சுழலுக்கு எதிரான நிரப்பு அல்லது ராசி சாத்தியக் கூறுகள் யாதொன்றும் இறப்பு வரிகளிலும் கொடை வரிகளிலும்

இல்லை. எக்காலத்திலும் அவைகள் பொருளாதாரத்தின் ஒரு சிறு பகுதியையே பாதிக்கின்றன. ஆகவே அவற்றால் நுகர்வுமட்டம் அல்லது முதலீடு மட்டம் இவற்றைக் கணிசமான அளவு பாதிக்க முடியாது. அவைகளைத் தக்க தருணத்தில் பயன்படுத்த முடியாது. ஏனெனில், அவை ஒரே தடவை விதிக்கப்படுகின்றனவே அன்றித் தொடர்ந்து விதிக்கப்படுவதில்லை. வாணிபச் சுழல் காலத்தில் வீதங்களையோ அல்லது விலக்குகளையோ கூட்டுவதனாலோ அல்லது குறைப்பதனாலோ எஸ்டேட்டைச் சேர்ந்தவர்களின் நெடுங்காலச் சேமிப்பு அல்லது செலவழிப்பில் ஏறக்குறைய யாதொரு மாறுதலும் நிகழப்போவதில்லை. எதிர்பாராத விதமாக உயிலுடைமைகளைப் பெறும் வாரிசுதாரர்களின்மீது வீதங்களை உயர்த்துவதன் வாயிலாக அவர்கள் ஊதாரித்தனமாகச் செலவழிப்பதை மட்டுப்படுத்துவது இத் தருணத்தில் விரும்பத் தக்கது. இருந்தாலும் சில திங்களில் வாரிசுதாரர்கள் கூடுதலாகச் செலவழிப்பது மிகவும் விரும்பத்தக்கதாக இருக்கலாம். ஆனால் வரி வீதங்களை உயர்த்துவதனால், அது நிரந்தரமாக வாரிசுடைமையைப் பெறுபவர்களின் வீதத்தைக் குறைக்கும். இறுதியாக இறப்புக்கும், எஸ்டேட்களின் இறுதிப் பகிர்விற்கும் இடையே பல ஆண்டுகள் கழிந்தால் இறப்பு வரிகளின் நிரப்பு நோக்கங்கள் மேலும் பாதிக்கப் படுகின்றன.

நாம் இறப்பு வரிகளையும், கொடை வரிகளையும் பெரிதும் விரும்புகிறோம். ஏனெனில் அவை நல்ல வருவாய் வாயில்கள். உண்மையான வரிசெலுத்தும் திறனுக்கேற்ப, இவ் வரிகளால், மிகவும் வருவாய் கிடைக்கிறது. மேலும் செல்வம் பெரிதும் சிலர் கையில் குவிந்திருப்பதைப் பகிர்வு திருத்தல் செய்வதற்குத் தூண்டுதலால், இவ் வரிகள் நெடுங்காலப் பொருளாதாரப் பணியைச் செய்கின்றன எனலாம். ஆகவே, இவ் வரிகள் இருக்க வேண்டும் என்றும், இவற்றை அபிவிருத்தி செய்யவேண்டும் என்றும் நாம் விரும்புகின்றோம். ஆனால், நிரப்பு நிதிக் கருவிகளில் அவற்றுக்கு யாதொரு இடமும் கிடையாது.

## மேலும் படித்தற்கு உரியவை

லூயி ஐன்ஸ்டைன் (Einstein, Louis), 'The Rise and Decline of the Estate Tax', Joint commitee on the Economic Report, *Federal Tax Policy for Economic Growth and Stability (Paper submitted by Panelists Appearing before the Sub-committee on Tax Policy)*, Washington, 1955, pp. 819-47, எஸ்டேட் வரி விதிப்பைப் பற்றிய ஓர் சுருக்கமான ஆனால் அதே சமயம் நீண்ட

கண்வீச்சுடன் கூடிய வரலாறும், நடப்புச் செயல் முறையில் உள்ள குறைபாடுகளும் எதிர்காலத்தைப் பற்றிய தளர் நோக்கும் கொண்ட அறிக்கை இது.

ஜே. கே. ஹால் (Hall J. K.), 'The Incidence of Death Duties, *American Economic Review*, March, *1940*, p. *46*.

இந் நூலைப் படிப்பதனால் மிகுந்த பயன் விளையும். சிறப்பாக இறப்பு வரி நிலைப்பாட்டைப் பற்றிய கருதுகோள்களின் சுருக்கம் இது. ஸி. எல். ஹாரிஸ் (Harriss C. L), *Gift Taxation in the United States,* Washington, American Council on Public Affairs, *1940*.

கீழ் கண்ட அதிகாரங்களைச் சிறப்பாகச் சிபாரிசு செய்கிறோம்: *(1)* 'ஏன் கொடைவரிகளை விதிக்க வேண்டும்?' *(2)* 'சாவு கிட்டத்தில் செய்யப்படும் கொடைகள்' *(4)* 'கூட்டாட்சிக் கொடைவரியின் அமைப்பு' *(8)* 'கொடைகளின் மீது வரி விதிப்பு' *(11)* 'மாறுதலுக்கான யோசனைகள்'.

இ. இ. ஓக்ஸ் (Oakes, E. E., 'The Federal Offset and the American Death Tax System', Quarterly Journal of Economics, August, *1940*, pp. *566* ff.

கூட்டாட்சி மாநில அரசாங்க நிதி உறவுகளில் பொதிந்திருப்பதைப் பற்றிய சிறந்த எடுத்துக் காட்டும், வரலாறும்.

## 21ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. ஜி. டி. ஹெச். கோல் (G. D. H. Cole) எழுதிய, 'Inheritance' *Encyclopaedia of the Social Sciences* ப் பார்க்கவும்.

2. வில்லியம் ஜே. ஷுல்ட்ஸ் (William J. Shultz) எழுதிய 'Inheritance Taxation', *Encyclopaedia of the Social Scieuces* ஐ இவ் வரிகளின் சுருக்கமான வரலாற்றை அறிந்து கொள்வதற்குப் பார்க்கவும்.

3. ஆண்ட்ரு கர்னஜி (Andrew Carnegie) பின் வருமாறு கூறியதாக அறிவிக்கப்படுகிறது: 'கவுரவமான பணத்தைப் படைக்கும் ஒவ்வொரு தொழிற்றுணிவிலும் அமெரிக்கக் குடியரசு ஓர் கூட்டாளி' (E. R. A. Seligman, Essays in Taxation, 8th ed., New York, Macmillan, 1913, p. 129n)

4. Cf. Seligman, *op. cit*, p. 135

5. முன்னம் வரிகளைச் செலுத்தாது தப்பித்துச் சென்ற தொகைகளை வசூலிப்பதற்கென்றே சில பிரத்தியேக வரிகள் ஒருவரின் இறப்பின்போது விதிக்கப்படுகின்றன. எடுத்துக்காட்டாகக் கனக்டிக்கட் 'எஸ்டேட் தண்டனை வரி'யைக் (Estate Penalty Tax) குறிப்பிடலாம். இறுதி வரிவிதிப்புக் காலக் கூற்றில் தல சொத்து வரிகளைச் செலுத்தியிருந்த எஸ்டேட்டுகளில் உள்ள சொத்தினங்களைத் தெரிவிக்கும்படி உயில் நிருபண நீதிபதிகளை, இவ் வரி கோரியது. எவ்வெச் சொத்தினங்களின்மீது வரி செலுத்தப்படவில்லையோ, அவற்றின்மீது ஒரு பிரத்தியேக தண்டனை வரி போடப்பட்டது. உடைமை வரியின் அமுல் நடத்துகையை அபிவிருத்தி செய்வதற்கான வரியாக இப் பிரத்தியேக வரியைக் கொள்ளவேண்டுமேயல்லாது, இறப்பின்போது மாற்றம் செய்யப்படும் எஸ்டேட்டுகளின்மீது விதிக்கப்பட்ட வரியாக இதைக் கொள்ளலாகாது.

6. வாரிசாகப் பெற்ற சொத்தைப் பொறுத்த அளவில் அவருடைய அலாதியான வரி செலுத்தும் திறனைக் குறிக்குமேயல்லாது அவருடைய எல்லாச் சொத்துகளையும் உள்ளிட்ட வரி செலுத்தும் திறனை அன்று. வருமான வரியுடன் முற்றும் இணைக்கப்படாத எந்த இறப்பு வரியும் ஒரு தனியாளின் வரி செலுத்தும் திறன் முழுதையும் அளந்துவிடும் என நாம் எண்ணவே முடியாது.

7. Cf. டி. டபிள்யூ. கிரிஸ்டி (T. W. Chrystie) எழுதிய 'Division of Death Taxes Among Beneficiaries', *Proceedings,* National Tax Association, 114 ஆம் பக்கத்தைப் பார்க்க.

8. பல்வேறுபட்ட மாநில வாரிசு வரிச் சட்டங்களின் கீழ் இவ் விலக்குகள் தோராயமாக அமுலில் இருக்கின்றன.

9. இதனால் வாரிசு வரியின் அநுகூலங்களின் தன்மை ஊறுபடுத்தப் படுகின்றது என்று நாம் கூறுகின்றோமில்லை. மேலே குறிப்பிட்ட காரணங் களினால் வரி செலுத்தும் திறனை எஸ்டேட் வரி சிறப்பாகப் பிரதிபலிக்கிறது என்றும் நாம் கூறவில்லை. எஸ்டேட் வரியில் எல்லா வாரிசுதாரர்களும் வீதாசாரமாகப் பங்கு பெறுகிறார்கள் என்று பொதுவாகக் கருதப்பட்டாலும், செயல் முறைக் காரணிகள் பல தடவைகளில் வரியின் முழுப் பளுவையும் யாருக்கு அதைத் தாங்குவதற்குக் குறைந்த வல்லமை இருக்கின்றதோ அவர்கள் பேரில் ஏற்றுகிறது என்பது அநுபவத்திலிருந்து தெரிகிறது. அதே நூலில் கிரிஸ்டி பொதுவாக 'நிகர எஸ்டேட்டை ஒரு அலகாகக் கொண்டு கூட்டரசாட்சியோ அல்லது மாநில அரசாங்கமோ வரி விதித் தாலும், எஞ்சியுள்ள எஸ்டேட்டிலிருந்துதான் வரியைச் செலுத்த வேண்டும்' எனக் கூறுகிறார். செயல்முறையில் தனிப்பயன் மானியங்கள் தாயாதி களுக்கும் அயலார்களுக்கும் கொடுக்கப்பட்டு எஞ்சியுள்ளவற்றைப் பெறு பவர்களாக நேரிடையான வாரிசுகள் இருப்பதால், வரித் தியாகம் எல்லா வாரிசுதாரர்கள்மீதும் வீதாசாரமாக விழுவதில்லை. ஒவ்வொரு டாலர் எஸ் டேட்டுக்கும் யாராருக்கு மிகவும் கூடுதலாகத் தியாகம் செய்ய வேண்டி இருக்கின்றதோ அவர்கள் பேரிலேயே கனத்த வரிப்பளு விழுகிறது.

11. இவ் வரிகளின் நிலைப்பாட்டைப் பற்றி ஒப்புமைக் கருதுகோள் களின் சிறந்த சுருக்கமான சர்ச்சைக்கு ஜேம்ஸ். கே. ஹால் (James. K. Hall)

எழுதிய 'Incidence of Death Duties', *American Economic Review,* March 1940, 46 ஆம் பக்கத்தைப் பார்க்க.

12. வாரிசுரிமைகள் முற்றும் தற்செயலாக நிகழ்வதால் இறப்பு வரிகளால் வாரிசுதாரர்களுக்கு யாதொரு பளுவும் இல்லை எனச் சிலர் வலியுறுத்து கிறார்கள். அவர்கள் கருத்தின்படி வாரிசுரிமை நிகர எதிர்பாராத ஆதாய மாகும் (net windfall gain). (cf Hall, *ibid,* பக்கம் 58) ஆயினும் 'நிலைப்பாடு' என்றாலே 'பளுவு' என்று கொள்ள வேண்டியதில்லை. 'யார் உண்மையில் வரியைச் செலுத்தினார்கள்' என்னும் வினாவுக்கு அது விடையிறுக்கிறது. ஒருவரின் வாரிசுடைமை முற்றும் எதிர்பாராத தன்மை உடைய தாக இருந்தால், வாரிசுதாரர் யாதொரு கூடுதல் பளுவும் இன்றியே வரியைச் செலுத்தலாம். அவர் ஒன்றையும் எதிர்பார்க்கவில்லையாதலால் அவர் அடைவது பூராவும் நிகர ஆதாயமேயாகும். மற்றொரு பக்கத்தில், வரியில்லையானால் வாரிசுதாரர் கூடுதல் ஆதாயத்தை அடைந்திருக்கக் கூடும். ஆதலால் நிலைப்பாட்டை எதிர்மறை ஆதாயம் என்று கூறலாம்.

13. சட்டக்காரணிகளை மட்டும் கொண்டே நிலைப்பாட்டை விரிவான மட்டத்தில் நிர்ணயிக்கலாம் என்பது அநுபவத்தில் புலனாகும். நிலைப்பாடு பின்னவர்களின் பேரிலேயே இருப்பதாக வைத்துக் கொள்ளவோம். அதாவது வரியில்லையானால் எஸ்டேட் இன்றும் கூடுதலாக இருந்திருக்கும். எஸ்டேட் டைப் பங்கீடு செய்வதற்கு முன்னதாகவே வரிசெலுத்தப்படுகிறது என்றும், இவ் வரி எஸ்டேட்வரி என்றும் வைத்துக் கொள்வோம். பொதுவாகக் கூறுமிடத்து உயில்களில் குறிப்பிடப்பட்ட தொகைகளை உயில்களில் குறிப்பிடப்பட்ட வாரிசுதாரர்களுக்கு யாதொரு பிடித்தமும் இன்றிக் கொடுபட வேண்டும் என்று மாநில வாரிசுச் சட்டங்கள் கூறுகின்றன. பின்பு எஞ்சியிருக்கும் வாரிசுதாரர்கள் நிலைப்பாட்டைத் தாங்குகின்றார்கள். குறிப்பிட்ட தொகைகளைப் பெற்றவர்கள் யாதொரு நிலைப்பாட்டையும் தாங்கவில்லை. மாநிலங்களின் சட்டங்கள் இவ் விஷயத்தில் தம்முள் பெரிதும் வேறுபடுகின்றன. ஆயினும் பல மாநிலங்கள் மேலே குறிப்பிட்ட தோரணையைப் பின்பற்றுகின்றன. சில மாநிலங்கள் இவ் வரியை வீதாசாரமாக வசூலிப்பதற்கு அல்லது நெருங்கிய நேர்வழி வாரிசுதாரர்களுக்குச் (இவர்கள் பொதுவாக எஞ்சியுள்ள வாரிசுதாரர்கள்) சலுகை அளிப்பதற்கும் பிரத்தியேக விதிகளை வகுக்கின்றன.

14. இதற்கு முன் கூட்டாட்சி வாரிசுரிமைகளின்மீது மட்டுமே வரி விதித்தது. 1797-க்கும் 1802-க்கும் இடையில் உயிலால் கிடைத்த உடைமைகளின்மீது 1 சதவிகிதத்தில் 2/10 வீதம் ஒரு ஸ்டாம்பு வரி விதிக்கப்பட்டது. 1862-க்கும் 1870-க்கும் இடையில் ஒரு மிதமான வாரிசுரிமை வரி விதிக்கப்பட்டது. இதிலிருந்து ஆண்டொன்றுக்கு $1\frac{1}{2}$ மில்லியன் டாலர்களே கிடைத்தன. 1898-க்கும் 1902-க்கும் இடையில்நேரிடையான வாரிசுதாரர்களின் வாரிசுரிமைகள் பேரில் உச்சவீதமாக $2\frac{1}{4}$ சதவிகிதம் வரி விதிக்கப்பட்டது.

15. இறப்பு வரிகளை வசூலிப்பதால் ஆண்டுதோறும் உடைமை வரி, பிற வரிகளிலிருந்து வசூலாகும் தொகைகள் குறைவாக இருக்கின்றன என்னும் கூற்றை இறப்பு வரிகளை விதித்த மாநிலங்கள் மறுத்தன.

16. 1924-ல் தங்கள் மாநிலத்தில் வாரிசுரிமை வரி விதிப்பதைத் தடுத்து பிளாரிடா ஓர் அரசியல் சட்டத் திருத்தத்தைச் செய்தது. கூட்டாட்சி வரவு வைத்தல் முறை ஏற்பட்ட பிறகு இம் மாநிலம் இம் முறை அரசியல் சட்டப் படிச் செல்லத் தக்கதென்று உயர்நீதி மன்றத்தில் (Supreme Court) வழக்காடியது. ஆனால் வழக்கு தோற்றது. இறுதியாக 1930–ல் கூட்டாட்சி வரவுவைத்தல் முறை இருக்கும் வரைக்கும், வரவுவைத்தல் அளவுக்கும் ஏற்ப இறப்புவரி விதிக்கலாம் என்று மீண்டும் அரசியல் சட்டம் திருத்தப்பட்டது.

17. நிவாடாவில் இவ்வித வரி ஒன்றும் கிடையாது (ஹவாயைப் பற்றித் தகவல் தெரியவில்லை).

18. Commerce Clearing House, *State Tax Guide*, 1959.

19. யூஜனே ஒக்ஸ் (Eugene Oakes), 'The Federal Offset and the American Death Tax System,' *Quarterly Journal of Economics*, August, 1940, p. 573. இது பற்றி மேலும் தெரிந்து கொள்வதற்கு இக் கட்டுரையைப் பார்க்க.

20. மாநில வருமானவரி விதிப்பின் வளர்ச்சியால் இந்தப் போக்கு ஒரு வேளை மிகவும் வன்மையுள்ளதாக இருக்கலாம்.

21. இறந்துபோனவருக்கு ஆதாயம் அடையும் நபரை மாற்றும் ஆற்றல் அல்லது பாலிசியின்மீது கடன் வாங்குதல் ஆகிய உடைமை உரிமையின் உடனிலைகள்'' (incidents of ownership) இல்லையென்றால், ஆயுள் இன்சூரன்ஸ் வருவாய் முழுமைக்கும் மொத்த எஸ்டேட்டிலிருந்து விலக்களிக்கப்பட்டது.

22. இறப்பு வரிகளுக்கும் கொடை வரிகளுக்கும் உள்ள தொடர்பு அடுத்து வரும் பிரிவில் சர்ச்சை செய்யப் பெறும்.

23. வரியின் நிலைப்பாடு எங்கிருந்தாலும் இஃது உண்மையே. வரியின் நிலைப்பாடு இறந்து போனவரின்மீது அவர் வாழ்நாளிலேயே விழுந்தால், 50,000, டாலருக்குக் குறைவான மதிப்பையுடைய ஓர் எஸ்டேட்டைத் திரட்டுவது எனில் அவருடைய செலவுகளைச் சற்றுக் கடுமையாக—கருமித்தனமாக—குறைக்க நேரிடும் எனலாம். ஏனெனில் இவ்வித எஸ்டேட்டுகளைத் திரட்டுபவர்கள் உயர்ந்த வருமான வருக்கங்களைச் சேர்ந்தவர்களாகப் பொதுவாக இருப்பதில்லை. வாரிசுதாரர், இச் சொத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தையும் (மூலதனத்தையும) நம்பியிருந்தால் நிலைப்பாடு வாரிசுதாரர்மீது விழுகிறது. இம்மாதிரி இங்கு எடுத்துக்கொண்ட உதாரணத்தில் வரி செலுத்தும் திறன் குறைவாகவே இருக்கிறது.

24. இது பற்றிப் பயன்தரத்தக்க முறையில் ஸி. லவல் ஹாரிஸ் (C. Lowell Harriss) என்பார் எழுதியிருக்கிறார். *Gift Taxation in the United States*, Washington, American Council on Public Affairs, 1940.

25. Cf. ஸி. லவல் ஹாரிஸ் (C. Lowell Harriss), *Proceedings of the National Tax Association*, 1938, pp. 722. ff.

26. எந்த ஆண்டில் கொடை அளிக்கப்பட்டதோ அவ் வாண்டிலேயே கொடை வரிகளைச் செலுத்த வேண்டி இருப்பதால் இவ் வரியின் வீதங்கள் எஸ்டேட் வரி வீதங்களைக் காட்டிலும் குறைவாக இருக்கின்றன போலும். இறப்பு வரிகளின் முன்செலுத்துகைகளாக (prepayments) கொடை வரிகள் கருதப்படுவதால், கொடை வரிகளின் வீதத்தில் வேறுபாடு காணப்படுவது முன்செலுத்துகைக்கான கழிவு ஆகும்.

27. 1959-ல் எஸ்டேட் வரியின் தனிப்பயன் விலக்கு 60,000 டாலராகவும், மொத்தக் கொடை வரி விலக்கு 30,000 டாலராகவும் இருந்தன. 1942-க்கு முன்பு இரு வரி விலக்குகளும் 40,000 டாலராக இருந்தன.

28. 1959-ல் பன்னிரண்டு மாநிலங்களே கொடை வரிகளை விதித்தன. இவற்றில் பல வாரிசுரிமை வரியை விதித்தன. இதற்கு மேல் கூட்டாட்சி வரவு வைத்தலைப் பயன்படுத்திக் கொள்வதற்காக ஒரு எஸ்டேட் வரியையும் விதித்தது (Commerce Clearing House, *State Tax Guide*, 1959).

1957-ல் கூட்டாட்சிக்குக் கொடை வரி மூலம் கிடைத்த வருவாய்கள் எஸ்டேட் வரி மூலம் கிடைத்த வரி வீதங்களில் சுமார் 47 சதவிகிதமாகும். ஆனால், பல ஆண்டுகள் கொண்ட காலக் கூற்றில் இரு வரிகளுக்கும் யாதொரு இணக்கமான உறவும் தெரியவில்லை.

30. அங்ஙனமானால் ஏன் சில மாநிலங்கள் மட்டும் கொடைவரிகளை விதிக்கின்றன? எந்த அடைப்புகளில் இறப்பு வரி வீதங்கள் கூடுதலாகவும் இவ்வரியைத் தவிர்க்கும் நாட்டம் அதிகமாகவும் இருக்கின்றதோ, அங்கெல்லாம் கூட்டாட்சியின் கொடை வரி மிகவும் திறனுகச் செயல்படுகிறது என்பதே இதற்கான விளக்கமாகும். இவ்வாறுகக் கொடையின் மூலம் தப்பித்துச் செல்வதற்குக் கூட்டாட்சியின் கொடை வரி ஊக்கம் அளிப்பதில்லை. மற்றொரு பக்கத்தில் மாநிலங்கள் கொடைவரிகள் விதிக்காததால் இறப்பின் போது கைமாறும் கொடைகளைக் காட்டிலும் வாய்மொழியாகக் கொடைகள் அளிப்பதற்கு ஓரளவு அநுகூலம் தரப்படுகிறது.

31. இதனுல் செயல்முறையில் ஒரு சங்கடம் நேரலாம். ஏனெனில் இறப்பின்போது வாரிசுதாரர்களுக்குச் சிறப்பு விலக்காக ஒரு சிறு தொகையே விடப்படும். அதுவுமின்றி வாய்மொழியாகக் கைமாறும் கொடைகளைக் காட்டிலும் இறப்பின்போது கைமாறும் எஸ்டேட்டுகள் கூடுதல் வீதங்களுக்கு உள்ளாகும். இறப்புக்கு முந்தியே எஸ்டேட் கொடை மூலம் கைமாறுவதால்தான் இவ் விளைவு ஏற்படுகிறது. ஆயினும் நேரிடையான வாரிசுதாரர்களுக்கே முன்னுரிமை என்று இறப்பு வரிகளின் கருதுகோள் குறிப்பிடுகிறது. இறப்பின்போது பெரும்பான்மையான எடுத்துக்காட்டுகளில் இவர்களே தலையாய வாரிசுதாரர்கள்.

32. 1911ஆம் ஆண்டிலும் 1912ஆம் ஆண்டிலும் முறையே நியூயார்க் மாநிலமும், மஸாச்சுசெட்ஸ் மாநிலமும், தம் மாநிலங்களில் குடியிருக்காதவர்களின் புலனுகாத உடைமைகளின்மீது விதித்திருந்த வரியை ரத்து செய்தன. 1919ஆம் ஆண்டிலும், 1920ஆம் ஆண்டிலும் இவை மீண்டும் முறையே மீண்டும் புகுத்தப்பட்டன (எப்., எஸ். எட்மண்ட்ஸ்) (F. S.

Edmonds) 'Progress in Reciprocity in State Inheritance Taxation,' *Proceedings,* National Tax Association, 1925, p. 247.

33. F. S. Edmonds, *Proceedings,* National Tax Association, 1939, p. 406.

34. கடந்த ஆண்டில் நம் குழு பல மாநில வரி ஆணைக் கழகங்களுடன் (Tax Commissions) பேச்சு நடத்தி, அவர்களும் இந்த பரிமாற்ற இயக்கத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்று யோசனை தெரிவித்தது. சில சமயம் 'நாங்கள் பரிமாற்றத்தைச் சிபாரிசு செய்வதற்கு ஆயத்தமாயிருக்கிறோம். ஆனால் எங்கள் மாநிலம் ஒரு பெரிய கார்ப்பரேஷனின் தாய் மாநிலமாக இருக்கிறது. இக் கார்ப்பரேஷனின் பங்குகள் பலவற்றை எங்கள் மாநிலத்தில் குடியில்லாதவர்களே வைத்திருக்கிறார்கள். நாங்கள் இவர்களிடமிருந்து மிகப் பெரிய வருமானத்தை அடைகிறோம். ஆகவே இந்த வருமானத்தை விட்டுக் கொடுப்பது எங்களுக்கு மிகவும் சங்கடத்தைத் தரும். இந்த வருமானத்தை நாங்கள் விட்டுக் கொடுக்க வேண்டுமென்றால் இதற்குப் பதிலாக வேறு என்ன செய்வோம் என்பதும் எங்களுக்குத் தெரியாது' என்று சில மாநில ஆணைக் கழகங்கள் எங்களிடம் கூறின. பிறகு யூனியன் பஸிபிக் இரயில் ரோட்டின் (Union Pacific Railroad) தாய்மாநிலமான உடாவின் உதாரணத்தையும் தருகின்றன. பெரிய இருப்புப் பாதை அமைப்பவரான திரு ஈ. எச். ஹாரிமன் (Mr. E. H. Harriman) இறந்ததினால் இந்த மாநிலத்திற்கு 780,000 டாலர் கிடைத்தது. இத் தொகையைக் கொண்டு மாநிலத்தின் தலைநகரம் கட்டப்பட்டது. 'குடியில்லாதவர்களின் எஸ்டேட்டிலிருந்தே நாங்கள் இந்தத் தலைநகரத்தைக் கட்டினோம்' என்று மாநிலத்திற்கு வருகை தருபவர்களிடம் கூறப்படுகிறது (Report of Committee of the National Tax Association on Reciprocity in Inheritance Taxation), *Proceedings,* National Tax Association, 1927, p. 414).

35. எடுத்துக்காட்டாக, டான்ஸ் வழக்கு (நியூ ஜெர்சியும், பென்சில்வேனியாவும்), டிரல் பிரிட்ஜ் வழக்கு (நியூ யார்க்கும், கனக்டிக்கட்டும்), ஹண்ட் வழக்கு (கலிபோர்னியாவும் மஸாச்சுஸெட்சும்), கிரின் வழக்கு (டெக்ஸாஸும், பிளாரிடாவும், நியூயார்க்கும், மஸாச்சுஸெட்ஸும்) இவற்றை ஒப்பிடுக. இவ் வழக்குகளைப் பற்றிய பிரச்சினைகளின் சர்ச்சையை National Tax Association Proceedings-ல் 1939, 423-432ஆம் பக்கங்களில் காணலாம்.

# 22. தொழில் வரிகள்

## (Business Taxes)

### தொழில் வரிகளின் இயல்பு

தோற்றத்தில் இருப்பதைப்போல உண்மையில் வரிகள் பலகாலும் இருப்பதில்லை. தொழில்கள் அல்லது தொழில் பேரங்களின்மீது விதிக்கப்படும் வரிகள் அனைத்தும் நுட்பவினை முறைப்படித் 'தொழில் வரிகள்' ஆகா. எடுத்துக் காட்டாக 1913-க்கும் 1936-க்கும் இடைப்பட்ட காலத்தில் கூட்டாட்சிக் கார்ப்பரேஷன் வருமானவரியை ஒரு பிரத்தியேகத் தொழில் வரி யாகக் கருதவில்லை என்பதை நாம் முன்னரே கண்டோம். கார்ப்ப ரேஷன் இலாபங்களிலிருந்து பெறப்பட்ட தனியாள் வருமானங் களின் பகுதிமீது, மூலத்தில் வசூலிக்கப்படுவதற்காக விதிக்கப் பட்ட தனியாள் வருமான வரியின் ஏஜன்ஸியே கார்ப்பரேஷன் வருமானவரி என அரசாங்கத்தார் கருதினர். விலைபொருள்களை வாங்குவோர் மீது, வரியைப் புரட்டவேண்டும் என்ற நோக்கத்துட னேயே தொழில்மீது விற்பனை வரிகளை விதிக்கிறுர்கள். மாநிலங்கள் பலகாலும் 'பிரதியாக' (in lieu)ப் பல வரிகளையும் விதிக்கின்றன. சில வகை உடைமை வரிகளுக்குப் பதிலாக மாநிலங்கள் தொழில் நிறுவனங்களின்மீது இவ் வரிகளை விதிக்கின்றன. மெனக்கீடு செய்யப்பட்ட உடைமை வரிகளை வசூல் செய்வதற்காகச் சில மாநிலங்கள் வரி போடுவதும் வளம் அல்லது உலோக வளப் பொருள்களைத் தொழில்கள் பயன்படுத்துவதற்காக வெட்டு வரிகளைப் (severance taxes) போடுவதும் இதற்கு உதாரணங்க ளாகும். ஈட்டுறுதிக் கம்பெனிகளின் முதலீடுகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தின்மீது ஒரு மாநிலம் வரி விதிக்கிறது. ஆனுல், இவ் வரியைத் தொழில்மீது போட்ட வரியாகக் கருதவில்லை. இவ் வரியைப் புலனுகாத உடைமையின்மீது விதிக்கப்பட்ட வரியாகவும், புலனுகாத உடமைகளிலிருந்து கிடைக்கும்

வருமானத்தைக் கொண்டு இது அளவிடப்படுவதாகவும் கருதுகிறார்கள். தொழில் நிறுவனங்கள்மீது பிரயோகமாகும் வரிகள் அனைத்தையும் பற்றி இவ் வதிகாரத்தில் நாம் கூறப்போவதில்லை. தொழிலை நடத்தும் சலுகைக்காகவோ அல்லது அரசாங்கத்திற்கு வரி அளிப்பதற்குப் பிரத்தியேகமான ஒரு திறன் ஒரு தொழில் நிறுவனத்துக்கு இருக்கிறது என்று கருதுவதாலோ தொழில்கள் செலுத்த வேண்டும் என்று கருதப்படும் வரிகளையே நாம் இங்கு ஆராய்வோம். இக் கருத்தைத் தெளிவாக்குவதற்குத் தொழில் வரி யோசனைகளைச் சுருக்கமாகக் கூறுவது துணை செய்யும்.

**நாட்டுவரிச் சட்டத்தின் 'முன் மாதிரி வரி முறைகள்' (The National Tax Association's 'Model Tax Systems')**

நாட்டு வரிச் சங்கத்தார் 'முன்மாதிரி வரிமுறைகள்' பற்றித் தெரிவித்த யோசனைகளில் மூன்று வகை வரிகளைச் சிபாரிசு செய்திருக்கிறார்கள். இவ் வரிகளை ஆதாரமாகக் கொண்டே இலட்சிய அளவில் மாநில, தல வரிமுறைகள் அமைக்கப்பட வேண்டும். இம் மூவகை வரிகளாவன: புலனாகும் உடைமைமீது ஒரு வரி, தனியாள் வருமானங்கள் மீது ஒரு வரி, 'இலாபத்துக்காகச் செய்யப்படும் தொழில்' (business carried on for profit) மீது ஒரு வரி. இப் பெரிய வரிகளில் ஒவ்வொன்றையும் தனித்தனியே சரியென நிலைநாட்டுவதற்கான முகாந்தரங்கள் இருக்கின்றன என்றும் எண்ணப்படுகிறது. 'அது அடையும் ஆதாயங்களே' (for the benefits it receives) இம் மூன்றாவது வரிக்கான பிரத்தியேக முகாந்தரம் என்று கூறப்பட்டாலும், இப் பிரத்தியேக நிலைநாட்டுதலின் இயல்புக்குச் சில கடும் திருத்தங்களையும் அவர்கள் தெரிவிக்கிறார்கள். குழு கூறுவதாவது[2]: 'தொழில்களின் சொந்தக்காரர்கள் மாநிலத்திலேயே குடியிருந்தால் இக் கொள்கையை மேற்கோளாகக் காட்டி மனுச் செய்ய வேண்டியதில்லை. ஏனெனில் இம்மாதிரி உதாரணத்திற்குச் சாதாரண வரிவிதிப்பு முறைகளே வகை செய்கின்றன. குடியில்லாதவர்களின் கணக்கில் தொழிலில் ஒரு கணிசமான அளவு தாவரச் சொத்தும், தனியாள் சொத்தும் முடக்கப்பட்டிருந்தாலும் இக் கொள்கையைப் பிரயோகிக்க வேண்டியதில்லை. ஏனெனில், ஈண்டும் சாதாரண வரிவிதிப்பு முறைகளே சாலும். ஆனால் சொந்தக்காரர்களும், குடியில்லாதவர்களாயிருந்து தொழிலும் மிகுந்த இலாபகரமாயிருப்பதாகவும் வைத்துக்கொள்வோம். இத் தொழிலில் தல வரிக்கு உள்ளாகும் யாதொரு உடைமையும் முதலீடு செய்யப்படவில்லை என்றாலும், இவ்விதத் தொழிற்றுணிவுகளை அணுகும்படி ஏதாயினும் ஒரு முறையை வகுக்கவேண்டுமென்று மாநிலங்கள் பெரும் அளவுக்கு வற்புறுத்துகின்றன.'

கருதுகோள் அளவில் ஒரு பிரத்தியேகத் தொழில் வரியைத்
திணிப்பதற்கு என்ன காரணங்கள் இருக்கின்றனவென்று நாம்
பார்ப்போம். 'அது அடையும் ஆதாயங்களே'[3] [the bcnefits it
(business) receives] இவ் வரியைச் சரியென நிலைநாட்டுவதற்கான
பொது முகாந்தரங்களாகும். (1) சொந்தக்காரர்கள் மாநிலத்தில்
குடியிருந்தாலும் அல்லது (2) தொழிலுக்கு அம் மாநிலத்தில்
கணிசமான அளவு புலனாகக் கூடிய உடைமை இருந்தாலும், இத்
தொழில் ஆதாயங்களுக்காக யாதொரு செலுத்துகையும் செய்ய
வேண்டியதில்லை என்று மேற்சொன்ன கூற்றின் படிப் புலனாகிறது.
சொந்தக்காரர்கள் மாநிலத்தில் குடியிருப்பவர்களாக இருந்தால்,
மாநிலத் தனியாள் வருமானவரிகள் இவ் வாதாயங்களுக்கான
போதிய செலுத்துகையாகும். தொழிலுக்குக் கணிசமான அளவு
புலனாகக்கூடிய உடைமை இருந்தால், ஆதாயங்களைப் பெறுவ
தற்குச் சரியாக உடைமை வரிகளை விதித்தலே போதும். தொழில்
ஆதாயங்களில் உடைமை ஆதாயங்களும், தனியாள் ஆதாயங்
களும் அடங்கியிருக்கின்றன என்ற முடிவுக்கு நாம் வரவேண்டி
யிருக்கிறது. இல்லாவிடில் இவ் வரிகளைச் செலுத்திய விடத்துத்
தொழில் வரிக்கும் புறனடைகளைக் கூறியிருக்க மாட்டார்கள்.
உடைமையின் ஆதாயங்கள், தொழில் சொந்தக்காரர்களின்
ஆதாயங்கள் இவற்றினின்றும் வேறுபட்டதாகத் தொழில் ஆதா
யங்கள் இல்லாவிடில், இத் தொழிலுக்குச் சொந்தக்காரர்களா
யிருக்கும் குடியில்லாதவர்களின்மீது பிரத்தியேக வரி விதிப்
பதற்கோ அல்லது மாநிலத்திற்கு அப்பால் தொழில்களுக்குச்
சொந்தமாயிருக்கும் புலனாகக்கூடிய உடைமைகளின்மீது பிரத்தி
யேக வரி விதிப்பதற்கோ, ஒரு மாநில அரசாங்கத்திற்கு என்ன
முகாந்தரம் இருக்கிறது? மாநிலங்களிடையே நடக்கும் வாணி
பத்தின்மீது கடும் வரிப்பளுக்களைச் சுமத்துவதே குழுவினது
சிபாரிசின் நோக்கம் எனத் தெரிகிறது. எந்த மாநிலத்தில் சட்டப்
படி நிரந்தர உறைவிடத்தைக் கொண்டிருக்கிறார்களோ அந்த
மாநில அரசாங்கத்திற்கு உடைமைவரிகளைச் செலுத்த வேண்டும்.
எந்த மாநிலங்களில் நிறுவனம் தன் தொழிலை நடத்துகின்றதோ
(தொழிலின் சொந்தக்காரர்கள் அங்கு வசிக்காமலும் அல்லது
தொழிலுக்கு அங்கே சிறிது உடைமையோ அல்லது யாதொரு
உடைமையுமோ இல்லாமலுமிருந்தால்) இம் மாநிலங்கள்
தொழில் வரிகளை வசூல் செய்யும். இது ஆதாயத்தைப் பற்றிய
ஒரு புதுமையான கொள்கையாக இருக்கிறது. ஏனெனில், குடி
யில்லாத சொந்தக்காரர்களால், குடியில்லாத உடைமையுடன்
நடத்தும் தொழில்களே அரசாங்கத்திடமிருந்து பிரத்தியேக ஆதா
யங்களைப் பெறுவதாக இக் கூற்றின்படித் தெரிகிறது. ஆயினும்
நமது தற்போதைய நாட்டமெல்லாம் ஒரு 'தொழில் வரி'யின்

இயல்பை வருணிப்பதேயாகும். ஆதாயத்தைப் பற்றிய குழுவின் பகுத்தாய்வு புதுமையாக இருப்பதோடன்றி, பிறவகை வரிகளி னின்றும் வேறுபடுத்தித் தொழில் வரியை விதிப்பதாகவும், பிற வரிகளைச் சரியென நிலைநாட்டும் முகாந்தரங்களினின்றும் வேருன காரணங்களைக் கொண்டு இவ் வரியை நிலைநாட்டுவதாகவும் தோன்றுகிறது.

**தொழில் வரியைப் பற்றிய அண்மைக் காலத்துக் கருதுகோள்கள் (More Recent Theories of the Business Tax)**

பல வகைத் தொழில் வரிகளைக் கூட்டாட்சியும் மாநில அரசாங்கங்களும் விதிப்பதோடன்றி, தல அரசாங்கங்களும் அதிக மாக விதிக்கின்றன. இவற்றின் வளர்ச்சிக்குக் காரணம் வருவாய் முடையேயன்றி யாவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய கருதுகோள் அளவினதான முகாந்தரத்தில் வளர்ச்சி ஏற்பட்டதனுல் அன்று. இருந்தாலும், தற்காலத்திலும் இவ் வரிக்குக் கருதுகோள் அளவில் பரிந்து பேசுபவர்கள் இருக்கிருர்கள். கீழ்வரும் காரணங்களைக் கொண்டு நாட்டுவரிச் சங்கத்தின் மற்ருெரு குழு கார்ப்ப ரேஷன்கள்மீது விதிக்கப்படும் தொழில் வரிகளைச் சரியென நிலை நாட்டுகின்றது. (1) கார்ப்பரேஷன் வடிவில் இருக்கவும், இயங்க வும், தொழில் நடத்தவும் அவற்றுக்கு அலாதியான சட்டபூர்வ மான சலுகைகளை அரசாங்கம் அளித்ததன் வாயிலாகக் கார்ப்ப ரேஷன்கள் பிரத்தியேக ஆதாயங்களைத் துய்ப்பது முதலாவதாகும். (2) இரண்டாவதாகப் பல அரசாங்க நடவடிக்கைகளின் மூல மாகத் தொழில் முயற்சிகளைச் செய்வதற்கான அநுகூலமான ஒரு சூழ்நிலையை உருவாக்கியும், பேணியும் வந்ததனுல் கார்ப்பரேஷன் களும், இவற்றையொத்த பிற நிறுவனங்களும் ஆதாயங்கள் அடைகின்றன.[4] உடைமை, தனியாள்வருமானம், நுகர்வு இவற்றின்மீது விதிக்கப்படும் வரிகளிலிருந்தும் தனியே வேருகத் தொழில் வரி விதிப்பதற்குக் கீழ்வரும் எட்டு முகாந்தரங்களில் 'ஒன்றை அல்லது மற்ருென்றை' மிக அண்மைக் காலத்திய தொழில் வரிவிதிப்பின் கருதுகோள்[5] மிக விரிவாகக் கூறுகிறது. அவையாவன : (1) சில வகைத் தொழில்களுக்கு அரசாங்கம் அளித்த பிரத்தியேகச் சலுகைகள் (உரிமங்கள், சிறப்பு உரிமைகள் (franchises) அல்லது பட்டயங்கள்; (2) சில தொழில்களுக்குத் தரப்பட்ட பிரத்தியேக பணிகள் (அபாயகரமான தளவாடங்களை மேற்பார்வை யிடுதல், பிரத்தியேகமான பாதுகாப்பு) (3) எல் லாத் தொழில்களுக்கும் செய்யப்படும் பொதுவான பணிகள் (உடைமையைக் காத்தல், ஒப்பந்தங்களை அமுல் நடத்தல், பொதுக் கல்வி, பொது அபிவிருத்திகள் முதலானவை); (4) சில தொழில் நடவடிக்கைகளால் விளையும் சமுதாயச் செலவுகள் அல்லது

இழப்புகள் [இயற்கை வளப் பொருள்களை அழித்தல், தூய்மை யைக் கெடுத்தல் (pollution), நெரிசல், தொழில் விபத்துகள், தொழில் நுட்பவினை வளர்ச்சியால் வேலையின்மை (technological unemployment) முதலானவை] (5) தொழிலின் தனியாளல்லாத வரி செலுத்தும் திறன்; (6) பொது நன்மை (விலைமுறையின் வாயிலாகப் பொது மக்களின்மீது வரிவிதிக்கும் ஒரு கருவி); (7) சமு தாயச் சூழ்திறம் (social expediency) (வருவாய் ஆக்கத்திறன் ஆட்சியின் சுளுவு, பொது மக்கள் ஏற்றுக் கொள்ளல்); (8) விரும் பிய சமுதாயக் கட்டுப்பாடுகளை நிறைவேற்றுதல் (இறக்குமதிகள், தொடர் பண்டகங்கள் அல்லது சரக் கறைகள் மிகை இலாபங்கள் இவற்றுக்கு உரமூட்டாதிருத்தல்). ஈண்டு வரியைச் சரியென நிலை நாட்டுவதற்கான எல்லா முகாந்தரங்களும் வருகின்றன. அவை யாவன : ஆதாயம், ஆக்கச் செலவு, திறன், வருவாய் ஆக்கம், கட்டுப்பாடு. இவை பிரத்தியேகத் தொழில்வரி விதிப்பை எத்துணை அளவு நிலைநாட்டுகின்றன என்பதற்கு இவற்றைத் தனித்தனியே தேர்வதும் ஓர்வதும் பயனுள்ளதாக இருக்கும்.

தொழில் சமூகம் முழுமைக்குமான பொதுவான சில ஆதாயங் களையும், சில குறிப்பிட்ட தொழில்களுக்குச் சிறப்பான ஆதாயங் களையும் அரசாங்கம் அளிக்கிறது என்ற முகாந்தரங்களின் பேரில் ஆதாயக்கொள்கை பிரத்தியேகத் தொழில்வரி விதிப்பை நிலை நாட்டுவதாகப் பலர் எண்ணுகின்றனர்கள். கார்ப்பரேஷன் வடிவில் தொழிலை நடத்தும் சலுகை, அரசாங்கத்திற்குச் சொந்தமான இடத்தில் (நகரத் தெருக்களில், தெருக்களின்மீது அல்லது தெருக் களின்கீழ்) பொது வசதிகளை இயக்குவதற்குச் சலுகைகள்; செய்யும் பண்டங்களின் தரத்தைப் பற்றிப் பொது மக்கள் சிறப்பாக அக்கறை காட்டும் சிறப்புவகைத் தொழில்களை நடத்தும் சலுகை; பல்வேறுபட்ட சிறப்புப் பாதுகாப்புகள் இவை அனைத்தும் பிரத்தி யேக ஆதாயங்களில் அடங்கும். இவ்வித ஆதாயங்கள் இருக் கின்றன என்பதை நாம் ஒப்புக்கொள்கிறோம். ஆனால், இம் முகாந்தரங்களைக் கொண்டு பொதுத் தொழில் வரிகளைச் சரியென நிலைநாட்டுவது வேறு விஷயமாகும். அரசாங்கத்தினிடமிருந்து பிரத்தியேக ஆதாயங்களைப் பெற்றதற்கு ஆட்சி வருவாய்களான அபராதங்கள், கட்டணங்கள், பெர்மிட்டுகள், உரிமங்கள் முதலானவை சான்று பகிர்கின்றன. பிரத்தியேக ஆதாயம் என்ற காரணத்தைக் காட்டிக் கூடுதலான தொழில் வரிகளைப் போடுவதில் அரசாங்கம் 'சாலையின் இருமருங்கிலும்' (working both sides of the street) வேலை செய்கிறது எனலாம். தற்காலச் சட்டங்களின்படிப் பதிவு செய்யும் உரிமை அனைவருக்கும் உண்டு. பட்டயத்தை வெளியிடுவதற்காக ஆகும் ஆட்சிச் செலவு,

கட்டணத்தினுல் சரிக்கட்டப்படுகிறது எனக் கொள்ளலாம். பொது வசதிகளைப் பொறுத்த அளவில், அரசாங்க இடத்தில் தொழிலை இயக்குவது ஒரு முற்றுரிமையாகும். இவ் வுரிமைக்குக் கட்டணம் பலகாலும் செலுத்துகின்முர்கள். நியாயமான வீதங்களில் நல்ல தரமான சேவையை சமூகம் விரும்பியவாறு பெறுவதற்கு அரசாங்கம் வீதங்களையும் செயல் முறைகளையும் கட்டுப் படுத்துவது உண்மையான கைமாருகும் (quid pro quo). ஒரு தொழில் வரியைப் போடுவதற்கு எஞ்சியுள்ள பிரத்தியேக ஆதாயம்தான் யாது ? பொதுமக்கள் நலனுக்காகச் சில தொழில் களின் சில உற்பத்திக் கூறுகளை அரசாங்கம் கட்டுப்படுத்த வேண்டி யிருக்கிறது. எடுத்துக்காட்டாகப் பண்டங்களைத் தூக்கும் எந்திரங்களைப் (elevators) பார்வையிடுவதும், பால், இறைச்சி, மருந்துச் சரக்குகள், மருந்துகள் இவை போன்ற இனங்களை உற்பத்தி, பகிர்வு செய்யும் நிலைமைகளைக் கட்டுப்படுத்துவதும் இதற்கு எடுத்துக்காட்டு ஆகும். இவற்றைப் பார்வையிடுவ தற்கும், ஆட்சி செய்வதற்கும் ஆகும் செலவுகள் பொதுவாகச் சிறப்பு உரிமக் கட்டணங்களால் (special license fees) சரிக்கட்டப் படுகின்றன. இந்தப் பார்வையிடுதல், கட்டுப்பாடு முதலான வற்றின் மூலம் கிடைக்கும் ஆதாயங்கள் நுகரும் பொது மக்களைச் சேருகிறதன்றித் தொழில்களைச் சேர்வதில்லை. இம் மாதிரியான கட்டங்களில் ஆதாயத்தை அடிப்படையாகக் கொண்டு தொழிலின்மீது வரிவிதிப்பதைச் சரியென நிலைநாட்டுவது கடினமே. பிரத்தியேகமாக உடைமைக்குக் காப்பு வேண்டு மென்முல், அதற்குத் தனியார்களே வகை செய்வது தற்பொழுது காணப்படும் போக்காகும். தங்களுக்கு வேண்டிய காவலாளி களையும், போலீஸ், தீ பார்வையாளர்களையும் தொழில்கள் தாங்களே நியமித்துக் கொள்வதோடன்றி, தீத்தடுப்புச் சாதனை க்ளைக் கொண்டு ஆலைகளைக் கட்டி, வேலி அல்லது சுவர்களை எழுப்பி, மிக விலையுயர்ந்த பொருள்களைப் பத்திரமாக வைப் பதற்கு வேண்டிய வசதிகளையும் செய்துகொள்கின்றன. அரசாங்கம் ஏதாயினும் பிரத்தியேகப் பாதுகாப்பு அளித்தால் அதற்குப் பொதுவாக ஒரு கட்டணம் வாங்குகிறது. இவ்விதச் சூழ்நிலையில் பிரத்தியேகப் பாதுகாப்பைக் காரணமாகக் கொண்டு தொழில்களின்மீது பொதுவானதொரு வரி விதிப்பது உண்மைக்கு மாறுபட்டதாகும்.

தொழில்மீது பிரத்தியேக வரிவிதிப்பதற்குக் கூறப்படும் பொதுவான ஆதாயங்களை ஒதுக்கீடு செய்வதிலும் இதைப் போன்ற சில பிரச்னைகள் எழுகின்றன. உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு அளித்தல், சட்டக் குற்றங்களைத் தடுத்தல்

(prevention of civil wrongs) ஒப்பந்தங்களை அமுல் நடத்துதல், பொது அபிவிருத்திகள், பொதுமக்கள் கல்வி இவையெல்லாம் பொது ஆதாயங்களாகும். இம்மாதிரியான பொது ஆதாயத்தைச் சிறப்புவரி மசோதாக்களாக (மூலங்களாக) மாற்ற வேண்டும் என்முல் இவ் வாதாயங்களை ஒதுக்கீடு செய்யும் திறன் இருக்கவேண்டும். ஆனுல், அவ்விதத் திறன் ஓரிடத்திலும் இல்லை. ஒழுங்காக இயங்கும் சமுதாயத்தைப் பேணுவதால் தொழில் ஆதாயம் பெறுகின்றது என்பது உண்மையே. ஆனுல், சமுதாயத்தின் ஒரு கூறே தொழில். சமுதாயமும் தொழிலினுல் ஆதாயம் அடைகிறது. சமுதாயம்தான் தொழிலுக்காக இருக்கிறதெனவும், தொழில் நிலைபேற்றுக்குச் சமுதாய நிலைபேறு வேண்டப்படுவது எனவும் உண்மைகளைத் தலைகீழாக மாற்றுவதற்கு உண்மையில் ஆதாயக் கொள்கையும் ஆக்கம் தருகிறது. பொதுவாகக் கூறுமிடத்து, வேண்டத்தக்கச் சமுதாயச் சூழ்நிலையின் ஓர் கூறே வேண்டத்தக்க தொழில் சூழ்நிலையும் ஆகும். சுருங்கக் கூறின் ஓர் உற்பத்தி செய்யும் சமூகத்திற்கு ஓர் உற்பத்திப் பொருளாதாரம் வேண்டுவதே. ஈதிங்ஙனமாக இருக்கவும், உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்பு அளித்தல், பொதுமக்கள் கல்வி, பொது அபிவிருத்திகள் இவற்றைச் சமுதாய நோக்கங்கள் எனக்கொண்டு இவற்றுடன் பொருளியல் நோக்கங்களையும் பின்னுகிருேம். இவ்வாறு பொதுவான ஆதாயங்களைத் தனிப்பட்ட தொழில்களின்மேல் ஏற்றுவது பயனற்றதுமன்றி உண்மைக்கு மாறுபட்டதுமாகும். வரிப் பொறுப்புகளின் ஒதுக்கீடு தருக்க முறைப்படி வரி செலுத்தும் திறன் கொள்கைக்கு ஒத்ததாகவே இருக்க வேண்டும்.

ஆனுல், வரி செலுத்தும் திறன் கொள்கையைக் கொண்டு தனியான தொரு வரிகளின் வகையை ஆதரிக்க முடியுமா? வேறுவகையாகச் சொல்லப் போனுல், தொழிலிலிருந்து வருமானத்தைப் பெறுபவர்களின் திறன்களினின்றும் வேருகத் தொழிற்றுணிவுகளுக்குத் தனியே வரிசெலுத்தும் திறன் இருக்கின்றதா? இவ் வினவிற்கு வல்லுநர்களில் பெரும்பான்மையோர் எதிர்மறையிலேயே விடை இறுக்கின்றனர். 'தங்களுக்கெனச் சொந்தமான ஆளுடைமை (personality) கொண்ட உற்பத்தி நிறுவனங்கள்தாம் 'தொழிற்றுணிவுகள்' என்று அடித்துக் கூறுவாரும் உளர்.[6] ஆகவே, அவற்றுக்கு உரியவர்களாயிருக்கும் தனியாட்களினின்றும் வேருக இத் தொழில்களுக்கு வரிசெலுத்தும் திறன் இருப்பதாகவும் கூறுகிருர்கள். ஆகவே, வரிசெலுத்தும் திறன் கொள்கையை நாம் மீண்டும் ஆய்வது நல்லது. செலுத்தும் திறன் என்முல் கொடுக்கும் திறன் என்றுதான் பொருள். ஒரு டாலரை அரசாங்கத்திற்குக்

கொடுப்பதற்கு ஒருவர் எத்துணை குறைவாகத் தியாகம் செய்ய வேண்டுமோ, அத்துணைக் கூடுதலாக அவருக்கு வரி செலுத்தும் திறன் இருக்கிறது எனலாம். இதற்கும் தொழிலுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. இதற்கும் தொழிலிலிருந்து வருமானம் பெறுபவர்களுக்குமே தொடர்பு உண்டு. தொழிலுக்குத் தனியாக வரிசெலுத்தும் திறன் இருக்கிறது என்ற கொள்கையை ஆவேச மாக ஆதரிப்பவர் பேராசிரியர் ஸ்டூடன். தனியாட்கள் சொந்த மாகத் தொழில்களை நடத்துவதைத் தவிர்த்து, தத்தம் வருமானங்களி லிருந்து வரிகளைச் செலுத்தும் சொந்தக்காரர்களின் தனிப் பட்ட திறன்களின்றும், இத்திறன் வேறுபட்டதாகும்,[7] எனக் கூறுவ தால் தன்னுடைய நிலையைச் சிறிது மாற்றிக்கொண்டவராவார். தனியார் சொந்தமாக நடத்தும் தொழில்களில், தொழிலின் வரி செலுத்தும் திறனும், சொந்தக்காரரின் வரிசெலுத்தும் திறனும் ஒன்றேயாகும். ஆனல், கார்ப்பரேஷன் வடிவில் உரிமையையும் (சொந்தத்தையும்) நிருவாகத்தையும் வேறு வேருகத் தனியே பிரிப்பதால் ஒரு புதிய அலாதியான திறன் படைக்கப்படு கின்றதா? அங்ஙனம் படைக்கப்பட்டால், தனியாள் சொந்த மாக நடத்தும் தொழில், கார்ப்பரேஷன் தொழிலாக மாறும் பொழுது எந்தக் கட்டத்தில் இப் புதிய வரிசெலுத்தும் திறன் உண்டாகின்றது? தனியாள் வருமான உற்பத்திக்குத் தொழில் நிறுவனம் ஒரு கருவி என்பது மிகத் தெளிவு. தொழில் நிறுவ னத்தின் வடிவமோ, தொழில் நடவடிக்கையின் செயல்முறை களோ இவ் வடிப்படை உண்மையை மாற்றுவதில்லை. தனியாள் வருமானங்கள் என்ற கால்வாயிலிருந்தே வரிகள் செலுத்தப்படு கின்றன என்ற அடிப்படைக் கொள்கையை நாம் மீண்டும் நினைவுக்குக் கொணர்கிருேம். தனியாட்களுக்குப் பங்கீடு செய்வ தற்கு முன்பே வருமானங்களிலிருந்து வரிகளை வசூலித்தால் தனி யாட்களுக்குக் கைக்குக் கிடைத்த தொகை குறையும். இக் குறைவுத்தொகை வரிகளின் அளவினதாகும். இங்ஙனமாக வரிப்பளு தனியாட்கள்மீதே விழுகிறது. பெரும்பாலும் வரிப்பளு தனியாட்களிடையே நியாயமற்ற முறையிலேயே ஒதுக்கீடு செய்யப்படுகிறது. ஏனெனில், பகிர்வுக்கு முன்பே இவ்வரி விதிக்கப்படுகிறது. ஆகவே வரிபளுவுக்கும் தனியாளின் வரி செலுத்தும் திறனுக்கும் யாதொரு தொடர்புமில்லை.

வருவாய் முடை காரணமாகவும், கட்டுப்பாடு செய்ய வேண்டும் என்ற விருப்பத்தின் காரணமாகவும், தொழில் வரி விதிப்பு சரியென நிலைநாட்டப்படுவதைச் சடுதியில் ஆராய்வோம். வருவாய் முடை என்பது முற்றும் மரியாதைக்குரியதொன்றே. ஆயினும் அஃது அடிப்படை நீதியின் தேவைக்கும், உயர் மட்டத்

தொழில் நடவடிக்கை நோக்கத்திற்கும் கீழ்ப்பட்டதாய் இருக்க வேண்டும். திறன் (பொருந்தும் அளவு அல்லது இயன்ற அளவு), ஆதாயம் இவற்றைத் தளங்களாகக் கொண்டு வரிப்பளுவைப் பங்கீடு செய்வதுதான் நம்முடைய தலையாய நோக்கமாக இருக்க வேண்டும். திறன் அல்லது ஆதாயக் கொள்கைக்கு ஒத்துவராத ஒரு வரியை வருவாயைப் படைப்பதாக மட்டும் ஏற்றுக்கொள்ள முடியாது. பிரத்தியேகத் தொழில் வரிகள் விதிப்பின் வாயிலாகத் தொழில்களை முற்றும் கட்டுப்பாடு செய்துவிடலாம். ஆயினும், தொழில்களைத் தொழில்களாக எண்ணிப் பொதுவரி விதிப்புச் செய்தல் பொருந்தாது. ஆகையினால் இது நாம் எடுத்துக் கொண்ட பொருளுக்கு இயைபுடையதன்று.

நிதிமுறையைத் தாங்கும் ஒரு பெரிய தூண் தொழில் ஆகும் வரிவிதிப்பு என்று விரிவாக வாதிப்பது போலி வாதமாகும். தனித் தனியாகப் பார்க்கும்பொழுது, இவ்வித வரிகளை ஆதரிக்கும் குறிப்பிட்ட கருதுகோள்கள் நாம் ஏற்றுக்கொள்ளக் கூடாதன வாகவும் அல்லது ஒரு வரையறைக்குட்பட்ட பிரத்தியேகச் சூழ் நிலைகளிலேயே ஏற்றுக்கொள்ளக் கூடியனவாகவும் இருக்கின்றன. இவ்வாறான பிரத்தியேகச் சூழ்நிலைகள் பல இருக்கலாமென்றும், ஆகவே, இப் பல காரணங்களில் 'ஏதாயினும் ஒன்று அல்லது மற்றொன்று' பொதுத் தொழில் வரிவிதிப்பை நிலைநாட்டலாம் என்றும் வாதிப்பது, எவ்விதமாயினும் வருவாயைப் பெற வேண்டும் என்ற குருட்டாம் போக்குக்கு அழைப்பு விடுப்பதாகும். இவ்வளவு சட்டங்கள் இருக்கும்பொழுது, ஒவ்வொருவரும் ஒரு சட்டத்தையாயினும் இன்றியமையாது மீறியே இருக்கவேண்டும் எனவும், ஆகவே ஒவ்வொருவரும் காலக்கூறு தோறும் சிறை வாசத்தைத் தண்டனையாகத் துய்க்க வேண்டும் எனவும் கூறும் வாதத்துடன் இதை ஒப்பிடலாம்.[8]

## மாநிலத் தொழில் வரிகளின் வகைகள்

இவ் வதிகாரத்தின் தோற்றுவாயில் கூறியாங்கு, ஒரு மாநிலவரி முறையில் உள்ள வரிகளில் எவ்வெவற்றைத் தொழில் வரிகளாகக் கருதலாம் என்று நிர்ணயிப்பதில் இடர்ப்பாடு இருக்கிறது. பல மாநிலங்கள் இன்னமும் உடைமை வரியை வருவாய்களை அளிக்கும் பெரும் வாயிலாகப் பயன்படுத்துகின்றன. உடைமை வரியை ஆட்சி செய்யும்பொழுது தொழில்களின்மீது அவற்றின் மொத்த அல்லது நிகர வருமானத்தைக் கொண்டு உடைமை வரிகளை விதிப்பது விரும்பத்தக்கதாகும். இவை உடைமை வரிகளாகக் கொள்ளப் படுகின்றனவேயன்றித் தொழில் வரிகளாகக் கொள்ளப்பட வில்லை. மற்றோர் பக்கத்தில் நுகர்வு வரிகளின் முக்கியத்துவம்

அண்மைக் காலத்தில் அதிகரித்திருக்கிறது. இதனால் மொத்த வரவுகளின்மீது விதிக்கப்படும் ஒரு வரிக்கு, நுகர்வு வரிவிதிப்புக் கருதுகோளிலோ அல்லது தொழில் வரிவிதிப்புக் கருதுகோளிலா, உண்மையான முகாந்தரத்தைக் கண்டுபிடிப்பது என்பதில் சிக்கல் ஏற்படுகிறது. இறுதியாகத் தனியாள் வருமான வரியை ஒரு பெரும் நிதி வாயிலாகப் பயன்படுத்தும் மாநிலங்களில் பல, தனியாள் வருமான வரிகளுக்குப் பிற்சேர்க்கைகளாகக் கார்ப்பரேஷன் வருமான வரிகளைப் பயன்படுத்துகின்றன. உடைமை வரி தனியாள் வருமானவரி, நுகர்வு வரி இவற்றினின்றும் தனியாக விதிக்கப்படும் தொழில் வரிகளிலேயே நாம் ஈண்டு நாட்டம் கொண்டுள்ளோம். இவ் வதிகாரத்தின் முற்பகுதியில் சர்ச்சை செய்யப்பட்ட பிரத்தியேக ஆதாயம் அல்லது திறன் இவற்றைக் கருதுகோள் அளவில் காரண விளக்கமாகக் கொண்டிருக்கும் வரிகளிலேயே நமக்கு அக்கறை.

தொழிற்றுணிவுகளின்மீது ஒரே படித்தான வரி விதிப்புச் செய்யும் முயற்சிகள் தொடக்கத்திலேயே ஒரு சங்கடத்தைத் தீர்க்க வேண்டியிருக்கிறது. தொழிலே பலவிதமாக இருப்பதால் எந்த எளிய ஒரே படித்தான வரித்தளங்களையும் கொள்ள முடியாது. எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு தொழில் வரிமுறையை அமைப்பதில், சற்று முன்போ, பின்போ வரி, ஆதாயத்தைத் தளமாகக் கொண்டிருக்கின்றதா அல்லது திறனைத் தளமாகக் கொண்டிருக்கின்றதா என்ற அடிப்படைப் பிரச்சினையைச் சமாளிக்க வேண்டியது இன்றியமையாததாக இருக்கிறது. எவ்வளவு நிகர அல்லது மொத்த வருமானம் வருகிறது அல்லது எவ்வளவு மூலதனம் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது என்பதைத் தலையாய தொழில் வரி வகைகள் தளமாகக் கொண்டிருக்கின்றன.

**நிகர வருமானத்தின்மீது தொழில் வரிகள் :** இரண்டு கஷ்டங்கள் குறுக்கிடாமல் இருக்குமானால், நிகர வருமானத்தைத் தளமாகக் கொண்ட தொழில் வரிகளையே பொதுவாக எல்லோரும் விரும்புவார்கள். இக் கஷ்டங்களில் ஒன்று கருதுகோள் அளவினதாகும்; மற்றொன்று செயல்முறை அளவினதாகும். கிட்டத்தட்ட தொழில்வரி விதிப்புக்குப் பொது ஆதாயக் கொள்கையே தலையானதாகும் என்ற எடுகோளிலேயே கருதுகோள் கஷ்டம் பொதிந்திருக்கிறது. தொழில் நடத்துவதற்கான நல்ல சூழ்நிலை இருந்தால் இதனால் கிடைக்கும் ஆதாயங்கள் இலாபகரமாக நடக்கும் தொழில்களுக்கும் சரி, இலாபமின்றி நடக்கும் தொழில்களுக்கும் சரி, கிட்டும். ஆனால், ஒரு நிகர வருமானவரியின் கீழ் இலாபகரமாக நடக்கும் தொழில் மட்டுமே இவ் வாதாயங்களுக்

காக வரிசெலுத்த வேண்டியிருக்கும். ஈண்டு ஆதாயக் கொள் கைக்கும், திறன் கொள்கைக்கும் இடையே முரண்பாடு இருப்பது தெளிவு. கணக்கெழுதும் முறைகளில் தொழில்களுக் கிடையே ஒரே படியான தன்மை இல்லாததினால், செயல் முறையில், ஒரு பொதுவான தொழில் நிகர வருமானவரி விதிப் பதில் சங்கடம் நேர்கிறது. வரியின் தளம் நிகர வருமானம் என்றால், வரி செலுத்துவோர் அனைவரும் ஒரே முறையில் தான் தத்தம் நிகர வருமானத்தைக் கணக்கிட வேண்டும் என்பது மிகத் தெளிவாகும். ஆயினும், எல்லாத் தொழில்களின்மீதும் ஒரே படித் தான கச்சிதமான கணக்கெழுது முறைகளைத் திணிப்பதில் உள்ள சங்கடங்களை, வாசகர் தம்முடைய சொந்த சமுதாயத்தில் நிலவும் பல்வேறுபட்ட தொழில் நிறுவனங்களைப் பார்ப்பதின் மூலம் தெரிந்து கொள்ளலாம். பதிவு செய்யப்படாத சில்லறை வியாபாரத்திலும், சேவை நிறுவனங்களிலும் (service establishments) இந்த முறையைப் பின்பற்ற முடியாது. இக் காரணத்தினால் தொழில் நிகர வருமான வரிகளை விதிக்கும் மாநிலங்கள் அவற்றைப் பொதுவாகப் பதிவு செய்யப்பட்ட தொழில்களுக்கு மட்டுமே பிரயோகிக்கின்றன. பதிவு செய்யப்படாத சராசரி நிறுவனங்களைக் காட்டிலும் கார்ப்பரேஷன்களின் கணக்கெழுதும் முறைகள் பொதுவாக மேம்பட்டவை. இதற்குக் காரணம் நெடு நாளைக் கூட்டாட்சிக் கார்ப்பரேஷன் வருமானவரியினால், கார்ப்ப ரேஷன்களின் கணக்கெழுதும் முறைகள் ஒரே தரமாக்கப்பட்டதே யாகும். மாநிலக் கார்ப்பரேஷன் நிகர வருமான வரிகள் ஏறக் குறைய ஒரே முறையான வீதாச்சார வீதங்களையே விதிக்கின்றன. சில மாநிலங்களில் ஆதாயங்களுக்குப் பிரதியாக, ஒரு குறைந்த அளவுத் தொகையை ஆண்டுதோறும் வரியாகச் செலுத்த வேண்டும். இவ் வாதாயங்களின் அளவு இக் குறைந்த அளவு வரியைக் காட்டிலும் கூடுதலாக இருந்தால், ஒரு நிகர வருமான வரி செலுத்தவேண்டும். இங்குத் தொழில், 'திறன்' அல்லது 'ஆதாயத்தின்' அடிப்படையின் பேரிலேயே வரியைச் செலுத்து கிறது எனவும், இதில் எந்த அடிப்படை கூடுதலாக இருக் கின்றதோ அந்த அடிப்படையின் பேரிலேயே வரியைச் செலுத்து கிறது எனவும் கொள்ளக்கிடக்கிறது.

**மொத்த வருமானத்தின்[9] மீது தொழில் வரிகள்:** ஒரு தொழிலின் மொத்த வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட வரிகள் உண்மையில் விற்பனை வரிகளேயாகும். வரியின் அளவு விற்பனைகளின் அளவைக் கொண்டே தீர்மானிக்கப் பெறுகிறது. இவ் வரித் திணிப்பினால் நேரிடையாகவே உற்பத்தியின் மாறும் ஆக்கச் செலவுகளும் அல்லது பகிர்வின் செலவுகளும் கூடுகின்றன. இதன் நிலைப்பாடும் விற்பனை

வரியின் நிலைப்பாட்டை முற்றும் ஒத்திருக்கிறது. இவ் வுண்மையைப் புரிந்துகொள்ளாததினால் பல மாநில அரசாங்கங்கள், இவ் வரி தொழில்களின்மீது விதிக்கப்படுவதினாலும், அது 'தொழில்வரி' என்று விளிக்கப்படுவதினாலும், தொழில்வரி, ஒரு தொழிலின் நிகர வருமானத்தின்மீது விதிக்கப்பட்ட வரியைப் பல இன்றியமையாத அமிசங்களிலும் ஒத்திருக்கிறது என எண்ணுகின்றனர்.

பொது வசதி நிறுவனங்கள், பதிவு செய்யப்படாத தொழில்கள் இவற்றின் மொத்த வருமானத்தின்மீது இரு காரணங்களை முன்னிட்டுத் 'தொழில்' வரிகள் பொதுவாகப் பிரயோகிக்கப்படுகின்றன. முதலாவதாக நிறுவனம் எத்துணை நிகர வருமானத்தைப் பெறுகிறது என்பதைப் பொறுத்தன்றி, எல்லாத் தொழில் நிறுவனங்களுக்கும் அரசாங்கம் ஆதாயங்களுக்கு வழி வகுக்கின்றது. இதனால் இலாபமில்லாத நிறுவனங்களும் தங்கள் பங்குச் செலவைத் தாங்கவேண்டும். இரண்டாவதாக நிகர வருமானத்தை வரியின் தளமாகப் பயன்படுத்தினால், கணக்கெழுதும் முறைகளில் ஒரே படித்தான தன்மையை வற்புறுத்த வேண்டியது இன்றியமையாததாகும். இதனால் பதிவாகாத் பல்வகை நிறுவனங்களிலும் நிகர் வருமானம் ஒரே முறையைப் பின்பற்றி நிர்ணயிக்கப்படும். பல்வகை சிறிய நிறுவனங்களின்மீது ஒரே படித்தாகக் கணக்கெழுதும் முறையைத் திணிப்பது, செயல் முறையில் முடியாதாகையால், மொத்த வருமானத்தைத் தளமாக மாநிலங்கள் மேற்கொண்டிருக்கின்றன.[10] கார்ப்பரேஷன்களிடையே நிகர வருமானத்தைக் கணக்கிடுவதில் ஒரே வகையான முறை கையாளப்படுகிறது. ஏனெனில், கூட்டாட்சி கார்ப்பரேஷன் வருமானவரிக்கு ஒரே படித்தான கணக்கிடும் முறை வேண்டப்பெறுகிறது. ஆனால், எக் காரணத்தை முன்னிட்டேனும், நிகர வருமானத்திலிருந்து மொத்த வருமானத்திற்கு மாறுவதால், வரியின் அடிப்படைத் தன்மையே மாறுகிறது. தொழிலின் நிகர வருமானத்திலிருந்து தொழில் நிகர வருமானவரி செலுத்தப்படுகிறது. ஆனால் 'தொழில்' மொத்த வருமான வரியைச் செலுத்துபவர்கள் முக்கியமாக நுகர்வோர்களே. ஆகவே இவ் வரியைத் தொழில் வரி என்றே சொல்லக்கூடாது[11].

மூலதனப் பங்கு வரிகள் (Capital Stock Taxes): பொதுக் கார்ப்பரேஷன்களின் மூலதனப்பங்கு அல்லது நிகர மதிப்பின்மீது ஏறக்குறைய ஒவ்வொரு மாநிலமும் ஏதாவது ஒரு வகை வரியை விதிக்கிறது. இவ் வரிகளை எவ்வளவு தூரம் தொழில் வரிகளாகச் சட்டசபை உறுப்பினர்கள் பயன்படுத்தியிருக்கிறார்கள்

என்று கூறுவது கடினம். பல எடுத்துக்காட்டுகளில் இவ் வரிகளி ஞல் சிறு வருவாயே கிடைக்கிறது. கார்ப்பரேஷன்களின்மீது உடைமை வரிகளை விதிப்பதற்குப் பதிலாக இவற்றைப் பல மாநிலங்கள் பயன்படுத்துகின்றன. ஆயினும், பல மாநிலங்களிலும் இக் 'கார்ப்பரேஷன் பட்டய வரி' (Corporation franchise tax) தொழில் வரியாகவே விளங்குகிறது. கார்ப்பரேஷன் வடிவில் உள்ள நிறுவனங்களின்மீது பிரத்தியேக ஆதாயங்கள் அளித்த தற்காகவே இவ் வரி விதிக்கப்படுகிறது. மொத்த வருமான வரியைவிட, இவ் வகை வரியே சாத்தியமானவிடத்து, 'திறனை' முழுதும் புறக்கணிக்கிறது. ஏனெனில், மொத்த வருமானத் திற்கும் நிகர வருமான்த்திற்கும் உள்ள வீதத்தைவிட, மூலதனத் திற்கும் நிகர வருமானத்திற்கும் உள்ள வீதம் பெரிதும் வேறு படும்.[12]

பிரத்தியேக வகைத் தொழில்களின் வரிவிதிப்பு (Taxation of Special Types of Business) : பொதுவசதி தொழிற்றுணிவுகள்மீது மொத்த வருமானத் தொழில் வரியைப் பரவலாக உபயோகிப்பதை நாம் முன்னரே கண்டோம். இதற்குக் காரணம் இத் தொழிற்றுணிவு களின் சிறப்பியல்பே யாகும். வேறு பல தொழில் பிரதேசங்களி லும் பிரத்தியேக வகைத் தொழில் வரிகள் விதிக்கப்படுகின்றன. இவற்றில் பாங்குகளும், இன்சூரன்ஸ் கம்பெனிகளும் குறிப்பிடத் தக்கவை. தேசியப் பாங்குகள்[13]மீது மாநிலங்கள் எத்தகை வரிகளை விதிக்கலாம் என்பதைக் கூட்டாட்சிச் சட்டம் வரையறை செய்வதால், மாநிலங்களின் பாங்கு வரி விதிப்பில் பல தனிப் பண்புகள் காணக்கிடைக்கின்றன. தேசியப் பாங்குகள் மீது மாநில வரிவிதிப்புப் பற்றிய சட்ட வரம்புகளின் சிக்கல்களை நாம் ஆராயப் போவதில்லை. ஒரு பக்கத்தில் பல்வகைத் தொழில் களின் மீதிருக்கும் வரிப்பளுவுகளைச் சமனுக்கும் விருப்பத்திற்கும், மற்றொரு பக்கத்தில் தேசியப் பாங்குச் சட்டத்தின் (National Banking Act) மூலம் மாநிலங்கள் பாங்குகளின்மீது வரிவிதிப்ப தற்கு வரம்புகள் விதிக்கப்பட்டதற்கும் இடையே ஒரு வழியை உண்டாக்குவது பாங்குகளின்மீது மாநிலவரி விதிப்பும் பிரச்சினை யாகப் பொதுவாக இருக்கிறது[14].

இன்சூரன்ஸ் கம்பெனிகளின்மீது வரிவிதிப்பதால் சில பிரத்தி யேகப் பிரச்சினைகள் எழுகின்றன. இதற்குக் காரணம் கூட்டாட்சி யின் கட்டுப்பாடுகளன்று. ஏனைய‌த் தொழில்களின்[15] பேரில் விதிக்கும் வரிப்பளுவுக்குச் சமமான வரிப்பளுக்களை ஏற்படுத்தும்

பிரத்தியேக வரித்தளங்களைப் பொறுக்கி யெடுப்பதன் இன்றியமையாமை காரணமாகவே இப் பிரச்சினைகள் எழுகின்றன. ஏற்ற இறக்கமுள்ள இன்சூரன்ஸ் பாத்தியதைகளைச் சமாளிப்பதற்கு வேண்டிய ரிசர்வுகளின் தொகையை முன்கூட்டியே சொல்ல முடியாதாகையால், நிகர வருமானத்தைக் கணக்கிடுவது கடினம். மேலும், பரஸ்பரக் கம்பெனிகளின் (mutual companies) நிகர வருமானத்தை வரி நோக்கங்களுக்காகக் கணக்கிடுவது ஏறக்குறைய முடியாத காரியம். பரஸ்பரக் கம்பெனிகளில் மூலதனப்பங்கு இன்மையால் தொழில் பட்டய வரி (business franchise tax)க்கு மக்கள் விரும்பும் தளம் கிடைப்பதில்லை. நிகரப் பிரிமியத் தொகைகளின் (net premiums) மீதே மிகச் சாதாரண வகை இன்சூரன்சு தொழில் வரி விதிக்கப்படுகிறது. அதாவது வரி விதிப்பதற்கு முன்பு மொத்தப் பிரிமிய வரவுத் தொகைகளிலிருந்து திருப்பிக் கொடுக்கப் பட்ட சில அல்லது எல்லாப் பிரிமியத் தொகைகள், வஜாக்கள் (cancellations) இலாப ஈவுகள், மீள் இன்சூரன்சு பிரிமியத் தொகைகள் இவற்றைக் கழிக்கவேண்டும். இன்சூரன்சு தொழிலுக்கே உரித்தான சில செயல்முறைகளையும் நாம் எடுத்துக் கொள்வதால் ஓரளவு வரித்தளம் மாறுபாடடைந்தாலும், இவ்வாறு இத்தளம் மொத்த வருமானத்தையே ஒத்திருக்கிறது.

**மாநிலத் தொழில் வரிகளின் உற்பத்தித் திறன் (Productivity of State Business Taxes) :** மாநிலத் தொழில் வரிகளின் வருவாய் உற்பத்தித் திறனைப் பற்றிச் சிறிதே திட்டவட்டமான தகவல் தரமுடியும். இதற்குப் பல மாநிலங்களிலிருந்தும் ஒப்பிடக் கூடிய எடுகோள்களை (விவரங்களை)ச் சேகரிப்பதில் உள்ள சிரமமும், கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களில், பிறவகை வரிகளினின்றும் உண்மையான தொழில் வரிகளை வேறுபடுத்திக் காட்டுவதில் உள்ள சிரமமும் காரணங்களாகும். ஆயினும், மாநில வருவாய் வசூல்களில் தொழில் வரிகளின் பங்கு அற்பமே என்பது முற்றிலும் தெளிவாகும். 1939-ல் மாநிலங்களின் வரி உரிம வருவாய்களில் 3·5 சதவிகிதமே மாநிலக் கார்ப்பரேஷன் வருமான வரிகளின் மூலம் கிடைத்ததென்று வரி ஆட்சியாளர்களின் கூட்டமைப்பு (Federation of Tax Administrators) அறிவித்தது.[16] இதில் ஒரு பகுதியை தனியாள் வருமான வரிகளை மூலத்தில் வசூலிப்பதற்கு வரவு வைக்க வேண்டும். பதிவாகாத தொழில்களிலிருந்து மொத்தமாக வரிவசூல் செய்யப்பட்ட சிறிய தொகைகளைக் கூட்டி ஒருவேளை தொழிலின் மொத்த வரி வருவாய்களைக் கணக்கிட வேண்டும். 1942-ல் இப் புள்ளித் தொகை, மொத்த வரி, உரிம வருவாய்களில் 7 சதவிகிதமாகவும், 1958-ல் சுமார் 10 சதவிகிதமாகவும்

உயர்ந்தது. பொது அல்லது சிறப்புத் தொழில் வரிகளிலிருந்து கிடைப்பதைக் காட்டிலும். கட்டணங்கள், உரிமக் கட்டணங்கள் (license charges) இவற்றிலிருந்து மாநிலங்களுக்குக் கூடுதல் வருவாய்கிடைக்கின்றது.

கூட்டாட்சித் தொழில் வரிகள் (Federal Business Taxes)

எல்லோரும் தொழில் வரிவிதிப்பை மாநில, தல அரசாங்கங்களின் ஏகபோக உரிமையாகப் பொதுவாகக் கருதுகிறார்கள். இந் நம்பிக்கை, தொழில் வரிவிதிப்பின் ஆதாயக் கொள்கை அடிப்படையினின்றும் பிறந்ததாகும். தொழில்களுக்கு அளிக்கப்படும் ஆதாயங்கள், தலையாயதாக மாநில, தல அரசாங்கங்களினின்றே பிறப்பதாக அவர்கள் நம்புகின்றனர். இவ் வாதாயங்களில் பொது வகை, சிறப்பு வகை இரண்டும் அடங்கும். அண்மைக் காலத்தில் பொருளாதார விவகாரங்களில் கூட்டாட்சி காட்டும் அக்கறையைப் பார்த்த பிறகு, பொருளாதாரச் சூழ்நிலையை உருவாக்குவதற்குத் தலையாயதாக மாநில, தல அரசாங்கங்களே காரணம் என்று இனியும் கூறுவது ஐயத்திற்கிடமானதே.. பொருளாதார விவகாரங்களிலும், தொழில் விவகாரங்களிலும் தனக்குத் தலையாய இடத்தைக் கூட்டாட்சி தேடிக்கொண்ட காலத்திலிருந்து (1930-லிருந்து), கூட்டாட்சியின் தொழில் வரிவிதிப்பும் விரிவடைந்து வந்திருக்கின்றது. இவ் வளர்ச்சி ஓரளவு தற்செயலாகவும், ஓரளவு இன்றியமையாததாகவும் இருக்கின்றது. இவ் வளர்ச்சியில் போர் வரியையும், மிகை இலாப வரியையும் ஏறக்குறைய முற்றும் பற்றியவையே தற்செயலான கூறுகளாகும். இன்றியமையாத கூறுகள் கார்ப்பரேஷன் வருமான வரியைப் பற்றியன. இவ் வின்றியமையாமைக்குக் காரணம் வருவாய் முடைகளேயன்றித் தொழில்களுக்குக் கூட்டாட்சி தந்த ஆதாயங்களைப் பொறுத்த காரண விளக்கமன்று. கார்ப்பரேஷன் வருமான வரி, மிகை இலாபவரி இவை யிரண்டும் கூட்டாட்சி[17] விதிக்கும் தொழில் வரிகளாகும்.

**கூட்டாட்சியின் கார்ப்பரேஷன் வருமானவரி :** இலாப ஈவுகளின் மீதான தனியாள் வருமான வரியை மூலத்திலேயே வசூலிப்பதற்கு ஏற்றதொரு கருவியாக 1913-ல் கார்ப்பரேஷன் வருமானவரி எங்ஙனம் உபயோகப்படுத்தப்பட்ட தென்பதைப் பதினாறும் அதிகாரத்தில் நாம் பார்த்தோம். இரண்டு வரிகளும் முதல் உலகப் போரின்போதுதான் முதன் முதல் விதிக்கப்பட்டன என்றாலும் இவை யிரண்டும் வெவ்வேறு பாட்டைகளில் நடந்து வந்துள்ளன. இதனால் பிற வருமானங்களைக் காட்டிலும்

இலாப ஈவு வருமானங்களின்மீது கனமான பளுக்கள் சுமத்தப் பட்டன. 1936ஆம் ஆண்டைய சட்டம் இயற்றப்படும் வரை இவ் விரண்டு வரிகளுக்கும் இடையே பூரண வேற்றுமை இல்லை. இச் சட்டத்தினுல் முந்திய ஆண்டில் இயற்றப்பட்ட கார்ப்பரேஷன் மேல் வரி தொடர்ந்து நீடித்ததுமன்றி, கார்ப்பரேஷன் நிகர வருமானம் என்ற அளவில் கார்ப்பரேஷன் வரியையும் செலுத்தியதற்குப் பின்பு, தனியாட்கள் கைக்குக் கிட்டிய இலாப ஈவுகளும், தனியாள் வருமானவரிக்கும், மிகைவரிக்கும் ஆளாயின என்பதை நாம் நினைவுகூர வேண்டும். இங்ஙனம் வருமானவரி முறையைப் பிளந்து ஒரு பூரணக் கூட்டாட்சித் தொழில் வரியைப் படைத்தது பகுத்தறிவுப் பகுத்தாய்வினுல் விளைந்ததென்று யாரும் கூற முடியாது. இது வருவாய் நசையினுல் உந்தப்பட்டு எடுக்கப் பட்ட சந்தர்ப்ப நடவடிக்கையே யாகும்.

தனியாள் வருமான வரிக்குப் பயன்படுத்தப்படும் கணக்கு முறைகளையே பெரும்பாலும் கார்ப்பரேஷன் வருமான வரியும் பிரயோகிக்கிறது. கார்ப்பரேஷனின் மொத்த வரவுகளில் (அல்லது விற்பனைகள்) இருந்து உற்பத்தியின் ஆக்கச் செலவுகள், நிறுவனத்தின் பத்திரக்கடன் (bonded debt) மீதான வட்டி, வரிகள் ஈடு செய்யப்படாத இழப்புகள், அளிப்புகள், வரியிலா அரசாங்கக் கடன்பத்திரங்களின் மீதான வட்டி, பிற வரிக்குள்ளான கார்ப்பரேஷன்களிலிருந்து கிடைத்த இலாப ஈவுகளில் 85 சதவிகிதம் இவற்றைக் கழிக்க வேண்டும். போர்க் கருவிகள் உற்பத்திக்கு வேண்டிய எந்திரங்கள், தளவாடங்கள் வாங்கியதற்குக் கடன் தீர நிதி சேர்த்தலுக்குப் (amortization), பிரத்தியேகத் தள்ளுபடி செய்வதற்கு 1951ஆம் ஆண்டுச் சட்டம் வகை செய்கிறது. மொத்த வருமானத்திலிருந்து ஐந்தாண்டுகளுக்கு ஆண்டுதோறும் அவ்விதத் தளவாடத்தின் ஆக்கச் செலவில் 20 சதவிகிதத்தைப் பிடித்தம் செய்து நிகர வருமானத்தைக் கண்டு பிடிக்கலாம்[18]. நிகர மூலதன ஆதாயம் வருமானமாகச் சேர்க்கப்பட்டு சாதாரண நிகர வருமானத்திற்கு என்ன வீதங்கள் பிரயோகம் செய்யப்படுகின்றனவோ அதே வீதங்கள் மூலதன ஆதாயத்துக்கும் பிரயோகிக்கப்படுகின்றன. ஆனுல், நிகரக் குறுங்கால மூலதன இழப்புக்கும் மிகையாக நிகர நெடுங்கால மூலதன ஆதாயம் இருக்குமென்றுலும், இதனுல் குறைந்த வரியையே செலுத்தவேண்டி இருக்குமென்றுலும் இம் மிகையை 25 சதவிகிதம் வீதாச்சார வீதத்தில் வரிசெலுத்த வேண்டிய மாற்று முறையைக் கையாளலாம். எந்த ஆண்டிலும் பிற வருமானத்திலிருந்து நிகர மூலதன இழப்பைப் பிடித்தம் செய்ய முடியாது. ஆயினும், மிகை மூலதன இழப்புகளை ஐந்தாண்டுகளுக்கு முற்பட்டு எடுத்துச் சென்று

அவ் வாண்டுகளின் மூலதன ஆதாயங்களிலிருந்து கழிக்கலாம். 1951ஆம் ஆண்டுச் சட்டம் இயற்றப்பட்டதிலிருந்து கார்ப்ப ரேஷன் சாதாரண வரிவீதம் 30 சதவிகிதமாக இருந்து வருகிறது. 25,000 டாலருக்கு[19] மேற்பட்ட வரிதாங்கு வருமானத்திலிருந்து வீதாச்சார வீதத்தில் 20 சதவிகிதம் மேல்வரி விதிக்கிருர்கள்.

தெரிந்தெடுக்கப்பட்ட அண்மை ஆண்டுகள் சிலவற்றிற்குக் கூட்டாட்சிக்குக் கார்ப்பரேஷனின் வருமான வரியின் வருவாய் முக்கியத்துவத்தை 34ஆம் அட்டவணை காட்டுகிறது. இப் புள்ளித் தொகைகள் முற்றும் ஒப்பிடத்தக்கன அல்ல என்பதை வாசகர் தெரிந்துகொள்வார். ஏனெனில், 1936-க்கு முன்பு மூலத்தில் இலாப ஈவுகளில் தனியாள் வருமான வரிகளை வசூலிப் பதைக் கார்ப்பரேஷன் வருமானவரி வருவாய்களில் ஒரு பகுதி பிரதிபலிக்கிறது. இரண்டாம் உலகப் போரின்போது ஒப்பு மையில் இதன் முக்கியத்துவம் குறைந்தது. தனியாள் வருமான வரி, மிகை இலாபவரி, பலவகை ஆயத்தீர்வைகள் இவற்றினின்றும் கிடைத்த வருவாய் கணிசமான அளவு ஏறியதனுல் அல்லாது கார்ப்பரேஷன் வரி வருவாய்களில் சார்பிலாக் (absolute) குறைப்பு ஏற்பட்டதால் அன்று. எடுத்துக்காட்டாக 1945-ல் கார்ப்ப ரேஷன் வருமானவரி வரவுகள் சுமார் 5 பில்லியன் டாலராகும். அதே ஆண்டில் தனியாள் வருமான வரியிலிருந்து சுமார் 19 பில்லியன் டாலரும், மிகை இலாப வரிகளிலிருந்து சுமார் 11 பில்லியன் டாலரும், பலவகை ஆயத் தீர்வைகளிலிருந்து சுமார் 7 பில்லியன் டாலரும் கிடைத்தன[20]. 1945-லிருந்து கார்ப்ப ரேஷன் வருமான வரி ஒப்புமையில் முக்கியத்துவம் பெற்றதற்குப் பல காரணங்கள் உள. போர்ப் பிற்கால ஆண்டுகளில் கார்ப்ப ரேஷன் வெளிப்பாடு பெரிதும் பெருகிற்று; விலைகளும் ஏறிக் கொண்டே இருந்தன. இக் காலத்தில் கார்ப்பரேஷன் வரி வீதங்கள் பெரிதும் அப்படியே யிருந்தன. இதனுல் இவ் வரி மூலம் கிடைத்த வருவாய்த் தொகையும் கணிசமான அளவு ஏறியது. மேலும் 1948-ல் தனியாள் வருமானவரி வீதங்கள் குறைக்கப் பட்டன. கொரியாப் போரின் விளைவாகத் தனியாள் வருமான வரியில் கூடுதல் வீதங்கள் விதிக்கப்பட்டன. ஆனுல் இவ் வீதங்கள் 1950ஆம் நிதியாண்டில்தான் அமுலுக்கு வந்தன. 1946ஆம் நிதியாண்டில் போர்க்காலத்திய மிகை இலாபவரி ரத்து செய்யப் பெற்றது. கொரியாப் போர்க்காலத்தில் விதிக்கப்பட்ட புதிய மிகை இலாப வரிகள் 1955-க்கு முன்பே ஒழிந்தன.

இப் புள்ளித் தொகைகளிலிருந்து கூட்டாட்சித் தொழில், வருமான வரியைப் பெரிதும் சார்ந்திருப்பது தெரிகிறது. போகூழ்

## அட்டவணை 34

### தெரிந்தெடுக்கப்பட்ட ஆண்டுகளுக்கு, மொத்த அக வருவாயில் கூட்டாட்சிக் கார்ப்பரேஷன் வருமான வரியின் வரவுகள்[0]

| ஆண்டு | கார்ப்பரேஷன் வருமான வரி வரவுகள் (மில்லியன் டாலரில்) | மொத்த அக வருவாய் வரவுகளின் சதவிகிதம் [a] |
|---|---|---|
| 1923 | 937 | 54·8 |
| 1928 | 1,292 | 46·3 |
| 1932 | 630 | 40·4 |
| 1939 | 2,151 | 41.5 |
| 1945 | 4,880 | 11·1 |
| 1950 | 10,854 | 27·5 |
| 1955 | 18,265 | 27·6 |
| 1959 | 18,092 | 22·7 |

[0] இப் புள்ளித் தொகைகள் 1924, 1933, 1940, 1946, 1947, 1951ஆம் ஆண்டுகளின் புள்ளிவிவர அறிக்கையிலிருந்தும் (*Statistical Abstract*) 1956ஆம் ஆண்டுக் கருவூல ஆண்டறிக்கை (Treasury *Annual Report*) யிலிருந்தும், 1959 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் கருவூல அறிக்கை (*Treasury Statement*) யிலிருந்தும் எடுக்கப்பட்டன.

[a] அகவருவாய் என்பது சுங்கத்தீர்வைகளும், வரியிலா வருவாயும் (non-tax revenue) ஒழிந்த பிற வருவாய் அனைத்துமாகும்.

காரணமாக பகுத்தறிவுக்கொத்த வரி நீதியின் முகாந்தரங்களைக் கொண்டோ, ஆதாய அல்லது திறன் கொள்கைகளைக் கொண்டோ, இங்ஙனம் சார்ந்திருப்பதைச் சரியென நிலைநாட்ட முடியாது. கார்ப்பரேஷன் வடிவில் இயங்கும் நிறுவனங்களுக்கு மட்டுமே கூட்டாட்சியின் தொழில்வரி பிரயோகமாகிறது என்பதையும் நாம் சிறப்பாகக் குறித்தல் வேண்டும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பதிவாகாத தொழில்களின் வருமானமும், அவற்றுக்குத் தொழிலில் உள்ள பங்கும் அற்ப சொற்பமானதன்று. இருப்பினும் இந் நிறுவனங்களுக்குக் கூட்டாட்சியின் தொழில் வரி விதிப்பிலிருந்து விலக்குக் கிடைத்திருக்கின்றது. தொழில்மீது தனியாக வரிவிதிப்பது நியாயம் என்றால், எல்லா வகைத் தொழில்களின் மீதும் ஒப்புமையான வரிகளை விதிக்க வேண்டும் என்று நமக்குத் தோன்றுகிறது. ஆனாலும் இவ்வாறு கூட்டாட்சியும் செய்யவில்லை; பல மாநில அரசாங்கங்களும் செய்யவில்லை.

**கூட்டாட்சியின் மிகை இலாப வரி**[21] : மிகை இலாபவரி போர்க்காலத்தில் தோன்றிய ஒன்று. சமாதான காலத்தில் 'மிகை' இலாபங்களின் பேரில் வரிவிதிப்பதைப் பொதுவாகத் தனியார் தொழிற்றுணிவு முறை எந்த அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டு இயங்குகின்றதோ அதற்கு முரணானதாகக் கருதுகின்றோம். சமாதான காலத்தில் கூடுதலான இலாபங்கள் கிடைத்தால், அவற்றை ஆபத்தேற்பை வெற்றிகரமாகக் கொண்டு முடித்தற்குக் கிடைத்த பரிசாகவோ, அல்லது போட்டிச் சூழ்நிலைகளில் திறமையாக நிருவாகம் நடத்தியதற்குக் கிடைத்த பரிசாகவோ கொள்ளலாம். ஆபத்தேற்பில் பல முறையும் பெருத்த இழப்புகள் ஏற்படுவதும் உண்டு. தற்காலிகமாகக் கிடைக்கும் கூடுதல் இலாபங்கள்மீது ஒரு வரியை விதிப்பது தண்டனை தருவதற்கு ஒப்பாகும். இதனால் ஆபத்தேற்புக்கும் அதிகத் திறமைக்கான முனைப்புக்கும் ஊக்கத்தைக் கெடுத்ததாக ஆகும். எந்தத் தொழிலிலாவது இயல்பிகந்த கூடுதல் இலாபங்கள் தொடர்ந்து நெடுங்காலத்திற்கு இருந்தால், முற்றுரிமைக்கு எதிராகச் சட்டம் இயற்றுவதன் வாயிலாகவே இதைத் தகர்ப்பது ஏற்ற வழியாகும்.

ஆனால், போர்க்காலத்திய நிலைமைகள் வேறு (நெருக்கடியான காலங்களில் நிதிக் காரணங்கள் மிக முக்கியம்). வருவாய் முடையே மிகவும் கொடியது. மேலும், போர்க்காலத்தில் சமுதாயத்தின் பெரும்பகுதியும் பெருத்த தியாகங்களைச் செய்ய வேண்டி இருக்கின்றது. இவ்வித தேசீய நெருக்கடியான காலத்தில் மிகை இலாபங்களைப் பெறுதல் போரிடும் மனவுறுதிக்குக் கேடு பயப்பதாகவும், அநீதியாகவும் இருப்பதை யாவரும் பொதுவாக ஒத்துக்கொள்கின்றனர். முதல் உலகப்போரின்போது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மிகை இலாப வரிகளைப் போட்டதற்கு இரு காரணிகள்தான் முழுதும் காரணங்களாகும். அவை யாவன: வருவாய் முடையும், போர்க்காலத்தில் 'கொள்ளை லாபம் அடித்தவர்களின்' மீது பொதுமக்களுக்கு ஏற்பட்ட வெறுப்பும் (கொதிப்பும்), இரண்டாம் உலகப் போரின்போது இலாபவரி விதிப்புக்கும் இவையேதான் தலையாய காரணங்கள் ஆகும். இவற்றுடன் சில பொருளாதார நயங்களும் வாதமாகக் கூறப்பட்டன. விலைவாசிகளில் கடுமையான எற்றத்தைத் தடுக்க வேண்டுமென்று அனைவரும் விழைந்தார்கள். பணவீக்க அழுத்தம் அதிகரிப்பதைத் தடுக்கவும், அவசியமல்லாத உற்பத்தியில் முதலீடு செய்து பற்றுக்குறையாக உள்ள உற்பத்தி வளப்பொருள்களை வீணாக்குவதைத் தடுக்கவும், தனியார் கையிலிருந்து நிதிகளை அரசாங்கம் அகற்றுவதும், மிகை இலாப வருமானங்களைத்

தனியாள் கையிலிருந்து அரசாங்கத்தின் கைக்கு மாற்றுவதும் இன்றியமையாதன வாயின. சமுதாயத்திற்கு இழைக்கப்படும் அநீதியைத் தடுப்பதற்கு மட்டுமன்றி, பற்றுக்குறையாகவும், மிகுந்த அமைப்புடனும் விளங்கும் தொழிலாளிகளுக்குக் கூலிகளை உயர்த்த வேண்டும் என்ற முனைப்பு ஏற்படாதிருக்கவும், போர்க் காலத்தில் கொள்ளை இலாபம் அடிப்பது தவிர்க்கப்பட வேண்டும். அடிப்படை நியாயத்தின் பேரிலும், வாழ்க்கைச் செலவுகள் ஏறியது காரணமாகவும், தொழிலாளிகள் கூலி உயர்வு கேட்கக் கூடும். ஆயினும், கடுமையான பணவீக்கத்தைத் தடுப்பதற்கான பல கருவிகளில் இதுவும் ஒன்று என்று கருதுகிறார்களே தவிர, வல்லுநர்கள் மிகை இலாப வரிவிதிப்பைக் கொள்ளை இலாபத் திற்கு எதிரான கருவியாகக் கருதவில்லை.

முதல் உலகப்போரின்போது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மிகை இலாப வரிவிதிப்பு ஆரம்பமாயிற்று. போர்த்தளவாடங் களைச் செய்பவர்களின்மீது ஒரு தூய போர் இலாபவரி (war profit tax) விதித்தார்கள். 1916ஆம் ஆண்டைய சட்டத்தின்படிப் போர்த்தளவாடங்கள் விற்பனையின் மூலம் கிடைக்கும் நிகர இலா பங்கள்மீது ஓர் ஆயத்தீர்வையை அரசாங்கம் விதித்தது. 'போர்த் தளவாடங்கள் விற்பனை' என்ற சொற்றொடருக்கு ஒரு குறுகிய விளக்கம் தந்தார்கள். போர்த் தளவாடங்களைச் செய்வோர் சிலருக்கு மட்டுமே போர் இலாபங்கள் கிட்டவில்லை என்பது விரைவிலேயே நிரூபணமாயிற்று. 1917ஆம் ஆண்டில் இயற்றப் பட்ட இரு சட்டங்களின்படி போாத்தளவாடங்களை விற்பவர்கள் ஒழிந்த பிறரும், இலாப வரிவிதிப்புக்கு உள்ளாயினர். இவற்றில் முதலில் இயற்றப்பட்ட சட்டம் (மார்ச்) கூட்டு வியாபாரங்களுக் கும், கார்ப்பரேஷன்களுக்கும் மட்டுமே செல்லுபடியாயிற்று, இதைக் கூடுதல் இலாப (high profits) அல்லது மிகை இலாப (excess profits) வரி எனலாம். ஏனெனில், முதலீடு செய்யப்பட்ட மூலதனத்திற்கு 8 சதவிகிதத்திற்கு மிகையாக இலாபம் பெற்ற நிறுவனங்களே இவ் வரிக்கு உள்ளாயின. இரண்டாவது சட்டம் (அக்டோபர்) ஒரு போர் இலாப வரி (war profits tax)க்கு வகை செய்தது. 'சாதாரண' (normal) ஆண்டுகளான 1911-1913 இவற்றின் சராசரி இலாபத்திற்கு மிகையான இலாபமே இவ் வரியின் தளமாகும். ஆயினும், முதலீடு செய்யப்பட்ட மூலதனத் திற்கு 9 சதவிகிதத்திற்கு உட்பட்ட இலாபங்களையே சாதாரண இலாபங்கள் என்று இச் சட்டம் கொண்டு, கூடுதல் இலாபங்களைப் பற்றிய தகுதியையும் புகுத்தியது. இவ் வரி எல்லா வகைத் தொழில் நிறுவனங்களுக்கும் செல்லுபடியாகும். 1918ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட வருவாய்ச் சட்டத்தின்படி 'போர் இலாப

மிகை இலாப வரி' என்ற பெயரினைக் கொண்ட ஒரு புதிய முறை தொடங்கியது. இச் சட்டம் கார்ப்பரேஷன்களுக்கு மட்டுமே பிரயோகம் ஆயிற்று. 1911-1913-ல் அடைந்த சராசரி இலாபத்திற்கு மேற்பட்டு எந்த வரிக்குரிய ஆண்டிலாவது கிடைக்கும் மிகை இலாபம் போர் இலாபவரியின் தளமாகும். முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தில் 8 சதவிகிதத்திற்கு மேற்பட்ட இலாபம் மிகை இலாபவரிக்குத் தளமாகும். இவ் வரிகளில் எது கூடுதலானதோ அதையே வரி செலுத்துவோர் கொடுக்க வேண்டும்.[22]

1921-ல் போர் இலாப வரியும், மிகை இலாப வரியும் ரத்து செய்யப்பட்டன. அவைகள் அமுலில் இருந்தபோது (1917-1922) அவற்றினின்று மொத்தம் 7 பில்லியன் டாலருக்கு மேல் வருவாய் கிடைத்தது. இது அக் காலத்திய கூட்டாட்சியின் வருவாய் வரவுகளில் சுமார் நான்கில் ஒரு பங்காகும்.[23] 1917, 1918 போர் ஆண்டுகளில் மிகை இலாப வரியிலிருந்து கிடைத்த வருவாய், வருமான வரியிலிருந்து கிடைத்த வருவாயைக் காட்டிலும் தூக்கலாக இருந்தது. மிகை இலாப வரியிலிருந்து கிடைத்த 'நிகர' வருவாய்களைப் பற்றிய பகுத்தாய்வில், இலாப வரிகள் இன்றேல், தனியாள், கார்ப்பரேஷன் வருமான வரிகளும் (தனியாள் அல்லது கார்ப்பரேஷன் வருமான வரியும்) உயர்த்தப் பட்டிருக்கும் என்பதற்கு மூன்று காரணங்களைக் குர்ரான் கூறுகிறார். அவையாவன : (1) இலாப வரிகளைச் செலுத்துகையினுல் இலாப ஈவுகளின் பருமன் குறைவதால், தனியாள் வருமான வரியின் தளமும் குறையும். (2) கார்ப்பரேஷன் வருமானவரி நோக்கங்களுக்கு, இலாப வரிகளாகச் செலுத்திய தொகையை நிகர வருமானத்திலிருந்து கழித்துக் கொள்ளலாம். இதேபோல் தனியாள் வருமானவரி நோக்கங்களுக்கும், தனியாள் தொழிற்றுணிவுகளின்மேல் செலுத்திய இலாபவரிகளைக் கழித்துக்கொள்ளலாம். (3) தூக்கலான மிகை இலாப வரியினுல் வரியிலிருந்து தப்பிப்பதும், வரியைத் தவிர்ப்பதும் அதிகமாயிற்று. விளம்பரம், பணியாளர் தொகுதித் தொடர்புகள் (personnel relations) இவற்றிற்கு மிகையாகச் செலவு செய்வதன் மூலம் நிகர வருமானத்தைக் குறைத்தும், மூலதன ஆதாயங்களை ஒத்திப் போட்டும், மூலதன இழப்புகளைப் பணமாக்கியும் இவ் வரிகளைத் தவிர்க்கலாம். இவ் வகை விதிகளினுலும், நடவடிக்கைகளினுலும் வருமான வரியின் மொத்த வருவாய்மீது ஏற்பட்ட விளைவு கணிசமாக இருந்த போதிலும், மிகை இலாப வரி தூக்கலான நிகர வருவாயை ஆக்கித் தந்தது என்பது உண்மையே.

1933-ல் முதன்முதல் விதிக்கப்பட்டு, 1945-ல் வருவாய்ச் சட்டத்தின் மூலம் ரத்து செய்யப்பட்ட அறிவித்த மதிப்பு மிகை இலாப வரியைப் பற்றியும் சிறிது கூற வேண்டும். சமாதான காலத்தில் மிகை இலாபத்தின்மீது வரிவிதிக்க முனைந்த முயற்சி யாக இச் சட்டத்தைக் கொள்ளாது, இச் சட்டத்தை மூலதனப் பங்கு வரியின் பிற்சேர்க்கையாகக் கொள்ள வேண்டும். இரண்டு வரிகளின் ஆயுட்காலமும் ஒன்றேயாகும். ஒரு கார்ப்பரேஷனின் மூலதனப் பங்கின்மீது 0·1 சதவிகிதத்தில் மூலதனப் பங்கு வரியை விதித்தனர். மதிப்பீடு செய்வதில் உள்ள இடர்ப்பாடுகளைத் தவிர்ப்பதற்காக வரியைச் செலுத்தும் கார்ப்பரேஷனே தன் பங்கு களின் மதிப்பை நிர்ணயிக்கும்படி அநுமதிக்கப்பட்டது. வரி நோக்கங்களுக்காகக் குறைந்த மதிப்பீட்டைக் கையாளுவதைத் தவிர்க்கும் பொருட்டு, அறிவித்த மதிப்பு மிகை இலாப வரியை விதித்தனர். அறிவிக்கப்பட்ட மூலதனப் பங்கின் மதிப்பில்[24] 12½ சதவிகிதத்திற்கு மேற்பட்ட இலாபங்கள் அனைத்தின் மீதும் 5 சதவிகித வரி விதித்தனர். பொதுவாக அறிவிக்கப்பட்ட மதிப்பின் மிகை இலாப வரியினால் கிடைத்த வருவாய்களை (1955-ல் 117 மில்லியன் டாலர்) உண்மையில் மூலதனப் பங்கு வரி வருவாய்களாகக் (1945-ல் 372 மில்லியன் டாலர்)[25] கொள்ள வேண்டுமென்று முடிவு செய்வது நியாயமானதே. பேராசிரியர் குரோவ்ஸ் (Professor Groves) இவ் விரு வரிகளைப் பற்றியும் பின்வருமாறு கூறுகிறார் :

> சிக்கல், அதிகப்படியான இணக்கச் செலவுகள் (extra compliance costs), ஒரோவழி, தான்றோன்றித் தனமான விளைவுகள் இவற்றைத் தவிர இவ் வரிகள் வேறொன்றையும் வரிமுறைக்குக் கூட்டுவதில்லை. அவை பெரும் பாலும் சிறிய கம்பெனிகளுக்கு எதிரானவை. உண்மைக்குச் சிறிதும் தொடர்பின்றி ஒரு செய்கைச் சூழ்நிலையில் இவ் வரிகளுக்கான கணக்கீடு நடைபெறுகிறது. அவை உற்பத்தியாளர்களின் மீதான வரி என்பதைக் காட்டிலும், வழக்கறிஞர்களின் கைம்பொம்மை எனலாம். தவறான பாட்டை யில் செலுத்தப்பட்ட வரி விதிப்பவர்களின்[26] கெட்டிக்காரத்தனத்திற்கு அவை முக்கியமான ஒரு நினைவுச் சின்னமாக விளங்குகின்றன.

1940-ல் இரண்டாவது உலகப் போர் மிகை இலாப வரி தொடங்கியது. போரில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் கலந்து கொள்வதற்கு ஓராண்டுக்கு மேல் இருந்த போதிலும், 'குடியாட்சி யின் தளவாடச் சாலை' (arsenal of democracy) ஆக அது வேடம் தாங்கியதால் போர்ப் பொருளாதாரச் சூழ்நிலையை அது ஏற்படுத்தியது. மிகை இலாபவரி தற்காலத்தில் போர்ப் பொரு ளாதாரச் சூழ்நிலையின் இன்றியமையாத உறுப்பாகும். ஒரு

கடுமையான போர் இலாப வரிக்கா, அல்லது ஒரு கடுமையான மிகை இலாப வரிக்கா தன்னை உட்படுத்திக் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்வது வரிசெலுத்துவோரின் விருப்பத்தைப் பொறுத்தது. 1936-1939 ஆண்டுகளுக்கான சராசரி இலாபத்தில் 95 சதவிகிதத்தையோ அல்லது தன்னுடைய முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தில் 8 சதவிகிதத்தையோ[27] தன்னுடைய 'சாதாரண' (இவ்வாறு மிகையல்ல) இலாபமாகத் தெரிந்தெடுத்துக் கொள்ளும் உரிமை அவருக்கு இருந்தது. கார்ப்பரேஷன்கள் மட்டுமே இவ் வரிக்கு ஆளாயின. கார்ப்பரேஷன் வருமான வரியின் கீழ் நிகர வருமானத்தைக் கணக்கிடும் முறையைப் பெரிதும் பின்பற்றியே நிகர இலாபக் கணக்கீடும் செய்யப் பெற்றது.

போர்க் காலத்தில் வீதங்கள் பல மாறுதல்களுக்கு உள்ளாயின. 1940-ல் அவை 25 சதவிகிதத்திலிருந்து 50 சதவிகிதம் வரை படித்தர மாக்கப்பட்டன. 1944-லிருந்து வீதாச்சார வீதமாக 95 சதவிகிதம் விதிக்கப் பெற்றது. ஆனால், கார்ப்பரேஷன் வருமான வரியின் மிகை இலாப வரியும் சேர்ந்து கார்ப்பரேஷன் மேல் வரியின் நிகர வருமானத்தில் 80 சதவிகிதத்திற்கு மேல் போகக்கூடாது என்ற விதியும் இருந்தது. போர் நடந்த ஆண்டுகளில் இவ் வரியினால் கிடைத்த வருவாயைக் கீழே தந்திருக்கிறோம்.[28] முதல் உலகப் போரின்போது விதித்த இலாப வரியைப் போலவே, இவை யெல்லாவற்றையும் நிகர வருவாயாகக் கொள்ள இயலாது. ஆயினும் குறிப்பாகப் பிந்திய ஆண்டுகளில் நிகர வருவாயாகக் கிடைத்த தொகைகள் கணிசமான அளவாக இருந்தன.

| ஆண்டு | வருவாய் (மில்லியன் டாலரில்) |
|---|---|
| 1941 | 192·4 |
| 1942 | 1,670·4 |
| 1943 | 5,146·3 |
| 1944 | 9,482·2 |
| 1945 | 11,147·3 |

இரண்டாம் உலகப்போரின்போது விதிக்கப்பட்ட வரிகளின் சில அமிசங்களை நாம் பார்ப்பது பயனளிக்கும். மிகை இலாப நிகர வருமானத்திற்கு ஏற்றாற்போல முந்திய வீதப்பட்டியல்கள் வளர்வீதமாக இருந்தன. ஆகையினால் அவை தனியாளின் வரி செலுத்தும் திறனுக்கு ஏற்ப சரிக்கட்டப்படவில்லை. ஒரு கார்ப்ப

ரேஷனின் மிகை வருமானத்தின் அளவுக்கு ஏற்றாற்போல தனி யாட்களின் திறன்கள் கணிசமான அளவு இணைக்கப்படவில்லை. 1944ஆம் ஆண்டில் வீதாச்சார வீதவரி விதிக்கப் பெற்றது. இத் துடன் சிறிய தொழிற் றுணிவுகளுக்கு ஒரு சலுகையும் அளித்தனர் (போர்ப் பிற்காலச் சரிக்கட்டுதல்களினால் இது மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கும்). வரிவிதிப்பிலிருந்து விலக்களிக்கப்பட்ட குறைந்த அளவு மிகை இலாபத்தை 5,000 டாலரிலிருந்து 10,000 டாலராக உயர்த்தினர்.[29]

மேற்குறித்தவாறு, மிகை இலாபத்தைக் கணக்கிடுவதில், இரண்டு முறைகளில் ஒன்றை வரிசெலுத்துவோர் தெரிந்தெடுக்க லாம். 1936-1939 தளக் காலக்கூற்றின்போது கிடைத்த சராசரி நிகரவருமானத்தோடு விளம்பரச் செலவுகள் அனைத் தையும் கூட்டிய 'சாதாரண' இலாபங்களைத் தளமாகக் கொண்டது வருமான முறையாகும். இத் தளக் காலக்கூற்றின் போது கிடைத்த 'சாதாரண' இலாபத்தில் தொண்ணூற்றைந்து சதவிகிதத்தை 'மிகை இலாப நிகரவருமானமாகக்' கொண்டனர். இச் சொற்றொடர் (மிகை இலாப நிகர வருமானம்) நம்மைத் தவறான வழியில் ஓரளவு செலுத்தக் கூடியது. இது மிகை இலாப மாகக் கருதப்படாத தொகையைக் குறிக்கிறது. தளக் காலக் கூற்றில் கிடைத்த இலாபங்கள் 'சாதாரண' இலாபத்தைவிடச் சற்றுத் தூக்கலாக இருந்தன என்ற எடுகோளை இது பிரதி பலிக் கிறது. புதிய மூலதனத்திற்குச் 'சாதாரண' வருவாய்க்கு வகை செய்வதற்கு, தளக் காலக் கூற்றிலிருந்து மூலதனத்தில் 8 சதவிகிதம் (இது முற்றும் முன்னுக்குப் பின் முரணானது. ஏனெனில் தளக்காலக் கூற்றிலிருந்து,மிகை இலாப நிகர வருமானத்திலிருந்து 6 சதவிகிதம் மட்டுமே மூலதனக் குறைப்புக்குக் கழிக்கலாம்) மிகை இலாப நிகர வருமானத்துடன் கூட்டப்பட்டது. வரிதாங்கு ஆண்டின் நிகர வருமானத்திலிருந்து 'மிகை இலாப வரவு வைத் தலை'யும் (excess profits credits—மிகை இலாப நிகர வருமா னத்தையும் மூலதனச் சேர்க்கைகளில் 8 சதவிகிதத்தையும் கூட்டிய தொகை), பயன்படுத்தப்படாத மிகை இலாப வரவு வைத்தலை ஈராண்டுகள் முன்னாகவோ அல்லது பின்னாகவோ தள்ளிச் செல்லு தலும், குறிப்பிட்ட விலக்கையும் (இது ஆண்டைப் பொறுத்து 5,000 டாலராகவோ, 10,000 டாலராகவோ அல்லது 25,000 டாலராகவோ இருக்கலாம்) கழித்தால் ஓராண்டின் வரித்தளம் அகப்படும்.

முதலீடு செய்யப்பட்ட மூலதன முறையைக் கணக்கிடுவதற்கு முற்றிலும் வேறான முறையைக் கையாள வேண்டும். இம் முறையை வரிசெலுத்துபவர் தம் விருப்பப்படியோ அல்லது தளக்

காலக்கூற்றில் வரிசெலுத்துவோர் தொழில் நடத்தாத பொழுதுமோ உபயோகிக்கலாம்.[30] இம் முறையில் 'தூக்கலான' அல்லது 'மிகை' இலாபமே பார்க்கப்பட்டது. ஒரு தரமான அல்லது ஏற்ற வருவாயுடன் இலாபங்களை ஒப்பிடுவதன் வாயிலாக மிகை இலாபத் தொகையைக் கணக்கிட்டனர். வரிதாங்கு ஆண்டில் நிறுவனத்தின் நிகர வருமானத்துடன், முதலீடு செய்யப் பட்ட மூலதன முறையைக் கொண்டு வரித்தளத்தை நிர்ணயித் தனர். வரிதாங்கு மிகை இலாபத்தை நிர்ணயிப்பதற்கு இப் புள்ளித் தொகையிலிருந்து மூன்று பிடித்தங்கள் செய்தார்கள். அவையாவன : (1) முதலிடு செய்யப்பட்ட மூலதனத்தின் வருவாயில் ஒரு சதவிகிதம்[31] மிகையாகக் கருதப்படாது 'சாதா ரணமாகக்' கருதப்பட்டது. (2) 10,000 டாலரிலிருந்து 25,000 டாலர் வரை சிறப்பு வரிவிலக்கு (1946-ல் 25,000 டாலர்) அளித்தனர். (3) முந்திய ஈராண்டுகளிலிருந்து உபயோகிக்காத வரவு வைத்தலை முன்னுல் இழுத்துச் சென்றனர்[32]. சுருக்கமாக இவ் வருணனையில் 2-ம், 3-ம் பற்றி விரித்துரைக்க வேண்டிய தில்லை. ஆனுல் 'முதலீடு செய்யப்பட்ட மூலதனம்' எவ்வாறு நிர்ணயிக்கப்படுகிறது என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். கார்ப்பரேஷனின் நிகர மதிப்பின் ஒரு நாளைய சராசரியும் (மூலதனம், உபரி, பங்கீடு செய்யப்படாத இலாபங்கள்), எழுத்து மூலமாகப் பிரதிபலிக்கப்பட்ட கடனில் பாதியும் அதில் அடங் கியது. 1918ஆம் ஆண்டைய சட்டத்தைக் காட்டிலும், மிகை இலாப வரவு வைத்தலில், கடன் வாங்கிய மூலதனத்தில் 8 (6 அல்லது 5) சதவிகிதத்தைக் கூட்டுவது 1918ஆம் ஆண்டுச் சட்டத்தை விட மிகத் தாராளமாக இருந்தது. 1918ஆம் ஆண்டுச் சட்டம் கடன் வாங்கிய மூலதனத்தைச் சேர்ப்பதற்கு வகை செய்யவில்லை. மற்ருெரு பக்கத்தில், கடன் வாங்கிய மூல தனத்தில் பாதிக்குமேல் அநுமதிக்கப்படவில்லை. முதலீடு செய் யப்பட்ட மூலதனத்தில் ஒரு சதவிகிதமே சாதாரண இலாபமாகக் கருதப்பட்டது. இச் சாதாரண இலாபம் அம் மூலதனத்தை உப யோகித்ததற்காகச் செலுத்தப்பட்ட வட்டியைவிட மிகவும் கூடுத லாக இருந்ததே இவ்வாறு கடன் வாங்கிய மூலதனத்தில் பாதிக்குமேல் அநுமதிக்கப்படாததற்குக் காரணமாகும். இவ் வரையரை இல்லாவிடில், சிறு வீதாசாரம் பங்கு மூலதனத் தொகையும் பெரும் வீதாசாரம் கடன் வாங்கிய மூலதனத் தொகையும் உள்ள ஒரு நிறுவனத்தின் சொந்தக்காரர்களுக்கு வரிகளைச் செலுத்திய பின்பு மீதமிருக்கும் இலாபம் பெரும் வீதா சாரம் பங்கு மூலதனத் தொகையும், சிறு வீதாசாரம் கடன் வாங்கிய மூலதனத் தொகையும் உள்ள வேருெரு கம்பெனியை விட மேலானதாயிருக்கும். இவ் வகை விதியால் நிகர வருமானத்தி

லிருந்து கடனைத் திருப்பித் தருவது ஊக்கம் பெறுவதுடன், போர்ப் பிற்காலத்தில் நிறுவனத்தையும் நல்ல வலுவான நிலையில் வைக்க ஏதுவாகும்.

இரண்டாம் உலகப்போரின்போது விதிக்கப்பட்ட மிகை இலாப வரிவிதிப்பில் மேற்கொண்டும் ஒரு விதி பிரத்தியேகப் பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்தது. 'போர் நெருக்கடி வசதிகளை' (war emergency facilities) அமைப்பதிலும், பெறுவதிலும் அல்லது நிறுவுவதிலும் ஈடுபட்ட நிறுவனங்கள் இவ் வசதிகளின் ஆக்கச் செலவை அறுபது திங்களில் கடன் தீர நிதி சேர்க்க அனுமதிக்கப்பட்டன. புதிய போர் உற்பத்தி வசதிகளுக்கு உரமூட்டுவதற்காக இவ் விதியைச் சேர்த்தனர். இவ் வசதிகளின் சேவைக் காலம் ஐந்தாண்டுகளுக்கு மேல் இருக்காது என்று நினைத்தனர். புதிதாக ஆலை விஸ்தரிப்புக்களை மேற்கொள்வதில் உள்ள பெருத்த ஆபத்து, அவை போர் நெருக்கடி தீர்ந்த பின்பு மிகைத் திறமை (excess capacity) இருக்கும் என்ற சாத்தியக் கூறே. கடன் தீர நிதி சேர்த்தலை ஆக்கச் செலவின் ஒரு கூறுகக் கொண்டனர். கார்ப்பரேஷன் வருமானவரி, மிகை இலாபவரி[33] இரண்டின் வரித்தளத்தையும் கண்டுபிடிப்பதற்கு மொத்த வருமானத்திலிருந்து கடன்தீர நிதி சேர்த்தல் படியைக் கழிக்க வேண்டும். இவ் விதியைப்பயன்படுத்திய அளவுக்குச் சமாதான காலத்தில் குறைந்த எந்திர மேற்செலவுடன் உற்பத்தியை மேற்கொள்ளுவதற்கு ஆயத்தமாகக் கார்ப்பரேஷன்கள் வெளிப்போந்திருக்க வேண்டும். கருவூலம் கடன் வாங்கிய நிதிகளிலிருந்து[34] கூட்டாட்சிக் கார்ப்பரேஷன்கள் போர் நெருக்கடி வசதிகளில் சுமார் முக்கால் பங்கு செய்து தந்ததாக மதிப்பீடு செய்திருக்கின்றனர். எஞ்சியுள்ளது தனியாளின் முதலீடாகும். விரைவாகக் கடன்தீர நிதிசேர்த்தலுக்கு வரியில் வகை செய்ததாலும், போர்த் தளவாடங்களுக்கு அரசாங்கம் தாராளமாக விலை கொடுத்ததாலும், சாதாரணமாகத் தனியார் நிறுவனங்களினுல் செய்து தரப்படும் நெருக்கடிக் காலவசதிகளில் ஒரு பெரும் பகுதிக்கு அரசாங்கமே உண்மையில் பணம் செலுத்தியது. மொத்த விளைவைப் பொறுத்த அளவில் போர்க்கால வசதிகள் அனைத்தையும் அரசாங்கமே செய்து தந்து கடன்தீர நிதிசேர்த்தலுக்குப் பிடித்தம் செய்வதைத் தவிர்த்திருந்தால் அரசாங்கத்திற்குச் செலவு குறைவாக ஆகியிருக்கும்.

இறுதியாக ஈராண்டு பின்னுகவோ அல்லது முன்னுகவோ உபயோகித்த மிகை இலாப வரவு வைத்தலை இழுத்துச் செல்லுவதற்கு, மிகை இலாபவரி வகை செய்தது என்பதையும் நாம் பார்த்தோம். 1945ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட வருவாய்ச் சட்டம் 1945, டிசம்பர் 31-லிருந்து மிகை இலாபவரியை ரத்து செய்தது.

இவ் வருவாய்ச் சட்டத்தின் கீழ் 1947ஆம் ஆண்டு ஜனவரி 12க்கு முன்பு ஆரம்பித்த ஒரு வரிதாங்கு ஆண்டுக்கு உபயோகிக்காத மிகை இலாப வரவு வைத்தல்களை அநுமதித்தது. இவ்வாறு 1946 அல்லது 1947ஆம் ஆண்டு இலாபங்களின்மேல் யாதொரு மிகை இலாபவரியும் வசூலிக்கப்படமாட்டாதாயினும், அவ் வாண்டுகளுக்கு மிகை இலாப வரவு வைத்தல்களை முன்கூட்டி எடுத்துச் செல்ல நிறுவனங்களுக்கு அநுமதி தந்தனர். 1946ஆம் ஆண்டிலோ, 1947 ஆம் ஆண்டின் பகுதியிலோ மிகை இலாபவரி அமலில் இருந்த பொழுது மிகை இலாப வரவு வைத்தலுக்குச் சமதையான தொகைகளைச் சில நிறுவனங்கள் ஈட்டாதிருந் திருக்க லாம். இந்த நிறுவனங்கள் 1944-லும் 1945-லும் தாங்கள் செலுத்திய மிகை இலாப வரிகளிலிருந்து, எவ்வளவு தொகை வரவு வைத்தலுக்குக் குறைந்ததோ, அவ்வளவு தள்ளுபடிகள் (rebates) பெறலாம்.

மீள் மாற்றக் காலக்கூற்றில் (reconversion period) நிறுவனங் களுக்கு உதவி அளிப்பதே இவ் விதியின் நோக்கமாகும். 1946-ல் பல நிறுவனங்கள் பெற்ற இலாபங்களில் ஒரு பகுதியோ அல்லது முழுமையுமோ இம் மிகை இலாப வரித் தள்ளுபடிகளிலிருந்தே கிடைத்ததாகக் கார்ப்பரேஷன் அறிக்கைகள் தெரிவிக்கின்றன. 1945ஆம் ஆண்டைய சட்டத்தின் வரியைத் திரும்பவும் கொடுக்கும் விதிகள்தான், 1945-லும் 1946-லும் வேலைநிறுத்தம் நடந்த நிறுவனங்களில், நிருவாகத்தார் தொழிலாளிகளுடன் சமரசத்துக்கு வருவதைத் தள்ளிப்போட்டது என்று தொழிலாளி களின் பிரதிநிதிகள் குற்றம் சாட்டினர். இக் குற்றச்சாட்டு, சில உதாரணங்களில் ஐயத்திற்கிடமின்றி உண்மையாக இருந்தது. விதியின் சதியால் இவ் வழக்குகளில் தொழிலாளர் சார்புடைய ஓர் அரசாங்கமே, தொழிலாளரின் கோரிக்கைகளை, வேலைக்கு அமர்த்துவோர் எதிர்ப்பதற்கு நிதி தந்து உதவியது.

**இரண்டாம் உலகப்போரின்போது விதிக்கப்பட்ட மிகை இலாபவரி அநுபவத்தின் மதிப்பீடு:** போர்க்காலத்தில் பெருத்த வருவாய் திரட்டு வதற்கும் 'போர் இலட்சாதிபதிகளைப்' (war millionaires) படைக்கா திருப்பதற்கும், பண வீக்கத்தைத் தடுப்பதற்கும் இச் சட்டம் வகை செய்தது. இவற்றை அடைவதில் இச் சட்டம் ஓரளவு வெற்றியும் பெற்றது. இச் சட்டத்தின் மூலம் பெருத்த வருவாய்கள் கிடைத் தன. உற்பத்திக்குக் குந்தகம் விளைவிக்காமலேயே வருவாய்கள் இன்னும் கூடுதலாக இருந்திருக்கக் கூடும். வரிகளைச் செலுத்திய பின்பு எஞ்சி இருந்த கார்ப்பரேஷன் இலாபங்களின் வரலாற்றைப் பார்க்கும்பொழுது, இலட்சாதிபதிகளின் வண்டவாளத் தன்மை

தெளிவாகத் தெரிகிறது. இது குரோவின் அறிக்கையில் விளக்கப் படுகிறது. 'மிகத் தூக்கலான வீதங்களிலும் ஆனால் ஒப்புமையில் 'சுளுவான' தளத்துடனும் காங்கிரஸ் ஒரு வரியை விதிக்கும் நாட்டத்திற்கு, போர் மிகை இலாப வரி ஓர் எடுத்துக்காட்டாகும்.'[35] சாதாரண மனிதன், போரினால் இலட்சாதிபதிகள் படைக்கப் படுவது தடுக்கப்பட்டது என்பதைக் கேட்டுப் பூரிப்படையவில்லை. போர்க் காலத்திலும், போர்ப் பிற்காலத்திலும் நிகழ்ந்த தொழிலாளர் நடவடிக்கைகளிலிருந்து போர் இலாபங்கள், வரியினால் கணிசமான அளவு குறைக்கப்பட்டன என்று தொழிலாளர் நிறுவனங்கள் நம்பியதாகத் தெரியவில்லை.

போர்க் காலத்தில் பணவீக்கம் ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டது என்பது உண்மையே. ஆயினும், இதற்குத் தலையாய காரணம் நேரிடையாக விலைவாசிகளின் கட்டுப்பாடும், பங்கீடும் (rationing) அன்றி வரிவிதிப்பு அன்று. மிகச் சிறந்த முறையில் இயங்கியிருந்தால்கூட மிகை இலாப வரியினால் மட்டும் விலைவாசியைக் கட்டுப்படுத்தியிருக்க முடியாது என்பது தெளிவாகும். மிகச் சிறந்த பலனை நல்கும் மிகை இலாப வரிக்கு ஒரு சிறந்த துணைவனும் வேண்டுமென்பது போர் அநுபவத்திலிருந்து வெளியாகிறது. மிகை இலாப வரிக்குத் துணையாக 'மிகை வருமான வரி' ஒன்றைப் பலரும் சிபாரிசு செய்தார்கள். இவ் வரி மிகை இலாப வரிக் கொள்கையைப் பிற வகை வருமானங்களுக்கும், பதிவாகாத தொழில்களினின்று[36] கிடைக்கும் இலாபத்துக்கும் பிரயோகிக்கும். ஆயினும், தனியாள் வருமான வரி வீதங்களை உயர்த்தியும், தனியாள் வரி விலக்குகளைக் கடுமையாகக் குறைத்தும், இதே நோக்கத்தைச் சிறந்த முறையில் ஒருவேளை எய்தியிருக்க முடியும்.[37] கனத்த தனியாள் வருமான வரியை விதித்து மிகை இலாப வரியை ஏன் ரத்து செய்திருக்கக்கூடாதென்ற கேள்வி எழலாம். தனியாள் வருமான வரி விதிப்பிலிருந்து பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் இலாபங்கள் தப்பிப்பதைத் தடுப்பதற்கு அப்போதும் சரி இப்போதும் சரி தனியாள் வருமானவரி ஏற்ற முறையில் அமைந்திருக்கவில்லை என்பதே இதற்கானச் சிறந்த விடையாகும்.

மிகை இலாப வரியை ரத்து செய்ததற்காக வருந்த முடியாது. பிற வருமான வரிகளும் இருந்ததால், முற்றுரிமை இலாபங்களை ஏற்படுவதைத் தடுக்கும் ஒரு கருவியாகவும், இதன் மூலம் முற்றுரிமை ஸ்தாபனம் ஏற்படுவதையும், முற்றுரிமை செயல்முறையையும் தடுக்கும் ஒரு வரியாகவும் இருப்பதுதான் அதனுடைய சமாதான காலத்து ஒரே பயன் என்று தெரிகிறது. ஆயினும், முற்றுரிமைப் பிரசினையைத் தீர்ப்பதற்கு இதைவிடச் சிறந்த

நேரிடை முறைகள் இருக்கவேண்டும். மிகை இலாபவரி கடுமை யானதாக இருந்தால் முற்றுரிமை இலாபம் முழுதும் பரிமுதல் ஆவதுடன் அதே வமயம் ஆபத்தேற்பிற்கும் குந்தகம் விளைவிக்கும்; உற்பத்தித் திறன் மேன்மேலும் அதிகரிப்பதையும் பாதிக்கும். நம் அநுபவத்தைப் பொறுத்தமட்டில் இவ் வரியினால் முற்றுரிமைக்கே இயல்பான நிலையான (சற்றுத் தூக்கலாக இருப்பினும்) இலாப வருமானத்திற்குச் சலுகையும் அதே சமயம் போட்டிப் பொரு ளாதாரத்தில் ஆபத்தேற்பு நிரம்பவும் உள்ள தொழில்களில் முதலீடு செய்து அவற்றிலிருந்து கிடைக்கும் ஏற்ற இறக்கங்களை யுடைய வருமானங்களின்மீது பளுவும் ஏற்படுகிறதென்று ஒருவர் வாதாடலாம். இது நியாயமான காட்சிப் பிரமாணமானால், அண்மைய போரின்போது விதிக்கப்பட்ட வரியை ஒத்த ஒரு மிகை இலாப வரியைச் சமாதான காலத்தில் விதிப்பது முற்றுரிமைக்கு உரம் ஊட்டுவதாகவே முடியலாம்.[38]

**1950 ஆம் ஆண்டைய மிகை இலாப வரி:** கொரியாவில் போர் மூண்டதும், அமெரிக்க ஐக்கிய நாடுகள் அதில் ஆரம்ப காலத்திலேயே தலையிட்டது, அமெரிக்க ஐக்கிய நாடு களில் உடனடியாக பணவீக்க அழுத்தங்கள் ஏற்பட்டதற்கும், பெருத்த போர்ச் செலவுகளுக்கான அறிகுறிகள் தென்பட்ட தற்கும் காரணமாக விருந்தது. அதிபர் சமர்ப்பித்த வரித் திட்டத்தில் தனியாள் வருமானவரி, கார்ப்பரேஷன் வருமான வரி இவைகளை ஏற்றும்படியும், மீண்டும் ஒரு மிகை இலாப வரியை விதிக்கும்படியும் கேட்டுக் கொண்டிருந்தார். இரண்டாம் உலகப் போரின்போது ஏற்பட்ட அநுபவத்திலிருந்து போர் வருவாய்த் திட்டங்களில் ஒரு மிகை இலாப வரியும் முக்கியமான உறுப்பாகும் என்று ஏற்றுக்கொள்ளவேண்டிய நிலை ஏற்பட்டது. மேலும் போர் பிற்காலங்களில் கார்ப்பரேஷன் இலாபங்கள் தூக்கலாகவே இருந்து வந்திருக்கின்றன. 1950ஆம் ஆண்டு ஜூன் திங்களில் மீண்டும் கொரியாவில் போர் ஏற்பட்டதிலிருந்து பணவீக்கமும் ஏற்பட்டது. இதனால் மேலும் தொழில் இலாபங்கள் உயரக்கூடிய நிலை ஏற்பட்டது. கூடுதலான தனியாள் வருமான வரிகளையும், நேரிடையான கூலிக் கட்டுப்பாடுகளையும் பொது மக்களை ஏற்றுக் கொள்ளும்படிச் செய்யவேண்டும் என்றால், ஒரு மிகை இலாபவரிச் சட்டம் இயற்ற வேண்டியது இன்றியமையாததாயிற்று எனலாம்.

ஒரு கார்ப்பரேஷனின் 'மிகை இலாப வரவை' (excess profits credit)த் தீர்மானிப்பதற்கு வழக்கமாக இரு மாறான தளங்களை அரசாங்கம் கையாண்டது. 'வழக்கமான' இலாபம் என்று கருதப் பட்ட இலாபத்தின் பங்கு, மிகை இலாப வரிக்கு உட்படவில்லை.

1946-லிருந்து 1949 வரையுள்ள நான்காண்டுகளில் சிறந்த மூன்றுண்டுகளின் சராசரி நிகர வருமானத்தில் 83 சதவிகிதம் 'வழக்கமான' இலாபமாகக் கொள்ளப்பட்டது. இவ் வாண்டுகளில் பொதுவாகக் கார்ப்பரேஷன்கள் நல்ல இலாபத்தை அடைந்தன. இதனுல் சிறந்த மூன்றுண்டுகளைத் தெரிந்தெடுப்பதால் ஒரு விசால மான வரித்தளம் படைக்கப்படுமென்றும், பிரத்தியேக நிவாரணம் கோரி, வரும் மனுக்களின் எண்ணிக்கை குறையுமென்றும் அரசாங்கம் எண்ணியது. ஆயினும், இச் சராசரியைப் பயன் படுத்துவதால் கம்பெனிக்கு இவ் வாண்டுகளில் பல வகையிலும் ஈட்டம் குறைவாக ஏற்படும்; அதனுல் துன்பத்திற்கு ஆளாகும். எந்தத் தொழிலைச் (industry) சேர்ந்ததோ அந்தத் தொழிலுக் குரிய புள்ளி விவரத்தை கம்பெனி பயன்படுத்திக் கொள்ளலாம். ஒரு கம்பெனி சராசரி வருமான தளத்தைப் பயன்படுத்துவதாக வைத்துக்கொள்வோம். தளக் காலக் கூற்றிலிருந்து கம்பெனி புதிதாக மூலதனங்களைச் சேர்த்திருக்கலாம் அல்லது இழந்திருக்க லாம். இவ்வாருன நிலையில் கம்பெனி தன்னுடைய மூன்றுண்டு சராசரி நிகர வருமானத்திலிருந்து 12 சதவிகிதம் சேர்மானங் களையோ அல்லது குறைப்புகளையோ கூட்டவோ அல்லது குறைக்கவோ வேண்டும். ஆலை விஸ்தரிப்புக்குப் பரிசு தர வேண்டும் என்றும், ஆலை குறைப்புக்குத் (contraction of plant) தண்டனை தரவேண்டும் என்றும் எண்ணியே புதிய மூலதனத்தின் மீது 'வழக்கமான' வருவாய் இவ்வாறு கூடுதலாகக் கணக்கீடு செய்யப்பெற்றது எனத் தோன்றுகிறது.

முதலீடு செய்யப்பட்ட மூலதன முறையையே மிகை இலாபத் தைத் தீர்மானிப்பதற்கு முதற் படியாகக் கொண்டு, சாதாரண இலாபத்தைக் கணக்கீடு செய்வது இரண்டாவது மாற்று முறை யாகும். இம் முறைப்படி ஒரு நிறுவனத்தின் முதலீடு செய்யப் பட்ட மூலதனத்தின் ஒரு பிரத்தியேகச் சத விகிதத்தைச் சட்டம் சாதாரண இலாபம் எனக் கொண்டது (முதலீடு செய்யப்பட்ட மூலதனத் தொகையை அறுதியிடும் முறை சிக்கலானது. அதை இங்கு விவரித்தால் நம்முடைய சர்ச்சைகளுக்குத் தேவையில்லாத பல விவரங்களைக் கொடுக்கவேண்டி வரும்). இம் முறைப்படி முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தில் முதல் 5 மில்லியன் டாலரில் 12 சத விகிதத்திற்கு மேலும், அடுத்த 5,000 மில்லியன் டாலரில் 10 சத விகிதத்திற்கு மேலும், எஞ்சியுள்ளவற்றில் 8 சதவிகிதத்திற்கு மேலும் உள்ள இலாபம் மிகை இலாபம் என்று வரையறுக்கப் பட்டது. போருக்கு முற்பட்ட தளக்காலக்கூற்றில் இலாபங்கள் எத்துணைத் தூக்கலாக இருந்தன என்பதை இத் தாராளத் தள்ளு படிகள் நமக்கு உணர்த்துகின்றன. வளர்ந்து வரும் சிறிய

கார்ப்பரேஷன்களைச் சற்றுத் தாராளமாக நடத்தவேண்டும் என்ற விருப்பமும் இத் தாராளத் தள்ளுபடிகளுக்கு மற்றுமோர் காரண மாகும்.

கார்ப்பரேஷன் வருமானவரி நோக்குகளுக்குக் கணக்கீடு செய்யப்பெற்ற கார்ப்பரேஷனின் நிகர வருமானத்தைத் தளமாகக் கொண்டு மிகை இலாபவரி விதிக்கப்பட்டது. இவ் விலாபங்களி லிருந்து சாதாரண இலாபம் எனக் கொள்ளப்பட்ட பகுதிக்கு மிகை இலாப வரவு வைத்தல் கழிக்கப்பெற்றது. பின்பு மிகை இலாபங்களின்மீது 30 சதவிகிதம் வரி, வீதாச்சார வீதத்தில் விதிக்கட்பட்டது. ஆனால் மிகை இலாப வரவு வைத்தலைக் கழிப் பதற்கு முன்பு இருந்த நிகர வருமானத்தில் 18 சதவிகிதத்திற்கு மேல் மிகை இலாபவரி போகக்கூடாது. இவ் வரியின் உச்ச வரம்பை 18 சதவிகிதம் என்று நிறுவியதால், சில சில்லறைப் புறனடைகளைத் தவிர்த்து, நிறுவனத்தின் பருமம் யாதாயினும், முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தில் 12 சதவிகிதம் வருவாய் பெறுவதற்கு அனுமதிக்கப்பட்டது.

ஓர் எளிய வரித்தளத்திற்கு மிகத் தூக்கலான மிகை இலாப வரி வீதங்களைப் பிரயோகிப்பது அமெரிக்காவின் செயல்முறை என்று இரண்டாம் உலகப் போரின் இறுதியில் பேராசிரியர் குரோவ் குறிப்பிட்டதை நாம் முன்னரே சுட்டிக்காட்டினோம். 1950ஆம் ஆண்டைய சட்டம் 'எளிய' தளத்தையும், ஆனால் ஒப்புமையில் குறைவான வீதத்தையும் பிரயோகித்தது. இச் சட்டம் இயற்றுவதில் மிதப் போக்கைக் காண்பித்ததற்குப் பல கார ணங்கள் கூறலாம். கார்ப்பரேஷன் நிகர வருமானத்தின் மீதான வரி விதிப்பு வீதங்கள் ஏற்கனவேயே கணிசமான அளவு உயர்த்தப் பட்டுவிட்டன என்பது தலையாய காரணமாகும். இதனால் மிகை இலாப வரியைப் பிரயோகிப்பதற்குச் சிறிது இடமே இருந்தது என அரசாங்கம் நம்பியது. பெரும் தாக்குதலை நடத்தும் போரின்றி ஒரு 'நெருக்கடி'யான காலத்தில் தூக்கலான மிகை இலாப வரியை விதிப்பதால் உந்தும் விளைவுகள் (incentive effects) என்னவாகும் என்ற கவலை இரண்டாவது காரணமாகும். பண வீக்கத்திற்கு எதிரான கருவியாகக் காங்கிரஸ் மிகை இலாப வரியைக் கருதவில்லை என்பதும், கூலி உயர்வுகளும் கனத்த நுகர் வோர் செலவுகளுமே தலையாய பணவீக்கச் சக்திகள் என்று காங்கிரஸ் கருதியதும் இதற்குக் காரணமாக இருக்கலாம். மேலும் மிகை இலாபவரியை அமுல் செய்வதிலும் சங்கடங்கள் இருந்தன. நிவாரணம் கோரிப் பல தனியாள் மனுக்கள் வந்தன. வரி செலுத்துவோர்மீது வரி அதிகமாக உறைக்க ஆரம்பித்த

பொழுது இச் சங்கடங்கள் பெருகின. இறுதியாக மிகவும் தூக்க லான கார்ப்பரேஷன் வரிகள் வீண் செலவை ஊக்குவித்தன எனவும், அதனுல் பிடித்தம் செய்யக்கூடிய செலவுகளும் அதிக ரித்தன எனவும், அதனுல் வளங்கள் விரயமாயின எனவும் பொது மக்களிடையே ஒரு கருத்து பரவியது. இவற்றின் விளைவாகப் பணவீக்கத்திற்கு உரமூட்டப்பட்டது; அன்றியும் நெருக்கடிக்கால உற்பத்திக்குப் பற்றுக்குறையாக உள்ள வளப் பொருள்களைத் திறமையாகப் பங்கீடு செய்வதற்கான ஊக்கமும் குறைந்தது. 1950ஆம் ஆண்டைய ஒப்புமையில் மிதமான வரிக்கு இவையே கார்ணங்களாகும். 1954ஆம் ஆண்டின் இறுதியில் மிகை இலாப வரியை நீக்க ஒப்புக்கொண்டதற்கும் இவையே காரணங்களாகும்.

### தொழில் வரிகளின் நிலைப்பாடு

உடைமை, வருமானம், நுகர்வு ஆகியவற்றினின்றும் வேறுகத் தனித்த தொழில் வரிகளின் வகையின் காரண விளக்கத்தை நாம் இதுகாறும் கூறினேம். மாநில, கூட்டாட்சி விதிக்கும் தலையாய வரிகளைப் பற்றியும் நாம் சுருக்கமாக விளக்கினேம். இத் தலையாய வகைகளில் நிகர வருமானவரி, மிகை இலாபவரி, மொத்த வருமானவரி, மூலதனப் பங்குவரி இவை அடங்கும். பதினேன்காம் அதிகாரத்தில் நிகர வருமான வரிகளைப் பகுத் தாய்ந்த பொழுது குறுகிய காலத்தில் ஏன் நிகர வருமான மிகை இலாப வரிகளைப் புரட்டுவதில்லை என்பதற்கான காரணங்களைக் கூறினேம். ஒரு நிறுவனத்தின் விளையுளுக்கான தேவை குறிப் பிட்ட அளவு இருந்தால், நிகர வருமானத்தின்மீது வரி விதிப் பதால் அந்தத் தேவை மாறுதலடைவதில்லை. இஃதிவ்வாறிருக் கவும், 'மார்க்கட்' ஒரு குறிப்பிட்ட விலையைத்தான் தரமுடியும் என்ருல், அந்த விலையில் நிறுவனம் எவ்வளவு கணியம் உற்பத்தி செய்யவேண்டு மென்ற முடிவு வரித்திணிப்பினுல் மாறுவதில்லை. வரிகளைச் செலுத்துவதற்கு முன்பு எவ்வளவு மொத்த வருமானம் (கணியத்தை விலையினுல் பெருக்குவது) உச்சக்கட்ட நிகர வருமா னத்தைத் தருகின்றதோ, அதே மொத்த வருமானம் வரிகளைச் செலுத்திய பின்பும் உச்சக்கட்ட நிகர வருமானத்தைத் தரும்.[38] இதனுல் வரியை முற்பட்டுப் புரட்டுவதற்குத் தற்காலிகமாகவும், பரீக்ஷார்த்தமாகவும் செய்யப்பட்ட முயற்சிகள் குறைக்கப்படும். ஏனெனில், இறுதிநிலைக்கு அருகில் இருக்கும் நிறுவனங்களுக்குப் பிற நிறுவனங்களைப் போன்றே வரியைப் புரட்ட மனமில்லை. இதனுல் பல்வேறுபட்ட நிறுவனங்களிடையே வெவ்வேருன நிகர வருமானங்கள் நிலவுகின்றன. நிகரவருமான வரியைக் காட்டி

லும் மிகை இலாப வரியிலேயே இவ் வூக்கக் குறைவு வலிமையான தாக இருக்கும். ஏனெனில் பல நிறுவனங்கள் மிகை இலாபத்தைப் பெறத்தக்க நிலையில் இரா.. அவை இறுதிநிலைக்குத் தாழ்ந்த நிலையில் (submarginal) இருக்கும்.

குறுகிய காலத்தில் நிகர வருமானவரியும், மிகை இலாபவரியும் புரட்டப்படுவதில்லை என்று நமக்குத் திண்ணமாகத் தெரியும். இதன் காரணமாகவே சில சூழ்நிலைகளில் நெடுங்காலத்தில் வரியைப் புரட்டுகை சாத்தியமாகலாம். ஒரு பரந்த நிலப்பரப்பை யும், எல்லா தொழில் நிறுவனங்களையும் பாதிக்கும் வகையிலும் வரி பொதுவானதாக இருந்தால், ஓரளவு புரட்டுகை நிகழும். ஏனெனில், வரி விதிக்கப்பட்ட பரப்பில் நிறுவனங்களின் எண் ணிக்கை குறைவது நெடுங்கால விளைவாக இருக்கலாம். இதனால் எஞ்சியுள்ள நிறுவனங்களின் பண்டங்களுக்குத் தேவை அதிகமாகலாம். இதனால் வரியை முற்பட்டுப் புரட்டுகைக்கான சாத்தியக்கூறுகள் ஏற்படலாம். இணைக்கப்படாத மாநில வரிவிதிப்பில் இவ்வித நிலைகள் சிறப்பாக நிலவலாம். அடுத் திருக்கும் மாநிலங்கள் வருமானவரி விதிப்புச் செய்யாமலிருந்தால், அம் மாநிலங்களுக்கே தொழில் புடைபெயர ஊக்கம் ஏற்படும்.[40] சில தொழில் வருக்கங்களின்மீது மட்டும்(உ-ம். போர்க் கருவிகளைப் பொறி வழி ஆக்குவோர்) நிகரவருமானவரி விதித்தால், இதே மாதிரி வரிப் புரட்டுகை நேரலாம். ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் மீது மட்டும் (உ-ம். கார்ப்பரேஷன்கள்) நிகர வருமானவரி விதித் தால் இவ்விதமான புரட்டுகை நிகழ்வது சற்றுக் குறைவாக இருக்கும். சில வகைத் தொழில்களில், சிறப்பாக வெளிப்பாடின் ஒவ்வொரு அலகுக்கும் கனத்த மூலதன முதலீடு செய்ய வேண்டிய தொழில்களில், கார்ப்பரேஷன் வகை நிறுவனம் இன்றியமையாத தாகும். பிற துறைகளில் பதிவாகாத நிறுவனங்கள் தொழிலை நடத்தலாம். ஆகவே, நிகர வருமானவரியும், மிகை இலாப வரியும் புரட்டப்படவில்லை என்னும் பொதுவிதிக்கு நெடுங் காலத்தில் புறனடைகள் இருக்கக்கூடிய சாத்தியக் கூறு இருக் கின்றது என்பதை நாம் ஒப்புக் கொள்கிறோம்.

மொத்த வருமான வரிகள் பொதுவாக புரட்டப்படுகின்றன. ஏனெனில், வெளிப்பாட்டின் கணியம் அதிகரிக்குந்தோறும் மொத்த வருமானத்தின் மீதான வரியும் மாறுகிறது. ஆயினும், வெளிப்பாடு அதிகரிக்கும் பொழுது ஒவ்வொரு அலகுக்கும் மாறக் கூடிய ஆக்கச் செலவு குறைந்துகொண்டே வரும். ஆகவே, வரியின் தொகை குறைவாகவே ஏறுகிறது.[41] நாம் திரும்பவும் மொத்த வருமானத் 'தொழில்' வரி ஒரு பெறுமான வீத விற்பனை

வரியே என்பதைக் காண்கின்றேம். வரியினுல் இறுதிநிலை ஆக்கச் செலவுகள் அதிகரிக்கின்றன. ஆகையினுல் ஒரு குன்றைந்த கணியத்தை உற்பத்தி செய்து ஒவ்வொரு அலகையும் தூக்கலான விலைக்கு விற்ருல் உச்சக்கட்ட நிகர வருமானத்தைப் பெறலாம். இதன் விளைவாக வரியின் ஒரு பகுதி முற்பட்டுப் புரட்டப்படுகிறது. தேவை நெகிழ்ச்சியுள்ளதாயிருப்பதைக் காட்டிலும், நெகிழ்ச்சி இல்லாதபொழுது வரி முற்றும் புரட்டப்படுகிறது. அரசாங்கக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட (அதாவது பொது வசதிகள்) தொழில்களுக்கு மாநில அரசாங்கங்கள் மொத்த வருமானத் தொழில் வரியைப் பிரயோகிக்கின்றன. இப் பிரயோகத்தில் வரி முழுதும் புரட்டப்படுகிறது. ஏனெனில் வீதக் கட்டுப்பாட்டின் கீழ் முதலீட்டின்மீது நியாயமான நிகர வருவாய்க்கு வகை செய்வதே பொதுவாக வீதங்களை நிறுவுவதன் நோக்கமாகும். இங்ஙனம் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட தொழில்கள் சாதாரணமாகத் தங்கள் தேவை சாத்தியக் கூறுகளை முழுதும் பயன்படுத்திக் கொள்வதில்லை. இத் தொழில்கள் கணிசமான அளவு தொழில் இழப்பின்றியே தூக்கலான வீதங்களை விதிக்கக் கூடும். ஆகவே நிகர வருவாயை நிர்ணயிப்பதற்கு முன்பு பிடித்தம் செய்யக் கூடிய செலவுதான் வரிகள் என்று எண்ணுகின்றனர். இதனுல் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட வீதங்களில் வரியும் அடங்கியிருக்கிறது. விளையுள்களை வாங்குபவர்களின் மீதே மொத்த வருமானவரி புரட்டப்படுகிறது என்று நாம் முடிவு கட்டுவது முற்றிலும் பொருத்தமானதே.

ஒரு நிறுவனத்தின் வெளிப்பாட்டின் கணியத்திற்கும், மூலதனப் பங்கு வரிக்கும் சிறிதே சம்பந்தம் இருக்கிறது. நிலையான ஆக்கச் செலவுகளுக்கு இவ் வரி ஒரு கூடுதல் (செயல் முறையில் கிறிதளவே கூட்டுகின்றனர்). ஆகவே, ஒரு நிறுவனத்திற்கு உச்ச நிகர வருமானத்தைத் தரக்கூடிய கணியத்தை நிர்ணயிக்கும் இரு தீர்மானிகளில் (இறுதிநிலை வருவாயும் இறுதி நிலை ஆக்கச் செலவும்) ஒன்றையும் அது பாதிப்பதில்லை. வரி செலுத்துவதற்கு முன்பே நிறுவனம் உச்சக்கட்ட நிகர வருமானத்தை அடைகிறதென்று வைத்துக் கொண்டால், வெளிப்பாட்டையோ, விலையையோ மாற்றுவதில் யாதொரு ஆதாயமும் இல்லை. இவ்விதச் சூழ்நிலைகளில் வரி புரட்டப்படமாட்டாது. மற்றொரு பக்கத்தில், புடைபெயர்ச்சியின் வாயிலாக நெடுங் காலத்தில் சிறிதளவு வரியைப் புரட்டக் கூடிய சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. இச் சாத்தியக் கூறுகள் நம்முடைய மேலை நிகர வருமானம் அல்லது மிகை இலாப வரியை நெடுங்காலத்தில் புரட்டக்கூடிய சாத்தியக் கூறுகளைப் பற்றி நாம் கூறிய பகுத்தாய்

வின் படியே இருக்கிறது. மேலும் இலாபம் பெறும் கார்ப்ப ரேஷன் மீதும், இலாபம் பெருத கார்ப்பரேஷன்கள்மீதும், வேறு பாடின்றி விதிக்கப்படும் ஒரு மூலதனப் பங்குவரி மார்க்கட்டி லிருந்து இறுதிநிலை நிறுவனங்களை அகற்றலாம். இதனுல் எஞ்சியுள்ள நிறுவனங்களுக்குத் தேவை அதிகமாகலாம். இவ்விதச் சூழ்நிலையில் ஓரளவு நெடுங்காலப் புரட்டுகை நிகழும். இது தான் நிலைப்பாட்டைப் பொறுத்த வரையில் நிகர வருமானவரிக்கும் மூலதனப் பங்கு வரிக்கும் உள்ள வேறுபாடு. இறுதிநிலை நிறுவனத் திற்கு நிகர வருமான வரிகள் கிடையாது; ஆனுல், மூலதனப் பங்குவரி உண்டு. நிகர வருமான வரிகளைக் காட்டிலும், மூலதனப் பங்கு வரியில் முற்பட்டுப் புரட்டுகைக்கான நெடுங்கால சாத்தியக் கூறுகள் சற்று அதிகம்.

## தொழில் வரியின் நிலைப்பாடும் தொழில்வரி விதிப்பின் காரண விளக்கமும்

இவ் வதிகாரத்தின் முற்பகுதியில் தொழிலின் மீது தனியாக வரி விதிப்பதற்குச் சிலர் சரியென் றெண்ணும் சில தளங்களைக் கண்ணேட்டமிட்டோம். குருட்டாம் போக்கில் கூடுதல் வருவாய் வேண்டும் என்று காரணம் கூறுவதைத் தவிர தொழில்வரி வேறு ஒன்றல்லது பல விடுகோள்களைத் தளமாகக் 'கொண்டிருக்கிறது எனவும் நாம் கண்டோம். அவையாவன : (1) சில தனிப்பட்ட தொழில்கள் அல்லது சில தொழில் வருக்கங்களுக்குப் பிரத்தியேக ஆதாயம் கிடைத்தது; (2) அரசாங்கம் ஒரு சாதகமான தொழில் சூழ்நிலையைப் பேணுவதனுல் எல்லாத் தொழில்களும் அடையும் பொதுவான ஆதாயங்கள் (3) தொழில்களிலிருந்து தனியாள் வருமானங்களைப் பெறுபவர்களினின்றும், வேருகத் தொழிலுக்கு வரிகளைச் செலுத்தும் திறன் இருப்பது. பொதுத் தொழில் வரி விதிப்புக்குப் பிரத்தியேக ஆதாயத்தைக் காரணமாகக் காட்டு வதில் நமக்குள்ள ஐயப்பாடுகளைத் தெரிவித்தோம். தொழில் வரி விதிப்புக்குப் பொது ஆதாயக் கருதுகோளைக் காரணமாகக் காட்டு வதை நாம் ஒப்புக் கொள்ளவில்லை. இங்ஙனம் ஒப்புக் கொள்ளாத தற்குப் பல காரணங்கள் உள. ஆதாய வரிவிதிப்புக் கொள் கையை முழுதும் பயன்படுத்தினுல், சமுதாயத்திற்கு முக்கியமான தாகக் கருதப்படும் பல அலுவல்களை அரசாங்கம் மேற்கொள் ளாமல் இருக்க வேண்டும். ஏனெனில், இவ் வாதாயங்களினுல் நன்மை பெறுபவர்கள் அரசாங்கத்திற்கு வரியாகக் கொடுப்ப தற்குத் திறன் ஏதுமிலர். மேலும் தனிப்பட்ட வரி செலுத்து வோர்களிடையே பொதுவான ஆதாயங்களைப் பங்கீடு செய்வது மிகவும் செயற்கையான முறையாகும். ஏனெனில், இவ் வாதாயங் களை எந்த விஞ்ஞான அடிப்படையிலும் பங்கிட முடியாது.

மேலும் ஆதாயங்கள் சிறப்பாகவும் தனிப்பட்ட முறையிலும் இருந்தால் பங்கீடு செய்வது நியாயமே. ஆனால், அவ்வித நிலைகளில் அரசாங்கத் தொழில் துணிவுகள், தாங்கள் செய்யும் சேவைகளுக்காக வாங்கும் விலைகளும், கட்டணங்கள், பெர்மிட்டுகள் முதலானவை மூலம் ஆட்சியாளர்கள் பெறும் வருவாய்களும் ஆதாயப் பங்கீட்டை ஏற்கனவேயே முற்றும் பயன்படுத்திக் கொண்டு விட்டன. உடைமைவரி விதிப்புக்கு ஆதரவு தருவதற்காகப் பாதுகாப்பு, கல்வி முதலான அலுவல்களின் வாயிலாகக் கிடைக்கும் பொதுவான ஆதாயங்களும் மிதமிஞ்சிப் பயன்படுத்தப்பட்டன.

தொழில்களுக்கு வரிகளைச் செலுத்தும் சிறப்புத் திறன் இருக்கிறது எனக் கூறுவது வருமானத்தின் இயல்பைத் தவறாகப் புரிந்து கொண்டதை ஆதாரமாகக் கொண்டதென நாம் அறிகிறோம். தொழில்களிலிருந்து பொருளாதார ரீதியில் வருமானம் பெறும் திறனைத் தவிர்த்துத் தனியாகத் தொழில்களுக்கு வேறோர் திறனில்லை. இதற்கும் மேலாக ஒரு தொழில் வரிவிதிப்புக் கருதுகோளில் ஆதாயக் கொள்கையையும் திறன் கொள்கையையும் பிணைப்பது தருக்க முறையில் முற்றும் முன்னுக்குப்பின் முரணல்லவா ? தனியாட்களின்மீது அரசாங்கச் செலவுகளின் பளுக்களைப் பங்கீடு செய்வதற்கான கருதுகோள் தளங்களில், இவ் விரண்டும் ஒன்றுக் கொன்று முற்றிலும் முரண்பட்டன. முற்றிலும் வேறுபட்ட நீதி பற்றிய இரு கருத்துக்களை ஒன்று சேர்ப்பதன் வாயிலாக நாம் 'தெருவின் இரு மருங்கிலும் வேலை செய்யும்' முற்றத்திற்கு ஆளாகிறோம்.

நாம் இப்பொழுது நீதித்தளத்தின்மீது ஒரு வரி அமைக்கப்பட வேண்டும் என்று தீர்மானித்த பின்பு, இரண்டாவது படியாகச் செயல் முறையில் நீதிக் கொள்கையைச் சரியாக நிறைவேற்றுவதற்கான வரித்தள வகையைத் தீர்மானிக்க வேண்டும். தொழிலின் நிகர வருமானத்தைக் கொண்டு ஒரு தொழில்வரியை அளவிடுவதனால் ஆதாயக் கொள்கை முற்றும் மறுக்கப்படுகிறது. மொத்த வருமானம், நிகர இன்சூரன்சு பிரிமியத் தொகைகள் அல்லது மூலதனப் பங்கின் தொகை இவை திறன் கொள்கையைச் சரியென்பதை முற்றும் மறுக்கின்றன. ஆயினும், ஏறக்குறைய எல்லா மாநிலங்களிலும்[42] இவ் விரண்டு தளங்களும் 'தொழில் வரி முறையில்' காணப்படுகின்றன. ஏற்றுக் கொள்ளப்பட்ட 'குறிக்கோள்' கொள்கையை அல்லது வரித்தளத்தைப் பிரயோகிப்பதில் உள்ள செயல் முறைச் சங்கடங்களினால் சில சமயங்களில் வரிக் கொள்கைகளையும், வரித்தளங்களையும் புதுமையாக ஒன்று சேர்க்கும்படி நேரிடுகிறது. பொதுவாக யாவரும் ஏற்றுக் கொள்ளும் தொழில்

வரிக் கருதுகோளை அபிவிருத்தி செய்வதில் ஏற்பட்ட ஏமாற்றத்தினுலும், இதனுல் போதிய வருவாயைத் தேடவேண்டும் என்ற சந்தர்ப்பவாதத்தில் பின்னடைந்ததாலுமே, பல சமயங்களில் இச் சேர்க்கை விளைந்தது என்றெண்ணப்படுகிறது.

தொழில் வரிக் கருதுகோளில் உள்ள மிகப் பெரிய விட்ட குறைகளில் (sins of omission) ஒன்று வரிநிலைப்பாட்டையும், வரிக் காரணத்தையும்[43] சம்பந்தப்படுத்தத் தவறியதேயாகும். தொழில் வரிகளின் நிலைப்பாடு அப் பொருள்களை நுகர்வோர் மீதே இறுதியாக விழுகிறது. தொழில்கள் அரசாங்கத்தினிடமிருந்து பிரத்தியேக ஆதாயங்களை அடைகின்றன என்றோ, அல்லது தொழில்களுக்கு இவ் வரிகளைத் தாங்குகின்ற பிரத்தியேகத் திறன் இருக்கின்றது என்றோ காரணங் காட்டி இவ் வரிகளை நிலைநாட்ட முடியாது. இவ் வரிகளை வேடம் புனைந்த நுகர்ச்சி வரிகள் எனலாம். இவற்றை நுகர்வு வரி கருதுகோள் அளவில்தான் சீரமைப்புச் செய்ய முடியும். இந் நூலில் மீண்டும் மீண்டும் அடிக்கடி வலியுறுத்தப்பட்ட ஒருண்மையின் முக்கியத்துவத்தின் நிரூபணத்தை நாம் இங்கே காண்கின்றோம். இவ் வுண்மையாவது நிலைப்பாட்டை ஓரளவு துல்லியமாக அறிதியிடக்கூடிய நிலை இருந்தாலொழிய தேற்றவளவில் ஒரு குறிப்பிட்ட வரியின் கருத்துக்கு அவ் வரியின் விளைவுகள் முற்றிலும் புறம்பானதாயிருக்கும் என்பதே. இப் பகுத்தாய்விலிருந்து தனியாகத் தொழில் வரிவிதிப்புக்கான யாதொரு புலமும் இல்லையென்ற முடிவுக்கே நாம் வரவேண்டி இருக்கின்றது.

## மேலும் படித்தற்கு உரியவை

கே. ஜே. குர்ரான் (Curran K. J.) எழுதிய *Excess Profits Taxation*, Washington, American Council on Public Affairs, 1943.

பொதுவாகப் படிப்பதற்கு முதலாம் அதிகாரத்தையும், ('அடிப்படைகள்'), பன்னிரெண்டாம் அதிகாரத்தையும் ('பின்னேக்கம்') நாம் சிபாரிசு செய்கிறோம். புத்தகத்தின் எஞ்சியுள்ள பகுதியில் சிறப்பான திட்டங்களைப் பற்றிய வருணனை இருக்கின்றது.

ரிச்சர்டு கூடு (Goode, Richard) எழுதிய *The Corporation Income Tax*, N. Y., Wiley, 1951.

கூட்டாட்சி வரியின் காரண விளக்கம், நிலைப்பாடு, பிற விளைவுகள் இவற்றைப் பற்றிய பூரணமான ஒரு பொருளைப் பற்றிய நூலாகும்.

ஸி. ஷூப் (Shoup C.) எழுதிய 'Business Taxes', *Encyclopaedia of the Social Sciences*, N. Y., Macmillan, *1934*.

இந் நூல் தொழில் வரிவிதிப்புக் கருதுகோள் பற்றிய சிறு கண்ணோட்டமாகும்.

பால் ஸ்டுடன்ஸ்கி (Studenski, Paul), 'Toward a Theory of Business Taxation', Journal of Political Economy, October, *1940*.

இந் நூல் பிரத்தியேக வரிவிதிப்புக்கான காரணங்களை விளக்கிக் கூறும். இவ் வதிகாரத்தில் பாடப் பகுதியில் கூறியவற்றினின்றும் எதிரிடையான கோணக் கருத்தைத் தெரிந்து கொள்வதற்கு இந் நூலைப் படிக்க வேண்டும்.

## 22 ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. 'Preliminary Report of the Committee Appointed to perpare a plan of a Model System of State and Local Taxation', 1918, *Proceedings, National Tax Association*, 1919, pp. 426 ff., and 'Second Report of the Committee on a Model System of State and Local Taxation', 1933, *Proceedings*, National Tax Association, 1933.

2. *Proceedings*, 1919, p. 430. இதே கூற்று, திருத்தப்பட்ட அறிக்கையிலும் வருகிறது. *Proceedings*, 1933, p. 361.

3. அதே நூல்

4. 'Final Report of the Committee of the National Tax Association on Federal Taxation of Corporations,' *Proceedings*, National Tax Association, 1939, p. 537.

5. பால் ஸ்டுடன்ஸ்கி (Paul Studenski), 'Toward a Theory of Business Taxation', *Journal of Political Economy*, October, 1940, pp. 621 ff.

6. Studenski, *op., cit.* p. 632.

7. *Op. cit.*, p. 633, Italics added.

8. குறிப்பிட்ட தொழில் வரிகளின் நிலைப்பாட்டைப்,பார்க்கும்பொழுது, பொதுவான தொழில் வரிகளைச் 'சரியென நிலைநாட்டும்' கருதுகோள்

காரண விளக்கம் நொய்தாகக் காணப்படுகிறது. இவ் விஷயத்தை இவ் வதிகாரத்தின் பிற்பகுதியில் தற்போதிருக்கும் தொழில் வரிகளின் பெரும் வகைகளை வருணித்த பின்பு மீண்டும் தொடர்ந்து ஆராய்வோம்.

9. 'மொத்த வருமானம்', 'மொத்த வரவுகள்', 'மொத்த ஈட்டங்கள்' இவற்றைத் தளமாகக் கொண்ட வரிகளை ஒருசேரக் கூறுகின்றோம். இவை யெல்லாம் முற்றும் ஒருவிதமானவை என்று சொல்ல முடியாவிட்டாலும், பொதுவாக ஒன்றையொன்று ஒத்திருக்கின்றன.

10. நிகர வருமான வரி செயல்முறையில் பதிவாகாதத் தொழில் நிறுவனங்களுக்குச் சாத்தியமன்று என்பதற்கு மேலும் ஒரு காரணம் உள்ளது. இதற்குரியவர்கள் சிலராக இருப்பதனால் சொந்தக்காரருக்கு உயர்ந்த சம்பளத்தைக் கொடுப்பதன்மூலம் உயர்ந்த நிகர வருமானம் வருவதைக் தவிர்க்கலாம்.

11. பொது வசதிகளுக்கும் இருப்புப் பாதைகளுக்கும் மாநிலங்கள் பொதுவாகத் தொழில் மொத்த வருமான வரிகளைப் பிரயோகிக்கின்றன. வீதக் கட்டுப்பாட்டில் தலையாய எடுகோளாக இருக்கும் நிகர வருமானத்தைத் தவிர்ப்பதற்கு இங்ஙனம் ஓரளவு செய்கின்றன. இவ் வரி விதிப்பதற்கு ஒரு காரணம், இவ் வரி நுகர்வோர்கள்மீது விழும் என்ற நம்பிக்கையாகும். இதுவுமின்றி நிகர வருமானத்தைவிட மொத்த வருமானமே, மாநிலங்களை விடத் தொழில் நடத்தும் தொழில் நடவடிக்கைகளின் வீதாசாரத்திற்கு ஏற்ப வரித்தளமாக இருக்கும். எது காரணமாயினும், இவ் வரி ஒரு விற்பனை வரியேயன்றித் 'தொழில் வரி' அன்று.

12. செலுத்தப்பட்ட மூலதனப் பங்கின் மதிப்பையோ அல்லது மூல தனப் பங்கிற்கு ஈடானதையோ தளமாகப் பட்டயவரி உபயோகிக்கும் பொழுது இது சிறப்பாக உண்மையாகும். தளம் நிகர மதிப்பினால், இது முழுவதும் உண்மையாக இல்லாமலிருக்கலாம்.

13. பாங்கு வரி விதிப்பைப் பற்றிய விரிவான சர்ச்சைக்கு ரோனல்டு பி. வெல்ஷ் (Ronald B. Welch) எழுதிய *State and Local Taxation of Banks in the United States*, 1934, Special Report to the (New York State) Tax Commission, No. 7ஐப் பார்க்கவும்.

14. *சிறப்பாக*, Section 5219, Revised Statutes.

15. See *Report of Connecticut Temporary Commission*, 1934, Chapter 13.

16. Research Report No. 16, *Recent Trends in State Revenues*, Chicago (no date), p. 6.

17. 1933-லிருந்து 1945 வரை விதிக்கப்பட்ட கூட்டாட்சியின் மூலதனப் பங்கு வரியையும், அறிவிக்கப்பட்ட மதிப்பு மிகை இலாப வரியையும் (declared value excess profits tax) இஃது புறக்கணிக்கிறது. கார்ப்பரேஷன் வருமான வரிகளை உயர்த்துவதற்குப் பதிலாக இவ் வரிகள் மேற்கொள்ளப் பட்டன. இவை யிரண்டும் தொல்லையைத் தருவனவாகவும், மக்கள் விரும்பாதனவாகவும், போதிய வருவாய்களைத் தராதனவாகவும் இருந்தன.

18. 1949, டிசம்பர் 31-க்குப் பின்பு வாங்கிய எந்திரங்களுக்கும் தளவாடங்களுக்கும் தான் இப் பிடித்தம் செல்லுபடியாகும். இது அவசியமானதென்று ஏற்ற அரசாங்க அதிகாரியும் நற்சான்று அளித்திருக்க வேண்டும்.

19. சாதாரண வரித்தளமும் மேல் வரித் தளமும் ஒன்றேதான். சாதாரண வரியிலிருந்து சில குறிப்பிட்ட கூட்டாட்சிக் கடன் பத்திரங்களின் மீதான சிறு வரித் தொகைகளும், மேல் வரியிலிருந்து முதல் 25,000 டாலரும் இவற்றிற்குப் புறனடைகள்.

20. *Annual Report of the Secretary of the Treasury*, 1945, pp. 724-26.

21. இவ் விஷயத்தைப் பற்றிய வரலாற்றுக் கூறுகளையும், வருணனைக் கூறுகளையும் தலையாயதாக கென்னத் ஜே. குர்ரான் (Kenneth J. Curran) எழுதிய *Excess Profits Taxation* என்ற நூல், படிப்பதற்குச் சுவையானதும் பயனுள்ளதுமாகும். Washington, American Council on Public Affairs, 1943. பகுத்தாய்வு சர்ச்சைக்கும், பிரிட்டிஷ் அநுபவத்தைப் பற்றிய இறப்பு மேற்கோளுக்கும், ஜே. ஆர். ஹிக்ஸ், வி. கே. ஹிக்ஸ், எல். ரோஸ்டாஸ் (J. R. Hicks, V. K. Hicks and L. Rostas) எழுதிய *The Taxation of War Wealth* ஐப் பார்க்கவும். ஆக்ஸ்போர்டு, 1941. ஏ. ஜி. ஹார்ட்டும், ஈ. டி. ஆலனும் (A. G. Hart and E. D. Allen) எழுதிய *Paying for Defense* என்ற நூல் இதைப் பற்றிச் சுருக்கமாகச் சிறப்பாக 12ஆம் அதிகாரத்தில் ஆய்வு செய்கிறது. Philadelphia, Blakiston, 1941.

22. இரண்டாம் உலகப் போரின்போது விதிக்கப்பட்ட மிகை இலாப வரியை அடுத்து, இலாப வரி விதிப்பின் சில சிக்கலான பிரச்சினைகளை ஆராய்வோம்.

23. குர்ரான், *op. cit.*, p. 136.

24. தன் எதிர்கால ஈட்டங்களைப் பற்றித் (மூலதனப் பங்கின் மதிப்பு, எதிர்பார்த்த ஈட்டங்களை மூலதனமாக்குவதன்மூலம் நிர்ணயிக்கப்படும் என்று நம்பப்பட்டது) தவறுதலாக மதிப்பிட்ட கார்ப்பரேஷன் இம் மிகை இலாபவரியின் மூலம் உண்மையில் தண்டனையை அநுபவிக்கலாம். 1942ஆம் ஆண்டில்தான் இந்த நிலைமை பெரிதும் அகற்றப்பட்டது. அவ் வாண்டில், ஆண்டுதோறும் தான் அறிவித்த மூலதனப் பங்கின் மதிப்பைத் திருத்திக்கொள்ள அரசாங்கம் அநுமதி தந்தது.

25. *Annual Report of the Secretary of the Treasury*, 1945, p. 724.

26. Reprinted by permission from pp. 82, 83 of *Postwar Taxation and Economic Progress*, by Harold M. Groves, copyright, 1946, by the Committee for Economic Development and published by the McGraw-Hill Book Company, Inc.

27. தளக் காலக்கூற்றில் தொடங்கப்பட்டிராத நிறுவனங்கள், தாங்கள் முதலீடுசெய்த மூலதனத்தைத் தளமாகக் கொண்டே தங்கள் வரியைக் கணக்கிடும்படி வேண்டப்பட்டன. 1941ஆம் ஆண்டில் செய்த ஒரு திருத்தத்தின் படி விஸ்தரிப்பை ஊக்குவிப்பதற்காகப் புதிதாக முதலீடு செய்யப்பட்ட மூல

தனம் தன் தொகையில் 125 சதவிகிதமாகத் தளத்துடன் சேர்க்கப்பட்டது. 1936–1939 காலக் கூற்றில் கணிசமான அளவு இலாபத்தில் ஏற்றம் காண்பித்த நிறுவனங்கள், இக் காலக் கூற்றில் தங்கள் சராசரிக்கு மேற்பட்டு ஒரு சாதாரண இலாப தளத்தை வைத்துக்கொள்ள அநுமதி பெற்றன.

28. *Statistical Abstract of the Uulted States,* 1946, p. 319.

29. 1945, டிசம்பர் 31–க்குப் பின்பு 25,000 டாலர்.

30. தளக் காலக்கூறு முற்றுமன்றி, அதில் ஒரு பகுதி மட்டும் வரி செலுத்துவோர் தொழில் நடத்தியிருந்தால், அவர் தான் தொழில் நடத்தாத எந்த ஆண்டிலும், முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தில் 8 சதவிகிதத்தைத் தனக்காலக் கூறு வருமானமாக உபயோகித்துக்கொள்ளலாம்.

31. முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தில் முதல் 5 மில்லியன் டாலரில் 8 சதவிகிதமும், 5 மில்லியனுக்கும் 16 மில்லியன் டாலருக்கும் இடைப்பட்ட தொகையில் 6 சதவிகிதமும், 10 மில்லியன் டாலருக்கு மேற்பட்ட தொகையில் 5 சதவிகிதமும் அநுமதிக்கப்பட்டன. ஈண்டு வருவாய் நோக்கு நன்கு புலனுகும்.

32. ஈராண்டுகளுக்குப் பின்னிட்டு இழுத்துச் செல்வதையும் அனுமதித்தனர். இதனுல் வரியைத் திருப்பித்தர வேண்டிய நிலையும் ஏற்படும்.

33. கார்ப்பரேஷனின் சாதாரண வரி நிகர வருமானத்துடன் மிகை இலாபக் கணக்கீடு தொடங்கியது. இவ்வாறு இரண்டு வரிகளின் கணக்கீட்டுக்கும் கடன் தீர நிதி சேர்த்தல் பிடித்தம் பிரயோகமாயிற்று.

34. ... ... ...

35. Reprinted by permission from p. 75 of *Postwar Taxation and Economic Progress,* by Harold M. Groves, copyright, 1946, by the Committee for Economic Development aud published by the McGraw-Hill Book company Inc.

36. இந்த சிபாரிசைச் செய்தவர்கள் (பிறருடன்) ஹிக்ஸ், ஹிக்ஸ், ரோஸ்டாஸ் (Hicks, Hicks, and Rostas), *op. cit.*

37. இதனுல் நேரிடைக் கட்டுப்பாடுகளுக்குப் பதிலாக நிதி நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று நாம் கூறுவதாகக் கொள்ளக்கூடாது. வலுவான நிதி நடவடிக்கை ஆதரவுடன் நேரிடைக் கட்டுப்பாடு மிகவும் திறமையானதாகவும், எளிமையாகவும் இருந்திருக்கும் என்று நாம் கூறுகிறேம்.

38. குரோவ்ஸூம், இதே அமிசத்தையே பெரிதும் கூறுகிறுர். *op. cit.,* pp. 76-77.

39. வரி செலுத்துவதற்கு முன்பே நிறுவனம் உச்சக்கட்ட நிகர வருமானத்தை அடைந்ததென்று இது நம்புகிறது. விற்பனைக் கொள்கை (விளம்பரம் முதலாயின) தேவையை மாற்றக்கூடும் என்ற உண்மையை அது புறக்கணிக்கவில்லை. வரி யிருந்தாலும் சரி, வரி யில்லாவிட்டாலும் சரி நிறுவனம் இவ்வாருன வளப்பொருள்களை, தேவையை உச்சக்கட்டம் ஆக்குவதற்குப் பயன்படுத்தியிருக்கும் அல்லது பயன்படுத்தக்கூடும் என்று இந்த எடுகோள் நம்புகிறது.

40. தன்னுடைய சொந்த மாநிலத்திலுள்ளத் தொழில் நிறுவனங்களின் நிகர வருமானத்தின்மீது வரிகளை விதிக்கும் ஒரு மாநில அரசாங்கம், அம் மாநிலத்தில் தொழில் செய்யும் அயல் நிறுவனங்களின்மீதும் சமதையாக வரிகளை விதிக்கிறதென்று நம்பப்படுகிறது.

41. ஏனெனில், தோறணை தேவை வளைகோடு இடப்புறமிருந்து வலப் புறம் சரிந்து தாழ்ந்து செல்வதனால், ஒவ்வொரு அலகுக்கான மொத்த வரு மானம் குறைவதுடன், கணியம் அதிகரிக்கும் தோறும், அலகுக்கான வரி யும் குறைகிறது.

42. 'தொழில் வரி விதிப்புக்கு ஒரு தவறுதலான திறன் கொள்கையைக் கூட்டாட்சி விடாது பின்பற்றி வருகிறது.

43. இதற்குச் சிறந்த உதாரணம் ஸ்டுடன்ஸ்கி (Studenski) தொழில் மீது தனியாக வரிவிதிப்பதைக் 'கீழ்க்கண்ட ஒன்றல்லது வேறான பல முகாந் திரங்களின்மீது நிலைநாட்டலாம்' என்று கூறியவாறு ஸ்டுடன்ஸ்கி ஆரம்பிக் கின்றார். ஆதாயம், திறன் வருவாய் முடைகள், வரி விதிப்பின் மூலம் கட் டுப்பாடு இவற்றை உள்ளடக்கிய எட்டு தனித்தனியான நிலைநாட்டுதல் பட்டியல் ஒன்று இதை அடுத்து வருகின்றது. அவர் 'ஒன்றல்லது வேறு' எனக் கூறியது 'ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட' என்றிருக்க வேண் டும் என்று ஒருவர் உணர்கிறார். ஒரு தனிப்பட்ட தொழில் மீதான அனைத்து வரிக்கும் இப் பல்வேறுபட்ட நிலைநாட்டுதல்களைப் பிரயோகிக்க முடியாது எனவும் ஒருவர் உணர்கிறார். ஆயினும், நிறுவனத்தினால் கூட்டப் பட்ட மதிப்பினால் அளக்கப்பட்ட ஒரு தொழில் வரி,—கருதுகோள்களின் தேவைகளைப் பெரிதும் பூர்த்தி செய்வதால் சிபாரிசு செய்யப்படுகிறது. மொத்த விளையுளின் மதிப்பிலிருந்து பொருள்களுக்கான செலவைக் கழித் தால் நிறுவனத்தால் கூட்டப்பட்ட மதிப்பு கிடைக்கும். பகுத்தாய்வின் இவ் வமிசத்தைப் பற்றியவரை, சல்லடையில் தண்ணீர் முகந்து செல்வ தாகவே ஒருவர் எண்ணவேண்டியிருக்கிறது. ஆயினும் நிலைப்பாட்டைப் பற்றிய சர்ச்சையிலிருந்து நுகர்வோர்மீதே பெரும்பாலும் நிலைப்பாடு விழும் என்பது தெறிகிறது. ஆயினும் நிலைப்பாடு 'அதன் தன்மையைப் பொறுத்தும் ஒப்புமையில் அதன் சப்ளைக்கும், தேவைக்கும் உள்ள நெகிழ்ச்சியைப் பொறுத்தும், தொழிலில் போட்டி அல்லது முற்றுரிமை இருப்பதைப் பொறுத்தும், ஒரு தொழிலுக்கும் இன்னொரு தொழிலுக்குமிடையே மிகவும் மாறுபடக்கூடும்' (பக்கம் 643-44) என்றும் தெரிகிறது. நாம் இந் நிலைப் பாட்டைப் பற்றிய பகுத்தாய்வுடன் முரண்டு பிடிக்க முடியாது. ஆயினும் நிலைப்பாட்டைப் பற்றிய முடிவுகளுக்கும், வரியின் காரண விளக்கத்திற்கும் சிறிதும் பொருத்தம் இருப்பதாகத் தெரியவில்லை. தொழில் நிறுவனங்களுக்கு அரசாங்கம் அளிக்கும் ஆதாயங்களை முன்னிட்டும், இந் நிறுவனங்களுக்குப் பிரத்தியேக வரிசெலுத்தும் திறன் இருப்பதை முன்னிட்டும் இவ் வரி முக்கிய மாக நிலை நாட்டப்படுகிறது. ஆயினும், இவ் வரியின் நிலைப்பாடு நமக்குத் தெரிந்த வரையில் நுகர்வோர்மீதே பெரும்பாலும் விழும். நுகர்வோர் பெறும் ஆதாயங்கள் அல்லது அவர் திறன், வரியை நிலைநாட்டுவதாகக் கொள்ளப் படுவதில்லை. நாம் இவ் வாராய்ச்சியைத் திறனாய்வுக்கு என்றே ஒதுக்கப் போவதில்லை. ஆயினும் தனியாகத் தொழில் மீது வரிவிதிக்க வேண்டும் என்ற கருத்தை ஆதரிப்பவர்களின் சிந்தனையையே சுமாராக இது பிரதி பலிக்கிறது எனலாம். இச் சிந்தனையில் இயற்கையாகவே உள்ள தருக்கப் பலவீனங்களையும் இது பளிச்செனக் காட்டுகிறது.

# 23. வேலை மீது வரிகளும், பல வகை வரிகளும்

## (Taxes on Employment and Miscellaneous Taxes)

பலவகை பெரிய வரித் திட்டங்களைப் பற்றிய நம் ஆராய்ச்சி இத்துடன் முற்றுப் பெறவில்லை. நாம் பல கதம்ப வரிகளைப் பற்றியும் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. இவ் வரிகளில் வருவாய்ப் படைப்பிலும், பொருளியல் விளைவுகளிலும், 1935ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டத்தினுல் புகுத்தப்பட்ட வேலைவரிகள் முக்கியமானவை. பொது நலப் பாதுகாப்புத் திட்டச் சட்டத்தினுல் படைக்கப்பட்ட சம்பளப்பட்டியல் வரிகளைப் (Payroll taxes) பற்றி இவ் வதிகாரத்தில் பெரும்பகுதியும் ஆராய்வோம். மூப்பு, வேலையின்மை இவற்றுக்கான நிரப்பும், காப்பு நிதிக் கணக்குகளுக்கு அவற்றின் வருவாய்களைச் சிறப்பாக ஒதுக்கிடுவதன் மூலம் சுலபத்தில் இவ் வரிகளைக் கண்டுபிடித்துவிடலாம். பொதுநலப் பாதுகாப்புத் திட்டத்தின் பிற அமிசங்கள் குருடர்களுக்கு உதவி, தம்மைச் சார்ந்திருக்கும் குழந்தைகளுக்கு உதவி, முதியோருக்கு உதவி என்பனவாகும். இவற்றுக்குக் கூட்டாட்சி உதவித் தொகைகள் அளிக்கிறது. இத் தொகைகளுக்குச் சமமாக மாநில அரசாங்கங்களும் தொகை ஒதுக்க வேண்டும். இச் செலவுகள் யாவும் கூட்டாட்சி, மாநில அரசாங்கப் பொதுநிதியிலிருந்து செய்யப்படுகின்றன.[1] அவற்றுக்கு வேண்டிய நிதியைத் திரட்டுவதற்காகப் பொதுவாகப் பிரத்தியேக ஒதுக்கீட்டு வரிகளை[2] விதிக்கவில்லை. ஆகவே, அவற்றைப் பற்றி நாம் இங்கு ஆராயப்போவதில்லை. இவ் வதிகாரத்தில் ஆள்வரியைப் பற்றியும், கூட்டாட்சியின் 'அநியாயமாகப் பணக்காரராகும் வரி'யைப் பற்றியும் சிறிது ஆராய்வோம். இவை யிரண்டு வரிகளும் முக்கியம் அல்லாதானவாயினும், வரித்திட்டங்களைப் பற்றிய கண்ணேட்டத்தில் நாம் இவற்றை அடியோடு புறக்கணிக்கவும் முடியாது.

வேலையின்மீது வரிகள் (Taxes on Employment)

முதியோர், எஞ்சியிருப்போர் ஈட்டுறுதி வரிகள் (The Old Age and Survivors' Insurance Taxes) : பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டத்தின் கீழ் முதியோர் உப்காரச் சம்பள ஆதாயங்களைக் கூட்டாட்சியே முற்றும் நிருவகிக்கிறது. அறுபத்தைந்து (பெண்களுக்கு அறுபத்திரண்டு) வயதைக் கடந்த தகுதியுள்ள ஓய்வு பெற்ற அனைவருக்கும், அவர்களை அண்டியிருப்பவர்களுக்கும் ஆதாயங்கள் கொடுக்கப்படுகின்றன. ஏற்கனவே ஆதாயம் பெறுகிறவர் ஈட்டிய தொகைக்கும், அவர்கள் பெறும் ஆதாயத் தொகைக்கும் யாதொரு முக்கிய உறவுமில்லை. சார்ந்திருப்பவர்களைப் பொறுத்தவரை ஒரே நிலையில் இருக்கும் அனைவருக்கும் கொடுக்கப்படும் ஆதாயங்கள் கிட்டத்தட்ட ஒதுக்கீட்டுக் கொள்கையின்படி (reserve principle) இயங்குகிறது. ஆதாயங்களைக் காட்டிலும் வரிவசூல்கள் கூடுதலாயிருக்கும் முந்திய ஆண்டுகளில் ஒரு ரிசர்வ் நிதியைச் சேர்க்கின்றனர். பிந்திய ஆண்டுகளில் ரிசர்வ் நிதியிலிருந்து வரும் வட்டியையும் நடப்பு வரிகளையும், ஆதாயங்களைக் கொடுப்பதற்கான மூலங்களாகப் பயன்படுத்துகின்றனர்.

தனியாள் பிரிமியங்களைக் காட்டிலும், கூலி, சம்பள வரிகளையே இவ் வுதவித்தொகை முறை பயன்படுத்துகிறது. உண்மையில் அரசாங்கம் இரண்டு வரிகளை உபயோகிக்கின்றது. ஒரு வரி வேலைக்கு அமர்வோர்களின் கூலியின்மீது விதிக்கப்படுகிறது. வழக்கமாக இஃது அவருடைய சம்பளத்திலிருந்து வேலைக்கு அமர்த்துவோரால் பிடித்தம் செய்துகொள்ளப்படுகிறது. வேலைக்கு அமர்த்துவோர்மீதும் இதற்குச் சமமான ஆயத்தீர்வை ஒன்று விதிக்கப்படுகிறது. ஒவ்வொரு தனியாள் வாங்கும் கூலி அல்லது சம்பளத்தின் ஒரு குறிப்பிட்ட தொகை வரையிலுமே இவ் வரிகள் போடப்படுகின்றன. முதலில் ஆண்டொன்றுக்கு வரிகளுக்கு ஆளான உச்ச எல்லைத்தொகை 3,600 டாலராக இருந்தது. இத் தொகை அடுத்தடுத்து, 4,200 டாலராகவும், 4,800 டாலராகவும் உயர்த்தப்பட்டது. ஆதாயச் செலுத்துகைகளுக்கும், முன்னம் ஈட்டிய தொகைகளுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லாததால் மொத்த வருமானத்தின்மீது இவ் வரிகளை விதிப்பதில்லை. 1937-க்கும் 1944-க்கும் இடைப்பட்ட ஒவ்வோராண்டிலும் (வேலைக்கு அமர்த்துவோர், வேலைக்கு அமர்வோர்) இவர்களின்மீது விதிக்கப்பட்ட இரண்டு வரிகளில் ஒவ்வொன்றும் 1 சதவிகிதத்தில் தொடங்க வேண்டும் என்றும், 1945-ல் 2 சதவிகிதமாக உயரவேண்டும் என்றும், 1946-க்கும் 1948-க்கும்

இடையில் 2·5 சதவிகிதமாக உயர வேண்டும் என்றும், 1949-ல் நிரந்தரமாக 3 சதவிகிதமாக நிறுவப்படவும் வேண்டும் எனவும் சட்டம் கூறியது. ஆகவே, இறுதியாக வரிதாங்கும் கூலிகள், சம்பளங்களில் ஆண்டுதோறும் வேலைக்கு அமர்த்துவோரும், வேலைக்கு அமர்வோரும் சேர்ந்து அளிக்கவேண்டிய தொகை 6 சதவிகிதமாக இருக்கவேண்டும். ஆனால், அடுத்தடுத்துச் செய்த பல திருத்தங்களினால் 1 சதவிகித வீதம் 1949-ல் வைத்துக் கொள்ளப்பட்டாலும், 1960-ல் 2·75 சதவிகிதம் வரையும் வீதங்களும், 1970-ல் 4·25 சதவிகிதம் வரையும் ஏறும் ஒரு புதிய பட்டியல் வீதங்களும், ஆதித் திட்டத்திற்குப் பதிலியாகக் கொணரப் பெற்றன. ஆகவே, 1970-ல் வரிதாங்கும் கூலிகள், சம்பளங்களில் வேலைக்கு அமர்த்துவோர், வேலைக்கு அமர்வோர் இவர்கள் இருவரும் சேர்ந்தளிக்கும் தொகை இவ்வாறு 8·5 சதவிகிதமாக இருக்கும்.

வரிவீதங்களில் மாறுதல்கள், இவ் வீதங்களுக்கு உட்பட்ட உச்ச எல்லைத் தொகைகளில் மாறுதல்கள் இவற்றைத் தவிர்த்து, இத் திட்டத்தில் மேலும் இரண்டு மாறுதல்கள் ஏற்பட்டன. இவற்றில் ஒன்று சுயமாக வேலைபார்க்கும் ஆட்களுக்கும் இத் திட்டத்தை விஸ்தரித்தது. சுயமாக வேலை பார்க்கும் தனியாள், வேலைக்கு அமர்த்துவோராகவும் வேலைக்கு அமர்வோராகவும் ஏக காலத்தில் இருப்பதால் ஒரே ஒரு சம்பளப் பட்டியல் வரியைத் தான் அவர்மீது விதிக்க முடியும். பொதுவாக வேலைக்கு அமர்த்துவோர் அல்லது வேலைக்கு அமர்வோர்மீது விதிக்கப்படும் வரி வீதத்தில் கூடுதலாகப் பாதிவீதமே சுயமாக வேலை பார்க்கும் ஆளின்மீது வரி விதிக்கப்படுகிறது. இங்ஙனமாக 1960-ல் வேலைக்கு அமர்த்துவோர் அல்லது வேலைக்கு அமர்வோர்மீது 2.75 சதவிகிதமே வரி விதிக்கப்பட்டது. ஆனால் சுயமாக வேலை பார்க்கும் ஆளின்மீது 4·125 சதவிகிதமே வரி விதிக்கப்பட்டது (2·75 சதவிகிதத்தில் 1·50 சதவிகிதம்). 1956ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டத் திருத்தங்களின்படி உறுப்புக் குறையுள்ளவர்களுக்கு (ஊனம் உற்றவர்களுக்கு) ஆதாயத்திற்குச் செய்தது இரண்டாவது மாறுதலாகும். தனியாக ஓர் உறுப்புக்குறை ஈட்டுறுதி டிரஸ்டு நிதி படைக்கப்பட்டது. இந் நிதிக்காக அரசாங்கம் வேலைக்கு அமர்த்துவோர், வேலைக்கு அமர்வோர் இவர்கள்மீது ½ சதவிகிதம் வரியொன்று விதித்தது. இவ் வரியையும் முதியோர் எஞ்சியிருப்போர் ஈட்டுறுதி வரியையும் அரசாங்கம் ஒன்றுக்கியது.

1959ஆம் நிதியாண்டில் வேலைக்கு அமர்த்துவோர், வேலைக்கு அமர்வோர், சுயமாக வேலை பார்ப்போர் அனைவரின்மீதும்

போடப்பட்ட முதியோர், உறுப்புக்குறை வரிகள் மூலம் சுமார் 8 பில்லியன் டாலர் கிடைத்தது. இதிலிருந்து நடப்புப் பாத்தியதைகள் செலுத்தப்பட்டன; ஒதுக்கல் நிதிகளுக்கும் மேலும் நிதி சேர்க்கப்பட்டது. அவ்வாண்டின் இறுதியில் இரண்டு ஒதுக்கல் கணக்குகளும் சேர்ந்து சுமார் 23 பில்லியன் டாலராக இருந்தது. அரசாங்க உத்தியோகஸ்தர்களின் உபகாரச் சம்பளங்கள், இருப்புப் பாதை ஓய்வு உபகாரச் சம்பள நிதிகள் இவற்றையும் சேர்த்தால் 1959-ல் வரி வருவாய் 10 பில்லியன் டாலராகவும், ஒதுக்கு நிதிகள் சுமார் 35 பில்லியன் டாலராகவும் இருந்தன.

**வேலையின்மை ஈட்டுவரிகள்** (Unemployment Compensation Taxes) : பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டத்தின் வேலையின்மைக்கான ஈட்டுவிதிகளின்படி இம் முறையைப் பெரிதும் நிருவகிக்க வேண்டிய பொறுப்பு மாநிலங்கள் கையிலேயே இருக்கிறது. மாநிலச் செயல்முறையில் ஓரளவு ஒரே முறையான தன்மை இருக்கின்றதா என்று கூட்டாட்சி பார்த்துக்கொள்கிறது. நான்கு அல்லது நான்குக்கு மேற்பட்ட ஆட்களைக் கொண்ட விதிவிலக்கு அளிக்கப்படாத தொழில்களில் வேலைக்கு அமர்த்துவோர்கள்மீது கூட்டாட்சி ஒரு வேலையின்மை ஈட்டு வரியை விதிக்கின்றது. 1936-ல் இவ் வரி முதன் முதலில் போடப்பட்டது. 1936-ல் இவ் வரிக்குட்பட்டு வேலைக்கு அமர்ந்தவர்களின் கூலியில் 1 சதவிகிதமும், 1937-ல் 2 சதவிகிதமும் இவ் வரி வசூலிக்கப்பட்டது. 1938-ல் இவ் வரி நிரந்தரமாக 3 சதவிகிதம் ஆக்கப்பட்டது. மாநில வேலையின்மை ஈட்டு வரிகளில் 90 சதவிகிதம் கூட்டாட்சியின் வரிக்கு எதிராக வரவு வைக்கப்படுகிறது. இதிலிருந்து மாநில வரிகளில் ஒரே முறையான தன்மை இருக்க வேண்டும் என்பதற்காகக் கூட்டாட்சி, தன் செல்வாக்கை எவ்வாறு பயன்படுத்துகிறது என்பது புலனாகும். இங்ஙனமாக ஒரு மாநிலத்தில் கூட்டாட்சி, ஒரு வேலைக்கு அமர்த்துவோர்மீது விதிக்கும் ஒவ்வொரு 30 டாலர் மதிப்பீட்டிற்கும், அம் மாநிலத்தில் கூட்டாட்சியின் அங்கீகாரம் பெற்ற வேலையின்மை ஈட்டுமுறை இருக்குமானால், அவர் செலுத்திய மாநில வேலையின்மை வரிகளுக்காக 27 டாலர் அவருக்கு வரவு வைக்கப்படுகிறது. ஒரு மாநில வரிவீதம் 2·7 சதவிகிதமாக இருக்குமானால் (கூட்டாட்சியின் வீதம் 3 சதவிகிதம்) இவ் வேலைக்கு அமர்த்துவோர் கூட்டு, மாநில அரசாங்கங்கள் இரண்டுக்கும் சேர்த்து செலுத்த வேண்டிய மொத்தவரி 30 டாலராகும். இதில் 27 டாலர் மாநில அரசாங்கத்திற்கும், 3 டாலர் கூட்டாட்சிக்கும் கிடைக்கிறது. கூட்டாட்சியினால் அங்கீகாரம் செய்யப்பட்ட வேலையின்மை ஈட்டுச் சட்டத்தை இயற்றுவதற்கு ஒரு மாநில அரசாங்கம் மனமில்லாமல் இருக்குமேயாகில்,

வேலைக்கு அமர்த்துவோர்களிடமிருந்து கூட்டாட்சியே வரியை வசூலிக்கும். ஆனால், இந் நிதிகள் வேலைக்கு அமர்ந்தவர்களுக்கு வேலையின்மை ஆதாயங்களைப் பட்டுவாடா செய்வதற்குக் கிடைக்காது. வரவு வைத்தல் விதியின் விளைவாக எல்லா மாநிலங்களும் கூட்டாட்சியின் அங்கீகாரம் பெற்ற முறைகளைச் சட்டமாக இயற்றியிருக்கின்றன. பொதுவாக உயர்ந்தபட்ச வரிவீதங்கள் 2·7 சதவிகிதமாக[3] இருக்கின்றன. இதனால் மாநிலங்கள் கூட்டாட்சியின் வரவு வைத்தலின் முழு ஆதாயத்தையும் பெறுகின்றன.

பருவ உற்பத்தி அல்லது தனிப்பட்ட தொழிலாளர்கள் ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்குச் செல்வதனாலோ, குறிப்பிட்ட நிறுவனங்களில் வேலையின்மையால் ஏற்படும் விளைவுகளை நல்ல திருந்திய நிலைக்குக் கொண்டு வருவதற்காக வேலையின்மை ஈட்டுமுறை ஏற்பட்டதே தவிர வாணிபச் சுழலினால் ஏற்படும் பொதுவான வேலையின்மைக்கு வகை செய்வதற்காக ஏற்படவில்லை. தனிப்பட்ட வேலைக்கு அமர்த்துவோர்கள் தங்கள் வேலையின்மை ஏடுகளைத் திருத்தம் செய்யும்படிச் செய்வதற்காகப் பல மாநிலங்கள் இம் முறையில் தூண்டுகோல்களைப் புகுத்தி யிருக்கின்றன. வேலையை ஒழுங்குபடுத்துவதில் நல்ல சாதனைகள் (records) செய்த வேலைக்கு அமர்த்துவோர்கள்மீது குறைந்த வீதங்கள் விதிப்பதன் மூலம், நாற்பத்தேழு மாநிலங்களும், கொலம்பியா மாவட்டமும் பல்வேறுபட்ட 'தகுதியின்படி வரிவிதித்தல்' (merit rating) அல்லது 'அநுபவத்தின்படி வரிவிதித்தல்' (experience rating) திட்டங்களின்கீழ் வேலையின்மை வரியில் நிவாரணம் அளிக்கின்றன. இவ்வாறான மாநிலங்களில் மிகத் தூக்கலான தகுதியின்படி வேலைக்கு அமர்த்துவோர்களுக்குப் பிரயோகமாகும் வரிவீதம்[4] பூஜ்யமாகவும் இருக்கலாம். தகுதியின்படி குறைந்த மாநில வரிகளை ஏற்றுக் கொள்வதன் வாயிலாகக் கூட்டாட்சிச் சட்டம் தகுதியின்படி வரிவிதிக்கும் திட்டத்தை ஒப்புக்கொள்கிறது. கூட்டாட்சியின் வரவு வைத்தலைக் கணக்கிடுதலில் இவ் வரிகள் செலுத்தப்பட்டதாகக் கொள்ள வேண்டும். எடுத்துக் காட்டாக ஒரு வேலைக்கு அமர்த்துவோர் மீது 3 சதவிகிதப்படி கூட்டாட்சிவரி 3,000 டாலர் என்றும், தரமான மாநில வேலையின்மை வரி வீதம் 2·7 சதவிகிதம் என்றும் வருவதாக வைத்துக் கொள்வோம். வேலைக்கு அமர்த்துவோர் தரமான வீதத்தை உண்மையில் செலுத்துவாரேயாகில் அவர் தன்னுடைய மாநில அரசாங்கத்திற்கு 2,700 டாலரும், கூட்டாட்சிக்கு 300 டாலரும் செலுத்துவார். ஆயினும், இவ்வாறு கூடுதலான தகுதியின்படி வரி விதித்தலால் அவருடைய வேலை

யின்மை வரி வீதம் ·5 சதவிகிதமாக இருக்கும். அவர் மாநில அரசாங்கத்திற்கு 500 டாலரும், கூட்டாட்சிக்கு 300 டாலரும் வரியாகச் செலுத்துவார். இதற்கும், முன் செலுத்திய தொகைக் கும் உள்ள வேறுபாடு 2,200 டாலராகும். இந்த 2,200 டாலரையும் அவர் மாநில அரசாங்கத்திற்குச் செலுத்தாவிடினும், கூட்டாட்சி விதிப்படி அவர் பேரில் வரவு வைக்கப்படுகிறது. கூட் டாட்சியின் வரவின் பகுதியாகத் தகுதிக்காகக் குறைப்புகளை (தள்ளுபடிகளை)ப் பிடித்தம் செய்யு முன்பு மாநிலத் தகுதி வீத முறைகளைக் கூட்டாட்சி அங்கீகாரம் செய்திருக்க வேண்டியது இன்றியமையாததாகும் என்பதைக் குறிப்பிட வேண்டும். 2·7 சதவிகிதத்திற்கு மேலாக வரிவீதங்கள் இருக்கும் மாநிலங்களில் மிகையாகச் செலுத்தி இருக்கும் வரியின் பகுதியைக் கூட்டாட்சி வரிக்கு எதிராகப் பாத்தியதை கொண்டாட முடியாது. ஏனெனில், கூட்டாட்சி வரியின் 90 சதவிகிதம் கூட்டாட்சியின் வரவே அன்றி மாநிலவரியில் வந்தது அன்று. சம்பளப் பட்டியல்களில் 2·7 சதவிகிதத்திற்குத் தூக்கலான வீதங்களை மேற்கொண்ட மாநிலங்கள், நிறுவனங்களில் வேலையை நிலைபேறுடையதாகச் செய்வதற்குத் தகுதித் தூண்டுகோல்களை மட்டுமின்றித் தகுதி யின்மைக்குத் தண்டனைகளையும் பயன்படுத்துகின்றன. மூன்று மாநிலங்கள் வேலைக்கு அமர்த்துவோர்கள்மீது சம்பளப்பட்டியல் வரிகள் விதிப்பதுடன், வேலைக்கு அமர்ந்திருப்போர் கூலிகளின் மீதும் வரிகளை விதிக்கின்றன. இவ்வாறு செலுத்தப்படும் வரி களுக்குக் கூட்டாட்சி யாதொரு வரவும் வைப்பதில்லை.[5]

கூட்டாட்சி வேலையின்மை டிரஸ்டு நிதியில் மாநில வேலை வரி வசூல்கள் 'டிபாசிட்டு' செய்யப்படுகின்றன. 1946 ஆம் நிதி யாண்டின் இறுதியில் இந் நிதியில் மிச்சம் 7·4 பில்லியன் டாலர் இருந்தது. 1936 ஆம் ஆண்டிலிருந்து மாநிலங்களிலிருந்து திரட்டிய டிபாசிட்டுக்களின் கூட்டுத் தொகையில் இது 13 சதவிகிதம் ஆகும்.[6] போர்க்காலத்தில் வேலை வாய்ப்பும் உச்சக்கட்டத்தில் இருந்தது. இதனால் இத் தொகைக்கு வந்து சேர்ந்த அளிப்புக் களும் (contributions) தூக்கலாக இருந்தன (ஆனால் இது உயர்ந்த தகுதியின்படி வரிவிதித்தலினால் ஏறக்குறைய இன்றி யமையாது குறைக்கப்பட்டது). இதிலிருந்து எடுத்த தொகைகளும் மிகக் குறைவு. 1946-ல் தொழில் மீள் மாற்றத்தினாலும் (industrial reconversion) படையினின்று ஆட்களைப்புச் செய்ததி னாலும் வேலையின்மை ஏற்பட்டதன் காரணமாகப் போர்க் காலத்தில் இருந்ததைவிட இந் நிதியின் திரட்சி வேகம் குன்றியது. ஒதுக்கல் நிதி விரைவாக வளர்ந்ததினால், இரண்டாவது உலகப் போரை அடுத்து உடனடியாகக் கூட்டாட்சி வேலையின்மை வரி

வீதங்களைக் குறைக்க வேண்டும் என்று ஒரு கிளர்ச்சி தோன்ற ஏதுவாயிருந்தது. ஆயினும், இக் கிளர்ச்சி வெற்றி பெறவில்லை. மிகத் தூக்கலான வருமானம் கிடைத்த 1947, 1948 ஆம் ஆண்டு களில் பல மாநிலங்களில் தகுதியின்படி வரி விதித்தல் திட்டங் களினால் ஒதுக்கு நிதிக்கான அளிப்புகள் குறைந்தன. 1949, 1953, 1958 ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட பின்னிறக்கத்தால் ஆதாயச் செலுத்துகைகளின் அளவு மிகவும் ஏறியது. பொருளா தார வீக்கக் காலங்களில் கடுமையாக வரிவீதங்களைக் குறைத் திருந்த சில மாநிலங்களில், ஒதுக்கு நிதிகளுக்கே ஆபத்து ஏற்பட்டது. தளவரி வீதங்களைக் குறைப்பதற்கான உற்சாகம் பின்னிறக்க அநுபவத்தினால் பெரிதும் பாதிக்கப்பட்டது. அதே போழ்து தகுதி வரிவீதத் திட்டங்களின் கீழ் பொதுவாகத் திறனை வரிவீதங்களும் உயர்ந்தன. 1958 ஆம் ஆண்டு ஜூன் மீ 30உ வேலையின்மை டிரஸ்டு நிதியில் மிச்சம் 7·8 மில்லியன் டாலர் இருந்தது.

**வேலையின்மீது விதிக்கப்படும் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரி களின் நிலைப்பாடு**[7] (Incidence of Social Security Taxes on Employment): பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டத்தின் கீழ் வேலை யைத் தளமாகக் கொண்டு மூன்று வேறுபட்ட வரிகள் புகுத்தப் பட்டன என்பதை நாம் கண்டோம். அவையாவன : வேலைக்கு அமர்த்துவோர்கள்மீது விதிக்கப்பட்ட வேலையின்மை வரி; வேலைக்கு அமர்த்துவோர்கள்மீது விதிக்கப்பட்ட முதியோர் ஆதாயங்கள் வரி; வேலைக்கு அமர்வோர்கள்மீது விதிக்கப்பட்ட கூலிகள் வரி. ஓய்வு பெற்றபின்பு வருமான ஆதாயங்களும் (retirement income benefits), வேலையின்மை நஷ்டஈடும் தனித் தனி வெவ்வேறுபட்ட திட்டங்களானமையால் அவற்றுக்குத் தனித்தனி வரிகள் வாயிலாக நிதி சேர்ப்பது இன்றியமையாதது. ஆனால், முதியோர் ஆதாயங்களுக்கு வகை செய்வதற்குத் தனித் தனியே இரண்டு வரிகள் விதித்தலினால் இவ்விதமான நிதிகள் வேலைக்கு அமர்த்துவோர்கள், வேலைக்கு அமர்வோர்கள் இருவரிட மிருந்தும் கூட்டாக அளிப்புகளை வசூலிக்க வேண்டும் என்ற கருத் தைப் பிரதிபலிக்கிறது. சட்டத்தின் கருத்தைப் பற்றிய இக் காட்சிப் பிரமாணம் நியாயமென்றால் இரண்டு வரிகளின் நிலைப் பாடும் தனித்தனியே இருக்கும் என்று சட்டம் எதிர்பார்த்த தாகக் கொள்வதும் நியாயமானதே. வேலைக்கு அமர்வோர்களின் கூலிமீது விதிக்கப்பட்ட வரியின் நிலைப்பாடு தொழிலாளர்கள் மீதே இருக்கும் என்று கருதப்பட்டது. இதற்கு உறுதுணையாகக் கூலி தினத்தன்று வேலைக்கு அமர்வோர்களின் கூலியினின்றும் வரியை வேலைக்கு அமர்த்துவோர் பிடித்தம் செய்து கொள்ளலாம்.

என்ற நியதியும் இருந்தது. மற்றோர் பக்கத்தில் வேலைக்கு அமர்த்துவோர்மீது விதிக்கப்பட்ட சம்பளப் பட்டியல் வரியின் நிலைப்பாடு வேலைக்கு அமர்த்துவோர்மீதே இருப்பதாகக் கருதப் பட்டது. அவர்கள் நிறுவனத்தின் இலாபத்திலிருந்து இச் செலுத் துகையைச் செய்வார்கள்.

நிலைப்பாட்டைப் பற்றிய இக் கருத்திலிருந்து இவ் வரிகளில் ஒன்றுயினும் புரட்டப்படவில்லை என்று கொள்வதாகத் தெரி கிறது. ஆயினும், பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டங் களில் ஒவ்வொன்றிலும், ஒன்றல்லது ஒன்றுக்கு மேற்பட்ட விலை வாயில்கள் இருக்கின்றன. தொழிலாளர் கூலியிலிருந்து வரியைப் பிடித்தம் செய்வதால், தொழிலாளரின் தள ஊதியம் உயரலாம். இங்ஙனம் உயர்ந்தால் வரியை வேலைக்கு அமர்த்துவோர்மீது புரட்டலாம். சம்பளப் பட்டியல்களைத் தளமாகக் கொண்டு வேலைக்கு அமர்த்துவோர்மீது விதிக்கப்பட்ட வரிகளைப்பண்டத்தின் விலையை ஏற்றுவதன் மூலம் பண்டத்தை வாங்குவோரின் தலையில், வரியை முற்பட்டுப் புரட்டலாம்; அல்லது உற்பத்திக் காரணிகளில் ஒன்றல்லது ஒன்றுக்கு மேற்பட்டதற்குச் செலுத்துகையைக் குறைப்பதன் மூலம் வரியைப் பிற்பட்டும் புரட்டலாம். வேலைக்கு அமர்த்துவோர்கள், வேலைக்கு அமர்வோர்கள், நுகர்வோர்கள் என்னும் மூன்று பிரிவினர்களில் யார் உண்மையில் இவ் வரிகளைத் தாங்குகிறுர்கள் என்பதை வரையறை செய்வதே நிலைப்பாட்டின் பிரச்சினையாகும். முதலில் நாம் வேலைக்கு அமர்வோர் மீது விதிக்கப் படும் முதியோர் ஆதாய வரியின் நிலைப்பாட்டை ஆராய்வோம். அவனுடைய கூலியில் 2¼சதவிகிதம் அவன் ஈட்டியதாகப் பிடித்தம் செய்யப்படுகிறது. ஆகவே, முதற்கண் வரியின் தாக்கு தொழிலாளரின் கூலியின்மீதே விழுகிறது. இவ் வுதாரணத்தில் முற்பட்டுப் புரட்டுகை நேரிடவில்லை என்றெண்ணுவதற்குப் பல நல்ல காரணங்கள் இருக்கின்றன. இவ் வரி பொதுவாக அனைவர் மீதும் பிரயோகிக்கப்படுவதால் வேறொரு வேலைக்குப் போவதன் மூலம் இவ் வரியினின்றும் தப்பிப்பதற்கு யாதொரு வழியுமில்லை என்பது முதற் காரணமாகும். இவ் வரியின் நிலைப்பாட்டைத் தவிர்ப்பதற்கு இவ் வரிச் செலுத்துகையினின்று விலக்கு அளிக்கப் பட்ட வேலைக்குச் செல்வதே இருக்கக்கூடிய ஒரே வழியாகும். ஆனல், தற்பொழுது யாதாயினும் ஒரு ஈட்டத்தைப் பெறும் தொழிலாளர்களில் 90 சதவிகிதத்திற்கு மேல் இத் திட்டத்தில் அடங்கி யிருக்கிறுர்கள். தொழில் (occupation) அல்லது தொழி லாளர்களின் வேறு சில அமிசங்களும், தொழிலாளர்களின் இடப் பெயர்ச்சியின்மையும், மேலும் இம்மாதிரிப் புடைப் பெயர்ச்சி ஏற்படுவதின் சாத்தியக்கூற்றினைத் தடை செய்கின்றன. இச்

காரணத்தினால் வரிவிதிக்கப்பட்ட தொழில்களில் தொழிலாளர் அளிப்பு குறைவதற்குக் குறைந்த சாத்தியக்கூறே இருக்கின்றது. மார்க்கட்டிலிருந்து கணிசமான அளவுத் தொழிலாளர்கள் எடுபடுவார்கள் என்று நேர்வதும் அபூர்வமே. இவ்வாறு புடைபெயர்ச்சி அல்லது தாமாக வேண்டுமென்றே மடிந்திருத்தல் இவற்றினால் வரிக்குட்பட்ட தொழில்களில் நெடுங்காலத்தில் கூலிகளின் உயர்வுக்கான போக்கைக் காண்பது நடைமுறையில் அரிதாகும்.

தொழிலாளர்கள் ஓய்வு பெற்ற காலத்தில் அவர்களுக்கு வருமானம் கிடைப்பதற்கு இவ் வரி வகை செய்கிறது. இதனால் முதுமைக்காகத் தனியாள் சேமிக்க வேண்டிய அவசியம் ஓரளவு இல்லாமற் போகிறது. இவ் வுண்மையை உணர்ந்த தொழிலாளர் யாரும் இதனால் வரியை வேலைக்கு அமர்த்துவோர்மீது புரட்ட வேண்டும் என்று ஏற்கனவே தீர்மானித்திருந்தால் அவ் வுறுதி இதனால் குலையும். பல உதாரணங்களில் நடப்பு வருமானத்தினின்று தனியார் சேமிப்புக்குப் பதிலியாகவே பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டம் இருக்கிறது. இதனால் இவ் வரியின் நிலைப்பாட்டினால் தொழிலாளருக்கு யாதொரு புதிய அல்லது கூடுதலான பளுவும் ஏற்படுவதில்லை. ஏற்கனவே தானாகச் சேமிப்புச் செய்யாவிட்டாலும், தான் செய்ய வேண்டிய சேமிப்பை, பொதுநலப் பாதுகாப்புத் திட்டத்தின் கட்டாய சேமிப்புக் கூறு செய்வதால், இத் திட்டத்தைக் கட்டாயமென்று அவன் ஒப்புக்கொள்ளுவான். பல தொழிலாளர்கள் ஈட்டுறுதிக்காகும் செலவைவிட ஈட்டுறுதியின் மதிப்பு கூடுதல் என்று நினைக்கின்றார்கள். எந்த நோக்கத்திற்காக இந் நிதிகள் பயன்படுகின்றனவோ அவற்றினாலும், இவ் வரியை வேலைக்கு அமர்த்துவோர்மீது புரட்டுவதற்கான முனைப்பை வலி குன்றச் செய்கிறது என்பதும் நாம் கவனிக்க வேண்டிய விஷயம்.

வரி மிகச் சிறிய அளவே இருப்பதும், இவ் வரியின் நிலைப்பாடு தொழிலாளர்மீதே இருக்கின்றது என்றெண்ணுவதற்கு மூன்றாவது காரணமாகும். பிழைப்பு மட்டத்திற்கு ஓரளவுக்கு மேல், கூலிகள்மீது 3 சதவிகிதத்திற்கும் குறைவாக ஒரு வரியை விதிப்பதால் கூலி உயர்வு வேண்டுமெனக் கோரிக் கிளர்ச்சி நடத்துவதைச் சரியென நிலைநாட்ட முடியாது. இறுதியில் 4·25 சதவிகிதம் வரி விதித்தாலும், வேலைக்கு அமர்த்துவோர்மீது வரியைப் புரட்டத் தொழிலாளர்கள் மிக்க செல்வாக்கைப் பயன்படுத்துவார்களா என்பதும் ஐயத்திற் குரியதே. ஒரு மாதிரி உதாரணத்தில் தொழிலாளர் கூலியினின்றும் வரியைப் பிடிப்பது ஒரு நிகர் வருமானவரி போல்வதாகும். அப் பிடித்தம் மிகக் குறைவாக இருப்பதால் அவனுடைய வாழ்க்கைத்தரம் இதனால் பாதிக்கப்படுதில்லை.

ஆகையால் மொத்தத்தில், வரிவிதிக்கப்படாத வேலைக்குச் செல்வதன் வாயிலாகவோ நெடுங்காலத்தில் இந் நிறுவனங்களில் தொழிலாளர் அளிப்பைக் குறைத்துக் கூலிகளைக் கூட்டுவதன் வாயிலாகவோ, வரியின் தாக்கினின்று தப்பிப்பதற்குச் சாத்தியக் கூறு சிறிதுமில்லை என்பதை நாம் காண்கின்றோம். மேலும் வரியின் பருமனும் அது விதிக்கப்படும் ஒழுகலாறும், இந் நிதிகள் எவ்வெப் பிரதேசங்களுக்குச் செலவழிக்கப்படுகின்றன என்பதும், வீத ஏற்றங்களைப் படிப்படியாகக் கொண்டுவரும் திட்டமும் இவ் வரியைப் புரட்டுவதற்கான முயற்சிகளை ஊக்குவிப்பது மிகவும் அசாத்தியமே. மேலும், பங்கீட்டில் உள்ள பங்குகள் அனைத்திலும், கூலிகளே வரிவிதிப்புக்குக் குறைந்த எதிர்ப்பைத் தெரிவிக்கும் நிலையில் உள்ளன என்பதும் பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. இவ்வாறு தொழிலாளி இவ் வரியை முற்பட்டுப் புரட்டச் செய்யும் முயற்சி ஒருகால் வெற்றிபெறுது போகலாம்.

தாக்கிலும், நிலைப்பாட்டிலும் சம்பளப் பட்டியலில் 3 சதவிகிதம் உள்ள வேலையின்மை நஷ்டஈட்டு வரியும் முதுமை ஆண்டுத் தொகைகளுக்காகத் தற்போதுள்ள சம்பளப்பட்டியல்களில் 2·75 சதவிகித வரியும், ஒன்றையொன்று ஒத்திருக்கின்றன. இவை யிரண்டும் வேலைக்கு அமர்த்துவோர்மீது விதிக்கப்பட்ட பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரிகளாகும். முதலில் அவை இரண்டையும் ஒரு வரியாகவே கொண்டு ஆராய்வோம். பின்னர் அவற்றின் நிலைப்பாட்டைப் பொறுத்து அவற்றின் வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டுவோம். நிலைப்பாட்டிற்கான மூன்று சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. சாத்தியமாளுல் பிற்பட்டுப் புரட்டுகை கூலி வாயிலாகவும், முற்பட்டுப் புரட்டுகை வாங்குவோர்கள் விளையுள்களுக்குத் தரும் விலை வாயிலாகவும் நேரலாம். இவை யிரண்டும் சாத்தியமில்லையாளுல் வரிப்பளு வேலைக்கு அமர்த்துவோரின் இலாபத்திலிருந்து ஒரு பிடித்தமாக அவர்மீதே உறைக்கும். இம் மூன்று சாத்தியக்கூறுகளில் வேலைக்கு அமர்த்துவோர் இவ் வரியைத் தாங்குவார் என்பது அருமையாகத்தான் இருக்கும். ஆயத்தீர்வைகள் யாவும் சேர்ந்து வேலைக்கு அமர்த்துவோரின் சம்பளப் பட்டியலில்[8] சுமார் 6 சதவிகிதம் வரியாகச் செலுத்தப்படுகின்றதை நாம் ஏற்றுக்கொள்வோமாக. இவ் விரு வரிகளும் சேர்ந்த மொத்த நிலைப்பாடு, இவ் வரிகளுக்கு ஆளான வேலைக்கு அமர்த்துவோர்களின் இலாபங்களின்மீது இருக்குமாளுல், நிகர் இலாபத்தில் கணிசமான அளவு குறைவு ஏற்படும்.[9] இலாப வருமானங்களின்மீது இவ் வரி பெரும் பளுவாக இருக்குமானதால் தொழிற்றுணிவு செய்பவர்கள் இவ் வரியைப் புரட்டுவதற்குத் தம்மாலானதை எல்லாம் செய்வார்கள் என்பதும் ஐயத்திற்கிட

மின்றி உண்மையே யாகும். வரி சிறு அளவினதாக இருக்கும் பொழுது வரியின் நிலைப்பாட்டை நிர்ணயிக்கும் முக்கியக் காரண மாக வரித் தாக்கே இருக்குமென்பதும் ஒப்புக்கொள்ளக் கூடியதே யாகும். ஏனெனில், வரியின் அளவு சிறியதாக இருக்கும்பொழுது முதலில் வரியைச் செலுத்துபவரே அதைத் தாங்கக்கூடும். அவர் இன்றியமையாத தடங்கல்களைத் தாண்டி வரியைப் புரட்டுவார் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், வரி பெருத்த அளவின தாக இருக்குமானால் வரியைப் புரட்டுகை குறைந்த முக்கியத்துவம் உள்ளதாகிறது. வரியைப் புரட்டுவதில் என்னென்ன சாத்தியக் கூறுகள் இருக்கின்றன என்பதை அவர் அப்பொழுது சோதனை செய்து பார்ப்பார்.

வேலைக்கு அமர்த்துவோர் இவ் வரியைப் புரட்ட விழைவார் என்று வைத்துக்கொண்டு வரியைப் புரட்டும் முயற்சி வெற்றி யடையுமா என்பதை நாம் ஆராய்வோம். உற்பத்தியின் விலையை ஏற்றி வாங்குவோர் தலையில் வரியை முற்பட்டுப் புரட்டக்கூடிய சாத்தியக்கூற்றை நாம் முதலில் ஆராய்வோம். சம்பளப் பட்டியல் களின் மீதான ஒரு வரிக்கும், இறுதிநிலை ஆக்கச் செலவுகளுக்கும் ஒரு பெருத்த ஒற்றுமை இருக்கிறது. தொழிலாளர்களின் கூலிகள் மீது செலுத்தப்படும் வரிகளுக்கும், உற்பத்தியில் பயன்படுத்திய பருப்பொருள்களின் ஆக்கச் செலவிற்கும் ஒற்றுமை இருக்கிறது. இறுதிநிலை ஆக்கச் செலவில் உயர்வு என்பது அளிப்புக் குறைவு ஏற்படுவதற்குச் சமானமேயாகும். இதனால் விலையில் ஓரளவு ஏற்றம் ஏற்படுகிறது. விளையுளின் தேவை ஒப்புமையில் நெகிழ்ச்சி உள்ளதாக இருக்குமானால், விலை ஏற்றம் விற்கக்கூடிய கணியத்தை மிகவும் குறைப்பதுடன், விற்பவரின் நிகர வருமானத்தையும் இன்றியமையாது குறைப்பதும் திண்ணம். தேவை நெகிழ்ச்சி இல்லாததாக இருக்கும்பொழுது முற்பட்டுப் புரட்டு கைக்கு வாங்குவோர்களின் எதிர்ப்பு மிகக் குறைவாக இருக்கிறது. ஆனால், விலை ஏற்றத்தை அடுத்து உடனடியாக விற்பனையாகும் கணியத்தில் சிறிது குறைவு ஏற்படுகிறது.

வரி விதிக்கப்படாத வேலைக்கு அமர்த்துவோர்களிட மிருந்து வரும் போட்டியால் முற்பட்டுப் புரட்டுகைக்குக் கடுமை யான எதிர்ப்பு ஏற்படுகின்றதா என்பது ஐயத்திற்குரியதே. வரிக்கு உட்படாத தொழில்களில் விலைகளை ஏற்ற வேண்டும் என்ற முனைப்பு இல்லாததால், வரிக்குப்படாத தொழில்கள் இருப்பது வரிக்குட்பட்ட வேலைக்கு அமர்த்துவோர்களின் புரட்டுகையை சிரம சாத்தியமாக்குகிறது என்று சில சமயம் வாதிக்கின்றனர். ஆனால், இவ் வாதத்தின் உண்மை, வரிக்கு உட்பட்ட வேலைக்கு

அமர்த்துவோர்கள், வரிக்கு உட்படாத வேலைக்கு அமர்த்து வோர்கள் இவர்களிடையே உள்ள போட்டியின் திறப்பாட்டைப் பொறுத்திருக்கிறது. முதுமை ஆதாயங்களுக்கான சம்பளப்பட்டிய லின் மீதான 2·75 சதவிகித வரியைப் பொறுத்தவரை, இவ் வரியி லிருந்து விலக்களிக்கப்பட்ட பெரிய பிரிவினர் மருத்துவர்களும், அத்துக் கூலிக்கு வேலை செய்பவர்களுமே ஆவர். ஆயினும் சில மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும், இலாபமில்லாத நிறுவன அமைப்புகளும் இதுகாறும் இதில் சேருவதற்கு விருப்பம் தெரிவிக்கவில்லை. வரி போடப்பட்ட தொழில்களின் உற்பத் திக்குப் பதிலியாக வரி போடப்படாத தொழில்களின் உற்பத்திகளை விற்பதற்குத் தெளிவாக, பெரும்பாலும் யாதொரு வாய்ப்பும் இல்லை. இக் காட்சிப் பிரமாணத்திலிருந்து, தாங்கள் மார்க்கட்டுகளை இழந்து விடுவோம் என்ற அச்சத்தினுல் உந்தப் பட்டு வரிவிதிப்புக்கு ஆளான வேலைக்கு அமர்த்துவோர்கள், எந்தக் கணிசமான அளவுக்கும் வரியை முற்பட்டுப் புரட்டுவதி னின்று பின்வாங்க மாட்டார்கள் என்று ஏற்படுகிறது. வரிவிதிப் புக்கு ஆளாகாத வேலைக்கு அமர்த்துவோர்கள் இவர்களைப் பின் பற்றி வரியை முற்பட்டுப் புரட்ட முனையமாட்டார்கள் என்பதும் உண்மையே. சம்பளப் பட்டியல்களின்மீது விதிக்கப்படும் 3 சத விகித வேலையின்மை ஈட்டு ஆயத்தீர்வைகளைப் பொறுத்தவரை, வரிக்கு ஆளான வேலைக்கு அமர்த்துவோர்களுக்கும், வரிக்கு ஆளாகாத வேலைக்கு அமர்த்துவோர்களுக்கும் இடையே போட்டி யிருப்பதற்கான சாத்தியக்கூறு இருக்கிறது. OASI வரியைக் காட்டிலும் இவ் வரி அதிகமான வேலைகளுக்கு விலக்கு அளிப்ப தோடு, இரண்டு முற்றிலும் வேருன அல்லது ஓரளவு விலக்கு அளிக்கப்பட்ட குழுக்களையும் சேர்கிறது. நான்கு தொழிலாளர் களுக்கும் குறைவாக[10] வேலைக்கு அமர்த்தியிருக்கும் கும்பலும் வேலை நிலைபேறுக்கு நற்பெயரெடுத்து அதனுல் தகுதி வரிவீதத்தின் கீழ் குறைவான வரிவீதங்களைச் செலுத்துகின்ற ஆதாயங்களை யுடைய கும்பலுமே இவ் விரண்டும் ஆகும். சில்லறை, சேவை வியாபாரங்களைத் தவிர்த்து, நான்குக்கும் குறைவான ஆட்களை வேலைக்கு அமர்த்தியிருப்போர் ஒரு கடுமையான போட்டிபோடக் கூடிய அளவுக்குப் பெருவாரியாக இல்லை. நான்குக்கு மேற்பட்ட ஆட்களை வேலைக்கு அமர்த்தியிருப்பவர்களின் உற்பத்திக்குப் பதிலி யாக நான்கு ஆட்களுக்கும் குறைவாக வேலைக்கு அமர்த்தியிருப் பவர்களின் உற்பத்தி, பெருமளவுக்கு இருந்தால், இவர்களும் வரிசெலுத்தும் வருக்கத்தினரில் சேர்க்கப்படுவார்கள் என்பதே இதற்குக் காரணமாகும். தூக்கலான தகுதி வரிவீதம் உடைய வேலைக்கு அமர்த்துவோர்களின் போட்டிச் சாத்தியக்கூறு தெளி வாக இல்லை. இவர்கள் குறைந்த வரிவீதத்தைச் செலுத்து

கின்றார்கள். நெடுங்காலம் பூராவும் ஒரு குறிப்பிட்ட வேலைக்கு அமர்த்துவோரின் தகுதியின்படி வரிவீதமும் நிலைபேறாக இருக்க முடியாது. இம்மாதிரியான உதாரணத்தில் தகுதி வரிவீதத் தூண்டுகோலைக் காட்டிலும் வாணிபச் சூழல், தொழில் நுட்ப மாறுதல் இவற்றின் தாக்கு வலுவுடையதாக இருக்கும். ஆகவே வேலைக்கு அமர்த்தும் பெருத்த கும்பல்களிடையே தகுதி வரி வீதங்கள் ஏறக்குறைய ஒரேபடித்தாக ஏறும் அல்லது இறங்கும் என்று எதிர்பார்ப்பது நியாயமாகும். இங்ஙனம் ஏற்படும் அளவுக்கு, எதிர்பார்த்ததைவிட ஒரு குறிப்பிட்ட நேரத்தில் வேலைக்கு அமர்த்துவோர்களிடையே குறைவான போட்டி வேற்றுமைப்பாடே இருக்கும். மேலும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் போட்டிபோடும் வேலைக்கு அமர்த்துவோர்களிடையே, தகுதியின் பிடியுள்ள வரிவீதத்தில் வேற்றுமைகள் இருக்கலாம். வேற்றுமை களினால் வேலையின்மை வரிவிதிப்பில் வேறுபட்ட வீதங்கள் விதிக்கப்படலாம். ஆயினும், கூடுதலாக வரிவிதிக்கப்பட்ட வேலைக்கு அமர்த்துவோருக்கு இதனை ஈடுகட்டும் செலவுகள் பல சமயம் ஏற்படுகின்றன. வாணிபச் சூழல் அல்லது பருவகால வேறுபாட்டால் விற்பனைகள் குறைந்தாலும், வேலையை நிலை பேறான மட்டத்தில் வைத்திருந்தால், இந் நிலைபேறு (தூக்கலான தகுதி வீதமும்) செலவை மேற்கொள்ளுவதனால்தான் ஏற்படும். இச் செலவு வரிவீத அநுகூலத்தை ஓரளவுக்கு ஈடு செய்கிறது. தொழில் நுட்ப மேம்பாடுகளை மேற்கொள்ளுவதில் உள்ள தயக் கத்தினால் வேலையில் நிலைபேறு ஏற்படுமானால், வரி ஆதாயங்களை ஓரளவு ஆக்கச் செலவில் உள்ள வேற்றுமைப்பாடு ஈடுசெய்யும். ஆகவே, மொத்தத்தில், குறைந்த வரியுடைய அல்லது வரியில்லாத வேலைக்கு அமர்த்துவோர்களிடமிருந்து வரும் போட்டியினால், சம்பளப்பட்டியல்கள்மீது வரியைச் செலுத்தும் வேலைக்கு அமர்த்து வோர் முற்பட்டுப் புரட்டுவது பாதிக்கப்படுவதில்லை.

வேலைக்கு அமர்த்துவோர்கள், சம்பளப்பட்டியல்களின் மீதான வரிகளின் ஒரு சிறிய பகுதியையே தாங்குவார்கள் என்பது தெற் றெனப் புலனாகிறது. ஏனெனில், நுகர்வின்மீது விதிக்கப்படும் பொது வரிகளைப் போன்றே இவ் வரிகளையும் முற்பட்டுப் புரட்டு வதற்கான சாத்தியக்கூறுகள் இருக்கின்றன. ஆயினும் இவ் வரிகள் பிற்பட்டுப் புரட்டப்பட்டு இதனால் தொழிலாளர்கள் 'வீட்டுக்குக் கொண்டு செல்லும் ஊதியம்' குறையும் சாத்தியக்கூறு இருப் பதையும் நாம் பரிசீலிக்க வேண்டும். இவ் விஷயத்தைப் பற்றி எழுதிய பொருளியற் புலவர்களின் பொதுவான கருத்து, வேலைக்கு அமர்த்துவோர்மீது விதிக்கப்படும் வரிகளைப் பிற்பட்டுப் புரட்டுகை பெரும்பாலும் முடியும் என்று தோன்றுகிறது.

அவர்கள் பல சாத்தியக்கூறுகளில், வரியைப் புரட்டுகையும் ஒன்றெனக் கருதுகிருர்கள். தொழிலாளர்கள் கூலியின்மீது விதிக்கப்படும் வருமான வரியின் நிலைப்பாடு தொழிலாளர்கள் மீதே இருக்கிறது என்ற முடிவுக்கு வருவதற்கு என்ன காரணங் களோ, அதே காரணங்களே இம் முடிவுக்கும் வரப் பெரும்பாலும் காரணமாயிருக்கிறது எனலாம். நிலைப்பாடு ஏற்பைத் தவிர்ப் பதற்காகத் தொழிலாளர்கள் வரிக் குட்பட்ட வேலையினின்று வரிக் குட்படாத வேலைக்குச் செல்லமுடியாது என்பது இக் காரணங்களில் முதலாவதாகும். இவ்விதம் புடைபெயர்வு சாத்தியமானுல், வரிக்குட்பட்ட வேலைகளில் தொழிலாளர்களின் சப்ளை குறையும். ஆகவே, எஞ்சிய வேலையிலிருக்கும் தொழிலாளர்களின் கூலி, வரியையும் கொடுக்கக்கூடிய அளவுக்கு உயரலாம். ஆனுல் தொழிலாளர் இடம் பெயராமைக்கு உள்ள எல்லாக் காரணி களும் புடைபெயர்வுக்கு எதிராக இருக்கின்றன. குறிப்பாக வரி விலக்குக்கு ஆளான தொழில்களில் புகுவதில் கிட்டத்தட்ட முடியாத காரியம் என்பது புடைபெயர்வுக்கு எதிரான காரண மாகும். இறுதியாக, வரி போடப்படாத வேலைக்குப் புடைபெயர் வதனுல், முதுமைக்கால ஈட்டுறுதி, வேலையின்மை நஷ்டஈடு இவ் வாதாயங்களை அளிக்காத வேலைக்குத் தொழிலாளர்கள் போகும் நிலை ஏற்படலாம்.

சம்பளப்பட்டியல் வரிகளின் நிலைப்பாடு தொழிலாளர்கள் மீதே இருக்கின்றது என்று நம்புவதற்கு, இவ் வரிகளினுல் பொது வாகப் பண்டங்களுக்கானத் தேவை ஏறவில்லை என்பதும், மேலும் ஓர் காரணமாகும். இங்ஙனமாகப் பொதுவாகத் தொழிலாளர் களுக்கான தேவை ஏருது. மற்றெரு பக்கத்தில், வரியை முற்பட்டுப் புரட்டுகைக்காக விலைகளை ஏற்றும் முயற்சிகளினுல் வெளிப்பாடும், வேலையும் ஓரளவு குறையும். தொழிலாளர்க ளிடையே போட்டி நிலவும் நிலையிலும், தொழிலாளர் அளிப்பு நெகிழ்ச்சியற்றதாக இருக்கும் நிலையிலும் குறைந்த நிகரக் கூலி களிலேயே புதிய சமநிலை ஏற்படும். நெடுங்காலத்தில் வரியும் பிற்பட்டுப் புரட்டப்படும்.[11] வேலைக்கு அமர்த்துவோர்மீது விதிக் கப்படும் சம்பளப்பட்டியல் வரிகள் பெரும்பாலும் தொழிலாளர் மீது புரட்டப்படுகின்றன என்ற முடிவைக் குறுங்காலத்தில் கட்டுப் படுத்தும் விதிகள் எப்பொழுதுமே உள்ளன. ஆக்கச் செலவுக்கும் கூடுதலாக ஒப்பந்தம் செய்து கொண்ட உற்பத்தியாளர்கள் (உ—ம். அரசாங்கத்திற்காகப் போர்க்காலத்தில் உற்பத்தி செய்தது) இவ் வரிகளைப் பண்டத்தின் விலையை உயர்த்துவதன் மூலமாக முற்பட்டுப் புரட்டலாம். இதே போன்று பொருளாதார வீக்க காலங்களிலும் தொழிலாளர் பற்றுக்குறையாகவும், தேவை

பெருத்த அளவிலும் இருப்பதால் பிற்பட்டுப் புரட்டுகையைக் காட்டிலும் முற்பட்டுப் புரட்டுகைக்கு எதிர்ப்புக் குறைவாகவே இருக்கும்.[12] வேலைக்கு அமர்த்துவோர்கள்மீது சம்பளப்பட்டியல் வரிகளை விதித்த காலத்து, அப்போது அமுலிலிருந்து கூலி ஒப்பந் தங்கள், அவ் வொப்பந்தக் காலம் முடியும் அளவும் பிற்பட்ட புரட்டு கையைத் தடை செய்யும். நெடுங்காலத்தில் வேலைக்கு அமர் வோர்களிடையே மிகத் திறப்பாடாகப் பேரம் பேசும் நிறுவனம் அமைக்கப்படும் பொழுது, வரியின் பெரும் பகுதியையும் தங்களைக் கட்டுக் கோப்பாக அமைத்துக் கொள்ளாத பண்டத்தை வாங்கு வோர் தலையில் புரட்டமுடியும் என்பதில் ஐயமில்லை.

இந் நிதிகள் எந்தப் பயனுக்கு உபயோகமாகின்றனவோ அதுவும் இவ் வரிகள் பொதுவாகப் பிற்பட்டுப் புரட்டப் படலாம் என்று எதிர்பார்ப்பதற்கு இறுதிக் காரணமாகும். பொது நலப் பாதுகாப்புத் திட்டத்தின் ஆதாயங்கள் தொழி லாளர்களுக்கே கிடைக்கின்றன என்றும், ஆகவே இச் செல வின் பெரும் பகுதியையும் தொழிலாளர்களே மேற் கொள்ள வேண்டும் என்றும், தொழிலாளர்களும் பொது மக்களும் பொதுவாக எண்ணுவதால் பிற்பட்டுப் புரட்டுகைக்குத் தொழி லாளர்களின் எதிர்ப்பு தளர்கிறது. இவ் வகையான எல்லா வரி களின் நிலைப்பாடும் தொழிலாளர்கள்மீதே இருக்க வேண்டும் என்று பொதுவாக ஒப்புக்கொண்டால்,[13] நிலைப்பாடு அவர்களின் பேரிலேயே இருக்கும் என்ற சாத்தியக்கூறு அதிகமாகிறது. சுருங்கக் கூறின், பொது நலப் பாதுகாப்புத் திட்ட வரிகளின் நிலைப் பாடு முக்கியமாக வேலைக்கு, வேலையில் அமர்ந்திருக்கும் தொழி லாளர்கள் மீதே இருக்க நாம் காண்கிறோம். கூலி செலுத்தும் பொழுது பிடிக்கப்படும் கூலி (வருமான) வரியின் நிலைப் பாடு தெளிவாகக் கூலி பெறுவோர்மீதே இருக்கிறது. வேலைக்கு அமர்த்துவோர் செலுத்தும் இரண்டு ஆயத் தீர்வைகளில் பெரும் பகுதியின் நிலைப்பாடும் நெடுங்காலத்தில் வேலைக்கு அமர்ந்திருக்கும் தொழிலாளர்கள் மீதே இருக்கக் காண்கின்றோம். எஞ்சியுள்ள நிலைப்பாடு, பண்டங்களைவாங்குவோர் மீதும், விற்பனையாளர்கள்மீதும் விழுகிறது. இதில் பெரும் பகுதி வாங்குவோர்கள்மீதே விழுகிறது. புரட்டுகையைச் சிறிதே எதிர்க்கும் அணிகள் நிறுவனங்களிடையேயும், தொழில்க ளிடையேயும் மாறுகின்றன என்ற உண்மையையும், வாணிபச் சுழலில் மாறுதல்கள் ஏற்படுவதற்கு ஏற்ப இவை மாறுகின்றன என்ற உண்மையையும் இப் பொதுமை புறக்கணிக்கவில்லை. நிலைப் பாடு முக்கியமாகத் தொழிலாளர்கள்மீதே விழுகிறது என்னும் இப் பகுத்தாய்வின் முடிவுக்கு வரலாற்று நிலைகளும் வலிவூட்டுவன

வாக இருக்கின்றன என்பதும் கவனதிற்கு உரியது. கூலிகளில் உயர்வும், அரசாங்க நிவாரணத் திட்டங்களை அகற்றுவதும் ஏற்பட்டுக் கொண்டிருந்த காலங்களில் பொதுநலப் பாதுகாப்புத் திட்டவரிகள் முதற்கண் தோன்றின. இவ்வாறான நிலைகளில் இவ் வரிகளைத் தொழிலாளர் செலுத்துவதும் இயலக் கூடியதே. ஒரு முறை புரட்டப்படுவதனால், அப்போது செயல் முறையில் இருந்த கூலி வீதங்களுடன் வரி நிலைப்பாடு உள்ளடக்கப்பட்டது. இம் மரபின் மோதலினால் இது நிலைத்தது.

**வருவாய் முறையில் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரிகள் (Social Security Taxes in the Revenue System):** முதுமைக் கால ஆதாயங்களுக்கும், வேலையின்மை நஷ்ட ஈட்டுக்கும் வகை செய்யும் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட சட்டத்தின் பிரிவுகள் நம்முடைய சர்ச்சையில் பெரிதும் இடம் பெற்றதற்குக் காரணம், அவற்றுக்கான நிதிக்கு அவை பிரத்தியேக வரிகள் மூலம் வகை செய்வதேயாகும். ஆயினும், வரி வசூல்கள், ஆதாயச் செலுத்துகைகள், நிதிகளைக் கையாளுதல் இவற்றுக்கிடையேயுள்ள பெருத்த தொடர்பைச் சுருக்கமாக விளக்குவது விரும்பத்தக்கதாகும். பொதுநலப் பாதுகாப்புத் திட்ட முறையின் ஈடுசெய்யும் கூறுகளை ஆராய்வதற்கு நாம் இதன் மூலம் ஆயத்தம் செய்து கொண்டவர்களாவோம். வேலைக்கு அமர்த்துவோர்கள் மீது விதிக்கப்படும் வேலையின்மை நஷ்ட ஈடு ஆயத்தீர்வைகளில் பெரும் பகுதியையும் மாநில அரசாங்கங்கள் வசூலித்து, கூட்டாட்சி வேலையின்மை டிரஸ்டு நிதியில் தத்தம் மாநிலத்தின் பேரில் (டிபாசிட்டு) கட்டி வைக்கின்றன. பொது நலப் பாதுகாப்புத் திட்டக் கழகம் வேலையின்மை டிரஸ்டு நிதியை அமெரிக்க ஐக்கிய நாடுகள் அரசாங்கத்தின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்கிறது. காங்கிரசின் ஒழுங்கான ஒதுக்கிவைத்தல் மூலம் இம் முதலீடுகளின் மீதான வட்டி வேலையின்மை டிரஸ்டு நிதிக்குச் செலுத்தப்படுகிறது. முதுமைக்கால ஆதாய முறை முழுமையும் கூட்டாட்சியைச் சேர்ந்தது. வேலைக்கு அமர்த்துவோர்கள், வேலைக்கு அமர்வோர்கள் இவர்களின் பேரில் விதிக்கப்படும் வரிகள் முதுமைக்கால எஞ்சியிருப்போர்களின் ஈட்டுறுதி டிரஸ்டு நிதியில் சேர்க்கப்பட்டு, இந் நிதியிலிருந்து ஆதாயங்கள் செலுத்தப்படுகின்றன. இந்த நிதியும் வேலையின்மை டிரஸ்டு நிதியைப் போன்றே கருவூலக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யப்படுகிறது.

பொருளாதார வீக்கக் காலங்களில் சேமிப்பு நிதிகளைத் திரட்டுவது இவ்விரண்டு திட்டங்களின் நோக்கமாகும். பின்னர்

இவை எடுக்கப்பட்டு ஆதாயச் செலுத்துகைளுக்குச் செலவழிக்கப் படும். வேலையின்மை நஷ்ட ஈட்டைப் பொறுத்த அளவில் வேலையின்மை 'ஈட்டுறுதி செய்யக்கூடிய ஆபத்து' அன்று என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஏனெனில், வேலையின்மை தோரணை என்று ஒன்றும் கிடையாது. அது மீண்டும் ஏற்படும் என்று நம்பவும் முடியாது. சேமிப்பு நிதிகள் போதுமானவையாக இருக்கும் வரையில்தான் இத் திட்டத்தின்படி ஆதாயங்களைச் செலுத்த வேண்டும். மாநில நிதிகள் தீர்ந்து போனால் கூட்டாட்சி இவ் வாதாயச் செலுத்துகைகளைச் செய்யும்படி நேரிடலாம். ஆனால் சட்டம் இதற்கு வகை செய்யவில்லை. எடுப்பதைக் காட்டிலும் மிகையாக இருக்கும்படி, முதுமைப் பருவத்திற்கான ஆதாயங்களுக்கான சேமிப்பு நிதியின் திரட்சி இருக்க வேண்டும். இங்ஙனம் இருந்தால்தான் மக்கள் தொகையின் சராசரி வயது ஏறினாலும், நடப்பு வரி வசூல்களுக்குத் துணையாக சேமிப்புகளிலிருந்தும் ஆதாயங்களைச் செலுத்தலாம். ஆதாயங்கள் ஒப்பந்தப் படிச் செலுத்தப்படுகின்றன என்பதை நாம் உணரும்பொழுது, இதற்கும் தனியாள் ஈட்டுறுதிக்கும் உள்ள ஒப்புமை சிதைந்து விடுகிறது. நன்மை பெறுவோர்களிடையே செலுத்தப்படும் ஆதாயத்தொகையின் அளவு கிட்டத்தட்ட ஒரே தன்மையாக இருக்கிறது. இவ் வாதாயத் தொகையின் அளவு, நிதிகளுக்குத் தனியாட்கள் தரும் அளிப்புகளைப் பொறுத்துப் பெரிதும் நிர்ணயிக்கப்படுவதில்லை (கூலிகளைத் தளமாகக் கொண்டே அளிப்புகள் இருப்பதால் ஓரளவு சுமாராக அளிப்புகளுக்கும், ஆதாயங்களுக்கும் தொடர்பு இருக்கிறது எனலாம். ஆயினும் தனியார் ஈட்டுறுதியில் உள்ளதைப்போல் இத் தொடர்பு திட்டவட்டமானதாக இல்லை).

தனியாள் அளிப்புகளுக்கும், தனியாள் ஆதாயங்களுக்கும் தொடர்பின்மையிலிருந்து இவ் விரண்டு பொதுநலப் பாதுகாப்புத் திட்டங்களுக்கும், தனியார் ஈட்டுறுதி ஒப்பந்தங்களுக்கும் பொதுவான யாதொரு தொடர்புமில்லை எனத் தெரிகிறது. மாநில நெடுஞ்சாலைச் செலவுகளைப் போன்றே இவையும் அதே தோரணை உள்ளதாக மிகவும் தருக்க அடிப்படையில் கொள்ளப்படுகிறது. மோட்டார் ஓட்டிச் செல்பவர்களின்மீது விதிக்கப்படும் சிறப்பு வரிகள் ஒரு பிரத்தியேக நெடுஞ்சாலை நிதியில் சேர்கிறது. பின்னர் இந் நிதி நெடுஞ்சாலைகளை அமைப்பதற்கும், பழுது பார்ப்பதற்கும் பயன்படுகிறது. ஒரு சாலை அமைப்புத் திட்டத்திற்கு நெடுஞ் சாலை நிதி போதவில்லை என்றால், எவ்வளவு குறைகிறதோ, அத் தொகைக்குப் பொது நிதியிலிருந்து ஒதுக்கிவைத்தல் மூலம் வகை செய்யப் பெறுகிறது. நல்ல சௌகரியமான சூழ்நிலையுள்ள காலங்களில் இந் நிதிகளை உபரியாக வைத்திருப்பதற்கு இரண்டு

பொதுநலப் பாதுகாப்புத் திட்டங்களும் வகை செய்கின்றன. வேண்டும்போது இந் நிதிகளைச் சட்டத்தின்படித் தர வேண்டிய ஆதாயங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். வேலையின்மை நஷ்ட ஈட்டுச் சேமிப்பு நிதி தீர்ந்து போகுமானால், மாநிலங்கள் தங்கள் பொது நிதிகளிலிருந்து கணிசமான அளவு ஒதுக்குவதும் கூடும். முதுமைப் பருவ சேம நிதிக் கணக்கில் ஏற்படும் பற்றாக் குறைகள், ஆதாயச் செலுத்துகைகள் குறைவதற்கு முன்னமேயே கூட்டாட்சிப் பொக்கிஷத்தின் பொதுநிதிகளிலிருந்து சரிக்கட்டப் படும் என்பதும் நடக்கக் கூடியதே.

முதுமைப் பருவ, எஞ்சியிருப்போர் ஈட்டுறுதியைப் பொறுத்த அளவில், முதலில் திட்டமிட்டவாறு விரைவாக வரிவீதங்களை முற்கூற்றில் திரட்ட முடியாமல் போனதிலிருந்து வருவாய் களின் மீது சுமத்தப்பட்ட கடமைகளின் ஒரு பகுதியாக இவற்றை ஏற்றுக் கொண்டது விளங்கும். ஆயினும், 1956ஆம் ஆண்டில் செய்யப்பட்ட திருத்தங்கள் சுய ஆதரவுக் கொள்கையை வலுவாக மீண்டும் வலியுறுத்துகின்றன. முதுமைப் பருவ ஆதாயங்களைச் செலுத்துவதற்காக சேமிப்புகளைத் திரட்டுவதை எதிர்ப்பவர்களும் உண்மையில் இருக்கின்றார்கள். அவர்கள் ஒவ்வொரு தலைமுறை யும் தத்தம் காலத்தில் முதுமை அடைந்தவர்களைப் பரா மரிக்க வேண்டும், பராமரிக்கிறார்கள் என்று வாதிக்கின்றார்கள். நடப்பு ஆதாயச் செலுத்துகைகளுக்குச் சமமாக நடப்பு முதுமைப் பருவ வரிகள் இருக்கும் பொழுது இங்ஙனம்தான் நடைபெறுகின்றது. ரிசர்வ் திட்டத்தின் கீழும் கூட இதே விளைவுகள்தான் ஏற்படும். ஏனெனில், ஆதாயச் செலுத்துகை களுக்கு மேலாக நடப்புவரி வருவாய்கள் மிகையாக இருக்குமானால் முதுமைப் பருவ டிரஸ்டு நிதி உயரும். இதுவும் வேலையின்மை டிரஸ்டு நிதியைப் போன்றே கருவூலக கடன் பத்திரங்களில் செய்யப்படுகிறது. இவைகளுக்கு நடப்பு வட்டி வீதங்கள் தரப் படும். கருவூலம் இவ் வுபரி நிதிகளைக் கடன் வாங்குவதால் இவற்றைப் பொது அரசாங்கச் செலவுகளுக்காகப் பயன்படுத்து வதும் சாத்தியமாகிறது. ஆகவே, உண்மையைக் கூறுமிடத்து நடப்பு ஆதாயங்களுக்கும் மிகையாகவே பொது நலப் பாது காப்புத் திட்ட சம்பளப் பட்டியல் வரியையும், கூலி வரியையும் வசூலிப்பதால் அரசாங்கத்தின் பொதுச் செலவிற்கு நிதி கிடைப் பதற்கு வழி ஏற்படுகிறது. எதிர்காலத்தில் ஆதாயப் பொறுப்பு களைச் சமாளிப்பதற்கு நடப்புவரிகள் போதவில்லை யெனில், இவ் விரண்டுக்குமுள்ள வேறுபாடும் பொது வருவாய் இனங்களிலிருந்து தான் வரவேண்டும்.[14] இவ்வாறு ஒவ்வொரு தலைமுறையும் சேமிப்புகள் திரட்டப்பட்டிருந்தாலும் சரி, அல்லது திரட்டப்

பட்டிராவிட்டாலும் சரி, முதுமை அடைந்தவர்களையும் வேலை யில்லாது இருப்பவர்களையும் பேணுகிறது. பொதுநலப் பாது காப்புத் திட்டத்தை அரசாங்கம் நடத்தினாலும் இஃது உண்மை என்பதை வாசகர் கவனிக்க வேண்டும். ஏனெனில் எந்தக் காலத் திலும் நடப்பு உற்பத்தியாலேயே நுகர்வு சாத்தியமாகிறது.

### வாணிகச் சுழலுக்கு எதிரானப் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரி விதிப்பு (Counter-cycle Social Security Taxation)

பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சம்பளப் பட்டியல் வரிகளை, அவை செலுத்தும் ஆதாயங்களினின்றும் தனியே வேறாகப் பிரித் தால், வரிகள் யாவற்றிலும் மிகவும் தேய்வு வீதமாக இருப்பதைக் காணலாம். அவற்றின் நிலைப்பாடு பெரும்பாலும் கூலி, சம்பளங் களை ஈட்டுவோர்மீதும், சற்றுக் குறைந்த அளவு நுகர்வோர் மீதும் இருக்கிறது. வேலையின்மை, நஷ்டஈட்டு வரிகள் முதல் 3,000 டாலர் கூலிகளின் மீதும், ஆற்றல் குறை வரிகள் முதல் 4,800 கூலிகளின் மீதும் (சார்ந்திருப்பவர்களுக்காக வேற்றுமைப்பாடின்றி) விழுகிறது. இதிலிருந்து இந்த உயர்ந்த அளவுகளுக்கு உட்பட்ட மொத்த வருமானத்தை உடையவர்களுக் கும் வரிக்கு உட்பட்டிருக்கும் வருமானத்தை உடையவர்களுக்கும், வருமானத்தைப் பொறுத்த வரையில் திறப்பாடான வீதம் தூக்க லாக இருக்கின்றது என்று பொருள் படுகிறது. உயர்ந்த அளவு வரி தாங்கும் மட்டங்களுக்குக் கீழுள்ள மொத்த வருமானத்தின்மீது ஒரு வீதாச்சார வரி விதிக்கப்படுகிறது. இம் மட்டங்களுக்கு மேலுள்ள வருமானத்தின்மீது வரி விதிக்கப்படுவதில்லை. ஆதாயச் செலுத்துகைகளைத் தவிர்த்து இம்மாதிரியான வரிகளின் நெடுங் காலத் தாக்கினால் நுகர்வு இறங்கிக்கொண்டே வரும். வாணிபச் சுழலைப் பொறுத்தவரை நாம் தந்த சான்றுக்கு எதிராகவே இவ் விளைவு இருக்கும். மொத்தத்தில் வரிமுறையைப் பொறுத்தவரை கணிசமான அளவு தேய்வு வீத அமிசத்தை இம்முறை புகுத்து கிறது.

இவ் வரிகளினால் தொடர்ந்து நெடுங்காலம் நுகர்வுமட்டம் இறங்கிக்கொண்டே வரும் என்பதை ஒப்புக்கொண்டால், பொரு ளாதார வீக்கக் காலத்தைவிடப் பொருளாதார மந்த காலத்தில் இவற்றின் பளுக்கள் மிகவும் தீவிரமாக இருக்கும். வேலையில்லாத தொழிலாளிகளினால் அல்லது தொழிலாளர்களுக்காக சம்பளப் பட்டியல் வரிகள் யாதொன்றும் செலுத்தப்படவில்லையானாலும், இது உண்மையே. ஆனால், வரியிலிருந்து தப்பிப்பதற்காக வேலை யில்லாதிருப்பது ஆறுதல் தரக்கூடியதன்று. வேலையில் தொடர்ந்து

குறைவான கூலி அல்லது குறைவான மிகை நேரக்கூலி வாங்கிக் கொண்டோ இருப்பவர்களுக்கு வீதாச்சார வரி விதிப்பினுல் ஒரு கனத்த பளு ஏற்படும். இத்துடன் சுணங்கிய மார்க்கட்டுகளினுலும், பரவலாக வேலையின்மையினுலும், வரிப் புரட்டுகைக்கு நுகர்வோர்களின் எதிர்ப்பு வலுவடைகிறது; அதே சமயம் தொழிலாளிகளின் எதிர்ப்பு வலி குன்றுகிறது. இவ்வாருக வேலைக்கு அமர்வோர்கள்மீது வரிகளைக் கூடுதலாகப் பிற்பட்டுப் புரட்டுகையும், பண்டங்களை வாங்குவோர்மீது குறைவாக முற்பட்டுப் புரட்டுகையும் நிகழலாம்.

மற்ருெரு பக்கத்தில், வரிவிதிப்பில் ஆதாயக் கொள்கையை நியாயமான அளவு பிரயோகம் செய்வதற்கு, முதுமைப் பருவப் பாதுகாப்புத் திட்டத்திலும், வேலையின்மை நஷ்ட ஈட்டுத் திட்டங்களிலும் சில வாய்ப்புக்களே இருக்கின்றன. ஏனெனில், இத் திட்டங்களின்கீழ் ஆதாயங்களின் பெரும்பகுதியும் ஈட்டுறுதி செய்த தனியாள் தொழிலாளர்களையே சேருகிறது. இத் தனியாள் ஆதாயங்கள் ரொக்கச் செலுத்துகைகளாக இருக்கிறபடியால், தனிப்பட்ட முறையில் ஒவ்வொரு தனியாளும் அடையும் ஆதாயத் தொகையை அளவிடுவதில் யாதொரு சங்கடமும் இல்லை. ஈட்டுறுதி சேவைகளுக்குச் செலுத்தப்பட்ட விலைகளுக்குத் தோராயமாகச் சமனுகப் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரி செலுத்துகைகளை உண்மையில் கொள்ளுவது நியாயமாகும். இவ்விதம் கொண்டால் இவ் வரியின் தேய்வு வீதத்தைப்பற்றி அத்துணைக் கவலை கொள்ள வேண்டியதில்லை. இவ்வித வரிகள் அரசாங்கப் பொது நிதிகளில் கரைக்கப்பட்டுப் பொதுவான அரசாங்க நோக்கங்களுக்காகச் செலவிடப்படுமானுல் நாம் அதிகம் கவலை கொள்ள வேண்டியிருக்கும்.

அதேசமயம் இவ்விதப் பொதுநலப் பாதுகாப்புத் திட்டங்களில் (தனியாள் பெறும் ஆதாயத்தினின்றும் தனித்து வேருக), பொதுவான சமுதாய ஆதாயத்தின் முக்கியமான அமிசங்களும் இருக்கின்றன. முதுமை அடைந்தோரையும், வேலையில்லாதோரையும் பிறரைச் சார்ந்திருப்பதினின்றும் தடுப்பதும், நுகர்வை ஒரு உயர்ந்த மட்டத்திலேயே வைத்திருப்பதும் பொது நன்மைக்கான இலட்சியங்களாகும். ஆகவே, சம்பளப் பட்டியல் வரிகளிலிருந்து முழுச்சேமிப்புக்குச் சற்றுக் குறைவாகவே நிதி திரட்டவேண்டும் என்பது தருக்க அடிப்படைக்கு ஒத்ததாகும். எஞ்சிய தொகையைப் பொது நிதிகளிலிருந்தே எடுத்துக்கொள்ள வேண்டும்.

தொழிலாளர்கள் கூலிகள் மீதான பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரிகள், தேய்வு வீதமாக இருந்தபோதிலும், இவற்றின்

பளுக்கள் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட ஆதாயங்களின் பங்கீட்டிற்கு ஏற்ப உத்தேசமாகப் பங்கீடு செய்யப்படுகின்றன. தொழிலாளர் இவற்றுக்காக செலுத்தியிருப்பதனால் இவ் வாதாயங்களை அடைவதற்குத் தாம் முற்றிலும் அருகதை உள்ளவர்கள் என்று உணரச் செய்வதில் திட்டவட்டமான ஒழுக்கவுறுதி அனுகூலங்கள் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரிகளில் இருக்கின்றன. மேலும், இத் திட்டத்திற்கு ஆகும் செலவின் பெரும் பகுதியை இதனால் நன்மை பெறுவோர்கள் மேற்கொள்கிறார்கள். பொருளாதாரத்தின் உற்பத்தித் திறனால் நிறுவப்பட்ட வரம்புகளைக் கடந்து ஆதாய முறையை விஸ்தரிப்பதற்கான பொறுப்பற்ற முஸ்தீப்புகளை ஊக்கம் இழக்கச் செய்வதற்கு இது காரணமாக இருக்கலாம். ஆகவே, தனிப்பட்ட முறையில் ஆதாயம் பெறுபவர்கள் தொடர்ந்து வரி முறைக்கு அளிப்புகள் செலுத்துவதற்குத் தகுந்த முகாந்திரங்கள் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆயினும், சம்பளப் பட்டியல் வரிகளை வாணிகச் சுழலுக்கு எதிராகச் சரிக்கட்டுவதற்கு இம் முறையில் வாய்ப்பில்லை. வாணிபச் சுழல் முழுமைக்கும் வேலையும், கூலிகளும் மாறிக்கொண்டேயிருப்பதால் ஓரளவு செயற்கை முறையில் சரிக்கட்டுதல்களுக்கான சில அமிசங்களும் இருக்கின்றன. இச் சரிக்கட்டுதலைப் பொறுத்த வரையில் பின்னிறக்க வியாபார மந்த காலங்களில் செய்யப்படும் வரி வசூல்கள், ஆகூழ் காரணமாக ஆதாயச் செலுத்துகைகளின் தொகைக்குச் சரியாக இருக்கிறது போலும். ஆகையால், வருமானத்தைப் பிறப்பிக்கும் வரவெஞ்சிய பற்றுக்குறைச் செலவு தானாகவே ஏற்படும். பொருளாதார வீக்க காலங்களில், ஆதாயச் செலுத்துகைகளைக் காட்டிலும் வரி வசூல்கள் கூடுதலாகவே இன்றியமையாது இருக்கும். வாணிபச் சுழல் நிலைகளுக்கு வேண்டிய மேலும் சரிக்கட்டுதலுக்குப் (இன்னும் சரிச்கட்டுதல் கூடுதலாகவே வேண்டியிருக்கும்) பொதுநலப் பாதுகாப்புத் திட்டத்திற்குப் புறம்பானவற்றிலிருந்து வரவேண்டும். அதாவது பொதுநலப் பாதுகாப்புத் திட்டத்தின் இறுக்கங்களைச் சமனிலைப்படுத்துவதற்கு பிற அரசாங்கச் செலவுகளும், வரி முறையின் பிற அமிசங்களும் போதிய நெகிழ்ச்சி உடையதாக இருப்பதற்கு வழி செய்ய வேண்டும். வாணிபச் சுழலுக்கு எதிரான தேவைகளைப் பொறுத்த அளவில் நிதிமுறை முழுமையையும் தகுந்த சமநிலைக்குக் கொணர வேண்டும்.

நாம் இப்பொழுது இருவகை வரிகளின் சுருக்கமான வருணனையைத் தருவோம். அவற்றின் முக்கியத்துவம் குறைவாக இருப்பதால் அவற்றைச் சுருக்கமாகவே கூறுதும். குறைந்த முக்கியத்துவம் உடையவைகளாக இருந்தாலும் அவற்றைக் கூறாது விடக்கூடாது.

மற்றொரு பக்கத்தில், இவை ஒவ்வொன்றும் ஒரு தனி ரகத்தைச் சேர்ந்தவை. இவற்றை நாம் ஏற்கெனவே ஆய்வு செய்த எந்தப் பெரும் வரிகளுடனும் வைத்தெண்ண முடியாது. ஆகையால், நாம் நம்முடைய வரி ர்கங்களைப் பற்றிய கண்ணோட்டத்தின் இறுதியில், இவ் வரிகளைப் பல்வகை வரிகள் என்ற தலைப்பில் சுருக்கமாக ஆய்வு செய்ய எண்ணி இவ்விடத்தில் கொணர்ந் தோம்.

**ஆள் வரிகளும் தலைக்கட்டு வரிகளும்[15] (Poll and Capitation Taxes)**

அமெரிக்க வரலாற்றின் தொடக்க காலத்தில் தல அரசாங் கங்களின் முக்கிய வரிகள் 'ஆட்கள், வரிக்கு ஆளான எஸ்டேட்டு கள்' (polls and rateable estates) இவற்றின்மீது விதிக்கப்பட்ட வரிகளேயாகும். பிந்தியது உடைமை வரியாகும்; முக்கியமாக ஆட்களின்மீது ஒரே வீதாச்சார அளவில் விதிக்கப்பட்ட வரியாகும். 'தலைக்கட்டு வரி' (capitation tax) அல்லது 'தலை வரி' என்ற பெயரைக் காட்டிலும் 'ஆள் வரி' (poll tax) என்ற பெயரே பொது மக்கள் வழக்கில் வந்து விட்டது. ஏனெனில், ஆள் வரி என்ற பெயரிலிருந்து ஓட்டுக் கொடுக்கக் கூடிய வயதை அடைந்தவர்களின்மீதே இவ் வரி விதிக்கப்பட்டது என்பது புலனாகிறது. ஆள்வரி நிறுவப்பட்டபொழுது அதை வயது வந்த ஆண்களுக்கு மட்டும் பிரயோகம் செய்வதுடன் நிறுத்திக்கொண்டதற்குப் பல காரணங்கள் இருந்தன. முதற்கண் அதிலிருந்து கிடைத்த வருவாய், பெரிதும் சாலை அமைப்புக்கும், பராமரிப்புக்குமே செலவழிக்கப்பட்டது. அக்காலத்தில் பணத் திற்குக் கிராக்கி இருந்ததால், வரி செலுத்துவோர்கள் பணமாக வரி செலுத்துவதற்குப் பதிலாகச் சாலைகளில் 'வேலை செய்து' இவ் வரியைச் செலுத்தினார்கள். சாலையில் வேலை செய்வதற்கு வேண்டிய திறன் வயதுவந்த ஆண்களுக்கு மட்டுமே இருக்கும் என்று நாம் எதிர்பார்க்கலாம். கடின உடல் உழைப்புச் செய் வதற்கான திறனைக் கொண்டு இத் திறன் அளவிடப்பட்டது. ஓட்டுப்போடும் வயதையுடையவர்களுக்கு மட்டுமே இவ் வரியைப் பிரயோகம் செய்தது, திறன் கொள்கையைப் பணமாகச் செலுத் தக் கூடியவர்களுக்கு மட்டுமே இவ் வரியைப் பிரயோகம் செய்த தைத் தெரிவிக்கின்றது. ஏனெனில், 21 வயதுக்கு உட்பட்டவர்கள் பண விஷயத்தில் சுதந்திரமாக இருக்க முடியாது.[16] இரண்டாவ தாகப் பிரதிநிதித்துவம் இன்றி வரிவிதிப்புச் செய்தது பொது மக்களுக்குப் பிடிக்கவில்லை. ஓட்டளிப்பதற்கு வயது வரப் பெறாதவனை, ஒரு தனியாள் வரியைச் செலுத்தும்படிக் கூறுவது நியாயமாகாது. இறுதியாகச் சில மாநிலங்களில் ஓட்டுரிமையைப்

பெறுவதற்கு ஆள் வரியைச் செலுத்துகை முன்னதாக வேண்டப் பட்டது. இவ் விதியின் உட்கிடக்கை சில பிரிவினருக்கு ஓட்டுரிமையை மறுதலிப்பதாகும்.[17] பிற முகாந்தரங்களைக் கொண்டு ஓட்டுரிமையை ஏற்கனவேயே மறுதலித்தவர்களுக்கு, ஓட்டுரிமையை வழங்குவதற்குத் தடையாக ஒரு ஆள்வரியையும் எழுப்புவதில் யாதொரு பயனுமில்லை என்பது தெளிவு.

தற்பொழுது முக்கியமாகத் தல அரசாங்கங்களே ஆள் அல்லது தலைக்கட்டு வரிகளைப் பயன்படுத்துகின்றன. ஒன்பது மாநிலங்கள் மட்டும் ஆள்வரியின் மூலம் வருவாய் பெறுகின்றன. பல சமயம் ஆள்வரி மாவட்ட வருவாய்களின் முக்கிய இனமாக இருக்கிறது. சிறப்பாக எந்த மாநிலங்களில் இன்னமும் பொதுச் சாலைகளுக்கு மாவட்டங்கள் பொறுப்பேற்று இருக்கின்றனவோ அவற்றில் ஆள்வரி முக்கிய வருவாய் இனமாக விளங்குகிறது; ஆயினும், பொதுவாக இவ் வரி ஒரு மாநகரம், நகரம் அல்லது சிற்றூரின் வரியாகவே கொள்ளப்படுகின்றது. காலக்கிரமத்தில் ஆள்வரியிலிருந்து கிடைக்கும் வருவாய்கள் எவ்வெவ் வுபயோகங்களுக்குப் பயன்படுத்தப்பட்டனவோ அவற்றில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. இவ் வருவாய்களைக் குறிப்பிட்ட நோக்கங்களுக்கு ஒதுக்குதலை இன்னமும் சாதாரணமாய்க் காணலாம். சாலை வாரியாக ஆள்வரி தொடங்கியது. மேற்கொண்டும் வேறு சில நோக்கங்களுக்கு இவ் வரி பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. சாலைகளைத் தவிர்த்து அரசாங்கப் பள்ளிகளை நடத்துவதற்கு மட்டுமே இவ் வரிகள் கணிசமான அளவு செலவழிக்கப் படுகின்றன.

சில புறனடைகளைத் தவிர்த்து, தல அரசாங்கங்கள் ஆள் வரியைச் சரியாக நிருவாகம் செய்யவில்லை. அதன் மூலம் கிடைக்கும் வருவாய் குறைவாக இருப்பதனுல், இவ் வரியைச் சரிவர நிருவகிப்பதற்கு ஊக்கம் பிறக்கவில்லை. பல தலங்களில் அதன் நிருவாகம் மிகவும் மட்டமான நிலையில் இருப்பதால் இவ் வரியிலிருந்து தப்பிப்பது பெரும் தமாஷாகி விட்டது. இதுவும் 'போலீஸ்காரர்களும் கள்ளர்களும்' (cops and robbers) என்ற விளையாட்டைப்போல் யாருக்கும் கெடுதல் இல்லாத ஒரு தமாஷாகி விட்டது. இவ் வரியின் நிருவாக மரபு மிகவும் மோசமாக இருந்ததே இவ் வரியின்மீது ஒரு பொதுவான அவமரியாதையைப் பிறப்பித்திருக்கிறது. இதனுல் இவ் வரியின் நிருவாகத்தைத் திருத்துவது இரட்டிப்புச் சங்கடமாகும். இறுதியாக அரசியல் காரணங்களுக்காக ஆள்வரியினின்றும் தப்பிப்பது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சில பிரிவினரிடையே விரும்பப்படு

கிறது. ஏனெனில், இவ் வரியைச் செலுத்தவில்லையெனில் அந்த ஆள் ஓட்டளிக்கத் தகுதியற்றவன் ஆகின்றான்.

அரசியல், சமூகக் காரணங்களுக்காகப் பெருவாரியான குடிமக்களிடமிருந்த ஓட்டுரிமையைப் பறிப்பதற்காக இவ் வரியைப் பயன்படுத்துகின்றனர். ஒரு வரி கொடாது தப்பிக்கும் உணர்வு பிற வரிகளுக்கும் சுலபத்தில் பரவக் கூடியது. இவ் விரண்டு காரணங்களும் இல்லையெனில், ஆள்வரி பொதுவாகத் தோல்வி அடைந்தது எல்லோருடைய சந்தோஷத்திற்குக் காரணமாக இருந்திருக்கும். ஏனெனில், வரிக் கருதுகோளைப் பொறுத்தவரையில் ஆள்வரி ஒரு தீய வரியேயாகும். இவ் வரிக்கு ஆளான அனைவரும் ஒரே தொகையை வரியாகச் செலுத்துகின்றனர். ஆகவே இவ் வரி தனியாள் வருமானத்தைப் பொறுத்தவரை தேய்வு வீதமாக இருக்கின்றது. அதன் நிலைப்பாடும் எளியதே. யார் இவ் வரியைச் செலுத்துகின்றாரோ அவரே இதன் நிலைப்பாட்டையும் தாங்குகின்றார். ஏனெனில் இவ் வரியை முற்பட்டோ அல்லது பிற்பட்டோ புரட்டுவதற்கான யாதொரு விலை வாயிலும் இல்லை. இவ் வரி தொடர்ந்து நீடித்திருப்பது இக் காலத்திற்குப் பொருத்தமில்லை. ஆயினும், அதன் நெடுங்கால வரலாறும், கொள்கையை முக்கியமாக உருவாக்குவோர்மீது அதன் பளு இலேசாக அழுத்தலும் சேர்ந்து, இவ் வரி முற்றும் கைவிடப்படும் என்ற எண்ணத்திற்குச் சிறிதும் நம்பிக்கை ஊட்டுவதாக இல்லை.

### அநியாயமாகப் பணக்காரர் ஆவதன் மீது வரி (The Unjust Enrichment Tax)

'பட்லரும், அமெரிக்க ஐக்கிய நாடுகளும்' (1936) என்ற வழக்கில் சுப்ரீம் நீதிமன்றம் முதல் விவசாயச் சரிக்கட்டுதல் சட்டம் செல்லாது எனவும், குறிப்பிட்ட சில விவசாயப் பொருள்களைப் பக்குவம் செய்வோர்மீது இச் சட்டம் விதித்த வரிகளும் செல்லாது எனவும் தீர்ப்பு அளித்தது. இவ் வழக்கின் முடிவு தெரியும் வரையில் சுமார் 200 மில்லியன் டாலர் வரிகள் செறித்து வைக்கப்பட்டிருந்தன. இத் தீர்ப்பினால் இத் தொகை பற்றிய நிலையைப் பொறுத்து இக் குழப்பம் ஏற்பட்டது. 1933ஆம் ஆண்டிலிருந்து வசூல் செய்யப்பட்டு, இச் சட்டத்தின்கீழ் விவசாய ஆதாயங்களுக்காகச் செலவழிக்கப்பட்ட சுமார் 1 பில்லியன் டாலர் தொகையும் இத் தீர்ப்பினால் குழப்பத்திற் குள்ளாகியது. எதிர்ப்பைத் தெரிவித்துவிட்டு இவ் வரிகளைச் செலுத்தியிருந்த தனியாள் பக்குவம் செய்வோர்களுக்கு, செறித்து வைத்திருந்த வரிகளைத் திருப்பிக் கொடுக்கும்படி உடனடியாக அடுத்தடுத்துப்

பல நீதிமன்றக் கட்டளைகளும், தீர்ப்புகளும் வந்த வண்ணம் இருந்தன. இதனால் ஒரு சங்கடமான நிலைமை உண்டாயிற்று. பொதுவாக, சாராம்சத்தில் வரி முற்றுமே விலைகள் உயர்வு மூலம் நுகர்வோர் மீது முற்பட்டுப் புரட்டப்படுகின்றது என்றெண்ணியது சரியே. இவ்வாறாகச் செறித்த வரிகளைத் திரும்பவும் பெறுவதற்குச் சட்டப்படி உரிமையுள்ளவர்கள் பக்குவப்படுத்துபவர்கள். இவர்கள் செலுத்திய வரி, பொதுவாக முன்னமேயே தங்கள் விளையுள்களை வாங்குவோர்களால் ஈடுசெய்யப்பட்டது. ஆகவே, செறித்த வரிகளைத் திரும்பப் பக்குவப்படுத்துபவர்களுக்குத்தருவது கிட்டத்தட்ட தூய எதிர்பாராத பெருத்த இலாபத்தைக் (windfall) கொடுக்கும்.[18] மேலும் எதிர்ப்புத் தெரிவிக்காது தங்கள் வரிகளைச் செலுத்திய நிறுவனங்களுக்கு வரிகளைத் திரும்பப் பெறும் உரிமையில்லை என்பதும் தோற்ற மாத்திரையான் தெரிகிறது. இவ்வாறு செறித்த வரிகளைத் திரும்பவும் தருவதால் உற்பத்தியாளர்களுக்கும் நுகர்வோர்களுக்கும் இடையேயும், உற்பத்தியாளர்கள் இடையேயும், பெருத்த அநீதிகள் ஏற்படும். இந் நிதிகளைத் தருவதைச் சட்டபூர்வமானதாகச் செய்தாலும், செறித்த வரிகளின் நிலைப்பாட்டைத் தாங்கியவர்களைக் கண்டு பிடிப்பது தெளிவாக இயலாததாகும். ஏற்கனவேயே வரிகளாக வசூலிக்கப்பட்டு முன்னமேயே செலவழிக்கப்பட்ட ஒரு பில்லியன் டாலர்களையும் பொறுத்த அளவிலும், அவற்றைத் திருப்பித் தரும்படி நீதிமன்றம் கட்டளை பிறப்பிக்காவிட்டாலும், இதே பிரச்சினைகள் தலைதூக்கி நின்றன.

அதிபர் கேட்டுக் கொண்டதற் கிணங்க காங்கிரஸ் அநியாயமாகப் பணக்காரராகும் சட்டத்தை இயற்றியது. இச் சட்டம் திருப்பித் தரப்பட்ட வரிகளை மீளவும் பெறுவதற்கும், எதிர்ப்புத் தெரிவிக்காது செலுத்திய வரிகளின் பெரும் பிரச்சினையைத் தீர்ப்பதற்கும் வகை செய்தது. இதன்படி ஒரு தனியாள் அல்லது நிறுவனத்தின் நிகர வருமானத்தின்மீது 80 சதவிகிதம் வீதாச்சார வரிக்கு வழி செய்தது. தனியாள் அல்லது நிறுவனத்திற்குக் கீழ்க் கண்ட இனங்களிலிருந்து வருவாய் வரலாம். (1) விதிக்கப்பட்டு ஆனால் செலுத்தப்படாத கூட்டாட்சியின் ஆயத்தீர்வைகள் (நீதி மன்றத் தீர்ப்புக்கு முந்திய விலையுடன் கூட்டப்பட்டு ஆனால் கருவூலத்திற்குச் செலுத்தப்படாத வரிகளைத் திரும்பவும் பெறுவதற்கு); (2) வரி செலுத்துவோர் வரியை முற்பட்டுப் புரட்டிய பொழுது, பண்டங்களை வரிசெலுத்துவோருக்கு விற்றவர்கள் ஈடு செய்தல் (இவ்வித உதாரணங்கள் எப்போதாவது தான் நிகழும்; இச் சட்டத்தை எதிர்த்து மொத்த வியாபாரியோ அல்லது

பக்குவப்படுத்துபவரோ வழக்கைத் தொடுத்து வரியைத் தாங்குவதற்கும் கவனமாக வழிசெய்த பொழுதே இவ்வித உதாரணங்கள் நிகழும்); (3) புரட்டப்பட்ட ஆயத்தீர்வைகளைத் திரும்பவும் கொடுத்தல் சரியாக இல்லாமலோ அல்லது சட்ட பூர்வமாக இல்லாமலோ இவ் வாயத் தீர்வைகள் வசூலிக்கப்பட்டிருக்கலாம் (செறிந்த வரிகளை மீண்டும் பெறுவதற்கும், எதிர்ப்புத் தெரிவிக்காது ஏற்கனவே செலுத்தப்பட்ட பக்குவப்படுத்தும் வரிகளைத் திரும்பவும் பெறுவதற்கான வழக்குகளைத் தவிர்ப்பதற்கும் இவ் விதி வகை செய்தது).[19] எல்லாக் கூட்டாட்சியின் ஆயத்தீர்வைகளுக்கும் செல்லுபடியாகத் தக்க விதத்தில் இச் சட்டம் பொதுவாக இயற்றப்பட்டிருந்தாலும், பக்குவப்படுத்தும் வரிகள் பேரிலேயே சிறப்பாக இச் சட்டம் திருப்பப்பட்டது.

வழக்குகள் தொடுத்தலுக்கு ஊக்கம் அளிக்காததில் இச் சட்டம் ஒருகால் திறப்பாடுடையதாக இருந்தது எனலாம். இவ் வழக்குகள் வெற்றியடைந்திருந்தால் பலரை அநியாயமாகப் பணக்காரராகச் செய்திருக்கும். ஆயினும் இவ் வரியால் கிடைத்த வருவாய் சொற்பமே. 1936-ல் கருவூலம் 1937-ல் இவ் வரியிலிருந்து சுமார் 82 மில்லியன் டாலர்கள் வருவாயாகக் கிடைக்கும் என்று மதிப்பீடு செய்தது (இவ் வரியிலிருந்து வருவாய் கிடைக்கும் என்று எதிர்பார்த்த ஒரே ஆண்டு).[20] ஆனால் உண்மையில் அவ் வாண்டில் கிடைத்த வருவாய் 6 மில்லியன் டாலரேயாகும்.[21] 1937-ல் காங்கிரசின் தீர்மானம் மூலம் அகவருவாய் ஆணையருக்குச் செலுத்துகை கால அளவை விஸ்தரிப்பதற்கு அதிகாரம் தரப்பட்டது. 1951ஆம் ஆண்டில் கூடச் செலுத்துகைகள் பூராவும் முற்றுப் பெறவில்லை. ஆயினும், 1945ஆம் நிதி ஆண்டின் இறுதிவரை மொத்த வசூல்கள் சுமார் 43 மில்லியன் டாலரே ஆகியிருந்தன. அவ் வாண்டில் செலுத்துகைகள் 180 ஆயிரம் டாலராகக் குறைந்து விட்டது. அநியாயமாகப் பணக்காரராகும் சட்டத்தின்கீழ்ச் சொற்பமாக வருவாய் வசூலானதற்கு, செறிந்த வரிகளின் பெரும் பகுதியும், தங்கள் பேரிலேயே வரியின் நிலைப்பாடு இருக்கிறது என்று காட்டக் கூடிய நிறுவனங்களால் செலுத்தப்பட்டதே அடிப்படைக் காரணமாகும். ஆகவே அந் நிறுவனங்கள் பக்குவப்படுத்தும் வரிகளைத் திரும்பவும் பெற்றன. ஆனால் அவை அநியாயமாகப் பணக்காரராகும் வரிகளுக்கு உள்ளாகவில்லை.

இத்துணை முக்கியத்துவம் இல்லாத வரிக்கு நாம் ஏன் கவனம் செலுத்துகின்றோம் என்று வினு எழுப்பலாம். அதன் ஆயுட்காலம், வருவாய், உற்பத்தி இவற்றைப் பொறுத்த அளவில், இவ் வரி முக்கியத்துவம் உடையதன்று. நிதி முறையில் மிகச் சிறிய ஓர்

அங்கத்தையே அநியாயமாகப் பணக்காரராகும் வரி வகிக்கிறது என்பதை ஒப்புக் கொண்டாலும், இவ் வரி இரண்டு காரணங்களுக் காகச் சுவையுள்ளதாக இருக்கின்றது. முதலாவதாக, சமுதா யத்தில் அநியாயம் என்று கருதப்பட்ட அல்லது விரும்பத்தக்க தன்று என்று கருதப்பட்ட எதிர்பாராத பெருத்த வருமான இனங் களில் குறிப்பிட்டவற்றை எடுத்து அவற்றின்மீது வரிவிதிப்புச் செய்வதற்கு ஒரு வரியைப் பயன்படுத்துவது வரிவிதிப்பிலேயே ஒரு புதிய திருப்பமாகும். இவ்வாறுக, எதிர்காலத்தில் பல திறப் பட்ட நிலைமைகளையும்[22] சமாளிப்பதற்கு இவ்வரி ஓர் உபயோக மான கருவியாகப் பயன்படலாம். பிற வரிகளைப் பற்றிய நிலைப் பாட்டைப் பொறுத்த சிறப்பு முடிவுகளை இவ்விதமான ஒரு வரியைப் பயன்படுத்துவதால், பிரயோகம் செய்ய வேண்டி இருக்கும் என்பது இதைக் காட்டிலும் முக்கியமானது. பக்குவப் படுத்தும் வரிகள் விற்பனையாளர்களால் புரட்டப்படுகின்றன என்ற நம்பிக்கையிலேயே 1936ஆம் ஆண்டைய வரி அமைக்கப் பெற்றது. வேறெந்த விளக்கமும் 'அநியாயமாகப்' பணக்காரரானதை மறுதலிக்கும். பொருளியல் கருத்தான நிலைப்பாட்டைச் சட்டம் எப்படி நடத்துகின்றது என்பதைக் கவனிப்பதும் சுவையுள்ள தாகும். ஏனெனில், நிலைப்பாட்டைப் பொறுத்த எளிய ஓர் ஊகக் கோட்பாட்டை ஒப்புக் கொள்ளும்படியோ அல்லது தனிப் பட்டவர் விஷயத்தில் புரட்டுகையின் அளவைப் பற்றிய இயங்கக் கூடிய அளவுகோலை நிறுவும்படியோ சட்டம் வேண்டப் பெற்றது. சட்டம் உண்மையில் பிந்தியதைத்தான் செய்தது. ஆனுல் இதற்குப் புறனடைகளும் உண்டு. இவ் வரியைத் திணிப்பதற்கு உடனடியாக முன்புள்ள ஆறுண்டுகளில் அதே பண்டத்தை அதே கணியங்களில் உற்பத்தி செய்த சராசரி இறுதி நிலையையும் விற்பனை யாளரின் இறுதி நிலையையும் ஒப்பிடுவதன் மூலம் வரி எத்துணை புரட்டப்பட்டதென்பது கணக்கிடப்பட்டது. ஒவ்வொரு அலகின் விற்பனை விலையிலிருந்தும் அப் பண்டத்தின் அடக்க விலையைக் கழித்தது போக எஞ்சியுள்ளதே விற்பனையாளரின் இறுதிநிலை எனப்படுவதாகும். பொறிவழி ஆக்கம் செய்வோரைப் பொறுத்த வரையில், அடக்கவிலை என்பது மூலப் பொருள்களின் விலையை மட்டுமே குறிக்கும்; மீண்டும் விற்பதற்காக வாங்கும் பண்டங் களைப் பொறுத்த வரையில் அடக்கவிலை என்பது வாங்கும் பொழுது பண்டத்திற்குச் செலுத்திய விலையையே குறிக்கும். எடுத்துக்காட்டாக, 1927-க்கும் 1933-க்கும் இடைப்பட்டக் காலக்கூற்றில் ஒவ்வோர் அலகின் அடக்க விலைக்கும் விற்பனை விலைக்கும் இடையிலுள்ள சராசரி இறுதிநிலை 20 சதங்களாக (cents) இருந்ததென்று வைத்துக் கொள்வோம். 1935ஆம் ஆண் டில் அவருடைய உற்பத்தி பக்குவப்படுத்தும் வரிக்கு உள்ளாகிற

தென்று வைத்துக் கொள்வோம். இரண்டு காலக் கூறுகளிலும் விற்ற கணியங்கள் ஒப்புமைக்கு உரியன என்று வைத்துக் கொண்டால், அவருடைய இறுதிநிலை அவருக்கு 23 சதங்களாக உயர்ந்து விட்டது என வைத்துக் கொள்வோம். இறுதி நிலையில் ஏற்பட்ட வேறுபாடு மூன்று சதங்கள் ஆகும். அவருடைய பண்டத்தில் வரிக்குட்பட்ட பொருளின் உள்ளுறையைப் பொறுத்த வரை அலகுக்கு நான்கு சதங்கள் பக்குவப்படுத்தப்பட்ட வரி என்றால், சட்டப்படி இவ் வரியில் முக்கால் பங்கைப் புரட்டிவிட்டதாகவும், எஞ்சியுள்ள காற் பங்கை அவரே தாங்குவதாகவும் எண்ணப்படும். திருப்பித் தரப்பட்ட பக்குவப்படுத்தப்பட்ட செலுத்துகைகளில் காற்பங்கை அவரே வைத்திருக்க உரிமை உண்டு. ஆனால் திருப்பித்தரப்பட்ட முக்காற் பங்கு (இதிலிருந்து திருப்பிப் பெறுவதற்கான செலவைக் கழிக்க வேண்டும்) அநியாயமாகப் பணக்காரராகும் வரிக்கு உட்பட வேண்டும். இது வரிப் புரட்டுகையின் அளவைப் பற்றிய உத்தேசக் கணக்கீடேயாகும். நிறுவனத்தின் தேவையையும், செலவுகளையும் பாதிக்கும் பல மாறிகளைப் பற்றி இது சட்டை செய்வதில்லை. வரி விதிக்கப்பட்டிருந்தாலும், விதிக்கப்பட்டிராவிட்டாலும், 1933-க்கும் 1936-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் பொதுவாகத் தேவை நிலைமை அபிவிருத்தி அடைந்ததால், இறுதி நிலைகளில் இயல்பான ஏற்றம் ஏற்பட்டிருக்கும். ஆனால், இதைக் காட்டிலும் சற்று எளிய புரட்டுகை முறை நிருவாகச் சங்கடங்களைப் பெருக்கி இருக்கும். இதில் துல்லியமின்மையை ஒப்புக் கொண்டது, 100 சதவிகித வரிக்குப் பதிலாக 80 சதவிகித வரியைப் போர்ட்டதில் பிரதிபலிக்கிறது.

## மேலும் படித்தற்கு உரியவை


இ. எம். பர்ன்ஸ் (Burns E. M), 'Financial Aspects of the Social Security Act', *American Economic Review*, March, 1936.

பொது நலப் பாதுகாப்புத் திட்டப் பளுக்களைப் பங்கீடு செய்வதில் உள்ள பொதுவான பிரச்சினைகளைப் பற்றி ஆராயும் ஒரு சிறு கட்டுரை.

ஜே. கே. ஹால் (Hall, J. K.), 'Incidence of the Federal Social Security Pay Roll Taxes', *Quarterly Journal of Economics*, November, 1938.

கருதுகோள்களைப் பற்றிய கண்ணோட்டமும், அவற்றைப் பற்றிய நிலைப்பாட்டின் படிக்கக் கூடிய பகுத்தாய்வும் அடங்கியது.

எஸ். இ. ஹாரிஸ் (Harris, S. E), *Economics of Social Scurity*, N. Y. McGraw Hill, *1941*.

சிறப்பாக ஒன்பதாம் அதிகாரமும் ('ரிசர்வ்களைப் பற்றிய கருதுகோள்'), பதின்மூன்றும் அதிகாரமும் ('கருத்துக்களைப் பற்றிய ஒரு கண்ணோட்டம்'). முந்திய அதிகாரத்தில் நிதி திரட்டும் முறை பற்றிய பொருளாதாரம் விவாதிக்கப்படுகின்றது. பிந்திய அதிகாரம் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வரிகளின் நிலைப்பாடு பற்றிய பல்வேறு கருதுகோள்களைச் சுருக்கமாக விளக்குகின்றது.

எல். பி. ரைஸ் (Rice, L. P.), 'Financing Social Security by Means of Payroll Taxes.' in *How Shall Business be Taxed ?*, N. Y., Tax Policy League, *1937*, Chapter *11*.

பொது நலப் பாதுகாப்புத் திட்ட நிதிக்கு ஆதாயக் கொள்கையைப் பிரயோகிக்க வேண்டும் என்பதை ஆதரிக்கும் தெளிவான ஒரு கூற்று. Reprinted in Groves, *View points on Public Finance*, *Chapter 70*.

## 23ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. பிரத்தியேகமாக ஒதுக்கப்பட்ட வரிகளைப் படைத்த பொதுநலப் பாதுகாப்புத் திட்டச் சட்டத்தின் பிரிவுகள் முதியோருக்கும் எஞ்சியிருப்போருக்கும் ஆண்டுத் தொகைகளைக் கொடுக்க வகை செய்யும் பிரிவும் (எட்டாம் பிரிவு), வேலையில்லாதோருக்கு நஷ்ட ஈடு கொடுக்கும் (ஒன்பதாம் பிரிவும்) பிரிவும் ஆகும்.

2. மாநிலப் பெட்ரோல் வரிகளின் உயர்வுக்கும், மாநிலத் தனியாள் வருமான வரியும், விற்பனை வரிகளும் பரவலாக ஆனதற்கும் பொது நிதிகளிலிருந்து இப் பொதுநலப் பாதுகாப்புச் செலவுகளை மேற்கொண்டதும் ஓரளவு காரணமாகும். சில மாநிலங்களில் புதிதாக இவற்றுக்காக ஒதுக்கப்பட்ட வரிகள் விதிக்கப்பட்டன. (உ-ம்) கனக்டிக்கட் தன் ஆள் வரியை முதியோருக்கு உதவி அளிக்கும் வரியாக மாற்றியது.

3. 1959ஆம் ஆண்டில் நாற்பத்தொன்பது மாநில அரசாங்கங்களும், கொலம்பியா மாவட்டமும் வேலையின்மை ஈட்டு வரிகளை விதித்தன. இவற்றின் உயர்ந்த பட்ச வீதம் சம்பளப் பட்டியலில் 2·7 சதவிகிதமாகும். ஒன்பது மாநிலங்கள் இன்னும் தூக்கலான உயர்ந்த பட்ச வீதங்களை விதித்

தன. மிக உயர்ந்த பட்ச வீதம் 4 சதவிகிதமாகும் (இப் பட்டியலில் அலாங்காவும் சேர்ந்ததே; ஆனால், ஹவாய் விடப்பட்டது). கூட்டாட்சியின். விதிப்படி நான்கு மாநிலங்களைத் தவிர பிற எல்லா மாநிலங்களிலும் வரிகள் உயர்த்த பட்சக் கூலியான 3,000 டாலர் வரையில் பிரயோகமாகின்றன. இரண்டு மாநிலங்களைத் தவிர்த்து பிற எல்லா மாநிலங்களிலும் தகுதியின்படி வரிவிதிக்கும் வீதமுறையும் இருப்பதால், நாம் உயர்ந்தபட்ச வீதங்களைப் பற்றிப் பேசுகின்றோம். தகுதியின்படி வரிவிதிக்கும் வீத முறையைப் பற்றி அடுத்த பத்தியில் ஆராய்ச்சி செய்கின்றோம் (Commerce Clearing House, *State Tax Guide*, 1959).

4. அதே நூல்: ஒன்பது மாநிலங்களில் 0 சதவிகிதமும், பதிமூன்கு மாநிலங்களில் ·1 சதவிகிதமும், நான்கு மாநிலங்களில் ·3 சதவிகிதமும் எட்டு மாநிலங்களில் ·5 சதவிகிதமும் குறைந்த வீதங்களாகும்.

5. வேலைக்கு அமர்வோர்மீது ஒரு கூட்டாட்சி வேலையின்மை ஈட்டு வரியின்றி இது சாத்தியமில்லை. இவ்வித வரிகளை விதித்த மாநிலங்கள், தம்முடைய ஆதாயத்திற்காகப் படைக்கப்பட்ட ஒதுக்கல் நிதிகளுக்கு, வேலைக்கு அமர்வோர் ஒரு தொகை அளிக்க வேண்டுமென்று காரணம் காட்டலாம். அடுத்த பிரிவில் நாம் பார்ப்பது போன்று, இது வேலைக்கு அமர்த்துவோர் வரிகளின் நிலைப்பாட்டைப் பற்றிய அறியாமையைக் காட்டுகின்றது.

6. *Annual Report of the Secretary of the Treasury*, 1946, p. 572.

7. 1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட வேலை வரிகள் விதிக்கப்பட்டன. இவ் வரிகளைப் பற்றிய நிலைப்பாட்டுப் பிரச்சினையில் மிக்க ஆர்வம் தோன்றியதால் நிலைப்பாடு பற்றிய இலக்கியத்திற்குச் சில முக்கியமான சேர்மானங்கள் ஏற்பட்டன. இவ் விலக்கியத்தினின்று குறிப்பாக நல்ல தெரிவுகள் வருமாறு: ஜே. கே. ஹால் (J. K. Hall) எழுதிய 'Incidence of Federal Social Security Pay Roll Taxes, *Quarterly Journal of Economics*, November, 1938; ரஸ்ஸல் பாடர் (Russell Bauder) எழுதிய 'Probable Incidenee of Social Security Taxes', *American Economic Review*, September, 1936; எவலின் எம். பர்ன்ஸ் (Eveline M. Burns) எழுதிய, 'Financial Aspects of the Social Security Act,' *American Economic Review*, March, 1936; எஸ். ஈ. ஹாரிஸ் (S. E. Harris) எழுதிய *The Economics of Social Security*, McGraw-Hill, 1941, Part III.

8. 'சுமாராக' என்று நாம் சொல்வதற்குக் காரணம் (1) பல மாநிலங்களிலும் அமலில் இருக்கும் தகுதியின்படி வரிவிதித்தல் முறைகளினால் ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் வேலையின்மை ஈட்டுவரியின் வீதம் குறையலாம். (2) வரிவிலக்கு அளிக்கப்பட்ட பல வருக்கங்கள் ஒன்றில் சில வேலைக்கு அமர்வோரின் சிறு குழு இருக்கலாம். (3) ஆண்டொன்றுக்கு 3,000 டாலருக்கும், 4,800 டாலருக்கும் மேற்பட்ட கூலிகளும், சம்பளங்களும் வேலையின்மைக்கும் OASI முறையே வரிவிதிக்கப்படுவதில்லை.

9. பொதுநல ஈட்டுறுதிக்கு 1951ஆம் ஆண்டில் வேலைக்கு அமர்த்துவோரின் அளிப்புகள் 4·19 பில்லியன் டாலராகும். அவ் வாண்டில் கார்ப்பரேஷன்கள், கூட்டு வியாபாரங்கள், தனிப்பட்ட சொத்துரிமை யுடையவர்கள்

(இவ்வரி முறையிலிருந்து நீக்கப்பட்ட குடியானவர்கள் நீங்கலாக) இவர்களிடமிருந்து கிடைத்த நிகர வருமானம் 66·30 பில்லியன் டாலராகும். இவ்வித உத்தேசக் கணக்கீட்டினால், வேலைக்கு அமர்த்துவோர்மீது அவர்கள் அளிப்புகளின் நிலைப்பாடு இருக்குமானால், அவர்களின் இலாபம் சராசரி சுமார் 6·3 சதவிகிதம் குறைந்திருக்கும். (*Survey of Current Business*-லிருந்து இப் புள்ளித் தொகைகள் எடுக்கப்பட்டன. ஜூலை, 1952, பக்கம் 17)

10. பல மாநிலச் சட்டங்களின்படி இவ் வரம்பு நான்கு தொழிலாளர்களுக்கும் குறைவாக இருக்கிறது. பதினேழு மாநிலங்கள் ஒன்றல்லது ஒன்றுக்கு மேற்பட்ட தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தியிருப்போர்களுக்கும் இவ் வரிகளைப் பிரயோகிக்கின்றன.

11. சற்றுக் குறைந்த கூலிகளில் வரியைச் சேர்ப்பதைக் காட்டிலும், வேலையின்மை ஆதாயங்களின் கால நீட்டிப்போ அல்லது அளவோ நிரந்தர வேலையின்மையை விரும்புவதற்குப் போதிய காரணங்கள் ஆகா.

12. இதற்கு எதிரிடையாக, வியாபார மந்த காலங்களில், பெருத்த பொதுப்பணிகளும், வேலை நிவாரணத் திட்டங்களும் இயங்கினாலன்றிப் பிற்பட்டுப் புரட்டுகையை எதிர்த்துத் தொழிலாளர்கள் நிற்பது முடியாததாகும். அதே வமயம் பண்டங்களுக்கான தேவை குறைவாக இருப்பதால், முற்பட்டுப் புரட்டுகையை எதிர்த்து நிற்க வாங்குவோர்களால் முடியும்.

13. பொதுநலப் பாதுகாப்புத் திட்டத்திற்கு நிதிதிரட்டும் பளு அனைத்தும் தொழிலாளர்கள்மீதே இருக்க வேண்டும் என்பது பொதுவான எடுகோளாகும். இதையே இப்பளு தருக்க அடிப்படையில் எங்கிருக்க வேண்டும் என்பதற்கான தெளிவான சான்றாகக் கொள்ளக்கூடாது. வாணிபச் சுழலின் ஒரு விளைவாகவே முக்கியமாக வேலையின்மை ஒரு கடுமையான பிரச்சினையாக இருக்குமாதலால். இவ் வெதிகோள் வேலையின்மைக்குத் தொழிலாளர் வருக்கமே பொறுப்பாளி என்று கருதுவதாகப் படுகிறது. இக் கருத்து நியாயமானதன்று என்பது தெளிவு. ஓய்வுகால ஆண்டுத் தொகைகள் இன்றேல், முதுமைக் காலத்தில் தொழிலாளர் பிறரைச் சார்ந்திருப்பார்கள். இதைத் தொழிலாளர்களின் தவறு என்று கூறமுடியாது. தங்களுக்கெனச் சொந்தமாகப் போதிய நிதி இருப்புகள் இன்றி வேலையிலிருந்து நீங்கிய தொழிலாளர்கள், ஓய்வு பெறுவதற்கு நம் பொருளாதாரமே காரணமாகும். ஆகவே, வயதைக் கடந்தவர்கள் வேலைக்கு அமர்த்த முடியாதவர்கள் (unemployable workers) இவர்களின் பராமரிப்பின் பொறுப்புக்கான செலவையும் தெளிவாகப் பொருளாதாரமே ஏற்க வேண்டும்.

14. உபரி நிதிகளைப் பொதுச் செலவுக்குப் பயன்படுத்துவது நம்பிக்கைத் துரோகம் செய்வதாகப் பொருள்படாது. பொருப்பற்ற ஓர் அரசாங்கம் தன் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட சேமிப்பு நிதிகளை ஊதாரித் (boondoggling) திட்டங்களின்மீது விரயம் செய்ததாக வாதிடுகின்றனர். இஃது உண்மையன்று என்றால் பொதுநலப் பாதுகாப்புத் திட்ட நிதிகளில் அரசாங்கக் கடனைத் தவிர வேறொன்றும் இல்லாது இருப்பானேன்? அரசாங்கம் மோசம் செய்கிறது என்ற இக் கூற்றின் உட்கிடக்கை பொருந்துவதன்று. ஏனெனில் இக் குற்றச்சாட்டைத் தனியார் ஈட்டுறுதிக் கம்பெனிகள் அனைத்தின் பேரிலும் சுமத்தலாம். தனியார் கம்பெனிகளின் ரொக்க இருப்புகள்,

எப்பொழுதுமே சட்டப்படி அவை வைத்திருக்க வேண்டிய சேமிப்பு நிதிகளை விடக் குறைவுதான். ஆதாயங்களைச் செலுத்துவதற்கான கடமையை நிறை வேற்றும் வரையிலும், இக் கடமையை நிறைவேற்றப் போதுமான பணம் இருக்கும் வரையிலும், பெருத்த ரொக்க இருப்புக்களைத் திரட்டுவது வடி கட்டின முட்டாள்தனமாகும்.

Boondoggling=An expression used in the early 1930's to denote useless spending, usually referring to the spending of money by the U. S. Government to combat the depression.

15. இவ் வரிகளைப் பற்றிய நூல்தொகுதியுடன் கூடிய ஒரு நல்ல சுருக்க மான வருணனை, Encyclopaedia of the Social Sciences-ல் 'Poll Tax' என்ற தலைப்பில் கார்ல் ஷுப் (Carl Shoup) எழுதிய கட்டுரையில் காணக் கிடக் கிறது.

16. ஆள்வரி அமலில் இருக்கும் மாநிலங்களில் சுமார் மூன்றில் ஒரு பங் கில் இன்னமும் இவ் வரியை ரொக்கமாகவோ அல்லது சாலையில் வேலை செய் வதன் வாயிலாகவோ செலுத்தலாம். வறுமையாளர்களுக்கே சாலையில் வேலை செய்வது கவர்ச்சிகரமாக இருக்கும். ஏனெனில் வரி நோக்கங்களுக்கு இம் மாதிரியான உழைப்புக்கு மிகவும் குறைந்த மதிப்பே தரப்படும். 1938-ல் மிக உயர்ந்த பட்ச சாலையில் 'வேலை செய்வதன்' மதிப்பை நாளொன்றுக்கு இரண்டு டாலர்கள் வீதமே கணக்கிட்டனர். லூயிஸியானு மாநிலத்தில் வரி நோக்கங்களுக்குச் சாலையில் வேலை செய்வதற்கு நாளொன்றுக்கு 50சதங் களே கணக்கிட்டனர். தற்காலச் சாலை அமைப்பு, பராமரிப்பு முறைகளுக்குப் பல பல்வகைப்பட்ட பயிற்சியில்லாத, நன்னிலையில் இல்லாத தொழிலாளர் களை நன்ருகப் பயன்படுத்துவது இயலாதாகையால் உழைப்பு மூலம் வரியைச் செலுத்துவது முக்கியமாக ஊக்கம் இழக்கிறது.

17. 1952-ல் ஆள்வரியின் வீதங்கள் பல தலங்களில் 1 டாலர் தொகையி லிருந்து ஒரு மாநிலத்தில் உயர்ந்தபட்ச 7·50 டாலர் வரை சென்றது. பல்வேறுபட்ட அரசாங்க அலகுக்கும் (மாவட்டங்களும், நகரங்களும்), பிரத்தி யேக மாவட்டங்களும் (சாலை மாவட்டங்களும், பள்ளி மாவட்டங்களும்) ஆள்வரியை இரட்டை வரிவிதிப்புச் செய்வதற்குத் தலங்கள் அநுமதிக் கின்றன. இப்பொழுது ஆறு அல்லது ஏழு மாநிலங்களில் மட்டுமே ஓட் டுரிமைக்காக நேரிடையாக ஆள்வரிச் செலுத்துகை வேண்டப்பெறுகின்றது. இந் நிபந்தனையும் தெற்கத்திய மாநிலங்களில்தான் இன்னமும் இருக்கின்றது. பிற மாநிலங்களை விடப் பொதுவாகத் தென் மாநிலங்களில் ஆள்வரி வீதங்கள் சிறிது கூடுதலாகவே இருக்கின்றன.

18. ஒரு குறிப்பிட்ட நிறுவனத்திற்கு சுமார் 4 மில்லியன் டாலர் திருப்பித் தரவேண்டி இருந்திருக்கும்.

19. Cf. Title III, *Revenue Act of* 1936, for provisions of the law.

20. *Annual Report of the Secretary of the Treasury,* 1936, p. 385.

21. *Ibid,* 1937. p. 298.

22. எடுத்துக்காட்டாக 1947 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அச்சுறுத் தும் வாயிலிருந்து வாயில் வழக்குகளைப் பொறுத்தவரையில் இவ்வரியை

மீண்டும் போடும் யோசனை எழுந்தது. வாயிலிருந்து வாயில் பரபரப்பு விரைவிலேயே அடங்கிவிட்டாலும், பிற்புறமாகச் செலுத்துகையைக் கோரிய வழக்குகளின் சட்டபூர்வமான தன்மை, கருவூலத்தின் நிலைமையைக் கடுமையாகப் பாதிக்கும் என்று சிறிது காலம் கவலை இருந்தது. தோராயமாக 5 பில்லியன் டாலருக்கான கூலி பாத்தியதைகளை நீதிமன்றங்கள் ஒப்புக் கொண்டிருக்குமானால், கருவூலம் இரு வகைகளில் பாதிக்கப்பட்டிருக்கும். பெருத்த கூலி பாத்தியதைகளைத் தரவேண்டிய நிறுவனங்கள், சில உதாரணங்களில் மிகை இலாப வரியின்கீழ்த் தங்களுக்குத் திருப்பித் தரவேண்டும் என்ற பாத்தியதைகளை நிறுவலாம். போர்க் காலத்தில் செலுத்திய மிகை இலாப வரிக்கு எதிராக இழப்பு வரவுகளைப் பின்னிட்டு வைப்பதன் வாயிலாக இதைச் செய்யலாம். தொழிலாளர் கூலிகள் ஏறியதை முன்னிட்டு, ஏற்கனவே அடக்க விலைக்கும் சிறிது கூடுதலான செலவில் செய்துகொள்ளப்பட்ட போர் உற்பத்தி ஒப்பந்தங்களைத் தூக்கலான விலைகளில் மீண்டும் பேரம் செய்யவேண்டியும் இருக்கலாம். வாயிலிருந்து—வாயில் பிற்புறமாகச் செலுத்துகைக்கு அப்போதிருந்த மனநிலையில் காங்கிரஸ் 'அநியாயமாகப் பணக்காரராவது' என்ற விளக்கத்தைத் தந்திருக்கலாம்.

# 24. தேசீயப் பொருளாதாரத்தில் மாநில நிதியும் தல நிதியும்

## (State and Local Finance in the National Economy)

இரு பெரிய காரணங்களுக்காக மாநில, தல நிதியைப் பற்றி அதிகம் அக்கறை செலுத்தப்படுகிறது. பொருளாதாரத்தில் மொத்தத் தேவையின் நடத்தைக்கு இவ் வரசாங்கங்களின் நிதி நடவடிக்கைகள் அதிக முக்கியத்துவம் வாய்ந்தவை என்பது முதற் காரணமாகும். வாழ்க்கைத் தரங்களைப் பேணுவதற்கும் பொருளாதார வளர்ச்சிக்கான கேந்திரக் கருவிகளுக்கு வகைசெய்வதற்கும் இவ் வரசாங்கங்களின் தலையாய அலுவல்கள் மிக முக்கியத்துவம் வாய்ந்தவை என்பது இரண்டாவது காரணமாகும்.

அண்மைய ஆண்டுகளில் மாநில, தல அரசாங்கங்களின் செலவுகள் தொடர்ந்து வளர்ச்சியடைந்துவந்திருக்கின்றன. இவ் வளர்ச்சி அரசாங்க நிதியியலில் திடுக்கிட வைக்கும் அபிவிருத்திகளில் ஒன்ருகும். 1946ஆம் ஆண்டுக்கும் 1957ஆம் ஆண்டுக்கும் இடையில் மாநில, தல அரசாங்கங்கள் செய்த நேரிடையான செலவுகள் நான்கு மடங்கு பெருகியது. இச் செலவு 11 பில்லியன் டாலரிலிருந்து சுமார் 40 பில்லியன் டாலருக்கு மேலும் உயர்ந்தது. 1946ல் மாநில, தல அரசாங்கங்களின் செலவுகள் கூட்டாட்சியின் வரவு செலவுத் திட்டச் செலவுகளில் 18 சதவிகிதமாக இருந்தன; 1957ல் இவை கிட்டத்தட்ட 60 சதவிகிதமாக உயர்ந்தன. மொத்தத் தேசீய உற்பத்தியில், 1946ஆம் ஆண்டில் நடப்பில் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்கள் சேவைகள் இவற்றை மாநில, தல அரசாங்கங்கள் வாங்கியது. மொத்தப் பொருளாதாரத்தில் 5 சத விகிதத்திற்கும் குறைவாக இருந்தது. 1957ல் இது 8 சத விகிதத்திற்கு மேலும் உயர்ந்தது. மொத்த தேசீய உற்பத்தியும்

இட்டத்தட்ட இரண்டு மடங்குக்குமேல் பெருகியது. ஆகையினால், பொருளாதாரத்தின் மொத்த நிதிகளில், மாநில, தல அரசாங்கங் களின் நிதி நடவடிக்கை முக்கியமற்றது என்று இனிமேலும் புறக் கணிப்பது சாத்தியமன்று.

இரண்டாம் உலகப் போரிலிருந்து, மாநில, தல அரசாங்கங் களின் செலவு யாதொரு இடையீடுமின்றி ஆண்டுதோறும் 2·5 பில்லியனிலிருந்து 3 பில்லியன் டாலர்வரை அதிகரித்துக் கொண்டே வந்திருக்கின்றது. ஏனெனில், தல சேவைகளுக்கு ஆதரவு கொடுப்பதைப் பொறுத்தவரையில், நிதிமுடைகளுக்காகச் சட்டம் இயற்றும் குழுக்களுக்குத் தெரிந்தெடுப்பதற்கு இடமின்றி இருந்தது. நுகர்வோர்கள் நீங்கலாக, மொத்தத் தேவையின் உறுப்புக்கள் அனைத்தின் பொருளாதார வளர்ச்சிக்கும் போரிலிருந்து இவ் வரசாங்கங்கள் மிகத் தொடர்ச்சியாக நம்பிக்கை யான உறுதுணையாக இருந்து வந்திருக்கின்றன. பின்னிறக்கக் காலத்தில், நுகர்வோர் வாங்குதல்களுடன் மாநில, தல அரசாங் கங்கள் பண்டங்களையும் சேவைகளையும் வாங்குவது முற்பட்டு இயங்கியே வந்திருக்கின்றது. இவ்வாறு இவை உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் முதலீடு செய்வதில் 'குறைப்பு ஏற்படுவதையும் சில சமயம் கூட்டாட்சி வாங்குதல்களில் குறைப்பு ஏற்படுவதையும் ஓரளவு சரிக்கட்டுகின்றன. பொருளாதார மறுமலர்ச்சி, விஸ்தரிப்பு ஏற்படும் காலங்களில் இவ் வாங்குதல்களில் ஏற்படும் வளர்ச்சிவீதம் குறையவில்லை.

பொருளாதார நிலைபேற்றுக்கும், வளர்ச்சிக்கும் பொறுப்பை வேண்டுமென்றே ஏற்றுக்கொண்டதனால் இந்த நம்பக்கூடிய தன்மை விளையவில்லை. இது பொதுமக்களுக்கு இவ் வரசாங்கங்கள் ஆற்றும் சேவைகளின் வகைகளை விஸ்தரிப்புச் செய்ய வேண்டு மென்று தொடர்ந்து விடாது கேட்ட கோரிக்கையின் விளைவாகும். உண்மையில், இவ் விஸ்தரிப்பினால் படைக்கப்பட்ட நிதிப்'பிரச்சினை' யின்கீழ் மாநில, தல அரசாங்கங்கள் உள்ளம் குமுறி இருக்கின்றன. அவை சாத்தியமான இடங்களில் எல்லாம் நிதிப் பளுவைக் குறைப் பதற்கு முயற்சி செய்து இருக்கின்றன. ஆனால், விரைவாக அதிகரித்துக்கொண்டே போகும் மக்கள் தொகையின் கல்வி வசதிக்கு வகைசெய்யவும், நெடுஞ்சாலைகளில் நெரிசலை அகற்றவும் புதிய மக்கள் தொகைக் கேந்திரங்களில் அடிப்படை வசதி களுக்கும், சேவைகளுக்கும் வகைசெய்யவும், பல்வேறுபட்ட பரவ லான நிலைகளில் வசதியற்றோருக்கு, சேவைகளுக்கு வகைசெய்யவும் ஆன உடனடியாகவும் அவசியமாகவும் செய்ய வேண்டிய தேவை கள் அரசாங்கச் செலவை அதிகரித்தன. ஆகவே அரசாங்கங்களின்

செலவை ஏறவிடாதபடிச் செய்த முயற்சிகளை இவை தகர்த்து விட்டன. இதன் விளைவாக மாநில, தல அரசாங்கங்களின் கடன் கள் 1946ல் 14 பில்லியன் டாலரிலிருந்து 1958ல் 51 பில்லியன் டாலராக உயர்ந்தன. மொத்தத்தில் மாநில, தல அராங்கங் களின் செலவில் ஏற்பட்ட உயர்வுக்குச் சமானமாகவே அவை களின் கடன்களும் உயர்ந்திருக்கின்றன, மாநிலங்களிடையேயும், தல அரசாங்கங்களிடையேயும் தனிப்பட்ட பல வேறுபாடுகளை இவ் வுயர்வில் காணலாம்.[1] இதைக் கீழேயுள்ள அட்டவணையி லிருந்து தெரிந்து கொள்ளலாம்.

| ஆண்டு | மாநில, தல அரசாங்கச் செல வில் இரண்டாண்டுகள் தோறும் ஏற்பட்ட ஏற்றம் (பில்லியன் டாலரில்) | மாநில, தல அரசாங்கக் கடனில் இரண்டாண்டு கள் தோறும் ஏற்பட்ட ஏற்றம் (பில்லியன் டாலரில்) |
|---|---|---|
| 1946 | 1·8 | —.5 |
| 1948 | 6·4 | 2·6 |
| 1950 | 5·1 | 4·4 |
| 1952 | 3·3 | 5·1 |
| 1954 | 4·6 | 7·6 |
| 1956 | 6·0 | 9·3 |
| 1958 | 8·3 | 8·9 |

மொத்தத்தில் மாநில, தல அரசாங்கங்கள் சேவைகளை விஸ்த ரித்ததனுல் செலவு மிகவும் ஏறியிருக்கிறது. ஆனுல், வரிவிதிப்பை விஸ்தரிப்பதற்கு அவை நடவடிக்கை எடுக்கவில்லை. ஆயினும், செலவின் ஏற்றத்தின் பெரும்பகுதியும், நிர்மாண வேலைகளுக்காக ஏற்பட்டதேயாகும். இவற்றிற்குச் சாதாரணமாகக் கடன் வாங்குதல் வாயிலாகவே பெரிதும் நிதி திரட்டுவது வழக்கமாகும். இங்ஙனம் இருந்தும் இவ் வரசாங்கங்கள் பளுவான வரிவிதிப்புக்கு இணங்கவில்லை. நிலைமையின் உண்மைகளுக்குத் தக்கவாறு தம்மை சரிக்கட்டிக் கொள்வதில் உள்ள பின்னடைவும் (lagging) அவை விதிக்கும் பெரும் வரிகள் பளுவாகவும், அநியாயமாகவும் இருப்பதும் இதற்குக் காரணங்களாகும்.

## மாநில அரசாங்கத்திற்கும், தல அரசாங்கத்திற்கும் உள்ள தொடர்புகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிலவும் கூட்டாட்சி முறையின் கீழ் அரசாங்கத்தின் ஆதிபத்தியம், கூட்டாட்சி, மாநில ஆட்சி என்ற இரு அரசாங்க மட்டங்களில் பிரிக்கப்பட்டிருக்கிறது. பிற

நாடுகளுடன் தொடர்பு, மாநிலங்களிடையே உறவுகள், இவற்றைப் பற்றிய பகுதியில், கூட்டாட்சி ஆதிபத்தியம் செலுத்துகின்றது. தன்னுடைய எல்லைகளுக்கு உட்பட்ட விவகாரங்களில் ஒரு மாநிலம் ஆதிபத்தியம் செலுத்துகிறது. ஒரு மாநிலத்திற்குள்ளேயும், மாநிலங்கள் இடையேயும் உள்ள விவகாரங்களின் பகுதியில் தெளிவாக மேற்படிதல் (overlapping) இருக்கின்றது. இவ் விரண்டிற்கும் இடையில் உள்ள வேறுபாட்டைச் சிறப்பாக, அவற்றிடை மோதல் நேரும்பொழுது, நீதிமன்றங்கள் விளக்கி அவற்றின் அதிகாரங்களை வரையறுக்கவேண்டி யிருக்கின்றது.

மாவட்ட, மாநகர, நகர, கிராம அரசாங்கங்கள்' பிரத்தியேக மாவட்டங்கள் இவற்றை உள்ளடக்கிய தல அரசாங்கங்களுக்குச் சொந்தமான முறையில் யாதொரு ஆதிபத்திய அதிகாரங்களும் கிடையா. மாநில அரசாங்கங்களின் ஆட்சி ஏஜன்ஸிகளே தல அரசாங்கங்கள் என்று அமெரிக்க அரசாங்கச் செயல் முறையில் காணலாகும். ஒரு பக்கத்தில் அவை குறிப்பிட்ட அலுவல்களைச் செய்ய வேண்டுமென்று மாநில அரசாங்கங்கள் பணிக்கின்றன. மற்றொரு பக்கத்தில் அவற்றின் வழிவகைகளை மாநில அரசாங் கங்கள் வரையறுக்கின்றன. ஆணைத்தொடரில் கீழ்நிலை அலுவலர் என்ற போகூழ் நிலையில் தல அரசாங்கங்கள் இருக்கின்றன. அவை ஒரு கட்டளையை நிறைவேற்றும்படிப் பணிக்கப்படுகின்றனவே யன்றி, அதை நிறைவேற்றுதற்கு வேண்டிய சுயேச்சையையோ, அல்லது அதிகாரத்தையோ மாநில அரசாங்கங்கள் அவற்றுக்குத் தருவதில்லை.

தல அரசாங்கத்தின் இம் முறையீடு சர்வ சாதாரணமாகக் கேட்கப்படுகிறது. இது சரியானது என்றும் கூறலாம். ஆயினும், இதற்கு எதிரிடையான வேறொரு நிலையும் இருப்பதைப் புறக் கணிக்க முடியாது. இதுதான் தல அரசாங்கங்களுக்குத் தாங்கள் செய்யும் சேவைகளைத் தெரிந்தெடுப்பதிலும் அவற்றைப் பேணுவ தற்கான வழிகளிலும் வரையறையில்லாது இருக்குமானால் அவற்றின் செயல்—தரங்கள் மிகவும் மாறுபடும் என்பதாகும். சில தல அரசாங்கங்கள் திறமையற்றவையாகவும், பொறுப்பற்றவை யாகவும் இருக்கின்றன. அரசாங்கத்திடம் அதிகாரத்தை மைய மாக்குதலே இப் பிரச்சினைக்கான ஒரே பரிகாரமாகும். சற்று உயர்ந்த, யாவற்றையும் அடக்கிய மட்டத்தில் இம் மையமாக்குதல் செய்யப்பட வேண்டும்.

பொதுக் கல்வி, நிர்மாணம், தல நெடுஞ்சாலைகள், சாலைகள் ஆகியவற்றின் பராமரிப்பு, சில குறிப்பிட்ட தனியாள் நன்மை

நடவடிக்கைகளின் (personal welfare activities) இதுபோன்ற தல அலுவல்களைச் செய்யும் பொறுப்பு, இறுதிப் பகுத்தாய்வில் ஆதிபத்தியமுடைய மாநில அரசாங்கங்களின் பொறுப்பாகும். அதே சமயம் இந் நடவடிக்கைகளை மிகவும் அணித்தாக உள்ள தல அரசாங்கங்கள் செய்வதில் தெளிவான அநுகூலங்கள் இருக்கின்றன என்பதையும் நாம் பொதுவாக ஒப்புக்கொள்ளவேண்டும். தங்கள் குழந்தைகளுக்கு அளிக்கப்படும் பொதுக் கல்வியின் தரத்தில் பெற்றோர் தனிப்பட்ட அக்கறை எடுத்துக்கொள்வதனுல் படிப்பதற்குப் போதிய வசதிகளைச் செய்வதற்கும், நல்ல ஆசிரியர்களை நியமித்தற்கும் இஃது ஆற்றல் மிக்க தூண்டுகோலாக இருக்கின்றது என்று நம்புகின்றனர். இதே பெற்றோர்களும் (இவர்களின் அயலார்களும்) இதற்காகும் செலவின் பெரும் பகுதியையும் ஏற்கவேண்டி இருப்பதால், தேவையற்ற ஆடம்பரங்கள் இன்றி, திறமையாகப் பள்ளி இயங்குவதற்கு வலுவான தூண்டுகோல்கள் இருப்பதாகவும் நம்புகின்றனர். தல நெடுஞ்சாலைகளைப் பொறுத்த வரை, தலத்தில்வாழ் மக்களே சாலை அபிவிருத்திக்கான முடையை தீர்மானம் செய்யும் சிறந்த நிலையில் இருப்பதாகவும், தலம் பூராவும் அபிவிருத்திகளை நியாயமாக அல்லது அறிவுக்கு உகந்த விதமாகப் பங்கீடு செய்வார்கள் என்பதாகவும் மக்கள் எண்ணுகின்றனர். தங்கள் அயலார்களைப் பற்றித் தலத்தில் குடியிருப்பவர்களுக்கு நன்முகத் தெரியும். அவர்களுக்குத் தலவரி வீதங்களின் உச்சக் கட்டத்திலும் சொந்த முறையில் அக்கறை உண்டு. ஆகவே, அற, நன்மைச் செலவுகளை நன்முக யோசித்து மதிப்பீடு செய்வதிலும் இவர்கள் அக்கறை காட்டுவார்கள் எனலாம்.

மாநில அலுவல்களில் முக்கியமானவற்றைத் தல அரசாங்கமே ஆட்சி செய்ய வேண்டுமென்பதற்கு வலுவான காரணங்கள் உள. ஆயினும், தங்களுக்குத் தேவைப்படும் பணத்தைத் தங்கள் சொந்த வருவாய் முறைகள் வாயிலாகவே தல அரசாங்கங்கள் மேற்கொள்ளுவதைக் காட்டிலும், தங்களுக்கு மாநில அரசாங்கங்கள் அனுப்பி வைத்த நிதிகளை மட்டும் செலவு செய்வதைக் கொள்கையளவில் அத்தனை வலுவுடையது அன்று என்று நாம் எண்ணுகிறோம். தாங்கள் சொந்தமாகவே வரியைத் திரட்டினுல்தான் தல அரசாங்கங்கள் வீண் செலவு செய்வது குறையலாம். அதே சமயம் இவ்வித முக்கியமான அலுவல்களைக் கண்ணியமான முறையில் நிறைவேற்றி வைப்பதற்கு உறுதிகூறும் பொறுப்பை ஆதிபத்தியமுள்ள மாநில அரசாங்கமும் தட்டிக்கழிக்க முடியாது. ஆகவே, சில சமயங்களில் நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ தல அரசாங்கங்களை மாநில அரசாங்கம் வலுக்கட்டாயப்படுத்துவதும் அவசியமேயாகும். மிகையாகக் கருமித்தனத்தை தல அரசாங்கம்

காண்பிக்கும்பொழுது இவ் வலுக்கட்டாயம் அவசியம் ஆகும். இவ்வாறு அதிகாரத்தைப் பரவல் ஆக்கல், 'சுயஆட்சி' (home rule) தல சுயேச்சை இவற்றுக்கான வாதங்கள் உள்ளத்தைத் தொடுவன வாகும். ஆனுல், பொறுப்பைப் பரவல் ஆக்கிஞல், இதனுல் பல்வகைப்பட்ட செய்கைத் தரங்களுக்கு வழி காண்பித்ததாகும். இதனுல் தல அரசாங்கம் 'தானுகவே யாவற்றையும் செய்யும்படி' விடவேண்டும் என்று கூறும் ஒருவரது உற்சாகம் குன்றுகிறது.

## தல அரசாங்கங்களின் நிதிப் பிரச்சினைகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தல அரசாங்கங்களின் பல நிதிப் பிரச்சினைகளும் அவற்றின் வரி முறைகளிலுள்ள இறுக்கத்தி னின்றும், அவற்றின் முக்கிய அலுவல்களின் செலவுகளது பெருக் கத்தினின்றும் கிளைத்தவையாகும். தங்கள் சொந்த இனங்களி லிருந்தே வருவாய்களைப் பெருக்குதலும் (increasing revenues from their own sources) மேல் நிலைகளிலுள்ள அரசாங்கங்கள் தம் அளிப்புகளை அதிகரித்தலும், செயல் முறையின் திறமையை அபிவிருத்தி செய்தலும், செலவுகளின் விஸ்தரிப்பை மட்டுப் படுத்தலும் இப் பிரச்சினைகளுக்கான தீர்வாம்.

**திறமையை அபிவிருத்தி செய்தல்:** தல அரசாங்கங்களின் செலவுகளைக் குறைப்பதற்கு இரண்டு வழிகளே இருக்கின்றன. ஒன்று அளிக்கப்பட்ட அலுவல்களைக் கூடுதல் திறமையுடன் செய்வதாகும்; மற்றொன்று சேவைத் தரங்களைக் குறைப்பதாகும். இப் பிரிவில் முந்தியதைப் பற்றி நாம் ஆராய்வோம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தல மட்டத்தில் அரசாங்கம் மிகை அமைப்பாக (over-organized) இருக்கின்றது என்பது பற்றிச் சிறிதும் ஐயமில்லை. தல வகுப்பு என்ற பெயரில் பல நிலைகளில் அரசாங்கம் இருப்பதே, அவற்றிடையே அலுவல்கள் செய்கை முறை மிகவும் பரந்துபட்டு இருக்கின்றது என்பதைக் காட்டு கின்றது. நம் வரிமுறையில் மாவட்ட அரசாங்கம் என்பது இக் காலத்திற்குப் பொருந்தாது என்பதை வல்லுநர்களில் பலரும் ஒப்புக் கொள்வார்கள். வட மாநிலங்களில் இது சிறப்பாக உண்மையாகும். மாவட்டம் என்பது ஒரு செயற்கைப் புவியியல், அரசியல் படைப்பு. சில நீதிமன்றங்களைப் பராமரிப்பதும், வயது முதிர்ந்தோருக்கும், வறியோருக்கும் வகை செய்வதில் கலந்து கொள்வதுமே இவற்றின் அலுவல்களாகும். மாவட்டத்தை ஓர்

அலகாகக் கொண்டு நீதிப் பொறுப்புகளைக் கொடுத்திருப்பதற்குக் காரணம், அதற்கு யாதாயினும் ஒரு அலுவலைக் கொடுக்க வேண்டுமே என்ற விருப்பத்தின் விளைவாக இருக்கலாம். நீதி அலுவலைச் செய்வதற்கு மாவட்டம் ஒரு சிறப்புமிக்க அலகு என்று தோன்றவில்லை. மாவட்டங்கள் அறச் செயல்களைப் புரிவதைப் பொறுத்தவரையில் பல்வேறுபட்ட சேம நல சேவைகளுக்கு (welfare services) மையத்தில் வகை செய்வதன் மூலம் இச் சேவைகள் அனைத்தையும் மாநில அரசாங்கங்கள் ஏற்றுக்கொண்டு விட்டன. நகரங்கள் மேற்கொள்ளாத அலுவலின் பகுதியை முழுதும் மாநிலங்கள் மேற்கொள்வதின் மூலம் சேமநல சேவையின் மட்டம் கணிசமான அளவு அபிவிருத்தி அடைய லாம் என்பதும் சாத்தியமே.

நாட்டின் பிற பகுதிகளில் தல நெடுஞ்சாலைகளை ஆட்சி செய் வதில் மாவட்டங்கள் பெரும் பங்கை சம்பிரதாயமாகவே வகித் திருக்கின்றன. சேமநல சேவைகளையும் அவை செய்து வந்திருக் கின்றன. ஆனால், மாநில நெடுஞ்சாலை முறைகள் விரைவாக அபிவிருத்தி அடைந்ததனால், பெரும் நெடுஞ்சாலைகளுக்கான பொறுப்பு மாநில அரசாங்கங்களுக்கு மாற்றப்பட்டது. நகரின் எல்லைப்புறங்களுக்கு அப்பால் உள்ள தல சாலைகள், இன்னமும் மாவட்டத்தின் பொறுப்பிலேயே இருந்து வருகின்றன. இவற்றின் பொறுப்பை, எல்லோருக்கும் நன்மை தரத்தக்க முறையில் மாநில அரசாங்கத்திற்கு மாற்றிவிடலாம். மையப்படுத்துவதனால் இன் னும் மிக சரசமாகவும், யாவரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய தரத்தி லும் நெடுஞ்சாலைப் பராமரிப்பைச் செய்யலாம் என்பது திண்ணம். ஆகவே, பொதுவாக மாவட்டம் என்பது ஓர் இன்றியமையாத உளுத்துப்போன அரசாங்க அலகாக இருக்கின்றது. சேவையின் தரத்தில் மேம்பாடு ஏற்பட்டால் ஒழிய மாவட்டம் மறைந்து ஒழிவதை யாரும் பொருட்படுத்த மாட்டார்கள்.

மாவட்ட அரசாங்கங்களை அகற்றிவிட்டாலும் பல வகைத் தல அர்சாங்கங்கள் மிஞ்சும். அவையாவன: நகர, மாநகர, கிராம அரசாங்கங்கள். பள்ளி மாவட்டங்கள், தீ மாவட்டங்கள், சாலை மாவட்டங்கள், கழிவு நீர், நீர் மாவட்டங்கள், வரி விதிப்பு, செலவு இவற்றைப் பொறுத்த வரையில் நகர, மாநகர அரசாங்கங்களிலிருந்து இவ் வுட் பிரிவுகள் சர்வ சாதாரணமாகப் பெருத்த அளவு சுயேச்சையைப் பெற்றிருக்கின்றன. தாங்கள் தக்கது என எண்ணியபடி சிறப்பான அலுவல்களை நிறைவேற்றத் தகுதியுடைய நபர்கள் அல்லது இதில் சிறப்பாக அக்கறை காட்டும் பிரத்தியேகக் குழுக்களிடம் அதிகாரத்தை ஒப்படைப்பதே இச்

சுயேச்சைக்கான காரண விளக்கமாகும். சிறப்பு நோக்கங் களுக்காக மேற்கொண்ட தலக் கடனை நிருவுகிப்பதற்கு ஒரு துறைபோய டிரஸ்டிகள் (specialized boards of trustees) அடங்கிய குழுக்களை அமைப்பதும் இச் சுயேச்சைக்கான காரண விளக்கமாக இருக்கலாம். இவ் வுட்பிரிவுகளைப் படைத்ததற்கான நோக்கங்கள் சிலாகிக்கத் தக்கவையே என்றாலும், ஒருங்கு இணைக்கப்பட்ட தல அரசாங்கத்தின்கீழ் இதே நலன்களையும் திறமைகளையும் ஏன் திரட்ட முடியாது என்பது விளங்காத புதிராகவே இருக்கின்றது. ஒரு துறைபோய சேவைகளும் சட்டசபைக் கட்டுப்பாட்டின் கீழ் ஒருங்கிணைக்கப்பட்ட பட்ஜெட்டில் கலந்துகொள்ளலாம். தற்போதைய தல அரசாங்கங்களின் பெருக்கம் வரலாற்றில் தற் செயலாக நிகழ்ந்தவையாகும். மிகை அமைப்புக்கான நாட்டுப் போக்கும் (indigenous tendency) இதை மிகவும் பாதித்தது.

போதிய கண்காணிப்பு இன்மையால் தல அரசாங்க அலுவல்களைப் பல சுதந்திர அல்லது அரைகுறை சுதந்திரம் உள்ள 'அரசாங்கங்களிடையே' சிதறவைப்பது திறமையின்மையில் முடிய லாம். ஆளப்படுகின்ற பகுதி மிகவும் சிறியதாக இருப்பதால் தனியாக ஓர் அரசாங்க அமைப்பு இருப்பதை நிலை நாட்டுவது மிகக் கடினம். அதனால் இயல்பாகவே இவ் வகை அரசாங்கங்களில் திறமையின்மைதான் இருக்கும் என்பது இதைவிட மிக முக்கிய மானதாகும். வேலை பெரிதாக இருந்தால் முழு நேரத்தில் ஆட்களை வேலைக்கு அமர்த்துவதும் பயன்தரும். இதுவுமன்றி தகுதியுள்ள ஆட்சியாளர்களைத் தெரிந்தெடுக்க வகை ஏற்படும். திறமையான அமைப்புக்கும் வழிகோலும். ஆயினும் 'திறமை'யை மொத்தச் செலவையோ அல்லது தலா செலவையோ கொண்டு கணக்கிடக் கூடாது. என்று யோசனை தெரிவிப்பது பயன்தரும். திறமை என்பது குறிப்பிட்டத் தர நிலையில் சேவை அலகின் செலவாகும். எளிய தரக்குறைவான சேவைகளைக் காட்டிலும், கூடுதலான சிறந்த சேவைகளுக்குப் பொதுவாகத் தலா ஒன்றுக்கு அதிகம் செலவாகும். இங்ஙனம் அதிகச் செலவு ஆவதால் செய்கையின் திறமை குறைவானது என்பது பொருளன்று. ஒரு மாநகரத்தின் மக்கள் தொகை ஏறுந்தோறும் தலா செலவுகளும் ஏறுவதற்கான முரணில்லாத போக்கை நாம் ஆறும் அட்டவணையில் (மூன்றும் அதிகாரத்தில்) சுட்டினோம். ஆனால், செலவு ஏறுவதற்கு, மக்கள் தொகை நெரிசலினால் பெருத்த அளவில் பல்வேறுபட்ட சேவை களைச் செய்வது அவசியமாவதே பொதுவான காரணமாகும். ஒரு சிறிய அரசாங்கப் பகுதியில் சேவையின் ஒவ்வோர் அலகிலும் குன்றந்த செலவில் செய்யப்படும் சாத்தியக்கூறு இருக்கிறது. பெரிய நகரத்தில் இவற்றுக்கான தலாசெலவுகள் ஏறுகின்றன. அரசாங்க

அலகு உத்தம அளவுக்குக் குறைவாக இருந்தால் பொதுச் செலவுகள் (overhead expenditure) சிலபே ரிடையேதான் பங்கீடு செய்யப்படும். அரசாங்க அலகு உத்தம அளவுக்குக் கூடுதலாக இருந்தால் உச்சபட்சத் திறமைக்கு, அமைப்பு மிகவும் சிக்கல் நிறைந்ததாக ஆகிவிடுகிறது. சிறிய தல அராசாங்கங்களில் திறமைக்கு ஒரு பெருத்த தடை, போதிய மக்கள் தொகை இல்லாவதே என்பது தெளிவு. ஆனால், மேற்கொண்ட அலுவ லுக்கு ஏற்றாற் போல், தல அலுவல்களில் திறமையான ஆட்சிக்கு வேண்டிய உத்தம அளவின் பகுதி வேறுபடும். மிகச் சிறு சமு தாயங்களில் கூடப் பனிக் கட்டியை அகற்றுதல், ஆண்டுதோறும் உடைமையை மதிப்பீடு செய்தல், வீட்டு நிவாரணம் (home relief) ஆகிய சில அலுவல்கள் மிகவும் திறமையாகச் செய்யப்படலாம். ஆனால், நெடுஞ்சாலைத் திட்டமிடல், நிர்மாணித்தல், உடைமையை மீண்டும் பெருத்த அளவில் மதிப்பீடு செய்தல், உயர்நிலைக் கல்விக்கு வகை செய்தல் இவை போன்ற வேறுபல அலுவல்களைப் பெருத்த அலகுகளில்தான் மிகவும் திறம்படச் செய்ய முடியும். இது பிரதேசப் பள்ளிகளின் அபிவிருத்தியில் நன்கு புலனாகின்றது. இவை தல அரசாங்க எல்லைகளைக் கடந்த கூட்டுறவு ஏற்பாடுக ளாகும். இதற்காகும் அவசியமான செலவை நிலை நாட்டு வதற்குப் போதிய எண்ணிக்கை மாணவர்களைச் சேர்க்க வேண் டும். இச் சேவையை ஆற்றுவதற்கான வருவாய்த் தனத்தைப் பரவலாக ஆக்குவதற்கு இவ் வேற்பாடுகள் துணை செய்தன.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள பிரதிநிதித்துவத் தல அரசாங்கங்கள் நிதித்திறமைக்கு வகை செய்யும் அளவுக்குப் போதுமான பரப்பு உள்ளதாக இல்லை. ஆயினும் அதே சமயம், அண்மையில் எதிர்காலத்தில் அரசாங்க எல்லைகளைத் திருத்தி அமைப்பார்கள் என்று எண்ணுவதற்கும் இடமில்லை. ஏனெனில், தற்போதைய முறை, மரபு, குழு விசுவாசங்கள், சட்டபூர்வமான— ஏன் அரசியல் சட்டபூர்வமான—ஏற்பாடுகள் இவற்றின் சகதியில் ஆழ அழுந்தியிருக்கிறது. இவ் வகை அரசாங்கங்களிடையே பொது மக்கள் பணங்களை உபயோகிப்பதில் கணிசமான அளவு பெரும் திறமை ஏற்படும் என்று நம்பிக்கை கொள்ளவும் முடியவில்லை. ஏனெனில், இவ்வாறு நம்பிக்கை கொள்வதற்குத் தற்போதுள்ள நிலைமையின் உண்மைக் கண்ணோட்டம் இடம் தரவில்லை. வேறொரு புறத்தில் நிதித் துறையில் திறமையின்றி இருப்பதால் மக்கள் மதிப்பீட்டில் மாவட்ட அரசாங்கங்கள் மிகவும் தாழ்ந்துவிட்டன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில பாகங்களில் மாவட்ட அர சாங்கம் கைவிடப்படுவதும் அல்லது சோர்வையடைவதும் காலக் கிரமத்தில் நேரிடக்கூடியதே யாகும். மேலும், இந்த தல அரசாங்

கங்களுடன், ஒப்புமையில் தல அரசாங்கங்களினின்றும் சுயேச்சை யாக இருக்கும் தல அரசாங்கங்களின் உட்பிரிவுகளையும் இணைப் பதற்கான போக்கு காணப்படுகிறது. நகர்ப் புறங்களை உத்தி யோகத் தோரணையில் நிதியளவில் திறமையான சமுதாயங்களாக இணைப்பது நாளடைவில் ஏற்படலாம். இவ்வாறு எதிர்பார்ப்பது அறிவுக்குப் புறம்பானது அன்று. ஏனெனில், இத் திறமையற்ற அலகுகளிடையே நிதி நெருக்கடிகள் பரவலாக இருக்கின்றன. ஆயினும், தற்கால நிலைகளுக்கு ஏற்பப் பிரதேச அதிகாரக் குழுக் களைப் படைப்பதே மிகவும் சாத்தியமானதாகும். இங்கும் அங்கும், சில இடங்களில் திறமையற்ற அலகுகளின் கையிலிருந்து (மாநில அரசாங்கமாய் இருந்தாலும் சரி, தல அரசாங்கமாய் இருந்தாலும் சரி) முக்கியமான அலுவல்களை எடுத்து, அவற்றை ஏறக்குறைய தற்காலிகமான அரசாங்க நிலையங்களிடம் ஒப்படைப்பதே இக் கால நிலைமையில் மக்கள் வேண்டுவதாகும். இந் நிலையங்கள் திறமையாகவும், போதுமான அளவிலும், அலுவல்களை ஆற்று வதற்குக் கூடிய திறன் படைத்திருக்க வேண்டும். இஃது எத் துணைப் பரவலாகச் செய்யப்படுகின்றதோ, அத்துணை சிறிய திறமையற்ற அரசாங்க அலகு வெறும் மரபின் இருப்பிடமாகவும் ஆகிறது; உயிர்நிலை முக்கிய அரசாங்க நிலையமாக (vital governmental institution) இருப்பதில்லை. ஆயினும், மொத்தத்தில் அண்மையில் எதிர்காலத்தில் உண்மையான திறமையை அடை வதன் மூலமாகத் தல அரசாங்கங்களின்மீதுள்ள நிதி அழுத்தங் களைக் கணிசமான அளவு குறைக்கலாம் என்பதற்கு யாதொரு நம்பிக்கையும் இல்லை.

**சேவைத் தரங்களைக் குறைத்தல்:** இவ் வதிகாரத்தின் முற் பகுதியில் தல அரசாங்கங்களின் நிதிப் பிரச்சினைக்கு வருவாய்களைப் பெருக்குவ தன் வாயிலாகவோ அல்லது செலவுகளைச் சுருக்குவதன் வாயி லாகவோ பரிகாரம் காணமுடியும் என்று யோசனை தெரிவித் தோம்.[2] ஒவ்வொரு டாலருக்கும் கூடுதல் சேவைகளைப் பெறுவ தன் மூலமோ அல்லது குறைவான சேவைகளைக் கொண்டு திருப்தி அடைவதன் மூலமோ செலவைச் சுருக்கலாம். குறுங் காலத்தில் கணிசமான அளவு திறமையை அதிகரிப்பதன் மூலம் ஒவ்வொரு டாலருக்கும் அதிகம் சேவையைப் பெறும் சாத்தியக் கூற்றுக்குப் போதிய நம்பிக்கை இருப்பதாகத் தெரியவில்லை என்பதை நாம் முன்னரே கண்டோம். சேவைத் தரங்களைக் குறைப்பது பற்றி யாது சொல்லலாம்? சமுதாயங்கள் தங்கள் தல அரசாங்கங்கள் ஆற்றும் சேவையின் தரக்குறைப்பில் திருப்திப்படுவார்கள் என்று நாம் எதிர் பார்க்கலாமா? இதற்கான சான்று தெளிவாக எதிர்மறையாகவே இருக்கின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிலவும் வாழ்க்கைத்

தரங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது போதுமான வசதி யில்லாத சாலைகளையும், போதுமான வசதியில்லாத பள்ளிகளையும் மக்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று தோன்றவில்லை. உயர்ந்த தரங்களை மக்கள் கோருவார்கள் என்று எதிர்பார்ப்பது நியாய மானதே.

சில தல சேவைகளுக்குப் பெருத்த செலவு ஆகின்றது. இப் பெருத்த சேவைகளைப் பொறுத்தவரையில் சமுதாயத்தின் தேவை களில் அண்மைக் காலத்தின் போக்கென்ன என்பதை நாம் ஆராய் வோம். மிகவும் முக்கியமான தல அரசாங்கச் சேவைகள் பொதுத் துவக்கக் கல்வி, உயர்நிலைக் கல்வி, தலச் சாலைகள், நெடுஞ்சாலைகள் இவற்றுக்கு வகை செய்வதே யாகும்.

அடுத்த பக்கத்தில் உள்ள அட்டவணையில் 39-40, 49-50, 57-58 இந்தப் பள்ளியாண்டுகளில் பொதுக் கல்விச் செலவின் போக்குகளைப் பொறுத்த புள்ளி விவரத் தகவல்கள் ஒரு சேரத் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன.

இவ் வட்டவணையில் 'பள்ளி நெருக்கடியை' உண்டு பண்ணும் காரணிகள் தெற்றெனப் புலனாகின்றன. முதற் காரணம் பள்ளிக்குப் போகும் மாணவர்களின் எண்ணிக்கை விரைவாக ஏறியதேயாகும். 1940-க்கும் 1950-க்கும் இடைப்பட்ட ஆண்டு களின் இறுதியில் துவக்கப் பள்ளிகளில் இந்த நெருக்கடி தோன்றி யது. இதற்குக் காரணம், 1940-க்கும் 1950-க்கும் இடைப் பட்ட நடு ஆண்டுகளில், 1940 ஆம் ஆண்டுக்கும் குறைவாக மாணவர் தொகை இறங்கியதே யாகும். இரண்டாவது உலகப் போரின் போது திடீரென்று பிறப்பு வீதம் அதிகரித்தது தற்காலிக மானதாக இல்லாமல், இன்று வரையில் தொடர்ந்து இருந்து வந்திருக்கின்றது. இங்ஙனமாக 1950-க்கும் 1958-க்கும் இடை யில் துவக்கப் பள்ளிகளில் மாணவர்களின் சேர்க்கை வெகு துரித மாகப் பெருகியது. 1940-க்கும் 1950-க்கும் இடையில் உயர் நிலைப் பள்ளிகளில் சேர்பவரின் தொகை கணிசமான அளவு குறைந்தது. இதற்குக் காரணம் 1930-க்கும் 1940-க்கும் இடை யில் பிறப்பு வீதங்கள் மிகக் குறைவாக இருந்ததே ஆகும். 1950 ஆம் ஆண்டை அடுத்து உயர்நிலைப் பள்ளிகளில் சேர்ப்பவர் களின் எண்ணிக்கை 50 சதவிகிதத்திற்குமேல் பெருகியுள்ளது.

பள்ளிக்கூடத்தில் சேர்பவர்களின் மொத்த எண்ணிக்கை பெருகியதனால், பள்ளிக்கூடச் செலவுகளும் ஏறின. ஆனால், இம் மொத்த எண்ணிக்கையிலிருந்து முழு விவரமும் தெரியவில்லை.

## அட்டவணை 35

### 1939—1940, 1949—1950, 1957—1958 இவ் வாண்டுகளில் அரசாங்க நாள் பள்ளிகளின் சில கூறுகள் பற்றிய ஒப்புமைகள்.[θ]

| | | 1939-1940 | 1949-1950 | 1957-1958 | சதவீத உயர்வு 1939-1940 க்கும் 1957-1958 க்கும் இடையே |
|---|---|---|---|---|---|
| I | மொத்த சேர்க்கை (000) | 25,434 | 25,111 | 33,509 | 31·7 |
| | தொடக்கப் பள்ளிகள் | 18,832 | 19,405 | 23,815 | 26·5 |
| | உயர்நிலைப் பள்ளிகள் | 6,601 | 5,707 | 9,694 | 46·9 |
| II | வகுப்பு ஆசிரியர்களின் சராசரி சம்பளம் (டாலரில்) | 1,441 | 3,010 | 4,650 | 222·4 |
| III | தலா மாணவர் ஒருவருக்கு நடப்புச் செலவு (டாலரில்) | 88.09 | 208·83 | 320·00 | 266·1 |
| | தலா மாணவர் ஒருவருக்கு மூலதனச் செலவு (டாலரில்) | 10·17 | 40·39 | 99·57 | 880·0 |
| IV | பொதுப்பள்ளி முறைகளின் வருவாய் வரவுகள் (மில்லியன் டாலரில்) | 2,260 | 5,442 | 11,143 | 393·1 |
| | கூட்டரசாங்கத்திலிருந்து (%) | 1·8 | 2.9 | 3·6 | — |
| | மாநில அரசாங்கத்திலிருந்து (%) | 30·2 | 39·6 | 40·6 | — |
| | தல அரசாங்கங்களிலிருந்து (%) | 68·0 | 57·5 | 55·8 | — |

θ Sources: Federal Security Administration, Office of Education, *Statistics of State School Systems*, 1949-1950, Washington, 1952; and National Education Association, *Advanced Estimates of Public...Schools*, 1957-58, Washington, 1958.

பள்ளிக்கூடத்தில் சேர்ந்தவர்களின் எண்ணிக்கை பெருகியதில், பெருத்த சதவிகிதப் பெருக்கம் உயர்நிலைப் பள்ளிகளிலேயே ஏற்பட்டிருக்கின்றது. உயர்நிலைப் பள்ளியில் ஒவ்வொரு மாணவருக்கும் ஒப்புமையில் கூடுதலாகச் செலவாகிறது. பாடதிட்டத்தைத் தெரிந்தெடுப்பதற்கும், பாடதிட்டங்களில் விருப்பப் பாடங்களைத் தெரிந்தெடுப்பதற்கும் வகை செய்யும் உயர்நிலைப் பள்ளிகளின் சிறப்புத் தேர்ச்சி, சிறப்புப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்கான தேவை, விஞ்ஞான சோதனைக் கூடங்கள், கடை (shop), உடற் பயிற்சி, இன்னும் பல் வேறுபட்ட பிற நடவடிக்கைகளுக்கான தடவாளங்கள் இவை யாவும் சேர்ந்து துவக்கப் பள்ளிகளைக் காட்டிலும் உயர்நிலைப் பள்ளிகளில் தலா மாணவர் ஒருவருக்குக் கணிசமான அளவு கூடுதல் செலவு ஆவதற்குக் காரணங்கள் ஆகும்.

பள்ளி மாணவர்களின் தொகைப் பெருக்கம் படுக்கைக் கோடாக இல்லை; சமுதாயங்கள் பொதுவாகப் பள்ளியில் சேருவதில் ஒரேவீத வளர்ச்சியைக் காண்பிக்கவில்லை. மொத்த எண்ணிக்கை திடுக்கிடும் அளவுக்குப் பெருகி யிருந்தாலும், மக்கள் தொகையிலும் கணிசமான அளவு புரட்டு ஏற்பட்டிருக்கின்றது. புதிய நகர்ப்புற சமுதாயங்களைப்போல் பழைய சமுதாயங்கள் அத்துணை விரைவாக வளரவில்லை. புதிய தொழிற் கூடங்களை அமைத்ததினுல் புதிய சமுதாயங்களுக்குக் கல்வி, துப்புரவு, இன்னும் பிற செலவுகள் மிகுதியாக ஏற்பட்டன. மக்கள் தொகைப் புரட்டு ஏற்படவில்லையாளுல், இன்றியமையாது வேண்டப் படுவதைவிட புதிய சலுகைகளுக்கான முடை பெருகியதே இதன் விளைவாகும்.

ஆசிரியர்களின் சராசரி சம்பளங்களில் கணிசமான அளவு உயர்வு ஏற்பட்டது அட்டவணையில் முக்கியமாகக் குறிக்க வேண்டிய இரண்டாவது காரணியாகும். 1950ஆம் ஆண்டுக்கும் 1958 ஆம் ஆண்டுக்கும் இடையில் அரைவாசிக்கு மேல் சம்பள உயர்வு ஏற்பட்டிருப்பது அட்டவணையிலிருந்து புலனுகின்றது. பொதுவாகப் பொருளாதாரத்தில் வேலை வாய்ப்புக் கூடுதலாக இருந்த நிலைமையில், தேவையான எண்ணிக்கை ஆசிரியர்களை ஈர்த்து, ஆசிரிய வேலையிலேயே வைத்திருப்பதற்கு, அக் காலக் கூற்றில் நுகர்வோர் விலைகளில் ஏற்பட்ட ஏற்றத்தைப்போல இருமடங்குக்கும் மேலாக சம்பளங்களை ஏற்றுவது அவசியமாக இருந்தது.

இறுதியாக இந் நெருக்கடியான காலத்தில், மாநில, தல அரசாங்கங்கள் பெரும்பாலும் கல்வித் தரங்களைக் குறையாது பாதுகாத்து, அன்றி உயர்த்தவும் செய்தன. சில தெளிவான

புறனடைகளைத் தவிர்த்து, ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் உள்ள வீதம் பெரிதும் சீர்கேடு அடையாமல் பாதுகாக்கப்பட்டது மல்லாது ஓரளவு அபிவிருத்தியும் அடைந்திருக்கின்றது. கல்வி 'ஆடம்பரங்கள்' (frills) அகற்றப்படவில்லை. வாழ்க்கைத் தரங்கள் உயருவதற்கு ஏற்பக் கல்வியின் தரமும் உயரவேண்டும் என்று தல சமுதாயங்கள் வற்புறுத்தியதாகத் தோன்றுகின்றது. விலைகளும், கூலிகளும் ஏறிக் கொண்டிருந்த பொழுது, பெருவாரியான மாண வர்களுக்குச் சிறந்த தரமுள்ள கல்வியைப் புகட்டுவதற்கு ஒரு கடுமையான முயற்சி செய்யப்பட்டது. தலா மாணவருக்கு ஆகும் செலவுகளை, அட்டவணை காட்டுவதிலிருந்து இது தெரி கின்றது.

கூட்டாட்சியின் நிதி உதவி எதுவுமின்றி இம் முயற்சி பெரிதும் செய்யப்பட்டிருக்கின்றது. நடப்புச் செலவுகளைப் பொருத்த வரையில் தலா மாணவருக்கு அளிக்கப்படும் அரசாங்க உதவியில் மிகச் சிறு உயர்வுதான் ஏற்பட்டிருக்கிறது. நடப்புச் செலவு களைக் காட்டிலும் பள்ளிகள் கட்டுவதற்கே மாநில அரசாங்கங்கள் கனத்த உதவி அளித்திருக்கின்றன. இவ்வாறு பளுவின் பெரும் பகுதியும் உடைமை வரிமீதே விழுந்திருக்கின்றது. ஆனால், பள்ளி நெருக்கடியால் சமுதாயங்களின்மீது ஒரு பரந்துபட்ட தாக்கு (variable impact) மாறி ஏற்பட்டது என்பதை நினைவில் வைப்பது முக்கியமானதாகும், இது 35ஆம் அட்டவணையில் காட்டப் பெற வில்லை. கல்விப் பளுவின் பெரும் பகுதியையும் | மாநில நிதி முறைகள் ஏற்காததற்கு வேற்றுமைப் படுத்திய தாக்கும் (differential impact) ஒரு காரணமாகும். ஏனெனில், மாநில சட்டசபைகளில் மக்கள் தொகைக் கேந்திரங்களுக்குப் பொது வாகக் குறைவாகவே பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருக்கின்றது. மாநில சட்ட சபைகளில் நாட்டுப்புறச் சமுதாயங்களுக்கு மிகை யாகப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருக்கின்றது; இவற்றுக்குக் கல்விப் பிரச்சினைகள் அத்துணை இல்லாததால் எந்தச் சமுதாயங் களில் கல்விச் செலவுகளின் தாக்கு மிகவும் அதிகமாக இருக் கின்றதோ அவற்றுக்கு உதவி செய்வதற்காக, மாநிலம் பூராவும் பரவலாக வரிகள் விதிப்பதற்குத் தயங்குகின்றன.

தல நிதியில் 'நெருக்கடி' உண்டாவதற்கு பொதுக் கல்வியை விடக் குறைவாகவே பிற அலுவல்கள் துணை செய்திருந்தாலும், அவற்றில் பல குறிப்பிடப்பட வேண்டிய அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். தல அரசாங்கங்களின் நேரிடையான செலவைப் பொருத்த வரையில் நெடுஞ்சாலைகள், தெருக்கள் அமைப்பதும் அவற்றைப் பராமரிப்பதும் மிகச் செலவு பிடிக்கும் இரண்டாவது அலுவலாகும். ஆயினும், தல அரசாங்கங்களின்

மொத்த நேரிடையான செலவுகளைக் காட்டிலும் குறைவாகவே அண்மைய ஆண்டுகளில், தல நெடுஞ்சாலைக்கு ஆகும் நேரிடையான செலவுகள் அதிகரித்திருக்கின்றன. தல சாலைகளை மாநிலங்கள் எடுத்துக் கொள்ளும் போக்கு இதற்கு ஓரளவு காரணமாகும். மாநில நெடுஞ்சாலை முறைகளில் அதிகமான அளவு ஒரே தன்மையை ஏற்படுத்துவதற்கும், சாலைகளை அமைப்பதற்கும் அவற்றை பராமரிப்பதற்கும், மாநில அரசாங்கங்களுக்கு இருக்கும் வசதிகளை மிகத் திறமையாகப் பயன்படுத்துவதற்கும், தல சாலைகளை மாநிலங்கள் எடுத்துக் கொண்டன. தல அரசாங்கங்களின் மீது திணிக்கப்பட்ட சாலைச் செலவுகளில் சுமாரான ஏற்றத்திற்கு வேறொரு காரணமும் துணை செய்தது. தலச்சாலை நோக்கங்களுக் காக மாநிலங்கள் அளிக்கும் மானியங்கள் சதா உயர்ந்து கொண்டே வந்திருக்கின்றன. 1957-ல் தல அரசாங்கங்கள் நெடுஞ்சாலைகள்மீது நேரிடையாகச் செய்த செலவு 2·9 பில்லியன் டாலராகும். இதில் 1·2 பில்லியன் டாலர்கள் மாநில மானியங் களின் வாயிலாகக் கிடைத்தன.[3]

தலங்களின் பிற முக்கியச் செலவினங்கள் வருமாறு: பொது நன்மை, சுகாதாரம், ஆஸ்பத்திரிகள், துப்புரவு, 1950ஆம் ஆண் டுக்கு முன்பு, பொது நன்மைச் செலவுகளில் பெரும் ஏற்றம் ஏற்பட்டதாயினும், அண்மைக் காலத்திலும் இச் செலவுகளில் மிதமான ஏற்றம் நீடித்தே வந்திருக்கின்றது. ஆயினும், இவ் விடத்தும் மேல் அரசாங்கங்களிடமிருந்து மானியங்கள் வாயிலாக இச் செலவின் பெரும் பகுதியும் தரப்படுகின்றது. 1950ஆம் ஆண்டுக்கு முந்தியும் சரி பிந்தியும் சரி, தல சுகாதார ஆஸ்பத் பத்திரிச் செலவுகள் விரைவாக ஏறியிருக்கின்றன. ஆனால், உதவி மானியங்கள், ஒப்புமையில் சிறிது குறைந்த அளவாகவே இருந்து வந்திருக்கின்றன. ஆகவே, தல அரசாங்க நிதிப் பொறுப்புகள் ஏறுவதற்கு இவ் வகைச் செலவே பெரிதும் காரணமாக இருந்தது. இதே போன்று துப்புரவு வசதிகளும் அண்மைக் காலத்தில் ஒரு முக்கியமான செலவினமாக இருக்கின்றது. இதற்குக் காரணம் மக்கள் தொகை வளர்ச்சியும் மக்கள் தொகைப் புரட்டும் ஆகும். இப் பகுதியிலும் மாநில அரசாங்கங்களின் மானியங்கள் ஒப்புமையில் இன்னும் குறைவாகவே இருக்கின்றன. ஆகையால், மொத்தத்தில், தலநிதியில் 'நெருக்கடி' ஏற்படுவதற்குக் கல்விக் கோரிக்கைகளே தலை யாய காரணங்களாகும். ஆனால், தனிப்பட்ட முறையில் ஒப்புமையில் குறைவாக இருந்தாலும் மொத்தத்தில் கணிசமான அளவு, பிற அலுவல்களும் நிதிப் பிரச்சினையைத் தீவிரமாக்கி இருக்கின்றன. இவ் வலுவல்களில், பழைய பெரிய மாநகரங்களைப் பொறுத்த வரையில் பெருத்த மின் அபிவிருத்திச் செலவுகளின் சாத்தியக்

கூறும் ஒன்றாகும். இச்செலவுகள் இது காறும் மொத்தத்தில் குறைவாகவே இருந்தன. விரைவில் இது பெரிய விஸ்தரிப்புக்கு உள்ளாகும் என்ற நம்பிக்கை இருக்கின்றது.

வருவாய்களைப் பெருக்குதல் : தல வருவாயைப் பொறுத்த வரையில் ஒரு கணிசமான பெருக்கம் குறிப்பாக இரண்டாவது உலகப் போரிலிருந்து ஏற்பட்டிருக்கின்றது. இப் பெருக்கத்திற்கு இரு பொது வரவினங்கள் காரணமாகும். அவைகளாவன : உதவி மானியங்களும், குறிப்பாக மாநில அரசாங்கங்களிலிருந்து கிடைக்கும் உதவி மானியங்களும், தல வரிகளும். 1922ஆம் ஆண்டிலிருந்து ஆண்டுதோறும் வரவுகளில் ஏற்பட்ட பெருக்கத்தையும், இக் காலக் கூறு பூராவும் ஒப்புமையில் வருவாயினங்களில் ஏற்பட்ட மாறுதல்களின் முக்கியத்துவத்தையும் 36ஆம் அட்டவணை காட்டுகின்றது:

## அட்டவணை 36

தல அரசாங்கங்களின் முக்கிய உள்ளுறுப்புகள்-தெரிந்தெடுக்கப்பட்ட ஆண்டுகள், 1922—1957*

| | 1922 | 1932 | 1942 | 1952 | 1957 |
|---|---|---|---|---|---|
| மொத்த வரவுகள் a (மில்லியன் டாலரில்) | 3,866 | 5,690 | 7,122 | 16,952 | 25,638 |
| உதவி மானியங்கள் (மொத்தத்தில்%) | 8 | 14 | 26 | 31 | 29 |
| வரிகள் (மொத்தில் %) | 80 | 75 | 65 | 56 | 57 |
| கட்டணங்களும் பிறவும் (மொத்தத்தில் (%) | 12 | 11 | 9 | 13 | 14 |
| நினைவுக் குறிப்பு : | | | | | |
| மொத்த வரிகளில் உடைமை வரிகளின் % | 97 | 97 | 92 | 87 | 87 |

* Sources : Bureau of the Census, *Historical Statistics on State and Local Government Finances*, 1902—1953, p. 21, and *Summary of Governmental Finances* in 1957, p. 22.

*a* பயன்பாடு, வெறிநீர்க் கடைகள் (utility and liquor stores) இவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயும், ஈட்டுறுதி டிரஸ்டு வருவாயும் நீங்கலாக.

1952ஆம் ஆண்டிலிருந்து மொத்த வருவாய்கள் மும்மடங்குக்கு மேல் அதிகரித்திருப்பது தெளிவாகத் தெரிகிறது. இப் பெருக்கத்தில் பாதி 1952ஆம் ஆண்டுக்குப் பின்னர் ஏற்பட்டிருக்கின்றது. 1942ஆம் ஆண்டிலிருந்து ஒப்புமையில் மாநில (கூட்டாட்சி) மானியங்களில் மாறுதல் ஏற்படவில்லை. ஆனால், மானியங்களின் மொத்தத் தொகைகள் இயல்பாகவே கணிசமான அளவு பெருகியிருக்கின்றன. 1942-க்கும் 1957-க்கும் இடையில் ஒப்புமையில் கட்டணங்களும், பலவகை வருவாய்களும் பெருத்த அளவு பெருகி இருக்கின்றன. ஆனால், மொத்தத்தில் அவை மானியங்களில் அரைவாசிக்கும் குறைவான முக்கியத்துவத்தை உடையதாகவே இருக்கின்றன. பிற இரண்டு வகைகளும் ஏறியதும், மொத்தத்தில் வரிகளின் வீதாசாரம் குறைந்திருக்கிறது. ஆயினும் 1922ஆம் ஆண்டைப் போல வரிவருவாய்களின் மொத்தத் தொகை 1957-ல் ஏறக்குறைய 5 மடங்காகும்; 1942ஆம் ஆண்டு வரி வருவாயைக் காட்டிலும் 3 மடங்கு பெரிதாகும். அட்டவணையின் நினைவுக் குறிப்பு வரியில் (memorandum line) காட்டியவாறு, மொத்தவரி வருமானங்களில் மிகப் பெரிய வீதாசாரத்தை உடைமை வரிகளே தொடர்ந்து நல்கி வந்திருக்கின்றன.

தல வருவாய் முறைகளின் முக்கியப் பண்பு மிகக் கூடுதலான அளவு அவை இறுக்கமாக இருப்பதேயாகும். விற்பனை வரி, தனியாள் வருமான வரிகள் இவற்றைத் தல அரசாங்கங்கள் பயன்படுத்துவதற்கு உதாரணங்கள் இருக்கின்றன. இவ் வரிகளின் இயல்பினால் இவற்றைத் தனிப்பட்ட சில பெரிய மாநகரங்களே பயன்படுத்துகின்றன.[1] இவ்வாறாக வரி முறைகளின் தெரிவைத் தல விருப்பத்திற்கே தாராளமாக விட்டுவிட்டாலும், புது வகை வரிகளை உபயோகிப்பது சில தல அரசாங்கங்களுக்கே செயல் முறையில் சாத்தியம் என்று காண முடியும். ஆனால், விரும்பிய ஒரு வரி அமைப்பைத் தெரிந்தெடுக்கும்படியான சுயேச்சையைத் தல அரசாங்கங்களுக்கு மாநில அரசாங்கங்கள் பெரும்பாலும் அளிப்பதில்லை. மாநிலங்களே நிதி நெருக்கடியில் அகப்பட்டுக் கொண்டிருப்பதும், தங்கள் உபயோகத்துக்கு என்று வருவாய் முறைகளைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்று அவை விரும்புவதும், இதற்கு ஓர் காரணமாகும். மேலும் தங்கள் உடைமை வரியைத் தல உபயோகத்திற்கு என்று விட்டுக் கொடுத்தால் தல அரசாங்கத்திற்கு நல்ல வருவாயை அளிக்கும் ஒரு தனிப்பட்ட வரி முறையை அளித்துவிட்டதாகவும், இதனால் மேலும் நிதிக்காக வகை செய்வது அவசியமற்றது என்றும், மாநில அரசாங்கங்கள் பொதுவாக உணர்கின்றன. ஆகையினால், வரி வருவாய்களைப் பெருக்கிக் கொள்வதற்கு உடைமை வரி ஒன்றே பல தலஅரசாங்கங்களின் கைக்குக் கிடைத்திருக்கும் கருவியாகும்.

அண்மையில் கட்டணங்களும், பலவகை வருவாய்களும் பெருமளவுக்குப் பெருகியுள்ளன. ஆயினும் பொது நோக்கங்களுக்கு மேற்கொண்டும் இவை வருவாயை ஈட்டித்தரும் இனங்களாக இருக்கும் என்ற நம்பிக்கை இல்லை. இவ் வகையில் பண்டங்கள், சேவைகள் விற்பனையும், முதலீட்டுகளின் மீது வட்டியும், பிரத்தியேகத் தீர்வைகளும் அடங்கும். இவற்றில் இறுதியில் சொல்லப்பட்ட பிரத்தியேகத் தீர்வைகளே இப் பொது வகையிலிருந்து வருவாய்களின் உயர்வுக்கு முக்கியமான காரணமாகும். பிரத்தியேகத் தீர்வையிலிருந்து கிடைக்கும் வரவுகள், இன்றியமையாது உடைமைக்கு ஆதாயத்தைத் தரும் அபிவிருத்திகளின் செலவுக்கே ஒதுக்கப்படுகின்றன. அண்மைக் காலத்தில் நகர்ப்புறமாக்குதலுக்கு ஏற்பட்ட உற்சாகத்தினுல், கழிவுநீர், நீர்வசதிகளை விஸ்தரிப்பதற்கு மிகுதியான செலவுகளை மேற்கொள்ளுவது இன்றியமையாததாயிற்று. இந்த அபிவிருத்தியினுல்தான் கட்டணங்களும், பல்வகை வரவுகளும் ஏறின. ஆனுல் தல அரசாங்கங்களின் பொது நிதிகளைப் பெருக்குவதற்குப் பிரத்தியேகத் தீர்வை பயன்படாது. கல்வி, சுகாதாரம், நல வசதி, போலீஸ் இவை போன்றனவற்றின் செலவுகள் ஏறுவதைச் சமாளிப்பதற்குப் பொதுநிதிகளைப் பெருக்கியே ஆகவேண்டும்.

உடைமை வரியை உயர்த்துவதன் மூலமாகவோ அல்லது மாநிலங்கள் தல அரசாங்கங்களுக்கு அளிக்கும் மானியங்களை உயர்த்துவதன் மூலமாகவோ, தலஅரசாங்கங்கள் செயல் முறையில் விரைவாக ஏறும் தங்கள் பொதுப்பணிகளின் செலவுகளைச் சரிக்கட்டமுடியும் என்று எதிர்பார்க்கலாம். 1922-க்கும் 1942-க்கும் இடையில் தல வரவுகளின் வீதமாக மாநில அரசாங்கங்கள் தல அரசாங்கங்களுக்கு அளித்த மானியங்கள், 36ஆம் அட்டவணையில் காட்டியவாறு விரைவாக ஏறின. 1942-லிருந்து இவ் வீதாசாரம் பெரும்பாலும் அதே நிலையில் இருந்து வந்திருக்கின்றது. விஸ்தரிப்பின் முந்திய காலக்கூறு வியாபார மந்த ஆண்டுகளுடனும், சிறப்பாகப் பொதுநல வசதியுடனும் தொடர்புபடுத்தப் பெறுகிறது. இரண்டாம் உலகப் போரிலிருந்து மாநில மானியங்களின் மொத்தத் தொகை விரிவடைந்ததற்குக் கல்வியே பெரிதும் காரணமாகும். ஆனுல் மாநிலங்களிடையே, தல அரசாங்கங்களுக்குக் கல்விக்காக அளிக்கப்படும் மாநில உதவித் தொகைகள், பெரிதும் வேறுபடுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பொறுத்தவரை (ஹவாய் நீங்கலாக), 1957-1958ஆம் ஆண்டைய மதிப்பீடுகள், கல்விக்காகத் தல அரசாங்கங்கள் பெற்ற வரவுகளில் 40 சதவிகிதம் (கடன் வாங்கியது நீங்கலாக) மாநிலங்களால் அளிக்கப்

பட்டன என்று தெரிவிக்கின்றன. ஆனால், கல்வி வருவாயில் 20 சதவிகிதத்திற்கும் குறைவாகவே ஆறு மாநிலங்களும், 60 சதவிகிதத்திற்கும் கூடுதலாக எட்டு மாநிலங்களும் தல அரசாங்கங்களுக்கு மானியங்கள் அளித்தன.[4] இவ் வேறுபாடுகள் தல உடைமை வரிகளில் பிரதிபலிக்கின்றன. தல உடைமை வரிகள், உடைமைகளின்மீது வேற்றுமையுடைய பளுக்களைச் சுமத்துகின்றன.

தல அரசாங்கங்களின் நிதி நெருக்கடியின் மிக முக்கியமான பண்பு, அதன் தாக்கில் ஒரே தன்மை இன்மையே என்பதை மீண்டும் வலியுறுத்துவது நன்மை பயக்கும். குறிப்பிட்ட தல அரசாங்கங்களின் மீதான கோரிக்கைகள் எந்த வீதத்தில் அதிகரித்திருக்கின்றன என்பதைப் பொறுத்தே ஓரளவு இது இருக்கும். எந்தத் தலங்களில் பிற இடங்களிலிருந்து வந்த பெயர்ச்சியினால் மக்கள் தொகை மிக விரைவாக ஏறி இருக்கின்றதோ, அங்கு மிக நெரிக்கும் பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கின்றது. நகர்ப்புறமாவதுடன் உடனிலையாகச் சேவைகளை விஸ்தரிக்கவேண்டும் என்று மட்டுமின்றி, அவற்றின் தரத்திலும் கணிசமான அளவு அபிவிருத்தி ஏற்படவேண்டும் என்ற கோரிக்கைகள் இத் தலங்கள் பலவற்றிலும் தோன்றி உள்ளன. உடைமை வரிக்கு மாற்றாக வேறு வருவாய் முறைகளைப் பயன்படுத்துவது சாத்தியமற்ற தலங்களிலும், மாநிலச் சட்டங்களின் கீழ் வேறு வாய் முறைகளைப் பயன்படுத்துவதைத் தடை செய்யப்பட்ட தலங்களிலும், பலவற்றில் இப் பெருகிய கோரிக்கைகள் ஏற்பட்டுள்ளன. இத் தலங்களில் கடன்வாங்குவதும் விரைவாக உச்சவரம்பை நோக்கி ஏறியுள்ளது; அல்லது கடன் வரம்பாக நிறுவப்பட்ட உச்சவரம்பைத் தொடும் அளவிற்கும் ஏறியுள்ளது. உடைமையை மேல்நோக்கி மீண்டும் மதிப்பீடு செய்து தீர்வைகள் விதித்ததாலும், உடைமை வரிவீதத்தை உயர்த்தியதாலும் கடுமையான அநீதிகள் முகிழ்த்துள்ளன.

மேலே வருணிக்கப்பட்ட வேற்றுமைப்படுத்திய தாக்குக்கு எடுத்துக்காட்டுகளாக, நாம் 1950க்கும் 1957க்கும்[5] இடையில் கனக்டிக்கட் மாநிலத்தில் சில தெரிந்தெடுக்கப்பட்ட நகரங்களின் சராசரி வீடுகளின் மீதான உடைமை வரிகளின் நடத்தையை ஆராய்வோம். A நகரம் ஒரு பெரிய பழைய தொழில் மயமான பெரிய நகரம். இந் நகரத்தில் 1950க்கும் 1957க்கும் இடையே சராசரி—வீட்டின்மீதான வரி 19 சதவிகிதம் ஏறியது. தல அரசாங்கங்கள் வாங்கிய பண்டங்கள், பணிகள் இவற்றின் விலைகளின் உயர்வை நோக்கும்பொழுது இவ் வேற்றம் உண்மையில் மிதமானதே. ஆனால், மக்கள் தொகை ஏறாது ஒப்புமையில் ஒரே நிலையில் இருந்தது. நெடுங்காலம்வரை மாநகரப் பணிகளும்

ஓரளவு திருப்திகரமான முறையிலேயே இருந்தன. B நகரம் புதிதாகத் தொழில்மயமான பெரிய நகரம். ஆனால், அளவில் அது A நகரத்தைவிடச் சிறியது. விரைவாக மக்கள் தொகை பெருகி இருந்தும், தலப்பணிகளின் மட்டமும் உயர்ந்திருந்தும், சராசரி வீட்டின்மீது வரி 37 சதவிகிதமே உயர்ந்தது. ஆனால், வரிதாங்கும் சொத்தின் பெரிய பட்டியல் தொழிலால் பெருக்கம் அடைந்து உள்ளது. தொழில்கள் (industries) பெரும் நிதிகளை அளித்ததால் (இவ் வரிகளின் நிலைப்பாடு பெரும்பாலும் நகருக்கு வெளியில் குடியிருந்தவர்கள் மீதே விழுந்தது.) சராசரி வீட்டின்மீதான தல வரிகள் நியாயமான வரம்புக்குள் தலவரிகளைத் தேக்கி வைத்தன. C நகரம் நாட்டுப்புறத்தில் இருப்பது; சிறியது; பெரும்பாலும் குடிமக்களே (தொழில்களின்றி) வாழும் நகரம். படிப்படியாக அதன் மக்கள் தொகை பெருகி வந்திருக்கிறது. வரிப் பட்டியல்களில் தொழில்களைச் சேர்ப்பதன் வாயிலாக நகரத்தின் வரிகள் குறைக்கப்படவில்லை. 1950க்கும் 1957க்கும் இடையே C நகரத்தில் சராசரி வீட்டு வரிகள் 49 சதவிகிதம் ஏறி இருக்கின்றன. D நகரம் விரைவாக வளர்ந்து கொண்டுவரும் ஒரு நாட்டுப்புற நகரமாகும். இந் நகரத்தில் யாதொரு தொழிலும் இல்லை. பல பெருத்த மாநில நிறுவனங்கள் உள்ளன. ஆனால், இச் சொத்துகளுக்கு வரியினின்று விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. நாம் பரிசீலனை செய்யும் காலக் கூற்றில் சராசரிக் குடியிருப்பின் மீதான வரி 144 சதவீதம் உயர்ந்தது. E நகரம் ஒரு புதிய நகர்ப்புறத்துப் 'படுக்கை அறைப் பட்டணம்' (bedroom town) ஆகும். இங்குச் சராசரி குடியிருப்பின் மீதான வரி 111 சதவிகிதம் உயர்ந்தது.[6]

எந்த வீதத்தில் வரிகள் அதிகரித்திருக்கின்றனவோ, அவை வரிப் பளுவின் முழு வரலாற்றையும் கூறவில்லை. ஆனால், இது அதன் முக்கியமான ஒரு கூறாகும். A நகரத்தைக் காட்டிலும் B நகரத்தில் வரி உயர்வின் சதவிகிதம் கிட்டத்தட்ட எட்டு மடங்கு அதிகம் என்று நிரூபித்ததாக ஆகாது. ஆயினும், இவ் விரைவான ஏற்றத்தில் இரண்டு முக்கியமான உட்கிடக்கைகள் பொதிந்திருக்கின்றன. முதலாவதாக மூலதன ஆக்கத்தின் வாயிலாகவோ, அல்லது வேறு காரணியின் வாயிலாகவோ வரியைப் புரட்டுகை திறப்பாட்டுடன் நிகழ முடியாது. இவ்விதம் புரட்டுகை வரி மட்டங்களில் விரைவாக மாறுதல் ஏற்படும் ஒரு காலக் கூற்றில் திறப்பாட்டுடன் நிகழமுடியாது. ஒப்புமையில் நிலைபேறாக உள்ள ஒருகாலக் கூற்றில்தான் இங்ஙனம் புரட்டுகை நிகழமுடியும். இவ்வாறாக உடைமையின் தற்போதைய சொந்தக்காரர்மீது விரைவாக உயரும் வரிகளின் பெரும் பகுதியின் நிலைப்பாடும் உறுத்துகிறது. இரண்டாவதாக எந்த நகரத்தில் தலா குடியிருப்புக்கு

வரிகள் விரைவாக ஏறிக்கொண்டு இருக்கின்றனவோ அந் நகரத்தில் ஒருகால் பல உடைமைக்காரர்கள் உடைமையின் மார்க்கட்டு மதிப்பின் ஏற்றங்களில் திறப்பாடாகக் கலந்துகொள்ள முடியாது இருக்கலாம். ஒரு பொருளாதார வீக்க நகரத்தில் உள்ள குடியானவரும், பழைமை குடியிருப்போரும், தாங்கள் விரும்பியோ அல்லது விரும்பாமலோ ஏற்படும் மார்க்கட்டு மதிப்புகளின் ஏற்றத்திற்கும் (மதிப்பீடு ஏற்றத்திற்கும்) அவர்களுக்கு அவ் வுடைமையிலிருந்து கிடைக்கும் நடப்பு வருமானத்திற்கும், யாதொரு தொடர்புமில்லை என்பதைக் காண்பார்கள். ஏட்டளவில் உடைமையின் மதிப்பைப் பொறுத்தவரையில் வரி கடுமையாக இல்லாது போனாலும், வரி செலுத்துவோரின் வருமானத்தைப் பொறுத்த அளவில் வரி மிகவும் கடுமையாக இருக்கலாம். இவ் விஷயத்தை ஏற்கனவே பதினைந்தாம் அதிகாரத்தில் உடைமை வரிவிதிப்புப் பற்றிய சர்ச்சையில் நாம் கூறியிருக்கிறோம். இது மிகப் பெரிய ஓர் அநீதிக்கு இருப்பிடமாக இருக்கின்றது. எங்கு வரிகள் விரைவாக ஏறுகின்றனவோ அங்குதான் அதன் தாக்கும் மிகவும் அதிகமாக இருக்கும்.

உடைமையின் மார்க்கட்டு மதிப்பில் 50 சதவிகிதம் தீர்வை மதிப்பீடு செய்யப்பெற்ற உடைமையில் நாற்பது மில்கள் (4 சதவிகிதம்) வீதம் ஓர் உடைமைவரி விதிப்பதை உயர்ந்த வருமானமுள்ள ஒருவன் நியாயமானதாகக் கருதலாம். உடைமை மதிப்புக்களில் வீக்கம் ஏற்பட்டதற்கு ஏற்பத் தங்களது வருமானங்கள் உயராதவர்களுக்கு, இவ் வரி மிகக் கனத்த பளுவாக இருக்கும். பொதுவாகப் புதிதாகக் குடியிருப்பவர்கள் இவ் வரியை நியாயமானது என்று கூறுவார்கள். பொதுவாகப் பழமையாக குடியிருப்பவர்கள் இதை நியாயமானது என்று கூறாமல் இருக்கலாம். ஆகவே, இவ் வகை அநீதியை முகாந்திரங்களாகக் கொண்டே உடைமை வரியைக் குறைத்து நிவாரணம் அளிக்கும் மனப்பான்மை வலுவடைந்து வருகிறது. இங்ஙனம் நிவாரணம் அளிக்க வேண்டுமென்றால் மாநிலங்கள் கூடுதலான மானியங்களைத் தர வேண்டும். தல உடைமை வரியில் உயர்ந்த அளவு அநீதி காணப்படுகிறது. பரவலாகத் தனத்தையுடைய மாநில வரிகளின் உடைமை வரிகளில் இத்துணை அநீதி இருக்காது. அதே சமயம் மாநிலங்கள் மானியங்களைப் பங்கீடு செய்வதற்கான மரபு வாய்பாடுகள், தங்களின்மீது நெருக்கடியாய் விளையும் வேற்றுமைப் பாட்டுத் தாக்கைத் திறப்பாடாகச் சமாளிக்கவில்லை என்பதையும் நாம் கவனத்தில் இருத்தவேண்டும். இவ் வாய்பாடுகளைத் திருத்த வேண்டும். இத் திருத்தத்தினால் விரைவாய் வளரும் தலத்திற்கு வீதாச்சாரத்தைக் காட்டிலும் அதிகமாகவே உதவித்தொகை

அளிப்பதற்கு வழி கிடைக்கும். வளரும் தளத்தின்மீதே மாறுதலின் தாக்கும் கூடுதலாக இருக்கிறது.

**மாநில அரசாங்கங்களின் நிதிப் பிரச்சினைகள்**

தல அரசாங்க நிதி நெருக்கடியைப் பொறுத்து நாம் கூறியவற்றில் பெரும்பகுதியும் மாநில அரசாங்கங்களுக்கும் செல்லுபடியாகும். ஒரு பணவீக்கக் காலத்தில் நன்ருக நிறுவப்பட்ட அலுவல்களுக்கும், விரிவடைந்து கொண்டுவரும் மாநில அலுவல்களுக்கும் வேண்டிய வருவாய்களைத் திரட்டுவதே ஒரு பிரச்சினையாகும். ஆயினும், தல மட்டத்தைக் காட்டிலும் மாநில மட்டத்தில் ஆளுங் கணத்தின் (உத்தியோக வருக்கம்) பிரச்சினை ஓரளவு நெருக்கடி மிக்கதாக இருப்பதாகப் பொதுவாக ஒருவர் எண்ணலாம். இலாகா நடவடிக்கைகள் பெருத்த அளவிலும் மிகவும் மனத்தில் பதியத் தக்கனவாகவும் இருக்கலாம். ஆனுல், இந் நடவடிக்கைகள் தனியாள் உறவுகளைப் பொறுத்த வரையில் சற்று குறைந்த நெருக்கம் (less personal) உள்ளதாக இருக்கின்றன. ஆட்சி நடவடிக்கைகளும், ஆராய்ச்சி நடவடிக்கைகளும் பெருத்த அளவு கலந்துவிடுகின்றன. நிருவாகம், சட்டசபை இவை இரண்டின் மொத்தக் கண்காணிப்பும் கொஞ்சம் விலகியே இருக்கும். இதன் விளைவு, கூடுதலான அளவு திறமையின்மையாக இருக்கும் என்று வலியுறுத்துவது சரியாகாது. அவசியமாக இருக்கவேண்டிய அளவுக்கும் அதிகமாகவே, இத் திறமையின்மையின் அளவு இருக்கும் என்று நாம் கருதுகின்ருேம்.

மூன்ரும் அதிகாரத்தில் கூறியாங்கு, மாநிலங்களிடையே காணப்படும் குறிப்பிட்ட வருவாய்களைக் குறிப்பிட்ட நிதிகளுக்கு ஒதுக்கி, குறிப்பிட்ட அலுவலல்களை ஆற்றும்படிச் செய்வதனுல், செலவுகளின்மீதான வரவு செலவுத் திட்டக் கட்டுப்பாடு தளர்வுறும். ஏனெனில், ஓர் அலுவலுக்காகப் பெருகும் வருவாய்களை நிவந்தமாக அளித்து, இவற்றைப் பிற நோக்கங்களுக்குத் 'திருப்பக்கூடாது' என்று இருந்தால், இவ்வாறு ஒதுக்கப்பட்ட நிதிகளின் அளவுக்கு ஏற்ருற்போல செலவுகளை உயர்த்துவதே பட்ஜட்டின் வேலையாக இருக்கும். இது இம் முறை சரியென ஒப்புக்கொண்டு அதன்மீது ரப்பர் முத்திரை குத்துவதைப்போன்றதாகும். தற்செயலாக மாநில அரசாங்க நடவடிக்கையைக் கூர்ந்து நோக்கும் ஒருவன்கூட, பல்வேறுபட்ட துறைகளுக்கும் அளிக்கப்பெறும் வசதிகளில் ஒரே தன்மை யின்மையைக் கண்டு பிரமிப்பு அடைகின்ருன். செயலாளர்களுக்கும் நிருவாகிகளுக்கும் உள்ள வீதாசாரத்தையும், தொலை பேசிகளுக்கும் வேலைக்கு அமர்வோருக்கும் உள்ள வீதாச்சாரத்தையும், அலுவலகத் தளவாடங்களின் தரத்துக்கும் அளவுக்கும் உள்ள வீதாச்சாரத்

தையும் கூர்ந்து நோக்குவதன்மூலம் ஒருவர் ஒரு மாநிலத்தின் சிறப்பு நிதிகளை ஏறக்குறையக் கண்டுபிடித்து விடலாம். தற்பொழுது ஒப்புமையில் உயர்ந்த வாழ்க்கைத்தரம் நிலவும் சில துறைகளுக்கு ஆகும் செலவுகளை ஒரே படித்தான தன்மையாகப் பரவலாக்கினுல், இந் நிதிகளை மிகவும் திறப்பாடாக உபயோகப் படுத்துவது இதன் விளைவாக அமையும்.

**மாநில அரசாங்கங்களின் செலவு பிடிக்கும் அலுவல்கள் (Expensive Functions of State Goverments):** மாநில வாணிபத் தொழிற் றுணிவுகள் (state business enterprises) ஈட்டுறுதி டிரஸ்டு நிதிகள் இவை நீங்கலாக 1958-ல் மாநில அரசாங்கங்களின் பொதுச் செலவு களில் நான்கு அலுவல்களே தலையான இடம் பெற்றிருந்தன. இவை யாவற்றையும் சேர்த்துப் பார்த்தால், இந் நால்வகை நோக்கங் களுக்காக ஆன செலவுகள் மொத்தமான பொதுச் செலவுகளில் 81 சதவிகிதமாகும். அவை முறையே கல்வி (31 சதவிகிதம்), நெடுஞ் சாலைகள் (28 சதவிகிதம்), பொது நல வசதி (13 சதவிகிதம்), சுகா தாரம், மருத்துவ நிலையங்கள் (9 சதவிகிதம்) ஆகும்.[7] இந் நால் வகை அலுவல்களுக்கும் சேர்ந்து சுமார் 19.1 பில்லியன் டாலர் செலவாயிற்று. இத் தொகையில், கிட்டத்தட்ட 37 சதவிகிதம் இங்கே குறிப்பிட்ட அலுவல்கள் ஆற்றுவதற்குத் தல அரசாங்கங் களுக்கு அளிக்கப்பட்ட மானியங்களைக் குறிப்பிடுவனவாகும்.[8] கல்வி யைப் பொறுத்த வரையில், மாநிலச் செலவுகளில் பெரும் பகுதியும் (61 சதவிகிதம்) துவக்க, உயர்நிலைப் பள்ளிகளை நடத்துவதற்காகத் தல அரசாங்கங்களுக்கு நேரிடையாகப் போய்ச் சேருகின்றது. எஞ்சிய பகுதி, மாநில உயர்தரக் கல்வி நிலையங்களுக்கும், ஒரு சிறு தொகை நூல்நிலையங்களுக்கும் கிடைக்கின்றது. ஆகையினுல், பெருமளவுக்குத் தற்காலப் பள்ளி முறைகளினுல் தல அரசாங்கங் களுக்கு ஏற்படும் நிதிப்பளுக்களைக் குறைப்பதற்கே கல்விக்காக மாநில அரசாங்கங்கள் செலவு செய்கின்றன என்பது தெளிவு.

நெடுஞ்சாலைகளைப் பொறுத்தவரையில் நிலைமை வேறு. 1958-ல் மாநில அரசாங்கங்களின் நெடுஞ்சாலைச் செலவுகளில் 17 சதவிகிதமே தல அரசாங்கங்களுக்கு அளிக்கப்பட்ட நேரிடை யான மானியங்களாகும். இதில், பெரும்பகுதி மாநில நெடுஞ் சாலைகளை நிர்மாணிப்பதற்கும், பராமரிப்பதற்கும் செலவாகியது. முக்கிய நகரங்களுக்கு இடையே உள்ள சாலைகளும், மாநிலங் களுக்கு இடையே உள்ள சாலைகளும் இதில் அடங்கும். இரண்டாம் உலகப் போரிலிருந்து நெடுஞ்சாலை முறைக்குக் கணிசமான அளவு சேர்மானங்கள் (additions) செய்ய வேண்டிய நிலைமைகளைப்பற்றி முன்னமேயே குறிப்பிட்டோம். நெடுஞ்சாலைகளை நிர்மாணிக்கும் செலவு பெரும் அளவு பெருக்கம் ஏற்பட்டதையும் நாம் குறிப்

பிட்டோம். வரிகளின் வீதங்களையும், பிற வருவாய்க் கருவிகளையும் உயர்த்தி, மாநிலங்கள் நிலைமையைச் சமாளிக்க முயன்றன. இவ்வரி வீதங்களும் வருவாய்க் கருவிகளும் பிரத்தியேக நெடுஞ்சாலை நிதிகளுக்குப் பயன்படுவதுதான் மரபு. எடுத்துக் காட்டாக, 1946-க்கும் 1952-க்கும் இடையே 31 மாநிலங்கள் தம் பெட்ரோல் வரிகளைக் காலனுக்குக் குறைந்த பட்சம் ஒரு சதமாவது உயர்த்தின. 1952க்கும் 1959-க்கும் இடையில் இருபத்தைந்து மாநிலங்கள் இங்ஙனம் செய்தன.[9] 1946-ல் மாநிலங்கள் அனைத்திற்கும் சராசரி பெட்ரோல் வரிவீதம் காலனுக்கு 5·3 சதங்களாகவும், 1959-ல் 6·1 சதங்களாகவும் இருந்தன. இரண்டாவது உலகப்போருக்குப் பின்பு, நடப்பு நெடுஞ்சாலை நிதிகளிலிருந்து நிர்மாணிக்கப்பட்ட சாலைகளில், கணிசமான அளவு பெருக்கம் ஏற்பட்டதற்கு உயர்த்தப்பட்ட வரி வீதங்களும், மோட்டார் எரிபொருளின் நுகர்வில் ஏற்றமும் பெரிதும் பொறுப்பாகும். 1950-ல் நெடுஞ்சாலை நிர்மாணம், பராமரிப்பு, ஆட்சி இவற்றுக்காக நடப்பு மாநில வருவாய்களிலிருந்து செலவு செய்த தொகை 1·7 பில்லியன் டாலராகும். 1957-ல் இத் தொகை 3·2 பில்லியன் டாலராக உயர்ந்தது.[10] மேலும் கூட்டாட்சி, மாநிலங்களுக்கு 1950-ல் 0·4 பில்லியன் டாலரையும், 1957-ல் 1·2 பில்லியன் டாலரையும் முறையே மானியங்களாக அளித்தது. நெடுஞ்சாலைத் தேவைகளைச் சமாளிப்பதற்கு நடப்பு நிதிகளிலிருந்து செலவு செய்யும் தொகைகளில் ஏற்பட்ட பெருக்கம்கூட மிகவும் குறைவாகவே இருந்தது. நெடுஞ்சாலைகளை நிர்மாணிப்பதற்காக மாநிலங்கள் நெடுங்காலக் கடன் வாங்கியிருந்தன. இக் கடனில் 1950-ல் 1.4 பில்லியன் டாலரும், 1958-ல் 8·0 பில்லியன் டாலரும் நிலுவைப் பாக்கி இருந்தது.[11]

ஆயினும், மாநில நிதியில் நெடுஞ்சாலைத் தேவைகளால் ஒரு கடுமையான நெருக்கடி ஏற்பட்டது என்று கூறுவது பெரும்பாலும் பொருத்தமாக இராது. அண்மைக் காலம்வரை நெடுஞ்சாலை நோக்கங்களுக்காக சில குறிப்பிட்ட இலாபகரமான வருவாய்களை ஒதுக்குவதன் மூலம், நெடுஞ்சாலைத் தேவைகளுக்குப் போதிய வருவாய்கள் நியாயமான முறையில் கிடைத்தன. நெடுஞ்சாலைத் தேவைகள் அதிகரித்தபொழுது, இவ் வொதுக்கப்பட்ட நெடுஞ்சாலை வருவாய்க் கருவிகளின் வீதங்கள் உயர்த்தப்பட்டன. இதன் மூலம் நெடுஞ்சாலை வருவாய்களைப் பெருக்குவதற்கான போக்கு காணப்படுகிறது. வளர்ந்து வருகின்ற உயர் நெடுஞ்சாலைகளைப் (super highways) பொறுத்தவரை சுங்கம் தண்டுவது வழக்கமாகி விட்டது. பொதுவாகத் துணிக்குத்தக்க சொக்காய் (to cut the garment to fit the cloth) என்று சொல்லுவதுபோல, நெடுஞ்சாலை

வருவாய்களில் ஒரு நியாயமான அளவு நெகிழ்ச்சி ஏற்பட்டதன் பின்பு, வருவாய்க்கு ஏற்ப செலவுகள் சரிக்கட்டப்பட்டன. இதன் விளைவாக உடனடியாகக் கவனிக்கவேண்டிய தேவைகள் பல நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. ஒப்புமையில் மிகவும் உயர்ந்த சிறப்புத் தரத்துக்கு ஏற்றாற்போல, தேவையின் அவசியம் அளவிடப்படுகின்றது. இப்பொழுது இருக்கும் நெடுஞ் சாலைகள் போதுமா என்று தீர்ப்புச் செய்வதற்கான அடிப்படை அப்படி ஒன்றும் கடுமையாக இல்லை. மிகக் கூடுதல் வேகத்தில் செல்லும்பொழுது பாதுகாப்பு இல்லை என்றாலும், அல்லது குறுக்குப் போக்குவரத்தினாலோ அல்லது போக்குவரத்து நெரிசலி னாலோ ஒருவர் போய்ச் சேரவேண்டிய இடத்தைச் சேர்வதில் தாமதம் ஏற்பட்டாலும், ஒரு நெடுஞ்சாலையைப் போதியதாக இல்லை என்று மகுடம் சூட்டுகின்றோம். பல மாநிலப் பணிகளுக்கு ஒப்புமையில் சொகுசான (excellent) தரங்களும் கடைப்பிடிக்கப் படவில்லை.

மாநிலங்களின் பொது நிதிகளைப் பொறுத்தவரையில் மாநில அரசாங்கங்களின் நிதி நெருக்கடி உண்மையானதாகும். ஒதுக்கப் பட்ட வரவுகள், அவைகளின் குறிப்பிட்ட அலுவல்களுக்குப் பங்கீடு செய்யப்பட்ட பின்பு, எஞ்சியுள்ள மாநில வருவாய்களைக் கொண்டே பொதுப்பணிகளுக்கு நிதி திரட்டப் பெறுகிறது. இந் நிதி பற்றாக்குறையாக இருக்கின்றது. இவ் வதிகாரத்தின் தொடக் கத்தில் குறிப்பிடப்பட்ட மிகச் செலவு பிடிக்கும் மாநில அலுவல் களின் வகைகளில் (1) கல்வி, (2) பொதுநல வசதி, (3) சுகாதாரம், மருத்துவக் கூடங்கள் முதலியன சேரும். இம் மூன்று அலுவல் களுக்கும் சேர்ந்து மாநிலங்களின் பொதுச் செலவுகளில் பாதிக்கு மேல் ஆகின்றது (நெடுஞ்சாலைகளையும் சேர்த்து). பொது அரசாங்க ஆட்சிக்கான செலுத்துகைகளுக்கு மூலமும் பொது நிதிகளே ஆகும். மேலும், போர் வீரர்களுக்கு மாநில போனஸ் கள், பொதுக் கட்டடங்கள், வீடு கட்டுதல் முதலான புதிய அலுவல் களும் பொது நிதிகளின்மீதே விழுகின்றன. இவ் வலுவல்கள் எப்போதாயினும்தான் எழும். முக்கியமாக விற்பனை வரிகள், தனியாள் வருமான வரிகள், தொழில் வரிகள், சிறப்பு ஆயத் தீர்வைகள், சில உரிம வருவாய்கள் இவற்றினின்றே மாநில அரசாங்கங்கள் பொது நிதிகளுக்கு நிதி திரட்டுகின்றன. பொது நிதிகளின் பேரில் பெருத்த அழுத்தம் இருப்பதன் விளைவாகப் புதிய வரி இனங்களையும், கூட்டாட்சி மானியங்களையும் வெறிபிடித்துத் தேடி அலைவதும், இப் பொதுப் பணிகளைப் பொறுத்த வரையில் கடுமையான எளிய கொள்கையைக் கடைப்பிடிப்பதும் சாதாரண மாகிவிட்டது. கூட்டாட்சி, தன்னுடைய 'வரிப் பேராசையை,

(tax greediness) கைவிட்டுவிட்டு, மாநிலங்களுக்கு அதிகம் ஒடுங்கி நிற்கும் வருவாயைத் (potential revenue) தந்தாலொழிய இந் நெருக்கடி தீராது என்று மாநில அதிகாரிகளிடையே ஒரு கருத்து நிலவுகின்றது. மிகச் செல்வம் கொழிக்கும் மாநிலங்களில், கூட்டாட்சி திரும்பவும் இம் மாநிலங்களுக்குத் தரும் செலுத்துகைகளைக் காட்டிலும் மிகையாக இம் மாநிலங்களின் குடிமக்கள், கூட்டாட்சிக்குச் செலுத்தும் 'வடிகாலைப்' (drain) பற்றிப் பெரிது படுத்திப் பேசுகின்றனர். ஆனால், இதில் பெரும்பகுதியும் வெறும் அதிருப்தி காரணமாக எழுந்ததாகும். இத் துறையில் மிகவும் மாறுதல் ஏற்படும் என்பதற்கான அறிகுறி ஒன்றும் தென்படவில்லை. இக் கூட்டாட்சி, 'அநீதிகளைப்' பற்றி மாநிலங்கள் பெரிதும் பன்னிப் பன்னிப் பேசுகின்றன. ஆனால், அவற்றின் நடவடிக்கைகள் அனைத்தும் மாநிலங்களில் செலவுப் பெருக்கம் ஏற்படுத்துவதைத் தடுத்து நிறுத்த முனைவதிலும், கூட்டாட்சியின் மானியங்களில் இன்னும் பெருத்த பகுதியைப் பெறுவதிலும்தான் ஒருமுகமாய் இருக்கின்றன.

### மாநில, தல 'நெருக்கடி' நீங்குதற்குச் சாத்தியமான தீர்வுகள்

நாம் மாநில, தல அரசாங்கங்களின் நிதி நிலைமையை வருணிப்பதற்கு 'நெருக்கடி' என்ற சொல்லை உபயோகிக்கின்றோம். இச் சொல் எல்லா மாநில, தல அரசாங்க அலகுகளுக்கும் ஒரே அளவு ஆற்றலுடன் பிரயோகம் ஆவதில்லை என்பதை நாம் தெரிந்தே வைத்திருக்கின்றோம். மிகவும் ஆகூழ் வாய்ந்த (fortunate) அல்லது மிகவும் முற்போக்கான மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் தொடர்ந்து நல்ல நிதி நிலைமையிலேயே இருக்கின்றன. உண்மையாகவே நெருக்கடி நிலைமைகளில் பங்கீட்டில் கறைபடிந்திருப்பதே எந்தெந்த அலகுகள் கஷ்ட நிலையில் இருக்கின்றனவோ அவற்றின் பிரச்சினைகளை மூர்த்தண்ணியமாகத் தாக்குவதற்குத் தடங்கல்களாக இருக்கின்றன.[12] ஆயினும், காலம் செல்லச் செல்ல நிதிச் சுழலில் பெரிய அரசாங்க அலகுகளில் பலவும் சிக்கிக் கொண்டன. இதனால் மிகவும் பரவலாக உடனடியாக யாதாயினும் செய்ய வேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டது.

பாதிக்கப்பட்ட அரசாங்கங்களின் கோணத்திலிருந்து பார்த்தால், 'நெருக்கடி' வரவு செலவுத் திட்டச் சம்பந்தப்பட்டது. அவசியமான அலுவல்களுக்கான செலவை மிகவும் மட்டுப்படுத்தாமல் அவைகளால் தங்கள் பட்ஜட்டுகளைச் சமநிலையாக்க முடியவில்லை. 1950-க்கும் 1957-க்கும் இடையில் மொத்தத்தில்

மாநில தலக்கடன் சுமார் 28 பில்லியன் டாலர் அதிகரித்தது. அதாவது இது ஆண்டு ஒன்றுக்கு 4 பில்லியன் டாலராகும். இவ் வேற்றத்தில் சுமார் முக்கால் பங்கு தல அரசாங்கத்தைச் சேர்ந்ததாகும். ஆயினும், கடன் நிலுவை பாக்கியில் கணிசமான அளவு பெருக்கம் ஏற்பட்டது. இப் பெருக்கத்திற்கு ஏற்ப நடப்புக் கணக்கில் 'பட்ஜட்டில் பற்ருக்குறை ஏற்படவில்லை. ஏனெனில், கடனில் பெரும்பகுதி பள்ளிக் கட்டடங்கள், கழிவு நீர், நீர்த்தேக்க நிறுவனங்கள், நெடுஞ்சாலைகள் இவற்றின்மீதான மூலதனச் செலவாகும். இந்த மூலதனச் செலவுகள் உண்மையாகவும், அவசியமாகவும் ஏற்படும் மீளாச் செலவுகளாஞல் (nonrecurrent) இவற்ருல் படைக்கப்பட்ட கடன் பெருக்கத்திஞல் இவற்றை வெளியிட்ட அரசாங்கங்களுக்கு வேதனை குறைவாக இருந்திருக்கும். அதாவது, இச் செலவுகளை, தேவைகளை எட்டிப்பிடிப்பதற்காகச் செய்யப்பெறும் வழக்கத்திற்கு மாருன செலவுகள் என்று கொண்டால் அவற்றுக்கு நெடுங்காலக் கடன் மூலம் நிதி திரட்டி, நடப்பு வருவாய்களிலிருந்து கடன்தீர நிதி சேர்ப்பதும் அறிவுக்கு உகந்ததாக இருக்கும். ஆஞல், பல உதாரணங்களில் இச் செலவுகள் மீட்டும் ஏற்படும் (recurrent) என்றே கொள்ள வேண்டும். தொடர்ந்து வசதிகள் உயர வேண்டும் என்ற கோரிக்கைக்கு ஏற்ப இச் செலவுகளை வைத்திருப்பதற்கே (to keep up) அன்றி எட்டிப்பிடிப்பதற்கு (to catch up) இச் செலவுகள் என்று கொள்ள வேண்டும். ஆகவே, இச் செலவுகள் மீண்டும் மீண்டும் ஏற்படும் செலவுகளே. இவ்வாருன சூழ்நிலைகளில் கடன் ஏறிக் கொண்டே செல்வது நடப்புப் பற்ருக்குறையைப் போன்றதே. கடனைச் சேர்த்துக்கொண்டே போவது எதிர்காலத்தில் மிகக் கடுமையான பட்ஜெட் பிரச்சினையை எழுப்பும். இவ்வாருன சூழ்நிலைகளில் நடப்பு வரியிலோ அல்லது பிற வரவுகளிலோ பெருத்த ஏற்றத்திற்கு அரசாங்கம் உடனடியாக வகை செய்யவேண்டியது அவசியமாகும்.

அண்மைய ஆண்டுகளில் செலவுக்கும், வருமானத்திற்கும் உள்ள துண்டை நிரப்புவதற்காகக் கடன் வாங்குவதில் நெருக்கடியான பிரச்சினைகளைச் சமாளிக்கவேண்டி இருந்தது. சில தற்காலிகப் புறனடைகளைத் தவிர்த்து வகை வளங்களுக்கான தேவைக்கு அழுத்த நிலையிலேயே பொருளாதாரம் இருக்கின்றது. இது சிறப்பாகப் பண, மூலதன மார்க்கட்டுகளில் தெரிகின்றது. இம் மார்க்கட்டுகளில் நிதிகளுக்கான பெருத்த தேவையும், இறுக்கமான பணக் கொள்கையும் சேர்ந்து வட்டி வீதங்களை உயர்த்தி விட்டன. முப்பத்தேழாம் அட்டவணையில் மாநில, தல அரசாங்கங்கள் வாங்குவதஞல் ஏற்படும் விளைவுகள் தரப்பட்டிருக்கின்றன.

*1950*-லிருந்து *1959* வரை ஆண்டுதோறும் உயர்ந்த ரக முனிசிபல் கடன் பத்திரங்கள் (high grade municipal bonds) ஈனும் வருவாயையும் அட்டவணை காட்டுகிறது.

## அட்டவணை 37

### முனிசிபல் கடன்பத்திர வருவாய்கள், 1950—1959*
### ஆண்டைய சராசரி

| ஆண்டு | முனிசிபல் கடன் பத்திர வருவாய்கள் (ஆண்டுதோறும் %) | ஆண்டு | முனிசிபல் கடன் பத்திர வருவாய்கள் (ஆண்டுதோறும் %) |
|---|---|---|---|
| *1950* | *1·98* | *1955* | *2·53* |
| *1951* | *2·00* | *1956* | *2·93* |
| *1952* | *2·19* | *1957* | *3·60* |
| *1953* | *2·72* | *1958* | *3·56* |
| *1954* | *2·37* | *1959* | *3·95* |

* From Joint Economic Committee, *Economic Indicators*, Historical and Descriptive Supplement (1957) and January, 1960. The yield figures are averages of weekly data. The yield is not the interest rate at issue, but a computation showing the rate of return which would equate the present value of the provisions in the bond contract with the market price at which the bonds were selling.

மேலே தந்துள்ள புள்ளித் தொகைகளை உபயோகித்து ஒரு எளிய கணக்கீடு செய்தால் வட்டி வீதங்களில் உயர்வால் ஒரு பொதுத் திட்டத்தின் ஆக்கச் செலவின்மீது ஏற்படும் விளைவு தெரியும். இருபதாண்டு வரிசைக் கடன் பத்திரங்களை (twenty-year serial bonds) வெளியிட்டு ஒரு திட்டத்திற்காக ஒரு நகராண்மைக் கழகம் 1 மில்லியன் டாலரைக் கடன் வாங்குவதாக வைத்துக்கொள்வோம். ஒவ்வோர் ஆண்டும் வெளியீட்டில் இருபதில் ஒரு பங்கு, தவணை முடிவு அடைவதாகவும் வைத்துக் கொள்வோம். ஓர் உத்தேச ஆனால் துல்லியமான கணக்கீட்டின்படி[13] இருபது ஆண்டுகளில் ஒவ்வொன்றிலும் வெளியிட்ட மொத்தக் கடன் பத்திரங்களில் அரைவாசித் தடவைகள் வட்டி வீதம் இருப்பதாக நாம் மொத்த வட்டிச் செலவைக் கணக்கிடுகின்றோம். தெரிந்தெடுக்கப்பட்ட ஆண்டுகளில் கடன் வாங்க நேர்ந்திருந்தால், கடன் பத்திரங்களின்மீதான வட்டி வீதங்கள் 37ஆம் அட்டவணையில் உள்ள விளைச்சல் வீதங்களைப் பயன்படுத்தினால், திட்டத்தின் மொத்தச் செலவு கீழ்க் கண்டவாறு இருக்கும்.

| ஆண்டு | (yield) விளைச்சல் (%) | முதல் (டாலரில்) | வட்டி a (டாலரில்) | மொத்தச் செலவு (டாலரில்) |
|---|---|---|---|---|
| 1950 | 1·98 | 1,000,000 | 198,000 | 1,198,000 |
| 1955 | 2·53 | 1,000,000 | 253,000 | 1,253,000 |
| 1959 | 3·95 | 1,000,000 | 395,000 | 1,395,000 |

a 5,00,000 (average principal amount outstanding per year) *times* the interest rate for that year *times* twenty (years).

1959-ல் கடன் வாங்கி இருந்தால் திட்டத்தின் மொத்தச் செலவு சுமார் 200,000 டாலராக இருந்திருக்கும். அதாவது திட்டத்தின் மொத்தச் செலவு 1950-ல் கடன் வாங்குவதைவிட 17 சதவிகிதம் அதிகமாகவும், 1955-ல் கடன் வாங்குவதைவிடச் சுமார் 11 சதவிகிதம் அதிகமாகவும் இருந்திருக்கும். மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் வட்டி வீதங்களில் ஏற்படும் மாறுதல்களுக்கு முற்றும் உணர்வு உள்ளதாகவே இருக்கின்றன. ஏனெனில், கூடுதல் வட்டிக் கட்டணங்களினுல் அவசியம் கூடுதல் வரி வீதங்கள் ஏற்படும். இந்தப் புலன் உணர்ச்சியைப் புள்ளி விவர அளவில் நிரூபிப்பது சிரமமாயினும் கடன் வாங்கும் செலவுகளை வரி வீதங்களாக மாற்றும் ஒரு போக்கு காணப்படுகின்றது. வட்டிச் செலவுகள் கூடுதலாக இருக்கும்பொழுது வாக்காளர்கள் பெருத்த கடன்பத்திர வெளியீடுகளை அங்கீகரிப்பதற்குத் தயங்குகின்றுர்கள். நெரிசலான மார்க்கட்டுக்களில் கடன் பத்திரங்களை வெளியிடுவதற்கு அரசாங்கங்கள் மிகவும் தயங்குகின்றன. எந்தக் குறிப்பிட்ட காலத்திலும் மார்க்கட்டில் புதிய வெளியீடுகளின் தொகையை வட்டி வீதத்தைத் தவிர பிற காரணிகளும் இயல்பாகவே பாதிக்கும். கடன் வரம்புக்குள் மேற்கொண்டும் கடன் வாங்குவதற்கு இடம் இருக்கிறதா என்பதும் தாங்க முடியாத வரிப்பளுக்களைத் திணிக்காது கூடுதல் வருவாயை உற்பத்தி செய்வதற்கு வரிமுறையின் எஞ்சிய பகுதியைப் பொறுத்த அளவில் திறன் இருக்கின்றதா என்ற பொது மக்களின் உணர்வும், புதிய வசதிகளுக்கான முடை உடனடியாகவும் தீவிரமாகவும் இருக்கின்றதா என்பதும் இக் காரணிகளில் அடங்கி இருக்கின்றன.

1950-ல் தொடங்கிய பத்தாண்டுகளில் மாநில, தல அரசாங்கங்கள் வாங்கிய பண்டங்கள், பணிகள் இவற்றின் விலைகள் விரைவாக ஏறின என்பதும் குறிக்கற்பாலது. 1950-ல் 83·7 லிருந்து 1958-ல் 117·7 ஆகக் குறியீட்டெண்கள் (1954=100) உயர்ந்தன. இது ஆண்டொன்றுக்கு சுமார் 4 சதவிகிதப் புள்ளிகள்

வீதம் சராசரி ஏறியதாக ஆகிறது. மொத்த விலைகளில் தலா ஆண்டு ஒன்றுக்குச் சுமார் 1·5 சதவிகிதம் புள்ளிகள் சராசரி ஏறியதுடனும், நுகர்வோர் விலைக் குறியீட்டு எண்ணில் சுமார் 2 புள்ளிகள் ஏறியதுடனும் இதை ஒப்பிடலாம். ஏற்கனவே வாங்கிய அளவுக்குப் பண்டங்களையும் பணிகளையும் வாங்குவதற்கே மாநில, தல அரசாங்கங்கள் தங்கள் ஆண்டு வருவாய்களில் பெருத்த அதிகரிப்புச் செய்யவேண்டி இருக்கின்றது.

வரி வீதங்களை உயர்த்தாது தேவைப்பட்ட கூடுதல் வருவாயை உடனுக்குடன் கிடைக்கும்படிச் செய்வதற்குப் பொருளாதாரத்தில் வளர்ச்சி ஏற்படும் தோறும், வரித்தளமும் வளர்ச்சி அடையும் என்று சில இடங்களில் நம்புகின்றார்கள். ஆனால், இந் நம்பிக்கை வீணானது, ஏனெனில், இப்பொழுது மாநில, தல அரசாங்கங்கள் உபயோகிக்கும் வரி வகைகளைப் பார்க்கும்பொழுது இந் நம்பிக்கைக்கு இடமில்லை. 1950-க்கும் 1957-க்கும் இடையே விற்பனை வரிகள், ஆயத்தீர்வைகள், மொத்த வரவு வரிகள் இவற்றினின்று கிடைக்கும் வருவாய்கள் ஏறின. தங்கள் நிதிகளிலிருந்து மாநில, தலச் செலவுகள் ஏறிய அதே சதவிகிதத்திலேயேதான் இவ் வருவாய்கள் ஏறி இருக்கின்றன. இவ் வரி வீதங்களில், கணிசமான அளவு உயர்வுகள் மூலமே வருவாய் ஏறியிருக்கின்றது. செலவுகளுக்கு ஏற்ப (கூட்டாட்சி நிகர மானியங்களில்), விரைவாக இவ் வரிகளின் மொத்த தளம் உயரவில்லை என்னும் உண்மை, வீத உயர்வுகளின் அவசியத்திலிருந்தே புலப்படுகின்றது.

தங்கள் சொந்த இனங்களிலிருந்து[14] செலவு செய்யும் மாநில, தல அரசாங்கங்களின் செலவுகள் 1950ஆம் ஆண்டிலிருந்து ஏறிக் கொண்டு வந்திருக்கின்றன. மாநில, தல அரசாங்கங்களின் செலவுகளைக் காட்டிலும் சற்றுக் குறைவாகவே பொருளாதாரத்தில் மொத்த நுகர்வுச் செலவுகள் ஏறி இருக்கின்றன. ஆனால், மொத்த நுகர்வுச் செலவுகளைக் காட்டிலும் நுகர்வு வரிகளின் தளம் மிகவும் குறுகலாக இருக்கின்றது. மொத்த நுகர்வு 46 சதவிகிதம் உயர்ந்த பொழுது மொத்த நுகர்வின் சேவை உள்ளுறுப்பு (service component) 71 சதவிகிதம் உயர்ந்தது. அதே சமயம் மொத்த நுகர்வில் பண்ட உள்ளுறுப்பு 34 சதவிகிதமே உயர்ந்தது. பொதுவாக மாநில விற்பனை, ஆயத்தீர்வை வரிவிதிப்பிலிருந்து பணிகளுக்கு (சேவைகளுக்கு) விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, பணிகளின் வளர்ச்சியினால் இவ் வரிகளின் தளத்திற்குச் சிறிதுகூடச் சேர்மானம் ஏற்படுவதில்லை. ஆகையினால், செலவுகளின் உயர்வுக்குத் தக்கவாறு வருவாய்களை வைத்திருப்பதற்கு இவ் வினங்களில் புதிதாக வரிகளை மேற்கொள்ளுவதும் தற்போதைய வரிகளின் வீதங்களை உயர்த்துவதும் அவசியமாகின்றன.

உடைமை வரிதான் தல அரசாங்கத்தின் வருவாய்க்கு அடிப் படையாகும். உடைமை வரியிலிருந்து கிடைக்கும் வருவாய் ஏறினாலும் உடைமை வரித்தளம் விரிவடையவில்லை. வரிப் பட்டியல்களில் புதிதாக உடைமை இனங்களைப் புகுத்தும்பொழுது மட்டுமே உடைமை வரியின் தளம் தானாகவே விரிவடைகின்றது. மீண்டும் மதிப்பீடு செய்வதன் மூலமாக மட்டுமே உடைமை மதிப்புகளில், உயர்வுகள், வரித்தளத்தில் இணைக்கப்படுகின்றன. அண்மைய ஆண்டுகளில் இவ் விரு காரணிகளும் தளத்தைப் பெருக்கும் வகையில் இயங்கி வந்திருக்கின்றன. மாநில, தலச் செலவுகளில் ஏற்பட்ட உயர்வைச் சரிக்கட்டுவதற்கு உடைமை வரியை உயர்த்தவேண்டி யிருந்தது. இதனால் பல தலங்களிலும் கணிசமான அளவு வரிவீதத்தை உயர்த்த வேண்டி இருந்தது. ஆயினும், தொடர்ந்து மேல் நோக்கி மீள் மதிப்பீடு செய்வ தற்கும், வீதத்தை உயர்த்துவதற்கும், அலாதியான ஓர் தடங்கல் இருந்தது. இதுதான் வருமானத்திற்கும் (வரிதாங்கு வல்லமை) சொத்துரிமைக்கும் இடையே உள்ள நம்பக்கூடாத உறுதியற்ற உறவு. யாரார் வருமானங்கள் உயர்ந்து கொண்டே செல்கின் றனவோ அவர்களிடமிருந்து கூடுதலாக அளிப்புகளைப் பெறுவதற் காக உடைமை வரி மதிப்பீடுகளையும், வீதங்களையும் உயர்த்த வேண்டும். யாரார் வருமானங்கள் மாறாது அல்லது குறைந்து கொண்டே இருக்கின்றனவோ அவர்கள்மீதும் இதே வகை உயர்வைப் (மதிப்பீடும் வீதமும்) பிரயோகிப்பதும் இன்றி யமையாததாகும். இவ்வாறு யாரார் வருமானங்கள் மாறாதும், குறைந்து கொண்டும் அல்லது மெதுவாக ஏறிக்கொண்டும் இருக் கின்றனவோ அவர்கள்மீது கூடுதலாக உடைமை வரிகளை விதிப்ப தால் அவர்கள் தொல்லைகளுக்கு ஆளாவார்கள். இதனால் விரை வாக வருமானங்கள் ஏறுவதற்கு ஏற்றாற்போல இவ் வரிகளின் வீதத்தைத் தல அரசாங்கங்கள் உயர்த்துவதற்கு வலுவான முட்டுக்கட்டைகள் பல ஏற்படுகின்றன.

**மாநில, தல அரசாங்கங்கள் மேற்கொள்ளக்கூடிய தீர்வுகள்:** மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் தாங்க ளாகவே நிதி நெருக்கடிகளுக்கானத் தீர்வுகளைக் காணவேண்டும் என்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. மாநில ஆதிபத் தியக் கருத்துடனும், உயர்ந்தபட்ச அதிகாரத்தைப் பரவலாக்கும் கருத்துடனும் இக் கருத்து முரண்படாது இருக்கின்றது. இதன் பொருளாவது அரசியல் சட்டப்படி இப் பொறுப்பு மாநிலங் களுக்கே உள்ளன என்பதாகும். ஏனெனில், அரசியல் சட்டப்படி தல அரசாங்கங்கள் மாநிலங்களின் கருவிகள் என்ற அளவிலேயே

இயங்குகின்றன. எந்தெந்த நடவடிக்கைகளை இவ் வரசாங்கங்கள் மேற்கொள்ளலாம் ?

**1. திறமையாகச் செலவு செய்தலை அபிவிருத்தி செய்தல்:** முதலில் தல அரசாங்க அலுவல்களை எடுத்துக்கொள்வோம். இவற்றைச் செய்வதற்குப் பல அலகுகள் இருக்கின்றன. பொதுவாக இவ் வலகுகளுக்கு இவ் வலுவல்களைத் திறமையாக ஆற்றும் ஆற்றலில்லை. இவ் வலகுகள் பெரும்பாலும் வரலாற்றில் தற்செயலாக முகிழ்த்தவையாகும். இவற்றின் எல்லைகளும் இவ் வலுவல்களைத் திறமையாக ஆற்றுவதற்கு ஏற்றாற்போல இயற்கையான எல்லைகளாக இல்லை. சிறப்பாகப் பல தலங்கள் மிகச் சிறியன. அலுவல் அடிப்படையில் அடுத்தடுத்துள்ள அலகுகளை ஒன்று சேர்த்தால் மிகத் திறமையாகவும், மிகவும் தரமாகவும் பணி ஆற்றுவதற்கு உண்மையில் வாய்ப்பு ஏற்படும். தல அரசாங்க எல்லைகளை முற்றும் மாற்றி அமைப்பது என்பது இதன் பொருளன்று. ஏனெனில், ஒரு குறிப்பிட்ட அலுவலை மிகத் திறமையாக ஆற்றுவதற்கான ஒரு பகுதி இன்றியமையாத வேறோர் அலுவலை ஆற்றுவதற்கும் மிகத் திறமையான பகுதியாக இருக்க வேண்டும் என்பதில்லை. வழக்காறு எல்லைகளைக் கடந்து அரசாங்க அலகுகள் நிறுவப்படுவதற்குப் 'பிரதேச'ப் பள்ளிகளை (regional schools) அமைக்கும் அண்மைக்காலத்துப் போக்கு ஓர் உதாரணமாம். தற்போதைய தல அரசாங்க எல்லை வரம்புக்குள் வகை வளத்தையும், நிலத்தையும் உபயோகப்படுத்துவதைச் சீரமைப்புச் செய்வதற்கான ஒரு முயற்சியே பிரதேசவாரித் திட்டமிடுதலாகும். நீர்வளங்கள், போக்குவரத்து வசதிகள் இன்னும் இவை போன்றவற்றை இணைக்கப்பட்ட பிரதேச வசதிகள் வாயிலாக அபிவிருத்தி செய்வதற்கென 'அதிகாரிக் குழுக்கள்' (authorities) வெற்றிகரமாகப் பயன்படுத்தப் பெற்றிருக்கின்றன. தங்களுக்கெனச் சொந்தப் பணிகளைச் சுதந்திரமாக வகுத்துக் கொள்ளும் பொறுப்பை வழக்காறு அரசியல் அலகுகளுக்குக் கொடுப்பதால், பொதுச் செலவுகள் அவசியமின்றிப் பெருகுகின்றன. அத்துடன் பெருவாரியான உற்பத்தியின் சிக்கனங்களை அடைவதையும் அவை தடை செய்கின்றன என்பதுதான் பொருளாகும்.

மாநிலத்திலிருந்து தொழில் நுட்ப உதவி அளிப்பதன் மூலமாகத் தல அரசாங்கம் இயங்கும் பல பகுதிகள் ஆதாயம் பெறும் என்று தோன்றுகின்றது. சில சமயங்களில் இது ஆராய்ச்சி சேவைகளாக உருவெடுக்கலாம். எடுத்துக்காட்டாகப் பள்ளிக் கட்டடங்களைத் திறம்படக் கட்டுவதற்கும், சாலைகளை அமைப்பதற்கும், பிற கட்டடங்களை நிர்மாணிப்பதற்கும் தொழில் நுட்ப உதவி வழி

காட்டும். மாநிலங்கள் தங்கள் தல அரசாங்கங்களுக்கான தணிக்கைப் பணிகளுக்கு ஏன் வகை செய்யக்கூடாது என்பதற்கு யாதொரு காரணமுமில்லை. மாநில வரித்துறை, காலம் தோறும் மீளவும் உடைமையை மதிப்பீடு செய்வதற்குத் தங்கள் பணியைச் செலவின்றியோ, அல்லது அடக்கச் செலவிற்கோ, அளிப்பதன் மூலம் தல மதிப்பிடுபவர்களுக்கு ஆகும் பெருத்த செலவை மிச்சம் பிடிக்கலாம். தல அரசாங்கங்களுக்குத் தங்கள் கடன் பத்திரங்களை வெளியிடுவதற்கு மாநிலங்கள் உதவி அளிப்பதும் சாத்தியமே. மூலதன மார்க்கட்டை ஒழுங்கான முறையில் அணுகும் விதத்தில் வெளியீடுகளைத் திட்டமிடுவதையும், நிதிகளின் சப்ளைக்காக ஒழுங்கீனமாகப் போட்டிப் போடுவதைத் தவிர்ப்பதையும், மாநிலங்கள் செய்வது உபயோகமாக இருக்கும். தலக் கடன்பத்திர வெளியீடுகளுக்கு மாநிலம் உறுதிமொழி கூறும் ஒரு முறையை நிறுவுவதும் பொருத்தமாகவே இருக்கும். இதனுல் இவ்வகை வெளியீடுகளின் ஆபத்துக்கள் குறைவதன்றி இவற்றின் வட்டிச் செலவுகளும் குறையும்.

மாநில மட்டத்தில் சில சேமிப்பு செய்யக்கூடிய துறைகள் இருக்கின்றன. நீங்களே செய்துகொள்ளுங்கள் (do-it-yourself) எனும் திட்டங்கள் இவற்றில் அடங்கும். அண்மைய ஆண்டுகளில் மாநில அரசாங்க ஏஜன்ஸிகளிடையே தொழில் நுட்பத் தகுதியின்மை பெரிதும் காணக் கிடக்கின்றது. நெடுஞ்சாலைத் துறைகள் தங்கள் நெடுஞ்சாலையைத் திட்டமிடுதலின் மிக நுண்ணிய தொழில் நுட்பக் கூறுகளுக்குத் தனியார் பொறியியல் நிறுவனங்களை மிகவும் நாடுவதாகத் தெரிகின்றது. சட்டப் பணிகளை மாநில ஏஜன்ஸிகள் ஆற்றுவதில்லை. தனியார் நிறுவனங்களிலிருந்தே இப் பணிகளை மாநில அரசாங்கம் கொள்ளுகின்றது. நிதி திரட்டுவதில் பண அக்கறையுள்ள தனியார் குழுக்களிடமிருந்தே நிதி திரட்டுவதற்கான அறிவுரையை மாநில அரசாங்கம் பெறுகின்றது. மாநில அரசாங்கத்திடம் இவ்வித நிதித் தகுதி இல்லாததிலிருந்தே, மாநிலம், அக்கறை கொண்டுள்ள வெளியார்களின் தயவில் இருக்கின்றது என்று புலப்படும் பொருளாதார வளர்ச்சியில் நாட்டம் கொண்டுள்ள ஏஜன்சிகள் மாநில அரசாங்கத்தின் கவர்ச்சி பற்றிய அழகான, ஆனுல் அழிவு பயக்கும் சிறு நூல்களை வெளியிடுகின்றன. கஷ்டப்பட்டுப் பகுத்தாய்வதற்குப் பதிலாக உத்தியோக பூர்வமாக ஆலோசகர்களை ஊதியத்திற்கு அமர்த்தும் எளிய செயல் முறையை இவ் வேஜன்ஸிகள் மேற்கொள்ளுகின்றன. இவ் வாலோசகர்கள் ஊதியத்திற்காக யாவருக்கும் வெளிப்படையாகத் தெரிந்தவற்றையே கூறுகின்ருர்கள். திட்டமிடுவதில் ஏற்படும் தவறுகளுக்கான பொறுப்பினின்றும்

தப்பிப்பதற்கும், திட்டமிடுதலில் வெளியார்கள்தான் சார்பற்று (புறவய) இருப்பார்கள் என்ற கேள்விக்குரிய எடுகோளினுல் உந்தப்பட்டும், துறை நடவடிக்கைகளை வாலாயப்படுத்தியும், நெருக்கடியான வேலைகளுக்கு வெளியார்களை ஊதியத்திற்கு அமர்த்தியும் இருக்கலாம். ஆனுல், தகுதிக்கு ஏற்ப, கொடுக்க மனமில்லாததினுல் தொழில் நுட்பத் தகுதியில் அரிப்பு ஏற் பட்டதன் தலையாய விளைவே இது எனலாம்.

**2. நிதிக் கண்காணிப்பில் திருந்திய செயல் முறைகள் :** மாநிலம் தொழில் நுட்ப உதவி அளிப்பதன் வாயிலாகத் தல் (மாநில) அரசாங்கங்களின் கடன் வாங்கும் செலவைக் குறைக்க லாம் என்ற சாத்தியக்கூறு இருப்பதை நாம் மேலே சுட்டிக் காட்டி ஞேம். ஆயினும், மேலும் மாநில, தல அரசாங்கங்கள் ரொக்க மாகவும், கடன் பத்திரங்களாகவும் பெருத்த ரிசர்வுகளை வைத் திருக்கின்றன. இவ் ரிசர்வுகளைப் பெருத்த அளவு மாநில, தல அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்தால் இக் கடன் பத்திரங்களில் ஒரு பரவலான மார்க்கட்டு கிடைக்கும்.[15] 1957-ல் மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் சேர்ந்து மொத்த மாக 48 பில்லியன் டாலர் ரிசர்வை ரொக்கமாகவும் கடன் பத்திரங்களாகவும் வைத்திருந்தன. இதில் ஏறக்குறைய 20 பில்லி யன் டாலர் மொத்தமாகவும், டிபாசிட்டுகளாகவும், 17 பில்லியன் டாலர் கூட்டாட்சியின் கடன் பத்திரங்களாகவும் ஏறக்குறைய எட்டு பில்லியன் டாலர் தங்கள் சொந்த மாநில அல்லது பிற மாநில தலக் கடன் பத்திரங்களாகவும் இருந்தன[16]. ரொக்க மாகவும் டிபாசிட்டுகளாகவும் வைத்திருப்பதையும், கூட்டாட்சியின் கடன் பத்திரங்களில் முதலீடு செல்வதையும் குறைத்து, மாநில, தல அரசாங்கக் கடன் பத்திரங்களில் கூடுதலாக முதலீடு செய்வது கடன் வாங்கும் அரசாங்கங்களுக்கு நல்லது. தங்கள் சேமிப்புகள் சிறிது வருமானத்தையோ அல்லது யாதொரு வருமா னத்தையுமோ ஈட்டாது உள்ள அரசாங்கங்களுக்கும் இதனுல் நன்மை ஏற்படும்.

மிகவும் அறிவுக்கு உகந்த பட்ஜெட் செயல் முறையின் மூலம் சேமிப்பு ஏற்படும் சாத்தியமே நிதிக் கண்காணிப்புப் பகுதியில் மிக முக்கியமானதாகும். நாட்டின் பல்வேறு பாகங்களிலும், கல்விக் குழுக்களுக்கு நிதித்துறையில் சுயேச்சை அளிக்கும் பரவலான பழக்கத்தினுல், ஒரு குறிப்பிட்ட அலுவலில் நாட்டம் உடைய குழுக்களின் கையில் வரிவிதிக்கும் அதிகாரமும் செலவு செய்யும் அதிகாரமும் சிக்கியது. சாதாரணப் பட்ஜட் வழக்காறுகளி லிருந்து மிகவும் செலவு பிடிக்கும் இவ் வலுவலை (கல்வி) அகற்றுவ

தால் ஏற்படும் விளைவுகளைத் தவிர்ப்பதே நன்றாக இருக்கும். ஆதலால் கல்வியைச் சாதாரண பட்ஜட் வழக்காற்றிலேயே வைத்திருப்பது நல்லது.[17] நாம் முன்னர் ஓர் அதிகாரத்தில் கண்டவாறு மாநில மட்டத்தில், பட்ஜட்டுகள் பிரத்தியேகமும், சாராம்சத்தில் சுயேச்சையும் உள்ள நிதிகளாக அளவுக்கு மீறிப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. குறிப்பிட்ட வருவாய்களைப் பிரத்தியேக நோக்கங்களுக்கு ஒதுக்கும்பொழுதும், நிதி உபரிகளை பிறவற்றுக்கு மாற்ற முடியாத பொழுதும், வள வகைகளைத் திறமையாகக் கண்காணிப்பதற்குரிய சாத்தியக் கூறுகளும் சற்றுக் கடுமையாகவே வரையறைக்கு உட்படுத்தப் பெறுகின்றன. ஒப்புமையில் அவசியம் அற்றதாகத் தோன்றும் செலவுகளைச் செய்வதன் மூலம் பிரத்தியேக நிதிகளில் உபரி ஏற்படுவதை எளிதாகத் தவிர்க்கலாம்.

மேலேயுள்ள பத்திகள் (paragraphs) நிதி நெருக்கடியைத் தணிப்பதற்கு மாநில தல அரசாங்கங்கள் தங்கள் செயல் முறைகளில் திருத்தம் செய்வதற்குப் பல பகுதிகள் இருக்கின்றன என்பதைத் தெரிவிக்கின்றன. ஆயினும், இந் நெருக்கடியை அவற்ருல் முற்றும் தீர்க்க முடியாமல் இருக்கலாம். ஏனெனில், தங்கள் வருவாய்களைக் கணிசமான அளவு உயர்த்துவதற்கு இவ் வரசாங்கங்கள் பலவும் துணிச்சலாக நடவடிக்கை எடுப்பதே இதற்கான பரிகாரமாகும்.

**3. புதிய வருவாய்கள் :** 1950-க்கும் 1957-க்கும் இடையே மாநில அரசாங்கங்களின் வரிகள், கட்டணங்கள், பலவகை வருவாய்கள் (பிற அரசாங்கங்களிலிருந்து கிடைக்கும் மானியங்களும், தொழில் ரகத் தொழிற்றுணிவுகள், ஈட்டுறுதி முறைகள் இவற்றிலிருந்து கிடைக்கும் வரவுகளும் நீங்கலாக) சுமார் 86 சதவிகிதம் உயர்ந்தன. தல அரசாங்கங்களின் வருவாய்களும் ஏறக்குறைய இதே அளவு (சுமார் 88 சதவிகிதம்) உயர்ந்தன.[18] உடைமை வரியைப் பற்றி நாம் ஏற்கனவே சர்ச்சை செய்ததிலிருந்து எதிர்காலத்தில் இங்ஙனம் மாநில வருவாய்களுக்குச் சமதையாகத் தல வருவாய்களிலும் வளர்வீதம் ஏற்படுவது அருமையே என்றும், விரும்பத்தகாதது என்றும் தெளிவாகத் தெரிந்தது. பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்ப ஒரே தன்மையாகவுள்ள உடைமை வரியின் தளம் பெருக இயலாது. அதன்மீது செயல்முறையில் கட்டுப்பாடுகள் சுமத்தப்பட்டிருக்கின்றன. இதனுல் இவ் வினத்திலிருந்து கிடைக்கும் வருவாய் விரைவாக ஏறினுல், வருமானம் ஏருதிருக்கும் உடைமைக்காரர் ஏற்கனவே அனுபவிக்கும் துன்பம் அதிகரிக்கப்பெறும் என்றும் தெரிகிறது. இதிலிருந்து உடைமை வரியிலிருந்து

கிடைக்கும் வருவாய்கள் ஏற இயலாதன என்றோ அல்லது ஏற வேண்டாதன என்றோ நாம் கூறுவதாகக் கொள்ளக்கூடாது. ஏனெனில், அதிக வீடுகள், அதிகக் கார்கள், அதிகத் தொழில் கட்டடங்கள், தளவாடங்கள், பொருள் பட்டியல்கள் இவற்றால் வரித்தளம் விரிவடைவதுடன் உடைமை வரியின் தளமும் விரிவடையும். மதிப்பீடுகளும், வீதங்களும் உயர்த்தப்படாம லிருந்தால்கூட வரித்தளம் விரிவடையும். ஆனால், உயர்ந்துகொண்டே வரும் தலச் செலவுகளுக்கு வேண்டிய வருவாய்க்கு வகை செய்வ தற்கு இவ்விதம் தானாகவே விரிவடையும் தளம் நிச்சயம் போதாது.

ஆகையினால், மாநிலத் தல அரசாங்கங்களின் செலவுகள் ஆறிக்கொண்டிருப்பதற்கு ஏற்ப, வருவாய்களைத் திரட்டும் தலையாய பொறுப்பு மாநில அரசாங்கங்களையே சார்ந்ததாகும் என்பது தெளிவாகப் புலனாகிறது. சில்லறை விற்பனை, தனியாள் வருமானம், கார்ப்பரேஷன் இலாபங்கள் இவற்றைத் தளமாகக் கொண்டதே மாநில அரசாங்கங்களின் வருவாய் முறைகள். பொருளாதார விஸ்தரிப்புக்கு ஏற்ப இவ் வரிமுறைகளையும் நியாய மான அளவு விஸ்தரிக்கலாம். மேலும் தல அரசாங்கங்களின் வரிகளைக் காட்டிலும் இப் பெரிய வரிகளின் வீதங்களைச் சுளு வாகவும், வரி செலுத்துவோர்களுக்கு அதிகத் துன்பம் ஏற்படாம லும் உயர்த்தலாம். ஏனெனில், வரிதாங்கு வல்லமையை வருமா னத்தைக் கொண்டு அளவிடும் முறையுடன் இவ் வரித்தளங்கள் மிக நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருக்கின்றன. இங்ஙனமிருந்தும் முயற்சி இன்றியும், நல்ல அறிவுக்கூறு படைத்த தலைமை இன்றியும், மாநில வருவாய்களைக் கணிசமான அளவு உயர்த்தலாம் என்று நாம் எண்ண முடியாது.

மாநில வருவாய்களின் பெருக்கத்திலிருந்தே பெரும்பாலும், அதிகரித்த தல அரசாங்கச் செலவுகளும் மாநில அரசாங்கச் செலவுகளும் சரிக்கட்டப்பட வேண்டும் என்றால் தல அரசாங்கங் களுக்கு மாநிலம் உதவி அளிப்பதற்கான வாய்பாடுகளைச் சீரமைப்புச் செய்ய வேண்டும் என்பது முதற் படியாகும். தல உடைமைத் தீர்வை மதிப்பீடு செய்யப்பெறும் மட்டங்களை ஒரே படித்தாகவோ அல்லது சமனாகவோ ஒரு மாநிலம் திறமையுடன் செய்துவிட்டால், பின்பு அது தல அரசாங்கங்களின் வரிமுயற்சிகளை அவற்றின் வரிவீத அளவுடன் ஒப்புமை செய்யலாம். மேலும், ஏற்கனவேயே ஒரு தரமான வரிமுயற்சி செய்யும் தல அரசாங்கங் களுக்கும், உண்மையில் வருவாய் முடையுள்ள தல அரசாங்கங் களுக்கும், மாநில அரசாங்கங்கள் மானியங்களை அளித்து உதவி

செய்தால், மானிய வாய்பாடுகளில் பெருத்த மாறுதல் எதுவும் செய்ய வேண்டியதில்லை. ஆகவே, அவற்றுக்கு ஏற்ற மானிய வாய் பாடுகள் இரண்டு நோக்கங்களை நிறைவேற்ற வேண்டும். அவை யாவன: (1) நெரிசல் சக்திகளினால் வரிதாங்கு உடைமையின் ஒவ்வொரு டாலருக்கும் நடப்புக் 'குடித்தனச்' (house keeping) செலவுகள் வழக்கத்திற்கு மாறாத மிகவும் உயர்ந்த புள்ளித் தொகைகளாக இருக்கும் சமுதாயங்களுக்குப் பிரத்தியேக உதவி அளித்தல். (2) விரைவாக வளர்ந்து வரும் சமுதாயங்களுக்கு உதவி அளித்தல். விரைவான வளர்ச்சியினால் ஏற்படும் மிகவும் செலவு பிடிக்கும் மூலதன அபிவிருத்திகளுக்கு இம் மானியங்களை அளிக்கலாம். சராசரி மட்டத்திற்கு மேலேயே ஒரு அலுவலைத் தரமாக நிறைவேற்றுவதற்கு ஒரு தலம் முனையுமானால், இத்தர வேறுபாட்டை அது தன்னுடைய சொந்த வகை வளங்களி லிருந்தே நிதியைத் திரட்டிச் சமாளிக்க வேண்டும்[19]. இவ்வகை யாக சமனுக்கும் மானிய வகைகளினால், மாநிலத்தின் உதவி நெருக்கடிப் பிரச்சினைகள் நிலவும் இடங்களுக்கு ஒருமுகமாக ஒதுக்கப்படும். சில மாநிலங்கள் இவ் வகையான திட்டம் ஒன்றை மேற்கொள்ள முனைகின்றன. இவ்வகைத் திட்டத்தைத் தற்காலம் வரைக் கொண்டு வருவது இன்றியமையாதது. ஆயினும், இம் முயற்சிகள் நியாயமான அளவு வெற்றி பெற்று இருப்பதாகத் தோன்றுகிறது.

தல சமுதாயத்தின் பருமனுக்கும், நிதி நெருக்கடியின் தீவிரத் திற்கும் இடையே தலைகீழான முறையில் உறவு இருப்பதாகப் பிற மாநிலங்களில் தவறுதலாக எண்ணியதால் முற்றும் பகுத்தறிவுக்கு ஒவ்வாத மானிய வாய்பாடுகள் ஏற்பட்டுள்ளன. சில மாநிலங் களில் தலா மாணவர் ஒருவருக்கு இவ்வளவு என்ற அடிப்படையில் முக்கியக் கல்வி மானியங்கள் தரப்படுகின்றன. இம் மானியங்கள் மாணவர் எண்ணிக்கை உயர உயரக் குறையும். சில மாநிலங் களில் பள்ளிப் போக்குவரத்து மானியங்கள் நாட்டுப்புறச் சமுதா யங்களுக்கு மட்டுமே கொடுக்கப் பெறுகின்றன. சில மாநிலங் களுக்கு நெடுஞ்சாலை மானியங்கள் தரப்பெறுகின்றன. இம் மானி யங்களுக்கு அடிப்படை, அபிவிருத்தி செய்யப்பட்ட நெடுஞ்சாலை களே. அபிவிருத்தி செய்யப்பட்ட சாலைகளின் நீளத்திற்குத் தக இம் மானியங்கள் ஒவ்வொரு மைலுக்கு இவ்வளவு என்று தரப்படு கின்றன. ஆனால், இம் மானியங்கள் முதல் சில மைல்களுக்கு மட்டுமே தரப்பெறும். இவ் வெல்லா விஷயங்களிலும் எத்துணை சிறியதாக ஒரு சமுதாயம் இருக்கின்றதோ அத்துணை அதன் நிதிப் பிரச் சினைகள் பெரியனவாக இருக்கின்றன என்பது மிகவும் ஐயத்திற் கிடமான எடுகோளாகும். இவ் வெடுகோளின் அடிப்படையிலேயே

சட்டசபை இயங்கி வருகின்றது என்பது தெளிவாகும். பெரிய தாயினும் சரி, சிறியதாயினும் சரி, பொதுவாக வளர்ந்து வரும் தலத்திற்குத் தல நிதி நெருக்கடி மிகக் கடுமையாக இருக்கும். நெரிசலின் சிக்கன இழப்புகளில், தலா செலவுகள் உயர்ந்து கொண்டு வருவதை, வளர்ந்துவரும் தலம் சமாளிக்க வேண்டி இருக்கின்றது. செலவுக்ள் உயர்ந்துகொண்டு வருவதற்கு மூலதன அமைப்புகள் விரைவாக விரிவடைந்துகொண்டு வருவதும் ஒரு காரணமாகும். அதே சமயம் இங்கு விவரிக்கப்பட்ட வாய்பாடு களின்படி, வளர்ந்து கொண்டு வரும் ஸ்தலத்திற்கு அளிக்கப்படும் தலா மாநில மானியங்கள் குறையும். இப் போக்கை எதிர்ப்பதற் காக விரைவாக வளரும் தலங்களுக்கு உதவி அளிப்பதற்காக மானிய செலுத்துகைகளின் பட்டியலை படுகிடை வீதத்தில் உயர்த் தினால், வளர்ச்சி அடையாத தலங்களுக்கு இம் மானியங்கள் ஒப்புமையில் மிகையாகின்றன. இதனால் மிகவும் முடைப்படும் வளர்ந்து வரும் நகரங்கள் ஒரு நியாயமான பணித்தரத்தைப் பராமரிக்க வேண்டும் என்றால், பிற நகரங்கள் ஒரு சரியான தல வரி முயற்சி செய்யாமலேயே அதே பணித்தரத்தைப் பராமரிப்பதற்கும் மாநில மானியங்கள் வகை செய்ததாகப் பொருள்படும். தற்கால நடப்பு நிலைமைகளை எட்டிப் பிடிப்பதில் ஏற்பட்ட ஓரளவு தோல்வியே, சிறிய தல அரசாங்கங்களின் நிதிப் பிரச்சினைகளைப் பற்றிச் சிறப்பாக அக்கறை கொள்வதற்குக் காரணமாகும். சட்ட சபைகளில் சிறிய நாட்டுப்புறச் சமுதாயங்களுக்கு மிகையாகப் பிரதிநிதித்துவம் கொடுக்கும் பாங்கு மிகவும் பரவலாகக் காணப் படுவதும் இதற்கு ஓரளவு காரணமாகும்.

சரியாக வாய்பாடுகள் நிறுவப்படும்பொழுது, மாநில உதவிக் கூடுதல் தேவைகளை மிகவும் துல்லியமாக முன்னரே கூறமுடியும். இம் முடைகளைச் சமாளிப்பதில் சிறு வரி வீதங்களைத் தொடர்ந்து உயர்த்துவதன் மூலமாகத் தம் பணிகளை ஆற்ற முடியாது என்பதை மாநிலங்கள் உணரும் காலம் வந்தே தீரும். மோட்டார் எரி பொருள்களின் மீதான வரி வீதங்கள், செயல் முறையில் மிக உச்ச அளவுக்கு அணித்தாக இருப்பதாகத் தோன்றுகின்றன. மோட்டார் எரிபொருள்களின்மீது கூட்டாட்சியின் வரிவீதங்களிலும் அண்மைக் காலத்தில் கணிசமான அளவு உயர்வு ஏற்பட்டிருக்கிறது. இதே பிரகாரம் வெறிநீர் பானங்கள், புகையிலைப் பொருள்கள் இவை மீதான வரிகளைப் பற்றியும் கூறலாம். மிகவும் பரவ லாகவும், தீவிரமாகவும் மக்களுக்கு மிகப் பிடித்தமான பண்டங் களின்மீது பிரத்தியேக ஆயத்தீர்வைகள் விதிக்கப்பட்டிருப்பதால் மேலும் இவ் வரிகளை விரிவு செய்வதற்கான வாய்ப்பு சிறிதே இருக் கின்றது.

எதிர்காலத்தில் மாநிலங்களுக்குக் கணிசமான அளவு வருவாயில் உயர்வு ஏற்பட வேண்டும். வருவாய் உயர்வுக்கு வகை செய்வதற்குப் பரந்த தளத்தை உடைய பெரிய வரிக்கருவிகளை மாநிலங்கள் பயன்படுத்த வேண்டும். இவ் வரிக் கருவிகள் சில்லறை விற்பனை வரிகளும், தனியாள் வருமான வரிகளும் ஆகும். இவை ஒவ்வொன்றுக்கும் ஒப்புமையில் சுமாரான வீதங்களிலேயே பெருத்த வருவாய்களைத் திரட்டுவதற்குப் போதிய அளவு பரவலான தளம் இருக்கின்றது. ஒவ்வொன்றின் தளமும் பொருளாதார நடவடிக்கையின் அடிப்படை அளவுகோலுடன் (மொத்தத் தேசீய உற்பத்தியும் அதன் மாற்றுருவங்களும்) நெருக்கமாகப் பின்னிப் பிணைக்கப் பெற்றிருக்கின்றன. இதனால் ஒவ்வொன்றின் தளமும் தானாகவே பொருளாதார வளர்ச்சிக்கு ஈடுகொடுக்கும். இவ்வாறு வரிப் பளுக்களை நியாயமாகவும், நேர்மையாகவும் பங்கீடு செய்வதும் சாத்தியமாகும்.

1958-ல் மூன்று மாநிலங்கள் இப் பெரிய வரித் திட்டங்களில் யாதொன்றையும் பயன்படுத்தவில்லை. அவ் வாண்டில் பத்தொன்பது மாநிலங்களில் பொதுவான தனியாள் வருமானவரி விதிக்கப்படவில்லை. பன்னிரண்டு மாநிலங்களில் இவ் வரிக்கு மிகச் சிறிய பங்கே தரப்பெற்றிருந்தது. இவ் வரியிலிருந்து அவை தங்கள் வரி வருவாய்களில் 10 சதவிகிதத்திற்கும் குறைவாகவே பெற்றன. 1958-ல் முப்பத்து மூன்று மாநிலங்கள் மட்டுமே பொது விற்பனை வரிகளையும், மொத்த வரவு வரிகளையும் விதித்தன. இருபத்தெட்டு மாநிலங்கள் இவ் வினத்திலிருந்து 25 சதவிகிதத்திற்கும் கூடுதலாகவே வரி வருவாய்களைத் திரட்டின. ஆனால், பதின்மூன்று மாநிலங்கள் மட்டுமே மூன்றில் ஒரு பங்கு வரி வருவாய்களை இவ் வினத்திலிருந்து திரட்டின.[20] பரவலான தளமுடைய வரியையும், இதுகாறும் விதிக்காத வரியையும் மேற்கொள்ளுவதற்கான வாய்ப்பு, பல மாநிலங்களுக்கும் இருக்கின்றது என்பது உண்மையாகும். பிற மாநிலங்கள் வீதங்களை உயர்த்துவதன் மூலமாகவோ, அல்லது ஏற்கனவே செயலில் இருக்கும் வரித் திட்டங்களின் தளத்தைப் பரவலாக்குவதன் மூலமாகவோ தங்கள் வருவாய்களைப் பெருக்கிக் கொள்ளலாம்.

சில புறனடைகளைத் தவிர்த்து மாநிலங்கள் தனியாள் வருமான வரிகளுக்குப் பெருத்த பங்கு அளிப்பதற்குத் தயங்குகின்றன. 1956-ல் பதினைந்து மாநிலங்களில் வருமானவரி, தலா ஒன்றுக்கு மிகக் கூடுதலாக இருந்தது. இவற்றில் 1957-ல் ஆறு மாநிலங்கள் மட்டுமே தனியாள் வருமானத்தின் பேரில் நேரிடையாக வரிவிதித்தன. ஒன்பது மாநிலங்கள் தனியாள் வருமான

வரியை விதிக்கவில்லை. இவ் வொன்பதில் ஒரு மாநிலம் பொதுக் கல்வியின்[21] நடப்புச் செலவுகளுக்காகத் தல சமுதாயங்களுக்கு மிகக் கூடுதலான அளவு உதவித் தொகை கொடுக்கிறது. பதினைந்து மாநிலங்கள் கல்விக்காகத் தல அரசாங்கங்களுக்கு மிகக் கூடுதலான அளவு உதவித் தொகைகள் அளிக்கின்றன. இவ் வரிசையில் ஒன்ருக இம் மாநிலமும் வைத்தெண்ணப்படுகிறது. ஆகையினல் உயர்ந்த வருமானம் உடைய மாநிலங்கள் தங்களுக்கு மிகவும் சாதகமாக இருக்கும் ஒரு வாய்ப்பைப் பொதுவாக நழுவவிடுவது நமக்கு நன்கு புலனுகின்றது. இந்தச் சாதகமான நிலையை அவைகள் ஏன் நன்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை என்று ஒருவர் வினவலாம்.

உயர்ந்த வருமானம் உடைய மாநிலங்கள் இச் சாதகமான நிலையை நன்கு பயன்படுத்திக் கொள்ளாததற்கான ஒரு பெரிய காரணம், கூட்டாட்சி பளுவான வருமானவரி வாயிலாகப் பெரும் பகுதியைப் பறித்துச் செல்வதை உணர்ந்ததே ஆகும். உயர்ந்த வளர்வீத வீதங்களை விதிப்பதன் வாயிலாகக் கூட்டாட்சி வருமான வரிவிதிப்பு வெளியை 'முன்னதாகவே ஒதுக்கிவிட்டது' (pre-empted) என்று கூறும் எடுகோளை இம் மாநிலங்கள் ஏற்றுக் கொள்ளுகின்றன. இந்தத் தவறுதலான எடுகோளிலிருந்து, வருமானத்தில் தனிப்பட்ட வாய்க்கால்கள் அல்லது தேக்கங்கள் இருக்கின்றன என்று கூறுவது போலும், இவற்றைத் தனியாக அணுகும் கருவிகளைப் பயன்படுத்தியே அடையவேண்டும் என்று கூறுவது போலும், தோன்றுகிறது. உண்மை என்னவென்ருல், எந்த வருவாய்த் திட்டத்தின் மூலமாகவும் வருமானத்தை எடுத்துக்கொள்ளலாம் என்ருல் அதை நேரிடையாக ஒரு தனியாள் வருமான வரி மூலமாகவே எடுத்துக்கொள்ளலாம். ஆனல், கூட்டாட்சி முன்னதாகவே ஒதுக்கி விடுகின்றது என்ற எடுகோள் பலரிடையேயும் பரவலாகக் காணப்படுகின்றது. இவ் வெடுகோளைப் பற்றி ஒரு சுவையூட்டும் உட்கிடையும் இருக்கின்றது. கூட்டாட்சி மாநிலங்களுக்கு மானியங்கள் அளிப்பதில் தொக்கியுள்ள கூட்டாட்சியின் 'வடிகாலுக்கு' (drain) உயர்ந்த வருமானம் உடைய மாநிலங்கள் எதிர்ப்புத் தெரிவிக்கின்றன. அவை கூட்டாட்சியின் வளர்வீத வருமானவரி மூலம், தலா ஒன்றுக்குக் கூடுதலான வருவாய்த் தொகைகள், உயர் வருமான மாநிலங்களிலிருந்து வசூலாகின்றன என்றும், அதே சமயம் குறைந்த வருமானம் உடைய மாநிலங்களுக்கே தலா ஒன்றுக்குக் கூடுதலாக மானியங்களைக் கூட்டாட்சி பங்கீடு செய்கின்றது என்றும் கூறுகின்றன. அவை கூறுவதும் சரியே. இந்த வடிகாலை வரையறைக்கு உட்படுத்துவதற்காகப் பணக்கார மாநிலங்கள், கூட்டாட்சி

மானியத் திட்டங்களை விஸ்தரிப்பதைத் தடை செய்ய முனைந்தன. ஆனால், இம் முயற்சி வெற்றிபெறவில்லை. கூட்டாட்சியின் வருமான வரித் தளத்திலிருந்து மாநில வரிகளைப் பிடித்தம் செய்து கொள்ளலாம். ஆதலால், இவ் வடிகாலைக் குறைப்பதற்கு மிகச் சிறந்த வழி மாநில நோக்கங்களுக்காக மாநில வரிகளை விதிப்பதே யாகும் என்பதை மாநிலங்கள் உணரத் தவறிவிட்டன. சிறப்பாக உயர்ந்த வருமானம் உடைய மாநிலங்களில் தனியாட்கள் உயர்ந்த கூட்டாட்சியின் வரி அடைப்புக்களில் அகப்படுவதால், கூட்டாட்சிக்கு இழப்பு ஏற்படும் வகையில் மாநிலத்திற்குள்ளேயே நிதிகளை வைத்திருப்பதற்கு இப் பிடித்தம் மிகவும் திறப்பாடான ஒரு கருவி யாகும். கூட்டாட்சியின் வரியிலிருந்து கிட்டத்தட்ட எல்லா மாநில வரிகளையும், தல வரிகளையும் பிடித்தம் செய்யலாம். இருந்தாலும் மொத்தமாகத் தொகை செலுத்துகைகளை அடக்கிய ஒரு மாநில வருமான வரியை, உண்மையில் வரிசெலுத்துவோர் பிடித்தம் செய்வது மிகவும் இயலுவதாகும்.

உயர்ந்த அளவு வளர்வீதமாக உள்ள கூட்டாட்சி வரியுடன் ஒரு மாநில வளர்வீத வருமான வரியையும் விதித்து, வளர்வீதத் தைத் தீவிரப்படுத்தக்கூடாது என்ற கருத்து, தனியாள் வருமான வரி விதிப்பை முன்னதாகவே கூட்டாட்சி ஒதுக்குகின்றது என்ற தற் புனைவுடன் தொடர்பு கொண்டது. கூட்டாட்சியின் வளர்வீத வருமான வரிக்கு ஈடுகட்ட மாநிலங்கள் தேய்வுவீத அல்லது வீதாச்சார வரிகளையே விதிக்க வேண்டும் என்ற கருத்தும் நிலவு கின்றது. மாநில வருமானவரி ஒரு குறிப்பிட்ட அளவு வளர்வீத மாக இருப்பது நல்லது. இது தவிர ஒரு மாநில வருமானவரி எத்துணை வளர்வீதமாக இருக்கலாம் என்று கண்டறிதலும் முக்கியமானது. ஈண்டு மீண்டும் நாம் கூட்டாட்சியின் தளத்தி லிருந்து மாநில வரியைப் பிடித்தம் செய்வதையும் சிந்திக்க வேண்டும். பதினாறும் அதிகாரத்தில் தரப்பட்ட கணக்கீடுகளில் சிலவற்றைத் திரும்பவும் எடுத்துகொண்டு, நாளை 1959ஆம் ஆண்டைய நியூயார்க் மாநில வருமான வரியைச் சார்பற்ற முறையிலும், கூட்டாட்சியின் தளத்திலிருந்து மாநில வரியைப் பிடித்த பின்பும் பார்த்தால் நாம் கீழ்க்கண்ட புள்ளித் தொகைகளைப் பெறுகின்றோம். குழந்தைகள் இல்லாத ஒரு மணமான தம்பதிகளை நாம் உதாரணமாக எடுத்துக்கொண் டோம்.[22] இவ் வட்டவணையில் உள்ள இரண்டாவது வரிசை, கூட் டாட்சியின் தளத்திலிருந்து மாநில வரிகளைப் பிடித்தம் செய் வதை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளாவிடில், பல்வேறுபட்ட வருமானங்களின் மீதான மாநில வரியின் திறப்பாட்டு விகிதத்

| சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானம் (டாலரில்) | மாநில வரிவீதங்களின் சராசரி a பிடித்தத்தைப் புறக்கணித்துவிட்டு (%) | கூட்டாட்சியின் வரியைச் செலுத்தியபின்பு சரிக்கட்டப் பட்ட மொத்த வருமானத்தில் % ஆக மாநில வரியின் நிகர பளு |
|---|---|---|
| 1,000 | ·0 | ·0 |
| 3,000 | 1·17 | ·3 |
| 5,000 | 1·84 | 1·24 |
| 10,000 | 3·08 | 2·64 |
| 15,000 | 4·42 | 3·54 |
| 25,000 | 5·97 | 4·76 |
| 50,000 | 7·48 | 4·90 |
| 100,000 | 8·24 | 4·64 |
| 500,000 | 8·65 | 2·80 |
| 1,000,000 | 8·92 | 3·45 |

a 1,200 டாலர் வரையில் தனியாள் விலக்குடனும், சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானத்தில் 10 சதவிகிதப் பிடித்தங்களுடனும்.

தைக் காட்டுகின்றது. இவ் வரிசையில், சட்டசபை உறுப்பினர்கள் எண்ணியாங்கு, வரி மிதமாகவே வளர்வீதமாக இருப்பதாகத் தோன்றுகிறது. பிடித்தம் செய்யாமல் இருந்தால்கூட மொத்த வரி அமைப்பின் வளர்வீத அளவிற்கு மாநில வரியால் சிறிதே அதிகரிப்பு ஏற்பட்டது என்பது தெளிவு. ஆனல், கூட்டாட்சித் தளத்திலிருந்து இவ் வரியைப் பிடித்தம் செய்த பிறகு, மூன்ருவது வரிசையில் காட்டியாங்கு மாநில வருமான வரியினல் ஏற்படும் நிகரக் குறைப்பு (bite) மிகவும் மிதமாகவே இருக்கின்றது. உண்மையில், மாநில வரியைத் தனித்துப் பார்க்கும்பொழுது தொடர்ந்து (மிதமாக இருந்தாலும்) வளர்விதமாகவே இருக்கின்றது. பிடித்தம் செய்த பின்பு சிறிது காலம் மிகவும் மிதமாக வளர்வீதமாகவும், பெருத்த வருமானங்களைப் பொறுத்தவரை மாநில வரி, தேய்வு வீதமாகவும் ஆகின்றது. இதை இவ் வரியை வகுத்தவர்கள் கருதவே இல்லை என்பது தெளிவு.

ஆனல், கூட்டாட்சித் தளத்தினின்று தலைகீழாக மாநில வரியைப் பிடித்தம் செய்ததற்கு மேலும், மாநில வரித் தளத்திலிருந்து கூட்டாட்சியின் வருமான வரியையும் பிடித்தம் செய்து கொள்ளும்படிச் சில மாநிலங்கள் அனுமதிக்கின்றன. இதை 'பரஸ்பரம் பிடித்தம் செய்து கொள்ளுதல்' (mutual deductibility)

என்று குறிப்பிடலாம். இதனுல் மூன்ரும் வரிசையில் காட்டப்பட்ட விளைவு வலியுறுத்தப் பெறுகின்றது. எடுத்துக் காட்டாக மின்னிசோட்டா மாநில வருமானவரியின்கீழ் 1959-ல் கூட்டாட்சியின் வரியைச் செலுத்திய பின்பு எஞ்சியுள்ள வருமானத்தின் ஒரு சதவிகிதமாக வெளியிட்டால், பிடித்தத்திற்குப் பிறகு ஒரு மண மான தம்பதிகளின் மீதான நிகரபளு கீழ்வருமாறு இருக்கும். இவ்வரி பரஸ்பரம் பிடித்தம் செய்வதற்கு வகை செய்கின்றது.

| சரிக்கட்டப்பட்ட மொத்த வருமானம் (டாலரில்) | பரஸ்பரம் பிடித்தம் செய்ததற்குப் பின்பு மாநில வரியின் நிகரப் பளு |
|---|---|
| 1,000 | ·0 |
| 3,000 | ·80 |
| 5,000 | 1·70 |
| 10,000 | 3·16 |
| 15,000 | 3·80 |
| 25,000 | 4·15 |
| 50,000 | 3·59 |
| 100,000 | 2·68 |
| 500,000 | ·70 |
| 1,000,000 | ·63 |

நியூயார்க் வரிகளுக்கும் மின்னிஸோட்டா வரிகளுக்கும் இடையே வீத அமைப்புகளில் மிகச் சிறிய வேறுபாடுகள் இருந்தாலும், இவ் வட்டவணையில் உள்ள இரண்டாவது வரிசையை முந்திய அட்டவணையில் உள்ள மூன்ருவது வரிசையுடன் ஒப்பிடுவதில் ஆபத்து ஒன்றும் இல்லை. மின்னிஸோட்டா மாநிலம் விதித்த வரியில் நிகர பளுவைப் பற்றிய வளைகோட்டில் மிகவும் துருத்திக் கொண்டிருக்கும் திமில் ஒன்று இருக்கின்றது. 3000 டாலர் வருமானம் பெறுவோரின் மீதுள்ள மாநில வரியைக் காட்டிலும், 1,000,000 டாலர் வருமானம் பெறுவோர்மீது கூடுதலாக விதிக்கப்படும் மாநில வரி உண்மையில் தலா டாலருக்கு சற்றுக் குறைவாகவே இருக்கின்றது. ஆயினும், மிகக் குறைந்த அடைப்புகளிலும், இடைநிலை அடைப்புகளிலும், பிடித்தத்திற்குப் பின்பு மாநில வருமான வரியின் மொத்த விளைவு மிகவும் மிதமான வளர் வீதமாகவும், அடுத்து உயர்ந்த அடைப்புகளில் தேய்வு வீதமாகவும் இருந்தாலும், இதனுல் கூட்டாட்சியின் வருவாய்களுக்கே முக்கியமாகக் குந்தகம் ஏற்படுகின்றதே தவிர, மாநில வருவாய்களுக்கு அன்று.[23] இக் காரணத்தினுலேயே ஒரு கூடுதலான வருமானம் உடைய மாநிலம் ஒரு வருமான வரியை விதிப்பது, கூட்டாட்சி மாநில முறையில் இயல்பாக உள்ள 'வடிகாலு'க்கு

எதிர் நீச்சல் அடிப்பதற்குத் துணை செய்கின்றது. ஆனால், இதற்கு அப்பாலும், மாநில வருமான வரிகளுக்கான எதிர்ப்புப் பெரும் பாலும் மாநில வருமான வரிச் சட்டங்களில் உள்ள மூல (raw) வீதங்கள் பட்டியலை நோக்கும் போக்கினின்று எழுகின்றதே ஒழிய, பிடித்தம் செய்ததன் பின்பு ஏற்படும் இறுதி விளைவுகளைப் பார்ப்பதினின்றும் எழவில்லை.

ஒரு மிகவும் வளர்வீதமான கூட்டாட்சியின் வரியுடன் ஒரு வளர்வீத மாநில வருமான வரியையும் அடுக்குவது அநீதியாகும் என்ற கருத்தைத் தளமாகக்கொண்டு வளர்வீத மாநில வருமான வரிகளைப் பயன்படுத்துவதற்கு எதிரிடை வாதம் ஒரு வழக் காருகவே இருந்து வருகின்றது. ஆனால், பிடித்தம் செய்வதை ஒப்புக்கொண்ட பிறகு, மாநில வருமான வரி, மாநில விற்பனை வரியினின்றும் மிகவும் வேறுபட்டு வரிப் பளுக்களைப் பங்கீடு செய்கின்றது என்று கூறுவது முற்றும் ஐயத்திற்கு இடமானது. ஒரு விற்பனை வரி தேய்வு வீதமாக இருக்கின்றதென்றும் பொதுவாகக் கருதுகின்றோம். இத் தேய்வு வீதம் இயல்பாகவே பொதுமக்களின் நுகர்வுப் பழக்கங்களையும், விற்பனை வரி விலக்குகளின் பட்டியலை யும் பொறுத்து இருக்கின்றது. உணவுக்கு விற்பனை வரியில் இருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்குமானால், குறைந்த பட்சம் மிகக் குறைந்த வருமானங்களுக்கு மேற்பட்டாவது விற்பனை வரி வீதா சாரமாகவோ அல்லது உயர்ந்த இடை வருமானங்கள்வரை மிக மட்டான வளர்வீதமாகவோ இருக்கின்றது. இதன் பிறகு விற்பனை வரி தேய்வு வீதமாக இருக்கின்றது.[24] உணவுக்கு விதிவிலக்கு அளிக்காவிட்டாலும் வருமான அளவுகோலின் மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களின்மீது விற்பனை வரி மிகவும் தேய்வு வீதமாக இருக்கின்றது. பணிகள் உயர்ந்த வருமானங்களின் பெருத்த செலவினங்களாக இருப்பதால், உணவின்மீது வரி விதித்தாலும் சரி, விதிக்காவிட்டாலும் சரி, உயர்ந்த வருமான மட்டங்களைப் பொறுத்த அளவில் வரி தேய்வு வீதமாக ஆகின்றது. விற்பனை வரிகளிலிருந்து பணிகளுக்குப் பொதுவாக விலக்கு உண்டு. விற்பனை வரிகளின்கீழ் பளுக்களின் பங்கீட்டைப் பற்றிய இம் முடிவுகளை ஒப்புக்கொண்டு தனியாள் வருமான வரியின்கீழ் பிடித்தங்கள் செய்த பின்பு இறுதிப் பங்கீடுகளை நாம் பார்த்தால், நியாய அடிப் படையில் விற்பனை வரியைக் காட்டிலும் வருமான வரிக்கான மிகு விருப்பம் பெரிதும் மறைந்து ஒழிகிறது. ஆயினும், மிகச் சிறிய வருமானங்களின்மீது வளர்வீத வருமான வரியைக் காட்டிலும் விற்பனை வரி மிகவும் பளுவாக இருக்கின்றது என்பது தெளிவாகும். ஏனெனில், சிறிய வருமானம் பெறுபவர்களுக்கு வருமான வரியி லிருந்து விலக்கு உண்டு, அல்லது விலக்கு அளிக்கலாம். வீதங்களை

மிகவும் வளர்வீதம் ஆக்குவதன் மூலமாகவும், பிடித்தம் செய்வதை அகற்றுவதன் மூலமாகவும், இப்பொழுது மாநிலங்களில் இருப்பதைக் காட்டிலும் மாநில வருமான வரியை மிகவும் வளர்வீதமாக ஆக்கலாம்.[25]

கூட்டாட்சி, மாநில அரசாங்க வருமான வரி வீதங்கள் இரண்டையும் சேர்த்துப் பார்த்தால் பயன் என்ன விளையும் என்று எதார்த்தமான (எளிய) கருத்தைப் பொது மக்கள் கொள்ளும் வரையில் மாநில வரிகளின் சட்டபூர்வமான வீதங்களில் கணிசமான உயர்வு ஏற்படுவதற்கான சாத்தியக் கூறுகள் முற்றும் வரம்புக்கு உட்பட்டதே. இவ் வெளிய கருத்தின்படி இரண்டு வரிகளையும் சேர்த்ததனால் நேரும் 'இழப்பு' (bite) அவற்றின் இறுதி நிலை வீதங்களைத் தனி நிலையில் கூட்டியதாகும். நூறு சதவிகிதத்திற்கும் மிகையான இறுதிநிலை வீதங்களின் கூட்டை நாம் சிந்திக்கவும் முடியாது. கூட்டாட்சியின் உச்ச இறுதிநிலை வீதம் 91 சதவிகிதமாக இருக்கும்பொழுதுகூட, உச்ச மாநில வீதத்தை 9 சதவிகிதமாகவோ அதற்கும் சற்றுக் குறைவாகவோ மட்டுப்படுத்தும் நாட்டம் இருக்கின்றது.[26] ஒரு மாநிலம் 9 சதவிகித உச்ச பட்ச வீதத்தைப் பயன்படுத்துகின்றது எனவும், ஒருவருடைய சாதாரண வருமானம் 400,000 (கூட்டு வரி விவர அறிக்கைக்கு) டாலருக்கு மிகையாக இருக்கின்றது எனவும் வைத்துக்கொள்வோம். கூட்டாட்சி வருமான வரியையும் மாநில வருமான வரியையும் சேர்த்து மொத்த வரி வீதம் நூறு சதவிகிதமாகத் தோற்றத்தில் காட்சி அளித்தாலும் உண்மையில் வரியின் மொத்த வீதம் 91·81 சத விகிதமே ஆகும். மாநில வரி நோக்கங்களுக்காக இவ்வாறான வருமானத்தின் இறுதி நிலை டாலரிலிருந்து கூட்டாட்சியின் வரியாக ·91 டாலரைப் பிடித்தம் செய்யும் பொழுது, எஞ்சியுள்ள ·09 டாலருக்கும் மாநில வீதமான 9 சத வீதம் பிரயோகிக்கப்படுவதால், மாநில வரி ·0081 டாலராகும். இவ்வாறாக அந்த வருமானத்தின் இறுதி நிலை டாலரில் கூட்டாட்சியின் வரியும், மாநில வரியும் சேர்ந்து, ·9181 டாலராகும். உச்ச மாநில வீதம் 50 சதவிகிதமாக இருக்குமேயானால், ஒரு மிகக் கூடுதலான வருமானத்தின் இறுதி நிலை டாலர்கள்மீது இரண்டும் சேர்ந்து 141 சதவிகிதமாக மொத்த வரிவீதம் தோற்றம் அளிக்கிறது. ஆனால், இது உண்மையில் 95·5 சத விகிதமே ஆகும்.[27] பிடித்தம் செய்வதன் விளைவுகளைப் புரிந்துகொள்ளும் வரையில், மாநில வருமான வரி விதிப்பில் கணிசமான அளவுக்கு நிகர வளர்வீதம் ஏற்படும் வகையில், வீதங்களைத் திருத்துவது அரசியல் ரீதியாக நடவாது என்று தோன்றுகின்றது.

ஓரளவு போட்டி விளைவுகளின் அச்சத்திஞல் வரிவீத உயர்வு களுக்கான முடைக்கு இணங்க நடப்பதில் மாநிலங்கள் சிறிது தயக்கம் காண்பிக்கின்றன. இனம் சுட்டும் மாநிலம், ஒரு இயற்கை யான அல்லது இணைக்கப்பட்ட பொருளாதார அலகன்று. வரி விதிப்பிஞல் தொழில், மக்கள் தொகை ஆகியவை புடைபெயரும் சாத்தியக்கூற்றையும் ஒரு மாநிலம் சமாளிக்கவேண்டும். மாநிலங் கள் இவ் வுண்மையை மிகவும் உணர்ந்தே இருக்கின்றன. இதஞல், ஓரிடத்தில் தொழில்களைச் செறித்தற்கு வரி அமைப்புதான் ஒரு வலுவான காரணி என்று கூறுவதாக ஆகாது. இடத்தொழில் செறிவில் வரி அமைப்புக்கும் முக்கியமான செல்வாக்கு இருக் கின்றது என்று எண்ணுவதே போதியதாகும். நியூயார்க் மா நகரத்தில், ஒப்புமையில் கூடுதலான வருமானங்களை ஈட்டுபவர் களைத் தங்கள் மாநிலங்களில் குடியிருப்பவர்களாகவாவது குறைந்த பட்சம் ஈர்க்கவேண்டும் என்ற விருப்பத்திஞலேயே நியூஜெர்ஸி, கனக்டிக்கட் மாநிலங்கள் தனியாள் வருமானங்களின்மீது வரி விதிக்க மறுப்பதற்கு ஓரளவு காரணமாகும். ஆஞல், நியூயார்க்கைப் போன்று இம் மாநிலங்களும் வருமான வரிகளை விதித்திருந்தால்கூட இக் குடியிருப்புக்காரர்கள் வேறெவ்விடத்தில் தொழிற் செறிவு செய்திருக்க முடியும் என்று நமக்குத் தெரியவில்லை. ஒரு வருமான வரியை விதிப்பதஞல் இம் மாநிலங்களிலிருந்து கணிசமான அளவு தொழிலும் மக்கள் தொகையும் வெளியேறும் என்பதும் பெரும் பாலும் நிகழக் கூடியதன்று. அவர்கள் எங்கே போவார்கள்? கொலம்பியா மாவட்டப் பகுதியிலும் இதைப் போன்ற ஒரு புவி யியல் நிலையும், மக்கள் தொகை நிலையும் காணப்படுகின்றன. கொலம்பியா மாவட்டத்தைப் போன்று மேரிலந்து, வர்ஜீனியா மாநிலங்களும் வருமான வரிகளை விதிக்கின்றன.

பரந்த தளமுள்ள மாநில வரிகள் விற்பனை வரியும் தனியாள் வருமான வரியும். இவற்றில் ஒன்றேனும் வாணிபம், தொழில் இவற்றின் இலாபத் தன்மையை நேரிடையாகப் பாதிக்கவில்லை. அதாவது, இவை ஆட்கள்மீது விதிக்கப்பட்ட வரிகளே ஒழிய தொழிற்றுணிவுகள்மீது விதிக்கப்பட்ட வரிகள் அல்ல. ஆகையால், அவ் வரிகள் தொழில் செய்வதன் செலவுகளைப் பிரதிபலிக்கவில்லை. தொழில் நிறுவனங்களின் இடச் செறிவை முடிவு செய்பவர்களிடம் வரியைச் செலுத்திய பின்பு எஞ்சியுள்ள தனியாள் வருமானங்களை ஒரு மாநில வருமான வரி விதிப்பு பாதிப்பதால், தொழில் இடச் செறிவில் மாநில வருமான வரியும் ஓர் காரணி என்று கூறுகின் ருர்கள். இக் கருத்துச் சரியெனப் படவில்லை. ஏனெனில், தொழில் இடச்செறிவு பற்றிய முடிவுகளைப் பாதிக்கும் காரணங்களின் பட்டியலில் தனியாள் வருமான வரி மிகவும் கீழேயே இருக்க

வேண்டும். நிருவாகிகளுக்குப் பிரயோகிக்கும் வரி விதிப்பின் வடிவத்தைக் காட்டிலும், மார்க்கட்டுகள், மூலப் பொருள்கள் அல்லது சக்தி, திறமையான போக்குவரத்து, வேண்டிய தரமும் கணியமும் உள்ள தொழிலாளர்கள், சிலவகைப் பொறிவழி ஆக்கங்களுக்குத் தண்ணீர் போன்ற வகை வளங்கள், ஒரு நல்ல வாணிபச் சூழ்நிலையை உருவாக்குவதற்கு ஓரளவு மட்டுமுள்ள பொதுப் பணிகள், இவையே தொழில் இடச்செறிவில் மிகவும் செல்வாக்குப் படைத்தவை என்பது நிரூபணம் ஆகிவிட்டது. உண்மையில், மாநில, தலப் பணிகளை செய்யாது இருப்பதா அல்லது மாநில வருமான (அல்லது விற்பனை) வரிகளை உயர்த்தாமல் அல்லது விதிக்காமல் இருப்பதா என்று முடிவு செய்யவேண்டும் என்றால், பிந்தியதைவிட முந்தியதாலேயே தொழிலுக்கு ஊக்கமின்மை ஏற்படும். மாநிலம் விதிக்கும் தனியார் வரிவிதிப்பின் மட்டத்தைக் காட்டிலும் தொழிலாளர்கள் சுளுவாக வேலைக்கு வருவதற்கு ஏற்ற நல்ல நெடுஞ்சாலைகளும், நல்ல பள்ளிகளும் பொழுதுபோக்கு வசதிகளும், மருத்துவக் கூடங்களும் இவைபோன்றனவும் தொழில் இடச் செறிவில் மிகவும் முக்கியமானவை.[28]

வருமான வரி வீதங்களின் உயர்வைக் காட்டிலும், போட்டி போட்டுக்கொண்டு, விற்பனை வரி வீதங்களைப் பெரும் அளவில் உயர்த்துவதன் விளைவுகள் எதிர்காலத்தில் மிகவும் முக்கியமானதாக இருக்கும். மோட்டார் கார்கள் போன்ற பிரத்தியேக எடுத்துக் காட்டுகளைத் தவிர்த்து, உபயோக வரிகளை மிகத் திறப்பாடாக ஆட்சி செய்ய முடியாது. ஆகையால், ஒரு குறிப்பிட்ட மாநிலத்தில் விற்பனை வரி வீதங்களில் உயர்வு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். இதனால் அம் மாநிலத்திலுள்ள விற்பனையாளர்கள், அடுத்த மாநிலத்திலுள்ள விற்பனையாளர்களைக் காட்டிலும் பிரதிகூலத்தை அடைவார்கள். ஆயினும், விற்பனை வரியில் உள்ள வேறுபாட்டை இன்னொரு மாநிலத்தில் சென்று வாங்கும் செலவுகளும், போக்குவரத்துச் செலவுகளும் ஈடுசெய்ய இயலாத எல்லைப்புறப் பகுதிகளுக்கே இந்தப் போட்டிப் பிரதிகூலம் பிரயோகமாகும். ஆகவே, இதன் விளைவு ஓரளவு எளிதில் கண்டு பிடிக்கக் கூடியதாக இருக்கின்றது. மக்கள் தொகை நெரிசல் சில சமயம் மாநில எல்லைகளைக் கடந்தும் இருக்கலாம். அப்பொழுது இப் பகுதிகளில், பிற பகுதிகளில் இருப்பதைக் காட்டிலும், போட்டியினால் ஏற்பட்ட பிரதிகூலம் மிகவும் முக்கியமானதாக இருக்கின்றது.[29] இந்தப் போட்டிப் பிரதிகூலத்திற்கு உள்ளான X மாநிலம், தன்னுடைய விற்பனை வரி வீதத்தை உயர்த்துவதன் மூலம், இப் பிளவை அதிகரிக்கத் தயங்கலாம். ஆனால், இதுவரை விற்பனை வரி விதிக்காத Y மாநிலம், இவ்வாறு ஒரு விற்பனை வரியை

விதிப்பதன் மூலம், பிளவைக் குறைக்க முயல்வது பயன்தரும். இதனால், ஒரு பல் சக்கரத்தின் விளைவு (ratchet effect) ஏற்படலாம். இதனால், எந்த மாநிலத்திற்கும் போட்டியினால் கடுமையான தீய விளைவுகள் ஏற்படாததுமன்றி, இரு மாநிலங்களும் தங்கள் வருவாய்களை உயர்த்திக்கொள்ளலாம்.

4. **கூட்டாட்சியின் உதவி :** இதுகாறும் நாம் மாநில, தல அரசாங்கங்கள் நிதி 'நெருக்கடி'க்குத் தாங்களாகவே என்ன தீர்வுகள் காணக்கூடும் என்பதைப் பரிசீலித்தோம். கூட்டாட்சியிலிருந்து இவ் வரசாங்கங்கள் (மாநில, தல) வருவாய் உதவிபெறும் சாத்தியக்கூறும் இருக்கிறது. இவ் வுதவிகள் மானியங்கள் வாயிலாகக் கிடைக்கும். எல்லா மாநிலங்களும் இவ் யோசனையை வரவேற்கின்றன. ஆயினும், இந்த யோசனைக்குச் சிறப்பாகக் குறைந்த வருமானம் உடைய மாநிலங்களில் பெருத்த அளவு ஆதரவு இருக்கின்றது. கூட்டாட்சியிடமிருந்து இம் மாநிலங்கள் பெறும் மானிய உதவிகளைக் காட்டிலும், அவை வரியாகக் கூட்டாட்சிக்குச் செலுத்தும் அளிப்புகள் குறைவாகவே இருக்கும். ஆனால், பகுத்தறிவுக் கண்கொண்டு இதைப் பார்த்தால், மேலான கூட்டாட்சியின் வரிமுறை வாயிலாகத் திரட்டிய நிதிகளைக்கொண்டு, இத் திட்டங்களை மாநில, தல மட்டங்களில் நிறைவேற்றலாம். பொதுவாக மாநில, தல வரிமுறைகள் தேய்வு வீதமாகவும், கூட்டாட்சியின் வரிமுறை வளர் வீதமாகவும் இருப்பதால், ஒப்புமையில் மேலான கூட்டாட்சியின் வரிமுறை மூலம் நிதிகளைத் திரட்டுவதற்குப் பல காரணங்களைக் கூறலாம். கூட்டாட்சி மாநிலங்களுக்குக் கூடுதலாக உதவித் தொகைகள் அளிப்பதைப் பலர் எதிர்க்கிறார்கள். இவர்கள் பல திறப்படுவர். கூட்டாட்சியின் வரிமுறையில் தாங்கள் மிகவும் பளுவான வரிகளைச் செலுத்தவேண்டியிருக்கும் என்று எண்ணுபவர்களும், கூட்டாட்சி கூடுதலாக மாநிலங்களுக்கு நிதிகளை அளித்தால், அவற்றை மாநிலங்கள் உபயோகிப்பதை அளவுக்கு மீறி கட்டுப்பாடு செய்ய நேரிடும் என்று அஞ்சுகின்றவர்களும், ஏற்கனவேயே கூட்டாட்சியின் பட்ஜட்டுகள் அளவில் மிகப் பெரியதாக இருக்கின்றன என்றும், கூட்டாட்சியின் வரிகளும் மிகவும் கூடுதலாக இருக்கின்றன என்றும் எண்ணுபவர்களும் இதில் அடங்குவார்கள். மாநில, தல அரசாங்கங்களிலிருந்து ஒரு புதிய திட்டத்திற்கு உதவி பெறுவதைக் காட்டிலும், கூட்டாட்சியிடமிருந்து கணிசமான அளவு நிதிகளைப் பெறுதல் எளிது என்று நினைப்பதில், இரு சாராரும் ஒருமித்த கருத்து உடையவர்களாக இருக்கின்றார்கள்.

1950-லிருந்து 1960 வரையுள்ள பத்தாண்டுகளில், மாநில, தல அரசாங்கங்களுக்குக் கூட்டாட்சியினிடமிருந்து கிடைத்த உதவி, கூட்டாட்சியின் மொத்த பட்ஜெட் செலவுகளில் சுமார் 5 சதவிகிதமாகவே தொடர்ந்து இருந்து வந்திருக்கின்றது. ஆயினும், இத் தொகை 1950ல் 2·3 பில்லியன் டாலரிலிருந்து 1960-ல் (மதிப்பீடு செய்யப்பட்ட) 4·1 பில்லியன் டாலராக உயர்ந்து இருக்கின்றது. அதாவது இந்தப் பத்து ஆண்டுகளில், கூட்டாட்சியின் உதவி கிட்டத்தட்ட இரட்டிப்பு ஆகியிருக்கின்றது. ஆனால் இதுவும் கூட முழு விவரத்தையும் தரவில்லை. ஏனெனில், 1950 ஆம் ஆண்டைய பட்ஜெட் செலவுககளில், கூட்டாட்சி நெடுஞ் சாலை மானியங்களாக அளித்த ·5 பில்லியன் டாலரும் அடங்கி யிருந்தது. ஆனால், இதே நோக்கத்திற்காக அளிக்கப்பட்ட 3·0 பில்லியன் டாலர் மானியங்கள் பட்ஜெட் செலவுகளாகச் சேர்க்கப் பெறாது, டிரஸ்டு நிதிச் செலவுகளாகச் சேர்க்கப்பெற்றன. கூட் டாட்சி, மாநில, தல அரசாங்கங்களுக்கு, பட்ஜட் கணக்கிலும், டிரஸ்டு நிதிக் கணக்கிலும் அளித்த உதவி மானியங்கள் 1950-ல் 2·2 பில்லியன் டாலராகவும், 1960-ல் 6·9 பில்லியன் டால ராகவும் (மதிப்பீடு) இருந்தது.[30] இது ஒரு பெரிய அதிகரிப்பே. ஆனால் இவ் வுதவி மாநில, தல பட்ஜட்டுகளுக்கு எத்துணை நிவாரணம் அளிப்பதாய் இருக்கின்றது என்பதே வினவாகும். கூட்டாட்சியின் உதவியின்றித் தற்போதைய அளவின்படி மாநிலங்கள் இப் பணிகளை மேற்கொண்டிருக்குமா என்பதைப் பொறுத்தே இவ் வினவின் விடை இருக்கின்றது. 1952 தொடங்கிய பத்தாண்டுகளில் எவ்வெவ் வகைகளில் மாநில அரசாங்கங்களுக்கும், தல அரசாங்கங்களுக்கும் கூட்டாட்சி அளித்த மானியங்களில் பெருத்த உயர்வுகள் ஏற்பட்டிருக்கின்றன என் பதைக் குறிப்பிடுவது அறிவு ஊட்டுவதாகும். இவை யாவும் 38ஆம் அட்டவணையில் காண்பிக்கப்பட்டிருக்கின்றன.

இவ் விரண்டு ஆண்டுகளுக்கும் இடையே நெடுஞ்சாலை அமைப் பதற்காகத் தரப்பட்ட மானியங்களில் சுமார் 55 சதவிகித உயர்வு ஏற்பட்டது. 1956-ல் நாடு முழுமைக்கும் இணைக்கப்பட்ட மேனிலை நெடுஞ்சாலைகள் (nation-wide system of integrated super highways) அமைப்பதற்கான திட்டம் தொடங்கியது. இத் திட்டத்திற்காகவே சிறப்பாக இத் தொகை கூடுதலாகத் தரப் பட்டது. இந் நெடுஞ்சாலைகளை அமைப்பதற்கான செலவில் கூட்டாட்சியின் பங்கு 90 சதவிகிதமாக உயர்த்தப் பெற்றது. இவ் வுயர்வினால் மாநிலங்களின் நெடுஞ்சாலைகள் பட்ஜெட்டுகளுக்கு எத்துணை நிவாரணம் கிடைத்தது? நிகழ் திறமாக ஏற்பட்ட நிவாரணம் மிகவும் குறைவுதான். ஏனெனில் (1) இத் திடீர்த்

## அட்டவணை 38

**கூட்டாட்சியின் மானியங்கள், 1950, 1960* (நோக்க வாரியாக)**

| மானியத்தின் நோக்கம் | 1950-ல் செலவான தொகை (மில்லியன் டாலரில்) | 1960 மதிப்பீடுகள் (மில்லியன் டாலரில்) |
|---|---|---|
| நெடுஞ்சாலைகள் | 406 | 3,015 |
| பொது உதவி (Public Assistance) | 1,123 | 2,018 |
| வேலைப்பணி (Employment Service) | 208 | 316 |
| பள்ளி இடைவேளை உணவு | 83 | 228 |
| வீடுகட்டுவதும், நகர்ப்புறத்தைப் புதுப்பிப்பதும் | 9 | 220 |
| பிரத்தியேகமான பள்ளி உதவி | 39 | 130 |
| மருத்துவக் கூடங்கள் கட்டுதல் | 56 | 128 |
| ஏனையவை | 302 | 797 |
| மொத்தம் | 2,226 | 6,852 |

* அதே நூல்

திட்டம் இன்றேல் இந் நெடுஞ்சாலைகளை மாநிலங்கள் பலவும் சற்று மெதுவாகவே அமைத்திருக்கும். (2) மோட்டார் ஊர்தி வரிகளை உயர்த்தி, அதிலிருந்து கிடைக்கும் தொகையில் கூடுதலான பங்கைக் கூட்டாட்சி, மாநிலங்களுக்குச் செலுத்துகின்றது. இங்ஙனம் கூட்டாட்சி செய்யாவிடில் இவ் வரிகளினின்று கிடைக்கும் வருவாய் மாநிலங்களுக்குக் கிடைத்திருக்கும். 1956ஆம் ஆண்டைய சட்டத்தின்கீழ் மிக விரைவாகவே தேசீய நெடுஞ் சாலைகள் அபிவிருத்தி அடைந்திருக்கும். ஆனால், இதனால் நெடுங் காலத்தில் மாநில நெடுஞ்சாலைப் பட்ஜட்டுகளுக்குக் கிடைக்கக் கூடிய நிவாரணம் சிறிதாகவே இருக்கும்.

கூட்டாட்சியின் மானியங்களின் மொத்த உயர்வில் மேலும் 20 சதவிகிதம் பொது உதவிக்குச் செல்லுகின்றது. இம் மானியங்கள் ஆட்சிக்காகவும், OASI ஆதாயங்களைப் பெறத் தகுதியற்ற வறிஞரான முதியோர்களுக்கு ஆதாயங்களைத் தருவதற்காகவும், சார்ந்திருக்கின்ற குழந்தைகள், குருடர்கள், ஆற்றல் இழந்தவர்கள் இவர்களுக்காகவும் கொடுக்கப்படுகின்றன. இம் மானியங்களை உயர்த்தி இருக்காவிடில், மாநிலங்களின் பொதுநிதிகளின்மீது மிகுந்த பளு விழுந்திருக்கும். ஏனெனில், இவ்வாறான திட்டங்

களைக் கணிசமான அளவு வெட்டுவது சங்கடமாக இருக்கும். ஆயினும், இவ் வேறுபாடு அனைத்தையும் மாநிலங்களே சரிக்கட்டி இருக்கும் என்றும் கூறுவதற்கில்லை. ஏனெனில் பல மாநிலங்கள் ஆதாயங்களைப் பெறுவதற்கான தகுதிகளைக் கடுமையானதாக ஆக்கியிருக்கும்; அல்லது பெறப்படுகின்ற ஆதாயங்களின் மட்டத்தைக் குறைத்திருக்கும்; அல்லது பளுவின் ஒரு பகுதியைத் தல நிவாரண ஏஜன்ஸிகளின்மீது தள்ளி இருக்கும். இங்ஙனம் இருந்தும், கூட்டாட்சியின் மானியங்களில் உயர்வு இல்லையேல், மாநில பட்ஜெட்டுகளும் தல பட்ஜட்டுகளும் ஓரளவு இவ் வேறுபாட்டின் பகுதியைத் தாங்கவேண்டி இருந்திருக்கும் என்பது நிகழ் திறமாகத் தோன்றுகிறது.

பொதுவாக, வேறு சில நோக்கங்களுக்காகவும், கூட்டாட்சி மாநிலங்களுக்குத் தரும் மானியங்களை உயர்த்தி இருக்கின்றது. கூட்டாட்சியிடமிருந்து இம் மானியங்கள் கிடைக்காவிட்டால், மாநிலங்கள், தாம் இந் நோக்கங்களுக்காகச் செலவழிப்பதைக் குறைத்திருக்கும்.[31] பல இடங்களில் மாநிலங்கள் புதிய பணிகளை மேற்கொள்ளுவதற்கும், அல்லது தாம் ஏற்கனவே ஆற்றிவரும் பணிகளை விரிவடையச் செய்வதற்கும், இம் மானியங்கள் அளிக்கப் பெறுகின்றன. இம் மொத்தச் செலவில் கூட்டாட்சியின் பங்கு வேறுபடுகின்றது. மானியங்களின் நோக்கங்களும் (38ஆம் அட்டவணையில் 'ஏனையவை' என்ற தலைப்பில் சேர்க்கப்பட்டவை) மிகவும் வேறுபடுகின்றன. மானியங்களில் பல சுகாதாரத்தின் கூறுபாடுகளுக்கும், சிறப்புக் கல்வி வகைகளிலும் பயிற்சியிலும் தேர்ச்சி பெறுவதற்கும் தரப்படுகின்றன. இவற்றில் இயற்கை வள வகைகளின் கண்காணிப்பும், வீடுகட்டுதலும், விமானக் கூடங்களை நிர்மாணிப்பதும் அடங்கும்.

மாநில, தல அரசாங்கங்களுக்குக் கூட்டாட்சியின் மானியங்களை உயர்த்தியது அவற்றின் பொதுநிதி பட்ஜெட்டுகளின் மீதுள்ள அழுத்தத்தைச் சிறப்பாகக் குறைப்பதற்காக அன்று என்பது தெளிவாகத் தெரிகின்றது. ஈதிவ்வாறு இருக்க, தல பட்ஜெட்டுகளின் மீதுள்ள அழுத்தத்தை மானியங்கள் உயர்த்தியிருக்கின்றன. ஏனெனில், இம் மானியங்களை அளிப்பதால்தான் அவை, தாம் வேறு எவ் வகையிலும் மேற்கொண்டு இருக்கமாட்டாத நடவடிக்கைகளையும் மேற்கொள்ளும்படி ஊக்கம் பெற்றிருக்கின்றன. இங்ஙனம் மூச்சுத் திணறும் (மாநில, தல) பட்ஜட்டுக்களுக்குக் கணிசமான அளவு கூட்டாட்சி உதவி அளித்து நிவாரணம் அளிக்க வேண்டும் என்றால், நடப்பில் பெரிதும் கையைக் கடிக்கும் மாநில, தலத் திட்டங்களுக்கும், கூட்டாட்சி மானியங்கள் அளிக்கவேண்டி

இருக்கும். யாவற்றுக்கும் மேலாகப் பொதுக் கல்விச் செலவுகளுக்கும், கூட்டாட்சி உதவி அளிக்கவேண்டி இருக்கும் என்பது இதன் பொருளாகும்.

கல்விக்காக மாநிலங்களும், தலங்களும் 1950-ல் 7·2 பில்லியன் டாலர் செலவு செய்தன. இது 1957—ல் 14·5 பில்லியன் டாலராக உயர்ந்தது.[32] இதே அளவு அடுத்த ஏழு ஆண்டுகளிலும் செலவில் உயர்வு ஏற்பட்டு இருந்தால், 1964-ல் இச் செலவு சுமார் 22 பில்லியன் டாலராக உயர்ந்திருக்கும் அல்லது ஆண்டு தோறும் ஏறக்குறைய 8 பில்லியன் டாலர் உயர்வு ஏற்பட்டிருக்கும். தங்களின் வரித் தளங்களில் சாதாரணமாக ஏற்படும் உயர்வைக் காட்டிலும் அதிகமாக மாநில, தல வரி முறைகள் இக் கூடுதலான செலவுகளுக்கு வகை செய்யவில்லை என்றால், ஆண்டுதோறும் கூட்டாட்சி மாநில தல அரசாங்கங்களுக்குப் பில்லியன் கணக்கில் டாலர்களை மானியங்களாக அளிக்க வேண்டி வரும். பல காரணங்களை முன்னிட்டு, அண்மைய எதிர்காலத்தில் கூட்டாட்சியிலிருந்து இத்துணை மானியங்கள் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பது முற்றும் இயலாததாகும்.

ஏவுகணை யுகத்தில் கெடுபிடிப்போர் (cold war) தொடர்ந்து நீடிக்கின்ற வரையில், கூட்டாட்சியின் வருவாய் வகை வளங்களில் பாதுகாப்புச் செலவு பெரும் பாத்தியதை கொண்டாடும் என்பது இதற்கு ஒரு காரணமாகும். பல ஆண்டுகளாகப் பாதுகாப்புப் பட்ஜட் மிகவும் குறைவாக இருந்திருக்கின்றது என்பதோடன்றி, பாதுகாப்புச் செலவுகள் ஆராய்ச்சியையும், அபிவிருத்தியையும் ஊக்குவித்து, ஒரு மிகக் கூடுதலான பொருளாதார வளர்ச்சி வீதத்திற்கும் துணை செய்கின்றது என்ற உணர்வு பரவலாக இருக்கின்றது. பெருத்த கூட்டாட்சியின் அளிப்புகள் தலக் கல்வியின் தலக் கட்டுப்பாட்டையும் நெறியையும் அளிக்கலாம் என்று பரவலான அச்சம் இருப்பது மற்றொரு காரணமாகும். இவ் வச்சத்திற்குக் காரணம் இருந்தாலும் சரி, இல்லா விட்டாலும் சரி, பொதுக் கல்விக்குப் பெருத்த அளவில் கூட்டாட்சி உதவி செய்வதற்கு இது ஒரு தடங்கலாக இருக்கின்றது. பள்ளியில் வேலைபார்க்கும் பணியாளர் தொகுதிக்கும், பள்ளிப் பாடத்திட்டம், வகுப்பறை நடவடிக்கைகள் சம்பந்தமான பிற செலவுகளுக்கும் கூட்டாட்சி உதவி தருவதைப் பொறுத்தமட்டில், அச்சம் மிகவும் தாங்க முடியாததாக இருக்கின்றது. பள்ளிக்கூடங்கள், பள்ளி இடைவேளை உணவுகள், இடப்பெயர்வு, இவை போல்வனவற்றிற்குக் கூட்டாட்சி தன் தரங்களைத் திணிப்பதைப் பற்றி ஒருவரும் அத்துணை அஞ்சவில்லை. பின்னைய தொகுதியில் உள்ள அலுவல்களை ஆற்றுவதற்குக் கூட்டாட்சியின்

உதவி, மிகவும் ஒத்தாசையாக இருப்பதுடன், தலக் கல்வி பட்ஜெட்டுகளுக்கு நிவாரணம் அளிப்பதற்கும் மிகவும் துணையாக இருக்கின்றது. கல்விச் செலவுகளின் உயர்வில் இவ் வலுவல்கள் ஒரு சிறு பகுதியாகும். இவ்வாறு, கட்டடச் செலவு, இடைவேளை உணவு, இடப் பெயர்வு இவற்றுக்கு ஆகும் செலவில் ஒரு பெரும் பகுதியைக் கூட்டாட்சி ஏற்றுக் கொண்டால், மையக் (central) கல்வி நடவடிக்கைக்கு மாநில, தல பட்ஜட்டுகளின் மீதான பாத்தியதைகளும் இன்னும் பெரிதும் உயர்ந்துகொண்டே இருக்கும்.

அண்மைய ஆண்டுகளில், கல்விக்குக் கூட்டாட்சி உதவி அளிப்பதற்கான பல யோசனைகளைக் காங்கிரஸ் பரிசீலனை செய்தது. இவ் யோசனைகள் பள்ளிக் கட்டட நிர்மாணத்திற்குப் பெரிதும் துணை செய்தன. ஆனால், இவ்வித யோசனைகளில் அடங்கிய தொகைகள் ஆண்டொன்றுக்கு 1 பில்லியன் டாலரைக் காட்டிலும் ஒரு போதும் மிகையாக இருந்ததில்லை. இவ்வித யோசனைகளில் பலவும், நிதியில் பெரும்பகுதியைக் குறைந்த வருமானம் உடைய மாநிலங்களுக்கே ஒதுக்கிவிடும். இது நாட்டில் கல்வித் தரங்களின் சராசரியை உயர்த்துவதற்கு மிகவும் உபயோகமாக இருக்கும் என்றாலும், பொதுவாக உடைமை வரி செலுத்துவோர்களின் பளுக்களைக் குறைப்பதற்குச் சிறிதே துணை செய்யும். எங்கெங்கு பணிகள் செவ்வையாகவும், அபிவிருத்தி அடைந்து கொண்டும் இருக்கின்றனவோ அத் தலங்களிலும் உடைமை வரியின் தளம் சிறியதாக இருப்பதால் கல்வியின் தரம் மோசமாக இருக்கும் தலங்களிலும், உடைமை வரி செலுத்துவோர்கள்மீது கல்விச் செலவுகள் அழுத்துகின்றன. மேலும், ஆண்டுதோறும், சுமார் 2 பில்லியன் டாலர் வீதம் உயர்ந்து கொண்டு வரும் கல்விச் செலவுகளை ஏற்றுக் கொள்வதற்கு ஆண்டு தோறும் கூட்டாட்சி உதவியாக அளிக்கும் 1 பில்லியன் டாலர், கணிய அளவில் போதியதாக இல்லை. ஆகவே, கூட்டாட்சியின் உதவி மூலம் மாநில, தல அரசாங்கங்கள், பெருத்த அளவிற்குத் தங்கள் கல்விச் செலவில் நிவாரணம் ஏற்படும் என்று எண்ணுவது, அவை எதிர் காலத்தைப் பற்றி உண்மையில் நம்பிக்கை கொண்டிருக்கின்றன என்பதைத் தெரிவிப்பதாகும். ஆகையினால், மாநில, தல நெருக்கடியைத் தீர்க்க வேண்டும் என்றால், மாநிலங்களும், தலங்களும்தான் அதைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பது திண்ணம். இதனால் மாநிலங்கள் பெருத்த அளவு தங்கள் வருவாய்களைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்பதும், தல அரசாங்கங்களுக்கு மாநில உதவியையும் கணிசமான அளவு பெருக்க வேண்டும் என்பதும்

அவசியம் என்ற நம்முடைய முந்தைய கூற்றை நாம் மீண்டும் வலியுறுத்துகின்றோம்.

சுருங்கக் கூறின், குடி மக்களின் மிகு விருப்பங்களும், பொருளா தார வளர்ச்சிக்கு வேண்டிய தேவைகளும் சேர்ந்து, நாட்டு வருமா னத்தில் உயர்ந்து கொண்டே வரும் ஒரு வீதாச்சாரத்தை மாநிலப் பொதுப் பணிகளுக்கும், தலப் பொதுப்பணிகளுக்கும் செலவழிப் பது அவசியம் என்று உணர்த்துகின்றன. திறமையான நிருவாகத் திற்கான ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்தினாலும் இது இன்றி யமையாதது என்றே தோன்றுகிறது. கடன் வரம்புகளின் தொல்லை யும், அறிவுக்கு உகந்த நிதிக் கொள்கையின் தேவைகளும் சேர்ந்து, நாட்டு வருமானத்திற்கு ஏற்றவாறு, ஒப்புமையில், வரி வருவாய் களும் பெருக வேண்டும் என்பதைக் காட்டுகின்றன. இதனால் மாநில மட்டத்தில் மிகவும் தீவிரமாகவும், பரவலாகவும் பரந்த தளத்தின் மீது வருமான வரியையும், விற்பனை வரியையும் பயன்படுத்த வேண்டும் என்று ஏற்படுகின்றது. ஏனெனில், இவ்வாறு செய்யா விட்டால் நிச்சயம் உடைமை வரியையே தீவிரமாகப் பயன்படுத்த வேண்டி இருக்கும். வருமான வரியைக் காட்டிலும் உடைமை வரி மட்டமானது என்பது தெளிவு. பரந்த தளத்தை உடைய இவ் விரண்டு வரிகளில் ஒன்றையே தற்பொழுது சில மாநிலங்கள் விதிக்கின்றன. இவை இவ் வரியின் வீதங்களைக் கணிசமான அளவு உயர்த்துவதற்கு முன்பு, மற்றொரு வரியையும் மேற்கொள்ள வேண்டும் என்று பெரும் அளவில் நெருக்கத்திற்கு (pressure) ஆளாகும். காலக் கிரமத்தில் மாநிலங்கள் பலவும் வருமான வரி, விற்பனை வரி இரண்டையும் விதிக்கும் என்பது நிகழ்திறமாக இருக் கின்றது. இங்ஙனம் நேருமானால் வருவாய், நியாயம், வளர்ச்சி இவற்றுக்கான காரணங்கள், தற்பொழுது இருப்பதைவிட மாநில வருமான வரிகள் மிகவும் வளர்வீதமாக ஆகவேண்டும் என்று புலப்படுத்துகின்றன. வருமான வரியைக் காட்டிலும் விற்பனை வரி, குறைந்த வருமானங்களின்மீது மிகவும் தேய்வு வீதமாகவோ அல்லது சற்றுக் குறைவான வளர் வீதமாகவோ இருக்கின்றது என்றும், கூடுதல் வருமானங்கள் பேரில் இரண்டுமே தேய்வு வீத மாக இருக்கின்றன என்றும் நமக்குக் கிடைத்த சான்று காட்டு கின்றது. செயல் முறையில், விலக்கு அளிக்கப்பட்ட இனங்களை நீட்டிப்பதன் மூலமாகவே விற்பனை வரியைக் குறைந்த தேய்வு வீதம் உள்ளதாக (அல்லது மிகவும் வளர் வீதம் உள்ள தாக)ச் செய்ய முடியும். ஆனால் இங்ஙனம் செய்தால் மாநிலங்கள் வருவாய்த் தொகைகளை மிகுதியாக இழக்க வேண்டியிருக்கும். ஆயினும் வருமான இழப்பு இன்றியே ஒரு மாநில வருமான வரியை, வீத அமைப்பில் மட்டும் மாறுதல் செய்வதன்

வாயிலாகவே குறைந்த தேய்வு வீதம் உள்ளதாக (அல்லது கூடுதல் வளர்வீதம் உள்ளதாக) ஆக்க முடியும். இவ் வரிகளில் ஒன்றை மட்டுமே உபயோகித்தால், வருமான வரிக்கே மிகு விருப்பம் காட்டப்பெறுகின்றது. இரண்டு வரிகளையும் விதித்தால், விற்பனை வரியின் தேய்வு வீதத்தைச் சரிக்கட்டுவதற்கு, வருமான வரியில் கூடுதலான வளர் வீதம் இருக்க வேண்டும்.

### மாநில-தல நிதியும், பொருளாதார நிலைபேறும்

மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் ஆண்டு தோறும் சமநிலைப் பட்ஜட்டுகளின் கொள்கையைத் தீவிரமாகப் பின்பற்றின. பொருளாதார நிலைபேற்றைப் பொறுத்த அளவில் இக் கொள்கை நெறி கோணியது ஆகும். பொருளாதார வீக்க காலங்களில் வரித்தளம் விரிவடைவதனால், கூடுதல் வருவாய்கள் கிடைக்கின்றன. இதனால் செலவுகளை அதிகரிப்பதும் அரசாங்கங்களுக்குச் சுளுவாகிறது. ஆகையினால், பெருத்த சமநிலை பட்ஜட்டுகள், ஏற்கனவேயே விலை வீக்கத்தை நோக்கிச் செல்லும் பொருளாதாரத்தை இன்னும் விரிவானதாக ஆக்குகின்றன. போதிய மொத்தத் தேவை இல்லாத காலக்கூறுகளில் வரித்தளம் சுருங்கும்பொழுது, செலவுகளை வெட்டும் ஒரு போக்கு இருக்கின்றது. இதனால் பொருளாதாரம் சுருங்குகின்றது. 1929-லிருந்து, இரண்டாவது உலகப் போர்க் காலத்தைத் தவிர்த்து மொத்த தேசீய உற்பத்தியைப் (GNP) போன்றே அதே நெறியில் மாநில, தலச் செலவுகள் இரண்டும் சேர்ந்து சற்றுக் கணிசமான அளவு அதிகரித்துக் கொண்டே வந்திருக்கின்றன என்று புள்ளி விவரங்கள் காட்டுகின்றன.[33] இரண்டாவது உலகப் போருக்குப் பின்பு இப் போக்கு சிறப்பாகக் காணப்படுகின்றது.

போரிலிருந்து தொடர்ந்து மாநிலச் செலவுகளும், தலச் செலவுகளும் உயர்ந்து கொண்டே வந்தன. இதனால் நிலைபேறுக்கத் தேவைகளைப் பொறுத்த மட்டில் இச் செலவுகளின் அளவு பெருகி உள்ளது. இப் பெருக்கத்தால் செலவுகளால் ஏற்படும் பாதகமான நடத்தையை இனிப் புறக்கணிக்க முடியாது. 1940-ல் மாநில அரசாங்கங்கள் தல அரசாங்கங்கள், இவற்றின் நேரிடையான செலவுகள் 9·2 பில்லியன் டாலர்; 1957-ல் இவை 47·6 பில்லியன் டாலராக உயர்ந்துவிட்டது. இது 1940ஆம் ஆண்டைய புள்ளித் தொகைகளைப் போன்று 5·1 மடங்கு கூடுதலாகும். 1957-ல் மொத்தத் தேசீய உற்பத்தியில் (GNP) 8 சதவிகிதத்திற்கும் சிறிது கூடுதலாக மாநில, அரசாங்கங்கள் பண்டங்களையும், பணிகளையும் வாங்கின. மொத்த தேசீய உற்பத்திக்கும், கூட்டாட்சி வாங்கியதற்கும் உள்ள வீதத்தில் (ratio) இது சுமார்

முக்கால் பங்காகும். ஆகவே கூட்டாட்சியின் நிதி நடவடிக்கையினுல் மட்டுமே நாட்டின் பொருளாதார நடவடிக்கை மட்டத்தின்மீது பெருத்த விளைவு ஏற்படுகின்றது என்பதில்லை. அரசாங்க நடவடிக்கை" என்ருல் கூட்டாட்சியின் நிதி நடவடிக்கையையே குறிக்கின்றது என்றும் கொள்ளக் கூடாது. மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் பின்பற்றும் நெறிகோணிய கொள்கையினுல் கூட்டாட்சி மிகவும் பெருத்த அளவில் திருத்துமுறைக் கொள்கையைப் (massive corrective policy) பின்பற்றுவது அவசியம் ஆகின்றது.

மாநில அரசாங்கங்களையும், தல அரசாங்கங்களையும் நிலைபேறு ஏற்படும் வகையில் இயங்கும்படி அறிவுறுத்துவது சரி என்ருலும், அவை அவ்விதம் செய்ய இயலாமையை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது. இவ் வரசாங்கங்கள் வாணிபச் சுழலுக்கு எதிராக மேற்கொள்ளும் நிதிக் கொள்கையில் ஏறக்குறைய ஒவ்வொரு திருப்பத்திலும் தடங்கல்கள் இருக்கின்றன. முதற்கண் தொடர்ந்து நீடித்த பணிகளுக்கான கோரிக்கைகளினுல், இவ் வரசாங்கங்கள், நிலைபேருக்கக் குறிக்கோளுக்குக் கூடுதலான முதன்மை கொடுக்காது, பங்கீட்டுக் குறிக்கோளுக்கே முதன்மை கொடுக்கின்றன. கல்வி, நெடுஞ்சாலைகள், துப்புரவு, சுகாதாரம், மருத்துவக் கூடங்கள் இவற்றுக்கான கோரிக்கைகள் மிகவும் வலியுறுத்தும் தன்மையனவாக இருப்பதால், செலவுகள் கீழ் நோக்கி நெகிழ்ச்சியாக இருப்பதைத் தடுக்கின்றன. இரண்டாவதாக மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் சிறப்பாகத் தல அரசாங்கங்கள்—ஒப்புமையில் நெகிழ்ச்சியில்லாத கடன் வகை வளங்களுடன் இயங்குகின்றன. பல உதாரணங்களில் இக் கடன் பத்திரங்களுக்கான மார்க்கட்டுகள் சிறப்பாகத் தலத்தில் மட்டுமே இருப்பதோடன்றி, இம் மார்க்கட்டுகளைப் பாதிக்கக் கூடிய அளவுக்கு, இவ் வரசாங்கங்களுக்குப் பண அதிகாரங்கள் கிடையா. மிகக் கூடுதலாகக் கட்டுப்பாடு செய்யும் கடன் வரம்புகள் சூழ்ச்சி செய்வதற்கு இடம் கொடுப்பது உண்மையே. நிலைபேருக்கக் குறிக்கோளை அடைய வேண்டும் என்ருல், சில சமயங்களில் பற்ருக் குறையை நிரப்புவதற்கு நிதி திரட்ட வேண்டியது அவசியமாக இருக்கலாம். ஆனுல், இங்ஙனம் நிதி திரட்டுவதைக் கடன் வரம்புகள் மிகவும் கடினமானதாக ஆக்கலாம். மூன்ருவதாகப் பகுத்தறிவுத் தெரிவின்படி இல்லாவிட்டாலும், மரபினுல், மாநில தல வருவாய் முறைகள் மிகவும் நிறை கொள்ளுதலாக (weighted) நுகர்வு வரிகளுடன் இருக்கின்றன. நுகர்வு வரிகளின் வீதத்தில், மாறுதல்களைப் பாடுபட்டுச் செய்தால்தான், இவ் வரிகளால் வாணிபச் சுழலில் கடுமையான மாறுதல் ஏற்படலாம். இறுதியாக

இவ் வரசாங்கங்களில் பலவற்றுக்கும் எல்லைகள் பிரச்சினை இருக்கின்றது. சாதாரணமாக, மாநில, தல அரசாங்கங்கள் தன்னிறைவு உள்ள பொருளாதார அலகுக்ளைப் பிரதிபலிக்கவில்லை.

நாம் முன்னரே குறிப்பிட்டபடி, நெடுங்கால அரசாங்கக் கொள்கையிலும், நிறுவனங்களிலும் புகுத்தப்பட்ட நிதிச் செயல் முறையின் கருவிகளே, தானுகவே இயங்கும் நிலைபேறு செய்பவைகள். பொருளாதார நடவடிக்கையின் மட்டத்தில் ஏற்படும் விரும்பாத விளைவுகளைச் சமநிலைப்படுத்த இவற்றுக்குத் தாமாகவே விரைவாக வினை ஆற்றும் அலாதித் திறன் இருக்கின்றது. தாமாகவே இயங்கும் தன்மைதான் அவற்றின் சிறப்பான அமிசமாகும். அவற்றுக்குச் சட்டம் இயற்றுகையோ அல்லது ஆட்சி முடிவோ தேவை இல்லை. அதனுல் அவை தாமதமின்றி இயங்கலாம். விரும்பாத நிலைமைகள் உருவாகி வளரும் நிலையில் இருக்கின்றது என்று சட்ட சபை உறுப்பினரோ அல்லது ஆட்சியாளரோ கூட அறிந்திருக்க வேண்டியதில்லை. ஏற்ற பெற்றி பற்றி இக் கருவி, பொருளாதாரத்தில் சில முக்கிய மாறிகளுடன் இணைக்கப் பெற்று இருக்கின்றது. மாறியின் இயக்கத்தைப் பற்றிய புள்ளி விவரங்கள் கிடைக்கு முன்பே இக் கருவி இயங்க ஆரம்பிக்கின்றது.[34]

தாமாகவே நெகிழுமாறு (flexible) மாநில வருவாய் முறைகளையும் திருத்தி அமைப்பது எதிர்காலத்தில் மிகவும் நன்மை பயக்கும். தல வருவாய் முறைகளில் உடைமை வரிகளே மிகவும் ஆட்டிப் படைப்பன. (வீதத்தில் மாறுதல்களும், தீர்வை மதிப்பீடு மட்டத்தில் மாறுதல்களும் இன்றி) உடைமை வரிகள் மிகவும் நெகிழ்வு இல்லாதனவாக இருக்கின்றன. தல நிதி விவகாரங்களில் கூடுதலான நெகிழ்வு வேண்டுமென்ருல், உடைமை வரி சற்றுக் குறைவான முக்கியத்துவம் உடைய பங்கை வகிப்பது முக்கியமானதாகும். உடைமை வரிக்குப் பதிலாக, இன்னும் கூடுதலான நெகிழ்வு உள்ள பிற தல வரிகளை விதிப்பதும், தல அரசாங்கங்களுக்குச் சாத்தியம் அன்று. இதற்கான காரணங்களை இவ் வதிகாரத்தின் முற்பகுதியில் குறிப்பிட்டோம். ஆனுல் உடைமை வரியின் மூலம் கூடுதலாக வருவாய் பெறுவதற்குப் பதிலியாக அரசாங்க உதவி பெறுவது சாத்தியமே. இதனுல் உடைமை வரியை உயர்த்தா திருக்கலாம். உடைமை வரியைக் காட்டிலும் மிகவும் தாமகவே இயங்கும் நெகிழ்வு உள்ள வருவாய் முறைகளின் கீழ், மாநிலம், நிதிகளைத் திரட்டி, அவற்றை மானியங்களாகத் தல அரசாங்கங்களுக்குக் கொடுக்கலாம். இங்ஙனம் மாநிலம் செய்திருந்தால், தாமாகவே இயங்கும் நிலைபேருக்கக் கருவிகளை நிறுவுவதில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கும்.

விற்பனை வரிகள், ஆய்த் தீர்வைகள், மொத்த வரவு வரிகள் இவற்றைப் பயன்படுத்தி நுகர்வுச் செலவின்மீது வரிகளை மிகவும் நிறை கொள்ளும்படியாக மாநில வருவாய் முறைகள் இருக்கின்றன. வாணிபச் சுழல் காலத்தில், மொத்தப் பொருளாதார நடவடிக்கையில் ஏற்ற இறக்கங்கள் காணப்பெறுகின்றன; நுகர்வுச் செலவிலும் ஏற்ற இறக்கங்கள் காணப்பெறுகின்றன. முன்னையதைக் காட்டிலும் பின்னையதில் ஏற்ற இறக்கம் குறைவாக இருக்கின்றது. இதனால், இவ் வகைப் பெரிய மாநில வரிகளின் தளமும் சிறிது நெகிழ்வு இல்லாமலும், நிலையான வரி வீதங்களின்படி இவற்றின் மூலம் கிடைக்கும் வருவாய்களும், இதற்கு ஏற்றாற்போல நெகிழ்வு இல்லாமலும் இருக்கின்றன.[35] இங்ஙனம் இருந்தும், ஓர் இனம் சுட்டும் மாநில விற்பனை வரி, ஒரு தல உடைமை வரியைக் காட்டிலும், வருவாயைப் படைப்பதில், தானாகவே மிகவும் நெகிழ்வு உடையதாக இருக்கின்றது. ஏனெனில், இனம் சுட்டும் விற்பனை வரியில், மிகவும் பரந்துபட்ட வாணிபச் சுழல் ஏற்ற இறக்கத்தை உடைய சில இனங்கள் அடங்கி இருக்கின்றன. ஆதலால், வருவாய் முறைகளின் மொத்த நெகிழ்வைப் பார்க்கும் அளவில், தல உடைமை வரிகளுக்குப் பதிலாக, விற்பனை வரிகளின்மூலம் கிடைக்கும் வருவாய்களிலிருந்து மாநிலங்கள் மானியங்கள் அளிப்பது ஓரளவு அபிவிருத்தியைக் குறிக்கும். ஆனால், பொருளாதார நடவடிக்கையில் ஏற்படும் மாறுதல்களைப் பிரதிபலிக்கும் வகையில், உண்மையாகவே, வரியில் வேண்டிய அளவு இருக்கும் வகையில் நெகிழ்வைப் புகுத்த வேண்டும் என்று விரும்புவதாக வைத்துக்கொள்வோம். இதற்கு, வாணிபச் சுழலில் ஏற்படும் ஏற்ற இறக்கத்தை அளப்பதற்கான அளவு கோலாக ஒரு பெரிய வரியின் தளமே இருக்கவேண்டியது அவசியமாகும். மொத்த நாட்டு உற்பத்தியில் (GNP) ஏற்படும் மாறுதல்களே வாணிப ஏற்ற இறக்கத்தை அளவிடுவதற்கான அளவு கோலாகும். மொத்த நாட்டு உற்பத்திக்கு (GNP) மிகவும் அணித்தாக இருக்கும் வரித்தளம் தனியாள் வருமானமே ஆகும்.[36]

நிலைபேறான வருவாயைத் தரும் வரிகளுக்குப் பதிலாக, தாமாகவே ஏற்ற இறக்கத்தை உடைய வருவாயைத் தரும் வரிகளை விதிப்பது, மாநில மட்டத்தில் தாமாகவே இயங்கும் நிலைபேறான கருவிகளைப் பெரிதும் இணைப்பதற்குத் துணை செய்யும். சரியான நெறியில் செலவுகளில் தாமாகவே மாறுதல்களைச் செய்யும் சாத்தியக் கூறுகளைப் புகுத்துவது அத்துணை நம்பிக்கை தருவதாக இல்லை. இருந்தாலும், அவற்றையும் பரிசீலிக்க வேண்டும். இவ் வரிசையில் தல வசதிச் செலவுகளைப் (welfare expenditures) பெருக்குவதிலேயே பெரும் சாத்தியக்கூறுகள் இருப்ப

தாகத் தோன்றுகின்றது. நாம் தாமே இயங்கும் (automatic) நடவடிக்கைகளைப்பற்றிப் பேசுகின்றோமே தவிர யுக்த நடவடிக்கை களைப் (discretionary measures) பற்றிக் கூறவில்லை என்பதை நினைவு கூரவேண்டும். தல நல வசதிகளுக்காக மாநில அளிப்பு களில் (contributions) நிரந்தர வழுக்கு அளவுத் திட்டத்தை (sliding scale) நிறுவினால் இந் நெறியில் ஓரளவு முன்னேற்றம் காண முடியும். எடுத்துக் காட்டாகத் தல மக்கள் தொகைக்கும், தல வசதி மானியங்களைப் பெறுவோர்களுக்கும் இடையே உள்ள வீதாச்சாரம் உயரும்பொழுது, தல வசதிகளைப் பெறுவோர் ஒவ்வொருவருக்கும் ஆகும் மொத்தச் செலவுகளில் ஒரு பெருத்த வீதாச்சாரத்தை மாநில தல வசதி மானியங்களாகக் கொடுக்க லாம்.[37] ஆயினும், செலவுப் பக்கத்தில், நெகிழ்வைப் புகுத்து வதற்கு உள்ள பெருத்த சாத்தியக் கூறுகள் யுக்தக் கொள்கைப் பகுதியில் உள்ளதாகத் தோன்றுகிறதே தவிர, தாமாகவே இயங்கும் எந்திரத் தொகுதியில் (automatic machinery) இருக் கின்றதாகத் தோன்றவில்லை.

தாமே இயங்கும் நெகிழ்வு உடைய கருவிகளாக வருவாய் களையும் செலவுகளையும் மாநில நிதியிலும், தல நிதியிலும் புகுத்தி விட்டால், நிலைபேறு இல்லாத காலங்களில் ஆண்டுதோறும் பட்ஜட்டைச் சமநிலையாக்க வேண்டும் என்ற விதி மீறப்பெறும். வாணிபச் சுழல் மாறுதல்களுக்குப் பட்ஜட் சமநிலையின் அளவில் இடம் கொடுப்பதற்கு, மாநில அரசியல் சட்டங்களில் உள்ள இறுக்க மான கட்டுப்பாடு செய்யும் விதிகளைத் திருத்தவேண்டும் அல்லது அகற்றவேண்டும். இவற்றில் குறிப்பிடத் தக்கவை 'ஈட்டுவது போலச் செலுத்துங்கள்' (pay-as-you-go) என்னும் சட்டங்க ளாகும். இவை திட்டமிடப்பட்ட பற்றுக் குறைகளையும், கட்டுப் பாடு செய்யும் வரையறைகளையும் தடை செய்கின்றன. பிந்தியவை ஒரு பற்றுக் குறையைச் சரிக்கட்டுவதற்காகக் கூடுதலாகக் கடன் வாங்குவதையும் தடை செய்கின்றன. ஆனால், நிதிக்கொள்கையில் நெகிழ்வு வேண்டும் என்றதனாலேயே விடாது தொடர்ந்து பற்றுக் குறைகள் இருக்கவேண்டும் என்பது பொருளன்று. உபரி களைப் படைக்கும் பொருளாதார வீக்க காலங்களும் இருக்கும் என்பது இதன் பொருளாகும். செலவுகளை ஏற்றவேண்டும் அல்லது வரிகளைக் குறைக்கவேண்டும் என்ற நெரிசல் அழுத்தங்களிலிருந்து (pressures) உபரியைத் தனியே பிரித்து, காப்பு நிதிகளைத் திறப் பாடாகக் கண்காணிப்பதற்கு வேண்டிய கருவியைப் போதிய அளவில் அபிவிருத்தி செய்யவேண்டியது அவசியமாகும்.[38] அதாவது, பின்னிறக்க காலத்தில் ஏற்பட்ட பற்றுக்குறைகளை, பொருளாதார வீக்க காலங்களில் ஏற்படும் உபரிகளைக்கொண்டு

சரிக்கட்ட வேண்டும் என்பதுதான், வாணிபச் சுழல் காலத்தில் பட்ஜட்டைச் சமநிலை ஆக்க வேண்டும் என்பதன் கருத்தாகும். ஆனால், பொருளாதாரம் நல்ல நிலையில் இருக்கும்பொழுது, உபரிகளை வரிக் குறைப்புகள் அல்லது செலவு ஏற்றங்களில் கரைத்து விட்டால், இரண்டு விரும்பாத விளைவுகளைத் துய்க்க நேரிடும். முதலாவதாக, வாணிபச் சுழல் காலம் பூராவும் பட்ஜெட் சமநிலை ஏற்படாது. இரண்டாவதாக வரிக் குறைப்பு அல்லது செலவு ஏற்றத்தைச் செய்தால் 'பொருளாதார வீக்கத்தை இன்னும் வீங்கச் செய்யும்' (booming the boom) ஒரு நெறிகோணிய (perverse) விளைவு ஏற்படும்.

ஒரு குறிப்பிட்ட நிலைபேறு இன்மையின் நிலைமையைச் சமாளிப்பதற்கு, சட்டம் இயற்றும் அல்லது ஆட்சி செய்யும் கொள்கையை நிறுவுவதையே யுக்தக் கொள்கை என்று கூறுகின்றோம். இக் கொள்கை வெற்றி பெறுவது நிலைபேறு இன்மையின் தன்மையையும், அதை மட்டுப்படுத்தும் உள்ளார்ந்த (potential—ஒடுங்கி நிற்கும்) திறன் நிதிக்கொள்கைக்கு உண்டு என்பதையும், அலுவலர்கள் புரிந்துகொள்வதைப் பொறுத்து இருக்கின்றது; ஆண்டுதோறும் பட்ஜெட்டைச் சமநிலையாக்க வேண்டும் என்ற இலக்கினின்றும் சிறிது இயல்பாகவே இது மாறுபட்டதாகும். இங்ஙனம் நிகழ்ந்தால், யுக்த நிலைபேறுக்கக் கொள்கையின் எல்லை, பட்ஜட்டின் செலவுகளுக்கும், சிறப்பாக மூலதனச் செலவுகளுக்கு மட்டுமே பெரிதும் வரையறுக்கப்பெறும். தற்போதைய சூழ்நிலைகளில், வாணிபச் சுழலின் எதிரான கொள்கைக்குப் பள்ளிகள் கட்டுதல் உட்படும் என்பது சாத்தியமில்லை. ஏனெனில், ஒரு பின்னிறக்கக் காலம் வரையில் பள்ளிக் கட்டடங்களுக்கான முடை காத்திருக்க முடியாது. ஆனால், தற்போது உள்ளதைக் காட்டிலும், கூடுதலான அளவு நெடுஞ்சாலை அமைப்பையும், வாணிபச் சுழலுக்கு எதிரிடையான பொதுப் பணிகள் பட்டியலில் பொருத்தி விடலாம். பள்ளிகளையும், நெடுஞ்சாலைகளையும் தவிர்த்து, பொது நிர்மாணம் (public construction) அனைத்தையும் நிலைபேற்றை ஒரு நோக்கமாகக் கொண்டு திட்டமிட முடியும். இதற்குப் பொருளாதார வகையில் மிக நல்ல காலம் வரும்வரை சில அபிவிருத்திகளுக்காகக் காத்திருக்க வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. பொதுப் பணிகளை முன்கூட்டியே திட்டமிடவும் வேண்டும். இதனால், ஏற்ற காலம் வரும்பொழுது அவற்றின் நிர்மாணத்தை மிக விரைவாகத் தொடங்கலாம்.

விடாது விரிந்துவரும் தேவைகளின் செலவுகளைச் சமாளிப்பதற்குப் பெருத்த நிதி தேவையாக இருக்கின்றது. இதனால் நிலை

பேற்றுத் தேவைகளை முற்றிலும் பொருட்படுத்தாது, மாநில வரி வீதங்களையும், தல வரி வீதங்களையும் எவ்வளவு விரைவாக உயர்த்துவது அரசியல் ரீதியில் சாத்தியமாக இருக்குமோ அவ்வளவு செய்வது நிகழ்திறமாக இருக்கலாம். பொருளாதார வீக்க காலங்களிலும், பின்னிறக்கக் காலங்களிலும், உயர்ந்த வீதங்களையும் குறைந்த வீதங்களையும் முறையே சட்டமாக இயற்றுவதற்கு மிகச் சிறிய சாத்தியக்கூறு இருக்கின்றது என்பது இதன் பொருளாகும். இவ்வாறாக மாநில நிதிக் கொள்கையிலும், தல நிதிக் கொள்கையிலும் வரியைப் பொறுத்த மட்டில் யுக்த நடவடிக்கைக்கு சிறிது இடமே நிகழ்திறமாக இருக்கலாம். ஆகவே, யுக்த நெகிழ்வு எப்பொழுதாவது நிகழுமானல், பொதுப்பணிகள் செலவைத் திட்டமிடுவதில்தான் இது நிகழும். இங்குதான் தற்போதைய மாநில, தலச் செயல் முறைகளில் மிகுந்த அபிவிருத்திக்கு இடம் இருக்கின்றது.

நாம் மாநில, தல நிதிநிலைமையைப் பொதுவாகப் பார்க்கும் பொழுது, இவ் வரசாங்கங்கள் உடன்பாட்டு நேர்நிலையில் (positive sense) பெரும் அளவில் நிலைபேறுக்க நிதிக் கொள்கையில் ஈடுபடும் என்று எதிர்பார்க்க முடியாது. மாநில, தல அரசாங்கங்கள், பல்வேறுபட்ட காரணிகளால், தனிப்பட்ட முறையில் வரம்புக்கு உட்படுத்தப்பட்டிருக்கின்றன. இக் காரணிகளும் இம் முடிவையே புலப்படுத்துகின்றன. ஆயினும், அதே சமயம், மொத்தத்தில் மாநில, தல நிதி நடவடிக்கைகள் சார்பற்ற அளவில் (absolute magnitude) பெரிதும் ஏறிவிட்டதால், நம் மனதில் பதிகின்றன. இதனுல் மாநில, தல அரசாங்கங்கள் நெறிகோணிய நிதிக் கொள்கையைப் பின்பற்றினுல், நிலைபேறுக்கத்தைக் கடுமையான அளவு இழக்கும்படி நேரும். மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும், நெறிகோணிய செயலினுல் ஏற்படும் தாக்கைக் குறைப்பதற்குத் தம்மால் ஆனதை எல்லாம் செய்ய எதிர்மறைப் பொறுப்பையாவது (negative responsibility) ஏற்றுக்கொள்வார்கள் என்பதுதான், நிகழ்திறமாகச் சிறந்ததாக ஏற்படக்கூடியது என்று நாம் நம்பிக்கை தெரிவிக்கலாம். இங்ஙனம் செய்தால், கூட்டாட்சிக்குச் சிறிது குறைவாக நிலைபேறுக்கப் பொறுப்பு ஏற்படும். மாநில அரசாங்கங்களும், தல அரசாங்கங்களும் மேற்கொள்வனவாகக் கருதப்பெறும் கருவி வகைகளாவன: (1) தொழில் நடவடிக்கையின் மட்டத்திற்கு ஏற்றுற்போல, உடனேயே மாறுதல்கள் தாமே ஏற்படும் விதத்தில் (automatic way), வருவாய் முறைகளை உருவாக்குதல்; (2) வேலைக்குறைவு காலங்களில் செலவுகளைக் கூட்டுவதற்கும், பொருளாதார வீக்க காலங்களில் இச் செலவுகளைக் குறைப்பதற்கும், ஒத்திப்போடக்

கூடிய பொதுப்பணிகளே மிகவும் முறையாகத் திட்டமிடுதல். இத் திசைகளில் அபிவிருத்தி ஏற்பட்டால் ஒரு ஒன்றித்த நிலே பேருக்கக் கொள்கை (integrated stabilization policy) உருவாகக் கூடிய நிலே ஏற்படும்.

## மேலும் படித்தற்கு உரியவை

ஆர். எம். ஹெய்க் (Haig, R. M.), 'The Coordination of Federal and State Tax Systems,' Chapter 88 in Groves, *Viewpoints on Public Finance*. இந் நூல் முன்னேற்றத்திற்கான தேவைகளேப் பற்றிப் பொதுவாகக் கூறுகிறது.

ஏ. ஹெச். ஹான்ஸனும் (Hansen, A. H.), ஹெச். எஸ். பெர்லோப்பும் (Perloff, H. S.), *State and Local Finance in the National Economy*, N. Y., Norton, 1944, Chapters 7, 8.

ஏழாம் அதிகாரத்தில் அரசாங்கங்களிடையே கூட்டுறவு பற்றி ஆய்வு செய்யப்பெறுகின்றது. எட்டாம் அதிகாரத்தில் மாநிலப் பணிகளுக்கும், தலப் பணிகளுக்கும் கூட்டாட்சி உறுதி கொடுப்பது (federal underwriting) ஆய்வு செய்யப் பெறுகின்றது. இந் நூலேப் படிப்பதனுல் மிகுந்த நன்மை விளேயும்.

ஜேம்ஸ் ஏ. மேக்ஸ்வெல் (Maxwell, James A.), *The Fiscal Impact of Federalism in the United States*, Cambridge. Harvard, 1947, Chapter I.

வரலாற்று முறையில், நிதி விவகாரங்களில், கூட்டரசாங்கத் தின் நிலே வளர்ந்ததைக் கூறுவது.

ஜேம்ஸ் ஏ. மேக்ஸ்வெல் (Maxwell, James A.), 'Intergovernmental Fiscal Devices for Economic Stabilization,' in Joint Committee on the Economic Report, *Federal Tax Policy for Economic Growth and Stability (Papers Submitted by Panelists Appearing before the Subcommittee on Tax Policy)*, Washington, 1955, pp. 807-17.

யூஜனே ஏ. மயர்ஸும் (Myers Eugene A.), எஸ். ரண்டால் ஸ்டௌட்டும் (Stout, Randall S.) எழுதிய 'The Roll of the States and Local Governments in National Fiscal Policy,' *National Tax Journal*, June, 1957.

மேற்கூறிய இரண்டு திரட்டுகளும் (selections), கீழே உள்ள ஒரு திரட்டும் சேர்ந்து, இப் பிரச்சினேயைப் பற்றிய பிழிவுகளேயும்

essentials), தீர்வுக்கான சாத்தியக் கூறுகளையும் தக்க முறையில் விளக்கியுள்ளன.

மேபல் நியூகொம்பர் (Newcomber, Mabel), State and Local Financing in Relation to Economic Fluctuations', *National Tax Journal*, June, 1954.

## 24 ஆம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. மாநில, தல அரசாங்கங்களின் நேரிடையான செலவுகளையே செலவுகள் என நாம் கொள்கிறோம். இவற்றில் கூட்டாட்சியில் இருந்து பெற்றுச் செலவுசெய்த தொகைகளும் அடங்கும். ஆனால், இதில் மாநில அரசாங்கங்களுக்கும், தல அரசாங்கங்களுக்கும் இடையே நிகழ்ந்த நிதி மாற்றங்கள் சேரா. (Figures from Bureau of the Census, *Historical Statistics on state and Local Governmet Finances, 1902-1953, p. 19; Summary of Governmental Finances in 1955, p. 24; 1956, p. 26; 1958, p. 15; and Economic Report of the President, 1959, p. 194.*

2. முன்பொருகால் இருந்ததைக் காட்டிலும் குறைவான அளவில் இருக்கவேண்டுமென்பது, நாம் சுருங்கிய செலவு என்று குறிப்பிட்டதன் பொருளன்று. செய்கையின் தரங்களை வேண்டுமென்றே குறைக்காது முன்பு இருந்ததைக் காட்டிலும் செலவு குறைந்திருக்கச் செய்ய வேண்டும்.

3. *Summary of Governmental Finances in 1957, pp. 27, 28.*

4. National Education Association, *Advanced Estimates of Public Elementary and Secondary Schools*...1957-1958, Washington, 1957, p. 29.

5. Computed from State Tax Commissioner (Connecticut), *Information Relative to the Assessment and collection of Taxes*, 1950 and 1957.

6. ... ... ...

7. *Compendium of State Government Finances in* 1958, p. 22.

8. Computed from *Compendium, op. cit.*, p. 25.

9. U. S. Bureau of Public Roads, *Highway Statistics*, 1950, p. 72 and 1957, p. 88.

10. Bureau of the Census, *Compendium of State Government Finances*, 1950, p. 37 and 1958, p. 39.

11. Comparison of rates in the 1946 edition of the *Tax Systems* with those in the 1952 edition, and with the Commerce Clearing House, *State Tax Guide*, 1959.

12. இதற்கு 1959-ல் மிச்சிகன் மாநில அரசாங்க நிதி நெருக்கடி ஒரு நல்ல உதாரணமாகும். தொடர்ந்து வறிதாக வந்த மோட்டார் ஆண்டுகளும் (poor automobile year) 1958ஆம் ஆண்டுடைய பின்னிறக்கமும் சேர்ந்து,

வருவாய்கள், செலவுகள் இரண்டின் பேரிலும் பாதகமான விளைவுகளை ஏற்படுத்தின. முற்கூற்றில் ஊதாரித்தனமாக விற்பனை வரி வருவாய்களில் ஒரு பெரும் பகுதியைத் தல அரசாங்கங்களுக்கு ஒதுக்கியதும், விற்பனை வீதத்தின்மீது அரசியல் சட்டப்படி ஒரு வரம்பு விதித்ததும் உடைமை வரியை ஒப்புமையில் சிறிதே தல அரசாங்கம் உபயோகிக்கும் நிலைமையை ஏற்படுத்தியது. இதனால் மாநில அரசாங்கம் நடப்புச் செலவுக்கான தொகையைச் செலுத்த முடியவில்லை. மாநிலம் கடன் வாங்கும் வரம்பையும் இறுக்கமாக விதித்திருந்ததால் மேலும் கடன்வாங்கவும் முடியவில்லை. ஒரு மாநிலத் தனியாள் வருமான வரியை மேற்கொள்வதைச் சட்ட சபைகளில் ஒன்று மூர்க்கமாக எதிர்த்தது. தல அரசாங்கச் செழிப்பிற்கு செலுத்தப்படும் ஒரு மலிவு விலையாக மாநில மட்டத்தில் நிதி நெருக்கடி (fiscal crisis at the state level) கருதப்பட்டது போலும்.

13. வெளியீட்டின் பல்வேறுபட்ட பகுதிகள் வெவ்வேறுபட்ட வட்டி வீதங்களைத் தரவேண்டி இருக்கும் என்ற சாத்தியக் கூற்றைப் புறக்கணித்து விட்டும், ஆண்டுதோறும் வட்டி செலுத்துகைகள் செய்வதாகவும் வைத்துக் கொண்டும் கணக்கிட வேண்டும்.

14. 1950-க்கும், 1957-க்கும் இடையில் தனியாள் நுகர்வுச் செலவுகள் மொத்தத்தில் 46 சதவிகிதம் உயர்ந்தன. அதே காலத்தில் மாநில, தல அரசாங்கங்களின் செலவுகள் (கூட்டாட்சி மானியங்களிலிருந்து செலவு செய்வது நீங்கலாக) சுமார் 81 சதவிகிதமும், விற்பனை வரி, ஆயத் தீர்வைகள், மொத்த வரவு வரிகள் மூலம் மாநில, தல அரசாங்கங்களுக்குக் கிடைத்த வருவாய்கள் சுமார் 76 சதவிகிதமும் உயர்ந்தன.

15. கூட்டுப் பொருளாதாரக் குழுவின் முன்பு சாட்சியம் புகன்ற பி. யு. ராட்ச் போர்டு (B. U. Ratchford) இவ் வமிசத்தை வாதமாகக் கூறினார். See *Hearings ... January,* 1957, *Economic Report of the President,* Washington, 1957, p. 422.

16. *Summary af Governmental Finances in* 1957, p. 36.

17. குறைந்த அளவு கிளர்ச்சி அமிசங்களை உடைய கட்சிக்காரர்களுக்கு இடையே இது மிகவும் வாதத்திற்கிடமான பிரச்சினையாகும். பல காரணிகளைப் பொறுத்து ஒருவர் ஒரு தலத்தில் ஒரு கட்சியிலும், இன்னொரு தலத்தில் வேறொரு கட்சியிலும் சேர விழையலாம். ஆனால் பொதுவாக பட்ஜட் ஓர்மைக் கொள்கை நன்கு நிறுவப் பெற்று விட்டது.

18. *Historical Statistics on State and Local Government Finances and Summary of Governmental Finances in* 1957.

19. டாரதி ஸி. குட்வின் (Dorothy C. Goodwin) எழுதிய *Economics of a Coordinated Property Tax and State Grant System for Connecticut,* என்னும் நூலில் மாநிலங்கள் உதவி மானியக் கொள்கையின் சிறந்த பகுத்தாய்வு காணப்பெறுகிறது. இது 1937-ல் கனக்டிக்கட் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெறுவதற்காகக் கொடுக்கப்பட்ட இதுவரை வெளியிடப்படாத நூலாகும். இங்கு சர்ச்சை செய்த விஷயங்கள் குறித்து 3, 5, 10ஆம்

அதிகாரங்கள் கூறுகின்றன. இவை சிறப்பாக அறிவைப் பெருக்குவன வாகும்.

20. 1958 ஆம் ஆண்டைய *Compendium of State Government Finances*-லிருந்த பல அட்டவணைகளிலிருந்து இப் பத்திகளில் உள்ள புள்ளித் தொகைகள் தொகுக்கப் பெற்றன. இந்தப் பரவலான வரித்திட்டங்கள் ஒன்றில் இருந்தாவது வரி வருவாய்களில் குறிப்பிட்ட வீதாச்சாரத்தைப் பெற வேண்டும் என்பது திட்டவட்டமான விதியன்று. சில மாநிலங்கள் வருமானங்களின் மீதோ அல்லது விற்பனைகளின் மீதோ ஒப்புமையில் கடுமையாக வரி விதிக்கலாம். இதற்குக் காரணம் விற்பனைகள் அல்லது வருமானங்களின்மீது கடுமையாக வரி விதிக்க விரும்பாததாக இருக்க லாம். நற்பேறு காரணமாக இவ்வகை வரிகளில் ஒன்று அல்லது மற் றொன்றின்மீது மிகவும் சார்ந்திராது (உ - ம். டெக்ஸாஸில் எண்ணெய் உற்பத்தி வரிகள், நிப்ராஸ்காவில் உடைமை வரிவிதிப்பு, நியூ ஜெர்ஸியில் கார்ப்பரேஷன் உரிமை வரிகள்) நன்கு இயங்கக் கூடிய பிரத்தியேக வகை வள நிலைமைகள் சில மாநிலங்களில் உள்ளன.

21. National Education Association, *Advanced Estimates of Public Elementary and Secondary Schools...in* 1957-1958, p. 29.

22. The New York and Minnesota cases following are taken from material kindly provided by Mr. Emanuel Melichar of the Federal Reserve Bank of Richmond.

23. ஒரு வருமான வரியை விதிக்கும் பல மாநிலங்களில் உள்ளதைப் போன்று, பிடித்தம் செய்வது ஒரே வழியில் மட்டும் இயங்கும் பொழுது, மாநில வருவாய்கள் பாதிக்கப் படுவதே இல்லை. பிடித்தம் செய்தல் இரு பாலும் நிகழும் பொழுது, மாநில வருவாய்கள் குறைகின்றன.

24. இந்த அமிசத்தைப் பொறுத்து அடிப்படைத் தகவல் கூட இல் லாதது வெட்கக் கேடானது. இத் தகவல் விற்பனை வரியையோ, வருமான வரியையோ தேர்ந்தெடுப்பதற்கு அவசியமானது. பேராசிரியர் டியு (Professor Due) பல இடத் தொழில் செறிவான ஆராய்ச்சிகளை மேற்கோளாகக் காட்டுகின்றார். (John F. Due, *Sales Taxation*, Urbana, University of Illinois, 1957, pp. 25—29). இதில் மேற்கூறிய பொதுமைகளுக்கு ஆதர வாக ஒரு போக்கு காணப்பட்டாலும் சிறிது முரண்பாடான முடிவுகளையும் டியு காட்டுகின்றார். இது ஒரு கலிபோர்னிய ஆராய்ச்சி ஆகும். William H. Hickman, *Distribution of the Burden of California Sales and Other Excise Taxes*, Sacramento, State Board of Equalization) seems roughly, at least, to support the above conclusions (see especially Table 6.)

25. கூட்டாட்சியின் வரியில் வீதங்கள் மிகவும் வளர்வீதமாக இருப்ப தால், மாநில வருமான வரிகளுக்காகப் பிடித்தம் செய்த பின்பு உள்ள இறுதிப் பங்கீடுகளின் பாங்கு இப்பொழுது உள்ளதைப்போல் இருக் கின்றது. 20 சதவிகிதத்தில் தொடங்கும் வீதத்திற்கு உட்பட்ட ஒரு டாலர் தனியாள் வருமானம், மாநில வரி விவர அறிக்கையில் பிடித்தத்திற்குப் பின்பு எண்பது சதங்கள் வருமானமாகக் கணக்கில் எழுதப்படுகின்றது.

ஆனால், 75 சதவிகிதம் கூட்டாட்சியின் வரிக்கு உட்படும் ஒரு டாலர் மாநில வரி விவர அறிக்கையில் இருபத்தைந்து சதங்களே ஆகும். இவ்வாறு வருமான அளவுகோலின் தாழ்ந்த கோடியில் கூட்டாட்சியின் வீதங்களும் மாநில வீதங்களும் விரைவாக உயருகின்றன. பிடித்தத்திற்குப் பின்பு கூடுதலான மாநிலவரி மிதமாகவே உயருகின்றது. மிக உயர்ந்த வருமான மட்டங்களில் கூட்டாட்சியின் வீதம் மிகவும் கூடுதலாக இருக்கின்றது. இந் நிலையில் மாநில வரித் தளத்திலிருந்து கூட்டாட்சியின் வரியைப் பிடித்தம் செய்வதால் மிகவும் மிதமான தொகைகளே மாநில வரியிலிருந்து கிடைக்கின்றன. ஆகவே, எந்த வருவாய் மட்டத்திலும் மாநிலத் தளத்திலிருந்து பிடித்தம் செய்யும் தொகையைக் குறைத்தும், கூட்டாட்சியின் வீதங்களைக் குறைத்தும், மாநில வரித்தளத்திலிருந்து கூட்டாட்சி வரியைப் பிடித்தம் செய்வதை அகற்றியும் அல்லது மாநில வரி வீதங்களை மிகவும் கூடுதலாக வளர்வீதமாக ஆக்கியும், மாநில நிகர வருமான வரியை மிகவும் வளர்வீதமாகச் செய்ய முடியும். இவ்விதம் வளர்வீதமாகச் செய்வதால், தளத்திலிருந்து வளர்வீதமாகக் கூடுதலான பிடித்தங்கள் செய்வதையும் சமன் ஆக்கலாம்.

26. பல மாநிலங்களில் உச்ச வருமானவரி வீதங்கள் 9 சதவிகிதத்திற்கு மேலும் இருக்கின்றன. ஆனால் அவை 9 சதவிகிதத்திற்குச் சிறிதே கூடுதலாக இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, நியூயார்க்கில் உச்ச வீதம் 10 சதவிகிதமும் மின்னிஸோட்டாவில் 11·55 சதவிகிதமும் ஆகும்.

27. பிடித்தம் செய்வதினால், மிகக் கூடுதலான வருமானங்களின் இறுதிநிலை டாலர்கள் கூட்டாட்சியின் உச்ச வரி வீதமான 91 சதவிகிதத்திற்கும், உச்ச மாநில வரி வீதமான 9 சதவிகிதத்திற்கும் உள்ளானால் எத்துணை வரிப்பளு ஏற்படுமோ, அதே வரிப்பளு, கூட்டாட்சியின் மிகக் குறைந்த வருமான அடைப்பில் (20 சதவிகிதம்) இருக்கும் வருமானங்களின் மீது மாநிலம் ஒரு சதவிகிதம் வீதத்தைக் கூடுதலாக விதிப்பதால் ஏற்படும்.

400,000 டாலருக்கும் மிகையான நிகர வருமானத்தின் தலா டாலர்மீது கூட்டாட்சியின் வரி 91 சதவிகிதம், அல்லது ·91 டாலராகும்; மாநில வரி ·09 டாலரில் 9 சதவிகிதமாகும் அல்லது ·0081 டாலராகும். ஆகவே, நிகர வருமானத்தின் டாலரில் மாநிலத்தால் கூட்டப்பட்ட நிகரவரி 0·81 சதவிகித வீதமாகும். கூட்டாட்சியின் முதலடைப்பில் வருமானம் விழுமானால், கூட்டாட்சியின் வரி 20 சதவிகிதம் அல்லது ·23 டாலராகும். எஞ்சியுள்ள ·80 டாலரில் ஒரு சதவிகிதம் ஒரு மாநிலவரி விதித்தால், ·008 டாலராகும். ஆகவே கூடுதலான மாநிலவரி நிகர வருமானத்தின் டால்ரில் 0·8 சதவிகிதம் ஆகும்.

இவ் வமிசத்தைப் பற்றிய ஆய்வுகள் பரந்து பட்டனவாக இல்லாவிட்டாலும், இதுவரையில் செய்யப்பட்ட ஆய்வுகள் தொழில் இடச் செறிவைப் பற்றி முடிவுகள் செய்வதில், பொதுவாக வரி விதிப்பின் மட்டம் ஒப்புமையில், ஒரு முக்கியம் அல்லாத விவரம் என்று ஒருமித்து ஒப்புக் கொள்கின்றன. ஆயினும், தொழில் இடச் செறிவைப் பற்றி முடிவு செய்வதில், தனியாள் வரி விதிப்பின் மட்டத்தைக் காட்டிலும், தல உடைமை வரிவிதிப்பின் மட்டம் மிகவும் முக்கியமானது. உடைமை வரி பளுக்களைப் பெரும் அளவில் இன்றியமையாது உயர்த்துவதற்குப் பதிலாக, பரவலான

தளத்தை உடைய மாநிலத் தனியார் வரி விதிப்பை உயர்த்த வேண்டும் என்றும் வாதாடப் பெறுகின்றது.

29. ஆற்றைக் கடந்தும் வர்ஜீனியா மாநிலத்தில் வாஷிங்டன் D. C. பண்டத்கதின் கிளைகளை நிறுவி இருக்கின்றது. இதற்குக் காரணம் வாஷிங்டனில் விற்பனை வரி விதிக்கப்படுகின்றது என்பதும், வர்ஜீனியாவில் விற்பனை வரி விதிக்கப்படவில்லை என்பதுமாகும்.

30. Figures from *Budget of the United States Government*...1952; and idem, 1960, Special Analysis G in both cases.

31. இதற்கு ஒரு புறனடையாவது பள்ளிகளுக்குக் கூட்டாட்சி அளிக்கும் உதவியாகும். பள்ளிகளைப் பொறுத்த மட்டில், சில தலப் பகுதிகளில் கூட்டாட்சியின் நடவடிக்கைகளினால் பள்ளி மாணவர் தொகையும், பள்ளிச் செலவுகளும் கணிசமாகக் கூடியிருக்கின்றன. மானியங்களை நிறுத்தி விட்டால், பாதிக்கப்பட்ட சமுதாயங்கள் கிட்டத்தட்ட எல்லா வேறுபாட்டையும் தாங்களே போட்டுச் சரிக்கட்ட வேண்டியிருக்கும். இது நிகழ்திறமாக வேலைப் பணி மானியங்களைப் பற்றியும் உண்மையாக இருக்கலாம். குறைந்த மட்ட வேலைப்பணி நடவடிக்கையினால், வேலையின்மை நஷ்ட ஈட்டு முறை கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கும். இதனால் மாநிலங்கள் நிகழ்திறமாக நடப்பு மட்டத்தில் வேலையின்மை நஷ்ட ஈட்டுத் திட்டத்தைப் பேணி இருக்கலாம்.

32. இதே காலக்கூற்றில் பொது துவக்கப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள் இவற்றின் மீதான செலவுகள் மட்டும் 5.8பில்லியன் டாலரிலிருந்து 12·2 பில்லியன் டாலராக உயர்ந்தது. See Bureau of the Census, *Historical Statistics of State and Local Government Finances,* 1909-1953, p. 17, and *Summary of Government Finances in* 1957, p. 28.

33. See Mabel Newcomer, 'State and Local Financing in Relation to Economic Fluctuations', *National Tax Journal, June,* 1954, p. 98,

34 வேலையின்மை ஏற்படும்பொழுது, வேலையின்மை நஷ்ட ஈட்டுப் பாத்தியதைகளும், இன்றியமையாது உயர்வது இதற்கு எடுத்துக் காட்டாகும். வேலையின்மையைப் பற்றிய புள்ளி விவரங்கள் கிடைக்கு முன்பே, பாத்தியதைகளைப் பற்றிய புள்ளி விவரங்கள் கிடைத்து விடுகின்றன. இதே போன்று, ஒரு பிடிக்கும் திட்டத்தின் கீழ், வருமானம் குறையக் குறைய, வரிப் பொறுப்பும் குறைகின்றது. வருமானக் குறைவைப் புள்ளி விவரங்கள் காட்டு முன்னரே இங்ஙனம் நிகழ்வது சருவ சாதாரணமாகும்.

35. சில விலக்குகளோ அல்லது விலக்குகளே இன்றி இருக்கும் ஒரு விற்பனை வரியைக் காட்டிலும், பரந்துபட்ட விலக்குகளை உடைய ஒரு விற்பனை வரி, பெருத்த வருவாய் நெகிழ்வைக் காண்பிக்கும். ஏனெனில், விலக்கு அளிக்கக் கூடிய சாத்தியக் கூறு மிகவும் இருக்கும் இனங்கள் நுகர்வின் 'அவசிய' இனங்களேயாகும். இவை தாம் வாணிபச் சுழல் காலத்திலும் நிலைபேருக இருக்கும். இவ்வித இனங்களுக்கு விலக்கு அளித்து விட்டால், எஞ்சியுள்ள இனங்கள் 'இன்ப நலன்கள்' (comforts) அல்லது போகப் பொருள்கள் (luxuries) வருக்கத்தில் இருக்கும். இவை வாணிபச்

சுழல் காலத்தில் சிறிது பரந்த ஏற்ற இறக்கங்களையும் காண்பிக்கலாம். ஆயினும், விற்பனை வரியை வாணிப ஏற்ற இறக்கத்திற்கு ஏற்றாற் போல உண்மையில் நெகிழ்வு உள்ளதாகச் செய்ய வேண்டும் என்றால், ஒரு மாநில அரசாங்கம் முக்கிய நுகர்வு இனங்களுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும். இங்ஙனம் விலக்கு அளிப்பது ஒரு மாநில அரசாங் கத்திற்குக் கட்டுப்படியாகும் என்று எண்ணிப் பார்க்கவே முடியாது.

36. மொத்த நாட்டு உற்பத்தியுடன் ஒப்பிடும்பொழுது தனியாள் வரு மானம் (நாட்டின் வருமானக் கணக்குகளில்) வாணிபச் சுழல் காலத்தில் மிகவும் நிலைபேருக இருக்கின்றது. இதனால் தானாகவே இயங்கும் நெகிழ்வு உடைய வரி அமைப்புக்குத் தனியாள் வருமானம் ஒரு நல்ல தளம் அன்று என்று தோன்றலாம். எந்தத் தனியாள் வருமானத்தைத் தளமாகக்கொண்டு இயங்குகின்றதோ அதைப் போன்றே வரிதாங்கு வருமானமும் நிலைபேருக இருந்தால் இது உண்மையாக இருக்கும். இதற்கு 1957 ஆம் ஆண்டில் மூன் ருவது கூற்றிலிருந்து நான்காவது கூற்றுக்குப் பின்னிறக்கமாகப் பொரு ளாதாரம் சென்ற பொழுது, தனியாள் வருமானத்திலும், மொத்த நாட்டு உற் பத்தியிலும் (G. N. P.) ஏற்பட்ட மாறுதல்களை ஓர் உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

(டாலரில்)

| | | |
|---|---|---|
| மொத்த நாட்டு உற்பத்தியில் (G N P) மாறுதல் | — | 5·5 பில்லியன் |
| தனியாள் வருமானத்தில் மாறுதல் | — | 1·7 பில்லியன் |
| வேறுபாடு | — | 3·8 பில்லியன் |

இதுகாறும் மொத்த நாட்டு உற்பத்தியில் (G N P) ஏற்பட்ட மாறுதலைச் சரியாகப் பிரதிபலிப்பதற்குத் தனியாள் வருமானம் ஒரு வரித்தளம் என்ற முறையில் மிகவும் நிலைபேருக இருப்பதாகத் தோன்றலாம். ஆனால் மொத்த நாட்டு உற்பத்தி (G N P) மிகவும் கணிசமான அளவு மாறுதல் அடைந்து கொண்டிருந்த பொழுது, தனியாள் வருமானத்தில், ஒப்புமையில், நிலை பேற்றை ஏற்படுத்திய காரணிகளை நாம் பார்ப்போம். அவையாவன :

(டாலரில்)

| | | |
|---|---|---|
| பங்கீடு செய்யப்படாத கார்ப்பரேஷன் இலாபங்களில் மாறுதல் | — | 3·4 பில்லியன் |
| அரசாங்க மாற்றச் செலுத்துகைகளில் (transfer payments) மாறுதல் | — | ·4 பில்லியன் |
| பிற உள் உறுப்புக்களில் (other components) மாறுதல் (நிகர) | — | 0·0 பில்லியன் |

மொத்த நாட்டு உற்பத்தியில் கணிசமான அளவு குறைவு ஏற்பட்டதற்குப் பங்கீடு செய்யப் பெருத இலாபங்கள் குறைந்ததே காரணமாகும். ஆனால் இவ் விலாபங்கள் தனியாள் வருமானத்தில் சேருவதில்லை. சத விகித அளவில், மொத்த நாட்டு உற்பத்தியில் (GNP) குறைவு ஏற்பட்ட தைக் காட்டிலும், பெருத்த அளவிலேயே கார்ப்பரேஷன் இலாபங்கள் குறைந்து இருக்கின்றன. இவ் விலாபங்கள் (கூட்டாட்சி, மாநில அரசாங்க) கார்ப்பரேஷன் வருமான வரிகளுக்கு உட்பட்டு இருப்பதால், மொத்த நாட்டு உற்பத்தி (G N P) குறைந்ததைக் காட்டிலும், கூடுதலான வீதாச்சார அளவே கார்ப்பரேஷன் வரிப் பொறுப்பில் குறைவு ஏற்பட்டிருக்கின்றது.

